# வேலணை
# ஒரு வரலாற்று அறிமுகம்

# VELANAI - A HISTORICAL INTRODUCTION


பதிப்பாசிரியர்:

**ச. மாணிக்கவாசகர்**

ஓய்வுபெற்ற ஆசிரியர்

அகில இலங்கை சமாதான நீதவான் வேலணை



வெளியீடு:

வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை

வேலணை

History of Velanai - Publishing Committee - Velanai

# நூல் விபரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வேலணை – ஒரு வரலாற்று அறிமுகம் |
| ஆசிரியர் | : | திரு. ச. மாணிக்கவாசகர் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| முதற்பதிப்பு | : | ஆகஸ்ட் மாதம் 2006 |
| றோமன் இல | : | i - x |
| பக்கங்கள் | : | 556 |
| வெளியீடு | : | வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை<br>108, 1/2 மன்னிங் பிளேஸ், கொழும்பு 06,<br>இலங்கை. தொலைபேசி: 2365843 |
| நூல் அளவு | : | 11 1/2 X 8 1/4 |
| அட்டைப்பட வடிவமைப்பு | : | க. மயூரன்<br>கனவு நிலையம்,<br>255, காலி வீதி, வெள்ளவத்தை,<br>கொழும்பு 06 |
| படப்பிடிப்பு உதவி | : | "சாயி" வீடியோ புகைப்படக் கலையகம்<br>வேலணை. தொலைபேசி: 077-6447434 |
| அச்சிட்டோர் | : | யுனைடெட் மேர்ச்சன்ஸ் பிரிண்டேஸ்<br>(பிறைவேட்) லிமிடெட், கொழும்பு 12.<br>தொலைபேசி: 2434281 / 2343570 |

# வேலணைத் தாயின் தவப்புதல்வன்

**Sir Vaithiyalingam Thuraiswamy**
(Former member of Legislative Assembly - 1920-1930
State Council; Former Speaker 1936 - 1947)



## சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்கள்

முன்னாள் சட்டசபை உறுப்பினர் - (1920-1930)
அரசசபை, முன்னாள் சபாநாயகர் (1936-1947)

# உள்ளே.......

# பொருளடக்கம்

# மண் மறவா மைந்தன்

**V A Kandiah**
(Former member of Parliament - 1956-1963)



## திரு. வே. அ. கந்தையா அவர்கள்
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் *(1956-1963)*



# முன்னுரை

"பெற்றதாயும் பிறந்தபொன்நாடும்
நற்றவ வானிலும் நனிசிறந்தனவே"

எமது "அருமந்த" ஊர் வேலணை. எமது கிராமம் இரண்டாயிரம் ஆண்டு கால வரலாற்றை உடையதெனத் துணியலாம். சாட்டி நிலப் பரப்பில் அண்மையில் கண்டெடுக்கப்பட்ட தொல்பொருள் மட்பாண்டச் சான்றுகள், எமது ஊரின் வரலாறு மேலும் தொன்மை மிக்கதெனக் கூறி நிற்கின்றன. இத்தகைய ஊரின் பெருமையை, சான்றோர் வாழ்வை, கல்வி மேம்பாட்டை, கலை கலாசார பண்பாட்டு விழுமியங்களை; அரசியல், பொருளியல், புவியியற் கூறுகளை ஒரு வரலாற்றுப் படிமுறையில் பதிவு செய்ய வேண்டுமென்ற வேணவாவே இந்நூல் உருவாவதற்கு மூலகாரணமாகும். இத்தகைய நூல் வரவேண்டுமெனும் கருத்து பலரால் உணரப்பட்டு, உணர்த்தப்பட்டமையால் இது உங்கள் கரங்களில் இப்பொழுது புதுமை மிகு பொலிவுடன் தவழ்கிறது.

தமிழர்தம் வரலாறு, நல்ல முறையில் எழுதப்படவில்லை என்ற குறை பொதுவாக உண்டு. நாம் வரலாற்றுச் சான்றுகளை, நமது பண்டைய இலக்கியங்களிலும் தொடர்ச்சி ஏதுமற்றுப் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளிலும் நாட்டார் இலக்கியங்களிலும் வாய்வழிக் கதைகளிலுமே தேட முற்படுகின்றோம். ஆனால், இத்தேவையை - குறிப்பாக யாழ் மண் பற்றிய வரலாற்றை - ஒரு செய்நேர்த்தியுடன் நிறைவு செய்தவர்கள் நமது மண்ணில் காலூன்றிய அந்நியர்களான போத்துக்கேயர், ஒல்லாந்தர் மற்றும் ஆங்கிலேயரும் அவர்தம் மிசனறி மார்களுமாவர். அவர்களது பணி பாராட்டுக்குரியது. நம் தமிழர்களும் யாழ்ப்பாண வரலாற்றை ஓரளவு பதிவு செய்துள்ளனர். அத்தகைய பணிக்கு இணையானதாக இந்நூல் - எமது ஊர் சம்பந்தப்பட்ட அளவில் - அமையுமென நினைக்கின்றேன்.

இந்நூலின் உள்ளடக்கம் பற்றி நான் அதிகம் விரித்துரைக்க விரும்பவில்லை.

ஆனாலும் சிலது கூற விழைகின்றேன்.

'கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்.' என்பது பெரியோர் கூற்று. அவர்தம் உரைக்கு ஏற்ப நமது ஊரில் உள்ள ஆலயங்கள், தேவாலயங்கள் பற்றிய வரலாறும் இந்நூலில் நன்முறையில் பதிவாகியுள்ளது.

'கேடில் விழுச் செல்வம் கல்வி' என்பது வள்ளுவர் வாய்மொழி. அதற்கமைவாக தம்பங்கினை ஆற்றிய கல்விச் சாலைகள் பற்றியும் அவற்றில் பணியாற்றிய எழுத்தறிவித்த இறைவர்களான அதிபர்கள், ஆசிரியர்கள் பற்றியும் ஊரின் உயிர்ப்பையும், உயர்வாழ்வையும், சமூக நலனையும் பேணிய சான்றோர்கள் பற்றியும், வரகவிகளான புலவர் பெருமக்கள் பற்றியும் ஊர்ப்பிணி நீக்கிய உத்தமராம் வைத்தியர்கள் பற்றியும் இந்நூல் பேசுகிறது.

ஈழத்தில் மட்டுமல்ல. தமிழ்கூறு நல்லுலகம் எங்கணும் போற்றப்பட்ட, போற்றப்படுகிற நமது தமிழ் அறிஞர்கள் பற்றியும் உரைக்கின்றது.

இன்னும் பல விடயங்களை உள்ளடக்கிய இந்நூல் வாழ்நாள் முழுவதும் பாதுகாக்க வேண்டிய ஓர் அரிய வரலாற்றுப் பெட்டகமாகும்.

இந்நூல் உருவாவதற்குப் பல ஏதுக்கள் இருந்தபோதும் ஊர் மக்களாகிய நாம் இழந்த வாழ்வை, வளத்தை, ஆன்ம பலத்தை மீளவும் உயிர்ப்பித்துப் பார்க்கும் – ஆர்வம் சார்ந்த முயற்சியாகவே இதனைப் பார்க்க வேண்டும்.

பண்டுதொட்டு, கட்டுக்கோப்பாக வாழ்ந்த சமூகம் எம்முடையது. என்ன வளம் இல்லை எம் ஊரில் என இறுமாந்திருந்தவர்கள் நாம். அள்ள அள்ளக் குறையாத கடற்செல்வமும், செந்நெல் வளமும் சிறு பயிர்களின் செழிப்பும், மிளகாய், புகையிலை போன்ற பணப்பயிர்களின் பெருக்கமும் பனை வளமும் வற்றாது பால் சுரந்து, பயன்தரு கால்நடைச் செல்வமும் எனப் பலது பெற்று, 'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்' இல்லாது வாழ்ந்த நாம் அத்தகைய வாழ்வு கனவாய், பழங்கதையாய் போய்விட்டதே எனும் ஆதங்கத்தின் வெளிப்பாடே இந்நூலின் மூல ஊற்று.

இத்தகைய சமூகவாழ்வு எக்காலத்திலும் இல்லாதவாறு சிதறுண்டு சின்னாபின்னப்பட்டுவிட்டது. கடந்த நூற்றாண்டின் எண்பதுகளின் புலப்பெயர்வும் தொண்ணூறுகளின் இடப்பெயர்வும் ஈழ மக்களின் விதியாய் விடிந்தபோது, நம்மூர் மக்களையும் அவை விட்டுவைக்கவில்லை. பல்வேறு திசை வழி தூக்கி வீசப்பட்ட அவர்களது இருப்பு, அர்த்தமிழந்த ஒன்றாய்விட்டது. அந்நிலையில் தமது இருத்தலின் நியாயத்தை எண்பிப்பதுடன், தங்களது வேர்களைத் தேடும் முயற்சியின் வெளிப்பாடாகவும் இந்நூலைப் பார்த்தல் சாலும்.

கூட்டுக் குடும்ப வாழ்வையும், குவிவு மைய இயக்கத்தையும் இழந்தஒரு சமூகம் தனது வாழ்வில் உள் இழையும் அனுபவங்களையும் அநுசரிப்புகளையும் மன நெகிழ்ச்சிகளையும் அந்தமக்களின், மண்ணின் சாரத்துடன் தொட்டு உரசிப் பார்ப்பது தவறானதா? இல்லை. நியாயமானதே! அந்தப் பணியினையும் இந்நூல் உணரவைக்கின்றது.

விருப்பு வெறுப்பு இல்லாது, காழ்ப்புணர்வு ஏதுமற்று சமநோக்குடன் இந்

நூலை உருவாக்கி உள்ளோம். இதன் உள்ளடக்கத்தில் போதாமை ஏதும் இருப் பின் அது நாம் விரும்பியவண்ணம் கட் டுரைகள் எமக்குக் கிடைக்கப் பெறாமை யேயாகும். இதனைத் தங்களுக்கு அறி யத் தருதல் நமது கடமை என நினைக் கிறோம்.

நான் சிந்திக்கத் தொடங்கிய காலம் முதற்கொண்டு பொதுத் தொண்டுகள் செய்யத் திட்டமிட்டேன். முதலாவதாக எரியூட்டப்பட்ட யாழ். நூல்நிலையத்தின் ஒரு பகுதியாகத் தமிழ்மறை நூல்நிலை யம் ஒன்றினை அமைத்து, நான் பல ஆண்டுகளாகச் சேகரித்து வந்த பல தமிழ் மறை நூல்களை அங்கு வைக்கத் திட்டமிட்டிருந்தேன். ஆனால் யாழ். நூல் நிலையம், தமிழரைப் பழிவாங்க எண் ணிய சிங்களத் தீவிரவாதிகளால் எரியூட் டப்பட்டது.

ஐம்பது ஆண்டுகளாகச் சேர்த்து வைத் திருந்த மூன்று அலுமாரிகள் நிறைந்த திருக்குறள் பற்றிய அரிய நூல்கள் யாவும் 1990 இல் நடந்த சிங்களப் படை எடுப் பினால் அல்லைப்பிட்டியிலுள்ள பாழுங் கிணறுகளுள் போடப்பட்டு அழிக்கப் பட்டன. இந்நூல்களுள் நான் செய்வித்த என்னுடைய முன்னுரையுடன் கூடிய 'பர்மிய திருக்குறள்' மொழிபெயர்ப்பும் வேறு எங்கும் பெறமுடியாத 'கைவித்திய திருக்குறள் மொழிபெயர்ப்பும்' அடங்கும்.

தற்போதும் வேலணையில் ஒரு சிறிய திருக்குறள் நூலகத்தை உருவாக்க முயல்கின்றேன். இதற்கு அன்பர்களின் ஆதரவை வேண்டி நிற்கின்றேன்.

இந் நூல் வெளியீட்டினை அடுத்து வேலணை மத்தியில் ஒரு கலை மண்ட பத்தையும் ஒரு நூல்நிலையத்தையும் உருவாக்கத் திட்டமிடுகின்றோம். என்னிட முள்ள நூல்கள் அனைத்தையும் இந்நூல் நிலையத்திற்கு வழங்குவேன். இதைச் சிறப்புற நடாத்துவதற்கு வேண்டிய உதவி களைச் செய்வது வேலணை மக்களின் கடமையாகும்.

"அரியஎன்று ஆகாத இல்லை
பொச்சாவாக்
கருவியால் போற்றிச் செயின்" –
தமிழ்மறை.

இந்நூல் உருப்பெறுவதற்கு, புலம் பெயர்ந்து வாழும் நம்மூர் தம்பதியரான திரு. ச. சிவலோகநாதன், திருமதி இரா ஜேஸ்வரி சிவலோகநாதன் அவர்களும் முன்னாள் துணைவேந்தர் திரு. பொன் பாலசுந்தரம்பிள்ளை அவர்களும் திரு. எஸ். பி. சாமி அவர்களும் வேலணை வீரசிங்கம் அவர்களும் நூலாக்கக் குழு வினரும் நூலை உருவாக்கித் தந்த அச் சகத்தாரும், தமது முழுமையான உழைப்பை நல்கி உள்ளார்கள். அவர்களனைவரை யும் இந்நேரத்தில் நன்றி உணர்வுடன் நினைவு கூர்கின்றோம். சிறப்பாகச் செய லாளர் திரு. ச. மாணிக்கவாசகரின் ஈடு இணையற்ற தொண்டு எல்லோருடைய போற்றுதலுக்குமுரியது.

"பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமையுடைய செயல்"

எனும் குறள் இவர்கள் அனைவரையும் நினைக்கும் தோறும் நெஞ்சில் நிழலாடு கிறது.

**முனைவர் கா. பொ. இரத்தினம்**
தலைவர், வேலணை வரலாற்று நூல்
வெளியீட்டுச் சபை.
முன்னாள் பா. ம. உறுப்பினர்
(ஊர்காவற்றுறை – கிளிநொச்சி)



# பதிப்புரை

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ் விலாச் செல்வரும்" சேர்ந்து வாழ்ந்த பழம் பெரும்பதி நமது வேலணை. அந்த மண்ணில் பிறந்து, அதன் காற்றைச் சுவாசித்தவர்களுக்கு, அம் மண்ணின் வளத்தை, வாழ்வைப் பார்த்தவர்களுக்கு, அமுதனைய நீரைச் சுவைத்தவர்களுக்கு, அதன் இன்றைய நிலை, மனக் கவலை தருவதாகவே இருக்கும்.

இனமுரண்– அதனடியான உள் நாட்டு யுத்தம் – வேலணை வாழ் மக் களையும் விட்டு வைக்கவில்லை. அவர் களையும் சிதறடித்துவிட்டது. சென்ற நூற்றாண்டின் –தொண்ணூறுகளின் இடப் பெயர்ச்சி "வேலணையானை" இலங்கையின் தலைநகருக்கு மட்டுமல்ல, பூமிப்பந்தின் பல்வேறு நாடுகளுக்கும் சென்று புலம் பெயர் குடிகளாய் வாழ வும் வைத்துவிட்டது. தொலைவில் இருக் கும் போது தான் சொந்த மண்ணின் பெருமை தெரியும் போலும். அந்நிய மண்ணில் தம் வேர் இழந்து அலையும் நம்மவர்களது அடி மன ஆதங்கமும் இங்கு ஊரில் உள்ளவர்களது விருப்பமும் "வேலணை – ஒரு வரலாற்று அறிமுகம்", எனும் இந்நூல் உருவாவதற்குக் காரண மாய் அமைந்துள்ளன.

தனி ஒரு மனிதனாக அல்லாது, கூட் டாக தகைமைசால் சான்றோர்களாலும் கல்விமான்களாலும் வடம்தொட்டு இழுக் கப்பட்ட பூந்தேர் இந்நூல். அழகிய இச் சித்திரத்தேருக்கு ஒரு வகையில் கடை யாணி இட்டவர், கனடாவில் புலம் பெயர்ந்து வாழும் திரு. ச. சிவலோக நாதன் அவர்கள்தான். அன்னார் 01–06–2003 இல் எனக்கு எழுதிய மடலே இந்நூலாக்கத்தின் அத்திபாரக் கல்லாக அமைந்துளது எனலாம்.

அவர் தமது கடிதத்தில்:

"எமது வேலணை பற்றி, எனது பெரிய அண்ணா நல்லநாதன் அவர்கள் ஒரு நூல் வெளியிட ஆசைப்படுகின்றார். எனவே அங்குள்ள ஆற்றல், அனுபவம் நிறைந்தோரிடமும் ஆவணங்கள் மூலமும் எமது ஊர் பற்றிய பழம்பெரும் சரிதை களை நீங்கள் பெறமுடியும் என நம்புகி றேன். இது எங்கள் எல்லோரினதும் வர

லாற்றுக் கடமையாகும். உங்களைப் போன்றோரால் தான் இது முடியும். அங்கு நீங்கள் ஒரு குழுவாகவே செயற் படலாம் என எண்ணுகிறேன். எமது இளம் சந்ததியினருக்கு இவை பேருத வியாக இருக்கும் வகையில் அமைய வேண்டும். பிறர் போற்றும் வகையில் இது சிறந்தஆக்கமாக இருக்க வேண்டும். புலம் பெயர்ந்த நாட்டில் வாழும் எல்லோருடைய ஆலோசனைகளும் உதவியும் பெற்று இதைச் செய்யலாம்."

என எழுதியிருந்தார். அந்தமடலில் உள்ள மெய்மை என் உள்ளத்தைத் தொட்டது. அந்தஉணர்வுடன் பெரியார் பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர் களைச் சந்தித்தேன். அவரிடம் இது பற்றிக் கூறிய பொழுது அகமகிழ்ந்த அவர், பல ஆலோசனைகளை வழங் கினார். ஆரம்ப நிலையில் ஓர் அமைப் பாக நாம் இயங்கவில்லை. இம்முயற் சியை முன்னெடுக்க ஒரு சிறு குழுவாகத் தான் இயங்கினோம். அக்குழுவில் திரு. கா. பொ. இ. அவர்களும் ஆசிரியர் திரு. பொ. மகாலிங்கம் அவர்களும் நானும் இருந்தோம். பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை அவர்களது ஆலோசனையும் அநுசரிப்பும் அக்கால கட்டத்தில் எமக்குக் கிடைத்தது.

இந்நூலாக்க முயற்சியை மேலும் முன் எடுப்பதற்கு இச்சிறு குழுவின் செயற்பாடு போதாதென உணர்ந்த நாம்– ஒரு அமைப்பு இருப்பது நலமெனக் கருதி, அத்தகைய அமைப்பொன்றினை உருவாக்கும் நோக்குடன், 02–11–2003 இல் எனது வெள்ளவத்தை இல்லத்தில் பண்டிதர் கா. பொ. இ. அவர்கள் தலைமையில் ஓர் அங்குரார்ப்பணக் கூட் டத்தினை நடாத்தினோம். அக்கூட்டத்தில் அவ்வமைப்பின் தலைவராக பண்டிதர் அவர்களும் செயலாளராக ஆசிரியர் திரு. ச. மாணிக்கவாசகர் அவர்களும் (பதிப்பாசிரியர்) உப செயலாளராக திரு. ந. பரணீதரனும் பொருளாளராக திரு வேலணை வீரசிங்கம் அவர்களும் உப தலைவர்களாக பேராசிரியர் பொன் பாலசுந்தரம்பிள்ளை, பேராசிரியர் இரா– சிவச்சந்திரன், பேராசிரியர் ச. சத்திய சீலன், தொழிலதிபர் எஸ். பி. சாமி அவர் களும் தெரிவு செய்யப்பட்டனர். அவ்வ மையம் ஒரு நூலாக்கக் குழுவும் அமைக் கப்பட்டது. நூலாக்கக் குழு உறுப்பினர் களாக பேராசிரியர்களான பொ. பாலசுந் தரம்பிள்ளை (தலைவர்) இரா– சிவச்சந் திரன், ச. சத்தியசீலன் ஆகியோர் தெரிவு செய்யப்பட்டனர். இவர்களுடன் நிர்வா கக் குழு உறுப்பினர்களாக ஒன்பது பேர் தெரிவு செய்யப்பட்டனர். இவ்வமைப்பு "வேலணை வரலாற்று நூல் வெளி யீட்டுச் சபை (History of Velanai - Publishing Committee) எனும் பெயருடன் செயற்படத் தொடங்கியது. அமைப்பின் தொடர்பு முகவரியாக: 108–1/2 வெள்ளை மாளிகை, மனிங் பிளேஸ், வெள்ளவத்தை இருக்குமெனத் தீர்மானிக்கப்பட்டது.

அமைப்பில் உள்ள நாங்கள் தீவிர மாகச் செயற்பட்டோம். நிதி வளங்களைக் கண்டறிந்து – வெளிநாட்டிலும் உள்நாட் டிலும் அதனைப் பெறுவதில் ஆர்வங் காட்டியதுடன், வரலாற்று நூலுக்கான ஆக்கங்களைத் தக்காரிடமிருந்து பெறு வதற்கும் முயற்சி மேற்கொண்டோம்.

நூலுக்குரிய கட்டுரைகளைப் பெறு வதற்கு, தலைவரதும் செயலாளரதும்

கையொப்பத்துடன் கூடிய கடிதங்கள் கட்டுரைஞர்களுக்கு அனுப்பப்பட்டன. கட்டுரைகள் பல்வேறு தலைப்புகளின் கீழ் பிரசுரிக்கக் கூடிய வகையில் கோரப் பட்டன. வந்து சேர்ந்த கட்டுரைகள் நூலாக்கக் குழுவின் பரிசீலனையின் பின்னர் பிரசுரத்துக்குக் கையளிக்கப்பட்டன. குறிப்பாக பேராசிரியர் பொன் பால சுந்தரம்பிள்ளை அவர்கள் இவ்வகையில் – கட்டுரைகளைத் திருத்தியும் மீள எழுதியும் நமக்குப் பெரிதும் உதவினார்.

கட்டுரைகள் பின்வரும் தலைப்புகளின் கீழ் நூலில் இடம்பெற்றுள்ளன:

1. ஆலயங்கள்
2. பாடசாலைகள்
3. சமயப் பெரியோர்கள்
4. புலவர்கள்
5. கல்விமான்கள்
6. மருத்துவர்கள்
   (ஆயுர்வேத, மேல்நாட்டு)
7. கலைஞர்கள்
8. தொழிலதிபர்கள்
9. அரசியல்துறைப் பெரியோர்கள் (கிராமச்சங்கத் தலைவர்கள், பா. ம. உறுப்பினர்கள்)
10. சமூக சேவையாளர்கள்
11. தீவுகள் தெற்குப் பிரிவின் அபிவிருத்தியும் பிரச்சினைகளும்
12. சரவணைக் கடல் நீரேரியும் வேலணை.ச் சிற்றருவியும்.

இவ்விடத்து, நூலில் இடம்பெற்ற கட்டுரைகள் பற்றியும் – அவற்றை ஆக்கிய ஆசிரியர் தம் பெயர் விபரம் பற்றியும் தருதல் நமது கடனாகும்:

1. வேலணை பெருங்குளத்து ஸ்ரீ முத்துமாரி அம்பாள் கோவில் வரலாறு – 1973 வரை – திரு. வ. நவரத்தினம் அவர்கள் முன்னாள் பா. உ. (நன்றி – "புதியதேர்")
2. பெருங்குளத்து ஸ்ரீமுத்துமாரி அம்பாள் கோவில் வரலாறு – 1973க்குப் பின்னர் – திரு ச. மாணிக்கவாசகர் – ஆசிரியர்

3. தனித்திரு அன்னம்
   – திரு. வ. நவரத்தினம் அவர்கள். முன்னாள் பா. உ. (நன்றி – "புதியதேர்")

4. வேலணை மேற்கு பெரியபுலம் மகாகணபதிப் பிள்ளையார் ஆலய வரலாறு.
   – திரு. பொ. அருணகிரிநாதன் தலைவர், அறங்காவலர் சபை.

5. வேலணை இலந்தைவனம் ஸ்ரீ சித்திவிநாயகர் ஆலய வரலாறு
   – ஆசிரியர் திரு. கோ. பரமானந்தன்

6. பள்ளம்புலம் முருகமூர்த்தி திருக்கோவில் வரலாறு
   – ஆசிரியர் திரு. ச. மகாலிங்கம்

7. வேலணை துறையூர் இலந்தைவனம் ஹரிஹர புத்திர ஐயனார் வரலாறு
   – அதிபர் திரு. ச. பாலச்சந்திரன்

8. மயிலைப்புலம் ஐயனார் ஆலய வரலாறு
   – திரு. தி. சிவசாமி (தில்லைச்சிவன்)

9. செட்டிபுலம் காளவாய்த்துறை ஐயனார் வரலாறு
   – பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை

10. சாட்டி சிந்தாத்திரை மாதா வரலாறு
   – வண. பிதா தோமஸ் சௌந்தரநாயகம் அடிகளார் (யாழ் ஆயர்)

11. வேலணை - வங்களாவடி அமெரிக்க மிஷன் தேவாலய வரலாறு
   – பேராசிரியர் பொன். பாலசுந்தரம் பிள்ளை

12. ஆலம்புலம் கந்தபுராண மட வரலாறு
   – திருமதி. கலைமகள் சிவராசா

13. சிற்பனை முருகன் ஆலய வரலாறு
   திரு. தி. பாலச்சந்திரன்

14. கோபுரத்தடி ஞானவைரவர் கோவில் வரலாறு
   – திருமதி. ஞானாம்பிகை இராமநாதன்

15. செம்மணத்தி நாச்சியம்மன் வரலாறு
   – திருமதி அம்பிகாதேவி இராஜலிங்கம்

16. அம்பிகை நகர் ஸ்ரீ மகேஸ்வரி அம்மன் ஆலய வரலாறு
   திரு. நா. வடிவேலு – தலைவர், அறங்காவலர் சபை.

17. தெப்பக்குளம் நால்வர்மடம் (நடராசர் ஆலயம் - சிவன்கோவில்) வரலாறு
   – அதிபர் திரு. ச. கைலாயபிள்ளை

18. வங்களாவடி முருகன் ஆலய வரலாறு
- விரிவுரையாளர் திரு. சு. கனகநாயகம்

19. வேலணை துறையூர் ஸ்ரீ சிவசுப்ரமணிய சுவாமி கோவில் வரலாறு
- வைத்தியர் திரு. க. நவரத்தினம்

20. வேலணை சாட்டித்துறை புனித தீர்த்தமும் வெள்ளைக் கடற்கரையும்
- முன்னாள் தபாலதிபர் திரு. க. நவரத்தினம்

21. Feast of our Lady of Good Voyage 'Sinthathirai Matha' at Chatty
- S.B டேவிட் (நன்றி 'The Island (20th Sept. 2004)

22. வேலணை நுழைவாயில் அதிசய வைரவர் ஆலய வரலாறு
- முன்னாள் தபாலதிபர் திரு. க. நவரத்தினம்

வேலணை பள்ளிவாசல் பற்றிய வரலாற்றை எத்துணை முயற்சி செய்தும் பிரசுரத்திற்குப் பெற்றுக் கொள்ள முடியவில்லை.

23. வேலணை அமெரிக்க மிஷன் தமிழ்க் கலவன் பாடசாலை
- பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை

**24. வேலணை** சைவப் பிரகாச வித்தியாசாலை வரலாறு (கந்தப்பு வாத்தியார் பள்ளிக்கூடம்) - அதிபர் திரு. மு. திருஞானசம்பந்தபிள்ளை

25. வேலணை சரஸ்வதி வித்தியாசாலை வரலாறு
- ஆசிரியை திருமதி. நாகரத்தினம் பொன்னுத்துரை.

26. வேலணை மேற்கு நடராச வித்தியாலய வரலாறு
- (இராசா வாத்தியார் பள்ளிக் கூடம்) - அதிபர் திரு. இ. ஞானசோதியன்.

27. வேலணை சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகாவித்தியாலய வரலாறு
- அதிபர் திரு. பொ. அருணகிரிநாதன்

28. வேலணை கிழக்கு மகாவித்தியாலய வரலாறு
- திரு. ச. கதிர்காமநாதன் - (சுவிஸ்)

29. வேலணை செட்டிபுலம் அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலை வரலாறு
- திரு. பெ. விஸ்வலிங்கம்

30. வேலணை தெற்கு ஐயனார் வித்தியாசாலை வரலாறு
- அதிபர் திருமதி சிந்தாமணி பழனி

31. வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாலய வரலாறு
- அதிபர் திரு. பொ. மகாலிங்கம்

வேலணை சாட்டி மாதா கத்தோலிக்க பாடசாலை 1960 ஆம் ஆண்டு மூடப்பட்டுவிட்டமையால் அப்பாடசாலை பற்றிய வரலாறு இந்நூலில் இடம்பெறவில்லை.

32. ஸ்ரீலஸ்ரீ இ. சோமசுந்தர ஐயர்
   - அதிபர் திரு. ச. கைலாசபிள்ளை;
   அநுசரணை திரு. குலசபாநாதன்- (நன்றி "புதியதேர்")

33. திரு. ம. தம்பு (உபாத்தியாயர்)
   - திரு. செ. அண்ணாதாசன்

34. திரு வேலுப்பிள்ளை பேரம்பலம் (சமயப் பெரியார்)
   - அதிபர் திரு. பொ. அருணகிரிநாதன்

35. திரு.செல்லப்பா வேலுப்பிள்ளை (சட்டம்பியார்)
   - பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை

36. ஆசிரியர் திரு. மு. மயில்வாகனம்
   - அதிபர் திரு. மு. திருஞானசம்பந்தபிள்ளை

37. சைவத் தமிழ் அறிஞர் ஸ்ரீமத் ச. மகாலிங்கம் (விதானையார்)
   - அதிபர் பொ. அருணகிரிநாதன்

38. தொண்டன் பிள்ளையான்
   - திரு குலசபாநாதன் (நன்றி- "புதியதேர்")

39. திரு. வ. க. செல்லப்பா சுவாமிகள்
   - அதிபர் திரு. ச. கைலாசபிள்ளை.

40. சமயத் தொண்டன் திரு. க. தில்லையம்பலம்
   - முன்னாள் பா. உ. திரு. வ. நவரத்தினம். (நன்றி - "புதியதேர்")

41. சமய சமூகத் தொண்டன் திரு. வெள்ளை நாகலிங்கம்
   - திருமதி அன்னலட்சுமி வீரசிங்கம்

42. பேரம்பலப் புலவர். கோ.
   - உப அதிபர் (யாழ். இந்துக்கல்லூரி) திரு. க. சிவராமலிங்கம்பிள்ளை

43. புலவர் ஆ. தில்லைநாதபிள்ளை
   திரு. க. சட்டநாதன். தரவுகள் உதவியவர் திரு. தி. சிவனேசபிள்ளை.

44. பண்டிதர் பொ. ஜெகநாதன்
   - திருமதி. பொ. சண்முகலிங்கம்

45. வித்துவான் க. வேந்தனார்
– அதிபர் திரு. க. சொக்கலிங்கம் (சொக்கன்)

46. பண்டிதர் மா. மாணிக்கம்
– திரு. எம். சந்திரகாந்தன்

47. கவிஞர் தில்லைச்சிவன்
– மயிலங்கூடலூர் திரு. பி. நடராஜன்

48. திரு. நா. இளையதம்பி
– பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை

49. திரு. அம்பலவாணர் செல்லையா
– பேராசிரியர் ச. சத்தியசீலன்

50. திரு அருணாசலம் வைரமுத்து (செல்லையா உபாத்தியாயர்)
– ஒரு பழைய மாணவன்.

51. முன்னாள் துணைவேந்தர் பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
– பேராசிரியர் கா. குகபாலன்

52. பேராசிரியர் செ. பாலச்சந்திரன்
– சிரேஷ்ட விரிவுரையாளர் திரு. ந. பேரின்பநாதன்

53. திருமதி. கமலாசினி பொன்னப்பா
– முன்னாள் தபாலதிபர் திரு. க. நவரத்தினம்

54. திரு. ஐ கார்த்திகேசு.
– திருமதி. ச. வினாசித்தம்பி

55. திரு. ஐ. பொன்னையா
– அதிபர் திரு. பொ. நடராசா

56. திரு. அ. பொன்னுத்துரை
– அதிபர் திரு. ச. கைலாசபிள்ளை

57. திருமதி. நாகரத்தினம் பொன்னுத்துரை
– அதிபர் திரு. ச. கைலாசபிள்ளை

58. செல்வி. அன்னபூரணி பொன்னப்பா
– திருமதி வேதவல்லி அரசரத்தினம்.

59. திரு. கந்தர் காங்கேசு
– திருமதி. வீரலட்சுமி சாமி

60. பண்டிதை செல்வி. தம்பு வேதநாயகி
- பண்டிதர் வே. அ. பஞ்சாட்சரம்

61. திரு. சு. நமசிவாயம்
- அதிபர் திரு. பொ. அருணகிரிநாதன்

62. திரு. சி. இராசரத்தினம் (அதிபர்)
- திரு. நா. குழந்தைவேலு

63. திரு. சு. சீவரத்தினம்
- ஆசிரியை திருமதி. புனிதவதி ஆறுமுகம்

64. பண்டிதர் கந்தையா கணபதிப்பிள்ளை
- திரு. க. விஜயநாதன்

65. திரு. இளையதம்பி நாகராசா
- பேராசிரியர் பொன் பாலசுந்தரம்பிள்ளை

66 பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை
- அதிபர் திரு. சு. கலாதரன் (அவுஸ்திரேலியா)

67. திரு. இ. க. நாகராசா
- பேராசிரியர் கா. குகபாலன்

68. திரு. பொ. நடராசா
ஆசிரிய ஆலோசகர் திரு. த. தர்மராசா

69. திரு. பொ. கேதாரநாதன்
- அதிபர் திரு. சு. கலாதரன்

70. திரு. சு. சண்முகநாதன்
- ஆசிரியை திருமதி. புனிதவதி ஆறுமுகம்

71. முதலியார் ஸ்ரீ குலசபாநாதன்
- வீரகேசரி வாரமலர் 27-3-2005 (நன்றி வீரகேசரி)

72. திரு. நா. சரவணமுத்து
- திருமதி. இராஜேஸ்வரி சிவலோகநாதன்

73. திரு. விசுவநாதர் சிதம்பரப்பிள்ளை
- திரு. சி. ஞானேஸ்வரன்

74. திரு. சின்னையா (வைத்தியர்)
- திரு. எஸ். சேனாதிராசா

75. திரு. சி. முருகேசு (வைத்தியர்)
- மருத்துவபீட மாணவன் (யாழ்) க. காண்டீபன்

76. திரு. வரணியம்புலம் பெருமாள்
- முன்னாள் தபால் அதிபர் திரு. க. நவரத்தினம்

77. திரு சின்னர் ஐயம்பிள்ளை -
- திரு. க. நவரத்தினம். (வைத்தியர்)

78. திரு. முருகேசு கதிரவேலு
- திரு. இ. சற்குருநாதன்

79. திரு. பா. சண்முகநாதன்
- மக்கள் வங்கி முகாமையாளர் - திரு. ப. இரஜீவன்

80. திரு. சபா சதாசிவம்
- முன்னாள் தபாலதிபர் திரு. க. நவரத்தினம்

81. திரு. க. அம்பலவாணர்
- கணக்காளர். செ. மனோகரன்

82. திரு. கதிரேசு சண்முகம்பிள்ளை
- திரு. ச. கதிர்காமநாதன் (அவுஸ்திரேலியா)

83. திரு. சே. பொன்னையா
- திரு. வைத்திலிங்கம் சிவநாதன்

84. திரு. மு. குமாரசாமிப்பிள்ளை
- பொறியியலாளர் திரு. கே. சுந்தரலிங்கம்

85. திரு. இ. கைலாயபிள்ளை
- திரு. க. விஸ்வலிங்கம் - அநுசரணை அதிபர் திரு. பொ. மகாலிங்கம்

86. திரு. வை. க. பொன்னம்பலம்
- திரு ஈசன் பொன்னம்பலம்

87. திரு. மு. சி. சிற்றம்பலம்
- திரு. இ. க. தியாகராசா

88. திரு. நா. க. பசுபதிப்பிள்ளை
- திருமதி. ஈசு துரைசிங்கம்.

89. திரு. அ. க. முருகேசு
- அதிபர் திரு. ச. கைலாசபிள்ளை

90. திரு. க. சி. முத்துத்தம்பி
- திரு. க. நவரத்தினம்

91. திரு. பொ. முத்துத்தம்பி
- திரு. ச. மாணிக்கவாசகர்

92. திரு. கந்தையா சிவசரணம்
- திரு. கை. ஜெகதீசன்

93. திரு. அமிர்தலிங்கம் இராசையா
- திருமதி ஈசு துரைசிங்கம்

94. திரு. வாதவூர் அருணகிரி
- பேராசிரியர் ச. சத்தியசீலன்

95. திரு. எஸ். பி. சாமி

96. வேலணை நா. வீரசிங்கம்
- திரு. பாலமுரளி

97. திரு. மு. கணபதிப்பிள்ளை
- திரு. ந. ஜெகநாதன்

98. திருமதி. வாதவூர் அன்னம்
- ஆசிரியை திருமதி வரதா சண்முகநாதன் (கனடா)

99. முன்னாள் சட்டசபை சபாநாயகர். சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி
- கல்விப் பணிப்பாளர். திரு. த. துரைசிங்கம்

100. திரு. வே. அ. கந்தையா - முன்னாள் பா. உ.
- திரு செ. குணபாலசிங்கம் (அதிபர்)

101. பண்டிதர். வித்துவான் கா. பொ. இரத்தினம் (முன்னாள் பா. உ)
- ஆசிரியர் திரு. க. சட்டநாதன்

102. திரு. வைத்தியலிங்கம் விஜயரட்ணம் (முன்னாள் கிராமசபைத் தலைவர்)
- திருமதி வாமதேவா

103. திரு. அம்பலவாணர் செல்லையா (முன்னாள் கிராமசபைத் தலைவர்)
- திரு. நா. குழந்தைவேலு

104. திரு. கணபதிப்பிள்ளை சதாசிவம் (முன்னாள் கிராம சபைத் தலைவர்)
- திரு. கா. பாலகிருஷ்ணன்

105. திரு. புற்றிடம் கொண்டார் சுப்பிரமணியம் (விதானையார் முன்னா சபைத் தலைவர்) - ஆசிரியர் திரு. க. சட்டநாதன்.

106. திரு. நா. கந்தையா
- திரு ந. ஜெகநாதன்

107. திரு. நா. வீரசிங்கம்
- திரு. ச. மாணிக்கவாசகர்

108. திரு. கா. பொன்னையா.
- திருமதி சரோஜினிதேவி சிவனடியான் (ஆசிரியை)

இவ் ஆக்கங்கள் தவிர; நூலின் சிறப்புக் கட்டுரைகளான - சரவணைக் கடல் நீர் ஏரியும் வேலணைச் சிற்றருவியும், தீவுகள் தெற்குப் பிரிவின் அபிவிருத்தியும் பிரச்சினைகளும், வேலணை கிராம வரலாறு, வேலணைப் புவியியல் முதலானவற்றை பேராசிரியர் பொன். பாலசுந்தரம்பிள்ளை அவர்கள் எழுதித் தந்துள்ளார்கள்.

யாழ் பல்கலைக்கழக புவியியல் துறைப் பேராசிரியர் கா. குகபாலன் அவர்கள் எமக்குப் பல கட்டுரைகளை எழுதித் தந்ததுடன் - நூலின் அமைப்பு ரீதியான பல ஆலோசனைகளை வழங்கி உள்ளார். வேலணை, தீவுப் பகுதி, யாழ்ப்பாணம் ஆகியவற்றின் புவியியல் வரைபடங்களையும்- நூலில் இடம்பெற வேண்டும் எனும் நோக்குடன் உவந்தளித்துள்ளார்.

இந்நூல் மிகச் சிறப்பாக உருவாகி உங்கள் கரங்களில் தற்பொழுது தவழ்கிறது. இதற்கு ஏலவே குறிப்பிட்ட இவ்விரு பேராசிரியர்கள் மட்டுமல்ல, இன்னும் பல அறிஞர்கள் பங்களித்துள்ளனர். அவர்களை மீளவும் இங்கு நினைவு கூர்வது சாலப் பொருந்தும்.

பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி அவர்கள், பல ஆக்கபூர்வமான ஆலோசனைகள் கூறி எம்மை ஊக்குவித்ததுடன், நூலுக்கு வாழ்த்துரையும் வழங்கி எம்மைக் கௌரவித்துள்ளார்.

நல்லை திருஞானசம்பந்தர் ஆதீன முதல்வர் ஆசியுரை வழங்கியுள்ளார். இலங்கை இராமகிருஷ்ணமிஷன் தலைவர் சுவாமி ஆத்மகணானந்தா அவர்களது ஆசியுரையும், யாழ். இந்துக் கல்லூரி உப அதிபர் கலாநிதி. க. சிவராமலிங்கம்பிள்ளை அவர்கள் வாழ்த்துரையும் இந்நூலுக்குப் பெருமை சேர்ப்பதாயமைகின்றன.

கல்விப் பணிப்பாளர் திரு. த. துரைசிங்கம் அவர்கள் நாடறிந்த நல்ல தமிழ் அறிஞர். குழந்தை இலக்கியப் படைப்பாளிகளுள் முதன்மையானவர். அவர், முன்னாள் சட்டசபை சபாநாயகர் சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்களைப் பற்றிய வரலாற்றுக் கட்டுரையை எமக்கு எழுதித் தந்ததுடன், நூலாக்கத்தின் மேம்பாட்டுக்கு அரிய பல யோசனைகளை வழங்கியுள்ளார்.

வேலணை மத்திய மகாவித்தியாலய அதிபர் திரு. பொ. அருணகிரிநாதன் அவர்கள் நூலின் சிறப்புக்கு ஆலோசனைகள் வழங்கியதோடமையாது, பல ஆக்கங்களை, நிழற் படங்களை, தானே முன்வந்து உவந்தளித்துள்ளார். இன்றைய இக்கட்டான நிலையில் சொந்த மண்ணில் தரித்து நின்று கல்விப் பணியோடு பல்வேறு சமூகப் பணிகளையும் மனங்கோணாது செய்து வருகின்றார். அன்னாரது ஆலோசனைகளும் உதவிகளும் என்றும் நன்றியுடன் போற்றுதற்குரியனவாகும்.

முன்னாள் தபாலதிபர் திரு. க. நவரத்தினம் பல ஆக்கங்களை எழுதி உதவியதுடன் வேலணையில் அமைந்துள்ள ஆலயங்கள் மற்றும் பாடசாலைகளின் புகைப்படங்களை எடுத்து எமக்கு அனுப்பி நூலின் சிறப்புக்கு அழகு சேர்த்துள் ளார்.

கொழும்பில் வசிக்கும் திரு. திருமதி மணிவாசகம்பிள்ளை தம்பதிகளின் அயராத உழைப்பு, ஆக்கங்களைப் பெறுவதில் உள்ள சிரமங்களை நீக்கியதுடன்,

அரிய ஆக்கங்களைப் பெறுவதற்கும் – பெரிதும் உதவியுள்ளது.

புலம்பெயர்ந்து, தற்பொழுது அவுஸ் திரேலியாவில் வாழும் – சேர். வைத்தி யலிங்கம் துரைசுவாமி மத்திய மகாவித் தியாலய முன்னாள் அதிபர் – திரு. சு. கலாதரன் அவர்களிடம் நூலுக்கான ஆக் கங்களைப் பெறுவதில் நமக்கு இருந்த சிரமங்களைக் கூறிய வேளை, சில ஆக் கங்களைத் தாமே விருப்புடன் எழுதித் தந்ததோடமையாது – பண்டிதை செல்வி. த. வேதநாயகி பற்றிய ஆக்கத்தை திரு. ச. கந்தவேள் மூலம் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களது சீடர் பண்டிதர். வே. அ. பஞ்சாட்சரம் அவர் களைக் கொண்டு எழுதுவித்து உதவியுள் ளார். அத்துடன் செல்வி அன்னபூரணி பொன்னப்பாவின் வரலாற்றை எழுது வதற்கான தரவுகள் சிலவற்றை இலண் டனிலிருந்து பெற்றுத் தந்துள்ளார். இன்ர நெற் மூலம் எம்முடன் அவர் அடிக்கடி தொடர்புகொண்டு நூலுக்காக வழங்கிய ஒத்துழைப்பு மறக்க முடியாத ஒன்றாகும்.

ஆசிரியர்களான திரு. பொ. மகா லிங்கம், திரு. செ. தர்மலிங்கம், திரு. ந. பரணீதரன் (உப செயலாளர்) திரு. கோ. பரமானந்தன் ஆகியோரை எம்மால் மறக்க முடியாது. இப்பாரிய பொறுப்புக் குத் தோள் கொடுத்தவர்களுள் இவர்க ளும் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

கனடாவில் வசிக்கும் நமது ஊர வரான திருமதி வரதா சண்முகநாதன் – இந்நூலில் பெண்கள் சம்பந்தமான கட்டுரைகள் கணிசமாக இடம்பெற வேண்டுமெனும் கருத்துடையவராக இருந்தார். அக்கருத்தை அடியொற்றி அவர் பல கட்டுரைகளை இந்நூலுக்கு எழுதி உதவியுள்ளார். இவர் போலவே திருமதி வேதவல்லி அரசரத்தினம் அவர்களும் பெயர் குறித்துச் சொல்லக் கூடிய வகையில் உதவி உள்ளார்.

எழுத்தாளரும் ஆசிரியருமான திரு. க. சட்டநாதன் எமக்குப் பல ஆக்கங் களை எழுதி உதவியதுடன் சில கட்டுரை களைச் சீரமைத்தும் தந்துள்ளார்.

இந்த நூலாக்கத்திற்கு அச்சாணியாக இருந்து இயங்கியவர் மூதறிஞர் நமது பண்டிதர் ஐயா அவர்கள்தான். பழுத்த பழமாக சுவைதரு ஞான நறுங்கனியாக இயங்கிவருமவர் நமது இப் பெருமுயற் சிக்கு அருந்துணையாக இருந்து, உதவு வது நாம் செய்தபெரும் பேறாகும்.

ஆசிரியை திருமதி ஈஸ்வரி யோதி லிங்கம் அவர்கள் இந்நூலின் ஒப்பு நோக் குனராக செவ்வனே பணியாற்றியுள்ளார். நூலாக்கத்தின் பல்வேறு நிலைகளில் உத விய நூலாக்கக் குழுவினரையும் நிர்வாக சபை உறுப்பினர்களையும் இங்கு பெயர் குறிப்பிடப்படாத அன்பர்களையும் இச்சந் தர்ப்பத்தில் நாம் மனத்திருத்தி மகிழ்ச்சி யடைகின்றோம்.

இந்நூல் வெளியீட்டுக்கு மிக முக்கிய தேவையான நிதியாதாரத்தை வர்த்தகப் பெருமக்கள் மனமுவந்து வழங்கியுள் ளார்கள். தொழில் அதிபர் திரு. எஸ். பி. சாமி. திரு. வேலணை வீரசிங்கம், திரு. சி. குகநாதன் ஆகியோர் நிதி சேகரிப் பதற்கு உதவி வழங்கியும் தங்கள் வாக னங்களை பயன்படுத்தியும் காலத்துக்குக் காலம் ஆலோசனைகள், உதவிகள் புரிந்தும் வந்துள்ளனர்.

தினக்குரல் அதிபர் திரு. எஸ். பி. சாமி, அச்சக முகாமையாளர் திரு. ப. சிவராசா மற்றும் அச்சக ஊழியர்களின்

# வாழும் தமிழின் வடிவம்

**K P Rathnam**
(Former member of Parliament - 1965-1983)



தமிழ்மறைக் காவலர்;
பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள்
*முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் (1965-1983)*

கண்துஞ்சா உழைப்பு, இதனை நேர்த்தியான வடிவமைப்புடன் கூடிய அழகிய நூலாக வெளிக்கொணர உதவியுள்ளது. மேலும் தகுதியானவர்களின் ஆக்கங்கள் சேர்க்க எண்ணியிருந்தும் அவர்களின் உறவினருடன் தொடர்பு கொள்ள முடியாமை காரணமாக நூலில் இடம்பெறாமைக்கு வருந்துகின்றோம். அவர்களின் ஆக்கங்கள் கிடைக்கப்பெறின் அடுத்த பதிப்பில் அவ் ஆக்கங்களை நூலில் சேர்த்துக்கொள்வோம்.

ஏலவே குறிப்பிட்ட இப் பெருமக்களது ஆத்மார்த்தமான ஒத்துழைப்பின்றி இந்நூல் இத்தகைய பொலிவினையும் சிறப்பினையும் பெற்றிருக்க முடியாது. இவர்கள் அனைவருக்கும் நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

உண்மை, செய்நேர்த்தி இவற்றை மட்டுமே முதன்மைப்படுத்திய இம்முயற்சியில் குறைகள் ஏதும் இருப்பின் பொறுத்தருள்க!

மனமகிழ்ச்சியுடன் நூலைத் தங்களுக்குச் சமர்ப்பிக்கின்றோம்.


**ச. மாணிக்கவாசகர்.**
ஓய்வுபெற்ற ஆசரியர்
அகில இலங்கைச் சமாதான நீதவான்.
பதிப்பாசிரியர்
S.J.V. செல்வநாயகம் வீதி
வேலணை - 02.

108, 1/2, மன்னிங் பிளேஸ்,
வெள்ளவத்தை, கொழும்பு 06,
இலங்கை. தொலைபேசி: 2365843


## இந் நூலாக்கத்திற்கு நிதி உதவியோர் விபரம்

1. திரு. எஸ். பி. சாமி
2. திரு. ச. மாணிக்கவாசகர்
3. திரு. மா. இளஞ்செழியன்
4. வேலணை நா. வீரசிங்கம்
5. திரு. சி. குகநாதன்
6. திரு. பொ. இராமநாதன்
7. திரு. மு. சரவணபவன்
8. திரு. பூ. புஸ்பகரன்
9. திரு. கு. ஆனந்தராஜன்
10. திரு. மு. சண்முகலிங்கம்
11. திரு. க. கந்தசாமி
12. திரு. ஆ. பொ. பரராஜசிங்கம்
13. திரு. மு. ரூபன்
14. திரு. க. காந்திதாசன்
15. திரு. மு. மகேந்திரன்
16. திரு. அ. ஸ்ரீசெல்வம்
17. திரு. இ. இராஜேந்திரன்
18. திரு. த. திருநாவுக்கரசு
19. திரு. ச. கதிர்காமநாதன்
20. திருமதி பகவதி இரத்தினம்

இவர்களுக்கு எங்கள் இதயபூர்வமான நன்றி

பதிப்பாசிரியர்.



# நூலாக்கக் குழுத் தலைவரின் கருத்துரை


## பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை

### முன்னாள் துணைவேந்தர் - யாழ். பல்கலைக்கழகம்


இன்று பூகோள மயமாக்கலாலும் நகராக்கத்தாலும் சர்வதேச இடப்பெயர்வு களாலும் தொலைத்தொடர்பு வசதிகளா லும் உலகின் பல பகுதிகளில் கிராமிய கலை, கலாசாரம், பண்பாடு ஆகியன தம் தனித் தன்மையை இழந்து, அழிந்து செல்லும் நிலையில் உள்ளன. இந்நிலை எழுவதற்கு முன் உலகின் பெரும் பகுதி களில் உள்ள கிராமங்கள் ஒவ்வொன்றும் தன்தன் நிலையில் தனி ஒரு உலகமாக விளங்கியது. கிராமங்களில் மக்கள் தற் காப்பு வாழ்க்கை முறையை மேற்கொண் டனர். அவர்களின் வாழ்வும் வளமும் அவர் தம் கிராமத்தையே மையமாகக் கொண்டது. இன்று இந்நிலையில் பெரு மாற்றம் ஏற்பட்டுவருவது அவதானிக்கத் தக்கது.

உலகின் பெரும் பகுதிகளில் ஏற்பட்டு வரும் உள்நாட்டு யுத்தங்களால், கிராமங் களும் கிராம சமூகங்களும் அழிந்து கொண்டிருக்கின்றன. இப் பின்புலத்தில் ஒவ் வொரு கிராமத்தினதும் வரலாறு, சமூக பொருளாதாரக் கட்டமைப்பு கலை, கலா சாரம், பண்பாடு போன்ற விடயங்களை அழியவிடாது பாதுகாத்து அடுத்த தலை முறைக்குக் கையளிக்க வேண்டிய வரலாற் றுக் கடமை யாவருக்கும் உண்டு.

யாழ்ப்பாணத்தில் தீவுப் பகுதியில் வேலணை நீண்ட வரலாறும், பெருமையும் கொண்ட கிராமமாகும். மக்கள் தம் கிரா மத்து வளங்களைச் சிறந்த முறையில் விருத்தி செய்து ஒழுங்கான, தற்காப்பு வாழ்வை மேற்கொண்டு வந்தனர். சிறந்த சமூக விழு மியங்களையும் செயற்பாடுகளையும் கைக் கொண்டனர். தமிழையும் சைவத்தையும் தம் கண்களாகப் போற்றினர்.

இக் கிராமம் 1990 இல் ஏற்பட்ட யுத்தத் தாலும், 1991 ஏப்பிரலில் நிகழ்ந்த பாரிய இடப்பெயர்வாலும் 5 வருடங்களுக்கு மேல் மக்கள் அற்ற கிராமமாகத் திகழ்ந்ததால் கிராமம் படிப்படியாக அழிவுற்றது. மக்க ளிற் பலர் உலகின் நாலா திசைக்கும் பர விச் சென்றனர். 1996 இல் மீள் குடியேற் றம் ஆரம்பித்தபோதும் ஒரு சிறு தொகை யினரே கிராமத்திற்குத் திரும்பிச் சென்ற னர். மக்களிற் சிலர் தம் கிராமத்திற்குத் திரும்பிச் செல்ல விரும்பியபோதும் பல புதிய பிரச்சினைகள் காரணமாக அவர் கள் விருப்பம் நிறைவேறவில்லை. எனினும், வேலணை மக்களுக்குத் தம் கிராமம் பற் றிய உணர்வு மேலோங்கி நின்றது. இதன் விளைவாகத் தம் கிராமத்தின் வரலாறு, வாழ்வும் வளமும், பண்பாடு, பெருமை ஆகியவற்றைப் பற்றியும் இவற்றிற்கு ஆதார மாக விளங்கிய கிராமத் தலைவர்கள் பெரி யார்களைப் பற்றியும் அவர் தம் சேவை களைப் பற்றியும் நன்முறையில் ஆவணப் படுத்த வேண்டும் என்ற பேராவல் தலை தூக்கியது. இதன் விளைவே இந்நூல்.

முன்னாள் ஆசிரியர் திரு. ச. மாணிக்க வாசகர் அவர்களின் பெரு முயற்சி, அர்ப் பணிப்பைக் கொண்டு இந்நூல் வெளிவரு வது குறிப்பிடத்தக்கது. அவரின் தளர் வுறா மனமும் கடின உழைப்பும் நூலின் உருவாக்கத்திற்குத் தளமாக அமைந்தன. ஆசிரியர் அவர்கள் இளமையில் ஒரு துடிப் பான செயல்வீரர். கிராம முன்னேற்ற செயற் பாடுகளில் முன்னின்று உழைத்தவர். இன் றும் அதேயளவு ஆர்வத்துடனும் அக்கறை யுடனும் கிராம வரலாற்றை நூல்வடிவில் கொண்டு வருவதில் செயற்பட்டு வருபவர்.

இந்நூல் வெளிவருவதற்கு ஆக்கமும் ஊக் கமும் அளித்த சகல அன்பர்களுக்கும் எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.



# வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் . சபை
# வேலணை

## நூலாக்கக் குழுவினர்

தலைவர்



பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
முன்னாள் துணைவேந்தர் (யாழ். பல்கலைக்கழகம்)

உறுப்பினர்



பேராசிரியர் இ. சிவச்சந்திரன்
கலைப்பீடாதிபதி
(யாழ். பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்)

உறுப்பினர்



பேராசிரியர் ச. சத்தியசீலன்
வரலாற்றுத் துறைத் தலைவர்
(யாழ். பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்)





## ஆசியுரை

# ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரதேசிக ஞானசம்பந்தபரமாசாரிய சுவாமிகள்

### இரண்டாவது குருமஹா சந்நிதானம்
### நல்லை ஆதீனம் - யாழ்ப்பாணம்

யுத்த அழிவுகளாலும் இடப்பெயர்வு களாலும் பல தமிழ்க் கிராமங்கள் வாழ் விழந்தும் முற்றாக அழிந்தும் விட்டன. 20 வருடங்களுக்கு மேலாக மக்களற்ற பல தமிழ்க் கிராமங்கள் உண்டு. வரலாற்றுப் புகழ்மிக்க கிராமங்களான மாவிட்டபுரம், கீரிமலை, காங்கேசன்துறை, மயிலிட்டி போன்றன உதாரணங்களாகும். இக்கிரா மங்கள் பற்றிய வரலாற்றையும் விபரங்க ளையும் ஒழுங்குமுறைப்படி ஆவணப்படுத் தாதுவிடில் வருங்காலத்தில் இக்கிரா மங்கள் பற்றி எவரும் அறிய முடியாது போய் விடுவதுடன் வேறு பல பிரச்சினைகளும் உருவாகலாம். ஆகவே எமது கிராமங்கள் பற்றி ஆதாரபூர்வமாக ஆவணப்படுத்த வேண்டிய தேவை இன்று எழுந்துள்ளது.

வேலணை, வரலாற்றுப் பழைமை மிக்க ஒரு சைவத் தமிழ்க் கிராமமாகும். 1991 இல் நடந்த இடப்பெயர்வினால் அக் கிராமம் பெரும் அழிவுக்குட்பட்டு இன்னும் மீள்குடியமர்வு முற்றுப்பெறவில்லை. பல குடும்பங்கள் இடம்பெயர்ந்து பல நாடு களுக்குச் சென்றுவிட்டன. புலம் பெயர்ந் தோர் தங்கள் வாழ்வை மீட்டுப் பார்க்க வும் இளைய தலைமுறையினர் தமது முன் னோர்களையும் அவர்களது வாழ்வையும் அறிந்து கொள்ளவும் இந்நூல் உதவியாக அமையும். இந்நூலைப் போல் எமது கிராமங் கள் ஒவ்வொன்றும் தத்தம் ஊர், கிராமங் கள் பற்றிய தகவல்களை ஆவணப்படுத்தி வருங்கால சந்ததிக்குக் கையளிப்பது அவசி யமாகும்.

"என்றும் வேண்டும் இன்ப அன்பு"



# ஆசியுரை

## சுவாமி ஆத்மகணானந்தா அவர்கள்

### இராமகிருஷ்ண மடம், இலங்கைக் கிளை - கொழும்பு

யாழ்ப்பாணம், வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை வெளியிடும் "வேலணை - ஒரு வரலாற்று அறிமுகம்" எனும் இந் நூலுக்கு இவ்வாழ்த்துச் செய்தியை வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

"பெற்ற தாயும் பிறந்தநன்னாடும் நற்றவ வானிலும் நனி சிறந்தனவே" என்னும் முதுமொழிக்கு ஒரு சிறந்த விளக்கவுரையாக அமைந்துள்ளது இந்நூல் எனலாம். இவ்வூரின் புவியியல் மற்றும் சரித்திர குறிப்புகளோடு, பிறந்த மண்ணிற்குப் பெருமை சேர்த்த இவ்வூரின் சமயப் பெரியோர், புலவர், கல்விமான், கலைஞர், தொழிலதிபர், மருத்துவர், சமூக சேவையாளர் போன்ற பல்துறை சார்ந்தோரது வாழ்க்கைக் குறிப்புக்களும் இந்நூலில் இடம் பெறுகின்றன. கடந்த காலத்தைப் போன்றே இன்றும் இவ்வூர் தொடர்ந்து நற்பிரஜைகளை உருவாக்கிக் கொண்டு இருக்கிறது என்பதுதான் இவ்வூரின் சிறப்பு.

இவ்வூரின் குடிமக்கள் தாங்கள் பிறந்த மண்ணின் சிறப்பிலே மனநிறைவும், மகிழ்ச்சியும், பெருமிதமும் கொண்டிருப்பதை இந்நூல் வெளியீட்டிலிருந்து அறியலாம். இவ்வூரின் எதிர்கால சந்ததியினர் தங்கள் முன்னோரின் பெருமைகளை அறியவும், அப்பெருமைகளைக் கட்டிக்காக்கும் வகையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள உத்வேகம் பெறவும் இந்நூல் வழி வகுக்கும் என்பது திண்ணம். அந்தவகையில் இந்நூலாசிரியர் திரு. ச. மாணிக்கவாசகர் அவர்களின் முயற்சி மிகவும் போற்றத் தக்கது. அவருக்கும், இந்நூலை வெளியிடும் வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபையினர்க்கும் எங்கள் நல்வாழ்த்துக் களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# வாழ்த்துரை

## பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி

இலங்கைத் தமிழ்ப் பிரதேசங்களின் வரன்முறையான வரலாறுபற்றி சிந்திக்கும் பொழுது தான் நமது பிரதேசங்கள் தமிழர் வாழ்கின்ற பகுதிகள் எல்லாவற்றிற்கும் தொடர்ச்சியான வரலாறுகள் இல்லை என்பது தெரியவரும். தென்னிந்திய வணிகர், கடலோடிகள், படைவீரர்கள் ஆகியோரது வருகையும் சோழர், பாண்டியர் ஆகியோரது வருகையும் யாழ்ப்பாண அரசின் எழுச்சியும் முடிவும் ஆகிய சில வரலாற்று நிகழ்ச்சிகள் சம்பவங்களைக் கொண்டே தமிழ்ப் பிரதேசங்களின் வரலாற்றைத் தொடர்ச்சியாகப் பார்க்கின்றோம்.

பௌத்த, பாளி நூல்கள் பௌத்த வரலாற்றை (மகாவம்சம், சூளவம்சம்) முதன்மைப்படுத்தியதாலும் அவற்றிலும் ஆட்சி மையங்களும் ஆட்சி-மத மையங்களே முக்கியத்துவம் பெற்றன. இன்று கூட கிழக்கிலங்கைக்கான ஒரு தொடர்ச்சியான வரலாறு கிடையாது. திருகோணமலையில் ஆதிக்கம் செலுத்தியவர்களை தளமாகக் கொண்டு அப்பிரதேச வரலாற்றை எடுத்துக் கூறும் ஒரு மரபு உள்ளது. எனினும் மட்டக்களப்பு - குறிப்பாக படுவான்கரை, மூதூர், கிண்ணியா போன்ற பிரதேசங்களை உள்ளடக்கிய ஒரு வரலாறு இல்லையென்றே கூறவேண்டும். இலங்கையின் வடமேற்கு கரையோரத்திலுள்ள புத்தளம், சிலாபப் பகுதிகளின் வரலாறும் இன்றும் எழுதப்படாத ஒன்றாகவே உள்ளது. புத்தளம், சிலாபப் பகுதியிலுள்ள திரௌபதை அம்மன் வழிபாட்டு மரபு மட்டக்களப்பிலும் உள்ளது என்பதை அவதானிக்கும் போது, இப்பிரதேசங்களின் பண்பாட்டுத் தொடர்புகள், ஊடாட்டங்கள் பற்றிக் கூட நாம் இன்னும் சிந்திக்கத் தொடங்கவில்லை.

என்பது புலனாகின்றது. வன்னிப் பகுதியின் வரலாறு வன்னிப் பகுதியின் காலனித்துவ கால, அதற்கும் முந்திய வரலாறுகள் இன்னும் தான் தனித்தனி அநுபந்தங்களாக நிற்கின்றனவே தவிர, ஒட்டுமொத்தமான இணைவினைப் பெறவில்லை.

இலங்கையின் வடபகுதியான யாழ்ப்பாணப் பிரதேசத்துக்கு வருகின்றபோது, அண்மைக்காலத்தில் முந்து வரலாற்றுக் காலத்துக்குரிய தொல்லியற் சான்றுகள் மூலம் இப்பிரதேசங்களின் பழைமையும் தமிழகம், தென்னிந்தியாவுடனுள்ள தொடர்பும் நன்கு புலனாகின்றன.

ஆனால் வரலாறு என்பது எல்லா வேளைகளிலும் "வருகைகளும் செல்வாக்குகளும் மாத்திரமல்ல" வரலாறு என்பது புவியியலும் மானிடவியலும் இயைபுற்று ஒன்றுடனொன்று ஊடாடுகின்ற பொழுது ஏற்படுகின்ற சமூக பண்பாட்டு உருவாக்கமுமே ஆகும். இந்தசமூக பண்பாட்டு உருவாக்கத்தை பொருளதார வளங்களும், வளங்கள் பயன்படுத்தப்படும் முறையும் தீர்மானிக்கும். அந்த மண்ணுக்குள்ளிருந்து கிளம்புகின்ற வாழ்க்கைமுறை பிற செல்வாக்குகளுடனும் சக்திகளுடனும் தொடர்புறுகின்றபொழுது வரலாற்று உருவாக்கம் நிகழ்கின்றது.

இப்படிப் பார்க்கும் பொழுது யாழ்ப்பாணத்து பிரதேச வாழ்நிலைகளினூடாக கிளர்ந்தெழுந்த வாழ்க்கை முறைமையின் உருவாக்கமும் தொடர்ச்சியும் இன்னும் அறிவியல் பூர்வமாக ஆராயப்படவில்லை என்பது தெரிகின்றது. யாழ்ப்பாண வைபவ மாலையை யாழ்ப்பாண அரசர் காலத்துக்கான சான்றாக மாத்திரம் கொள்ளாமல் யாழ்ப்பாண பிரதேச சனவேற்றத்துக்கான (Peopling) ஒரு சான்றாக கொண்டு வாசிக்கும் பொழுது அந்நூலிலே காணப்படுகின்ற தரவுகள் பலவற்றை நாம் இன்னும் சிறிதளவேனும் பயன்படுத்தவில்லை என்பது தெரியவரும். யாழ்ப்பாணத்தின் வரலாற்றை யாழ்ப்பாணத்து முதலிக் குடும்பங்களின் உறவுகளின் ஊடாகப் பார்க்கும் பொழுது தான் யாழ்ப்பாணத்தின் உள்ளக வளர்ச்சிகள் புலப்படும்.

இவ்வாறு நோக்கும் போது, இலங்கையின் வடபுலத்தின் மிகப் பிரதானமான புவியியல் அலகுகளில் ஒன்றாக அமைவது யாழ்ப்பாணத்தின் "தீவுப் பகுதியும்" என்பது தெரியவரும்.

வேலணை, மண்டைதீவு, அனலைதீவு, காரைதீவு, புங்குடுதீவு, நயினாதீவு, நெடுந்தீவு, எழுவைதீவு என வரும் தீவுகள் "யாழ்ப்பாணப் பண்பாடு" என இன்று அடையாளம் காணப்படும் பண்பாட்டு உருவாக்கத்தில் கணிசமான ஓர் இடத்தைப் பெறுகின்றன. நயினாதீவின் பௌத்த தொடர்புகள் முதல் நாரந்தனையின் கத்தோலிக்க தொடர்புகள் வரை ஒரு நீண்ட பாரம்பரியம் உண்டு. சீனக் கப்பல்கள் இத்தீவுப் பகுதிகளை அண்டிச் சென்றன அல்லது மேலைநாட்டுக் கப்பல்கள் சீனத்து மட்பாண்டங்களை ஏற்றிச் சென்றபொழுது இப்பகுதிகளால் சென்றன என்பதற்கான சான்றுகள் நம்மிடையே உண்டு. இத்தீவுகளுக்கான ஆங்கிலப் பெயர்கள் ஒல்லாந்தராலேயே இடப்பெற்றன என்பதும் இப்பெயர்கள் ஒவ்வொன்றும்

ஒல்லாந்தில் இன்றும் உள்ள இடப் பெயர்கள் ஆகும் என்பதும் ஒரு முக்கிய உண்மை. யாழ்ப்பாண வைபவமாலையளவு ஒத்தவரலாற்று முக்கியத்துவம் கொண்ட வெடியரசன் மாலை இப்பகுதியில் வாழும் ஒரு பிரிவினரின் வரலாற்றினைக் கூறுகின்றது.

இவ்வாறு சற்று நிதானமாகச் சிந்திக்கத் தொடங்கும் பொழுது தான் நாம் வரலாற்றை மேலிருந்து கீழாக பார்க்கின்றோமே தவிர கீழிருந்து மேலாக உருவாகின்ற ஒன்றாக பார்க்கத் தவறிவிட்டோம் என்பது தெரியவருகிறது. (மகாவம்ச வரலாற்றுப் போக்கின் பாதிப்புகளில் இதுவும் ஒன்று)

கீழிருந்து மேலாக நோக்கும் பார்வை என்பது முதலில் ஒவ்வொரு தனித்தனி அலகுகளை எடுத்து அவற்றுக்கான வரலாற்று பாரம்பரிய வளர்ச்சியை நோக்கி அப்பிரதேசத்துக்குள்ள பிற ஊடாட்டங்களுடன் அது எவ்வாறு இணைகின்றது என்பதை அறிந்து கொள்ளலாகும்.

வரலாற்றை இவ்வாறு பார்க்கத் தொடங்கும் பொழுது "உள்ளூர்" வரலாறு அடி அலகாக அமைகிறது. எனக்குத் தெரிந்த வரையில் இங்கிலாந்தின் வரலாற்றுப் பாரம்பரிய உருவாக்கத்தில் இந்த உள்ளூர் வரலாற்றிற்கு (Local History) மிக முக்கிய இடம் உண்டு. இலங்கையிலும் கூட மகாவம்ச பாரம்பரியம் என்ற மேலிருந்து கீழாகப் பார்க்கின்ற ஒரு தேரவாத பாரம்பரியம் உண்டு. ஆயினும் சப்ரகமுவ, ஊவா, றைகம் கோறளே என உள்ளூர் அலகுகளைக் கொண்டு பார்க்கும் முறையும் கணிசமாக உண்டு.

யாழ்ப்பாணத்தில் துரதிஷ்டவசமாக இந்த உள்ளூர் வரலாற்றுப் பாரம்பரியம் அறிவியல்பூர்வமாக வரன்முறையாக வளர்த்தெடுக்கப்படவில்லை எனக் கூறலாம். ஆழியவளை பற்றிய முத்துராசா என்பவரின் நூலும் புலோலி பற்றிய நூலும் இத்துறையில் முக்கியமானவை. கனடாவிலுள்ள ஒருவர் திரு. சு. சிவநாயகமூர்த்தி நெடுந்தீவு பற்றி ஒரு நூலை எழுதியுள்ளார்

இப்பொழுது வேலணை பற்றிய இந்த நூல் வருகிறது. நான் அறிய பண்டிதர் கா. பொ. இரத்தினம் முதல் பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை வரை, சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி முதல் அமரர் வி. ஏ. கந்தையா வரை, திரு. மு.கு. முதல் திரு. எஸ். பி. சாமி வரை என வேலணை யாழ்ப்பாணத்தின் கவனத்தை ஈர்த்துள்ள ஒரு பல்துறைப் பாரம்பரியத்தை உடையது என்பது தெரியவரும்.

இப்பொழுது எழுதப்படும் வேலணை பற்றிய வரலாறு வேலணையின் பல்துறைப் பாரம்பரியங்களை வெளிக்கொணருமென நம்புகின்றேன்.

உள்ளூர் வரலாறு என்பது நுணுகி வரலாற்றைப் பார்க்கும் முயற்சி என்றாலும் உள்ளதை நுணுக்கமாக பார்க்கும் அதேவேளையில் மற்றவற்றுடன் அது எவ்வாறு இணைகின்றது என்பதை தொலைவில் நின்று பார்ப்பதையும் உள்ளடக்கும்.

உள்ளூர் வரலாற்றை எழுதுவதற்கான முறையியல் (Methodology) நம்மிடத்து இன்னும் சரிவர "அமைந்து" விடவில்லை

என்பது உண்மையே ஆயினும் அந்தப் பிரதேசத்தின் ஒட்டுமொத்தமான வளர்ச்சி என்ற பின்புலத்தின் தெளிவுக்கு சேகரிக் கப்பட வேண்டியனவற்றை சேகரிப்பதே முதல் முயற்சியாக அமையும். அதுவே ஒரு பாரிய பணியாகும். திரு. ச. மாணிக்க வாசகர் அவர்களுடன் உரையாடுகின்ற பொழுது அந்த ஆர்வம் புலனாகின்றது.

இந் நூல் செப்பமாக ஒழுங்கமைக்கப் பெற்றுச் செம்மையுடன் அளிக்கப்படும் போது வேலணை மண் வாசனையினது இனிமையான சுகந்தம் மேற்கிளம்பும் என நம்புகின்றேன். ஆனால் இந்தச் சுகந்தம் யாழ்ப் பாணத்தினதும் இலங்கையின் தமிழ்ப் பகுதி களினதும் இலங்கையினதும் தமிழ் பண்பாட் டினதும் சுகந்தமாகவும் அந்தச் சுகந்தங்க ளின் கீற்றாகவும் அமைகின்றது எனும் உணர்வும் வரும் வகையில் அமையும் என்பதிலே எனக்குச் சந்தேகமில்லை.





# வாழ்த்துரை

## கலாநிதி. க. சிவராமலிங்கம்பிள்ளை

வேலணைக் கிராமத்தின் வரலாறு, வாழ்வு வளம் பற்றிய ஆவணமாக இந்நூல் வெளிவருவதையிட்டு மகிழ்ச்சியடைகிறேன். நான் அயல் கிராமமான புங்குடுதீவைச் சேர்ந்தவனாக இருந்தபோதும் வேலணைக் கிராமத்துடன் எனது மாணவக் காலத்திலிருந்தே நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தேன். வேலணை சைவமும் தமிழும் செழித்து வளர்ந்த பூமி. விவசாயமும் வியாபாரமும் வளர்ந்தஇடம். பல்வேறு இடங்களுக்குத் தம் வியாபாரத்திற்காகக் கிராம மக்கள் சென்ற போதும், தம் கிராமத்தை மறவாதவர்கள். ஆலயங்கள் அமைப்பதிலும் உற்சவங்கள் நடத்துவதிலும் சைவத்திற்கும் தமிழுக்கும் விழாக்கள் எடுத்து மாநாடுகள் நடாத்துவதில் முன்னிற்பவர்கள்.

1991 இல் ஏற்பட்ட இடப்பெயர்வால் கிராமம் அழியத் தொடங்கியது. இளைய தலைமுறைக்குத் தம் கிராமம், கிராமத்தவர் பற்றி அறிவு இல்லாத நிலை ஏற்பட்டுள்ளது. இந்நிலையில் வேலணை பற்றி நூல் ஒன்றை வெளியிட எடுத்தமுயற்சி காலத்தின் தேவையாகும். இந்நூல் மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெறும் என்பது என் நம்பிக்கை. இந்நூலை வெளியிடுவதில் முன்னின்று உழைத்தவர்களுள் குறிப்பாக இளைப்பாறிய அதிபர், செயல் வீரர் திரு. ச. மாணிக்கவாசகர் அவர்கள் பெரும் பாராட்டுக்குரியவர். நூலாக்கக் குழுவிற்கும் நூல் வெளியீட்டு விழாவுக்கும் எனது நல் வாழ்த்துக்கள்.

# வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை வேலணை

HISTORY OF VELANAI - PUBLISHING COMMITTEE - VELANAI

**தலைவர்**

முனைவர் கா. பொ. இரத்தினம்
(முன்னாள் பா. உ. ஊர்காவற்றுறை)

**உப தலைவர்கள்:**

பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
(முன்னாள் துணைவேந்தர் - யாழ். பல்கலைக்கழகம்)

பேராசிரியர் இரா. சிவச்சந்திரன்
(கலைப்பீடாதிபதி - யாழ். பல்கலைக்கழகம்)

பேராசிரியர் ச. சத்தியசீலன்
(தலைவர், வரலாற்றுத்துறை - யாழ். பல்கலைக்கழகம்)

திரு. செ. பொ. சாமி
(அதிபர், தினக்குரல்)

**செயலாளர்:**

திரு. ச. மாணிக்கவாசகர்
(ஆசிரியர்)

**உப செயலாளர்**

திரு. ந. பரணீதரன்

**பொருளாளர்:**

வேலணை நா. வீரசிங்கம்

**செயற்குழு உறுப்பினர்கள்:**

திரு. கோ. பரமானந்தன்
திரு. பொ. மகாலிங்கம்
திரு. செ. நடராசா
திரு. செ. தர்மலிங்கம்
திரு. பொ. பரராசசேகரம்
திரு. ஆ. சண்முகநாதன்
திரு. சி. குகநாதன்
திரு. சோ. மார்க்கண்டு
திரு. செ. மதிவண்ணன்.

## வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை நிர்வாகக் குழு உறுப்பினர்கள்

HISTORY OF VELANI - PUBLISHING COMMITTEE - VELANAI



முன்வரிசை– இடமிருந்து: உப தலைவர் திரு. எஸ். பி. சாமி, பொருளாளர் திரு. வேலணை வீரசிங்கம், தலைவர் பண்டிதர் கா.பொ. இரத்தினம், செயலாளர் திரு. ச. மாணிக்கவாசகர், நிர்வாக உறுப்பினர்கள் திரு. பொ. மகாலிங்கம்
பின்வரிசை – இடமிருந்து: திரு. கோ. பரமானந்தன், திரு. பொ. பரராசசேகரம், உபசெயலாளர் திரு. ந. பரணீதரன், திரு. சோ. மார்க்கண்டு (படத்தில் இல்லாதவர்கள்: பேராசிரியர்கள், பொ. பாலசுந்தரம்பிள்ளை, இரா சிவச்சந்திரன், ச. சத்தியசீலன், திரு செ. நடராசா. திரு செ. தர்மலிங்கம், திரு. ஆ. சண்முகநாதன், திரு. சி. குகநாதன், திரு. செ. மதிவண்ணன்

# MAP OF VELANAI , SRI LANKA - 2006

## ISLANDS SOUTH DIVISION - JAFFNA DISTRICT - NORTHERN PROVINCE

SCALE 1 : 30,000

## விளக்கப் படம் - 01







4 2 0 4 8 மைல்கள்



# வேலணைக் கிராமம்

பேராசிரியர். பொன். பாலசுந்தரம்பிள்ளை
முன்னாள் துணைவேந்தர்
யாழ். பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

ஒல்லாந்தரால் லைடன் தீவு என அழைக்கப்பட்ட வேலணைத் தீவில், வடக்கில் சரவணைக்கும் கிழக்கில் மண்கும்பானுக்கும் இடைப்பட்ட பகுதியே வேலணைக் கிராமம். வரலாற்று ரீதியாக இக்கிராமம் வேலணை கிழக்கு, வேலணை மேற்கு என இரு விதானைப் பிரிவுகளை உள்ளடக்கியதாக விளங்கியது. 1961க்குப் பின் விதானை பிரிவுகள், கிராம சேவகர் பிரிவுகள் எனப் பெயர் மாற்றம் பெற்றன. 1987 இல் கிராம சேவகர் பிரிவுகள் நாடு முழுவதும் மீளாய்வு செய்யப்பட்டபோது, வேலணை கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. மீண்டும் 1990 இல் கிராமசேவகர் பிரிவுகள் மீளாய்வு செய்யப்பட்டபோது, இக் கிராமம் எட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது.

வேலணை, மாண் நிலையில் ஒரு தனிக் கிராமமாக விளங்கினும்,. இதனுள் தனித்துவமாக பௌதீக ரீதியில் இனங் காணக் கூடிய பல குடியிருப்புகளைக் காணலாம். அவையாவன: சுமரவெளி, சிற்பனை, கைத்தனை, கெட்டில், அம்பிகை நகர், துறையூர், தாழிபுலம், நாவடிப்புலம், அக்கவாளி, பள்ளம்புலம், சோளாவத்தை, மாரியப்புலம், சாட்டி, தேவிகோட்டம், கோயிலுப்புலம், கொட்டப்பெட்டி மூலை, வங்களாவடி, ஆரவயல்புட்டி, இலந்தைக் காடு என்பவை குறிப்பிடத்தக்கவை. இக் குடியிருப்புக்கள் ஒவ்வொன்றும் பௌதீக ரீதியாக ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கப்பட்டுக் காணப்படுகின்றன. இதனால் இக்குடியிருப்புக்கள் ஒவ்வொன்றும் தனித்துவமான பண்புகள் சிலவற்றைக் கொண்டுள்ளன.

## புவிச்சரிதவியல்

இக்கிராமத்தின் வாழ்வாதாரங்களை நன்கு விளங்குவதற்கு இக்கிராமத்தின் பௌதீகப் பண்புகளை முதலில் நோக்கலாம். புவிச்சரிதவியலை நோக்கின் இதனை இரு பரப்புகளாகப் பிரிக்கலாம். யாழ்ப்பாணம்-ஊர்காவற்றுறை வீதியை அண்டியுள்ள தென்பகுதியும் அதற்கு வடக்கே உள்ள பகுதியும் ஒரு பிரிவாகவும் இவற்றுக்குத் தெற்கே உள்ள பிரதேசம் அடுத்தபிரிவாகவும் உள்ளன. தெற்குப் பிரதேசம் மயோசீன் சுண்ண அடையல் பாறைகளைக் கொண்டுள்ளது. கல்லாண்டு முனங்குப் பகுதியில் கற்பாறைகள் தரைமேல் எழும்பி நிற்பதைக் காணலாம். தென்பகுதி வட பகுதியுடன் ஒப்பிடுமிடத்து, வயதில் கூடியதாகவும், பாறைகள் கொண்டதாகவும் உள்ளது. ஆனால் வடபகுதி அண்மைக் காலப் படிவுகளால் ஆனது. படிவுகள் தொடர்ந்து இடம்பெறுவதையும் காணலாம். கடல் வாழ் உயிரினச் சுவடுகளான சிப்பி, சங்கு, சோகி, ஊரி போன்றன மேற்படைகளில் காணப்படுவதுடன், இவைகள் இன்றும் இயற்கைச் செயற்பாடுகளால் ஒன்றாக இணையாது சொரியலாக உள்ளன. வீதி அமைப்பு மற்றும் பல்தேவைகளுக்கு இப் பகுதியிலிருந்து பெருமளவு ஊரிமண் எடுக்கப்படுகிறது. வடபிரிவின் கரையோரம் படிப்படியாக வளர்ச்சி பெற்றும் ஆழம் குறைந்தும் வருகிறது. பண்ணை, பொன்னாலை, கடல்வழித் தரைப்பாதை (CAUSE WAY) அமைக்கப்பட்ட பின்னர் நீரோட்டம் குறைந்து மண் படிவுகள் ஏற்படுவதாலேயே இத்தகைய மாற்றங்கள் ஏற்படுகின்றன. கடற்கரையை அண்டிய பகுதிகளில் சிறு சிறு மேட்டு நிலங்கள் ஏற்படுவதையும் அவதானிக்கலாம்.

## தரைத்தோற்றம்

தரைத்தோற்றம் பெருமளவு சமதரையாக இருப்பினும் நுணுக்கமாக நோக்கின் இக்கிராமத்தின் தெற்குப் பகுதிகள் ஒப்பீட்டு ரீதியில் வட, வடமேற்குப் பகுதிகளிலும் பார்க்க உயரம் கூடிய பகுதிகளாக இருக்கின்றன. 13 அடி உயரம் கொண்ட கல்லாண்டு முனங்கே இக்கிராமத்தில் அதி கூடிய உயரமான பகுதியாகும். இவ்விடத்திலிருந்து வடமேற்குத் திசையாக உயரம் படிப்படியாகக் குறைந்து செல்கிறது. இக்கிராமத்தின் தரவைப் பகுதிகளும் நெற்செய்கைப் பகுதிகளும் உயரம் குறைந்து காணப்பட, குடியிருப்பு, தோட்டக் காணிகள், பனைவளவுகள் உயரம் கூடிய பகுதிகளாக உள்ளன. மழைக்காலங்களில் முதற்பிரிவு நிலங்கள் வெள்ளந்தேங்கும் தன்மை கொண்டன. பனைவளவு, தோட்டக் காணிகள், குடியிருப்பு ஆகியன நெற்செய்கைக் காணிகளிலும் பார்க்க 3 அடிக்கு மேல் உயரம் கொண்டவையாக இருப்பதால் இங்கு வெள்ளம் நிற்பதில்லை. தோட்ட நிலங்களும் ஒரு பகுதி குடியிருப்பு நிலங்களும் மக்களின் முயற்சியால் கொட்டு மண்ணால் உயர்த்தப்பட்டன.

கண்ணாஓடையிலிருந்து நாய்க்குட்டி வாய்க்கால் வரையுள்ள கடல்நீரேரிப் பரப்பு வருடத்தில் நான்கு மாதங்களுக்கு மேல் நீர் நிற்கும் பகுதியாகும். சரவணைக் கடல் நீரேரியும், வேலணை அருவிப் பள்ளத்தாக்கும் இக்கிராமத்தின் சிறப்பான தரைத்தோற்றமாக விளங்குகின்றன. வேலணை அருவி கல்லாண்ட முனங்கில் ஆரம்பமாகி பெருங்குளத்துக்குள் பாய்ந்து அங்கிருந்து நவக்கை, மூந்தாய் வழியாக கண்ணாஓடையை அடைந்து, சரவணைக்

கடல் நீரேரியை அடைகிறது. இவ்வருவி யின் கிளை அருவி ஒன்று செட்டிபுலத்தில் ஆரம்பித்து வெட்டுக்குளத்தில் இணைந்த பின் அங்கிருந்து உப்புக்குழியில் பாய்ந்து கிழக்குக் கட்டுவயல் பிரதேசத்தில் பரவிப் பாய்ந்து கண்ணாவோடையை அடைகிறது. இதேபோல் மேற்கிலிருந்து கிளை அருவி கள் மூன்று கிழக்காகப் பாய்கின்றன. தெற்கு அருவி நவக்கையையும், நடு அருவி மூந்தா யையும் ஆரவயல் புட்டியிலிருந்து ஆரம்ப மாகும் மூன்றாவது அருவி புதுக்குளம் வழியாக கண்ணாவோடையை அடைகிறது. மழைக் காலங்களில் குறிப்பாக, கார்த் திகை- மார்கழி மாதங்களில் இவ்வருவி களில் நீர் பாய்வதைக் காணலாம். ஊர்காவற் றுறை வீதியில் இடிவிழுந்த குண்டு என அழைக்கப்படும் ஆழமான சிறிய நீர் நிலை ஒன்று காணப்படுகிறது. இடிவிழுந்ததால் ஏற்பட்ட நீர்நிலை என மக்கள் கருதினா லும், இது சுண்ணாம்புக்கல் பிரதேசத்தில் காணப்படும் ஊதுழை என்னும் பௌதீக உறுப்பாகும்.

இப்பிரதேசத்தின் தரைத்தோற்றத்தில் இயற்கைக் காரணிகளால் ஏற்பட்ட மாற் றங்களை விட மனிதநடவடிக்கைகளால் ஏற்பட்ட மாற்றங்கள் அதிகம்.

அவையாவன:

1. பள்ளமான நெல்வயல் பகுதிகள் கொட்டு மண்ணால் உயரமான தோட்ட நிலங் களாக மாற்றம் செய்யப்பட்டுள்ளன. பின்னர் சில குடியிருப்பு நிலங்களாக மாறியுள்ளன.

2. அராலிப் பகுதிகளில் வீதியமைப்பு வீதித் திருத்தத்திற்காகவும் மற்றும் பலதேவைகளுக்காகவும் பெருமளவு ஊரி மண் எடுக்கப்பட்டதால் பல பகுதிகளில் துண்டு துண்டாக தாழ் நிலங்கள் உருவாகி, அவை பாழ் நிலங்களாகி விட்டன.

3. கட்டுமானப் பணிகளுக்குத் தேவை யான மணலுக்கு ஏற்பட்ட கிராக்கியால் சாட்டி, மற்றும் மண்கும்பானை அண் டிய வேலணைப் பகுதிகளில் பெரு மளவு மணல் அகழப்பட்டதால் இப்பிர தேசத்தில் இருந்து மணற் குன்றுகள் இல்லாது போனதுடன் நிலமும் தாழ் நிலமாகிவிட்டது.

## கடற்கரைகள்

இக்கிராமம் தெற்கிலும் வடக்கிலும் கிழக்கின் ஒரு பகுதியிலும் கடலால் சூழப் பட்டுள்ளது. தெற்கில் புங்குடுதீவுக் கடல் நீரேரி புங்குடுதீவையும் வேலணையையும் பிரிக்கின்றது. கெட்டில் பகுதியிலிருந்து கல் லாண்டு முனங்குக்கு அண்மித்தவரை கடற் கரையோரம் மணற்பாங்காக உள்ளது. கிழக்கில் கல்லாண்டு முனங்கிலிருந்து செட்டிபுலம் ஐயனார் கோவில் வரை கடற்கரை கற்பாறைகளைக் கொண்டுள்ளது. இப்பகுதியில் பவளக் கற்பாறைகள் வளர்ந்து வருவது கவனிக்கத்தக்கது. கடற்கரை யோரத்தில் நீரூற்று ஒன்று காணப்படுவது குறிப்பிடத்தக்கது. ஐயனார் கோவிலடியி லிருந்து அந்தியேட்டி மடம் வரையுள்ள பகுதி மணற்பாங்கான கரையோரமாக இருக்கின்றது. இக்கரையோரம் கடலரிப் புக்கு உட்பட்டு நிலப்பரப்பு இழக்கப்பட்டுள் ளது. சுடலை மூலையில் இருந்து ஏறக் குறைய 100 அடி தூரத்தில் கடலுக்குள் கிணறு இருப்பதாக இக்கிராமத்தின் மூத்த புவியியல் ஆசிரியரான திரு. ஈ.கே.நாகராஜா அவர்கள் குறிப்பிட்டுள்ளார். கடலரிப்பால்

நிலம் பறிபோக முன், சுடலை நிலத்தின் எல்லை கடலுக்குக் கீழ் இருக்கும் கிணற் றுக்கு அண்மித்ததாக இருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது. வடகடல் சேற்றுக் கடலாகவும், ஆழம் குறைந்ததாகவும் உள்ளது. இக்கரையோரமாக உவர் நீர்த்தடுப்பு அணை கட்டப்பட்டுள்ளது. இதனால் முன்னர் போல் வடகடல் உவர் நீர் நாய்க்குட்டி வாய்க்கால் வழியாகவோ வேறு தாழ்நிலங்கள் ஊடாகவோ உள்வரு வதில்லை. நாய்க்குட்டி வாய்க்கால் அணை அமைக்க முன்னரும் மதகுகள் உடைந் திருந்த காலப் பகுதியிலும் கடல் நீர் மயிலக் குளம் வரை உள்வருவதுண்டு. கோடை காலங்களில் கடல்நீர் வற்றி உப்பு விளைவ துண்டு. சோளகக் காற்றுக் காலத்தில் சர வணைக் கடல் நீரேரி புழுதிமயமாகக் காட் சியளிக்கும். மேற்குறிப்பிட்ட கடற்கரைப்பகுதி மூன்றின் பௌதீகப் பண்புகள் குறிப்பிடத் தக்க வேறுபாடு கொண்டன. இங்குள்ள மீனினங்களும் கடல்வாழ் உயிரினங்களும் வேறுபட்டுக் காணப்படுகின்றன.

## வானிலையும் காலநிலையும்.

இக்கிராமத்தின் வானிலையும் கால நிலையும் குடாநாட்டின் நிலைகளுடன் ஒத் துக் காணப்படினும் இங்கு வெப்பநிலை சற்று உயர்வாகவும் சோளக வாடைக் காற் றின் தாக்கம் அதிகமாகவும் மழைவீழ்ச்சி, பனித் தாக்கம் ஆகியன குறைவாகவும் உள்ளன. சராசரி வெப்பநிலை 31° C மார்கழி- தை மாதங்களில் இது 29° -30° C யில் இருக்கும். இக்கிராமத்தில் கடலின் தாக்கம் அதிகமாக இருப்பதால் பகல், இரவு வெப்ப வேறுபாடு மிகவும் குறை வாக இருக்கிறது. புரட்டாதி பிற்பகுதி யிலிருந்து மார்கழி வரை கூடிய மழை வீழ்ச்சி கிடைக்கின்றது. இக் காலத்தில் மழைவீழ்ச்சிக்கும் தாழமுக்கத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்புண்டு. தாழமுக்கம் அதிகமாக ஏற்படும் காலங் களில் கூடிய மழைவீழ்ச்சி கிடைக்கும். கார்த்திகை பிற்பகுதியில் இருந்து மழை வீழ்ச்சி படிப்படியாகக் குறைந்து கார்த் திகை விளக்கீட்டுடன் வானம் வெளித்து மழை குறைந்து விடும் எனக் கிராம மக்கள் கூறுவர். மார்கழி மாதத்தில் மழை கிடைக் கப் பெற்றாலும் அது தூறல் துமியுடன் பல நாட்களுக்கு நீடிக்கும். இதனைத் தெர்ப் போட்டம் என அழைப்பர். பெருங்கதைக் காலத்தில் இத்தகைய வானிலையும் கால நிலையும் நிலவும். புரட்டாதி-கார்த்திகை கால மழைவீழ்ச்சியின் பின் பங்குனி-சித் திரை காலத்தில் மேற்காவுகைச் செயற் பாடுகளால் பகல் நேரங்களில் ஒரு சில நாள்கள் மழை பெய்யும். சித்திரை மாதத் தில் சித்திரைக் குழப்பத்தால் மழை பெய் யும். ஆனித் தூக்க காலத்திலும், ஆடி அமா வாசையை அண்டியும் மழை பெய்வ துண்டு. இக்கிராமத்தின் வருடாந்தசராசரி மழைவீழ்ச்சி 35"-50" இடைப்பட்டதாகும். ஆடி மழையை உழவர்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்பர். இம்மழை பெய்ததும் முன்னர் கோடை உழவு செய்து, புழுதி விதைப்பதற்கு ஆயத்தமாகி விடுவர்.

இப்பிரதேசத்தில் சோளகம், வாடை என இரு காற்றுக் காலங்களும் இவை களுக்கு இடைப்பட்ட காற்றுக் குறைந்த காலங்களும் உண்டு. சோளகம் வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் நிலை கொண்டும் வாடைக்காற்று மார்கழி, தை, மாசி மாதங்களிலும் காணப்படும். சோள கக் காற்றின் தாக்கம் கிராமம் முழுவதும் காணப்படினும் வடக்குத் தாவரப் போர்

வையற்ற பகுதியில் அதன் வேகமும் புழுதி வீசுதலும் மிகக் கூடுதலாக இருக்கின்றது. வாடைக் காற்றின் தாக்கம் வடக்குப் பகுதியில் அதிகம். சித்திரை, வைகாசி, புரட்டாதி மாதங்களில் புழுக்கமும் வியர்வையும் மிகுதி.

## நீர்வளம்

இக்கிராமத்தின் நீர்வளத்தின் பெரும் பகுதி தரைக்கீழ் நீராகும். வருடத்தில் ஐப்பசி மாதத்திலிருந்து வைகாசி வரையும் கிணறு களில் நீர் இருக்கும். அதன்பின் கிணறு களில் அதிகளவு நீரைப் பெறுவது கஷ்டம். கிணற்று நீர் வீட்டுப் பாவனைக்குப் போது மானதாக இருப்பினும் விவசாய நடவடிக் கைகளுக்குப் போதுமானதல்ல. கிணறு களை ஆழப்படுத்தி நீரைப் பெறமுடியினும் ஆழப்படுத்தப்படுமாயின் நீர் உவர்த் தன்மை அடைந்துவிடும். ஆகவே இக்கிராமத் தின் தோட்டச்செய்கை, குறிப்பாக புகை யிலைச் செய்கை சித்திரை வருடப்பிறப் பிற்கு முன் முடிவுக்கு வந்துவிடும். நீர்ப் பற்றாக்குறையினால் சித்திரைக்குப் பின் பயிர்ச்செய்கை இடம்பெறுவதில்லை. ஆடி, ஆவணி, புரட்டாதி மாதங்களில் வயல் வெளிகளில் உள்ள கிணறுகளில் மாத்திரம் சிறிதளவு நீர் கிடைக்கும். மழைவீழ்ச்சி குறைந்த காலங்களில் குறிப்பாக புரட்டாதி மாதத்தில் கிணறுகளில் நீர் முற்றாக வற்றி விடுவதும் உண்டு. நீரின் தரத்தை யும், அளவையும் கொண்டு இக் கிராமத்தை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையா வன:

1. வருடம் முழுவதும் கூடுதலாக நன்னீர் உள்ள பிரிவு: இப்பிரிவினுள் சாட்டி, சண்டைக்காடு என்பன அடங்கும். இப் பகுதியிலிருந்து வேலணைக் குடி நீர்த்திட்டத்திற்குத் தேவையான நீரும் புங்குடுதீவுக்கு பௌசர் மூலம் விநியோகிக்கப்படும் நீரும் பெறப் படுவது குறிப்பிடத்தக்கது. இங்கு மக் கள் குடியிருப்பு இல்லாததாலும் பயிர்ச் செய்கை நடைபெறாதிருப் பதாலும் நீர் மாசுபடும் தன்மை குறை வாக உள்ளது. யாழ்ப்பாணக் குடா நாட்டில் நீரின் தரம் பரிசோதனை செய்யப்பட்டபோது இங்குள்ள நீரே மிகவும் தரம் கூடிய நீராகக் கணிக் கப்பட்டுள்ளது.

2. வருடத்தில் ஒரு பருவகாலத்தில் மாத் திரம் நன்னீர் பெறக்கூடிய பிரிவு: இது கிராமத்தின் மத்திய பகுதியில் குறிப் பாக தாழ்நில நெற்செய்கை வயல் பகுதிகளில் காணப்படுகிறது. இன்றைய தோட்ட நிலங்கள் முன்னர் நெல்வயல் களாக இருந்தன என்பது கவனிக்கத் தக்கது. இப்பிரிவில் ஐப்பசி மாதத்தி லிருந்து வைகாசி மாதம் வரை கிணற் றில் போதியளவு நீர் இருக்கும். இக் காலத்திலேயே பயிர்ச்செய்கை நடை பெறும். வைகாசிக்குப் பின் கிணறுக ளில் வீட்டுப் பாவனைக்குப் போதிய நீர் இருப்பினும் பயிர்ச்செய்கைக்கு அது போதாது.

3. உவர் நீர்ப்பகுதி: இது வேலணை தெற்கு, வடக்கு மற்றும் கூடுதலான குடிமனைப் பகுதிகளில் காணப்படும். மக்கள் இந்நீரைக் குடிப்பதற்கோ சமைப்பதற்கோ பாவிப்பதில்லை. ஏனைய வீட்டுப் பாவனைக்குப் பயன் படுத்தப்படும். மாரிகாலங்களில் இந் நீரின் உவர்த்தன்மை குறைவடையும் போது இதன் பாவனை அதிகரிக்கும்.

4. உப்பு நீர்ப்பகுதி: இந்நீர் வேலணை வடக்கு, அராலி வெளிப்பகுதிகளில் காணப்படுகிறது. இந்நீர் மிகவும் உப்பாக இருப்பதால் இந்நீர் உள்ள இடங்களில் குடியிருப்புகளோ பயிர்ச் செய்கையோ காணப்படுவதில்லை.

## இயற்கைத் தாவரங்களும் உயிரினங்களும்

இக்கிராமத்தின் இயற்கைத் தாவரம் பெருமளவு அழிந்ததனால் மக்களின் முயற்சியால் உருவானவையே இன்று கூடுதலாகக் காணப்படுகின்றன. இங்கு பனை, ஈஞ்சு, காரை, இக்கிரி, ஆமணக்கு, பாலெருக்கு, நாயுருவி, பிரண்டை, கற்றாழை, நாகதாளி, இராவணன் மீசை ஆகியன முக்கியமான இயற்கைத் தாவரங்களாகும். கரையோரப் பிரதேசங்களில் கண்டல் காடுகள் உள்ளன. உட்பகுதிகளில் வறள்நில வளரித் தாவரங்கள் அதிகம்.

இன்று மனிதமுயற்சியால் வேம்பு, தென்னை, மா, யூக்கலிப்ரஸ் போன்ற மரங்கள் நாட்டப்பட்டு தாவரப் போர்வையில் கூடியளவு மாற்றங்கள் ஏற்பட்டு வருவதைக் காணலாம். வேலிக்கு கிளுவை, முட்கிளுவை, பூவரசு, வாதநிவாரணி போன்றன கூடுதலாக நடப்படுகின்றன. புதிய மர இனங்கள் அறிமுகமாகிக் கொண்டிருக்கின்றன.

இங்குள்ள உயிரினங்களில் வளர்ப்புக் கால்நடைகளை விட, காட்டு விலங்குகள் மிகக் குறைவு. காலத்திற்குக் காலம் கடல் வழியாக நரி வருவதுண்டு. முயல், உடும்பு ஆகியனவும் உள. மக்கள் இவற்றை வேட்டையாடுவதுண்டு. 1991 இல் ஏற்பட்ட இடப்பெயர்வின் பின் இவற்றின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. மக்களின் வேட்டையாடல் நாட்டம் தற்போது குறைந்துள்ளதால் இவற்றின் எண்ணிக்கை மேலும் அதிகரித்துள்ளது.

வன்னியிலிருந்து இங்கு விவசாயத்திற்குக் கொண்டுவரப்பட்ட எரு மூலம் இங்கு பல புதிய எறும்பினங்கள் வந்து சேர்ந்துள்ளன. முன்னர் இங்கில்லாத சிவத்த எறும்பு, சிறுநுள்ளான், நெருப்பெறும்பு, இன்று பெருமளவு பெருகியுள்ளன. முன்னர் இங்கு கட்டெறும்பும் கறுப்பெறும்புமே காணப்பட்டன.

புறா, மைனா, வால்குருவி, செம்பருந்து, செண்பகம் ஆகியவை முக்கிய பறவைகளாகும். மாரி காலத்தில் வட கோளார்த்தத்திலிருந்து இடம்பெயர்ந்து பல பறவைகள் இங்கு வருவதுண்டு. கோட்டான், நாரை போன்ற பல சைபீரிய பறவையினங்கள் வெள்ளம் நிற்கும் பகுதிகளில் மூன்று மாதம் வரை தங்கியிருக்கும். கடல்காகம், கொக்கு நீர்நிலைகளில் வருடம் முழுவதும் காணப்படும். வெண்கொக்கு மழைக் காலங்களில் கிராமத்தின் பல பகுதிகளிலும் பரவி நிற்கும். பாம்பினத்தில் சாரை, சுருட்டை முக்கியமானவை.

## மக்கள் தொகை.

1971ஆம் ஆண்டு கிராமத்தின் மக்கள் தொகை 7952 பேராகவும் 1981 இல் 9299 பேராகவும் இருந்தது. இந்த இரண்டு குடிசனக் கணிப்பீட்டுக் கால இடை வெளியில் வேலணைக் கிராமத்தின் மக்கள் தொகை 1345 பேரால் 1.7 விகிதத்தால் அதிகரித்தது. இதே அதிகரிப்பு விகிதம் 1981–1991க்கு இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்டிருந்தால் 1991 இல் வேலணைக் கிரா

மத்தின் மக்கள் தொகை 11,000 வரை இருந் திருக்கும். 1991 இல் இடப் பெயர்வு நிகழ்ந்த போது இக்கிராமம் 11,000 மக்களை– ஏறக் குறைய 2200 குடும்பங்களையும் கொண் டிருந்தது. அன்று சராசரி ஒரு குடும்ப அங் கத்தவர் எண்ணிக்கை 5 பேருக்கு மேல் இருந்தது. ஆனால் இன்று சராசரி குடும்ப அங்கத்தவர் எண்ணிக்கை 4 பேருக்குக் குறைவாகவுள்ளது. இன்றைய மக்கள் தொகை 5000க்கு மேற்பட்டுள்ளது. அதாவது 1991 இல் இருந்த மக்கள் தொகையின் அரை வாசிக்கும் சற்று மேற்பட்டுள்ளது எனினும் 2002க்குப் பின்னர் மீள்குடியேற்றம் துரிதமாக இடம்பெற்று வருவதால் குடித் தொகை துரிதமாக அதிகரித்து வருகின்றது.

வரலாற்று ரீதியாக வேலணைக் கிரா மத்தின் குடிசன வளர்ச்சியை நோக்கின் இக் கிராமம் யாழ்ப்பாண இராச்சிய காலத்திலேயே முக்கியத்துவம் பெற்று விளங்கியது. போர்த்துக்கீசர் காலத்தில் இக்கிராமத்துக்கு அருகாமையில் இருக்கும் ஊர்காவற்றுறை, கரம்பன், நாரந்தனை போன்ற கிராமங்களில் வாழ்ந்த மக்கள் பலர் கத்தோலிக்க மதத்தை தழுவ, வேலணை மக்கள் சைவ சமயத்தவராக விளங்கினர். ஒல்லாந்தர் காலத்தில் இக்கிராமத்தில் பெரும் மாற்றங்கள் நிகழவில்லை. பிரித்தானியர் ஆட்சி காலத்தில் குறிப்பாக 1860–1875 க்கு இடைப்பட்ட காலத்தில் யாழ்ப்பாணக் குடாநாடு முழுவதும் வாந்தி பேதி நோயால் பெரிதும் பாதிப்புற்றது. பெரும் எண்ணிக்கையானோர் இறந்தனர். இந்தநோய் வேலணையையும் தாக்கி இருந்ததற்கு சான்றுகள் உண்டு. பரம்பரை பரம்பரையாக இம் மரணம் பற்றிச் செய்திகள் சொல்லப்பட்டு வருகின்றன. மேலும் பிரித்தானிய அரசாங்கம் அமைத்த காலரா கமிஷன் அறிக்கையில் யாழ்ப்பாணக் குடாநாட்டில் இக்காலப் பகுதியில் வாந்தி பேதி நோயால் இறந்தவர்கள் எண்ணிக்கை விபரங்கள் கிடைக்கப்பெறுகின்றன. 1871ஆம் ஆண்டிலிருந்து குடிசனக் கணிப்பு விபரங்கள் இருந்தபொழுதும், கிராமம் விதானை பிரிவு மட்டத்தில் தரவுகள் எல்லாக் கணிப்புகளிலும் கிடைப்பதில்லை. 20ஆம் நூற்றாண்டிலிருந்து மக்கள் தொகை சிறிது சிறிதாக அதிகரித்தபொழுதும், 1911–1921க்கு இடைப்பட்ட காலத்தில் டெங்குக் காய்ச்சல் காரணமாக அதிக மரணங்கள் ஏற்பட்டதால் மக்கள் அதிகரிப்பு விகிதம் குறைவாக இருந்தது.

இக் கிராமத்து மக்கள் தொகை அதி கரிப்பு 1946–1971 இடைப்பட்ட காலத்தில் மிகவும் உயர்வாக இருந்தது. வளர்ச்சி விகி தம் சராசரி ஆண்டுக்கு 2– 2.5 விகிதமாக இருந்தது. இக்காலப்பகுதியில் கிராமத்தின் குடிசனத் தொகை இரட்டிப்பாகியது. மரண விகிதவீழ்ச்சியும் பிறப்பு விகித அதிகரிப் புமே மக்கள் தொகை துரிதமாக அதிகரிக்க காரணமாக இருந்தது. 1942 ஆம் ஆண்டு கூப்பனுக்கு அரிசி, மா மானிய விலையில் சகலருக்கும் விநியோகிக்கப்பட்டதால் மக்க ளின் ஊட்டச்சத்து நிலையில் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டது. மேலும் வைத்திய வசதியில் ஏற்பட்ட முன்னேற்றம் காரண மாக பிரசவத்தாய், சிசு இறப்பு, குழந்தை இறப்பு ஆகியன கிராமத்தில் வெகுவாகக் குறைந்தன. பொது சுகாதாரத் துறையிலும் முன்னேற்றங்கள் ஏற்படலாயின. இத்தகைய முன்னேற்றங்கள் இறப்பு விகிதம் குறை வடைய பங்களித்தன.

1961ஆம் ஆண்டு பண்ணைப் பாலம் அமைக்கப்பட்டதால் யாழ்ப்பாணத்திற்கும் வேலணைத் தீவுக்கும் நேரடி வீதிப் போக்குவரத்துக் கிட்டியது. இதனால்

வேலணையில் சமூகப் பொருளாதார செயற்பாட்டில் பெரிய மாற்றங்கள் ஏற் படலாயின. வேலணையில் சமூக பொரு ளாதார விடயங்களில் யாழ்ப்பாண நகரத் தின் முக்கியத்துவம் அதிகரித்து ஊர்காவற் றுறையின் இடம் குறைவடையலாயிற்று. இப்பாதை அமைப்புக்கு முன்னர் கிராமியப் பண்புகளைக் கொண்டிருந்த வேலணை படிப்படியாக நகரப் பண்புகளை பெற லாயிற்று. கிராமத்தில் ஏற்பட்ட சமூக பொருளாதார மாற்றங்களினால் யாழ்ப் பாண நகரத்துக்கு இடம் பெயரும் மக்க ளின் எண்ணிக்கை அதிகரித்தது. இவ்விடப் பெயர்வின் காரணமாக படிப்படியாக வேலணையிலிருந்த முயற்சியாளர்கள் உயர் நுகர்வு சக்தி கொண்டவர்களை இழக்க நேரிட்டது.

1980களில் இலங்கைத் தமிழ் மக்கள் மத்தியில் குறிப்பாக யாழ்ப்பாண மக்கள் மத்தியில் ஏற்பட்ட சர்வதேச இடப் பெயர்வுக்கு வேலணை விதிவிலக்கன்று. இக்கிராமத்து இளைஞர்களில் ஒருகுறிப் பிட்ட தொகையினர் சர்வதேச இடப் பெயர்வுக்குட்பட்டு ஐரோப்பிய நாடுகளுக் கும் சென்றனர். 1980 களில் தொடங்கிய யுத்த நடவடிக்கைகளால் பண்ணைப் பாலம் போக்குவரத்துக்கு மூடப்பட்டதால் மக்கள் அராலிக் கடல் வழியாகவே யாழ்ப் பாணம் செல்ல வேண்டிய நிலையேற் பட்டது. போக்குவரத்து சிரமம், செலவு காரணமாக வேலணை மக்கள் யாழ்ப்பாண நகரப் பகுதிகளுக்கு இடம்பெயரத் தொடங் கினர். மேலும் இக்காலத்தில் சர்வதேச இடம்பெயர்வும் மேலும் வலுப்பெற்றது.

1991ஆம் ஆண்டு ஏப்பிரல் 21ஆம் நாள் வேலணை மக்களுக்கும் தீவுப் பகுதி மக்க ளுக்கும் பெரும் துன்பகரமான நாளாக அமைந்தது. சித்திரை பௌர்ணமி விர தம் அனுட்டித்த மக்கள் கிராமத்தைவிட்டு முழுமையாக வெளியேற வேண்டிய நிலை உருவாகியது. புங்குடுதீவு, வேலணைத்தீவு மக்கள் முழுமையாக வெளியேறி யாழ்ப் பாண நகருக்குச் சென்றனர். ஆங்காங்கே ஒருசில குடும்பங்கள் மாத்திரம் இடப் பெயர்வுக்குட்படவில்லை. அவர்கள் யாவ ரும் ஒரு சிலவிடங்களில் ஒன்றாகக் குடிய மர்த்தப்பட்டனர்.

இவ்விடப் பெயர்வினால் வேலணை யின் குடிசனத் தொகையின் பண்புகள் முற்றாகச் சீர் குலைந்தன. கிராமத்து சமூக-பொருளதாரக் கட்டமைப்பு முற்றாக அழிவுற்றது. மக்கள் தங்கள் அசையும் சொத்துக்களின் பெரும் பகுதியை இழந்த னர். காலக்கிரமத்தில் இவர்களின் வீடுகள், வளவுகள் பெரும் அழிவுக்குட்பட்டன. யாழ்ப்பாண நகருக்கு இடம்பெயர்ந்த மக்கள் நகரிலும் நகரை அண்டிய கிரா மங்களிலும் பல்வேறு இடர்பாடுகளுடன் குடியேறலாயினர். கிராம மக்கள் பல்வேறு இடங்களுக்குச் சிதறியதால் அவர்கள் மத்தி யில் முன்னர் இருந்த சமூகப் பிணைப்பு குறைவடைந்து குடியேறிய புதிய இடங்க ளில் புதிய உறவுகளும் வளரலாயின. வேல ணைக் கிராமத்து பாடசாலைகள், மற்றும் அரச, கூட்டுறவு, தனியார் நிறுவனங்களின் செயற்பாடுகள் இடம்பெயர்ந்த நிலையில் குறைவடைந்தன. வேலணைப் பிள்ளைகள் யாழ்ப்பாண நகரப் பாடசாலைகளில் கல்வி பயிலக்கூடிய வாய்ப்புக்களும் கிட்டின. பெரிய துன்பங்களிடையேயும் சில நன்மை களும் கிட்டின. இடம்பெயர்ந்தவர்களில் ஒரு பகுதியினர் புதிய சூழ்நிலைக்குத் துணி வாக முகம் கொடுத்து கிராமத்திலிருந்த நிலையிலும் பார்க்க நன்னிலையை அடைந்

தனர். இன்னொரு பிரிவினர் புதிய சூழ் நிலைகளுக்கு முகம் கொடுக்க முடியாது மிகவும் துன்பகரமான வாழ்க்கைக்குட் பட்டனர்.

1995 ஆம் ஆண்டு ஐப்பசியில் ஏற் பட்ட பாரிய இடப்பெயர்வினால், ஏற்கனவே 1991இல் கிராமத்தை விட்டு இடம்பெயர்ந்து யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்த மக்கள் யாழ்ப்பாணத்தைவிட்டு வெளியேற வேண்டிய நிலையேற்பட்டது. 1995ஆம் ஆண்டு இடப்பெயர்வினால் கிராமத்து மக் கள் மேலும் பல்வேறு திசைகளில் இடம் பெயர்ந்து சென்றனர். தென்மராட்சி, பளை, வன்னி, வவுனியா, கொழும்பு, வெளி நாடு என்று இடம்பெயர்ந்தனர். சர்வதேச இடப்பெயர்வு துரிதப்படுத்தப்பட்டது. வவு னியா, வன்னிப் பகுதிகளுக்கு இடம் பெயர்ந் தோர் அவ்விடங்களிலும் வாழ்வதற்கான அடித்தளங்களை இடத் தொடங்கினர். தொடர்ச்சியான இடப் பெயர்வினால் கிரா மத்து மக்கள் பல இடங்களுக்குப் பரவிய துடன் குடியேறிய இடங்களில் இருமைத் தன்மையான சமூக உறவுகளை வளர்த்தனர்.

1. தங்களுக்கிடையேயான உறவுகள்.
2. தமது சூழலில் வாழ்வோருடனான உறவுகள்.

வேலணை மக்கள் வேலணையிலும் யாழ்ப்பாணத்திலும் கிளிநொச்சியிலும் வவுனியாவிலும் கொழும்பிலும் கனடா டொரான்டோவிலும் இங்கிலாந்தில் லண்ட னிலும் சமூகக் குழுக்களாக இருப்பதைக் காணலாம். இவர்கள் குடும்ப இன்ப துன்ப நிகழ்வுகளில் ஒன்றுகூடும்போது கிராமத்து வாழ்வு வளத்தைப் பற்றி உணர்வுபூர்வமாக உரையாடுவதுண்டு. பழைய நினைவுகளை பெருமூச்சுடன் மீட்டுப் பார்ப்பதுண்டு. 1960 களுக்கு முன்னர் வேலணையைச் சேர்ந்த ஒரு சில குடும்பங்களே வேலணைக்கு வெளியில் இருந்தனர். எனினும் இன்று சர்வ தேச, தேசிய, பிரதேச ரீதியாக பரந்து வாழ் வதைக் காணலாம். இம்மாற்றத்தின் பெரும் பகுதி 1980களுக்கு பின்னர் ஏற்பட்டதாகும்.

1996 ஆம் ஆண்டு ஏப்பிரலில் இலங்கை இராணுவம் தென்மராட்சியைக் கைப்பற்றி அங்கு அகதிகளாக இருந்த வலிகாமம், யாழ்ப்பாணம், தீவுப் பகுதி மக்களை மீளக் குடியமரச் செய்தது. இந்த மீள் குடியேற்ற நடவடிக்கைகளுடன் தீவுப் பகுதியில், வேலணையில் மீள்குடியேற்றச் செயற்பாடு தொடங்கியது. எனினும் வலி காமம், யாழ்ப்பாணம் போன்ற இடங்களில் ஏற்பட்ட துரிதமீள்குடியேற்றச் செயற்பாடு போன்று வேலணையில் ஏற்படவில்லை. தீவுப் பகுதியில் மக்கள் 5 வருடங்களாக இல்லாதிருந்ததால் அங்கு பெருமளவு அழிவுகள் ஏற்பட்டிருந்ததும், மற்றைய இடங்களை விட இராணுவக் கட்டுப்பாடு கள், கெடுபிடிகள் அதிகமாக இருந்ததும் மீள்குடியேற்றம் துரிதமாக இடம்பெற வில்லை. மீளக் குடியேறப் பலர் உடன் முன்வரவில்லை. தீவுப் பகுதியில் கல்வி நிறுவனங்கள், சுகாதார மற்றும் பல்வேறு சேவை நிறுவனங்கள் பெருமளவு செயலி ழந்தும், ஆற்றலற்றும் காணப்பட்டதால் அங்கு மக்கள் குடியேறப் பின்னின்றனர். இன்றும் இந்நிலை ஓரளவு காணப்படுகின்றது. தீவுப் பகுதியில் குறிப்பாக வேலணையில் நடுத்தர, மேல் வகுப்பு மக்கள் பெரும் எண்ணிக்கையில் சர்வதேச இடப் பெயர் வுக்கு உட்பட்டதாலும் மீளக் குடியேறக் கூடியவர்கள் குறைவாக இருந்தனர். குடா நாட்டின் ஏனைய கிராமங்களிலிருந்து

இங்கு குடியேற முற்படவில்லை. அண்மைக் காலத்தில் அல்லைப்பிட்டிக் கிராமத்தில் வெளியார்கள் குடியேறும் போக்குத் தென் படுகின்றது. வேலணையில் மீள் குடியேறி யவர்களில் பெரும்பாலோர் வருமானம் குறைந்த, நலிந்த பிரிவினராக இருந்தமை குறிப்பிடத்தக்கது. மீனவ சமூகத்தினரே முதலில் பெரும் எண்ணிக்கையில் மீளக் குடியமர்ந்தனர். துறையூர், செட்டிடில், அம்பிகை நகர், செட்டிபுலம் ஆகிய இடங் களில் மீள் குடியேற்றம் முதலில் அதிக மாக இடம் பெற்றது. 1991இல் துறையூரில் பல குடும்பங்கள் பெயராமல் இருந்தமை குறிப்பிடத்தக்கது. இக்கிராமத்தில் மக்கள் தொடர்ச்சியாக வசித்ததால் அழிவுகள் மிகக் குறைவாக இருப்பதுடன் சமூக அமைப்புகள் பெரிதும் பாதிக்கப்படா துள்ளன.

2002ஆம் ஆண்டு பெப்ரவரியில் கண்டி வீதி (ஏ9 பாதை) திறக்கப்பட்டதும் வன்னி யில் இடம்பெயர்ந்து வாழ்ந்து வந்த வேலணை மக்களில் ஒரு பகுதியினர் வேலணை திரும்பி மீளக் குடியேறி யுள்ளனர். எனினும் ஒரு பகுதியினர் தொடர்ந்தும் வன்னியில் வாழ்ந்து வருகின்றனர்.

கிராமத்தில் இன்றைய மக்கள் பரம் பலை நோக்கின் துறையூர், அம்பிகைநகர் செட்டிபுலம் அம்மன் கோவிலடி, ஆகிய பகுதிகளில் மக்கள் செறிவாக வாழ்வதைக் காணலாம். பள்ளம்புலம், சோளாவத்தை, நாவலடிப்புலம், இலந்தைக் காடு, தாழி புலம் ஆகிய குடியிருப்புக்கள் இன்று மக்கள் தொகை குறைவான பகுதிகளாகும். இக்குடியிருப்புக்களில் மீளக் குடியேற்றம் முழுமையாக இடம்பெறவில்லை. வேலணைக் கிராமத்தில் சாட்டியில் வாழும் சில குடும் பங்களைத் தவிர எல்லோரும் இந்துக்க ளாக இருக்கின்றனர். இலங்கையில் மீனவ சமூகத்தினர் மத்தியில் கத்தோலிக்க மதம் முக்கியத்துவம் பெற்றிருந்தபோதும், வேலணை யில் உள்ள மூன்று பெரிய மீனவ குடியிருப் புகளிலும் இந்துக்களே முழுமையாக இருப் பது குறிப்பிடத்தக்கதாகும்.

இன்று நடைபெற்றுக் கொண்டு இருக்கும் மீள்குடியேற்றம், புனர்வாழ்வு. புனருத்தாரணம், அபிவிருத்தி நடவடிக் கைகளால் மக்கள் தொகை சிறிது அதிகரித் துச் சென்றாலும் பிறப்பு வீதக் குறைவா லும், இடப்பெயர்வும் தொடர்ந்தும் சிறியள வில் இடம் பெறுவதாலும் வேலணை 1990 களிலிருந்த மக்கள் தொகையை மீளப் பெற இன்னும் பல வருடங்கள் எடுக்கலாம்.

## பொருளாதார வரலாறு

இக்கிராமத்தின் பொருளாதார வர லாற்றை நோக்கும் பொழுது விவசாயம், மீன்பிடி, பனைசார் தொழில்களும், மற் றும் கிராம சேவை/கைவினைத் தொழில் களும் பல தசாப்தங்களாக முக்கியத்துவம் பெற்றிருந்தன. இங்கு விவசாயமே முக்கியத் துவம் பெற்றிருந்தது. இக்கிராமத்தின் குறிப் பாக விவசாய, பனைசார் தொழில்களை விளங்கிக் கொள்ள இக்கிராமத்தின் நில வுடைமை, நிலப் பயன்பாட்டை விளங்கிக் கொள்ள வேண்டும்.

வேலணை கிராமத்தின் நிலவுடைப் பண்பு ஐந்து வகையான நிலங்களைக் கொண்டுள்ளது அவையாவன:

1. குடியிருப்பு - வீடுவளவுகள்
2. தோட்டநிலங்கள்

3. நெற்செய்கை நிலங்கள்

4. பனை வளவுகள்

5. தரவை, கால்நடை, நீரேந்தும் குளங்கள், குட்டைகள்

குடியிருப்புக் காணிகள் வளவுகளாக அடைக்கப்பட்டு இருப்பது வழக்கம். கிளுவை, முட்கிளுவை, பூவரசு, சீமைக்கிளுவை, வாதநிவாரணி மரங்களை எல்லையாகக் கொண்டு வேலிகள் பனையோலையால் அடைக்கப்பட்டும் அல்லது பனை மட்டை யால் வரியப்பட்டும் இருக்கும். சில இடங் களில் கிடுகு வேலி இருக்கும். ஒவ்வொரு வளவிலும் கிணறு இருப்பது வழக்கம். கிணறுகள் சில இடங்களில் நன்னீரையும் சில இடங்களில் இருநீரையும் கொண் டிருக்கும். இவ்வளவுகளின் பரப்பளவு 5-10 வரை காணப்படும். மக்கள் தொகை பெருக்கத்தால் வளவுகளில் பரப்பளவு 1980களில் குறைந்து சென்றது. வேலணை கிழக்கு, வடக்குப் பகுதிகளில் வீடு வளவு களில் பரப்பளவு மேற்கு, தெற்குப் பகுதி வீடுவளவுகளிலும் பார்க்க கூடுதலாக இருக்கின்றன. மீனவ சமூகங்கள் மற்றும் பொருளாதார ரீதியில் பின் நிலையில் காணப்படும் சமூகங்கள் வாழும் பகுதிக ளில் வீடுவளவுகளின் பருமன் குறைவாக இருக்கின்றன. இக்குடியிருப்புகளில் வீடுவளவு பரப்பளவு 1-2 பரப்பாகக் காணப்படுகின்றது. குடியிருப்பு வளவுக ளில் தென்னை பனை, வேம்பு, முருங்கை போன்ற மரங்கள் உள்ளன. நன்னீர்க் கிண றுகள் உள்ள இடங்களில் கிணற்றடியை சூழ, வாழை மற்றும் எலுமிச்சை, மாதுளை நாட்டப்பட்டுள்ளன. விவசாயிகளின் வளவு களில் வீட்டுடன் புகையிலை மால், போறணை, மாட்டுமால் போன்றனவும் அமைக்கப்பட்டிருக்கும்.

## தோட்ட நிலங்கள்

இந்நிலங்களின் பெரும் பகுதி முன்னர் நெற்செய்கை நிலங்களாக இருந்து கொட்டு மண் மூலம் தோட்ட நிலங்களாக உயர்த் தப்பட்டவை. வேலணை கிழக்குப் பகுதியில் இயற்கையான தோட்ட நிலங்கள் இருந்தா லும், இவைகள் வளம் குறைந்தமண்ணைக் கொண்டிருப்பதால் புகையிலைப் பயிர் செய்கைக்குக் கூடுதலாகப் பயன்படுத்தப்படு வதில்லை. இங்கு வெங்காயம் மற்றும் உழுந்து போன்றவை பயிரிடப்படுகின்றன.

கொட்டு மண் தோட்ட நிலங்களில் புகையிலை, மிளகாய் பயிர்ச்செய்கைகள் இடம்பெறும், தோட்டத்தின் பரப்பளவை எத்தனை புகையிலைக் கன்றுத் தரை எனக் குறிப்பிடுவது வழக்கம். உ.ம்: 3000, 5000, 10,000 கன்றுத் தரையெனத் தோட் டக்காரர் குறிப்பிடுவர். புதிய தோட்ட நிலங் களிலே அதிகளவு பயிர்ச் செய்கை இடம் பெறுகின்றது. பழைய இயற்கையான உயர் நிலங்களில் முன்னர் தோட்டச் செய்கை இடம்பெற்ற போதும் பின்னர் அவை குடி யிருப்பு நிலங்களாக மாறிவிட்டன. அல்லது விளைச்சல் குறைவாக இருந்ததால் உழுந்து புட்டிகளாக மாறிவிட்டன.

## நெற்செய்கை நிலங்கள்

இது 1950ஆம் ஆண்டுகளுக்கு முன்னர் கிராமத்தின் முக்கிய விவசாய நிலப் பரப் பாக இருந்தது. கிராமத்தின் உணவுத் தேவையின் பெரும்பகுதி இவ்வயல் நிலங் களிலிருந்தே பெறப்பட்டது. நெற்செய்கை நிலப்பரப்பு 1960 களிலிருந்து தொடர்ச்சி யாகக் குறைந்து வருகின்றது. இப்பயிர்ச் செய்கை லாபகரமில்லாமல் போனதே இம்மாற்றத்துக்கு முக்கிய காரணமாகும்.

நிலப் பயன்பாட்டு மாற்றம் மூன்று முறைகளில் இடம்பெற்று வருவதைக் காணலாம்.

1. நெல்வயல்களை கொட்டுமண் மூலம் உயர்த்தப்பட்டு குறிப்பாக புகையிலை தோட்ட நிலங்களாக மாற்றப்பட்டு வருகின்றமை

2. நெல்வயல்கள் குடியிருப்பு பகுதிகளாக மாற்றப்பட்டு வருகின்றமை. இச்செயற்பாட்டில் குடியிருப்பு பகுதிகளுக்கு அண்மித்த நெல்வயல்களும் சமூகப் பிரச்சினைகளை எதிர்கொள்வதால் பயிர்ச் செய்கை முன்னெடுப்பதில் பிரச்சினைகளை எதிர்கொள்கின்றது.

3. தேசிய ரீதியில் நெற்செய்கை விருத்தி பெற்றதாலும் உற்பத்திசெலவு அதிகரித்ததாலும் கிராமத்தின் பல நெற்செய்கை பரப்புகள் பொருளாதார ரீதியில் சிக்கனமற்றதாக மாறி கைவிட வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. கிராமத்தின் நெற்செய்கை பரப்பு படிப்படியாக குறைந்து வருவது முக்கிய போக்காக இருப்பதுடன் இப்போக்குத் தொடர்ந்து செல்லுமென கருத இடமுண்டு.

## பனங்காணிகள்

இக்கிராமத்து மக்களின் நிலவுடைமையில் பனங்காணிகள் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. பனைசார் பொருட்கள் மக்களின் வாழ்வுக்குப் பல வழிகளில் ஆதாரமாகவுள்ளன. பனை ஓலை ஒரு சுற்றோட்ட முறையில் பயன்பாட்டிலிருந்தது. ஒன்றை விட்ட வருடம் பனையோலை வெட்டப்பட்டு, புது ஓலையால் வீடு வேயப்படும். மக்கள் பழைய ஓலையைத் தோட்டத்துக்கு அல்லது வயலுக்குப் பசளையாக இடுவர். இதுபோல புது ஓலையால் வேலியடைத்து பழைய ஓலையை கமத்துக்கு இடுவர் கருக்கு மட்டையை விறகுக்கு பயன்படுத்துவர். மேலும் பனங்கழியிலிருந்து பனாட்டு, பனங் கிழங்கிலிருந்து ஒடியல் புழுக்கொடியல் போன்றன பெறப்படும் கிராம மக்களின் உணவுத் தேவையின் ஒரு பகுதியைப் பனம் காணிகள் கொடுத்து வந்தன. 1950 களுக்கு முன்னர் கிராம மக்கள் வாழ்வாதாரத்தில் பனை முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. இன்றும் மரம் விறகு, ஓலை, கள்ளு எனப் பல தேவைகளுக்குப் பனை ஆதாரமாக விளங்குகின்றது. இதனால் பனங்காணி முக்கிய நிலவுடை அலகாகக் கணிக்கப்படுகின்றது. 1990களின் பின்னர் பெருமளவு பனைவளம் யுத்தத்தால் அழிவுற்றது பெரும் துன்பமாகவுள்ளது.

## தரவைநிலம், கால்நடை நீரேந்தும் குளம், குட்டைகள்

கிராமத்தின் நிலப்பயன்பாட்டில் குறிப்பிடத்தக்க நிலப்பகுதிகள் தரவைநிலங்களாகவும் பற்றைக் காடுகளாகவும் சதுப்புப் பிரதேசங்களாகவும் இருக்கின்றன. குறிப்பாக கண்ணாவோடைக்கு வடக்குப் பிரதேசம் முழுவதும் தரவை நிலமாக இருப்பதைக் காணலாம். தெற்கில் குறிப்பாக கல்லாண்ட முனங்கு, தெற்கு கடற்கரையோரப் பகுதிகள் பற்றைக் காடுகளாக, தரவை நிலமாகவும் இருக்கின்றன. இதே போல் உப்புக்குளி, கிழக்குக் கட்டுவயல் பகுதி, மணியங்காடு பகுதிகளும் தரவை நிலமாகவோ, பற்றைக் காடுகளாகவோ இருக்கின்றன. இத்தகைய நிலப்பயன்பாடு கிராமத்தில் விலங்கு வேளாண்மைக்கு சாதகமாக அமைந்தது. கிராமத்தின் விவ

சாயத்திற்கும் உணவுத் தேவைக்கும் உதவுவதாக அமைந்திருந்தது. கால்நடைகள் தொட்டில் தீனில் வளர்க்கப்படாது இயற்கையுடன் இணைந்து வளர்க்கப்பட்டன. இவை பகல் நேரங்களில் கிராமத்துத் தரவைகள், பற்றைக் காடுகளில் மேய்ச்சலுக்கு விடப்பட்டு மாலையில் வீடு கொண்டு வரப்படுவது வழக்கம். கால் நடைகள் தாங்களாகவே மாலையில் வீடு வந்து சேரும் பழக்கம் கொண்டவை. அறுவடை முடிந்த காலத்தில் நெல் வயல் பிரதேசங்களிலும் கால்நடைகள் மேச்சலுக்குச் செல்லும். ஆவணி, புரட்டாதி மாதங்களில் தரவைகளில் கால்நடைகள் மேயக்கூடிய புற்போர்வை இல்லாது போக, கால்நடைகள் பனங் காணிகளில் பனம்பழம் தின்ன முற்படும். இதனால் கால்நடைகள் பனம் பழத்துடன் மண்ணையும் உட்கொண்டு நோய்வாய்ப்படுவதுமுண்டு.

1950 களுக்கு முன்னர் இக் கிராமத்தில் கமக்காரரிடம் பெரும் எண்ணிக்கையான செம்மறியாடுகள் இருந்தன. இச்செம்மறியாடுகள் ஆடு, மாடுகளிலும் பார்க்கக் கடினமான, வசதி குறைவான வரட்சிப் பகுதிகளிலும் வாழக்கூடியவை. செம்மறியாடுகள் மூலம் வயல் தோட்ட நிலங்களுக்கு பட்டி கட்டுவார்கள். புகையிலைக் கன்றுகள் மிகச் சிறிதாக இருக்கும் பொழுது ஒவ்வொரு புகையிலைக் கன்றையும் சட்டியால் மூடி சரியான அரண் அமைத்து செம்மறியாட்டுப் பட்டி கட்டி தோட்டத்தை வளம்படுத்துவர். விவசாயிகளால் கால் நடைகள் நீர் அருந்துவதற்கு ஏதுவாக குளம் குட்டைகள் அமைக்கப்பட்டிருந்தன. தரவை நிலம், குளம், குட்டைகளில் கூடுதலானளவு அரசுக்கு சொந்தமானவை. இதனால் கிராமத்து மக்கள் எல்லோருக்கும் பொதுவானதாக இருந்தன. அண்மைக் காலத்தில் தரவை நிலப்பரப்பு குறைந்து வருவதும் மேய்ச்சல் பரப்பு மேலும் குறைந்து வருவதும் கால் நடை வளர்ப்புக்குப் பெரும் தடையாக இருக்கின்றது. கால்நடை வளர்ப்பின் மூலம் இக்கிராமத்து மக்கள் குறிப்பிடத்தக்க பொருளாதார நன்மைகளை பெற்றதுடன் இவர்களின் விவசாய செயற்பாட்டுடன் இணைந்ததாக இருந்தது.

இக்கிராமத்தின் வாழ்வும் வளமும் விவசாயத்திலும் தங்கியிருந்தபொழுது, நெற்செய்கை 1950களுக்கு முன்னர் முக்கிய இடம் பெற்றிருந்தது. நெற்செய்கை தாழ் நிலங்களில் ஒரு போகச் செய்கையாக இடம் பெறலாயிற்று. நெற்செய்கைக்கான வேலைகளுக்குமாகவும், மற்றும் வீட்டுத் தேவைகளுக்காகவும், விவசாயிகளின் வீடுகளில் மாட்டு வண்டில்கள் வைத்திருந்தனர். கால் நடைகளிலிருந்து தமக்குத் தேவையான பாலையும் விவசாயத்துக்குத் தேவையான எருவையும் பெற்றுவந்தனர். பள்ளம் புலம், நாவலடிப்புலம், மைலப்புலம், தாழி புலம், தெற்கே காட்டுப் பகுதிகளிலும் கால் நடை வளர்ப்பு முக்கியத்துவம் பெற்றிருந்தது. வயல்களில் நெல் அறுவடையின் பின்னர் அடைப்பு வயல்களில் எள்ளு பயிரிட்டனர். எள், நல்லெண்ணெய் கிராம மக்களின் உணவில் முக்கிய இடத்தைப் பெற்றன. கிராமத்தில் எண்ணெய் ஊற்றும் செக்குகள் செயல்பட்டன.

பனை வளவுகள், புட்டிகள், மேட்டு நிலங்கள், குறிப்பாக கால்நடைகளிலிருந்து பாதுகாப்பாக அடைக்கப்பட்ட இடங்களில் உழுந்துச் செய்கை இடம்பெற்றது. உழுந்து இம் மக்களின் உணவில் குறிப்பாகக் காலை உணவில் அல்லது விசேஷ உணவுத் தயாரிப்புக்களில் முக்கிய இடத்தைப்

பெற்றிருந்தது. நெற்செய்கையில் கிடைக்கும் தானியம் கிராம மக்களின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்ய போதாததாய் இருந்தது. இதனால் அன்று கிராமத்தில் உப தானியச் செய்கையில் குரக்கன், சாமை, முக்கியத்துவம் பெற்றிருந்தன. மேட்டு நிலங்களில் உழுந்து பயிரிடுவதற்கு நிலத்தை உழுது கொடுத்தவருக்கு உழுந்து அறு வடைக்குப் பின்னர் அந்நிலம் மேய்ச்சல் நிலமாகக் கொடுக்கப்பட வேண்டும்.

வேலணைக் கிராமம் பனைச் செல்வம் நிறைந்ததாகக் காணப்பட்டது. வேலணை வடக்கு சாட்டி, தெற்குப் பகுதிகள் பனை வளம் நிறைந்ததாகவிருந்தது. இக்கிராமத்து மக்களின் வாழ்விலும் வளத்திலும் தொழில் முயற்சிகளிலும் பனை முக்கியதொரு இடத் தைப் பெற்றிருந்தது. கள்ளு, கருப்பநீர், பனங்கட்டி, பனாட்டு, ஒடியல், புழுக் கொடியல், நுங்கு, பூரான் எனப் பல்வேறு உணவுப் பொருட்கள் பனை மூலம் பெறப் பட்டன. கிராமத்தின் மரத்தேவை, விற குத் தேவை, வீடு வேய்வதற்கான ஓலை, வேலியடைப்பதற்கான ஓலை என்பன பனையிலிருந்தே பெறப்பட்டன. ஆகவே கிராமத்தின் பொருளாதாரத்தில் உணவுத் தேவையில் மரத் தேவையில், வேலை வாய்ப்பில், பனைவளம் பெரும் பங்கு கொண்டிருந்தது. 1950களிலிருந்து இதன் பங்கு படிப்படியாக குறைந்து வந்து இன்று கிராமப் பொருளாதாரத்தில் பனை சார் தொழில்களோ, வருவாயோ மிகக் குறை வான இடத்தையே பெற்றுள்ளன. வருங் காலத்தில் மேலும் இதன் பங்கு குறைந்து செல்லும் போக்கே காணப்படுகின்றது.

1960களுக்குப் பின்னர் இக்கிராமத்தின் பொருளாதாரம் துரிதமாற்றம் காணத் தொடங்கியது. நெற்செய்கை லாபகரமான தில்லாமல் போனது. உணவுத் தேவைக் காக செய்ய வேண்டுமென்ற மன நிலையி லும் மாற்றம் ஏற்படலாயிற்று. நெற்செய் கையில் லாபம் பெறமுடியவில்லை. சந்தை யில் அரிசி நியாய விலைக்கு வாங்கக் கூடிய சூழ்நிலை இருந்தது. மேலும் பங் கீட்டு உணவு விநியோக முறை நாட்டிலி ருந்தது. இதனால் சந்தைசக்திகள் நெற் செய்கைக்கு எதிராகவே இருந்தன. இதனால் கிராமத்தில் நெற்செய்கை மேற்கொள்வதில் ஆர்வம் குன்றியது. பணப்பயிரான புகையி லைச் செய்கை படிப்படியாக முக்கியம் பெறலாயிற்று. புகையிலைச் செய்கை வேல ணையில் ஒரு நூற்றாண்டுக்கு மேலாகச் செய்யப்பட்டு வந்தாலும் புதிய இயந்திரப் புரட்சியால் செய்யப்படும் பரப்பளவை பெருமளவில் அதிகரிக்கவும் லாபத்தைக் கூட்டவும் தொழிலாளர் பிரச்சினையை தீர்க்கக் கூடிய சூழ்நிலைகள் உருவாகின. 1950களில் தக்காளி செய்கையும் வேலணை யில் முக்கியத்துவம் பெற்று கொழும்புச் சந்தைக்கு அனுப்பப்பட்டது. எனினும் தக் காளிச் செய்கை நிலைத்து நிற்கவில்லை. சில ஆண்டுகளில் வீழ்ச்சியுற்று புகையிலைச் செய்கையில் இருந்த சாதக நிலைமைகள் இல்லாததால் பின் அது கைவிடப்பட்டது. தக்காளி அழுகக்கூடிய பொருளாக இருந்த தால், சந்தை, போக்குவரத்து தக்காளி செய்கையில் முக்கிய இடத்தைப் பெற்றன. ஆனால் புகையிலை நீண்டநாட்களுக்குப் பாதுகாப்பாக வைக்கக்கூடியதாக இருந்த தால் புகையிலைச் செய்கை மேலோங்கியது.

1950 களின் பிற்பகுதியில் நாலு சில்லு ரக்ரர், அல்கன் நீர் இறைக்கும் யந்திரங் கள் ஆகியன விவசாயத் துறைப் பாவ னைக்கு வந்தன. இவ்விரண்டு இயந்திரங் களும் கிராமத்தில் விவசாயம், வாழ்வியல் ஆகியவற்றில் பெரும் மாற்றங்களைக் கொண்டு

வந்தன. ரக்ரர் பாவனை வந்ததும் போக்கு வரத்து, பொருட்களை ஏற்றியிறக்குவது, உழவு ஆகியன இலகுவாகின. இதனால் பெரும் நெற்செய்கைக் காணிகள் தோட்டக் காணிகளாக மாற்றப்பட்டன. தூர இடங் களிலிருந்து மண் அகழப்பட்டு தோட்டங் கள் உருவாகின. குறிப்பாக வேலணை மேற்கு, நெல்வயல்கள் மிகவும் பள்ளக் காணிகளாகவும் நீர் தேங்கி நிற்பவை யாகவும் இருந்தன. 1960களில் ரக்ரர் மூலம் குளங்களிலிருந்தும் வேலணை தெற்கு செம் பாட்டுப் பகுதிகளிலிருந்தும் பெருமளவு மண் வேலணை மேற்குப் பகுதிகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அவை தோட்டக் காணி களாக்கப்பட்டன. மாட்டு வண்டியினால் இதனைச் செய்திருக்க முடியாது.

ரக்ரர் வருகையாலும் அதன் பாவனை அதிகரிப்பாலும் கிராமத்திலிருந்து நூற் றுக் கணக்கான மாட்டு வண்டில்கள் இல்லாது போயின. வண்டில் மாடு இல்லாது போனதால் கிராமத்து பெண் பிள்ளைகளுக்கும் தாய்மாருக்கும் வீட்டு வேலை பழு குறைந்து நேரத்தைக் கல்வியில் செலவழிக்கக்கூடிய நிலையுருவாகியது. இந்த மாற்றமும் வேலணை மத்திய கல்லூரி அமைப்பும் ஒரே காலத்தில் இடம் பெற்றதால் தான் வேலணையில் கல்வி வளர்ச்சி 1960களில் மிகவும் துரிதமாக இருந்தது குறிப்பிடத்தக்கது. இதேபோல் நீர் இறைக்கும் யந்திரம் பாவனைக்கு வந்ததால் தோட்டங்கள் செய்வதற்கு முன்னர் போல் மூவர், நால்வர் தேவைப்படாது ஓரிருவர் போதுமான நிலையேற்பட்டது. துலா மிதித்து, பட்டை பிடித்து நீர் இறைக்க வேண்டிய தேவையில்லாது போனது. இத்தகைய மாற்றத்தால் தனிநபருக்குரிய வருமானம் அதிகரித்ததுடன் புதிய நிலங் களில் பயிர்ச் செய்கை செய்வதற்கேற்ற வேலைப் படையை உள்ளூரிலேயே பெறக் கூடிய நிலை உருவாகியது. இவ்விரு யந் திரங்களால் உற்பத்தி அதிகரித்துடன் விவசாயிகள் வாழ்வும் மேம்பட்டது.

1960கள் வரை கிராம மீன்பிடித் தொழிலில் பெரியளவு மாற்றங்கள் ஏற் படவில்லை. பரம்பரையாக கடைப்பிடித்த முறைகள் மூலமே தொழிலைச் செய்து வந்தனர். 1960களின் பின்னர், குறிப்பாக பிற்பகுதியில் சிறு யந்திரம் பாவனைக்கு வந்ததால் புதிய முறைகளைக் கையாளத் தொடங்கினர். இதனால் துறையூர், கெட்டில், செட்டி புலம் மீனவர்களின் வாழ்வு சற்று மேம்படத் தொடங்கியது. குறிப்பாக துறை யூர் மீன்பிடியிலிருந்து ஒரு பகுதி யாழ்ப் பாணத்துக்கு தரைவழியாகக் கொண்டு செல்லப்பட்டது.

பனந் தொழில்களில் பல வழிகளில் தொடர்ந்தும் வீழ்ச்சிப் போக்கு ஏற்பட்டது. கிராமத்து பனாட்டு, பாணி உற்பத்தி முற் றாக இல்லாது போயின எனினும் கடகம், பெட்டி, பாய் இழைத்தல் தொழில்கள் ஓரளவு தக்கவைக்கப்பட்டன.

1960களிலிருந்து கிராம மக்கள் அரச சேவைத் தொழில்கள் மூலம் பெறும் வருமானம் அதிகரிக்கத் தொடங்கியது. கிராமத்தின் கல்வி நிலையில் ஏற்பட்ட முன்னேற்றமே இதற்குக் காரணமாகும். 1930, 1940 களில் இக்கிராமத்தைச் சேர்ந்த சிறு எண்ணிக்கையானவர்கள். தமிழ் ஆசிரி யர்களாக நியமனம் பெற்றனர். 1950 களில் இக்கிராமத்தைச் சேர்ந்த சிறு எண்ணிக் கையான இளைஞர்கள், யுவதிகள் பட்டப் படிப்பிற்கு இந்தியா சென்றார்கள். இவர்கள் நாடு திரும்பி கிராமத்திலும், யாழ்ப்

பாணத்திலும் இலங்கையின் பல பகுதிக ளிலும் அரச சேவையில் குறிப்பாக ஆசிரி யர்களாக நியமனம் பெற்றனர். வேலணைக் கிராமத்தில் குறிப்பாக ஆசிரியர்கள் எண்ணிக்கை அதிகரித்ததால் அவர்கள் வழியாக கிராமத்தின் சமூக பொருளாதா ரத்தில் துரிதமாற்றம் ஏற்படலாயின. சிவில் சமூக செயற்பாட்டில் அவர்கள் முன் னின்று உழைத்தனர். இதே நேரத்தில் சிறு எண்ணிக்கையானோர் அரச சேவையில் எழுதுவினைஞராகவும் மற்றும் சிறு பதவி நிலைகளில் இணைந்தனர். விவசாயத்தை யும் மீன் பிடியையும் வெளி மாவட்டங்க ளில் சிறு வர்த்தகத்தில் ஈடுபட்டவர்களின் பொருளாதாரத்தை நம்பியிருந்த கிராமப் பொருளாதாரம் புதிய வருவாய் பகுதியை உருவாக்கியதுடன், இத்துறை மேலும் வளரும் போக்கையும் கொண்டதாக விளங் கியது. இக்கிராமத்திலிருந்து பலர் இலங் கையின் பல்வேறு இடங்களுக்குச் சென்று சிறு வர்த்தக முயற்சிகளில் ஈடுபட்டனர். பெரும்பாலும் இவர்களது வியாபார முயற் சிகள் புகையிலையுடன் தொடர்புபட்டதாக இருந்தது. முதல் உள்ளவர்கள் சிறு வியா பார நிலையங்களை ஸ்தாபித்தும் முதல் குறைந்தவர்கள் வழியோடி வியாபாரிகளாக தொழில் செய்தும் தங்கள் வாழ்க்கையை மேம்படுத்த போராடினார்கள். இவ்வியா பாரிகள் தங்களது குடும்பங்களைத் தாம் தொழில் செய்யும் இடத்துக்குக் கூட்டிச் செல்லாது கிராமங்களிலேயே வைத்திருந்த னர். 1960களில் இவ்வியாபார நடவடிக்கை கள் இனக் கலவரங்களாலும், நாட்டில் நிலவிய அமைதியற்ற சூழ்நிலைகளாலும் பெரியளவு முதலீட்டு முன்னெடுக்க முடியாது போயிற்று. 1958, 1977, 1981, 1983 கலவரங்களால் கிராம மக்களின் தென் னிலங்கை வர்த்தக நடவடிக்கைகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. பல வர்த்தக நிறுவனங்கள் மூடப்பட்டன. இருக்கும் ஓரிரு நிறுவனங்களும் மெய்யாதனப் பெறு மானத்தைப் பேண நடத்தப் படுவனவாக வுள்ளன. இதேநேரத்தில் இவ் வியாபாரிக ளின் பிள்ளைகள் கல்வி மற்றும் தொழில் துறைகளில் முன்னேறி உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் நல்ல நிலைகளில் வாழ் கின்றனர்.

1960களிலிருந்து படிப்படியாக முன் னேறிய கிராமியப் பொருளாதாரம் 1970 களில் பெரிய வளர்ச்சி கண்டது. இக் காலத்தில் இலங்கை அரசாங்கம் வெங் காயம், மிளகாய் இறக்குமதியைக் கட்டுப் படுத்தியதால் வேலணைக் கிராமம் மிளகாய், வெங்காயச் செய்கையில் பெரும் லாபம் பெற்றது. தோட்ட நிலங்கள் கொட்டு மண்ணைக் கொண்டதாலும் நல்ல முறை யில் பசளை இடப்பட்டு பேணப்பட்டதா லும் மிளகாய் விளைச்சல் அமோகமாக இருந்தது. வேலணையில் மிளகாய்க் கன்று மரம் போல வளர்ந்து மாதுளம் மரத்தை ஒத்துக் காணப்பட்டது. மிளகாய்ச் செய்கை ஐப்பசி, கார்த்திகையில் தொடங்கி ஆனி, ஆடி வரை நடைபெற்றது. பலமுறை மிள காய் ஆயக்கூடிய முறையில் விளைச்சல் பெறப்பட்டது. இப்பயிர்ச்செய்கையில் கிரா மத்துப் பொருளாதாரம் மேம்பட்டு விவ சாயிகள் புதிய தோட்டங்களை இணக்கு வதிலும் கல்வீடு கட்டுவதிலும் தங்களது லாபத்தை முதலிட்டார்கள். அவர்களது வாழ்க்கைத் தரமும் உயர்ந்தது. பொருளா தார ரீதியில் கிராமம் நல்ல பலனைப் பெற்ற பொழுதும் சுற்றுச் சூழலியலில் பல பிரச்சினைகள் எழுந்தன. கூடுதலான நீர் கிணறுகளிலிருந்து, நீண்ட காலத்திற்கு குறிப்பாக வரட்சி மாதங்களிலும் பெறப்

பட்டதால் பல நல்ல தண்ணீர்க் கிணறுகள் உவர்நீர்க் கிணறுகளாக மாறின. இவை பின்னர் நன்னீர்க் கிணறுகளாக மாறவில்லை. நிலம் நீண்டகாலம் மிளகாய்ச் செய்கைக்கு உட்படுத்தப்பட்டதாலும் அளவுக்கு அதிகமான செயற்கை உரங்கள், கிருமிநாசினி பாவிக்கப்பட்டதாலும் கிராமத்தின் ஒட்டுமொத்த சுற்றுச் சூழல் பாதிக்கப்பட்டது. எனினும் 1991 இலிருந்து 1996 வரை கிராம மக்கள் முற்றாக வெளியேறியதாலும் ஐந்து வருடங்களுக்கு முற்றாக விவசாயம் செய்யப்படாததாலும் 1970 களில் ஏற்பட்ட பௌதீக இழப்புக்களை ஓரளவு நிவர்த்தி செய்யக் கூடியதாக இருந்தது.

1991 ஆம் ஆண்டு மக்கள் கிராமத்தை விட்டு வெளியேறி, பின்னர் 1996 இல் மீளக் குடியேறிய பொழுது கிராமம் இன்றுவரை பழைய இடத்திற்குவரவில்லை. மக்கள் கிராமத்திலிருந்து இடம்பெயர்ந்து பல நாடுகளுக்கும் இலங்கையின் பல பகுதிகளுக்கும் சென்றுள்ளனர். இதனால் கிராமம் சமூக பொருளாதார ரீதியில் பின்தங்கியதாகவும் பலதரப்பட்ட பிரச்சினைகளை எதிர்நோக்கியும் நிற்கின்றது. இக்கிராமத்தை அபிவிருத்தி செய்ய பின்புலத்தில் அபிவிருத்தி முயற்சிகள் முன்னெடுக்கப்பட வேண்டும். பௌதீக, சமூக பொருளாதார, மற்றும் போக்குவரத்து துறைகளில் அபிவிருத்தி மேற்கொள்ள வேண்டும். இக்கிராம அபிவிருத்திக்கான திறமுறைகள் பின்வருவனவற்றை அடிப்படையாகக் கொண்டு இருக்க வேண்டும்.

### வேலணைக் கிராமத்தின் அபிவிருத்திக்கான முக்கிய திறமுறைகள்

1. இக்கிராமத்தின் மொத்த நிலப்பரப்பையும் நீர் வளத்தையும் முழுமையாகக் கவனத்திலெடுத்து பொருத்தமான நிலப் பயன்பாட்டுக்கொள்கை வகுக்கப்பட வேண்டும்.
2. சாட்டி உட்பட கிராமத்தின் நீர்வளத்திற்கேற்ற நீர்ப்பயன்பாட்டுக் கொள்கை வகுக்கப்பட வேண்டும்.
3. குளங்கள் ஆழமாக்கப்பட்டும் அகலமாக்கப்பட்டும், அவற்றின் நீர் கொள்ளளவு அதிகரிக்கப்பட வேண்டும்.
4. கிராமத்தின் விவசாய வளர்ச்சி நவீன முறையில் நீர்ச் சிக்கனத்தை அடிப்படையாகக் கொண்டு முன்னெடுக்கப்பட வேண்டும்.
5. பெரிய வெளிகளில் தாவரப் போர்வையையும் புல்லினத் தரத்தையும் மேம்படுத்தவேண்டும்.
6. வேலணை ஆறு - சரவணைக் கடல் நீரேரி நுண் அபிவிருத்தித் திட்டமாக முன்னெடுக்கப்பட வேண்டும்.
7. நாய்க்குட்டி வாய்க்கால் தடுப்பணை, சிறந்த முறையில் பராமரிக்கப்பட்டு கிராமத்துக்குள் உவர் நீர் வருவது தடுக்கப்பட வேண்டும்.

8. வேலணைக் கிராமம் யாழ்ப்பாண நகரத்தின் ஒரு உப நகரமாக விருத்தி செய்யப்பட வேண்டும். இது ஒரு பிரதான குடியிருப்பு நிலையாகவும் நகரப் பொருளாதார வேலை வாய்ப்புகளுடன் இறுக்கமான தொடர்பு கொண்டதாகவும் மாற்றப்பட வேண்டும்.

9. கிராமத்திலுள்ள சகல குடியிருப்புகளுக்கும் அலுவலகங்களுக்கும் மின்சாரம், குழாய் நீர் கிடைக்க வழி செய்யப்பட வேண்டும்.

10. இக்கிராமம் அராலிக் கிராமத்துடன் தரை வழிப்பாதையால் இணைக்கப்பட வேண்டும். இத்தகைய இணைப்பால் வேலணை, வலிகாமம், யாழ்ப்பாணம் ஆகியவற்றுடன் இறுக்கமான சமூக-பொருளாதார உறவுகளை வளர்க்க முடியும்.

11. சோனகன் காட்டிலிருந்து கல்லாண்ட முனங்குவரையும் ஒரு பெருஞ்சாலை அமைக்கப்பட வேண்டும். ஏற்கனவேயுள்ள ஒழுங்கைகள், வீதிகளைத் திருத்துவதாலும், அகலமாக்குவதாலும் இதனைச் செய்யலாம். இவ்வீதியமைக்கப்படின் பெருமளவு நிலப் பரப்பு குடியிருப்பு, மற்றும் அபிவிருத்தித் தேவைகளுக்குக் கிடைக்கும்.

12. இக்கிராமத்தை நடுவாக ஊடறுத்துச் செல்லக்கூடிய புதிய வீதி சரவணையிலிருந்து மண்கும்பான் அன்னமார் கோயில்வரை அமைக்கப்பட வேண்டும். இது சரவணை, பள்ளம்புலம், ஆரவயல்பட்டி, நாவலடிப்புலம் வழியாகச் செல்லுதல் நல்லது.

13. சுருவில் துறையூர்ச் சாலை மேலும் விரிவாக்கப்பட்டு விருத்தி செய்யப்பட வேண்டும்.

14. கிராமத்து வீதிகள் யாவும் புனரமைக்கப்படுவதுடன் விபத்து விளைவிக்கக் கூடிய பல வளைவுகள் நீக்கப்பட வேண்டும்.

15. வங்களாவடி பல வசதிகள் கொண்ட ஒரு சிறு நகராக வளர்க்கப்பட வேண்டும்.

16. வங்களாவடிச் சந்தியில் ஒரு பெரிய கல்யாண மண்டபம் அமைக்க வேண்டும்.

17. செட்டிபுலத்திலும், துறையூரிலும் சிறு மீன்பிடித் துறைமுகங்கள் அமைக்கப்பட வேண்டும்.

18. செட்டிபுலத்தில், சுடலைப்புட்டிக்கு அண்மையாக ஒரு வெளிச்சவீடு அமைய வேண்டும்.

19. வேலணை மத்திய கல்லூரி வேலணைக்கும் தீவுப் பகுதி முழுவதிற்கும் சேவை செய்யக்கூடிய பெரிய கல்வி நிலையமாக வளர்க்கப்பட வேண்டும்.

20. ஆரம்ப, இடைநிலைப் பாடசாலைகள் புதிய தேவைகளுக்கு ஏற்ப மறுசீரமைப்புச் செய்யப்பட வேண்டும்.

21. பெண்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கக் கூடிய முறையில் இலேசான கைத்தொழில்கள் விருத்தி செய்யப்பட வேண்டும்.

22. சமூக ரீதியாக ஒற்றுமையை மேம்படுத்தவும். மக்கள் மத்தியில் சமாதானம் நிலவவும் சமூக நலத் திட்டங்கள் முன்னெடுக்கப்பட வேண்டும். மக்கள் கிராம அபிவிருத்தியில் பங்குகொள்ள கூடிய சூழ்நிலைகள் உருவாக வேண்டும்.

23. கிராமத்தின் ஏழைகள், வறுமைக் கோட்டிற்கு உட்பட்டவர்களின் வாழ்க் கைத் தரத்தைமேம்படுத்த பல நுண் அபிவிருத்தித் திட்டங்கள் முன்னெடுக் கப்பட வேண்டும்.

இக்கிராமத்தின் சுற்றுச் சூழலில் குறிப் பாக உவர்நீர்ப் பிரச்சினை, புழுதிக் காற்று வரட்சித் தன்மை, கடும் வெப்பம், பசுமை யற்ற தன்மை, குளநீரில் மாசு போன்றவற் றின் தாக்கத்தைக் குறைத்து ஒட்டுமொத்த மாக சுற்றுச்சூழலை மேம்படுத்த முயற் சிகள் பல எடுக்கப்பட வேண்டும்.

இக்கிராமத்தின் சிவில் சமூக அமைப் புகள் உயர் விழுமியங்களை முன்னெடுத்து, நல்ல மனப்பாங்கு, செயற்திறன், உதவி செய்தல் போன்ற சிறந்தபண்புகளை கிராம மக்களிடையே வளர்த்தல் - மீளப் பெறுதல் மிக அவசியம்.

18ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் மணியகாரன், உடையார், விதானை என்ற நிர்வாக முறைகள் ஆங்கிலேயரால் அறிமுகப்படுத்தப்பட்டன. தீவுப் பகுதிகள் (ஏழு தீவுகளும்) ஒரு நிர்வாகப் பிரிவாக அமைக்கப்பட்டன. அதன் தலைமையகம் வேலணையில் அமைந்திருந்தது. திரு. மு. சோமசுந்தர மணியகாரன், அவரது தகப்பன் முத்து மணியகாரன் (திரு. வீ. முத்தையா பிள்ளை) என்போர் அக்காலத்தில் பதவியிலிருந்தனர். முத்து மணியகார னின் தகப்பனும் பதவி வகித்ததாகக் கூறப்படினும் இதை உறுதிப்படுத்தப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை இதற்கு பிந்திய காலகட்டங்களில் (D.R.O.) காரியாதிகாரி நிர்வாகமுறை கொண்டுவரப்பட்டது.





# வேலணைக் கிராமம் ஒரு புவியியற் பார்வை

பேராசிரியர் கா. குகபாலன்
தலைவர், புவியியற்றுறை
யாழ். பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

யாழ்ப்பாண மாவட்டத்தின் தென் மேற்கே அமைந்துள்ள தீவுத் தொகுதிகளில் லைடன் தீவும் (வேலணைத் தீவு) ஒன்றாகும். இத்தீவு 67.0 சதுரகிலோமீற்றர் பரப்பளவைக் கொண்டது. இத்தீவில் அல்லைப்பிட்டி, மண்கும்பான், வேலணை, சரவணை, புளியங்கூடல், நாரந்தனை, கரம்பொன், சுருவில், ஊர்காவற்றுறை ஆகியன உட்கிராமங்களாகும். இக்கிராமங்களில் சைவமும் தமிழும் ஒருங்கே கொண்ட வேலணைக் கிராமம் ஏறத்தாழ 15.0 சதுரகிலோமீற்றர் பரப்பளவினைக் கொண்டது. வரலாற்றுக் காலத்திலிருந்து சிறப்புப் பெற்றிருந்த இக் கிராம மக்கள் ஏனைய தீவுகளில் வாழ்ந்து வரும் மக்களுடன் மிகவும் அந்நியோன்னியமான நட்புறவைக் கொண்டிருந்தமைக்கு பல்வேறு சான்றுகள் உண்டு. வேலணைக் கிராமம் வேல்+அணை=வேலணை. அதாவது வேல் அணைந்த இடம் எனக்கூறி இக் கிராமத்தின் மகிமை பற்றி ஆய்வாளர்கள் கருத்துத் தெரிவித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

வேலணைக் கிராமத்தின் பௌதீக பண்பாட்டுப் புவியியல் பண்பானது ஏனைய அயற் கிராமங்களுடனும் தீவுகளுடனும் நெருங்கிய தொடர்பினைக் கொண்டதாக வுள்ளது. இவை தவிர்க்க முடியாதது. இருப்பினும் இக்கிராமத்தின் பௌதீக வாழ்வியல் பண்பினை நோக்கின் ஒரு காலத்தில் யாழ்ப்பாணக் குடாநாடு தென்னிந்தியாவின் ஒரு பகுதியாகவே காணப்பட்டிருந்தது. கொலோசின் காலத்தில் கடல் மட்டத்தின் உயர்வின் காரணமாக ஏற்கனவே இருந்த தாழ்நிலங்கள் கடலினுள் அமிழ்ந்து விடவே எஞ்சிய உயர்நிலங்கள் சிறு சிறுத் தீவுகளாக மாற்றம் பெற்றது எனவும் ஆய்வுகள் தெரிவிக்

கின்றன. புவிச்சரிதவியல் ரீதியாக மயோசின் காலம் தொட்டு இற்றைவரையான காலப்பகுதிகளுக்குள் நிகழ்ந்த சிக்கலான புவிச்சரித, மற்றும் வெளியுருவச் செயல் முறைகளின் விளைவாகவே இப்பிரதேச நிலவுருவங்கள் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். குறிப்பாக தீவுப் பகுதிகளில் கடல் மட்டம் உயர உயர இன்றைய தீவுகள் காணப்படுகின்ற நிலப்பகுதியின் தாழ்நிலங்களில் கடல்நீர் உட்புகவே உயரமான நிலப்பகுதிகள் சிறுசிறு தீவுகளாக உருப்பெற்றிருக்கின்றன என்றே கூறல் வேண்டும். கடல் நீர் மட்டம் உயரும் போது இத்தீவுகளின் ஓரங்களில் வாய்ப்பான பகுதிகளில் முருகை உயிரினங்கள் வாழத் தொடங்கின. அவை காலப்போக்கில் முருகைப் பாறையின் உருவாக்கத்தின் விளைவாக அப்பகுதிகளில் கடற்படிவுகள் படிந்து தீவுகளின் வெளித்தோற்றத்தை மாற்றியிருக்கின்றன எனக் கொள்ளலாம். அதாவது உயிரினங்களின் செயல்முறை. கடலலை, நீரோட்டம், போன்றவற்றின் செயற்பாட்டின் விளைவாக இத்தீவுகள் இன்றைய தோற்றத்தைப் பெற்றிருக்கின்றன என்பது தான் உண்மை நிலையாகும்.

மேற்குறிப்பிடப்பட்டவற்றிலிருந்து நோக்கும் போது வேலணைக் கிராமத்தின் மத்திய உயர்ந்த பிரதேசம் போன்ற ஏனைய கிராமங்கள் தனித்தனியாக சிறுசிறு தீவுகளாக உருவாக்கம்பெற்று காலப்போக்கில் கடலலை, காற்றலை, நீரோட்டம், முருகைக் கற்பாறைகளின் வளர்ச்சி போன்ற பல காரணிகளினால் தற்போதைய நிலையை பெற்றுள்ளது எனலாம்.

வேலணைக் கிராமத்தின் தென்கரையோரப் பிரதேசத்தில் குறிப்பாக சாட்டியிலிருந்து அல்லைப்பிட்டி வரையிலான பகுதிகளில் காணப்படும் மணற்படிவுகள் பிற்காலத்தில் உருவானது எனக் கொள்ளலாம். எனினும் மேற்குறித்த சாட்டிப் பகுதிகளில் காலத்துக்குக் காலம் கடலலைகள் உயரும் போது மணல் சார்ந்த நிலப் பகுதிகள் கடலில் மூழ்கியும் உள்ளன என அறிய வருகின்றது. குறிப்பாக சாட்டி கடற்கரையிலிருந்து 100 மீற்றர் தூரத்தில் கடலில் கிணறுகளின் கட்டுமானங்கள் காணப்படுவதாக தான் நேரில் அவதானித்தாகவும் அவை சம்பந்தமான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டுமெனவும் அவ்வூரைச் சேர்ந்த திரு. ஈ. கே. நாகராசா அவர்கள் தெரிவிக்கின்றார். எனவே இயற்கையில் கடலலையின் தாக்கத்தினாலோ அன்றி கடற்பெருக்கின் விளைவாகவோ கடற்கரையோர நிலப்பகுதிகளை கடல் காவு கொண்டிருக்கலாம் என நம்ப இடமுண்டு.

வேலணைத் தீவில் யாழ்ப்பாணம் - ஊர்காவற்றுறை வீதிக்கு வடபகுதியிலும் அதனைச் சார்ந்தும் காணப்படும் நிலப் பரப்பானது கடல்பகுதியாகவிருந்து காலப் போக்கில் கடல் பின்வாங்கியதன் விளைவாக நிலப்பகுதியாக மாறியுள்ளது. குறிப்பாக பண்ணைப் பாலமானது நீரின் உள்வரவினைக் கட்டுப்படுத்தியதாலும் இக்குடாப்பிரதேசத்திற்கு ஏனைய பகுதியிலிருந்து கடல் நீரின் உள்வரவு குறைவாகக் காணப்படுகின்றபடியாலும் இப்பிரதேசம் கடல்மட்டத்திலிருந்து 1-2 அடி உயரமான நிலப்பகுதியாகவுள்ளமை குறிப்பிடத்தக்கது. இருப்பினும் மாரிகாலங்களில் பெறப்படும் மழைவீழ்ச்சியானது கடல்மட்டம் உயரும் போது இப்பிரதேசத்துள் கடல்நீர் நன்னீருடன் கலந்த நிலையில் காணப்படுவதைக் காணமுடிகின்றது. அதாவது வேலணைக்

கிராமத்தில் யாழ்ப்பாணம் - ஊர்காவற்றுறை வீதிக்கு வடக்கே அராலி வீதியின் இருமருங்கிலும் இத்தகைய பண்பினை மாரி காலங்களில் காணலாம்.

ஒரு பிரதேசத்தில் பொருளாதார முயற்சி குறிப்பாக விவசாயம் மற்றும் குடியிருப்புப் பாங்கிற்கு அப்பிரதேசத்தில் காணப்படும் மண்வகைகள் முக்கியத்துவம் வாய்ந்ததாகவுள்ளது. வேலணைக் கிராமத்தில் நான்கு வகையான மண் வகைகள் இனங்காண முடிகின்றது.

1) நிலவுருவாக் கக் காலத்தில் உருவாகிய மண்வகையுடன் செம்மண் கலந்த இருவாட்டித் தன்மை கொண்ட மண் வகை
2) தாழ்நிலக் களிமண் வகை
3) மணல்மண் வகை
4) உவர் களிமண் என்பனவே அவையாகும்.

வேலணைப் பிரதேசத்தில் முதலாவது வகை மண் அமைப்பானது. நிலம் உயர்த்தப்பட்ட அல்லது கடல் தாழ்ந்திருந்த காலத்தில் காணப்பட்ட மண் வகையுடன் செம்மண் படிவுகளும் இணைந்து உருவான மண்வகைகள் இக்கிராமத்தின் மத்திய பிரதேசத்தில் காணப்படுகின்றது. இம்மண்வகை காணப்படும் பிரதேசங்களில் வீட்டுத் தோட்டங்கள், சந்தைத் தோட்டங்களைக் காணமுடிகின்றது. அண்மைக் காலங்களில் மக்கள் வெளியிடப் பெயர்வின் விளைவாக கணிசமான நிலப் பகுதிகள் பயன்பாட்டுக்குட்படாத நிலையினை அவதானிக்க முடிகின்றது.

இரண்டாவது வகையான தாழ்நிலை களிமண் காணப்படும் பகுதிகளில் நெற்பயிர்ச்செய்கை பண்ணப்படுகின்றது. இக்கிராமத்தில் ஆங்காங்கே இம் மண் படிவுகளை காண முடிகின்றது. வங்களாவடிப் பிரதேசத்தின் மேற்கு மற்றும் வட பிரதேசங்களில் இதனை அடையாளம் காண முடிகின்றது. மூன்றாவது வகையான மணல் மண் வேலணை சாட்டி தொட்டு அல்லைப்பிட்டி வரையிலான தென் கடற்கரைப் பிரதேசங்களில் செறிவாகக் காணப்படுகின்றன. இவ்வகை மணல் எவ்வாறு உருவானது என்பது பற்றி ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. அதாவது கடலலை, நீரோட்டத்தின் போக்கு, கடற்பெருக்கு காரணமாக இப்பிரதேச நிலப்பரப்பினை கடல் காவு கொண்டு செல்வது மட்டுமல்லாது மனித நடவடிக்கையின் மூலம் மணல் அகழப்பட்டு வருவதனால் கடல் நீர் உள்வரக் கூடிய அபாயநிலை காணப்படுகின்றது. அதாவது சாட்டி, மண்கும்பான் பகுதிகளில் கடற்கரையிலிருந்து ஏறத்தாழ 10-50 மீற்றர் தூரத்துக்குள் கடல் மட்டத்திலும் பார்க்க ஆழமாக மணல் தோண்டி எடுக்கப்படுவதனால் எதிர்காலத்தில் இப்பிரதேசத்தை கடல் காவும் அபாயம் உள்ளது.

நான்காவதாக உவர்களிமண் வகையானது குறிப்பாக வேலணை கிராமத்தின் வடமேற்குப் பகுதிகளிலும் ஊர்காவற்றுறை -யாழ்ப்பாணம் பிரதான வீதிக்கு வடக்கு மற்றும் தெற்குப் பிரதேசங்களிலும் காண முடிகின்றது. அதாவது இப்பிரதேசம் கடற்பிரதேசமாகவிருந்து இயற்கையாக நிலமீட்படைந்த பகுதிகளில் காணப்படுகின்றது. இம்மண்ணுடன் சிப்பி, சங்கு, மற்றும் கடலுடன் கூடிய உயிரினங்களின் படிவுகளும் கலந்துள்ளது. பொதுவாக இம்மண்படிவுகள் காணப்படும் பிரதேசங்களில் எந்த விதமான பொருளாதார நடவடிக்கை

களும் மேற்கொள்ளப்படுவதில்லை. இப்பிர தேசங்களில் வீதி அபிவிருத்தியின் பொருட்டு மண், வெட்டி எடுக்கப்படுவத னால் காலப்போக்கில் இப்பிரதேசம் கடலுடன் சங்கமமாகக் கூடிய சாத்தியக் கூறுகளையும் மறுப்பதற்கில்லை.

வேலணைக் கிராமத்தின் நன்னீர் வளத்தினைப் பொறுத்தவரை ஏனைய கிரா மங்களோடு ஒப்பிடுமிடத்து சிறப்பான தென்றே கூறல்வேண்டும். சாட்டிப் பிர தேசம் சார்ந்த மணற்படிவுப் பிரதேசங் களில் மிகச் சிறந்த நன்னீர் வளம் காணப் படுவதுடன் இக்கிராம மக்களுக்கான நன் னீர் குழாய் மூலம் இங்கிருந்து விநியோ கிக்கப்படுகின்றது. அதுமட்டுமல்லாது புங் குடு தீவு கிராமத்தின் குடிநீர்த் தேவையில் ஒருபகுதி இப்பிரதேசத்திலிருந்து பெறப் படுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது. பொதுவாக வேலணைக் கிராமத்தின் ஏனைய பகுதிகள் குறிப்பாக மத்திய பகு திகளில் ஆங்காங்கே நன்னீர் வளம் காணப் படுகின்றது. இக்கிராமத்தின் தெற்கு துறை முகம் சார்ந்த பிரதேசங்கள் உவர்த்தன்மை யுடைய நீர்வளத்தைக் கொண்டிருக்கின் றன என்பது குறிப்பிடத்தக்கது.

வேலணைக் கிராமம் உட்பட தீவுப் பகுதிகள் யாவும் அதிவரள் வலயத்திற்குள் காணப்படுகின்றது. வடகீழ் பருவக் காற் றுக் காலமான ஒக்டோபர்-டிசம்பர் மாதங்களில் இப்பிரதேசத்தில் கிடைக்கப் பெறும் மழைவீழ்ச்சியில் 90 சதவீதமழையி னைப் பெற்றுக்கொள்கின்றது. எவ்வாறெ னினும் இப்பிரதேசம் சராசரி 50.0 அங்குல மழைவீழ்ச்சியே கிடைக்கப்பெறுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது. குறைவான மழை வீழ்ச்சியைப் பெற்றுக்கொள்வது மட்டு மல்லாது அம்மழைவீழ்ச்சியின் கணிசமான பங்கு கடலுடன் கலந்துவிடுகின்றது. அதா வது தரைக்கீழ் நீராகச் செல்வது மிகமிகக் குறைவாகவேயுள்ளது. மேலும் இப்பிர தேசம் வருடத்தில் நீண்டகாலம் வரட்சித் தன்மையைக் கொண்டிருப்பதனால் கிணறுகளில் நீரானது வற்றிவிடும் நிலை தொடர்கின்றது. எனினும் தீவுப்பகுதியில் பெரும்பாலான கிராமங்களோடு ஒப்பிடும் போது சார்புரீதியாக நன்னீர் நீர்வளம் கொண்ட பகுதியாக உள்ளமை குறிப் பிடத்தக்கது.

வேலணைக் கிராமத்தின் இயற்கைத் தாவரப் போர்வையானது அதிவரள் வலயத்துக்குரிய பண்புகளைக் கொண்ட தாகவுள்ளது. அதாவது முட்செடிகள், கண் டல் தாவரங்கள் மற்றும் வரட்சியைத் தாங் கக்கூடிய செடி, மரவகைகளைக் காண முடிகின்றது. எனினும் குடியிருப்பு, விவ சாய நோக்கம் கருதி அழிக்கப்பட்டு வரு கின்றது. ஆயினும் 1991 ஆம் ஆண்டு மக்கள் வெளியிடப் பெயர்வின் விளைவாக இவ் வியற்கைத் தாவரப் போர்வை அதிகரித் துள்ளதைக் காண முடிகின்றது.

வேலணைக் கிராமத்தின் பண்பாட்டுப் புவியியல் பண்புகள் பற்றி இந்நூலில் பல ஆய்வாளர்களால் எடுத்து கூறப்பட்டதால் அவை பற்றி இக்கட்டுரையில் ஆராயப்பட வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.


தீவுப்பகுதியில் வேலணைக்கிராமம்
N
காரைநகர்
எழுவைதீவு
லைடன் தீவு
அனலைதீவு
நயினாதீவு
புங்குடுதீவு
வேலணை
மண்டைதீவு
நெடுந்தீவு
0 1.5 3 6 9 12
Kilometers
505000
498000
491000
484000
477000
79000
88000
97000
106000
115000



யாழ்ப்பாணக் குடாநாட்டில்
வேலணைக் கிராமத்தின் இட அமைவு
N
W
E
S
வேலணை
0
10
20
40
Kilometers
90000
110000
130000
150000
170000
520000
500000
480000
460000

உ

# வேலணை பெருங்குளம்
# ஸ்ரீ முத்துமாரியம்பாள் கோவில்



வளர்ந்துவரும் கோபுரம்

## ஆலயங்கள்

# வேலணை, பெருங்குளம் ஸ்ரீ முத்துமாரி அம்பாள் கோவில்

*திரு. வ. நவரத்தினம்*
*முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் - ஊர்காவற்றுறை*

அகிலாண்ட கோடி ஈன்ற அன்னையை இன்னமும் கன்னி என ஓதுகின்றன வேதங்கள். இதுவோர் அற்புதமான சிந்தனைக் கோட்பாடு. இது இந்து சமயத்துக்கு மாத்திரம் உரித்தானதன்றி, பிற சமயத்தவர்களும் இதே வழியிற் தமது சிந்தனையைச் செலுத்தி இருக்கிறார்கள் என்பதற்கு அறிகுறியாக யேசுநாதரின் திருத்தாயைப் பரிசுத்த கன்னி மரி அன்னை என்று வணங்கும் கிறிஸ்தவ வழக்கத்தைக் காணலாம்.

அன்னை பராசக்தியைப் பற்பல திருக் கோலங்களிற் பூசிப்பது உண்டு. காளி என்றும், துர்க்கை என்றும், ஈஸ்வரி என்றும் மக்கள் வணங்குகிறார்கள். அவற்றுள் முத்துமாரி என்ற மூர்த்தமும் ஒன்று. மிகப் புராதன காலந் தொட்டுத் தொற்று நோய், பஞ்சம், வரட்சி முதலியன நம்மைப் பீடிக்காமற் பாதுகாக்கும் பொருட்டு இந்த முத்துமாரி என்ற மூர்த்தத்திலே அம்பிகையை வழிபட்டு வந்தார்கள் மக்கள். இது தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதிலும் உள்ள வழிபாடு என்பதற்கு ஆதாரங்கள் பலவுள.

ஈழவள நாட்டிலே தமிழர்கள் வழிபட்டு வரும் கோவில்களிலே மிகப் புராதனமான வற்றில் வேலணை கிழக்கில் உள்ள பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவிலும் ஒன்று எனக் கருதப்படுகிறது. ஒல்லாந்தர் காலத்துப் பழமையான

பத்திரங்களிலிருந்து தொகுக்கப்பட்டு ஆங்கிலேயர் சேகரித்து வைத்திருக்கும் அரசாங்கக் கச்சேரிப் பதிவேடுகளிலே இந்தக் கோவிலைப் பற்றிய குறிப்பு உளது. அதிலிருந்து தற்பொழுது இருக்கும் கர்ப்பக் கிரகம் 1875 ஆம் ஆண்டளவிற் கட்டப்பட்டது என அறிகிறோம்.

ஆனால் கோவில் எப்பொழுது ஸ்தாபிக்கப்பட்டது, எவ்வளவு காலமாக இருந்து வருகிறது, ஆதிகாலத்திலிருந்து என்ன ரூபத்தில் இருந்து வந்தது, இப்பொழுது இருக்கும் இடத்திலேயே ஆதி கோவிலும் இருந்ததா, அன்றி வேறு இடத்தில் இருந்து இப்போதைய இடத்துக்கு மாற்றப்பட்டதா, என்பன வெல்லாம் பழமை என்னும் பனிப்புகாரினால் மறைக்கப்பட்டுக் கிடக்கின்றன. தமிழர்கள் இதிகாச உணர்ச்சி இல்லாதவர்கள் என்று ஆராய்ச்சியாளர் கூறுவதில் உண்மை இல்லாமல் இல்லை. உலகத்திலுள்ள மற்றைய இனங்களெல்லாம் தத்தம் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கல்லிலேயும், செப்பிலேயும், காகிதத்திலேயும், தோல் களிலேயும், களி மண்ணிலும், புத்தக ரூபமாயும், ஏட்டுச் சுவடிகளிலும் வடித்துப் பாதுகாத்து வைத்துவிட்டுப் போயிருக் கிறார்கள். இந்த இனங்களோடு ஒத்துப் பார்த்தால் தமிழ் மக்களிடம் அந்த உணர்ச்சி மிகக் குறைவாகவே இருந்திருக்கிறது. அதனால் இனத்தின் வரலாற்றையே அறிவதற்கு ஆராய்ச்சியாளர் தலையைப் போட்டு உடைக்கிறார்கள். இந்த நிலையிலே நமது பெருங்குளத்து முத்துமாரி அம்பாள் கோவிலைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை நமது முன்னோர் விட்டுப் போகவில்லையே என்று நாம் கவலை கொள்ளத் தேவையில்லை.

பண்டு தொட்டு இந்தக் கோவிலிலே மிருகபலி இட்டு வழிபடும் வழக்கம் இருந்து வந்ததாக அரசாங்கக் கச்சேரிப் பதிவேட்டுக் குறிப்புப் பகர்கிறது. இந்த இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரையில் மிருக பலியிடும் வழக்கம் இருந்து வந்ததை முதியோர்கள் நினைவுபடுத்திக் கொள்வார்கள். மிருகபலியிட்டும் குரவைக் கூத்தாடியும் தத்தம் குலதெய்வங்களை வழிபடும் பழக்கம் புராதன காலத்துத் தமிழர்களிடையே இருந்து வந்திருக்கிறது. திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம், புறநானூறு போன்ற சங்ககால இலக்கிய நூல்கள் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த தமிழ் மக்களிடையே இந்த மிருகபலி வழிபாட்டு முறை இருந்ததாகப் பறைசாற்றுகின்றன. கானகத்தின் நடுவிலே ஒரு கல்லை நாட்டி, அதன்முன் பலி வெட்டி, செங்குருதி கலந்த அரிசியைப் படைத்து, அதைச் சுற்றி நின்று குரவைக்கூத்து ஆடி, சாமி கலை எழுப்பி முருகனையும் முத்துமாரியையும் வழிபட்டார்கள் அந்த மிகப் பழைய காலத்திலே. அந்தப் பழக்கம் ஏறக்குறைய சுப்பிரமணிய பாரதியார் காலம் வரையில் இருந்து வந்தது என்பதை அவர்

பாடல்களிலிருந்து அறியக்கூடியதாக இருக்கிறது.

இந்த வகையிலேதான் நமது வேலணையூரிலே முத்துமாரியம்மன் வழிபாடு அந்த மிகப் பழைய புராதன காலத்திலே எங்கோ ஒரு காட்டு மூலையிலே ஏதோ ஒரு பெரிய மரத்தின்கீழ் ஆரம்பமாகி இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்கக்கூடிய ஆதாரங்கள் கிடைக்கின்றன. நாளடைவிலே தமிழ் அரசர் காலத்திலே முத்துமாரி அம்மன் விக்கிரகத்தைக் கல்லிலே வடித்து, சிறிதாகவோ பெரிதாகவோ ஒரு கோவில் அமைத்து அதில் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்து வந்திருக்கிறார்கள் நம் முன்னோர். ஆகையினாற்றான் ஒல்லாந்தர் காலத்திலிருந்து கர்ண பரம்பரையான கதை ஒன்று நிலவி வருகிறது.

ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தின் நடுப் பகுதியளவிலே பெருங்குடி வேளாளன் கட்டை மாதன் என்பான் ஒருவன் பெருங்குளத்தின் வடகரைபால் உலாவி வருங்காலை கற்புலம் என்னும் பகுதியில் நொச்சி ஆவரம் புதர் ஒன்றினுள் முத்துமாரி அம்மன் கற்சிலை ஒன்றினைக் கண்டெடுத்தான் என்றும், அந்தக் கட்டை மாதனும் ஊர்மக்கள் சிலருமாகச் சேர்ந்து அக் கற்சிலையை அவ்விடத்திலிருந்து தூக்கிச் சென்று தற்போது கோவிலுள்ள இடத்துக்குத் தெற்கே நெடுங்கேணி என்னும் ஓர் காணித் துண்டில் குடிசை அமைத்து அதனுள் சிலையை ஸ்தாபித்து வழிபட்டு வந்தார்கள் என்றும், அங்கிருந்தே இப்போதுள்ள கோவில் இடத்துக்குக் கொண்டு வரப்பட்டது என்றும் அந்தக் கர்ண பரம்பரை வரலாறு பகர்கின்றது. அப்படியாயின் அந்தப் பழைய கோவில் பெருங்குளத்தின் வடகரையிலே இருந்ததா? அந்தக் கோவிலுக்கு என்ன ஆயிற்று?

இலங்கைச் சரித்திரத்திலே போர்த்துக்கீயர் படையெடுப்பின் பின்னால் நிகழ்த்திய அட்டூழியங்களை அறிந்தவர்கள் அந்தப் பழைய கோவிலுக்கு என்ன ஆகியிருக்கலாம் என்று ஊகிப்பது சிரமமில்லை. ஒன்று அந்தப் போர்த்துக்கீசியப் பதிதர்கள் கோவிலை இடித்துவிட்டு அம்மன் விக்கிரகத்தை எடுத்துக் காட்டினுள்ளே வீசியெறிந்திருக்க வேண்டும். அன்றேல் அந்தக் கிராதகரின் தீய கை தீண்டுவதற்கு முன்பு அம்பாளின் பக்தர் சிலர் இரவோடு இரவாகச் சிலையை எடுத்துக்கொண்டுபோய் நொச்சி ஆவரம் புதரினுள் மறைத்துவிட்டுப் பின்பு சம்பந்தப்பட்ட பக்தர்கள் இறந்துபோகச் சிலையும் காலத்தால் மறக்கப்பட்டிருக்க வேண்டும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் மறைக்கப்பட்ட அம்மன் சிலையானது பத்தொன்பதாம் நூற்றாண்டிலே கட்டைமாதனாற் கண்டு பிடிக்கப்பட்டு பெருங்குளத்தின் தென்கரைக்குக் கொண்டு வரப்பட்டது. குடிசையில் வீற்றிருந்த அம்பாள் தன் இருப்பிடத்திலே திருப்தி கொள்ளாதவளாகி புங்குடுதீவைச் சேர்ந்த

காசித்தம்பி என்ற வேளாள வள்ளலின் உள்ளத்திலே புகுந்து தனக்குப் புதியதோர் திருக்கோவிலை அமைக்கச் செய்தாள். பதினெட்டாம் நூற்றாண்டு பத்தொன்ப தாவதோடு மயங்கிய காலத்திலே காசித்தம்பி வள்ளல் கோவில். தற்போதுள்ள இடத்தில் அறுபது பரப்புக் காணியை வாங்கி அம்பாளுக்கு மான்யமாக வழங்கி, அதிலே கல்லினாலும் சுண்ணாம்பினாலும் சிறு கோவில் எழுப்பி, அங்கே நொச்சி ஆவரம் புதரினுள் கண்டெடுக்கப்பட்ட அம்மன் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்து மக்கள் வழிபாட்டுக்குத் தேவையான ஒழுங்குகளை அமைத்தார். அன்று தொடக்கம் இன்றுவரை வேலணை கிழக்குப் பெருங்குளத்தின் தென்கரையிலே ஸ்ரீ முத்துமாரி அம்பாள் நித்தம் தவம் புரிந்து நிற்கின்றாள். எனவே, நாம் காணும் கோவிலுக்கு வயது இருநூறு என்று சரித்திரோக்தமாகச் சொல்லலாம். அதற்கு முற்பட்ட வரலாற்றின் ஆதியைக் கண்டு நிர்ணயிக்க முடியாதவாறு பழைமை யென்னும் பனித்திரை மறைத்து நிற்கின்றது.

இந்த இருநூறு வருடகாலமாக அம்பாளின் திருக்கோவில் பல மாறுதல்களை ஏற்று வளர்ச்சியுற்று வந்துள்ளது.

காசித்தம்பி வள்ளல் கட்டிய கோவில் எண்பது ஆண்டுகள் வரையில் நிலைபெற்று நின்றது. அதன்பின் 1875ஆம் ஆண்டளவிலே **யாதவராயர் இராம நாதர்** என்னும் வள்ளல் அதை இடித்துவிட்டு அதே இடத்தில் தூபி அர்த்தமண்டபம், சபாமண்டபம். மாமண்டபம் ஆகியவை அடங்கிய புதிய கோவிலை எழுப்பினார்.

கல்லும் சுண்ணாம்பும் சேர்த்துக் கட்டிட கட்டிடமாக இருந்தபோதிலும் கூரைகள் ஓலையினாலே வேயப்பட்டிருந்தன. இந்தக் குறையைப் பின்பு 1885 - 1890 ஆம் ஆண்டளவிலே **கதிர்காமர் ஆறு முகத்தார்** என்னும் வள்ளல் தீர்த்து வைத்து ஓடுகள் போடுவித்ததுமன்றி கொடிஸ்தம்ப மண்டபம் ஒன்றும் கட்டினார்.

அக்காலத்திலே **வைரமுத்தர்** என்னும் வள்ளல் யாக மண்டபம் ஒன்றை அமைத்தார்.

வேலணையூர் **விஸ்வகர்ம குல திலகர்கள்** வசந்தமண்டபம் ஒன்றை அமைத்து அம்பாளுக்குக் காணிக்கை யாகச் சமர்ப்பித்தார்கள்.

வேலணையூர் **செட்டியபுலத்துப் பரதகுல திலகர்கள்** குறையாகக்கிடந்த சுற்றுமதிலைப் பூர்த்தி செய்ததுமல்லாமல் புதிய துவஜ ஸ்தம்பம் ஒன்றையும் அமைத்து அம்பாள் காணிக்கையாக வழங்கினார்கள்.

**கந்தர் வைரவநாதர்** என்னும் வள்ளல் கட்டுத்தேர் ஒன்றை அமைத்து அம்பாளுக்கு வழங்கினார்கள்.

பின்பு 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே, 1900 ஆம் ஆண்டு காலப்பகுதியில் S. மருதையனார் என்னும்

பெரியார் கோவிலின் முன்புறமுள்ள கிணறை கட்டிக்கொடுத்ததுடன் கோவிலின் தென்புற வீதியில் பலஇனப் பூக்களைத் தரும் நந்தவனத்தையும் ஆக்கிக் கொடுத்துள்ளார்.

1910 ஆம் ஆண்டு அளவிலே ஐயம்பிள்ளை கார்த்திகேயபிள்ளை என்னும் வள்ளல் முத்து மாரியம்மன் திருக்கோவிலின் வடமேற்கு வீதியிலே சுப்பிரமணிய சுவாமி கோவிலும் சனீஸ்வரன் கோவிலும் அமைத்து அம்மன் கோவிலைப் பெருப்பித்ததுமன்றி 1915 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 25 ஆம் திகதியளவில் தர்மசாதனம் பண்ணி **"ஆலம்புலம்"** என்ற பெயருடைய மூன்று துண்டுக் காணிகளையும் மான்யமாக வழங்கினார்.

1930 ஆம் ஆண்டளவிலே யாதவராயர் இராமநாதர் கட்டிய கோவிலை இடித்துவிட்டு ஊர்ப் பொதுமக்கள் சேர்ந்து **இராமலிங்க உடையார்** தலைமையிலே புதிய கோவில் ஒன்றைக் கட்டி எழுப்பினார்கள். கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், சபா மண்டபம், மாமண்டபம், பலிபீடம் ஆகிய சகலதும் வெள்ளைக்கற் திருப்பணியாக அமைக்கப்பட்டன. இந்தத் திருப்பணி வேலைகளிலே முன்னின்று உழைத்து வானத்து நட்சத்திரம் போல் விளங்கிய **திருத்தொண்டன் "பிள்ளையான்"** ஆற்றிய அரும் பணியானது பொன்னெழுத்தினாற் பொறிக்கப்பட வேண்டியதாகும். மேற்தூபி வேலைக்குத் தேவையான செங்கற்களை பூத்துத்தம்பி என்னும் வள்ளல் பெற்றுக் கொடுத்தார். திருப்பணி வேலைகள் யாவும் பூர்த்தியாகி 1936 ஆம் ஆண்டளவில் கும்பாபிஷேகம் நடந்தது.

1936 ஆம் ஆண்டளவில் **அ. சிவகுருநாதன்** என்னும் வள்ளல் தேர்முட்டியையும், அதன்பின் **காசிலிங்கம்** என்னும் வள்ளல் கோபுரவாசல் வெளிமண்டபத்தையும் கட்டினார்கள். **திருத்தொண்டர் க. தில்லையம்பலம்** உள்வீதிக்குச் சீமெந்து நிலம் அமைத்தார்.

1938 ஆம் ஆண்டளவில் திருத்தொண்டர் பிள்ளையான் வெள்ளைக்கற் திருப்பணியினால் பிள்ளையார் கோவிலை அமைத்து முடித்தார். அடுத்த பத்து வருஷத்திலே உள்வீதி மண்டபமும் அமைத்து, மடைப்பள்ளியும், வாகன சாலையும் கட்டி இவை யெல்லாவற்றின் கூரைகளையும் ஓட்டினால் வேய்ந்து திருப்பணியை நிறைவெய்தச் செய்தார்.

1948 ஆம் ஆண்டளவில் **மெய்யடியார் செல்லப்பாச் சுவாமி** அவர்கள் தெப்பக்குளம் அமைத்து, நால்வர் மடம் கட்டி, அந்த மடத்திலே நடராஜப் பெருமான் பூசையறையும் அமைத்து அம்பாள் சந்நிதானத்தைப் பொலிவுறச் செய்தார்.

1950 களில் காசிலிங்கம் என்னும் வள்ளல் தனது திருவிழாவுக்கு இந்தியாவிலிருந்து திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளை குழுவினரை அழைத்து கச்சேரி நடாத்தியமையும் நினைவு கூரத்தக்கது.

1951 ஆம் ஆண்டிலே மும்மணி களாகிய திரு. க. சோமசுந்தரப்புலவர் அவர்களும் பண்டிதமணி பிரம்மசிறீ சு. நவநீதகிருஷ்ண பாரதியார் அவர்களும் வித்துவசிரோமணி பிரம்மசிறீ சி. கணேசையர் அவர்களும் சில தோத்திரங்களைச் செய்துள்ளார்கள். இவை அச்சில் வெளிவந்துள்ளன. 1973 இல் தேர்த்திருப் பணிச் சபையால் வெளியிடப்பட்ட வேலணை பெருங்குளம் சிறீமுத்துமாரி அம்பாள் **"புதிய தேர்"** என்ற நூலில் சைவத்தமிழ் அறிஞர் ஸ்ரீமத். ச. மகாலிங்கம் அவர்கள் (முன்னைநாள் வேலணைக் கிராம விதானையார்) இதுபற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இற்றைக்கு 46 வருடங் களுக்கு முன்பு நயினை வாசி சைவத்தமிழ் பேராசான் பண்டிதர் சிறீமான் ச. நா. கந்தையா அவர்கள் பக்திரச கீர்த்தனங்கள் சில பாடியுள்ளார். இவையும் அச்சில் வெளியிடப்பட்டது.

1960 ஆம் ஆண்டு பெருங்குளம் முத்துமாரி அம்மன் திருவிழா காலத்தில் கோவிலின் உட்புற வெளிப்புற சுகாதார கருமங்களுக்கும் ஏனைய கருமங்களுக் குமாக ஒரு தொண்டர் சபை அமைக்கப்பட்டது. இத் தொண்டர் சபை அன்றிலிருந்து இன்று வரை திருவிழாக் கால கருமங்களுக்கு உதவி புரிந்து கொண்டு வருகின்றது.

திரு. கா. பொ. தர்மலிங்கம் அவர்களின் மூதாதையர்கள் தெற்கு. சிலுந்தாவில் குறிப்பிட்ட பரப்பு வயற்காணியை அம்பாளுக்கு தர்மசாதனம் செய்திருந்தார்கள். அக்காணியை அவர்களின் சந்ததியினர் பயிர் செய்து வருமானத்தின் ஒரு பகுதியை அம்பாளுக்குக் கொடுத்து வந்தனர். 1960ஆம் ஆண்டு திரு. க. வல்லிபுரம் அவர்களின் தலைமையில் உள்ள அறங்காவலர் சபையினர் அக்காணியில் பயிர்ச்செய்கை செய்யும் நோக்கத்தோடு சென்றனர். இவர்களின் நடவடிக்கையை அறிந்து கொண்ட திரு. தர்மலிங்கம் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்ததுடன் இவர்களுக்கு எதிராக ஊர்காவற்றுறை மாவட்ட நீதிமன்றில் வழக்குத் தொடர்ந்தார். நீதிமன்றம் அவ் அறங்காவலர் சபையினருக்கு அழைப்பாணை அனுப்பி நீதிமன்றத்திற்கு அழைத்து விசாரணை செய்தது. நீதிமன்ற விசாரணையின் பின் இவர்களை சட்டபூர்வமான அறங்காவலர் சபையினர் இல்லை என தீர்ப்பளித்தது. இதன் அடுத்த நடவடிக்கையாக இவ்வாலயத்திற்கு ஒரு சட்டபூர்வமான அறங்காவலர் சபையை தேர்வு செய்யும்படி உத்தரவிட்டது. இதன்படி திரு. O. A. துரையப்பா அவர்கள் தலைமையில் அக்காலத்தில் காரியாதிகாரியாகவிருந்த திரு. S. சிவஞானம், திரு. வ. நவரத்தினம் ஆகியோரை 1962 ஆம் ஆண்டு ஆலயத்திற்கு அனுப்பி வழிபடுவோரை அழைத்து ஒரு அறங்காவலர் சபையை தெரிவு செய்யும்படி நீதிமன்றம் உத்தரவிட்டது.

நீதிமன்ற உத்தரவுக்கமைய O. A. துரையப்பா அவர்கள் வழிபடுவோரை ஆலய முன்றலுக்கு அழைத்து ஒரு அறங்காவலர் சபையை தெரிவு செய்தார்.

1. திரு. க. தில்லையம்பலம் - தலைவர்
2. திரு. சோ. கந்தையா(ஆசிரியர்) - செயலாளர்
3. திரு. ம. செல்லத்துரை - பொருளாளர்

இம் மூவர் உட்பட 25 பேர் கொண்ட நிர்வாக சபையும் தெரிவு செய்யப்பட்டது. O. A. துரையப்பா தலைமையில் உள்ள மூவர் கொண்ட குழுவினரால் யாப்பு ஆக்கப்பட்டு ஊர்காவற்றுறை நீதிமன்றிற்கு அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது. யாப்பு முறைக்கு அமைய வருடத்திற் கொருதடவை அறங்காவலர் சபை கூட்டம் கூட்டப்பட வேண்டும் எனவும், பிரதிநிதித்துவம் பின்வருமாறு அமையவேண்டுமெனவும் அறிவுறுத்தப்பட்டது.

1. கொடியேற்றத் திருவிழா – கோவில் கணக்கு பொதுவானது
2. இரண்டாம் திருவிழா – ஒரு பிரதிநிதி
3. மூன்றாம் திருவிழா – ஒரு பிரதிநிதி
4. நான்காம் திருவிழா – ஒரு பிரதிநிதி
5. ஐந்தாம் திருவிழா – ஒரு பிரதிநிதி
6. ஆறாம் திருவிழா – ஒரு பிரதிநிதி

ஏழாம் திருவிழா – ஒரு பிரதிநிதி
எட்டாம் திருவிழா – நான்கு பிரதிநிதிகள்
ஒன்பதாம் திருவிழா – நான்கு பிரதிநிதிகள்
பத்தாம் திருவிழா – நான்கு பிரதிநிதிகள்
பதினோராம் திருவிழா – ஒரு பிரதிநிதி
பழைய மூன்றாம் திருவிழா – ஒரு பிரதிநிதி
பொது பிரதிநிதிகள் – ஐந்து
மொத்தம் – இருபத்தைந்து பிரதிநிதிகள்

இந்த நியமப்படி வருடாந்தம் தெரிவுகள் நடைபெற வேண்டும் என்றும் இவற்றை நீதிமன்றத்திற்கு அறிக்கையாக சமர்ப்பிக்க வேண்டும் என்றும் தெரிவுக் குழுவினரால் நீதிமன்றிற்கு அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது.

16 - 08 - 1967 ஆம் ஆண்டு அன்னையின் சந்நிதியில் வவுனியா மேலதிக அரச அதிபர் திரு. செ. சிவஞானம் அவர்களின் தலைமையில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. இக்கூட்டத்திற்கு தீவுப்பகுதியின் அப்போதைய பாராளுமன்ற உறுப்பினர் திரு. வ. நவரத்தினம், கிளிநொச்சி பாராளுமன்ற உறுப்பினர் பண்டிதர் கா. பொ. இரத்தினம், திரு. நா. த. சிவஞானம் (வழக்கறிஞர்), திரு. க. சதாசிவம், தீவுப்பகுதியின் காரியாதிகாரி திரு. சு. விநாயகலிங்கம் முதலானவர்களும் அன்னையின் அடியார்களும் சமூகமளித்திருந்தனர். ஆலயத்திற்கு திரு. கந்தர் வயிரவநாதர் அவர்களால் கட்டிக் கொடுக்கப்பட்ட ஆலயத்தின் முதலாவது சித்திரத்தேர் (கட்டுத்தேர்) பழுதடைந்து போனபின் அம்பாள் வீதியின் தென்மேற்கு மூலையில் உள்ள பிள்ளையாருக்கென்று தொண்டன் பிள்ளையானால் பிடி அரிசி எடுத்துக் கட்டப்பட்ட சகடைத்தேர் அம்பாளின் பாவனைக்கு விடப்பட்டது. நாற்புதாண்டு கால பாவனையின் பின் இத்தேரும் பழுதடைந்தமையால் அம்பாளுக்கு புதிய சித்திரத் தேர் ஒன்று அமைக்கப்பட வேண்டும் என்று மேற்படி கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

அதன் பேரில் உருவாக்கப்பட்ட தேர்த் திருப்பணிச்சபைக்குப் பின்வருவோர் நியமிக்கப் பட்டனர்.

கௌரவ போசகர்கள் :

1. திரு. வ. நவரத்தினம் (பா. உ. தீவுப்பகுதி)
2. பண்டிதர். கா. பொ. இரத்தினம் (பா. உ. கிளிநொச்சி)

கௌரவ ஆலோசகர் :

திரு. செ. சிவஞானம் (மேலதிக அரசாங்க அதிபர்)

தலைவர் :

திரு. S. விநாயகலிங்கம் (காரியாதிகாரி, – ஊர்காவற்றுறை)

உபதலைவர் :

திரு. சி. இராஜரத்தினம் (ஆசிரியர்)

செயலாளர் :

திரு. ச. மாணிக்கவாசகர் (ஆசிரியர்)

இணைச்செயலாளர் :

திரு. வ. சண்முகராசா

தனாதிகாரி :

திரு. வே. பி. கந்தையா

இவர்களுடன் அறங்காவலர்சபை உறுப்பினர்கள் உட்பட 45 நிர்வாகசபை அங்கத்தவர்களும் தெரிவு செய்யப்பட்டனர்.

மேற்படி சபை கௌரவ ஆலோசகர் திரு. செ. சிவஞானம் தலைமையில் அவரது வீட்டில் கூடிய கூட்டத்தில் திருநெல்வேலியைச் சேர்ந்த 'ஆறுமுகம் சிற்பாலய' பிரதம சிற்பி திரு. ஆறுமுகம் சீவரத்தினம் தலைமையிலான குழுவி னரைக் கொண்டு தேர் உருவாக்கப்படல் வேண்டுமெனவும் அதற்கு நிதி சேர்க்கப்படல் வேண்டுமெனவும் தீர்மானிக்கப் பட்டது. 1970 ஆம் ஆண்டு தை 14 இல் திரு. சிவஞானம் அவர்களது இல்லத்தில் வைத்து திருப்பணிச்சபையினர் சிற்பியுடன் கலந்தாலோசனை செய்தனர். திரு. சீவரத்தினம் அம்பாளுக்கு அழகிய சித்திரத்தேரை உருவாக்கித் தரும் வேலையைப் பொறுப்பேற்பதற்கு இணக்கம் தெரிவித்தார். 1970 ஆம் ஆண்டு அம்பாள் கோவில் கொடியேற்ற விழாவின் போது திரு. செ. சிவஞானம் அவர்கள் சித்திரத்தேர் நாள் வேலையைத் தொடக்கி வைத்தார். நிதி சேர்ப்பும் தேர் வேலைகளும் தொடர்ந்து நடைபெற்றது.

பிரமாதீசவருடம் ஆவணி இருபத்து இரண்டில் (07 - 09 - 1973) சித்திரத் தேர் வெள்ளோட்டம் நடைபெற்றது. இதையொட்டி "வேலணை பெருங்குளம் ஸ்ரீ முத்துமாரி அம்பாள் புதியதேர்" எனும் மலர் வெளியிடப்பட்டது. இம்மலர் இப்புதிய தேரை அட்டைப்படமாகக் கொண்டுள்ளது. பிரமாதீச வருடம் ஆவணி இருபத்தேழு (12 - 09 - 1973) தேர்த்திருவிழாவன்று பிரம்மஸ்ரீ ஐ. கைலாசநாத குருக்கள் அவர்களால் இந்நூல் வெளியிட்டு வைக்கப்பட்டது.

இதே காலப்பகுதியிலேயே பழுதடைந் திருந்த சகடைத்தேரும் புனர்நிர்மாணம் செய்யப்பட்டது. 1973 ஆம் ஆண்டு தொடக்கம் பிள்ளையார் இத்தேரிலும் முருகப்பெருமான் சிறிய சகடைத் தேரிலும் அம்பாள் புதிய சித்திரத் தேரிலும் என மூன்று தேர்களில் வீதிவலம் வருகின்றனர்.

தேரின் இருப்பிடமாக தேர் பாதுகாப்பு மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

முத்துத்தம்பி இராசம்மா குடும்பத்தினரின் புதல்வன் அமரர் முத்துத்தம்பி பஞ்ச லிங்கம் அவர்களால் 1969 ஆம் ஆண்டளவில் சண்டேஸ்வரர் சிற்றாலயம் அம்பாள் சந்நிதானத்தில் அமைத்துக் கொடுக்கப்பட்டது. வர்த்தக பிரமுகர் திரு. க. சண்முகம்பிள்ளை அவர்களால் வடக்கு வீதியில் ஒரு பெரிய பூந்தோட்டம் அமைத்துக் கொடுக்கப்பட்டது. அத்துடன் 1970 ஆம் ஆண்டளவில் மகா மண்டபத்தில் சிற்றாலயம் அமைத்து செப்பினாலான நடேசர் விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அமரர்கள் குமாரசுவாமி செல்லம்மா குடும்பத்தினரால் நவக்கிரக சிற்றாலயம் அமைத்துக் கொடுக்கப்பட்டது.

1969 ஆம் ஆண்டு அறங்காவலர் சபை தெரிவு நடைபெற்றது.

1. திரு. க. தில்லையம்பலம் - தலைவர்
2. திரு. பொ. நடராசா - செயலாளர்

இவர்கள் உட்பட இருபத்தைந்து நிர்வாக சபை உறுப்பினர்களும் தெரிவு செய்யப்பட்டனர்.

மேற்குறித்த அறங்காவலர் சபை தெரிவை ஆட்சேபித்து முன்னைய அறங்காவலர் சபையிலுள்ள ஒரு பிரிவினர் யாழ் மாவட்ட நீதிமன்றில் ஒரு வழக்கு தாக்கல் செய்தனர். இவ்வழக்கு 1982 ஆம் ஆண்டு வரை நடைபெற்று மாவட்ட நீதிமன்றால் பொருளாளரால் கணக்கு வழக்கு அறிக்கை சமர்ப்பிக்கப்பட வேண்டும் எனவும், புதிய அறங்காவலர் சபை தெரிவு செய்யப்பட வேண்டும் எனவும் தீர்ப்பளிக்கப்பட்டது. யாழ் நீதிமன்ற உத்தரவுப்படி ஊர்காவற்றுறை பதிவாளரை ஆலயத்திற்கு அனுப்பி வழிபடுவோர், அங்கத்தவர்களை சேர்த்து தெரிவு நடத்தப்படல் வேண்டும் எனவும் பின்வரும் யாப்பு முறைப்படி நிர்வாகசபை தெரிவு செய்யப்பட வேண்டும் எனவும் உத்தரவிடப்பட்டது. (யாப்புக்கமைய) பிரதிநிதித்துவம் பின்வருமாறு அமைய வேண்டுமெனவும் உத்தரவிடப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| 1. | கொடியேற்றம் | – | பொதுவானது (கோவில் கணக்கு) |
| 2. | இரண்டாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 3. | மூன்றாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 4. | நான்காம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 5. | ஐந்தாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 6. | ஆறாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 7. | ஏழாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 8. | எட்டாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 9. | ஒன்பதாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 10. | பத்தாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| 11. | பதினோராம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| | பழைய மூன்றாம் திருவிழா | – | 02 பிரதிநிதிகள் |
| | பொது பிரதிநிதிகள் | – | 03 பிரதிநிதிகள் |
| | மொத்தம் | – | 25 பிரதிநிதிகள் |

மேற்படி கூட்டம் நீதிமன்ற உத்தரவுப்படி கூட்டப்பட்டது.

1. திரு. வே. பி. கந்தையா - தலைவர்
2. திரு. ச. மாணிக்கவாசகர் - செயலாளர்

இவர்கள் உட்பட இருபத்தைந்து நிர்வாக சபை உறுப்பினர்களும் தெரிவு செய்யப்பட்டனர்.

1984, 85, 86 ஆம் ஆண்டுகளில் தெரிவு செய்யப்பட்டோர் விபரம்

1. திரு. வ. ஐயாத்துரை - நிர்வாகத் தலைவர்
2. திரு. வா. தவச்செல்வம் - உபதலைவர்
3. திரு. ச. பாலசுப்பிரமணியம் - செயலாளர்
4. திரு. க. நவரத்தினம் - பொருளாளர்
5. திரு. பொ. மாசிலாமணி - மனேச்சர்

இவர்கள் உட்பட 25 பேர் கொண்ட நிர்வாக சபையும் தெரிவு செய்யப்பட்டது. திரு. வ. ஐயாத்துரை அவர்களை தலைவராகக் கொண்ட நிர்வாக சபையினரால் ஆலயம் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு கொடித்தம்ப மண்டபம், வசந்த மண்டபம், வடமேற்கு உள்வீதி முருகமூர்த்தி, சிற்றாலயம் உட்பட அனைத்தும் பூரணமாக புனர்நிர்மாணம் செய்யப்பட்டு 1986 ஆம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் நடைபெற்றது. நிர்வாக சபையால் கும்பாபிஷேக மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது.

ஆலயத்திற்கு இராசகோபுரம் அமைக்கப்பட வேண்டுமென 06 - 08 - 1989 இல் திட்டம் முன் வைக்கப்பட்டு. 03 - 09 - 1989 இல் இராசகோபுர திருப்பணிச்சபை அமைக்கப்பட்டது.

1. திரு. ந. ஜெகநாதன் – தலைவர்
2. திரு. ச. மாணிக்கவாசகர் – செயலாளர்
3. திரு. ச. கனகசபாபதி – பொருளாளர்
4. திரு. S. P. சாமி } போசகர்கள்
5. திரு .S. சடாட்சர சண்முகதாஸ் (உ. அ. அ) } போசகர்கள்

தலைவர், செயலாளர், பொருளாளர் உட்பட இருபத்தைந்து பேர் கொண்ட நிர்வாக சபையும் தெரிவு செய்யப்பட்டது.

இராஜகோபுர திருப்பணிச்சபையின் முயற்சியினால் 1990 ஆம் ஆண்டு பாரிய கோபுர அத்திவாரம் தோண்டப்பட்டு அமரர் தொண்டர் ச. வேலாயுதபிள்ளை அவர்களினால் அடிக்கல் நாட்டப்பட்டது.

இனப்பிரச்சனை, வன்செயல்கள் காரணமாக 1991 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் (18 - 10 - 1991) தீவக மக்கள் யாழ் நகரம் நோக்கி இடம் பெயர்ந்தனர். அன்றிலிருந்து பூசைகள் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டன. இடம் பெயர மறுத்து அம்பிகையை தஞ்சமடைந்திருந்த அடியார்கள் அம்பாளுக்கு விளக்கு வைத்து பொங்கல் பொங்கி வழிபட்டனர்.

1996 ஆம் ஆண்டு சித்திரை மாதத்தின் பின் மீண்டும் மக்கள் தமது இருப்பிடங்களுக்குத் திரும்பினர். அதன்பின் தீவகத்தின் நிர்வாக தலைமையகமாக ஆலயசூழல் மாறியது. இன்னல்கள் பல ஏற்பட்ட போதும் ஆலயத்தில் துர்ப்பாக்கிய சம்பவங்கள் ஏதும் நடைபெறாமல் ஆலயம் பாதுகாக்கப்பட்டமை எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. இவ்வாலயம் அவ்வாறு நடைபெறாமல் இருந்தமை அம்பிகையின் பெருமையன்றோ.

1996 ஆம் ஆண்டில் ஊர் திரும்பிய மக்களாலும் கொழும்பு வாழ் அடியார்களின் பங்களிப்போடும், திரு. க. சரவணநாதன் தலைமையில் 01 - 11 - 1996 இல் கும்பாபிஷேகம் நடைபெற்று நித்திய பூசைகள் ஆரம்பமாகின. 1997ஆம்

ஆண்டிலிருந்து வருடாந்த மகோற்சவமும் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இவ்வாண்டில் இருந்து 12 திருவிழாக்களுக்கும் அன்னதானம் வழங்கும் நடைமுறை ஆரம்பிக்கப்பட்டு தொடர்ந்து நடைபெற்றுவருகின்றது.

1997, 1998, 1999, 2000 ஆம் ஆண்டுக்குரிய பரிபாலனசபைகளில்

திரு. க. சரவணநாதன் – தலைவர்

திரு. வா. தவச்செல்வம் – உபதலைவர்

திரு. ஐ. ரதீஸ்வரன் – செயலாளர்

திரு. ஆ. சிவராசா – முகாமையாளர்

திரு. சு. சுந்தரலிங்கம் – தனாதிகாரி

இவர்கள் உட்பட 25 பேர் கொண்ட பரிபாலனசபையும் தெரிவுசெய்யப்பட்டது. இப்பரிபாலன சபையின் ஒத்துழைப்புடன் ஒன்பதாம் திருவிழா "படல் சப்பரத்துக்குரிய சகடையை" ஒன்பதாம் திருவிழா உபயகாரர்கள் செய்து கொடுத்துள்ளனர். எவர்சில்வரினாலான புதிய கொடித்தம்பத்தை இரண்டாம் திருவிழா உபயகாரர்கள் செய்து கொடுத்துள்ளனர். உள்வீதி கூரைத்திருத்தங்களும் 1997 - 2000 ஆம் ஆண்டு காலப்பகுதியில் 32' உயரத்தில் ஓர் நீர்தாங்கி அமைத்து ஆலயத்துக்கும் அன்னதான மடத்திற்கும் நீர் வழங்கியும், சப்பற கொட்டகை அமைத்து இன்னும் பல திருப்பணிகளும் மேற்கொள்ளப் பட்டமை குறிப்பிடத்தக்கது.

2002 ஆம் ஆண்டு மீண்டும் கோபுர திருப்பணி பற்றி ஆராயப்பட்டு புதிதாக இராஜகோபுர திருப்பணி சபை ஒன்று சம்பிரதாயபூர்வமாக அமைக்கப்பட்டது.

திரு. ந. ஜெகநாதன் – தலைவர்

திரு. க. சரவணநாதன் – உபதலைவர்

திரு. க. நவரத்தினம் – செயலாளர்

திரு. ச. கனகசபாபதி – பொருளாளர்

திரு. S. P. சாமி<br>திரு. இரத்தினம் – பிரதேச செயலாளர் } போசகர்கள்

தலைவர், செயலாளர், பொருளாளர் உட்பட 25 பேர் கொண்ட செயற்குழு உறுப்பினர்களும் தெரிவு செய்யப்பட்டனர்.

18 - 08 - 2002 இல் வரலாற்றுப் புதுமையாக செட்டிபுலம் கடலில் எழுநூறு அடி நீள தேர்க்கயிறு கரையொதுங்கியது. திங்கள் காலை கடலுக்குச் சென்ற செட்டிபுல மீனவர்கள் நடுக்கடலில் பாரிய பொருள் ஒன்று கரையை நோக்கி மிதந்து வருவதை அவதானித்து முதலில் அச்சமடைந்த போதும் பின்னர் அவ்விடத்திற்குச் சென்று பார்த்து வடக்கயிற்றைக் கைப்பற்றி கரைசேர்த்தனர். இது பற்றிய தகவல் ஊரினுள் பரவியதும் மக்கள் திரண்டு வந்து பார்த்து அதிசயித்தனர். அவ்வாண்டு இரதோற்சவத்தில் இக்கயிறே வடமாக பயன்படுத்தப்பட்டது.

04 - 09 -2002 இல் அளவெட்டி அருட்கவி வினாசித்தம்பி அவர்களின் ஆலோசனையின் பேரில் புதிய இராச கோபுரத்திற்கு புதிய நிலையம் எடுக்கப்பட்டது. அந்நிலைய அமைப்பு இந்தியா மாமல்லபுரம் சிற்பக் கலைஞர் திரு. C. ஞானமூர்த்தி அவர்களால் உறுதி செய்யப்பட்டது. அவரின் படவரைபுகளுக்கமைய புதிய கோபுரம்

ஏழுதளங்களையும் எழுபத்து மூன்று அடி உயரத்தையும் கொண்டதாக அமைய இருக்கின்றது.

22 - 11 - 2002 இல் தொடங்கிய அன்னதானம் வழங்கும் திட்டம் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் நடைபெறுவதற்கு கொழும்பு வாழ் அடியார்கள் உதவிசெய்து வருகின்றனர். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் சுமார் ஐந்நூறு பேர் இதில் பங்குபற்றிச் செல்கின்றனர். அடியார்களின் திருமண வைபவம், அந்தியேட்டி, திவசம், பிறந்த தினம் ஞாபகார்த்தமாகவும் அன்னதானம் நடைபெறுகின்றது.

04 - 06 - 2003 இல் தொழிலதிபர் திரு. S. P. சாமி அவர்களால் இராஜகோபுர அடிக்கல் இட ஏற்பாடு செய்யப்பட்டது. தவிர்க்க முடியாத காரணத்தால் அடிக்கல், கோபுர திருப்பணிச்சபைத் தலைவர் திரு. ந. ஜெகந்நாதன் அவர்களால் சம்பிரதாயபூர்வமாக இடப்பட்டது. தொடர்ந்து பாரிய அத்திபாரப்பணி நிறைவு செய்து, வெள்ளைக்கல் வேலைகள், கருங்கல் வேலைகள் ஆரம்ப தளவேலைகள் என்பன தொடர்ந்து நடைபெறுகின்றன.

இக்கோவில் திருவிழாவுக்கு முதல் நாளே யாழ்நகர், கரம்பொன், நாரந்தனை, மண்கும்பான், அல்லைப்பிட்டி முதலிய தூரக்கிராமங்களிலுள்ள மக்கள் மாட்டு வண்டிகளிலும், கால் நடையாகவும் மோட்டார் வாகனங்களிலும் நெய் வேத்தியத்திற்குரிய பொருட்களைக் கொண்டு வந்து மறுநாள் காலையில் பொங்கல் பொங்கி தேரில் அம்பாள் வீதி வலம் வரும் போது படைத்து பக்திப் பரவசமாய் வணங்குவதை ஒவ்வோர் ஆண்டும் நாம் காண்கிறோம். இதனால் இக் கோவில் வேலணையிலுள்ள எல்லாக் கிராமத்தவர்களுக்கும் பொதுவான ஆதியான கோவிலாக இருக்கின்றது.

இன்றைய காலகட்டத்தில் கிராமம் கிராமமாக உள்ள ஆலயங்கள் பலவும் புதுப்பொலிவு பெற்று வருகின்றன. இதற்குத் தாய் மண்ணைப் பிரிந்து வெளிநாட்டில் புகலிடம் கோரி வாழும் அடியார்களின் பங்களிப்பு பெரிதும் பயன்படுகிறது. எமது வேலணைப் பெருங்குளம் முத்துமாரியம்மன் ஆலயம் யாழ் குடாநாட்டிலுள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க ஆலயங்களில் ஒன்றாகவும், தீவகத்தைப் பொறுத்த வரையில் நயினை நாகபூஷணி அம்மன், காரை நகர் சிவன் கோவில், புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் வரிசையில் முதன்மை பெறுவதாகவும் உள்ளது.

பண்டிதர் பொ. ஜெகந்நாதன் அவர்கள் அம்பாளின் பெயரில் ஊஞ்சல் பாட்டு பாடியுள்ளார். வரகவியாக விளங்கிய அனலை தீவு முத்துக்குமாரப் புலவர் அம்பாள் பெயரில் ஒரு பதிகம் இரட்டை ஆசிரிய விருத்தங்களாகப் பாடியுள்ளார். அதில் சில செய்யுள்கள் முதியோர் சிலர் சொல்ல எனது இளமைக் காலத்தில் கேட்டிருக்கிறேன் என்று சைவத்தமிழ் அறிஞர் திரு. ச. மகாலிங்கம் அவர்கள் கூறியுள்ளார். இன்று அந்தப் பாடல்களில் ஒன்றாவது வாய்ப்பாடமாகச் சொல்ல யார் வருவாரோ அறியோம் !

1989 ஆம் ஆண்டில் எமது ஆலயம் ஆரம்பித்த புலமைப்பரிசில் திட்டம் இன வன்செயல்கள் காரணமாக நின்று போய்விட்டது. ஐந்தாம் ஆண்டு புலமைப்பரிசில் திட்டத்தில் பயன் பெற்ற வேலணை மாணவர்கள் தற்போது மருத்துவராக கடமையாற்றுகின்றனர். பாடசாலை மாணவருக்கு சிவதீட்சை கொடுத்தல், சிவராத்திரி, மகோற்சவ காலங்களில் சமய அறிவுப் போட்டிகள் நடாத்தி பரிசில்கள் வழங்கல் என்பன நடைபெற்று வருகின்றன.

அம்பாள் சந்நிதானத்திற்கு மின் இணைப்புடன் சம்பந்தப்பட்டவற்றை பிரபல வர்த்தகர் அம்பிகா இரத்தினம் செய்து கொடுத்துள்ளார். ஒலி வாங்கி, ஒலி பெருக்கி வசதிகளை பிரபல வர்த்தகர் முருகேசு சிவசம்பு செய்து கொடுத்துள்ளார்.

இராஜ கோபுர திருப்பணி வேலைகளுக்கு நூற்றுஐம்பத்து இரண்டு இலட்ச ரூபாய் (15200000/=) மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. கொழும்பு, ஐரோப்பா, இங்கிலாந்து, கனடா, அமெரிக்கா, அவுஸ்திரேலியா ஆகிய இடங்களிலுள்ள அம்பாள் அடியார்களின் பேருதவியோடு இராஜகோபுர வேலைகள் தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. அம்பாள் அடியார்கள் மேலும் உதவி புரிந்தால் இராஜ கோபுரம் சிறப்பாகவும் விரைவாகவும் நிறைவுறும்.

அம்பாள் திருக்கோவிலோடு சேர்ந்த அரசினர் ஆரம்பப் பாடசாலை 1973 ஆம் ஆண்டு மகாவித்தியாலயமாகத் தரம் உயர்த்தப்பட்டுச் சிறந்த கலைக்கூடமாக விளங்குகின்றது. திருக்கோவில் கலைக்கோவிலுக்கு அணிகலமாக எழிலூட்டுகிறதா, அன்றி கலைக்கோவில் திருக்கோவிலுக்கு அணிகலமாக எழிலூட்டுகிறதா என்று பார்ப்போர் வியப்புறும் வண்ணம் வேலணையூருக்குப் பொலிவூட்டுகின்றன. வடக்கே பெருங் குளத்தின் நீர்ப்பரப்பும் தொண்டர் தில்லையம்பலம் மடமும் கிழக்கே நால்வர் மடமும் தெப்பக்குளமும் அமைந்திருக்க, தெற்கிலே மகாவித்தியாலயக் கலைக் கோவில் தலைநிமிர்ந்து நிற்க, நடுவிலே அம்பாள் சந்நிதி அமைந்திருக்கும் அமைப்பு இலங்கையிலே வேறு எங்கும் காண முடியாத ஒன்றாகும்.

இந்த எழிலுறு வனப்பையும், சாந்தி நிலவும் சுற்றாடலையும் தெய்வம் மணக்கும் சூழ்நிலையையும் பேணிப் பாதுகாத்து வேலணையூரை என்றென்றும் தெய்வம் மணக்கும் கிராமமாக நிலவச் செய்வது அவ்வூர் மக்களாகிய நமது தலையாய கடமையாகும். எமது முன்னோர் அளித்த இந்த அரும் நிதியத்தை எமது பின்னோருக்கு நாம் விட்டு வைக்கும் முதுசொமாகக் கருதுவோமாக.

அம்பிகையின் அருள் பொழியட்டும் !

## ஆலயங்கள்

# வேலணையின் தனித் திரு அன்னம்

*திரு. வ. நவரத்தினம்*

*முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் - ஊர்காவற்றுறை*

"வன்னஞ் செறிவளைக் கைச்சிற காற்றன்
வயிற்றினுள்வைத்
தின்னஞ் சராசர வீர்க்குஞ் சனைத்திரை
தேர்ந்தருத்திப்
பொன்னம் பலத்துளொ ரானந்த வாரிபுக்
காடும்பச்சை
அன்னம் பயந்தன கொல்லாம்பல் லாயிர
வண்டமுமே"

வேலணைப் பதியிலே பெருங்குளத்தின் தென்கரையிலே முத்துமாரி என்னும் மூர்த்தவடிவினளாகத் திருக்கோவில் கொண்டு எழுந்தருளி இருக்கும் அம்பிகையை நினைவு கொள்ளும் பொழுது குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்த மேற்சொல்லிய பாசுரந்தான் மனக்கண் முன் வந்து நிற்கின்றது. இறைவன் பெருமையிலும் பார்க்க ஈஸ்வரியின் பெருமை பெரிதென்று குறிப்பால் உணர்த்துகிறார் முனிவர்.

அம்பிகையை அன்னப் பறவையாகவும் சராசரத்தைக் குஞ்சாகவும் உருவகப் படுத்தும்படி சொல்லுகிறார். அழகிய வளையையுடைய கைகளாகிய சிறகால் தன் வயிற்றினுள் வைத்துப் பாதுகாத்து சராசரம் என்கின்ற தன் பச்சைக் குஞ்சை அணைத்து இரை தெரிந்து உண்ணக் கொடுத்துக் காக்கும் அன்னம் பொன்னம்பலத்தினுள் இருக்கும் ஆனந்தவாரி (இறைவன்) என்று சொல்லப்படுகின்ற வாவியைச் சென்றடைந்து நடனமாடுகின்றதாம். அந்த அன்னம் அன்றோ இந்தப் பல்லாயிரம்

அண்டங்களையும் பயந்த அம்பிகை என்கிறார். அண்டம் - உலகமும் முட்டையும் என்ற சிலேடைப் பொருளில் வந்தது.

அண்ட சராசரங்களையும் படைத்து, அருத்தி காப்பது அம்பிகையாயின், சிவபெருமானுக்கு என்ன வேலை? விநாயகப் பெருமானுக்கு என்ன வேலை? முருகக் கடவுளுக்கு என்ன வேலை? ஆதலாற்றான் போலும் வேலணை கிழக்குக் கிராமத்தில் வாழ்ந்த முன்னோர்கள் தேவியை மட்டும் உபாசனை செய்தனர். சிவனுக்குத் திருக்கோவில் எழுப்பவில்லை. விநாயகருக்குத் திருக்கோவில் எழுப்பவில்லை. முருகனுக்குத் திருக்கோவில் எழுப்பவில்லை. எல்லாவற்றையும் உள்ளடக்கிய பராசக்தியாய், அகிலாண்ட கோடியீன்ற அன்னையாய், ஏரிக்கரையிலே நித்தம் தவம் புரியும் தேவியாக வழிபட்டனர். தமது கிராமத்திலே நோய் நொடி அணுகாமலும், பீடை பிணிகள் வந்துறாமலும், சிறகால் தன் குஞ்சை வயிற்றினுள் வைத்து அணைத்துப் போஷித்துப் பாதுகாக்கும் அன்னப் பறவைபோலக் கிராம மக்களைத் தன் அரவணைப்பில் வைத்துக் காத்து நிற்கும் தெய்வம் நம் அம்பிகை. "**சர்வம் சக்திமயம்**" என்பது வேதத்தின் கூற்று. எனவே ஒரு தனிக் கடவுளாம் அம்பிகையை மட்டும் பிரதிஷ்டை செய்து சைவம் காக்கும் வேலணைக் கிராமத்தின் சமய உணர்வும் மெய்ஞ்ஞானச் செறிவும் பாராட்டற்பாலன.

அதே நேரத்தில் பொறுப்பும் பலவுள. நீராடுவதும் பொன்னூசலாடுவதும், திருத்தேரூர்ந்து பவனி வருவதும் தேவியின் திருவுள்ளத்துக்குகந்த திருவிளையாடல்கள்.

"பண்ணாறு கிளிமொழிப் பாவைநின் திருமேனி
பாசொளி விரிப்பவந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்
தண்ணாறு மல்லற் றுறைச்சிறை யனங்களி
தழைக்குங் கலாமஞ்ஞையாய்ச்
சகலமு நின்றிருச் சொருபமென் றோவிடும்
சதுர்மறைப் பொருள்வெளியிடக்
கண்ணாறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமுங் கத்தூரியும்
கப்புரமு மொக்கக் கரைந்தோடி வாணியும்
காளிந்தி யுங்கங்கையாம்
விண்ணாறு மளவலாய் விளையாடு புதுவைகை
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி
~ கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே"

"தேவீ! நின் திருமேனியினின்றும் பச்சையொளி பரவுதலால் அன்றோ எல்லாப் பொருள்களும் பச்சை நிறம் பெற்று விளங்குகின்றன. நீ நீராடும் படித் துறையிலுள்ள பவளக்கொடிகூட பச்சிளங் கொடியாகத் தோன்றுகிறதே. பருத்த வெண் முத்துக்கள் மரகதம்போல் விளங்கு கின்றனவே. படித்துறை நீர் நிலை முழுவதும் கலாப மயில்போல் காட்சியளிக்கிறது. இதனாற்றானோ சகலமும் நின் திருச் சொரூபம் என்று நான்கு வேதங்களும் ஓலமிடுகின்றன.

கொங்கைகளிலிருந்து கரைந்தோடுகின்ற செஞ்சந்தனக் குழம்பும், கரு நிறமுடைய கஸ்தூரியும், வெண்ணிறமுடைய கர்ப்பூரமும் ஒன்றாக அளவளாவிச் செந்நிறமுடைய சரஸ்வதி நதியும், கருநிறமுடைய காளிந்தி நதியும் (யமுனை நதி), வெண்ணிறமுடைய கங்கை நதியும் சங்கமமாகின்ற திரிவேணி சங்கமத்தை ஒத்த வைகையின் புது வெள்ளத்திலே நீராடி அருள்வாய்".

மார்கழி மாதந்தோறும் வேலணைப் பெருங்குளத்திலே புதுவெள்ளம் பெருக்கெடுத்துத் திருக்கோவிலில் அலைமோதும் காட்சியைக் கண்ணுறும் அடியார்கள் மனத்திலே இந்தப் பாசுரத்தைப் பாடிப் பரவ வேண்டுமென்ற ஆசைதான் மேலோங்கும். அப்படியான திருக்குளம் அமைந்துள்ளது அம்பிகையின் அருள் என்றே சொல்ல வேண்டும்.

அம்பிகையின் இன்னுமொரு திருவிளையாடல் :

"சேர்க்குஞ் சுவைப்பாட லமுதொழுக வொழுகு
                    - பொற்
திருவூசல் பாடியாடச்
சிவபிரான் திருமுடி யசைப்பமுடி மேற்பொங்கு
செங்கணர வரசகிலம்வைத்
தார்க்கும் பணாடவி யசைப்பச் சராசரமும்
அசைகின்ற தம்மனையசைந்
தாடலா லண்டமு மகண்டபகி ரண்டமும்
அசைந்தாடு கின்றதேய்ப்பக்
கார்க்கொந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு
கமழ்நறும் புகைவிண்மிசைக்
கைபரந் தெழுவதுரு மாறிரவி மண்டலம்
கைக்கொள விருட்படலம்வான்
போர்க்கின்ற தொக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்த
                    - கொடி
பொன்னூச லாடியருளே"

எம்பிராட்டி அமிர்தம் ஒழுகுவது போன்ற சுவைதரும் பாடல்களைப் பாடியவாறு திருவூஞ்சல் ஆடிக்கொண்டிருந்தாராம். அந்தப் பாட்டைக் கேட்டும் ஊஞ்சலாட்டத்தைக் கண்டும் பரவசமுற்றவராகச் சிவபிரான் தன் திருமுடியை அசைத்துக் கொண்டாராம். அவர் திருமுடியின் மேல் செங்கண் அரவுகளுக்கெல்லாம் அரசனாகிய ஆதிசேடன் இருக்கின்றானல்லவா? இந்த ஆதிசேடனின் படங்கள் என்கின்ற காடு அதாவது தொகுதியின் மேல் பூமியிருக்கின்றது. எனவே சிவபிரான் தலை அசைக்கவே ஆதிசேடனின் தலை அசைந்தது. அதனால் அகிலம் அதாவது பூமி அசைந்தது. சராசரங்கள் அசைந்தன. அதனால் அண்டங்களும் அண்ட பகிரண்டங்களும் அசைந்தன. மதுரை மாநகரில் வாழ்கின்ற கூந்தலில் மாலைகளை அணிந்த மகளிர் தம் கூந்தலுக்கு இடும் நறும்புகை விண்மிசை எழுந்து ரவிமண்டலத்தை அடைந்து இருட் படலம் போல் மதுராபுரியைப் போர்த்து மறைக்குமாம். அப்படியான மதுராபுரியில் எழுந்தருளியிருக்கும் மடக்கிள்ளையாகிய அம்பிகே! திருப்பொன்னூசல் ஆடியருள்வாயாக.

அம்பிகையின் அருளால் இப்படிப் பாடியாடத் திருவூஞ்சல் இருக்கிறது.

அம்பாளை அலங்காரம் செய்வதற்கு நந்தவனத்திலுள்ள நறுமலர்கள் எல்லாவற்றையும் கொய்து கொணர்ந்த போதிலும், அம் மலர்களை மாலையாகக் கட்டுவதற்கு நார் இல்லாவிட்டால் என்ன செய்வது.

"நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி
ழுண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண்
டேபங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்குங் கடம்பா
டவிப்பசுந் தேனின்பைந்தாட்
பூவுண்டு நாரொன் றிலையாந்
தொடுத்துப் புனைவதற்கே"

கடம்பாடவிப் பசுந்தேன் என்பது அம்பிகையை, அம்பிகையின் பாதங்களாகிய பூக்கள் உண்டு. ஆனால் அவற்றைத் தொடுத்துப் புனைவதற்கு நார் வேண்டும். நார் போலவே தேர் எல்லாம் இருந்தும் திருத்தேர் இன்றேல் நிறைவு இல்லை. திருவிழாவுக்கு நிறைவு கொடுப்பது திருத்தேர். கிராம மக்கள் யாவரும் தோள் கொடுத்தால் அந்த நிறைவும் நெருங்கிவரும் என்பதில் சந்தேகம் இல்லை. அம்பாள் சந்நிதியிலே கலைக்கூடம் இருக்கின்றது.

"கெண்டைச்செருக்குங் குறுநகையு
~ நெட்டயிற்கட்
கெண்டைப் பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமுங்
~ கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப்புகுந்தாள்
நற்பூர வல்லியுமென் னா"

கெண்டைச் செருக்கும், புன்முறுவலும், நெடிய வாள் போன்ற கண்களாகிய கெண்டைமீன் மிளிர்தலும் வாயாகிய முள்ளு முருங்கை மலருமாகிய இவற்றோடு அம்மை கற்பூரவல்லி எனது உள்ளத்திலே வந்து புகவே கலைமகளும் (பூரவல்லி) என் நாவிற் புகுந்தாள் என்கிறார் கவி. அதாவது அம்பிகை திருவருள் உண்டாயின் கல்வியறிவு உண்டாகும் என்கிறார்.

இதை மாணவர்களாகிய இளம் சந்ததியினர் கருத்திற்கொண்டு இந்த அம்பாளின் தேவகோட்டத்தைப் பேணிப் பாதுகாத்துத் திருப்பணிகளில் ஈடுபட வேண்டும். பிராட்டி அருள் பாலிப்பாராக.

*ஆதாரம் :*

*வேலணை பெருங்குளம்*
*ஸ்ரீ முத்துமாரி அம்பாள் "புதிய தேர்"*
*தேர்த் திருப்பணிச் சபை வெளியீடு*



## ஆலயங்கள்

# வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயம் வரலாறும் வளர்ச்சி நிலைகளும்

*திரு. பொன்னம்பலம் அருணகிரிநாதன்*
*தலைவர் (அறங்காவலர் சபை)*

**அறிமுகம் :**

யாழ்ப்பாணக் குடாநாட்டின் தென்மேற்குத் திசையில் அமைந்துள்ள தீவுக் கூட்டங்களுள் லைடன் தீவு முதன்மையானது. இங்கு உலகப் புகழ்பெற்ற இயற்கைத் துறைமுகங்களில் ஒன்றான ஊர்காவற்றுறை உண்டு. இத் தீவுகளுக்கெல்லாம் ஆட்சிபுரியும் மணியகாரன் பதவி வகித்தோர் நிலை கொண்டிருந்த இடம் வேலணையாகும். இதனால் வேலணை தீவுகளுக்கு ஒரு தலைநகர் போல விளங்குகிறது; வேலணை கிழக்கு, மேற்கு என இரு பிரிவுகளை உடையது.

வேலணை மேற்கில் கோயில் கொண்டு எழுந்தருளி அடியவர்களுக்கு எளியவராகி அருள் புரிந்து கொண்டிருக்கிறார் பெரியபுலம் மகாகணபதிப்பிள்ளையார். கோயில் தாபிக்கப்பட்டிருக்கும் தலத்தின் பெயர் பெரியபுலம் என்பதாகும். இதனால் இவர் பெரியபுலம் மகாகணபதிப்பிள்ளையார் என அழைக்கப்படுகிறார்.

போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் காலங்களில் பல சைவக் கோயில்கள் இடித்து அழிக்கப்பட்டன என்பது வரலாறு. அப்பொழுது இக்கோயில் அவர்களது கைவரிசைக்கு அகப்படாமல் முடியோடு நித்திய, நைமித்திய பூசைகள் நடைபெற்று வந்தமையால் **"முடிப்பிள்ளையார்"** என்ற சிறப்புப் பெயரும் இக்கோயிலுக்கு உண்டு. இந்த ஆலயத்தில் தாபிக்கப்பட்ட

உ

# வேலணை மேற்கு
# பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயம்



வேலணை - 8

மூர்த்திக்கு மகாகணபதி என்று கும்பாபிஷேக காலத்தில் நாமகரணம் செய்யப்பட்டதனால் மகாகணபதிப் பிள்ளையார் என்றும் வழங்கப்படுகிறது.

இத்திருக்கோயிலைச் சூழ சமய விசேட நிருவாண தீட்சை பெற்ற சைவர்கள் வசித்து வந்ததனாலும் அச்சைவர்களாலே நித்திய பூசைசெய்யப்பட்டு வந்ததாலும் அவர்களுடைய பரம்பரையினால் தாபிக்கப் பெற்றதனாலும் சைவப்பிள்ளையார் கோயில் என்றும் கர்ணபரம்பரையில் பேசப்படு வதுமுண்டு.

இந்த விநாயகப் பெருமான் **கரசரணாதி** அவயவங்கள் வியக்தமாக தோற்றமளிக்க செய்யப்பட்டிருக்காவிடினும் இம் மூர்த்தியை யாழ்ப்பாணத்து ஊரெழுவிலே **"பெரியவர்"** என்று எல்லோராலும் போற்றப்பட்ட சோம சுந்தரக் குருக்கள் அவர்கள் சுயம்பு மூர்த்திக்கு நிகரானது எனக் குறிப்பிட்டுள்ளார்.

கடந்த மூன்று நூற்றாண்டுகளாக முடிப்பிள்ளையார் ஆலயம் இயங்கி வருகிறது. கர்ணபரம்பரைச் செய்தி களூடாகவும், நொத்தாரிசுமார்களின் சாசனங்கள்மூலமான சான்றுகள் மூல மாகவும் பல செய்திகளை அறியமுடிகிறது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக பிள்ளையார் மேல் பாடப்பட்ட பதிகங்கள், ஊஞ்சல் பாட்டுகள் பல செய்திகளைச் சொல்லி நிற்கின்றன.

(1). இற்றைக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் ஆசிரியர் திரு. வி. கந்தப் பிள்ளை அவர்களால் இயற்றப்பட்ட திருவூஞ்சல் பாடல்கள்.

(2). முல்லைத்தீவு குமிழமுனையைச் சேர்ந்த சரவணமுத்துப் புலவரால் வேலணை மேற்கு மகாகணபதிப் பிள்ளையார் திருப்பதிகம் ஒன்று பாடப்பட்டுள்ளது.

(3). சரவணையைச் சேர்ந்த ஆ. தில்லை நாதப்புலவரினால் பிள்ளையார் பெயரில் திருப்பதிகம் பாடப்பட்டுள்ளது.

இவற்றை நோக்கும் போது ஆலயம் தோன்றி இரண்டொரு நூற்றாண்டுகளின் பின்னர் இவை பாடப்பட்டிருக்கலாம் என ஊகிக்கலாம்.

சைவமும் தமிழும் ஒருங்கே போற்றப்பட்டது வேலணை மேற்கில்தான் என்று கூறப்படுகிறது. இது பெரும் அறிவாளிகளாகத் திகழ்ந்த கந்தப்பு உபாத்தியாயர், தம்பு உபாத்தியாயர், நாகலிங்க உபாத்தியாயர், இராசா உபாத்தியாயர், அப்பாத்துரை உபாத்தியாயர் ஆகியோர் வாழ்ந்த பூமி. யாழ்ப்பாணத்தின் முதல் சைவப்பத்திரிகை **"சைவ சூக்குமார்த்த போதினி"** வேலணை மேற்கு நடராசா அச்சுயந்திரசாலையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. **"நெல்லாவில்"** என்ற இடத்தில் இந்த அச்சு இயந்திரசாலை அமைந்திருந்தது.

பல சந்ததிகளின் திருப்பணி வேலைகளால் இவ்வாலயம் வளர்ந்து நிலைபெற்று நிற்கின்றது என்றால் மிகையாகாது.

**ஆரம்ப காலம் :**

முடிப்பிள்ளையார் ஆலயம் எப்போது யாரால் ஆரம்பிக்கப்பட்டது என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன. வேலணைக்கும் வேதாரணிய ஆதீனத்திற்கும் இடையில் நெருங்கிய தொடர்புகள் இருந்தன. வேலணை மேற்குக் கிராமத்தில் வேதாரணிய ஆதீனத்தைச் சார்ந்த வரணி-கரணவாய், சைவக்குருமார் ஆன்மார்த்தம், பரார்த்தம் என்னும் இருநெறிகளுக்கும் குலகுருவாய் அமைந்து தீட்சை, கோயில் உற்சவம் முதலிய கிரியைகளைச் செய்து வந்தார்கள். இவர்களுள் சந்திரசேகரக் குருக்கள் என ஒருவர் இருந்தார். இவர் முல்லைத்தீவுப்பகுதியில் அமைந்துள்ள கோயில்களுடனும் தொடர்பு கொண்டிருந்தார்.

கோயில்களில் கும்பாபிஷேக கிரியைகளைச் செய்து வந்தவர் இவர். பெரிய புலத்திலுள்ள சுப்பிரமணியர் என்னும் சைவ உத்தமர் ஒருவரை முல்லைத்தீவுக்கு அழைத்துச்சென்று திரும்பிவரும் வழியில் நிழலுக்கு இளைப்பாறிய மரம் ஒன்றின்கீழ் சருகுகளைக்கூட்ட இப்பிள்ளையார் சிலை அங்கு காணப்பட்டது. "சுப்பிரமணியா இதை எடுத்து பெரியபுலத்திலே கொண்டுபோய் தாபிப்போம்" எனக்குருக்கள் சொல்லியபடியே அம் மூர்த்தியை ஒரு சாக்கில் கட்டிக்கொண்டு வந்தார். வரும்வழியில் குருக்களும் சுப்பிரமணியரும் மண்டை தீவுக்குச் சென்று வரவேண்டியிருந்ததால் மண்டைதீவுக்குச் செல்லும் வழியில் ஆலமரத்தடியில் வைத்துவிட்டு மீள அங்கிருந்து வரும்போது பிள்ளையாரையும் தூக்கிக்கொண்டு வந்து சுப்பிரமணியர் தனக்குச் சொந்தமான காணியில் ஒரு ஓலைக்குடிசை அமைத்து பிள்ளையாரை வைத்துப் பூசித்ததாகக் கூறப்படுகிறது.

இதைவிட, சோழநாட்டில் உள்ள திருப்பூண்டியில் இருந்து வந்து வேலணை மேற்கில் வாழ்ந்தவர் பூண்டி மாமுதலியார் என்பவர். இவர் 17 ஆம் நூற்றாண்டில் இங்கு வாழ்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. இவருடைய மூத்த மகள் பெரிய நீலயினார் என்பவர்தான் பிள்ளையாரை வைத்து ஆலயத்தைக் கட்டினார் எனவும் கூறப்படுகிறது. இவருடைய செயற்பாட்டிலும் சுப்பிரமணியம் என்பவர் முல்லைத் தீவிலிருந்து கொண்டுவந்த பிள்ளையாரே இக்கோயிலில் தாபிக்கப் பட்டதாக குறிப்பிடப்படுகிறது. கொண்டு வரப்பட்ட பிள்ளையார் விக்கிரகம் பெரிய நீலயினார் என்பவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. பூண்டிமாமுதலிக்கும் இதற்கும் தொடர்பில்லை; சுப்பிரமணி யருடைய காணியில் அமைக்கப்பட்டது என்று கூறுபவரும் உளர்.

சுப்பிரமணியர் என்பவருக்கு அம்பலவாணர், முருகப்பர், குமாரவேலர் என மூன்று பிள்ளைகள் இருந்தனர். சுப்பிரமணியரின் மனைவி கேணிக் கரையிலுள்ள கந்தர் என்பவரின் மகளாவார்.

இவர் பெரும்பொருள் வசதியுள்ளவராக இருந்தபடியால் மருமகன் சுப்பிரமணி யருடைய இக்கோயிலை சுதையினாலே கட்டுவதற்கு தொடங்கினார். இப்போதுள்ள கருங்கற்கோவிலுக்கு முன்பிருந்த கோவில் இதுவாகும்.

இக்கோயில் அமைந்துள்ள இடம் பரம்பரையாக சைவர்கள் வாழும் பகுதியாகும். சிதம்பரம், கரணவாய், வரணி, காரைநகர், வேலணை மேற்கு சைவர்கள் நெருங்கிய தொடர்புகள் வைத்திருந்தார்கள், வேத, ஆகம, தேவாரங்கள், புராணபடனம், சிவபூசை ஆகியவற்றில் அதிக ஈடுபாடு கொண்டவர்கள். அவர்களுடன் சுப்பிரமணியர் இணைந்து கொண்டார். பிள்ளையாருக்கு முதலாவது பூசகராக திருத்தொண்டு செய்யும் பாக்கியம் இவருக்குக் கிடைத்தது. சைவர்கள் முடிப்பிள்ளையாரின் பூசகர்களாகவும் ஆலயத்தில் தேவார புராணபடனங்கள் ஓதுபவர்களாகவும் விளங்கினார்கள். இதனால் அவர்கள் ஆலய நிர்வாக, நித்திய நைமித்திய பூசைகளில் தம்மை இணைத்துக் கொண்டனர்.

1840 ஆம் ஆண்டு இவ்வாலயத்தில் முதலாவது கும்பாபிஷேகம் நடை பெற்றதாகக் கூறப்படுகிறது. பின்னர் இக்கோவிலின் ஆரம்பக் கர்த்தாக்களி னாலும் பொது மக்களினாலும் பராமரிக்கப்பட்டு வந்தது என்பதை 1880 ஆம் ஆண்டில் முடிக்கப்பட்ட சாசனம் எடுத்துக்காட்டுகிறது.

## இடைக்காலம் :

பொதுமக்கள் முற்று முழுதாக நிருவாகத்தில் பங்குபற்ற ஆரம்பித்தகாலமாக இது அமைந்தது. 1880 இல் இக்கோயிலுக் கான பரிபாலன சபை முதன்முதலாக அமைக்கப்பட்டதெனக் குறிப்பிடப்படுகிறது. இச்செயற்குழுவில் சின்னக்குட்டியர், சண்முகம், கணபதிப்பிள்ளை ஆகியோர் இடம்பெற்றதாக அறியப்படுகிறது. 1902ஆம் ஆண்டு தை மாதம் எழுதப்பட்ட 1702ஆம் இலக்க சாசனப்படி இச்சபை உறுதிப்படுத்தப்பட்டது. இச்சாசனம் நொத்தாரிசு ஐ. அம்பலவாணர் அவர்களால் எழுதப்பட்டது.

1902 ஆம் ஆண்டு கூட்டப்பெற்ற கூட்டத்தில் ஐவர்கொண்ட பரிபாலன சபை தெரிவுசெய்யப்பட்டது.

1. க. அம்பலவாணர் (கந்தப்பு உபாத்தியாயர் மகன்)
2. செ. கனகசபாபதிப்பிள்ளை(இராசா உபாத்தியாயர்)
3. வை. செல்லப்பா
4. சீ. கதிரவேலு
5. நா. முருகர்

இந்தப் பரிபாலன சபையின் காலத்தில் தான் பிள்ளையாரின் ஆலயத்திற்கு கருங்கல்லால் திருப்பணி செய்யவேண்டும் என்னும் முயற்சி ஆரம்பமானது. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆலயத்திற்கு மடப்பள்ளி, யாகசாலை, வசந்தமண்டபம், சுற்றுமதில் சுதையினாலே கட்டப்பட்டன. ஆலயத்திற்குக் காண்டாமணியும் இக்

காலத்தில் பொருத்தப்பட்டது. ஆரம்ப காலத்தில் ஆலயத்தில் சுதையினால் கட்டப்பட்ட மணிக்கூட்டுக் கோபுரம் ஹற்றன் நா. சபாபதிப்பிள்ளை அவர்களால் கட்டப்பட்டது. மணி நாகலிங்க உபாத்தியாயரினால் உபயமாக வழங்கப் பட்டது.

இன்றும் எழுந்தருளி அருள்பாலிக்கும் எழுந்தருளி விநாயகர் விக்கிரகம் இக்காலத்தில் உருவாக்கப்பட்டது ; திரு. க. அம்பலவாணர் அவர்களால் உபயமாக வழங்கப்பட்டது. இதன்பின்னர் 10 தினங்கள் கொண்ட திருவிழாக்கள் நடைபெற்றன.

கடந்த நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் கருங்கல் திருப்பணிக்கென 22 வருடங்கள் நிதி சேகரிக்கப்பட்டது. 1920 இல் ஸ்ரீலஸ்ரீ கை. நவசிவாயக் குருக்கள் தலைமையில் கருங்கல் திருப்பணி ஆரம்பமானது. கோயிலின் கர்ப்பக்கிருகம், சபாமண்டபம், மகாமண்டப வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன. இக்கால கட்டத்தில் வை. பொ. சோமசுந்தரம், க. வைத்தியலிங்கம், படிகலிங்கம் ஆகியோர் பெரும் பங்கு வகித்தனர். 1930 களில் ஆரம்பகாலத்தில் க. வைத்தியலிங்கம், சே. பொன்னையா, மு.குமாரசுவாமி, சே. கந்தையா, நா. சரவணமுத்து ஆகியோர் கருங்கல் திருப்பணியில் பெரும்பங்கு வகித்தனர். பூசகர்களாக ஆரம்பத்தில் சைவர்களும் பின்னர் பிராமணர்களும் இடம் பெற்றனர்.

1938ஆம் ஆண்டு ஸ்ரீலஸ்ரீ தி. கைலாச நாதக் குருக்கள் தலைமையில் கூட்டம் கூட்டப்பெற்று 15 உறுப்பினர்கள் கொண்ட பரிபாலனசபை தெரிவு செய்யப்பட்டது. இதனை 1938 ஆம் ஆண்டு நொத்தாரிசு கா. வினாசித்தம்பி முன்பாக எழுதப்பட்ட சாசனம் உறுதிப்படுத்தப்படுகிறது. பின்வருவோர் பரிபாலன சபையில் இடம்பெற்றனர்.

1. ம. தம்பு
2. சே. பொன்னையா
3. மு. சின்னையா
4. நா. சுப்பிரமணியம்
5. சு. ஏரம்பு
6. மா. கணபதி
7. வே. பேரம்பலம்
8. கு. சங்கரப்பிள்ளை
9. இ. வைத்தியலிங்கம்
10. நா. அமிர்தலிங்கம்
11. ச. திருஞானசம்பந்தர்
12. த. அருளம்பலம்
13. வே. தருமலிங்கம்
14. வ. அம்பலவாணர்பிள்ளை
15. வி. நாகலிங்கம்

இப்பரிபாலன சபைக்கு சிறிது காலம் சே. பொன்னையா தலைவராக இருந்தார். இவர் காலமாக 1940இல் சே. கந்தையா தலைவரானார். 1940 களில் தொடர் திருப் பணிகள் நடைபெற்றன. 1948இல் ஊரெழு சிவஸ்ரீ பாலசந்திரக்குருக்களால் மகா கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இந் நிகழ்வில் சைவக்குருக்கள்மார் பிராமணக் குருக்கள்மார் இடம் பெற்றமை குறிப்பிடத் தக்கதாகும்.

**அண்மைக்காலம் :**

1950 களை அடுத்த காலப்பகுதியில் மீளவும் திருப்பணி வேலைகள் தொடர்ந்தன. 1960இல் உள்வீதிக் கொட்டகைகள் போடப்பட்டன. பொதுமக்கள் பலர் திருப்பணி வேலைகளுக்கு உதவினர். ஆலயத் திருப்பணி வேலைகளில் தொண்டாற்றிய சோ. சீவரத்தினம் அவர்கள் முக்கியமானவர். வீடு வீடாகச் சென்று பிடியரிசி எடுத்து திருப்பணி வேலைகளுக்கு உதவினார். பூந்தோட்டம் அமைப்பதில் பெரிதும் தமது முயற்சிகளை மேற்கொண்டார். ஆலயத்தில் இன்று காணப்படும் தென்னம்பிள்ளைகள் இவரால் நடப்பட்டவையாகும். இவரின் வரிசையில் ஆ. வி. நாகலிங்கம் அவர்களும் மனேஜராக கடமையாற்றி திருப்பணி வேலைகளுக்கு உதவினார். பிடியரிசித் திருப்பணியில் திரு. சிவலை கந்தையர் என்பவரும் முக்கியம் பெற்று விளங்கினார். சிறிய பனையோலையால் செய்யப்பட்ட குட்டான்களில் வீடு வீடாகச் சென்று அரிசி பெற்றுத் திருப்பணிக்கு உதவினார்.

1960இல் பரிபாலனசபையில் திரு. நா. சரவணமுத்து அவர்கள் தலைவராகவும் க. சண்முகலிங்கம் தனாதிகாரியாகவும் திரு. ந. கணேசபிள்ளை அவர்கள் செயலாளராகவும் கடமையாற்றினர். இவர்களுடைய காலத்தில் ஆலயம் புதுப்பொலிவு பெற்றது. மிக நீண்ட காலமாக ஆலய வளர்ச்சியில் அக்கறைகொண்டு உழைத்தவர் மு. குமாரசாமிப்பிள்ளை அவர்கள். இவரது முயற்சியினால் 1950இல் தேர் ஒன்று அமைக்கப்பட்டது. 1969இல் மகாகும்பாபிஷேகம் சிவஸ்ரீ வைத்தியநாதக் குருக்கள் அவர்களால் நிறைவேற்றப்பட்டது.

தொடர்ந்தும் திருப்பணி வேலைகள் நடைபெற்றன. ஆலய கோபுர வாசலின் இடப்பக்கத்தில் புதிய மணிக்கூட்டுக் கோபுரத்திற்கு அத்திவாரம் இடப்பட்டது. இது பொ. சண்முகநாதன் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. சேதுபதி குடும்ப உபயமாக இடம்பெற்றது. இது முற்றிலும் வெள்ளைக்கல்லினால் கட்டப்பெற்றது. தொடர்ந்து **"பிள்ளையார் விலாஸ்"** கணபதிப்பிள்ளை அவர்களால் இராஜ கோபுரத்திற்கு அத்திவாரம் இடப்பட்டது. 1974ஆம் ஆண்டு அம்பலவாணர் கணபதிப்பிள்ளை குடும்பத்தவர்களால் வசந்த மண்டபம் புதிதாக மீள அமைக்கப்பட்டுப் புதுப்பொலிவுடன் மெருகு பெற்று விளங்குகிறது.

1976ஆம் ஆண்டு ஆலய பரிபாலன சபை புதிதாகத் தெரிவுசெய்யப்பட்டது. அதில் பின்வருவோர் இடம்பெற்றனர்.

1. திரு. கு. இராசதுரை - தலைவர்
2. திரு. நா. வீரசிங்கம் - உபதலைவர்
3. திரு. ப. அரசகேசரி - செயலாளர்
4. திரு. மு. சுந்தரலிங்கம் - உப செயலாளர்
5. திரு. க. நாகநாதபிள்ளை - பொருளாளர்

இப்பரிபாலன சபையில் 24 உறுப்பினர்கள் இடம்பெற்றனர். இவர்களது காலத்திலும் பல திருப்பணி வேலைகள் இடம்பெற்றன.

* வசந்த மண்டபத்திற்கு எதிரே வாசலும் மண்டபமும் அமைக்கப்பட்டது.
* கோபுர வாசலின் வலப்பக்கம் புதிய மணிக்கூட்டுக்கோபுரம் திரு. து. சிற்சொருபன் அவர்களால் அமைக்கப் பட்டது.
* இராஜகோபுர வேலை தொடர்ந்து நடைபெற்றது.
* உள்வீதி தரை சீமந்து இடப்பட்டது. வெளிப்பக்கச்சுவர்கள் புனரமைப்பு செய்யப்பட்டன.
* மின்னிணைப்பு வேலைகள் மேற் கொள்ளப்பட்டன.
* திரு. மு. தியாகராசா அவர்களால் ஒலியமைப்புச் சாதனங்கள் உபயமாக வழங்கப்பட்டன.
* கிக்கடுவ நா. சண்முகம் நினைவாக அவர்களது மக்களால் பூந்தோட்ட மதில் வேலை பூரணப்படுத்தப்பட்டது.

1986ஆம் ஆண்டு செப்ரம்பர் மாதம் புதிய பரிபாலன சபை பொறுப்பேற்றது. பரிபாலன சபை உறுப்பினர்களிடையே கருத்து முரண்பாடுகள் ஏற்பட்டு புரிந்துணர்வு அடிப்படையில் இப்பரிபாலன சபை அமைக்கப்பட்டது. இதில் பின்வருவோர் இடம்பெற்றனர்.

1. திரு. ச. நல்லநாதன் - தலைவர்
2. திரு. நா. வீரசிங்கம் - உபதலைவர்
3. திரு. மு. சுந்தரலிங்கம் - செயலாளர்
4. திரு. பொ. பரராசசிங்கம் -உப செயலாளர்
5. திரு. மு. மகேந்திரன் - பொருளாளர்

இந்த பரிபாலன சபையில் 22 உறுப்பினர்கள் இடம்பெற்றனர். இவர்களுடைய காலத்திலும் திருப்பணிகள் தொடர்ந்து நடைபெற்று வந்தன. மீண்டும் 1988ஆம் ஆண்டு புதிய பரிபாலன சபை தெரிவு செய்யப்பட்டது. இதில் பின்வருவோர் இடம்பெற்றனர்.

1. திரு. ச. நல்லநாதன் - தலைவர்
2. திரு. க. இராசகோபால் - உபதலைவர்
3. திரு. யா. இராமநாதன் - செயலாளர்
4. திரு. பொ. கமலநாதன் - உப செயலாளர்
5. திரு. மு. மகேந்திரன் - பொருளாளர்

இப் பரிபாலனசபையில் 25 உறுப்பினர்கள் இடம்பெற்றனர். மகாகும்பாபிஷேகம் செய்யவேண்டும் என்று திருப்பணி வேலைகள் தொடர்ந்து நடைபெற்றன.

* ஆலய வாசலின் இடப்பக்க மணிக்கூட்டுக்கோபுரத் திருப்பணி நிறைவேறியது.
* வாசலின் இரண்டு பக்கமும் மணிக்கூட்டுக்கோபுரம் எடுப்பாக வளர்ந்து நின்று இராஜகோபுர திருப்பணியை துரிதமாக்க வேண்டும் எனக்கூறின.
* கருங்கல் திருப்பணியில் மண்டபங் களில் குறை வேலையாக விருந்த கருங்கல் வரிகள் புதிதாகக் கட்டப்பட்டன.
* எழுந்தருளி விநாயகருக்கு கருங் கல்லினால் புதிதாக கோயில் அமைக்கப்பட்டது.
* சுற்றுப்பிரகார கோயில்கள் புதிதாக அமைக்கப்பட்டன.

i லக்குமி ii கௌரியம்பாள் iii சந்தான கோபாலர் iv வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் v நவக்கிரகம் vi சண்டேஸ் வரர் இவை அடியார்களால் உபயமாக திருப்பணி செய்யப்பட்டன.

1. லக்குமி - திரு. க. யோகலிங்கம் அவர்கள் (யோகு ரேடிங் கொம்பனி)
2. கௌரியம்பாள் - திரு. ஆ. பொ. பரராசசிங்கம் குடும்பம்
3. சந்தானகோபாலர் - திரு. ஆ. வி. நாகலிங்கம் குடும்பம் சார்பாக திரு. மோகனதாஸ் அவர்கள்
4. சுப்பிரமணியர் - திரு. வே. செல்லத்துரை குடும்பத்தினர்
5. நவக்கிரகம் - திரு. க. சிவசரணம் குடும்பத்தினர்
6. சண்டேஸ்வரர் - திரு.ச. பழனிநாதன், திரு. ச. சிதம்பரப்பிள்ளை

- மூலஸ்தானம் ஸ்தூபி, வசந்தமண்டப ஸ்தூபி புதுப்பிக்கப்பட்டு வர்ணம் பூசப்பட்டது.
- சபாமண்டபம், மகாமண்டபம் சீமந்தினால் புதிதாக அமைக்கப்பட்டன. மகாமண்டப புனரமைப்பு வேலைகள் எமது ஊரைச் சார்ந்த பிரபல வர்த்தகர் திரு. ந. கேசுநாதன் (மாலவன்ஸ்) உபயமாக செய்யப்பட்டன.
- ஆலய உள்வீதிச் சுவர்கள் வர்ணம் பூசப்பட்டுச் சுவர்களில் திருமுறைகள் எழுதப்பட்டன.

இத்தகைய திருப்பணி வேலைகள் பூர்த்தியடைந்து 1990ஆம் ஆண்டு (11 - 04 - 1990) பங்குனி 29ஆந் தேதி ஊரெழு பா. வைத்தியநாத சிவாச்சாரியார் அவர்கள் தலைமையில் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுத் தொடர்ந்து ஆலயத்தில் சதுர்த்தி, விசேட தினங்கள் பிள்ளையார் கதை, நவராத்திரி, திருவெம்பாவை ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்றன.

## 1991 புலப்பெயர்வுக்குப் பின்னர் :

நாட்டின் இனப்பிரச்சனை தொடர்பாக ஏற்பட்டு வருகின்ற யுத்தங்களின் விளைவாக 1991 ம் ஆண்டு (18 - 10 - 1991) நவராத்திரி காலத்தில் வேலணையில் இடம்பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக எமது ஊர்மக்கள் அனைவரும் யாழ்ப்பாண நகரம் நோக்கி நகர்ந்தனர். எமது கிராம சமூகக் கட்டமைப்புக்கள் எல்லாம் பாதிப்பிற்குள்ளாயின.

இந்த நேரத்தில் எமது ஆலயத்தில் 1965ஆம் வருடம் தொடக்கம் நித்திய பூசை ஆற்றி வந்த இ. சோமாஸ்கந்த சர்மா அவர்கள் இடம் பெயரும் நோக்குடன் சிறிது தூரம் சென்றபின்னர் பிள்ளையாரின் புதுமையோ என்னவோ திரும்பவும் கோயிலுக்கு திரும்பிவந்து இடம்பெயராமல் பிள்ளையாருடன் தங்கிவிட்டார். புலம்பெயர் காலத்திலும் எமது பகுதியில் பூசை நடைபெற்ற ஒரேயொரு ஆலயம் என்றால் எமது முடிப்பிள்ளையார் ஆலயம்தான். அந்தவகையில் பிள்ளையாரின் திருவருளை வியந்தவர்கள் பலர்.

இடம்பெயர முடியாத வயோதிபர்களுக்கு

ஆதரவளிக்கும் ஒரு நிலையமாக எமது ஆலயம் விளங்கியது. கோயில் ஐயா பிள்ளையாருக்கும் அவர்களுக்கும் ஆதரவு வழங்கி உதவினார்கள். கோயில் ஐயா அவர்களின் இப்பணி காலத்தினால் மறக்க முடியாத ஒன்றாகும். இது எமது ஆலயத்தின் பாதுகாப்புக்கு பெரும் உதவியாகவிருந்தது.

இடம்பெயர் காலத்தில் எமது ஆலயத்தோடு தொடர்பு பட்ட அடியார்கள் பலர் இடம்பெயர் நிலையிலும் எம்பெருமானின் பூசை ஒழுங்குகள் நடைபெற தம்மாலான அனைத்து முயற்சிகளிலும் ஈடுபட்டனர். அதற்கேற்ற பயனுறுதி வாய்ந்த பல நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். இவர் பணி போற்றுதற்குரியது. இவர்களுடைய முயற்சிகள் இன்று பயன்கொடுத்துக் கொண்டிருக்கின்றன.

### 1996 மீள்குடியேற்றத்தின் பின்னர் :

1996 இல் மீளவும் எமது பிரதேச மக்கள் மீள்குடியேற்றத்தை மேற்கொள்ளத் தொடங்கினர். 1996 ஏப்பிரல் மாதத்தில் இருந்து மக்கள் குடியேறத் தொடங்கி விவசாய பொருளாதார நடவடிக்கையில் ஈடுபடத் தொடங்கினர். இந்நிலையில் எமது ஆலயப்பகுதியிலும் மக்கள் குடியேறத் தொடங்கினர். 15 - 03 - 1998 எமது ஆலயத்தில் மகாசபைப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. 07 வருடகால இடைவெளியின் பின்னர் ஆலயப் புனரமைப்பு வேலைகள் நடைபெறத் தொடங்கின. இக் கூட்டத்தில் 25 உறுப்பினர்கள் கொண்ட புதிய பரிபாலனசபை அமைக்கப்பட்டது. இதன் தலைவராக திரு. பொ. அருணகிரிநாதன் அவர்களும் உபதலைவராக திரு. ந. கணேசபிள்ளை அவர்களும் செயலாளராக திரு. க. பரமேஸ்வரன் அவர்களும் உபசெயலாளராக திரு. வி. சாம்பசிவம் அவர்களும் பொருளாளராக திரு. மு. மகேந்திரன் அவர்களும் தெரிவு செய்யப்பட்டார்கள்.

1998 ஆம் ஆண்டில் இருந்து வழமை போல மகோற்சவம் நடைபெறத் தொடங்கியது. புலம்பெயர்ந்த காலத்தில் எமது கோயில் குருக்கள் பிரம்மஸ்ரீ இ. சோமஸ்கந்தக் குருக்கள் அவர்கள் ஆலயத்தில் தங்கியிருந்த 7 வருடங்களும் பிள்ளையாருக்கு நித்திய பூசை செய்து வந்தார். இது பிள்ளையாரின் பெருங் கருணையினால் ஆகும்.

இதன்பின்னர் ஒவ்வொரு வருடமும் மகாசபைப் பொதுக்கூட்டம் நடைபெற்று பரிபாலனசபை தெரிவு இடம்பெற்று வருகிறது. இப்பரிபாலன சபையினது காலத்தில் ஆலயத்தில் பெரும் திருப்பணி வேலைகள் நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது.

அவற்றுள் குறிப்பிடத்தக்கவை

1. பஞ்சதள இராஜகோபுர வேலை பூர்த்தியடைந்துள்ளது.
2. வெள்ளைக்கல்லினால் கட்டப்பெற்ற புதிய தீர்த்தக்கேணி அமைக்கப்பட்டுள்ளது. - வேலணை மேற்கு முருகேசு - செல்லம்மா குடும்பம்.
3. தேர் இருப்பிடம் அமைக்கப்பட்டு வருகிறது - மயில்வாகனம் குடும்பம்.

4. எம்பெருமானுக்கு புதிய சித்திரத்தேர் திருப்பணி வேலைகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன - திரு. ந. ஜவகர் லால் நேரு குடும்பம்.
5. ஆலயத்தில் மின்னிணைப்பு வேலைகள் புனரமைக்கப்பட்டு புதிய மின்பிறப்பாக்கி இயந்திரம் பெறப்பட்டுள்ளது - திரு. ஆ. பொ. பரராசசிங்கம் குடும்பம்.
6. ஆலய நாற்புற வீதிகளும் மண் இடப்பட்டு உயர்த்தப்பட்டு புனரமைக்கப்பட்டுள்ளன.
7. ஆலய சுற்றுக்கொட்டகை வெளிப்புற சுண்ணாம்புச் சுவர் அகற்றப்பட்டு மதில்கள் புனரமைக்கப்பட்டுள்ளன.
8. வருடாவருடம் ஆலயத்தின் உட்பகுதி வர்ணவேலைகள் செய்யப்படுகின்றன.
9. அனைத்து வாகனங்களும் மீள் புனரமைப்புச் செய்யப்பட்டுள்ளன.
10. சப்பரம், தேர், புனரமைப்பு வேலைகள் பூர்த்தியடைந்துள்ளன.
11. ஆலய முன்வாயில் மணிமண்டப வேலைகள் நடைபெறுகின்றன.
12. ஆலயத்தில் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு, திருப்பணி வேலைகள் முழுவீச்சில் நடைபெற்று வருகின்றன.

வருடந்தோறும் மகோற்சவம் வைகாசி மாத பௌர்ணமி திதியில் தீர்த்தோற்சவம் வரத்தக்கதாக 11 நாட்கள் திருவிழா நடைபெற்று வருகிறது. மகோற்சவ காலத்தில் வரும் அடியார்களுக்கு உதவ திரு. சி. க. குடும்பத்தினர் தாகசாந்தியும் திரு. ஐங்கரன் அன்னதான சபையால் அன்னதானமும் வருடந்தோறும் தவறாது வழங்கப்படுகிறது.

மேலும் ஆலய வளர்ச்சியில் ஆலய விஸ்தரிப்புப் பணிகளுக்கு பெருமனதுடன் உதவியவர்களில் முக்கியமானவர்கள்.

1. முன்பக்கம் - இராசா உபாத்தியாயர் (இரத்தினசபாபதி) பரம்பரை
2. தெற்குப் பக்கம் - பேரம்பலம் பராசக்தி (அப்பாத்துரை) குடும்பத்தினர்
3. மேற்கு - மயில்வாகனம் இராசரட்ணம் குடும்பம்
4. வடக்கு - கந்தையா பாக்கியம் குடும்பம்
5. வடமேற்கு- பொ. சோமசுந்தரம் (கேணியடிவீடு குடும்பம்)
6. முன்வடக்கு - மு. குமாரசுவாமி குடும்பம்

இக் குடும்பங்கள் ஆலய வளர்ச்சிக்கும் விஸ்தரிப்புக்கும் பெரும் பங்காற்றியுள்ளனர். இவர்களுக்கு எல்லோரும் நன்றி கூறவேண்டும்.

எம் பெருமானின் திருவருளாலும் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் வாழும் இக்கிராமத்து மக்கள் இன்று செய்து வரும் உதவிகளால் ஆலயம் பல வழிகளில் புதுப்பொலிவு பெற்று வருகின்றது. கனடாவிலும், லண்டன் நகரிலும் இயங்கும் வழிபடுநர் அமைப்புக்கள் இத்திருத்தலத்துக்கு ஆக்கபூர்வமான பல உதவிகளை காலத்துக்குக் காலம் செய்து கொண்டிருக்கின்றன. மேலும் பல திருப்பணி வேலைகள் அன்பர்களின்

உதவியால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இத் திருப்பணி வேலைகள் முற்றுப்பெறும் நிலையிலுள்ளன. இதைத் தொடர்ந்து கும்பாபிஷேகம் செய்வதற்கான ஆயத்தங்களில் பரிபாலன சபையினர் ஈடுபட்டு வருகின்றனர். மேலும் கோயிலுக்கு முன்பாக புதியதேர் மண்டபம் அமைக்கும் முயற்சியிலும் பரிபாலன சபையின்ர் ஈடுபட்டுள்ளனர். இம்முயற்சி கைகூட கிராமத்து மக்களிடமிருந்து உதவிகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

தொடர்ந்தும் எம்பெருமானின் ஆலயத்தில் திருப்பணிவேலைகள் நடைபெறவும், எமக்குச் சாந்தியும் சமாதானமும் தொடர்ந்தும் நிலைத்திடவும் எல்லாம் வல்ல பெரிய புலத்தவனின் பாதாரவிந்தங்களைப் பணிந்து போற்றுவோம்.



உ

# வேலணை இலந்தைவனம்
# அருள்மிகு ஸ்ரீ சித்திவிநாயகர் ஆலயம்



வேலணை - 5

## ஆலயங்கள்

# வேலணை இலந்தைவனம் அருள்மிகு ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலய வரலாறும் வளர்ச்சி நிலையும்

*திரு. கோ. பரமானந்தன்*
*ஆசிரியர்*

**வே**லணைப் பிரதேசத்தின் மையப்பகுதியை அண்டிய தற்போதைய வேலணை வடக்கு கிராம சேவகர் பிரிவிலே **"இலந்தை வனம்"** எனப் பெயர் பெற்ற பதியிலே கோயில் கொண்டு எழுந்தருளி அடியார்களுக்கு அருள்புரியும் வேலணை இலந்தை வனம் அருள்மிகு ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயம் ஐந்து நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றைக் கொண்டதெனக் கருதுவர். தென்னிந்தியாவிலே சீர்காழியைப் பிறப்பிடமாகக் கொண்ட செட்டி வம்சத்தைச் சார்ந்த சிதம்பரநாத முதலியார் என்பவர் இந்நாட்டுக்கு வந்து வேலணையில் இவ்வாலயச் சூழலில் குடியேறி வாழ்ந்தார் என்று பரம்பரை பரம்பரையாகப் பேசப்பட்டு வருகிறது. அன்று இப்பகுதி இலந்தை மரங்களால் சூழப்பட்ட காடாக இருந்தமையால் **"இலந்தைவனம்"** எனும் நாமம் பெற்றது. முதலியார் அவர்கள் அப்பகுதியைத் துப்புரவு செய்த வேளை சிறிய விநாயகர் திருவுருவம் இலந்தை மரத்தின் கீழ் காணப்பட்டதாகவும் அத்திருவுருவத்தை எடுத்து பாதுகாத்து மண்குடிசை ஒன்றை ஸ்தாபித்து அதில் அவ்வுருவை வைத்து வழிபட்டு வந்ததாகவும் அக்காலப் பகுதியிலேயே அவ்விடச் சூழலில் வாழ்ந்த பாக்கியலட்சுமி என்ற பெண்ணைத் திருமணம் செய்து வாழ்க்கை நடத்தியதாகவும் வரலாறுகள் கூறுகின்றன.

சிதம்பரநாதமுதலி - பாக்கியலட்சுமி ஆகிய இருவரும் விநாயகப் பெருமானைப் பூசித்து வாழ்ந்து வந்தனராயினும் மகப்பேறு இல்லாக் குறையொன்று அவர்களுக்கு இருந்து வந்தது. ஈற்றில் அவர்கள் தமது சொத்துகள் முழுவதையும் ஸ்ரீ சித்தி விநாயகப் பெருமானுக்கு எழுத விரும்பி ஆலயத்தைச் சூழவிருந்த (190) நெற்பரப்புக் காணியை சித்தி விநாயகருக்கே தரும சாதனம் செய்து வைத்தனர்.

அதன் பின்பு சித்தி விநாயகரின் அருட் கடாட்சமோ என்னவோ அவ்விருவருக்கும் ஆண் குழந்தை யொன்று பிறந்தது. அப்பிள்ளைக்கு வேலாயுதபிள்ளை என நாமம் சூட்டி வளர்த்ததாகவும் சிதம்பர நாத முதலியார் (1ஆம் தலைமுறை) இறையடி சேர அவரின் வாரிசு திரு வேலாயுதபிள்ளை (2ஆம் தலைமுறை) அவர்கள் அவ்வாலயத்தைப் பராமரித்து வந்ததாகவும் அவரது காலத்தில் போர்த்துக்கேயரின் அடாவடித்தனத்திற்கு இவ்வாலயம் ஆட்பட்டபோது திரு வேலாயுதபிள்ளை அவர்கள் விநாயகர் திருவுருவத்தை எடுத்து நெற்கூடை ஒன்றினுள் மறைத்து வைத்துப் பராமரித்துப் பாதுகாத்து வந்ததாகவும், பின்பு அவர் சிறு ஆலயம் ஒன்றை அமைத்து இத்திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்ததாகவும் கூறப்படுகின்றது. இவரின் பின் இவ்வாலயம் இவரின் வழித்தோன்றல்களான சிதம்பரநாதர் (3ஆம் தலைமுறை), வீரகத்திப்பிள்ளை (4ஆம் தலைமுறை), கார்த்திகேசு (5ஆம் தலைமுறை), தம்பாப்பிள்ளை (6ஆம் தலைமுறை) என்போரின் பரிபாலனத்திற்குட் பட்டு வந்துள்ளது.

இவர்களில் கார்த்திகேசு என்பவரின் காலத்தில் அதாவது 1930 களில் மூலத்தானம், மகா மண்டபம், சபா மண்டபம் என்ற கட்டுமானப் பணிகள் சுண்ணாம்புக் கட்டிடமாக ஆரம்பிக்கப்பட்டு 1945 ஆம் ஆண்டு குடமுழுக்கும் நடாத்தப்பட்டுள்ளது. இவரது காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட ஆலயக் கட்டுமானப் பணிகள் தொடர்வதற்காக தனது மகன் தம்பாப்பிள்ளை என்பவருக்கு 1946இல் ஆலயப் பரிபாலனத்தை தத்துவ சாதனம் செய்து யாப்பு ஒன்றை உருவாக்கியதாகவும் அறியப்படுகின்றது. இக்காலப் பகுதிகளில் தான் இவ்வாலயச் சூழலில் வாழ்ந்த முத்துமணியகாரன் என்பவரால் இவ்வாலயத்திற்கு "ஆர வயல் மேட்டு காணி" (40) நிலப்பரப்பு தர்ம சாசனம் செய்யப்பட்டுள்ளது. இவற்றை விட இவ்வாலயத்திற்கு வேலணையில் புளிப்பத்தை என்ற இடத்தில் (10) நெற்பரப்புக் காணியும், கெம்மில் குடியிருப்பில் (45) நெற்பரப்புக் காணியும், போக்கணவந்தோட்டம் (10) பரப்புக் காணியும், பனிக்க சாட்டியில் (33) நிலப்பரப்புக் காணியும் பனைகளுடன் இவ்வாலயத்திற்கு உரித்துடைய அசையா சொத்துக்களாக உள்ளன என்பது அறியப்படுகின்றது.

திரு. கார்த்திகேசு அவர்கள் 1947 இல் இறையடி சேர, ஆலய பரிபாலனம் திரு. தம்பாப்பிள்ளை அவர்களால் பரிபாலிக்கப்பட்டு வந்தது. இவரது காலத்தில் மணிக் கோபுரம் அமைக்கப்பட்டு ஆலய மணியோசை திக்கெட்டும் கேட்க வழிசெய்யப்பட்டது. இவரால், வேலணை வடக்கு ஐயனார் கோவில் குருக்களான கணபதிக் குருக்கள் அவர்கள் இவ்வாலய நித்திய, நைமித்திய பூசைகளைச் செய்ய நியமிக்கப்பட்டிருந்தார். இக்குருக்களது காலத்தில் நித்திய, நைமித்திய பூசைகள் சிறப்பாக நடாத்தப்பட்டு வந்ததோடு விசேட தினங்களில் குறிப்பாகச் சித்திரா பௌர்ணமி, ஆவணிச் சதுர்த்தி, பிள்ளையார் பெருங்கதைக் காலங்களில் நைமித்திய பூசைகள் சிறப்பாக நடைபெற்றன. ஆலயச் சூழலில் வாழ்ந்தவர்கள் நோன்பிருந்து விநாயகப்பெருமானைப் பயபக்தியோடு வழிபட்டு வந்தமை கண்டு சிறுவர்களும் ஆலய வழிபாடுகளில் ஈடுபாட்டோடு கலந்து வாழ்ந்து வரலாயினர்.

திரு. தம்பாபிள்ளை அவர்கள் தனது ஆலய பரிபாலனத்தை 1970 ஆம் ஆண்டில் தனது மகனும் தற்போதைய ஆலய தர்மகர்த்தாவுமான திரு. வேலாயுத பிள்ளை (7ஆம் தலைமுறை) அவர்களிடம் கையளித்தார். இவர் இவ்வாலயத்தைப் பரிபாலித்த காலம் ஆலய வரலாற்றில் ஒரு பொற்காலம் என்றே சொல்ல வேண்டும். இவரது காலப் பகுதியில் தான் ஆலயம் சகல விதத்திலும் மிக வேகமாக வளர்ச்சி கண்டு, தீவுப்பகுதியிலேயே ஒரு பிரமாண்டமான ஆலயம் என்ற தனிப் பெருமையுடன் திகழ்கின்றதெனலாம்.

1970களில் திரு. வேலாயுதபிள்ளை ஆலய நிர்வாகத்தைப் பொறுப்பேற்ற காலத்தில் இருந்து அவரது வாழ்க்கை ஆலயத்துடன் ஒன்றித்த அர்ப்பணிப்பு மிக்க வாழ்க்கையாகவே அமைந்தது. ஸ்ரீ சித்தி விநாயகரும் தம் பணிக்காகவே அவரைத் தோற்றுவித்தமைபோல் தன்பணியினை செய்வித்து முடித்துள்ளார் என்றே கூற வேண்டும். இவர் பரிபாலனத்தைக் கையேற்ற காலத்தில் ஆவணிச் சதுர்த்தியை அயலவர்கள், உபயகாரர்கள் ஒன்று கூடி பெரிய திருவிழாவாக நடாத்தி வந்தனர். திரு. வேலாயுதபிள்ளை அவர்கள் ஆவணிச் சதுர்த்தியை 2ஆம் திருவிழாவாகக் கொண்டு 10 நாட்கள் அலங்கார உற்சவத் திருவிழாக்கள் நிகழ்த்தத் திட்டமிட திருவருள் கைகூடிற்று. 1970ஆம் ஆண்டிலிருந்து 10 நாட்கள் அலங்கார உற்சவம் நடைபெறத் தொடங்கிற்று. ஆலயச் சூழலில் வாழ்ந்தவர்களைத் தனித்தும், குழுக்களாகவும் உபய காரர்களாகத் (யாப்பிலுள்ளதற்கமைய) தெரிந்தெடுத்து அவர்களிடம் விழாக்கள் ஒப்படைக்கப்பட்டு, வருடாவருடம் அலங்கார உற்சவம் சிறப்பாக நடைபெற்று வந்தது. அவ்வேளை திருவிழா சிறப்புற அமையத் தேவையான மண்டப வசதியின்மையால் தற்காலிக கிடுகுக் கொட்டகைகள் தேவையைப் பூர்த்தி

செய்தமை கண்டு திரு. வேலாயுதபிள்ளை அவர்கள் மண்டபம் அமைக்கும் பணியில் சிறிது சிறிதாக ஈடுபடத் தொடங்கினார். சித்திரையில் பெருமானின் திருவருளும், அடியார்கள், உபயகாரர்களின் உற்சாகமும் துணை நிற்க மண்டபம் அமைக்கும் பணியை ஆரம்பித்தார். அன்பர்கள் அடியார்களிடமிருந்து திரண்ட நிதியும், அவரது சொந்த நிதியும் பயன்படுத்தப்பட்டு பெரு மண்டபங்களாக ஆலயம் பொலிவு பெற்றது. மண்டப வேலைகள் யாவும் பூர்த்தியாக பரிவார மூர்த்திகளை அமைக்கும் பணி ஆரம்பமாயிற்று. முதலில் காவல் தெய்வமாகிய ஞான வைரவப் பெருமானுக்கு ஆலயம் அமைத்து சிவானுபானு பரமேஸ்வரக் குருக்கள் அவர்களால் 1974 பங்குனி உத்தர நன்னாளில் குடமுழுக்கும் நடாத்தப்பட்டது. தொடர்ந்து நவக்கிரக ஆலயம், ஆலய அயலவரான க.சு.செ. கணபதிப்பிள்ளை அவர்களின் நிதியுதவி யுடன் தில்லையம்பலம் ஆச்சாரி அவர்களால் நிர்மாணிக்கப்பட்டு குடமுழுக்கும் நடைபெற்றது. தொடர்ந்து படிப்படியாக கஜலெட்சுமி அம்பாள், முருகப்பெருமான், சனீஸ்வரப் பெருமான், சண்டேஸ்வரப் பெருமான் ஆகிய பரிவார மூர்த்திகளுக்கும் ஆலயங்கள் அமைக்கப்பட்டு கும்பாபிஷேகம் நிறைவேறியது.

ஆலயக் கட்டுமானப் பணிகள் பெரு வளர்ச்சி கண்டு அலங்கார உற்சவமும் சிறப்புற நடைபெற்று வந்தவேளை ஸ்ரீ சித்தி விநாயகப் பெருமானுக்கு ஓர் சித்திரத்தேர் உருவாக்கும் எண்ணம் ஆலய கர்த்தாவினதும் அடியார்களினதும் மனதில் உருவாயிற்று. ஐங்கரனின் திருவருள் கைகூட 1976ஆம் ஆண்டு சித்திரத் தேருக்கான பணி ஆரம்பிக்கப்பட்டது. அடியார்கள், உபயகாரர்களிடமிருந்து திரண்ட நிதி, திரு வேலாயுத பிள்ளையின் பிரத்தியேக நிதி என தேர்ப்பணிக்கான நிதி ஒதுக்கப்பட்டு துரித கதியில் தேர்ப் பணிக்கான வேலைகள் நடைபெற்றன. இச் சித்திரத் தேரைக் கலைஞர் அராலியூர் திரு. சின்னத்தம்பி அமரசிங்கம் என்பவரே நிர்மாணித்துக் கொடுத்தார். இப்பணி 3 ஆண்டுகளில் நிறைவுபெற்று சித்திரத் தேருக்கான வெள்ளோட்டம் 1979இல் இடம்பெற்றது. ஆலய வரலாற்றில், 1979ஆம் ஆண்டு கொடியேற்றத் திருவிழா ஆரம்பமாகி 10ஆம் நாள் தேர்த் திருவிழா புதிதாக நிர்மாணிக்கப்பட்ட சித்திரத் தேரில் முதன் முறையாக விநாயகப் பெருமான் தேர் ஏறி வீதி உலா வந்தமை அடியார்களுக்குக் கண்கொள்ளாக் காட்சியாகவும், இப்பிரதேச மக்களுக்கு ஒரு பெரு விழாவாகவும் அமைந்தது. அடுத்தநாள் (11ஆம் நாள்) தீர்த்த உற்சவத்துடன் திருவிழா நிறைவுற்றது.

தேர் பூர்த்தியாகியதும் தேர் மண்டபத் தேவை உடன் பூர்த்தியாக்கப்பட வேண்டியிருந்தமையால் ஆலயத்தின் அயலவரான திரு. செல்லப்பா சிற்சொரூபன் அவர்களால் தேர் மண்டபத்திற்கான அத்திவாரப் பேழை (சங்கு) வைக்கப்பட்டு பணிகள் ஆரம்பிக்கப்பட்டன. அவரது பங்களிப்புடனும், அன்பர்கள், அடியார்களது

நிதியுதவியுடனும், தனது நிதியுடனும் தேர் மண்டபப் பணிகள் வெகு விரைவாக நிறைவேற்றி முடிக்கப்பட்டன.

இதனைத் தொடர்ந்து வருடா வருடம் மகோற்சவம் சிறப்பாக நடைபெற்று வந்ததுடன், ஆலய அறங்காவலரினால் ஆலய பரிபாலனம் தொடர்ந்தும் சிறப்பாக பரிபாலிக்கப்பட்டு வந்தது.

1988இல் மண்டபத்தின் விஸ்தீர ணத்திற்கு அமைவாக கர்ப்பக் கிருகம் (ஆதி மூலம்) அர்த்த மண்டபம், மகா மண்டபம், சபா மண்டபம் என்பன விளங்காமையினால் 1988 ஆனி மாதம் பாலஸ்தானம் பண்ணி மேற்கூறிய மண்டபங்கள் முற்றாக அகற்றப்பட்டு 1988 ஆடி 23ஆம் நாள் அவற்றிற்கான அத்திவாரக் கல் நாட்டப்பெற்றது.

புதிய தோற்றத்தோடு சாஸ்திர விதிகளுக்கும், ஆலய விதிகளுக்கும் அமைய மூன்று தளக் கட்டுமானப் பணிகள் கட்டுமான ஸ்தபதி அராலியூர் அ. மார்க்கண்டு அவர்களால் ஆரம்பிக்கப் பட்டு நிறைவேறியது. இக்கட்டுமானம் நிலைகள், நிலைதாங்கி வெள்ளைக் கற்களால் அமைக்கப்பெற்றது. மேலும் திருவுருவச் சிலைகள் தென்னிந்திய நாகலிங்க ஸ்தபதி அவர்களின் யோசனைப்படி அவரின் மாணாக்கர் திரு. சிவக்கொழுந்து அவர்களால் அமைக்கப் பட்டு வந்தவேளை அவர் இறையடி சேர, காவலூர் ஸ்தபதி பத்மநாதன் அவர்களால் நிறைவு பெற்றுள்ளது.

1988ஆம் ஆண்டு சுவாமி தேர் மண்டபத்தில் தேர் ஏறுவதற்கான ஏறு, இறங்கு கட்டுமானப் பணிகள் தேர்த் திருவிழா உபயகாரர்களால் நிறைவேற்றப் பட்டுள்ளது. தீர்த்தக்குளம் கட்டுமானப் பணிகள் 1990ஆம் ஆண்டு நிறை வெய்தின.

இக்காலப் பகுதியில் 1990இல் இப் பிரதேசத்தில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக இப் பிரதேச மக்கள் தங்கள் உயிர்களைக் காப்பாற்ற இவ்வாலயத்தில் தஞ்சம் அடைந்தனர். எனினும் இறையருளால் பெரிய பாதிப்புகள் இல்லாமல் உயிர்கள் காப்பாற்றப்பட்டதோடு தொடர் இராணுவ நடவடிக்கைகளால் இப்பிரதேச மக்களும் அகதிகளாக சொந்த இருப்பிடங்களை விட்டு வெளியேற வேண்டியேற்பட்டது. இதன் காரணமாக மக்கள் யாழ்ப்பாணத்தின் பல பிரதேசங்களுக்கும் இடம்பெயர அறங்காவலர் குடும்பமும் இடம்பெயர வேண்டியேற்பட்டது. இதனால் ஆலயத்தில் பல சொத்துக்களைக் கைவிட்ட நிலையிலேயே வெளியேறியிருந்தார். இப்பொருட்கள் பின்னர் காணாமற் போயுள்ளன. இவ்விடப்பெயர்வைத் தொடர்ந்து இப்பிரதேசத்தில் மக்கள் எவருமே இல்லாத நிலையில் ஒரு தசாப்த காலம் ஆலயம் பராமரிப்பு அற்ற நிலையில் காணப்பட்டது. மீண்டும் 2000ஆம் ஆண்டளவில் மக்கள் படிப்படியாக தமது சொந்த இடங்களுக்கு மீளக் குடியேறத் தொடங்கினார்கள். அதனைத் தொடர்ந்து ஆலயத்தின் நித்திய பூசைகள் அங்கிருந்த மக்களால் ஒழுங்கு செய்யப்பட்டு நடைபெற்று வந்தது. அக்காலப் பகுதியில் ஆலய அறங்காவலர் திரு. வேலாயுத பிள்ளை அவர்களும் மீள ஆலய இருப்பிடத்திற்குக் குடியேறி மீண்டும் ஆலய பரிபாலன நடவடிக்கைகளைப் பொறுப்பேற்று ஆலயப் புனரமைப்பு

வேலைகளைப் பூர்த்தி செய்ய மிகக் கடுமையாக உழைத்தார். அடியார்கள், அயலவர்கள், உபயகாரர்கள் எனப் பலரிடமும் உள்நாட்டிலும் வெளி நாடுகளிலும் ஆலய கும்பாபிஷேகத்திற்காக நிதி திரட்டப்பட்டு அந்நிதி உதவியுடன் குறுகிய காலத்தில் பூந்தோட்டம், கிணறு என்பன புதிதாக அமைக்கப்பட்டதுடன் ஆலயம் முற்றாகப் புனரமைப்புச் செய்யப்பட்டு அனைத்துப் பணிகளும் நிறைவேற்றப்பட்டு 2001 - 09 - 05 ஆம் திகதி எம் பெருமானுக்கு காவலூர் சிவ ஸ்ரீ நாகலிங்கக் குருக்கள், யோகேஸ்வரக் குருக்கள் அவர்களின் தலைமையில் சிவாச்சாரியார்கள் குழு மகாகும்பாபிஷேகப் பெருவிழாவைச் சிறப்பாக நிறைவு செய்தனர். அதனைத் தொடர்ந்து ஆலயத்தில் நித்திய, நைமித்திய பூசைகள் கிரமமாக நடைபெற்று வருகின்றன.

இதனைத் தொடர்ந்து 1987இல் நடைபெற்ற மகோற்சவத்திற்குப் பின்பு மகோற்சவம் நடைபெறாமையாலும், யுத்தப் பாதிப்புக்களினாலும் சித்திரத் தேர் திருத்த வேலை செய்ய வேண்டியேற்பட்டது. இதற்குத் தேர்த் திருவிழா உபயகாரர் களினதும், ஏனையோரினதும் நிதி யுதவியோடு திருத்த வேலைகள் செய்யப்பட்டு மீண்டும் 16 ஆண்டுகளின் பின் 2003ஆம் ஆண்டு மகோற்சவம் கொடியேற்றத்துடன் தொடங்கி தேர் தீர்த்தம் வரை திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்றன. வருடாவருடம் தேர்க் கொட்டகைப் பக்கஅடைப்பு பெருஞ் சிரமமாகவும், பெருஞ் செலவை ஏற்படுத்துவதாயும் இருந்து வந்தது. இதனை தேர்த்திருவிழா உபயகாரர்களில் ஒருவரான திரு. பாலா - செல்வம் என்பவர் 2004 ல் தகரத்தினால் இதனையடைத்துக் கொடுத்துதவி புரிந்துள்ளார். மேலும் இவ்வாலயத்திற்கு காலத்திற்குக் காலம் உள்நாட்டிலும், வெளிநாடுகளிலிருந்தும் அடியார்கள், அயலவர்கள், உபயகாரர்கள், வர்த்தகர்கள் என பலதிறத்தினரும் பணமாகவும், பொருட்களாகவும், உபயமாகவும் வழங்கி வருகின்ற பல்வேறு ஒத்துழைப்புகள் ஆலய வளர்ச்சிக்கு பேருதவியாக இருக்கின்றன.

இவ்வாலயத்தின் வளர்ச்சிப் பாதையில் 20ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் இவ்வாலயச் சூழலில் வாழ்ந்த பேரம்பலப் புலவர் இலந்தைவனம் சித்தி விநாயகரை நினைந்தருளி இரட்டை மணிமாலை பாடியுள்ளார்.

**வெண்பா**

"பூமேவு கோட்டார் புயரிலவும் சீரிலந்தை
காமேவு கோட்டார் கணாதிபனைத் தூமேவு
தும்பிக்கையானை துதிப்பார் வினை போக்கு
நம்பிக்கையானை நெஞ்சே நாடு"

- *புலவர் பேரம்பலம்*

என்று தொடங்கும் வெண்பாவுடன் இரட்டை மணிமாலை பாடப்பட்டுள்ளது.

இவ்வாறு இவ்வாலயம் பல வளர்ச்சிப் படிகளைத் தாண்டி இன்று பிரமாண்டமான ஆலயமாகத் திகழ்கின்றது. இத்தகைய ஆலய வளர்ச்சியில் தனது முதுமைக் காலத்திலும் ஆலய அறங்காவலர் திரு. கா. த. வேலாயுதபிள்ளை அவர்கள் அயராது உழைத்து வருகின்றார். இவர் தனது காலத்தில் ஆலயத்திற்கு ராஜ கோபுரம் அமைக்கும் பணியையும் ஆரம்பிக்க வேண்டுமென்ற சிந்தனையுடன் ஆலயத்தைச் சிறப்பாகப் பரிபாலித்து வருகிறார். இவரின் பணி தொடர சித்தி விநாயகர் தொடர்ந்தும் அருள் பாலிக்க பிரார்த்திப்போமாக !

உ

# பள்ளம்புலம் அருள்மிகு முருகமூர்த்தி திருக்கோவில்



வேலணை - 5

# ஆலயங்கள்

# பள்ளம்புலம் அருள்மிகு முருகமூர்த்தி திருக்கோவில்

*திரு. ச. மகாலிங்கம்*
ஆசிரியர்

**முன்னுரை :**

ஆலயத்தின் தோற்றுவாய் பற்றிய வரலாற்றுச் சான்றுகள் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லையெனினும், தோற்றம் பற்றிய கருப்பொருள் அம்சமும், காலம் பற்றிய எல்லையும், ஓரளவு சான்றோரின் கருத்துக்கள் மூலமும், செவிவழி அறிந்ததன் மூலமும் எடுத்துக் கூறக் கூடியதாகவுள்ளது.

வயலும், வயல் சார்ந்த மருத நிலத்தின் கண்ணே, மருதமரங்கள் வளர்ந்தோங்கி வளம் கொழிக்க, மத்தியிலே கம்பீரமான எடுப்புடன் அழகுற அமைந்திருப்பது சரவணை - பள்ளம்புலம் அருள்மிகு முருகமூர்த்தி கோவிலாகும். இதனை ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமை வாய்ந்த ஆலயமெனக் கூறலாம்.

ஒவ்வோர் ஆலயமும் அருள்பாலிக்கும் தன்மையில் வெவ்வேறு இயல்புடையதாக இருக்கும் என்பது வழிபடும் அடியார்களின் அனுபவரீதியான நம்பிக்கையாகும். இவ்வுண்மை நம் நாட்டில் மாத்திரமல்ல, தமிழ் நாட்டிலும் ஆழமாகப் பதிந்திருப்பதைக் காணக் கூடியதாகவுள்ளது.

இந்த ஆலயத்துக்குச் சென்று வழிபடின், பூசை வைப்பின் குறித்த விருப்பத்தினை, காரியத்தை நிறைவேற்றலாம் என்பது இறை நம்பிக்கை உடையவர்களின் கருத்தாகும்.

இந்த வழியில் பள்ளம்புலம் முருகன் ஆலயத்திற்கும் ஓர் அருட் சிறப்பு உண்டு. அவர்தான் கல்விக்குரிய கந்தன் பள்ளம்புலக்கந்தனாவார். கலைச் செல்வத்தை அள்ளித்தந்து அருள்பாலிக்கும் தன்மை இந்த ஆலயத்துக்குண்டென்பது அனுபவரீதியாக அறிந்து தெளிந்த உண்மையாகும்.

**செவிவழி அறிந்தவை :**

"அம்மை அடியார்" ஓர் சிறந்த முருக பக்தர். நிலம் புலம் அதிகமுடைய ஒரு பெரிய நிலக்கிழார். விரத அனுட்டானங்களில் மிகுந்த ஆர்வ முடையவர். வேல் வைத்து கந்தபுராணப் படிப்பினை ஆரம்பிக்க வேண்டுமென்ற உள்ளுணர்வு அழுத்தத்திற்கு ஆளானார். கொட்டில் அமைத்து - வேல் வைத்துக் கந்தபுராணப் படிப்பினை ஆரம்பித்து வைத்தார் என்றும், அதனையே தொடர்ந்து கடைப்பிடித்தார் என்றும் கூறப்படுகின்றது.

இவரால் ஆரம்பிக்கப்பட்ட கந்தபுராணப் படிப்பு மிகச் சிறப்பான முறையில் வளர்ச்சிபெற்று வந்ததாகவும், சைவப் பெரியார்கள் பலர் அதிற் பங்கு கொண்டனரென்றும், அந்த இடம் ஓர் கந்தபுராணக் கலைக்கோவிலாகக் காட்சி அளித்ததாகவும் கூறப்படுகின்றது.

அந்த ஊக்கமும், உத்வேகமும், வளர்ச்சியும், மலர்ச்சியுமே வேல் கோவிலாக தோற்றம் பெற்றதாகவும் கூறப்படுகின்றது.

கந்தபுராணப் படனம் ஓர் மூலநிகழ்வாக, விழாவாக கோவிலில் இடம் பெற்று வரத்தொடங்கியது. சைவப் பெரியோர்களின் ஊக்கத்தாலும் ஒத்துழைப்பினாலும், சைவமும், தமிழும் தழைத்தோங்கும் ஓர் கோவிலாகக் காட்சி அளித்து வந்ததாகக் கூறுவர். இவை அனைத்தும் கேட்டறிந்த செய்திகளாகும்.

**அறங்காவலர் நிர்வாகம் :**

ஆலயநிர்வாகம் "அம்மை அடியார்" பரம்பரையைத் தொடர்ந்து முருகப்பர் சிற்றம்பலம் அவர்களின் பொறுப்பில் வந்தது. இவரும் ஓர் சிறந்த முருக பக்தர். ஆலய வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருந்து வாழ்ந்து வந்தார். ஆலயக் கருமங்களையும், நித்திய பூசைகளையும் காலந்தவறாது கண்காணித்து நடாத்தி வந்தார்.

இவரது காலத்தில் கந்தசஷ்டி, நவராத்திரி, சிவராத்திரி, திருவெம்பாவை விழாக்கள் சிறப்பாக நடைபெற்று வந்தன.

கந்தபுராணப் படிப்பு, ஆலயத்தில் ஒரு முக்கிய நிகழ்வாக, பாரம்பரிய நிகழ்வாக நடாத்தப்பட்டு வந்தது. இதன் பலனாக கந்தபுராணம் படிப்பதிலும், பயன் சொல்வதிலும் ஆற்றல் வாய்ந்த பலர் தோன்றலாயினர். சைவமும் தமிழும் செழிப்புற்று மிளிர்ந்தன. ஆலயச் சூழலிலும், அப்பாலும் படித்த பெருமக்கள் தோன்றக் காரணமாகக் கந்தபுராணப் படிப்பு அமைந்தது.

இந்தக் காலத்தவராகத் திகழ்ந் தவர்தான் சரவணையூர் செந்தமிழ்ப் புலவர் தில்லைநாதராவார். இவருடைய கலை ஆற்றல் ஆலயத்திற்குப் பல வழிகளில் பயன் அளிக்கத் தொடங்கியது. இவருடைய தலைமையிலும், கண்காணிப்பிலும் கந்தபுராணப் படிப்புத் தொடர்ந்தது. கற்றோர் பலர் ஒன்று கூடினர். புராணப் படிப்பும் புகழ் பெற்றோங்கியது.

முருகன் அருளாற் பெற்ற கலைச் செல்வமே, அவரைப் புலவர் பெருமான் ஆக்கியது. தொடர்ந்து முருகன் புகழ்பாடத் தொடங்கினார்.

பள்ளம்புலம் முருகனை நினைத்து; திரு முருகரலங்காரம், முருகமூர்த்தி திருப்பதிகம், சரவணை திருப்பள்ளம்புலம் யகமவந்தாதி, சரவணை பள்ளம்புலம் முருகமூர்த்தி திருவூஞ்சல் ஆகிய பதிகங்களை ஆக்கி அளித்தார். அவை அடியார்களின் உள ஆன்மீக வளர்ச்சிக்கு ஊக்கமும், ஆக்கமும் கொடுத்தன வென்பதில் ஐயமே இல்லை.

பள்ளம்புலம் முருகனின் அருள் நோக்கால், பள்ளம்புலத்திலும், புறத்திலும் கல்வி அறிவிற் சிறந்தவர்கள், கலைஞானம், இசை ஞானம் பெற்றவர்கள் எத்தனையோபேர் வாழ்ந்தார்கள் - வாழ்கின்றார்கள் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

இதே காலப்பகுதியிற்றான் அமரர் திரு. வே. சுப்பிரமணியம் அவர்களும் ஆலயத்திற்குப் பெரும்பணி ஆற்றி வந்தார். இவர் ஓர் ஓய்வு பெற்ற அரசாங்க உத்தியோகத்தர். பள்ளம்புலம் முருகமூர்த்தி கோவிலில் மிகுந்த பற்றும், ஈடுபாடும் கொண்டிருந்தார். ஆலய தினசரிப் பூசையில் தவறாது கலந்து கொள்வார். பூசை நிறைவேறும் வரை இருந்து தரிசித்துச் செல்லும் தனித்துவமான பண்பு இவரிடம் உண்டு.

ஆலயப் பணியில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். ஆலயத்தின் சுற்றுமதிலை அமைத்தார். சபா மண்டபத்துக்குரிய அத்திவாரம் இட்டார். பிள்ளையார், வைரவர் ஆலய அத்திவாரங்களைப் போட்டு சுவர்களை எழுப்பினார். மடப்பள்ளியினைப் புதுப்பித்தார். மேலும் தொடர்ந்து மிகப் பெரிய திருப்பணிகள் பலவற்றை ஆற்றி வைத்த பெருமை இவருக்கும் இவர் குடும்பத்தினருக்கும் உண்டு.

இவர் காலத்திற்றான் ஆலயத்தில் ஓர் முக்கிய நிகழ்வு அடியார்களின் பேராதரவுடன் நிகழ்ந்தது.

ஆலயத்தில் நடாத்தப்பட்ட ஓர் பெரும் கும்பாபிஷேக நிகழ்வுடன், கற்பக்கிருகத்தில் அதாவது மூலஸ்தானத்தில் வேல் இருந்த இடத்தில் முருகனின் திருவுருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இது ஓர் வரலாற்று நிகழ்வாகும். இதைத் தொடர்ந்து கோயில் அலங்காரத் திருவிழாக்கள், மற்றும் சிறப்பான விழாக்கள் நடந்து வந்தன. திருப்பணிகளும் தொடர்ந்தன.

திரு. மு. சிற்றம்பலம் அவர்கள் தனது இறுதிக் காலத்தில் கோவில் நிர்வாகப் பொறுப்பினை திரு. வி. சேதுகாவலரிடம் ஒப்படைக்க முன்வந்தார். இவர் ஆசிரியராகவும், நொத்தாரிசாகவும் கடமை ஆற்றியவர்.

கோவில் அறங்காவலராக சில வருடங்கள் கடமை ஆற்றி வந்த இவர், கோவில் நிர்வாகத்தை ஓர் அறங்காவற் சபையிடம் ஒப்படைக்க முன்வந்தார். அதை நிறைவேற்றியும் வைத்தார்.

**அறங்காவற்சபை நிர்வாகம் :**

கோவில் நிர்வாகம் முதன் முதலாக அறங்காவற்சபையின் பொறுப்பில் விடப்பட்டது. திரு. வி. சேதுகாவலரைத் தலைவராகக் கொண்ட ஒரு சபையில் திரு. நா. நடராசா உபாத்தியாயர், திரு. வே. சங்கரப்பிள்ளை போன்ற பெரியவர்கள் இடம் பெற்றனர்.

கோயில் வளர்ச்சியில் ஓர் உத்வேகம் உண்டாகியது. "பிடிஅரிசித் திட்டம், புகையிலை சேர்ப்பு" போன்ற வருவாய்க்குரிய திட்டங்கள் ஆரம் பிக்கப்பட்டன. இதற்கு மக்களிடையே நல்ல வரவேற்பு ஏற்பட்டது. அடியவர்கள் கோவிலைப் பற்றிச் சிந்திக்கவும், செயற்படவும் வழிவகுத்தது.

தினசரிப் பூசைகளும், சிறப்பு விழாக்களும், அலங்காரத் திருவிழாக்களும் நடைபெறத் தொடங்கின. கந்தபுராணப் படிப்பும் சிறப்பான முறையில் நடைபெறத் தொடங்கியது. பெரியார் முத்தையா, திரு. ஐ. பொன்னையா உபாத்தியாயர் போன்றோர் இதில் பங்கெடுத்தனர். திருப்பணிகளும் சிறிய அளவில் செயற்படுத்தப்பட்டன.

ஆண்டுகள் பல சென்றன. நிர்வாகச் சிக்கல்கள் உண்டாயின. பொருளாதாரப் பிரச்சினையும் மெல்ல மெல்லத் தலைதூக்கியது. இந்நிலை பலருக்கு வேதனை கொடுக்கத்தொடங்கியது.

**மீண்டும் மறுமலர்ச்சி :**

அறங்காவற் சபையுடன் சேர்ந்தும், தனித்து நின்றும் தன்கோவிற் பணிகளை ஆற்றிவந்தார் சுப்பிரமணியம் ஐயா அவர்கள். காலம் கடந்தது. உடலும், உளமும் தளர்ப்பம் கண்டது. தன் வீட்டிலேயே இருந்துவிட்டார்.

இவரை அடிக்கடி வீட்டில் சந்தித்து கோவில் நிலைபற்றி கலந்துரையாடுவார் திரு. நா. இராமச்சந்திரன் அவர்கள். குருவின் உணர்வலைகள் சீடனைப் பற்றுவதுபோல, சுப்பிரமணியம் ஐயா அவர்களின் எண்ணங்கள், விருப்பங்கள், தொண்டுணர்வுகள் திரு. இராமச் சந்திரனை யும் பற்றிக்கொண்டதுபோலும்.

காலப்போக்கில் திரு. இராமச்சந்திரன் கோவில் வளர்ச்சிக்கு ஓர் உந்து சக்தியாக மாறினார். திருவெம்பாவை விழாவினை விரிவான முறையில் நடாத்தத் தலைப்பட்டார். இந்த நன்முயற்சி பக்தர்களிடையே நல்ல வரவேற்பினைப்

பெற்றது. மன உற்சாகத்தையும், ஆன்மீக மறுமலர்ச்சியையும் உண்டாக்கக் காரணமாக அமைந்தது.

காலப்போக்கில் கோவில் திருப்பணிகளிலும் அவர் ஈடுபடத் தொடங்கினார். கோவிலை முழுமை பெற்ற ஓர் ஆலயமாக ஆக்கத்தலைப்பட்டார்.

அறங்காவற்சபையின் ஒத்துழைப்பையும், தனிப்பட்டவர்களின் உதவியையும் பெற்றுத் திருப்பணிகளைத் தொடர்ந்தார்.

மற்றவர்களின் போற்றுதலையோ - தூற்றுதலையோ பொருட்படுத்தாது, "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற உறுதியான நோக்கோடு திருப்பணிகளை செயற்படுத்தினார்.

**கூட்டுப்பிரார்த்தனைச்சபை உதயம் :**

பரந்த அடிப்படையில் திருப்பணிகள் நடந்து கொண்டிருந்த காலகட்டத்திற்றான் அதாவது 1965 ஆம் ஆண்டளவில் ஓர் ஆன்மீக எழுச்சி இயக்கமாக பள்ளம்புலம் ஸ்ரீ முருகன் கூட்டுப் பிரார்த்தனைச் சபை உதயமாகியது. சிறார்களின் உள்ளங்களில் சமய அறிவு, இறைபக்தி, ஆன்மீக விழிப்புணர்ச்சி என்பன ஏற்பட இச்சபை வழிவகுத்துக்கொடுத்தது.

வெள்ளிக்கிழமைகள் தோறும் ஆலயத்தில் கூட்டுப்பிரார்த்தனை நடாத்தல், வருடந்தோறும் குறிக்கப்பட்ட தினத்தில் சமயம் தொடர்பான பேச்சு, எழுத்து, மனனப்போட்டிகள் நடாத்தி பரிசில்கள் வழங்கல், சமயப் பெரியார்களின் கருத்துரைகளைக் கேட்பதற்குரிய ஒழுங்குகள் செய்தல், ஆலயத் திருப்பணிகள் நிறைவேற வேண்டிய உதவிகளைப் புரிதல், ஆலய முன்னேற்றத்திற்கான ஆக்கப் பணிகளைச் செய்து கொடுத்தல் போன்ற நோக்கங்களைத் தன்னகத்தே கொண்டதாகச் சபை அமைந்தது.

மேலே கூறப்பட்ட நோக்கங்களைச் சபை திறம்பட நடைமுறைப்படுத்தி வந்ததோடு, மேலும் இரு பிரதான அம்சங்களை நிறைவேற்றி வைக்கவும் உதவியது. அவையாவன :

அ) அறிஞர் பெருமக்களின் பங்களிப்புடன் அறங்காவற்சபைக்கென அமைப்பு விதியை (யாப்பு) வடிவமைத்து நிறைவேற்ற உதவியமை.

ஆ) பூசகரின் வேதனத்தை தடைப்படாது மாதாந்தம் கொடுத்து வருவதற்கான "பூசைநிதியம்" ஒன்றினை ஆரம்பித்து வைக்க உதவியமை.

இச் சபையின் வளர்ச்சிக்கு முன்னின்று உழைத்த இளைஞர்கள் பலர். அவர்களில் திருவாளர்கள்; பொ. பேரின்ப நாயகம், வே. இராசலிங்கம், தி. சிவபாலன், நா. பரமசிவம், செ. தருமராசா, அமரர் வே. சிவசுப்பிரமணியம் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இன்று இவர்கள் அரசாங்க உத்தியோகத்தர்களாகவும், டாக்டராகவும், வியாபாரப் பெருமக்களாகவும் இருப்பதோடு,

இன்றைய ஆலய நிர்வாகத்தில் ஆக்கபூர்வமான பணிகளையும் ஆற்றி வருகின்றனரென்பது பெருமைக்குரிய அம்சமாகும்.

இவர்களில், அமரர் வே. சிவ சுப்பிரமணியம் அவர்களைப்பற்றி எமது சிந்தையில் எடுத்துக்கொள்ள வேண்டியது தலையாய . கடமையாகும்.

இவர் அன்பும், பண்பும் அடக்கமும் அறிவும் கொண்ட ஒரு திறமை உடைய இளைஞராவார். எடுத்த காரியத்தை, கொடுத்த பணியை திறம்படச் செய்துமுடிக்கும் திறன் வாய்ந்தவர். ஒரு செயல்வீரர். ஆனால் அவரை எங்களுடன் வைத்துக் கொள்ள விரும்பாமல் முருகன் தன்னுடன் ஏற்றுக்கொண்டார் போலும்!

### கோவிற் காணிகளும் ஏற்பட்ட பிரச்சினைகளும் :

கோவிலுக்கு உரிமையான நெற் காணிகளும், தோட்டங்களும் ஏறக்குறைய இருநூறு பரப்புக்கு மேல் உண்டு. இதுவோர் உத்தேசக் கணிப்பாகும். இவை பல்வேறு இடங்களில் பரந்துபட்டுக் கிடக்கின்றன. இவற்றைக் குத்தகைக்குக் கொடுத்து பெறும் பணத்தினைத்தான் பூசகரின் வேதனமாக அன்று கொடுத்து வந்தார்கள். இம்முறையினால் நிர்வாகத்தினர் - பூசகரிடையே பல பிரச்சினைகள் தோன்றின. கோவில் வளர்ச்சியும் பல வழிகளில் தடைப்பட்டது. இவ்வுண்மையை எதிர்கால நிர்வாகம் உணர்ந்து ஏற்றவழிமுறைகளை செயற்படுத்த வேண்டும்.

மேலும், திருப்பணிகள் நடைபெற்றுக் கொண்டிருந்த காலகட்டத்திற்றான், காணிப் பிரச்சினைகள் பல தலைதூக்கின. காணிக்கு உரிமை கோரல், எல்லைத் தகராறு, பாதை அமைத்தல் போன்றவை ஏற்பட்டன. அந்தக் காலகட்டம் நிர்வாகத்திற்குப் பெரும்சவாலாக அமைந்தது.

இவற்றினைத் தீர்த்து வைப்பதில் பல சிரமங்கள் உண்டாயின. அவற்றிற்கெல்லாம் முகங் கொடுத்து உறுதியுடன் நின்று போராடியவர் அமரர். திரு. க. சுப்பிரமணியம் நொத்தாரிஸ் ஆவார். கோவில் உறுதிகளைத் தன்வசம் வைத்துச் சட்டரீதியாகப் போராடினார். வெற்றியும் கண்டார். அன்றைய காலகட்டத்தில் அறங்காவற் சபைத் தலைவராக இருந்த திரு. தி. சிவசாமி உபாத்தியாயரும் உறுதுணையாக இருந்து உதவியது குறிப்பிடத்தகுந்தது.

### திருப்பணிகள் நிறைவேற்றமும் கும்பாபிஷேகமும்

திரு. நா. இராமச்சந்திரனின் பெருமுயற்சியால் மாபெரும் பணிகள் நிறைவேற்றப்பட்டன. அவருக்கு உறுதுணையாக இருந்து உதவி நல்கிய செயற்குழுவினர் பலர்.

தபால் அதிபர். வே. பரமலிங்கம், டாக்டர் கே. பாலசுப்பிரமணியம், பொறியியலாளர் S. சிவானந்தன், திரு. நா. நடராசா உபாத்தியாயர், திரு. ஐ. பொன்னையா உபாத்தியாயர்,

திரு. நா. மகாலிங்கம், நொத்தாரிஸ் திரு. க. சுப்பிரமணியம், திரு. அருணகிரி நாதன் உபாத்தியாயர், திரு. மு. சின்னத் துரை ஆகியோரே அச்செயற்குழுவினராவர்.

ஏறக்குறைய பன்னிரெண்டு வருடங்களாகத் தொடர்ந்து நடைபெற்ற திருப்பணிகள் நிறைவுற்று, 1978ஆம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் செய்து நிறை வேற்றப்பட்டது. அதனைத் தொடர்ந்து அலங்காரத் திருவிழாவில் இருந்து தேர்த்திருவிழா வரை வளர்ச்சியடைந்தது. கந்தசஷ்டிப்பூசை சூரசம்கார விழாவாக மாறியது. அனைவரும் ஆலயத்தின் வளர்ச்சி கண்டு வியந்தனர்; போற்றினர்.

1989 வரை பழைய பெருமக்களோடு தொண்டுணர்வு கொண்ட இளைஞர்களும் சேர்ந்து ஆலயத் திருப்பணிகளைத் தொடர்ந்தனர். நித்திய - நைமித்தியப் பூசைகளையும், விழாக்களையும் செம்மையுற நடாத்தி வந்தனர்.

## போரும் புலம்பெயர்தலும் :

1990 ஆம் ஆண்டு தொடர்ந்த போரும், அசம்பாவிதங்களும் ஆலயத்தின் வளர்ச்சியைப் பெரிதும் தடைப்படுத்தின.

கிராமங்களில் உள்ள மக்கள் புலம் பெயர்ந்தனர். ஆலயம் தனிமைப்படுத்தப் பட்டது. பூசகர்களும் புலம் பெயர்ந்தனர். தினசரிப்பூசைகள் கூடத்தடைப்பட்டன. இந்நிலை 1996 வரை நீடித்தது. ஆலயங்கள் நிலைகுலைந்தன. அருள் ஊற்று வற்றியது. ஆன்மீக வரட்சி ஏற்பட்டது. எங்குமே சோகக் காட்சிதான்.

1997 ஆம் ஆண்டில் அறங்காவற் சபையினதும், ஊர்மக்களினதும் அரும்பெரும் முயற்சியினால் ஆலயப் பூசைகளும், திருப்பணி வேலைகளும் ஆரம்பிக்கப்பட்டன. ஆலயத்தின் மீது உரிமையும், பற்றும் கொண்ட வெளிநாட்டில் வதியும் பெருமக்கள் வாரிவழங்கிய பணம் சபையினரையும், தொண்டர்களையும் உற்சாகப்படுத்தியது; ஊக்கப்படுத்தியது; செயற்படுத்தியது. இதில் பெருமைப்பட வேண்டிய ஒன்று; இம் முயற்சியில் ஈடுபட்ட அனைவரும் அவ்வூர் இளைஞர்கள். ஆன்மீகப்பண்புகள் அரும்பிய இளம் செல்வங்களாவர்.

இவர்களுடைய பெருமுயற்சியால், முருகப்பெருமானின் திருவருள் நோக்கால் திருப்பணிகள் நிறைவேறின. நவகுண்ட பட்சபுனரர்வர்த்தன பிரதிஷ்டா கும்பாபிஷேகம் 07-05-1999 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இனிதே நடைபெற்றது.

பள்ளம்புலம் முருகமூர்த்தி திருக்கோவில் புதுப்பொலிவு பெற்றது.

இப் பெரும் பணிகளை செயற்படுத்தி வரும் இளஞ்செல்வங்களுக்கும், தொண்டர்களுக்கும், ஊரவருக்கும், எம் தமிழினத்துக்குமே முருகனின் கனிந்த அருட்பார்வை கிடைப்பதாக!!!

**"சூரனைத் தடிந்த சுடர்வேல் சரணம் !!!"**

## ஆலயங்கள்

# வேலணை துறையூர் இலந்தைவனம் ஹரிஹரபுத்திர ஐயனார் கோவில்

*திரு. ச. பாலச்சந்திரன்*
*அதிபர்*

**வே**லணையில், துறையூர் கிராமத்தில் பரவைக் கடலையண்டி இவ் ஐயனார் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயம் அமைந்திருக்கும் இடத்திற்கு அருகாமையில் புங்குடுதீவு - யாழ்ப்பாணம் பெருஞ்சாலை செல்கின்றது. இப் பெருஞ்சாலை அமைப்பதற்கு முன்னர் இத்துறை வழியாக புங்குடுதீவு, நயினாதீவு மக்கள் யாழ்ப்பாணம் சென்று வந்தனர். இதனால் இக்கிராமத்தை துறையூர் என அழைத்தனர்.

இக்கிராமம் எப்பொழுது உருவாகியது, இங்கு குடியேறிய மக்கள் எங்கிருந்து வந்தனர், இவ்வாலயம் எப்பொழுது முதலில் அமைக்கப்பட்டது போன்றவற்றுக்கு தெளிவான நம்பிக்கையான ஆதாரங்களைப் பெறுவது கடினமாக இருக்கின்றது. வழிவழியாக வந்து கொண்டிருக்கும் தகவல்கள், பரம்பரைக் கதைகள் மூலம் இக்கிராமத்தவர்கள் இந்தியாவின் கேரளப் பகுதிகளிலிருந்து பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இங்கு வந்து குடியேறியுள்ளனர் எனக் கொள்ள முடியும். இக் குடியேற்றம் யாழ்ப்பாணப் பகுதிக் குடியேற்றங்களுடன் தொடர்புடையது. இங்கு குடியேறிய மக்கள் "முக்குவ" குலத்தைச் சேர்ந்தவர்கள். யாழ்ப்பாணப் பகுதியில் நவாலி, அராலி, கொழும்புத்துறை, சுழிபுரம், கேரதீவு ஆகிய கிராமங்களிலும் இக் குலத்தவர்கள் வாழ்கின்றனர். வேலணை

உ

# வேலணை துறையூர் இலந்தைவனம் ஹரிஹரபுத்திர ஐயனார் கோவில்



துறையூர் மக்களுக்கும் மேற்படி கிராமங்களில் வாழும் இக்குலத்தவர்களுக்கும் இடையே மிகப் பழங்காலம் தொடக்கம் உறவு நிலவி வருவதைக் காணலாம்.

துறையூர் மக்கள் மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டு வந்தனர். இவர்களது வாழ்வு நெய்தல் நிலப் பண்புகளைப் பெற்றிருந்தது. இப்பின்னணியில் நெய்தல் நிலக் கடவுளாகிய ஐயனார் ஆலயம் இங்கு அமையப் பெற்றது. இவ்வாலயம் எப்பொழுது அமையப் பெற்றது, என்ன சூழ்நிலை நிலவியது என்பன பற்றி நோக்குகையில், இவ்வாலயத்தின் காலம் குறித்துத் தெளிவான விபரம் கிடைக்க வில்லை. எனினும் இவ்வாலயம் பல நூற்றாண்டுகள் பழமைவாய்ந்ததெனவும், இக் கிராமத்தின் தோற்றம், வளர்ச்சியுடன் இரண்டறக் கலந்ததெனவுங் கொள்ளலாம். கிராமம் உருவாக்கம் பெற்ற பொழுது ஆலயம் உருவாகியிருக்க வேண்டும். மேலும் இக்கிராம மக்கள் கடற்றொழிலில் ஈடுபட்டதால் ஐயனார் ஆலயம் உருவாகியது. இவ்வாலயம் அமைப்பதற்கு காரணமான பல்வேறு கிராமத்துக் கதைகள், அற்புத நிகழ்ச்சிகள் பற்றி இன்றும் மக்கள் நினைவு கூருவர். போர்த்துக்கேசர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிய போது பல கரையோர மீன்பிடிக் கிராமங்கள் கத்தோலிக்க மதத்தைத் தழுவியனவாக இருந்தபோது, இவ்வூர் மக்கள் இக்கிராமத்து ஏனைய மக்களுடன் கொண்ட நல்லுறவு காரணமாகவும், ஐயனார் மேல் கொண்ட பக்தியாலும் சைவர்களாகத் தொடர்ந்தும் இருந்து வருகின்றனர். போர்த்துகீசர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் மற்றும் சுதந்திரத்திற்கு பிறகும் கூட இக்கிராமத்து மக்கள் எல்லோரும் சைவ சமயத்தில் பற்று உறுதியுடையவராக இருப்பதற்கு முக்கிய காரணம் இவர்கள் ஐயனார் மேல் கொண்ட பக்தியேயாகும்.

இன்றைய ஹரிஹர புத்திர ஐயனார் ஆலயம் நீண்டதொரு வரலாற்றைக் கொண்டபோதும், தற்போதைய ஆலயம் கிராமத்தின் தெற்குப் பக்கத்தில் கடற்கரைக்கு அண்மித்து இலந்தைவனப் பகுதியில் அமைந்துள்ளது. இதனால்தான் இவர் இலந்தைவன ஹரிஹரபுத்திர ஐயனார் என அழைக்கப்படுகின்றார். இவ்வாலயத்தின் கட்டிடவமைப்பு மிகச் சிறியளவில் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆரம்பமாகி படிப்படியாக விருத்தி பெற்று வந்தது. இவ்வாலய அமைப்பிற்கு கிராமமக்களிடம் பெற்றுவரும் குத்தகைப் பணமே பயன்படுத்தப்பட்டதால் இக் கிராமமக்களின் பங்களிப்புகளையே ஆரம்பகாலம் தொட்டு இன்று வரை காணக் கூடியதாகவுள்ளது. இன்றும் இக்கிராமத்து மீன்பிடியாளர்கள் தங்கள் தொழிலில் கிடைக்கும் வருமானத்தில் 1/10 பங்கை ஐயனாருக்குக் கொடுக்க வேண்டும். இப்பங்களிப்பு விகிதம் காலத்துக்குக் காலம் சிறுமாற்றங்கள் பெற்றிருக்கலாம். 19ஆம் நூற்றாண்டின்

பிற்பகுதியிலும், 20ம் நூற்றாண்டிலும் இவ்வாலயம் சிறப்புற இயங்கியதற்கு ஆதாரங்கள் உண்டு.

இவ்வாலயத்தில் நித்திய பூசையுடன், வருடாந்த திருவிழாக்களும் நடைபெறுகின்றன. குடாநாட்டில் விவசாய, மீன்பிடிக் கிராமங்களில் காணப்படும் சிறு தெய்வங்களுக்கு உள்ளூரில் வாழும் மக்களே சிறப்புப் பூசைகள், விளக்கு வைத்தல் போன்றவற்றைச் செய்து வருவது வழக்கம். இன்று பல இடங்களில் இச் செய்முறை இருந்து வருவதைக் காணலாம். ஆனால் ஐயனார் கோயில் மிக நீண்டகாலமாக பிராமண பூசகரைக் கொண்டுள்ளது. மற்றும் கிராமத்துப் புரோகித செயற்பாடுகளும் பிராமண பூசகராலேயே செய்யப்பட்டு வருகிறது. இக்கட்டமைப்பும் ஒழுங்கும் இக்கிராமத்து மக்களின் ஒற்றுமையையும் இவ்வாலயத்தின் வரலாற்றுச் சிறப்பையும் காட்டிநிற்கின்றன.

1965ஆம் ஆண்டில் பெரியளவில் ஆலயப் புனருத்தாரணப் பணிகள் தொடங்கி பல இடர்பாடுகளால் இப்பணிகள் 1982 இல் முடிவு பெற்றன. இவ்வாலய புனருத்தாரணப் பணிகள் இக்கிராமத்து மக்களின் கடின முயற்சியாலும் ஒற்றுமையாலும் நிறைவேறியமை பற்றிக் கிராமமக்கள் பெருமை கொள்வர். பத்துத் திருவிழாக்களைக் கொண்ட வருடாந்தத் திருவிழா நிகழ்ச்சியும் இடம்பெற்றுவருகின்றது.

1. முதலாம் திருவிழா - கோயிற் பொறுப்பு
2. இரண்டாம் திருவிழா - (நடத்துவோர் - தருமர், சிவகடாட்சம், முத்துலிங்கம்)
3. மூன்றாம் திருவிழா - (நடத்துவோர் - இராமர், கணபதியார், செல்லத்துரையர், நல்லதம்பி)
4. நான்காம் திருவிழா - (நடத்துவோர் - கதிரவேலர், நாகமுத்தர், சின்னத்தம்பி)
5. ஐந்தாம் திருவிழா - (நடத்துவோர் - செல்லப்பா, இராமர், நமசிவாயம்)
6. ஆறாம் திருவிழா - (நடத்துவோர் - பிள்ளையார் தாமோதரம்பிள்ளை, சின்னையா, குட்டியர் பிற்காலத்தில் செல்லையா)
7. ஏழாம் திருவிழா - (நடத்துவோர் - சின்னத்தம்பி கந்தர் சபாபதி சகோதரர்களும்)
8. எட்டாம் திருவிழா - (நடத்துவோர் - சப்பாணர் பகுதி - நாகநாதர் சின்னப்பொடியன் சகோதரர்கள்)
9. ஒன்பதாம் திருவிழா - (நடத்துவோர் - சின்னார் நாகன் பகுதி - பரியாரி முருகேசு, ஆறுமுகம்)
10. பத்தாம் திருவிழா பங்குனி உத்திரத்தில் இடம்பெறும் - (நடத்துவோர் - பெரிய நாகநாதன் பகுதி - ஐயம் பிள்ளை, செல்லர் குடும்பத்தவர்)

ஒன்பது திருவிழாக்களும் இக் கிராமத்தில் வாழும் முக்கிய குடும்பங்களால் நடத்தப்படுவது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு திருவிழாக்காரரும் தங்கள் தங்கள் பரம்பரை உற்றாரை இணைத்து ஒவ்வொருவரிடமிருந்தும் உதவிகளைப் பெற்று திருவிழாவை நடத்துவர். திருவிழா மூலம் குடும்பப் பாரம்பரியம் மீள நினைவூட்டப் பட்டு, உறவு வலுப்படுத்தப் படுவதைக் காணலாம். இக்கிராமத்து மக்கள் ஒன்றாக இணைந்து ஐயனார் ஆலயம் மூலமாக வேலணை பெருங்குளம்

முத்துமாரி அம்மன் 7வது கப்பல் திருவிழாவையும், நயினாதீவு நாகபூசனி அம்மனின் 7வது கப்பல் திருவிழாவையும் முறைதவறாது ஒழுங்காகச் செய்து வருகின்றனர். இச் செயற்பாடு இவ்வாலயத்தின் சிறப்பையும் கிராம மக்களின் பரந்த உறவு நிலையையும் காட்டுகின்றது. மேலும் இக்கிராமத்தில் காணப்படும் பல்வேறு நிறுவனங்கள் யாவும் ஐயனாரின் பெயரில் இருப்பதைக் காணலாம்.

1. ஐயனார் பாடசாலை
2. ஐயனார் சனசமூக நிலையம்
3. ஐயனார் விளையாட்டுக் கழகம்
4. ஐயனார் கலாமன்றம்
5. ஐயனார் முன்பள்ளி

1960 களில் கோயில் குத்தகை விடயமாக ஏற்பட்ட பிரச்சினை காரணமாக கிராமத்தின் ஒற்றுமையில் ஒரு பின்னடைவு ஏற்பட்டது. இப் பிரச்சினையால் ஐயனார் கோயில் கட்டமைப்பிலிருந்து பிரிந்து சென்றவர்கள் இக் கோயிலுக்கு அருகாமையில் ஒரு பெரிய ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலை அமைத்துள்ளனர். எனினும் காலக்கிரமத்தில் இருபகுதியினரிடையே நிலவிய கருத்து வேற்றுமை முற்றுப்பெற்று மீண்டும் ஒன்றிணைந்துள்ளனர். இப் பிரச்சினையால் இக்கிராமம் ஐயனாருடன் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயில் ஒன்றையும் பெற்று முன்னரிலும் பார்க்க மேலோங்கி நிற்பதைக் காணலாம். ஹரிஹரபுத்திர ஐயனார் ஆலயம் இன்று பல வழிகளில் சிறப்புறத் திகழ்வதுடன் சமயப் பணிகளில் மாத்திரமன்றி சமூகப் பணிகள் செய்யும் *ஆற்றலைப் பெற்றுக் கொண்டிருப்பது* இக்கிராம மக்களுக்குக் கிடைத்த பெரிய பாக்கியமாகும்.



## ஆலயங்கள்

# மயிலைப்புலம் அருள்மிகு ஐயனார் ஆலய வரலாற்றுத் தொன்மம்

*திரு. தி. சிவசாமி (தில்லைச்சிவன்)*
*அதிபர் - வேலணை*

இந்தவியாசம், கர்ணபரம்பரையாக வந்த செவிவழிச் செய்திகளையும், 1930 - 2000 ஆண்டு காலம் வரையான கண்டு கேட்ட அனுபவச் சான்றாதாரங்களையும் மேற்கொண்டு எழுதப் பெற்றது.

மயிலைப்புலம் ஐயனார் ஆலய வரலாறு பற்றி எழுத எடுத்துக் கொண்ட காலம் 1800 - 2000 ஆண்டுகாலப் பகுதியி லடங்கும், இரு நூற்றாண்டுகள்.

இதற்கு முந்தைய காலவரலாற்றுத் தரவுகளைக் கர்ண பரம்பரையாகத்தானும் என்னால் அறியமுடியவில்லை. ஆனால் கீழே குறிப்பிடப்படும் எல்லைப் பரப்பினுள்ளே, அறுபது வரையிலான குடியிருப்புப் பிட்டிகளும், அவற்றை மூடி வளர்ந்திருக்கும் வேம்பு இலுப்பை பனைமரங்களும், கறுப்பு வெள்ளை ஓட்டுத் துணிக்கைகளும், பாசிமணிகளும், வளவோரங்களில் குவித்துக்கிடக்கும் சிப்பி சங்குகளின் எச்சங்களும் காணிநிலங்களுக் கிட்டுள்ள பெயர்களும் இங்கொரு மக்கட்கூட்டம் வாழ்ந்தமைக்குச் சான்றாகும். யாழ்ப்பாண அரசர்களுக்காக இங்கிருந்து படை உதவி செய்தவர்களும் இருந்தார்கள் எனவும் கேள்வி.

எனது இந்த வரலாற்றுக்கு உரிய நிகழ்விடமாகச் சரவணை கிழக்கையும் வேலணை வடக்கையும் உள்ளடக்கிய பகுதியை எடுத்துக் கொண்டால் பெரிதும் சிறிதுமான பத்துக் குளங்களையும்

உ

# மயிலைப்புலம் அருள்மிகு ஐயனார் ஆலயம்



வேலணை - 5

பலநூறு பரப்பு நெல் வயல்களையும் இதேயளவு மேட்டு நிலங்களையும் ஆங்காங்கே பனந்தோப்புகளையும் அதனோடு சேர்ந்தாற்போல் உள்ள சில குடியிருப்புகளையும் காணலாம்.

இந்தப் புலங்களுக்கும் பிட்டிகளுக்கும் இட்டுள்ள பெயர்களை ஒல்லாந்தர் காலத் தோம்புகளைப் புரட்டிப்பார்த்தால் மூக்கில் விரல்வைத்து வியக்க வேண்டியுள்ளது. சத்திரியப்புலம் அதனருகே மஞ்சட்கேணி, சூடுவெந்த புலம், ஆவுடையார் புலம், ஆவரந்துலா எனப் புலங்களும் குயவன்பிட்டி, கும்பிடுபிட்டி ஆணை மேடு, தட்டான் சீமால், ஆலைக்கிடங்கு, கொல்லன் சீமால் எனக் குடியிருப்பு மேடுகளும் பெயர் பெற்றிருக்கின்றன. இப்பெயர்கள் வரக் காரணமாக இருந்த சத்திரியர்களையோ கொல்லர், குயவர், ஆலைக்காரர்களையோ வரலாறு குறிக்கவில்லை. மிகப் பழங்காலத்தில் இங்கு வாழ்ந்த மக்கள் புயல், வெள்ளம், கொள்ளைநோய் காரணமாக அழிந்தொழிந்து போனார்களோ! அன்றி இன்று போல் அன்றும் ஓர் படையெடுப்பு நடந்து மக்கள் இடம் பெயர்ந்து சென்றார்களோ தெரியவில்லை. ஆனால் மிச்சசொச்சமாக எஞ்சியிருந்த மக்களுடன் யாழ்ப்பாணம், பூநகர் தென் இந்தியாவிலிருந்து நெடுந்தீவூடாகச் சிலரும் சேர்ந்து கொண்டனர். இம்மக்கட் கூட்டம் சைவம் சார்ந்த அறுவகை மதத்தினராகவும் தமிழ்ப் பௌத்தர்களாகவும் இருந்திருக் கின்றனர். போர்த்துக்கேயரால் வழிபாட்டி டங்கள் அழிந்துபோக முன்னோரால் வழிபட்டு வரப்பட்ட விருட்சங்களிலே தத்தமது இஷ்ட தெய்வங்களை ஆவாகனம் செய்து வழிபட்டனர்.

இவ்வாறாக நம்முன்னோரால், ஆல், கிளுவை ஆகிய மரங்களில் ஆவாகித்து வழிபட்ட தலமே மயிலைப்புலம் ஐயனார் ஆலயம்.

காட்டு நொச்சிகள் அதிகமாக இருந்ததால் மயிலைப் புலம் என்ற பெயர் வந்திருக்கலாம். மயிலைக்காட்டு நொச்சி அல்லது மயிலாப்பூர் அந்தணர் ஒருவர் வழிபட்ட இடமாகவும் கூடும். இவ்வாலயத்தைக் கட்டுவன் ஐயனார் கோவில் என்றுங் கூறுவர். ஆலயத்தின் தெற்கே கட்டுவன் குளம் இருக்கின்றது. இக்குளக்கரையை அண்டியுள்ள வயல்களில் நெல்லும், மேட்டுநிலத்தில் உழுந்து, வரகென்ற தானியங்களையும் மக்கள் தம் தேவைக்காகப் பயிரிட்டனர். பனைகளால் வரும் பொருட்களாகிய கிழங்கு, ஒடியல், பாய், கடகம், பெட்டி என்பனவே இம்மக்கள் பணத்தைக்காணும் விலைப் பொருட்களாக இருந்தன.

சரவணை கிழக்கில் இருக்கும் இக்கோவில் வேலணை வடக்கின் மேற்கெல்லையாகவுள்ளது. 19ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலத்தில் இருப்பை, நாவல், வேம்பு, புளி போன்ற பெருவிருட்சங்களும் மஞ்சவொண்ணா, மாவிலங்கை, இலந்தை மரங்களும், நொச்சி, கொன்றை, காண்டை, காரைப் புதர்களும் நிறைந்த வனமாக இருந்தது.

காட்டுக்கோழி, கௌதாரி, மணிப்புறா, நாகணவாய் முதலிய பறவைகளும், இவ்வனத்தின் வடக்கில் இருக்கும் கடற்கரையில் கோட்டான் குருவிகளும், கடற்காகம், நாரை, தாரா, கொக்கு எனப்பல பட்சி ஜாலங்களும், ஒலியெழுப்பி ஆசிப்பதைக் கேட்கலாம். இத்தகைய எழிலாட்சி செய்யும் இவ்விடத்தில் ஐயனார் அருளாட்சி செய்கின்றார் என்ற ஐதீகம் நெடுங்காலமாக இவ்வூர்மக்களிடம் உண்டு.

வடக்கில் இருக்கும் ஓடைக்கடலைக் கடந்து மேலே சென்றால் பற்றைகள் சூழ்ந்த புல்வெளியைக் காணலாம். அப்புல்வெளி மாரியில் சதுப்பு நிலமாகக் காணப்படும். அங்கு மேற்படையில் ஊரியும் கீழே சிப்பிப்படையும் ஆறடி ஆழத்தில் சங்குகளும் ஏராளமாகக் கிடைக்கும். சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் யாழ்ப்பாணத்தை அண்டிய சமுத்திரப் பகுதியில் ஏற்பட்ட பூகம்பத்தால் ஆழமான சமுத்திரத்தை நோக்கி கடல்நீர் சென்றதால் இப்பகுதி மேடாக வந்ததென்று கூறும் அறிவியலாளருமுண்டு. எவ்வாறாயினும் கடல், நிலமாகிப் புல்வெளியாகி எம்மூரவர்களின் ஆடுமாடுகள் மேயும் மேச்சற்றரவையானது.

சரவணை மயிலைப்புலத்தைச் சேர்ந்த மக்கள் தமது ஆடு மாட்டு மந்தைகளை கடலைக்கடந்து புல்வெளியில் மேயவிடுவது வழக்கம். நாய் நரித்தொல்லைகளுக்கு அஞ்சி மந்தைகளை அடிக்கடி சென்று பார்க்கும் மக்களுக்கு, நொச்சிக்காட்டின் மையத்தில் இருந்த ஒரு கிளுவைமரம் கண்ணிற்பட்டது. அதனருகில் செப்பமிட்ட ஒரு சிறுகல்லில் கற்பூரம் கொழுத்திய அடையாளம் தெரிந்ததோடல்லாமல் ஒரு சிறுமண் சுட்டியில் எரிந்ததிரி வேப்பெண்ணைமணம் வீசியது. என்னவோ ஏதோவென்று பயந்த மக்கள், இரவு வேளைகளில் இம்மரத்தைச் சுற்றி, ரம்மியமான ஒளிபிரகாசிப்பதையும், அதனிடையே வெள்ளை உடை போர்த்திய உருவெளித்தோற்றம் தெரிவதையும் நினைத்துப் பார்த்தனர். திகில் அடைந்தநிலையில் "எத்தனையோ இரவுகளில் மந்திர உச்சாடன ஓசைகள் கேட்டனவே! தேவர்களால் வழிப்படப்படும் தெய்வந்தான் இங்கிருக்கிறார்" என்று பேசிக் கொண்டு சென்றவர்களால், ஊர்திரண்டு மரத்தடியில் கூடியது. கூடிய ஜனங்கள் ஒவ்வொருவரும் தாம் தாம் கண்ட தரிசனங்களையும் அற்புதங்களையும் தங்களிடையே பரிமாறி வியந்தனர். உருவேறிய ஒரு மூதாட்டி தெய்வம் வரப் பெற்றவளாய் "அரிகரபுத்திரராகிய ஐயனார்தான் இங்கே இருக்கிறார், எம்மையும் எம்மந்தைகளையும் பாதுகாத்து வரும் காவற்தெய்வம் இவர். இவரை நாம் ஆதரிக்க வேண்டும். பொங்கிப் படைக்க வேண்டும்" என்று ஆவேசமாகக் கத்திக் கொண்டு விழுந்து விட்டாள்.

இச்சம்பவங்களால் கிராமத்து மக்களிடம் பயப்பிராந்தியுடன் கூடிய பக்தியேற்பட்டு

விட்டது. ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற காணிக்கைகளைக் கொடுத்தனர். அன்று இராப்பொழுது முற்றும், உரிய ஆயத்தங்களைச் செய்து பொழுது விடியும் போது பொங்கலிட்டுப்படைத்தனர். அன்று ஆனி அமாவாசைக்கு முந்திய சதுர்த்தி நாள். இன்றும் அத்தினமே இக்கோவிலின் பொங்கற்றிருநாள் என்பர்.

தொடர்ந்து ஆண்டுக்கொரு பொங்கலும், செவ்வாய் வெள்ளிநாட்களில் விளக்கு வைப்பதுமாகக் கிளுவை விருட்சத்தை வழிபட்டுவந்த மக்கள், அக்கிளுவை மரத்தில் ஒரு ஆலங்கன்று முளைத்து எழுவதைக்கண்டு, வியந்து நின்றனர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த ஆலங்கன்று, கிளைத்துச் சடைத்துக் கிளுவையை மூடி விழுதுகளைப் பரப்பி நின்றது.

இதனை ஒரு அதிசயமாகக் கருதி ஐயனார் பெருமையும் புகழும் பெருக வழிபடுவோர் தொகையும் கூடி பொங்கற் பானைகளும் நேர்த்திக் காணிக்கைகளும் அதிகமாயிற்று.

அயலில் மற்றோராலயம் இல்லாத நிலையில், தனி ஆலமரத்தையனாகப் பக்தர்களுக்கு இரண்டு தசாப்தங்களுக்கு மேலாக இஷ்ட சித்திகளை வழங்கி வந்த ஐயனாருக்குக் கற்கோவில் எடுக்க வேண்டும் என்ற எண்ணம் நன்னியர் (சுப்பிரமணியம்) என்பாரிடம் ஏற்பட்டது. இவரது காலம் அண்ணளவாக 1850 எனக் கொள்ளலாம். இவரால் தொடங்கப்பட்ட திருப்பணி இவரது மகனும் சோதிடருமான வேலுப்பிள்ளை என்பவரால் மூன்று மண்டபங்கள் கொண்ட மடாலயமாக நிர்மாணிக்கப் பெற்றது. கோவிலின் உள்ளே கருவறையில் ஐயனார் கொலுவீற்றிருக்கும் பீடவடிவான இலிங்கம் மட்டுமே வைத்து பூசாகாரியங்கள் நடைபெறலாயின. கோவில் அமைந்த போதும் ஆலமரத்திலேயே ஐயனார் அருவுருவாக இருக்கின்றார் என்ற நம்பிக்கை மாறவில்லை. இக்காலத்தில் வைசூரி, வயிற்றோட்ட நோய்களுக்கு ஆளானவர் ஐயனாரை வழிபட்டு, ஆலமரத்தின் கீழ் பாடுகிடந்து நோய்மாறிச் சென்றார்கள் என்பர்.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப்பத்தாண்டுகளை இக்கிராமத்தின் பொற்காலம் என்பர். கோவிலின் தென்கோடியில் இரு குளக்கரைகளிலுள்ள சுமார் ஆயிரம் பரப்பு நெல்வயல்களும் பரப்புக்கு மூன்று புசலுக்குக் குறையாத விளைவைத்தந்தது. ஆடு மாட்டுப்பட்டிகள் அடைத்து நிலம் பண்படுத்தப்பட்டிருந்தது. இதனால் உணவுத் தேவை நிறைவுற்றது. கோவிலின் வடக்கிலும் மேற்கிலுமிருந்து காடுகளை அழித்து மேடுகளைச் சரித்துச் சமப்படுத்திச் செய்த புகையிலைப்பயிர் செய்கை பணப்புழக்கத்தைத் தந்தது. மக்கள் கல்வியிலும் புறவிடயங்களிலும் மனதைச் செலுத்தினர்.

ஆலயதரிசனத்துக்காகவும் பொழுது போக்குக்காகவும் ஆலடியில் கூடும்மக்கள்

கோவிலுக்கு ஒரு குருக்கள் இல்லாத குறையை உணர்ந்தனர். ஊருக்கு ஒரு புரோகிதர் இல்லையே என்ற கவலை வேறு. அக்காலத்தில் முடிசூடா மன்னனாகவும் அரச காரியங்களுக்கெல்லாம் அதிகாரியாகவும் அயலவராகவும் இருந்த முத்துமணியகாரரிடம் ஆலோசனை பெற மூன்று நான்குபேர் சென்றனர். அவரின் பூரண ஆதரவுடனும் ஆசியுடனும் அராலியிலிருந்த பிராமணோத்தமரான செல்லையா குருக்கள் குடும்பத்துடன் கோயிலடியில் குடியேறினார்.

ஊதியமின்றி, ஊர்புரோகிதமே வருவாயாக, 1890 இன்பின் வந்துகுடியேறிய குருக்களின் வரலாறும் இக்கோவிலின் வரலாறும் ஒன்றுடன் ஒன்று சங்கமித்து 1970 வரை நீடித்தன.

குருக்களின் வருகையோடு கோயிற் சூழலும் முன்னரைவிட கலகலப்பானது. நோய்பிணி உற்றோருக்கு மந்திரநீறணிந்து சுகப்படுத்துவதும், பேய்பிசாசு அணைந்ததென்று வருவோரை ஆசுவாசப்படுத்தி மந்திர உச்சாடனஞ்செய்து திருநூற் காப்புக் கட்டித் தெளிவு பெறச் செய்வதும் இளஞ்சிறார்களுக்கு வித்தியாரம்பம் செய்து வைப்பதும், பிதிர்கடன் செய்யக் கேட்போரின் நிலைமை கருதிச், சிலருக்குத் தமதில்லத்திலேயே அக்கடமைகளைச் செய்விப்பதுமாக இருந்ததால், ஆலயச் சூழல் அதிகமானோரைக் கவர்ந்திழுத்தது.

1900ஆம் ஆண்டு காலப்பகுதியில், பெருங்காற்றுடன் பெய்த கடும் மழையால் வீடு வாசல்களை இழந்து கோயில் வளாகத்தை வந்தடைந்த மக்களை ஐயர் ஆதரித்து உபசரித்தார். அவர்களுக்காக ஐயர் சமைத்த பாற்கஞ்சி வார்க்க வார்க்க வற்றாதிருந்ததாகப் பலர் கூறிவியந்தனர்.

ஐயனாரின் அருட்செயல்கள், கிராமங்கள் தோறும் பிரபல்யம் பெற்றது. பிள்ளை கேட்டு விரதம் பிடிப்போர், உயிர்ப்பிச்சை கேட்டு உபவாசமிருப்போர், தாலிகேட்டுத் தவமிருப்போர், செய்தொழில் சித்திக்கக் கேட்போரென்றித்திறத்தோர் எல்லாருங் கூடி ஆண்டுதோறும் ஆனித்திங்களில் பொங்கலிட்டுப் படைத்து மகிழும்விழா, பெருங்கோலாகலமாக நடந்து வந்தது.

இவை இவ்வாறாக, செல்லையரின் மகன் கணபதி ஐயர் வேதாகம பண்டிதராகிக் குருக்கள் பட்டம் பெற்று தஞ்சாவூர் அம்மையைப் பாணிக்கிரகம் செய்து கொண்டு, கோயிற்பூசையையும் ஊர்புரோகிதத்தையும் ஏற்றார். இவர் காலத்தில் கோவில், புதுப் பொலிவினையும் அதிகமகிமையையும் பெற்று விளங்கியது.

புராணங்களைப் படிப்பதும் பயன் சொல்வதுமான புலவர்கள் குழாமும் கேட்டு அனுபவிக்கும் பக்தர் - பாமரக் குழாங்களுமாகப் பலர் கூடும் சூழலில், எல்லோருக்கும் அவரவர் சீருக்கேற்ற உபசரிப்புகளைக் குருக்கள் செய்து மகிழ்வார்.

1922ஆம் ஆண்டு காலப்பகுதியில், கோவிலுக்கு அண்மையாக ஒரு பாடசாலை தொடங்கப் பெற்றது. அதன்

ஆசிரியராக திரு. சி. அருளம்பலம் பணிபுரிந்த போது, திரு. சி. சதாசிவம் பிள்ளை, தான் அவரிடம் படித்ததாகவும் எனக்குக் கூறினார். மேலும் அப்பாடசாலை மூடப்பட்ட நாளில் இருந்து இப்பகுதியில் ஒருபாடசாலை நிறுவும் எண்ணம் தனக்கிருந்ததாகவும் ஆத்திசூடி வித்தியாசாலையைத் தொடக்கி வைத்துப் பேசிய திரு. சி. சதாசிவம்பிள்ளை ஆசிரியர் அவர்கள் கூறினார். 1922இல் உண்டான ஆசை, சரியாக முப்பது ஆண்டு கழிந்து நிறைவேறியதில் மகிழ்ந்திருந்த பலரும் இன்று இடிந்தும் சிதைந்தும் மக்கட் குடியிருப்புகள் அகன்றுபோய், ஆத்திசூடி மூடப்பட்டுள்ள நிலையை காணின் சகிப்பாரோ! யாரறிவார்?

இது இவ்வாறாக 1952ஆம் ஆண்டுகாலப்பகுதியைப் பின்னோக்கிப் பார்த்தால் கோவிற் குருக்களின் விடாமுயற்சியும் மக்களின் ஒத்துழைப்பும், அப்போது கோவிலின் முகாமையாளராக விருந்த திரு.வே. கெங்காதரம்பிள்ளை அவர்களின் அனுசரணையும் சேர்ந்து, மடாலயமாகவிருந்த கோவில் மூலஸ்தானப் பண்டிகையும் முடியும்சூடிய ஆகமக் கோவிலானது, இதன்மேல் பொங்கலுக்கு முந்திய எட்டுநாட்களும் அலங்காரத் திருவிழாக்கள் அதிவிமரிசையாக நடைபெற்றும் வந்தன.

இக்காலப்பகுதியில், கோவிலுக்கு வருமானந்தேடும் நோக்கில் ஆடு, கோழி பலியிடும் முயற்சி முன்னெடுக்கப்பட்டது. கிராமங்களிலே இதற்கான பிரசாரமும் முடுக்கிவிடப்பட பலர் நேர்த்திகளை நிறைவேற்ற, பலிப்பொருட்களைக் கொணர்ந்தனர். பலியிடுதலைத் தடை செய்து கணபதிக் குருக்கள் விடுத்த கண்டிப்பான கட்டளைக்குப் பணிந்து நேர்த்திப்பலிகளை அப்படியே விட்டுவிட்டு மக்கள் சென்ற மறுநாள் கூடியகூட்டம், கடாக்களையும் சேவற் கோழிகளையும் ஏலங்கூறி விற்று, சேர்ந்த பணத்தை உண்டியலில் போட்டனர் எனக் கூறக்கேட்டேன். இந்த வழக்கம் இதன் பின்னும் சிறிய அளவில் நடப்பதைக் காணக்கூடியதாகவுள்ளது.

கோயிலின் திருமஞ்சனக்கிணறும் வேறுசில அயற்கிணறுகளும் உவர்நீர் கிணறுகளாகும். இக்கிராமத்தில் நன்னீர், உவர்நீர்க்கிணறுகள் மாறி மாறி உள்ளன. கோவிற் தேவைக்கான நன்னீரைச் சற்றுத் தூரத்திலே இருந்தே பெறவேண்டி யிருந்தது. மனது வைத்து பண்டிதர் கா.பொ. இரத்தினம் தனது தொகுதி ஒதுக்கீட்டில் இருந்து கொடுத்த பணத்தினால், கோயிலருகில் சோ.ப.கி.மு. சங்கம் ஒரு கிணற்றைத் தோண்டிக் கட்டியது. அக்கிணற்று நீரே கோவிலுக்கும் ஊருக்கும் உதவுதலையும் ஐயனாரின் புதுமை எனக் கூறுகின்றனர்.

ஐயனார் மீது அளப்பரும் பக்தியும் ஊர் அபிமானமும் உடையவராய் அயராது விசுவாசத்துடன் பூசைபுனற்காரியங்களில் ஈடுபட்டுழைத்த ஐயர் 1970ஆம் ஆண்டளவில் கோவிலை முகாமையாளரிடம்

பொறுப்புக் கொடுத்துவிட்டு ஊரை விட்டே வெளியேறிவிட்டார்.

முகாமையாளர் பொதுமக்களைக் கூட்டி கோவில் நிர்வாகத்தைப் பொதுமக்களிடம் கையளித்தார். அன்றிலிருந்து கோவில் மக்களின் சொத்தாகியது. மக்கள் திருப்பணிச் சபை அறங்காவற்சபை, பூசைநிதியச்சபை எனச் சபைகளை நிறுவித் திருப்பணிகளைச் செய்வித்தும் கும்பாபிஷேகம் நடத்துவித்தும் பூசகர்களை நியமித்தும் திருவிழா பொங்கற் காரியங்களை நியமம் தவறாமல் செய்து வந்தார்கள்.

இதன் மறுபக்கமாக ஒன்றினைப் பதிவு செய்யத்தான் வேண்டும்.

ஜனநாயகத்தைவிட நல்லவன் மிகவல்லவனான ஒருவனின் சர்வாதிகாரம் மிகச்சிறந்தது. நாட்டுக்குஞ்சரி, கோவிலுக்குஞ்சரி, எந்த ஸ்தாபனமானாலுஞ்சரி இது பொருந்தும். தமிழ்ச்சமுதாயத்துக்கு வேண்டியதும் இதுவே.

கணபதிக் குருக்களின் சர்வாதிகாரத்தில் கோவிற் கருமங்கள் கட்டுப்பாடாகவும் கட்டங்கட்டமாகவும் படிப்படியாக வளர்ந்தன. இன்று ஜனநாயகம், எல்லோரும் எஜமானர் என்பதும் இக் கோவிலின் இன்றைய வரலாற்றின் ஒருபகுதியாகும்.



உ

# செட்டிபுலம் காளவாய்த்துறை ஐயனார் கோவில்



வேலணை - 1

## ஆலயங்கள்

# செட்டிபுலம், காளவாய்த்துறை ஐயனார் கோவில்

*பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை*
*யாழ்-பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்*

தீவுப் பகுதியில் செட்டிப்புலம், கெட்டில், தம்பாட்டி, மெலிஞ்சிமுனை, நயினாதீவு, அனலைதீவு ஆகிய இடங்களில் வாழும் மீனவ சமூகத்தினரை பரத குலத்தவர் என அழைப்பர். தீவுப் பகுதிக்கு வெளியே இச் சமூகத்தவர்கள் அராலி, பூநகரி போன்ற இடங்களில் வாழ்கின்றனர்.

செட்டிப்புலத்தில் வாழும் மீனவ சமூகத்தவர்கள் மீன்பிடித் தொழிலிலும், அதனுடன் சார்பான தொழில்களிலும் ஈடுபட்டு நீண்டகாலமாக சிறப்புற வாழ்ந்து வருகின்றனர். செட்டிப்புலத்து மக்களது வாழ்வையும், வளத்தையும் சமூக செயற்பாடுகளை வழிநடத்துபவர் காளவாய்த் துறை ஐயனார். நெய்தல் நிலக் கடவுள் ஐயனாரை வழிபட்டு, செட்டிபுல மக்கள் தங்கள் கருமங்களை ஆற்றுவர்.

செட்டிபுலம் எப்போது உருவாகியது? இக்கோயில் எப்பொழுது அமைக்கப் பட்டது? இரண்டிற்கும் விடைகாண்பதற்கு போதிய சான்றாதரங்கள் இல்லை. எனினும் சங்கிலி அரசன் காலத்துடன் தொடர்புடைய தெனக் கொள்ளலாம்.

ஐயனார் ஆலயம் சிறியளவில் இருந்து பின்னர் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கல்லினால் கட்டப்பட்டு, பின்னர் 20ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் 1940, 1950 களில் முழுமை பெற்றதெனலாம். இக்கோயிலுக்கு செட்டிபுலம் மீன் சந்தை குத்தகையினால் கிடைத்த பணமும், மற்றும் கடல் அட்டை பிடிப்பால்

கிடைக்கும் வருமானமும், மற்றும் இக் கிராமத்தின் மக்களின் அன்பளிப்பும் முக்கிய இடம்பெறலாயிற்று. இக்கிராமத்து மக்கள் இக்கடலில் மீன்வளம் குறையும் போது, பூநகரி, அரிப்பு, சிலாவத்துறை போன்ற இடங்களுக்கு தற்காலிகமாக இடம்பெயர்ந்து மீன் பிடித்தலில் ஈடுபட்டு பொருள் தேடுவர். இத்தேட்டத்தில் குறிப்பிட்ட விகிதம் ஐயனாருக்கு கொடுப்பர். இத்தகைய பங்களிப்பு மூலம் கோயில் நல்லநிலையை அடைந்தது. ஐயனார் ஆலயம் கடற்கரையில் நல்ல உயரமான இடத்தில் அமைந்திருப்பதுடன் கிழக்கு நோக்கி கடலைப் பார்த்துக் கொண்டு இருப்பதால் செட்டிபுலக் கடலில் தொழில் செய்யும் மீனவர்களுக்கு கனவில் தெய்வமாக இருப்பதுடன் கோயில் கலங்கரை விளக்காக காட்சி கொடுக்கும். இவ்வாலயம் அமைந்துள்ள இடம் மூர்த்தி, தலம், தீர்த்த சிறப்புக்களைக் கொண்டதாக திகழ்கின்றது.

இக் கோயில் ஆகமமுறைப்படி பிராமண பூசகர்களால் பூசைகள் செய்யப்பட்டு வரப்படுகிறது. கோயில் நிர்வாகம் அறங்காவல் சபையால் நிர்வகிக்கப்படுகிறது. இக்கோயிலின் சார்பாக வேலணை முத்துமாரி அம்மன் கோயிலில் 6வது திருவிழா நடாத்தப்படுகின்றது. மேலும் அறங்காவல் சபை இக்கிராமத்தின் பல்வேறு சமூக, பொருளாதார அபிவிருத்தி விடயங்களில் பங்கு கொள்வதுடன் மக்கள் மத்தியில் காலத்திற்குக் காலம் எழும் பிணக்குகளைத் தீர்ப்பதிலும் பங்காற்றி வருகின்றது. செட்டிபுலத்தின் வாழ்வும் வளமும் ஐயனார் ஆலயத்துடன் ஆரம்பத்தில் இருந்து இன்று வரையும், ஏன் எதிர்காலமும் அவருடன் தொடர்புடையதாகவே அமைந்துள்ளது.



# வேலணை சாட்டி சிந்தாத்திரை மாதா தேவாலயம்



## ஆலயங்கள்

# சாட்டி சிந்தாத்திரை மாதாவின் ஆலய வரலாறு

*வண. தோமஸ் சௌந்தரநாயகம் - அடிகளார்*
*யாழ்-ஆயர் - யாழ்ப்பாணம்*

**வா**ழ்க்கைப் பயணத்தில் வழிகாட்டும் அன்னை. அண்டினோர்க்கு அபயமளிக்கும் தேவதாய், அலை கடலில் அல்லலுறும் மாலுமிகளையும், மீனவர்களையும், கடற்பயணிகளையும் ஆபத்தில் காத்து இரட்சிக்கும் பேருபகாரி. அதனால் தான் சிந்தா யாத்திரைக்குத் துணை செய்யும் அந்த அன்னையை சிந்தாத்திரை மாதா என்று வாயார வாழ்த்திப் போற்றி வந்திருக்கின்றனர். தமிழ்நாட்டில் கடல் அலைகள் தாலாட்டும் வேளாங்கண்ணித் திருத்தலம்போல் ஈழத்திலே சாட்டி என்னும் கடலோரக் கிராமத்தில் அன்னைமரி அருள் சுரந்து அடியாரைப் பாலித்து வருகின்றார்.

யாழ்ப்பாணக் குடாநாட்டிலே புகழ்பூத்த காவலூரிலிருந்து சுமார் ஆறு மைல் தொலைவில் தமிழ்ப் பற்றும் இறைபற்றும் இணைந்திருக்கும் வேலணையின் தென் கீழ்த்திசையில் கடல் அலைகள் முத்தமிடும் சாட்டி என்னும் சிறிய கிராமம் ஒன்றுண்டு. நெய்தலும் பாலையும் சேர்ந்தாற் போன்ற இயற்கை வளமுடைய கிராமம் இது. முற்காலத்தில் இங்கு ஓர் துறைமுகம் இருந்ததாகக் கூறப்படுகின்றது. போர்த்துக்கேயர் யாழ் குடாநாட்டுக்கு வருகை தந்தபோது முதல் முதலில் வந்திறங்கிய துறை சாட்டித் துறையேயாகும் என வரலாற்று வாயிலாக அறியக் கிடக்கின்றது. யாழ்நகரை அண்மித்த கடற்பிரதேசத்தில் சாட்டி அமைந்திருந்தமையால் போர்த்துக்கேயர் சாட்டிக் கடற்கரைக்கு அண்மையில்

கோட்டை அமைத்து அரண் செய்தனர். போர்த்துக்கேயர் வருகையுடன் கிறிஸ்து மறையும் நமது நாட்டுக்கு அறிமுகமாகிப் பரப்பப்பட்டது என்பது வரலாறு.

அக்காலத்தில் யாழ்ப்பாணம், ஊர்காவற்றுறை, அல்லைப்பிட்டி முதலான இடங்களில் பிரான்சிஸ்கன் சபையைச் சேர்ந்த கண்ணாடிச் சுவாமியார் என அறியப்பட்ட வண. பேதுருதே பெற்றங்கோர் அடிகளார் வேதபோதகஞ் செய்து வந்தார். அவர் அல்லைப்பிட்டியிலும், வேலணையிலும் ஆலயங்களை அமைத்தார். ஆனால் அதற்கு முன்னரே சாட்டிக் கோட்டையில் கிறிஸ்துசமய வழிபாடுகள் இடம்பெற்று விட்டன.

சாட்டியில் இருந்த போர்த்துக்கேயரின் கோட்டை ஒல்லாந்தரால் தகர்க்கப்பட்டது. ஒல்லாந்தர் புரட்டஸ்தாந்து சமயத்தைப் பரப்பினர். அதனால் கத்தோலிக்கருக்கும் அவர்களுக்குமிடையில் பகைமை ஏற்பட்டது. கத்தோலிக்கர் துன்புறுத்தப் பட்டனர். வேதகலாபனை காரணமாக கத்தோலிக்க திருமறை அருகத் தொடங்கியது.

சாட்டியின் பூர்வக் குடிகள் கமண்டலர் எனவும், குயவர் எனவும் அழைக்கப் பட்டனர். மன்னாரிலும், மாதோட்டத்திலும் கத்தோலிக்க மறையைத் தழுவி திருமுழுக்குப் பெற்றவர்கள் சிலரும் சாட்டியில் குடியேறி வாழ்ந்தனர் என நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசரின் ஆய்வுகள் கூறுகின்றன. 1600ஆம் ஆண்டுக்குப் பின்னர்தான் இவர்கள் சாட்டியில் குடியேறியிருக்க வேண்டும். தொழில் வாய்ப்பை முன்னிட்டு இவர்கள் பின் ஊர்காவற்றுறைக்கு இடம் பெயர்ந்திருக்க லாம். இவர்களது வழித் தோன்றல்கள் ஊர்காவற்றுறை கிழக்கில் இருப்பதாக அறிய முடிகின்றது.

சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் அழிந்து போன சாட்டிக்கோட்டையில் தேவதாயாரின் திருச்சுரூபம் ஒன்று கண்டெடுக்கப்பட்டு அக்கோட்டையின் மத்தியில் ஓலைக்கொட்டில் ஒன்றில் மிகப் பூச்சியமாய் வந்திக்கப்பட்டு வந்தது. இடும்பன் குடும்பத்தைச் சேர்ந்த மூத்தவி என்பவர் விசுவாசம் மிக்க ஒரு கத்தோலிக்கர். அவரே சாட்டி மாதாவை பிரபலயமாக்கிய ஒரு மாதா பக்தராவார். அவர் ஆண்டு தோறும் சாட்டிக் கோட்டைக்குள் அமைந்த மாதாவின் தலத்தில் வழிபாடுகளை நடத்த முன் நின்று உழைத்தவர். இவர் ஒரு தடியின் நுனியில் மணியைக் கட்டி அடித்து மக்களைச் சேர்த்து சாட்டிக்கோட்டைக்கு அழைத்து வந்து மூன்று நாள் அங்கு தங்கி வழிபாடுகள் நடத்துவாராம். காலஞ் செல்லச் செல்ல இந்த வழிபாடுகளில் கலந்து கொண்ட பக்தர்கள் தொகை அதிகரிக்கத் தொடங்கியது. அன்னையின் அருளை அபரிமிதமாகப் பெற்று வந்த மக்கள் 1789ஆம் ஆண்டு தேவ தாயாருக்கு கல்லால் ஒரு சிறிய ஆலயத்தை அமைத்தனர். அந்த ஆலயம் 1886ஆம் ஆண்டு எரிந்து போயிற்று.

மக்கள் மத்தியில் பெருகி வந்த மாதா பக்தியை வளர்க்கும் பொருட்டு யாழ் ஆயர் J. A. கியோமார் ஆண்டகையின் காலத்தில் சாட்டியில் புதிய ஆலயம் அமைக்கும் பணிகள் முன்னெடுக்கப்பட்டன. அக்காலத்தில் மண்டைதீவு, அல்லைப்பிட்டி முதலான இடங்களில் மறைத் தொண்டாற்றிய வண. அந்தோனி அடிகளாரின் மேற்பார்வையில் 1928ஆம் ஆண்டு ஆலயக் கட்டுமானப் பணிகள் ஆரம்பமாகின. சிந்தாத்திரை மாதாவின் பக்தர்கள் வழங்கிய நன்கொடைகளால் ஆலயப்பணி விரைவில் முற்றுப்பெற்றது. ஆலயம் அமைப்பதற்கும் அதன் முகப்பை அழகுறக் கட்டுவதற்கும் பெருமளவு நிதி உதவி செய்தவர் கரம்பொனைச் சேர்ந்த S. M. பஸ்ரியன் அவர்களே. 1946ஆம் ஆண்டு சாட்டி மாதா ஆலய முகப்பில் திறந்த வெளி ஆராதனை அரங்கை அமைத்துக் கொடுத்தவரும் அவரே.

முன்னாள் யாழ் ஆயர் வ. தியோகுப் பிள்ளை அவர்களின் காலத்தில் 1974ஆம் ஆண்டு ஆலயத்துக்கு மின்சக்தி செய்து கொடுத்தவர் சுருவிலைச் சேர்ந்த வர்த்தகரான M. S. மந்திரி ஆவார்.

ஆண்டு தோறும் புரட்டாதி மாதம் 24ஆம் திகதி கொண்டாடப்பட்ட சாட்டிமாதா திருநாள், புரட்டாதி மாதத்தின் மூன்றாவது சனிக்கிழமைக்கு மாற்றப்பட்டது. யாழ் குடாநாட்டிலிருந்தும், தீவுப்பகுதியில் இருந்தும் பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் இத்திருத் தலத்திற்கு வருகைதந்து அன்னையின் அருள் வேண்டி மண்டியிட்டு நிற்கும் காட்சி மனதை உருக்கும். பிறசமய நண்பர்களும் ஆயிரக் கணக்கில் அன்னையின் அருளை நாடி வருகின்றனர். புரட்டாதி மாத வருடாந்த உற்சவத்துக்குப் புறம்பாக சித்திரை மாதத்திலும் ஒரு திருநாள் கொண்டாடப்படுகின்றது. உயிர்த்த ஞாயிற்றுக் கிழமைக்கு அடுத்த ஞாயிற்றுக்கிழமை கரம்பொன்மக்களால் இத்திருநாள் கொண்டாடப்படுகின்றது.

சாதாரண நாட்களிலும் யாத்திரிகர்கள் இத்திருத்தலத்துக்கு வருகை தருகின்றனர். செபிப்பதற்கு அமைதியான சூழலைக் கொண்ட சாட்டித்திருத்தலம் அடியாரை அரவணைத்து நிற்கின்றது. சாட்டித் துறையிலிருந்து மாலுமிகளும், மீனவர்களும், கடலோடிகளும் மாத்திரமல்ல பல்வேறு தொழிலாளரும் சாதிசமய வேறுபாடின்றி அன்னையின் அருள்நாடி அபயம் என்று ஓடிவருகின்றனர். அனைவரது இடர் தீர்க்கும் சிந்தாத்திரை அன்னையே வாழ்க.

யாழ்ப்பாணக் குடாநாட்டில் ஒரு சுகஸ்தானமாக சாட்டி விளங்குகின்றது. விடுமுறையை அமைதியாகக் கழிக்க விரும்புவர்களுக்கு இது ஒரு அருமையான இடம். போக்குவரத்து வசதிகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. சாட்டிக்கு வரும் யாத்திரிகர் தங்கியிருப்பதற்கு விடுதி வசதிகளும் தற்போது ஏற்படுத்தப் பட்டுள்ளமை

பக்தர்களுக்கு பெரும் ஆறுதல் என்றே கூறவேண்டும்.

ஆலயத்தின் அருகில் அமைந்துள்ள நன்நீர்க்கிணறு அற்புதமான ஒரு நல்ல நீர் ஊற்று என்று கூறவேண்டும். சாட்டி மாதாவின் திருச்சுரூவம் இந்தக் கிணற்றி லிருந்து கண்டெடுக்கப்பட்டது என்றும் முன்னோர் கூறக்கேட்டுள்ளோம். அதன்காரணமாக இந்தக் கிணறு வற்றாதிருக்கின்றது என்று சொல்கிறார்கள். கடற்கரையிலிருந்து சுமார் 200 யார் தொலைவில் உவர் நீரே கிடைக்கும். ஆனால் இதுவற்றாத நன்னீர் ஊற்று. ஊர்காவற்றுறை, புங்குடுதீவு மக்களுக்கு தண்ணீர்ப் பஞ்சம் ஏற்படும் போது இந்தக் கிணறுதான் அபயமளிக்கின்றது. பவுசர்களில் இங்கிருந்து நீர் கொண்டு செல்லப்பட்டு விநியோகிக்கப்படுவதும் அன்னையின் அருள் தானே.

**"மரியே வாழ்க"**



# வேலணை வங்களாவடி அமெரிக்கன் மிஷன் தேவாலயம்



## ஆலயங்கள்

# வேலணை வங்களாவடி அமெரிக்கன் மிஷன் தேவாலயம்

*பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை*

*யாழ்-பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்*

19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் யாழ்ப்பாணத்திற்கு அமெரிக்க மிஷனரிமார் களின் வருகையும், அவர்களின் சமயப் பணியும் அத்துடன் இணைந்த கல்வி, மருத்துவப் பணிகள் அன்றிலிருந்து இன்று வரை முக்கியம் பெறலாயின. வட்டுக்கோட்டை, தெல்லிப்பளை, உடுவில், உடுப்பிட்டி, சாவகச்சேரி, பண்டத்தரிப்பு போன்ற இடங்களில் அமெரிக்கன் மிஷன் பெரிய பாடசாலைகளையும் தேவாலயங் களையும் அமைத்து கல்வி சமயப் பணிகளில் ஈடுபட்டு புதியதோர் கல்விச் சமுதாயத்தை உருவாக்க முயன்றன. கிறிஸ்தவத்திற்கு முன்னுரிமை கொடுத்ததால் முதலில் கடும் எதிர்ப்பு மக்கள் மத்தியில் இருந்த பொழுதும் கல்வி, மருத்துவப்பணிகளால் எதிர்ப்புக்கள் குறைந்து, இந்துக்கள் கல்வியை மாத்திரம் இவர்களிடம் பெறுவதில் நாட்டம் கொண்டனர். யாழ்ப்பாணக்கல்லூரி, உடுவில் மகளிர் கல்லூரி, தெல்லிப்பளை யூனியன் கல்லூரிகள் போன்றன 175 வருடங்களுக்கு மேற்பட்ட வரலாற்றைக் கொண்டுள்ளன. யாழ்ப்பாணச் சமூகத்தில் அமெரிக்க மிஷனரியை பின்பற்றும் ஒரு கிறிஸ்தவ சமுதாயம் உருவாகியது.

தீவுப் பகுதியில் அமெரிக்க மிஷனரிமார்களின் செயற்பாடுகள் குடாநாட்டின் ஏனைய பகுதிகள் போல் பெரியளவில் இடம்பெறாவிட்டாலும் வேலணையில் அமெரிக்கமிஷனரிமார் வங்களாவடியில் தேவாலயம் ஒன்றையும்,

பாடசாலை ஒன்றையும் அமைத்திருந்தனர். இத் தேவாலயம் வேலணைத் தீவு முழுவதிலும் முதலாவதாக அமைந்த, கிறிஸ்தவ தேவாலயம் ஆகும். றோமன் கத்தோலிக்க தேவாலயங்கள் பல இத்தீவில் அமைந்திருந்த பொழுதும், வங்களாவடி தேவாலயம் தான் ஒரே ஒரு கிறிஸ்தவ தேவாலயம் ஆகும். இத்தேவாலயம் 1850களுக்கு முன்னர் சிறியளவில் ஆரம்பமாகி, கல்லினால் அமைந்த கட்டிடம் 1870இல் நிர்மாணிக்கப்பட்டதாக தெரிகின்றது. அன்றிலிருந்து 1990கள் வரை இத் தேவாலயம் பல கிறிஸ்தவ குருமார்களின் வழிகாட்டலில் சிறப்புற இயங்கி வந்தது. 1991இல் ஏற்பட்ட இடப்பெயர்ச்சியின் காரணமாக இன்று இத்தேவாலய செயற்பாடுகள் மிகச் சிறியளவில் இடம்பெற்று வருகின்றது. தேவாலயம் புனர்வாழ்வு, புனருத்தாரணப் பணிகளையும் எதிர்நோக்கி நிற்கிறது. இடப்பெயர்வுகளால் கிறிஸ்தவ குடும்பங்கள் வேலணையை விட்டு சென்றதன் காரணமாக புனருத்தாரண பணிகள் பல பிரச்சினைகளை எதிர்நோக்கி உள்ளது. இத் தேவாலயம் தென்னிந்திய திருச்சபை கட்டுப்பாட்டில் இயங்கும் தேவாலயம் ஆகும். மக்கள் மீள் குடியேற்றம் முழுமையாக இடம்பெறும் பொழுது புனர்வாழ்வுப் பணிகள் ஆரம்பமாகும் என எதிர்பார்க்கலாம்.

இத் தேவாலயத்துடன் கூடிய பாடசாலை இக்கிராமத்தின் முன்னோடி பாடசாலை ஆகும். கிராமத்தின் கல்வி வளர்ச்சியில் இப்பாடசாலை பெரிய பங்களிப்பு செய்துள்ளது. 1961இல் இருந்து இப்பாடசாலை அரச பாடசாலையாக இயங்கி வருகின்றது. எனினும் 1991இல் ஏற்பட்ட இடப்பெயர்வின் பின்னர் இப்பாடசாலை மீளவும் இயங்கத் தொடங்கவில்லை. வேலணையில் மீள்குடியேற்றம் முழுமையாக ஏற்படும் இடத்தில் இப்பாடசாலை மீளவும் இயங்கும் என எதிர்பார்க்கப்படுகின்றது.



## ஆலயங்கள்

# சிற்பனை முருகன் ஆலயம்

*திரு. தி. பாலச்சந்திரன்*
*வேலணை*

சிற்பனை ஆலயம் 1880களுக்கு முன்னர் வேலணைக் கிராமத்தில் இருந்த முருகன் ஆலயங்களுள் பள்ளம் புலம் முருகமூர்த்தி ஆலயத்திற்கு அடுத்து பழமை வாய்ந்தது. இவ்வாலய வரலாறு பற்றி தெளிவான ஆவணங்கள் கிடைக்கப் பெறவில்லை. கிடைக்கும் தகவல்கள் தரவுகளைக் கருத்திற் கொண்டு நோக்குமிடத்தில் இவ்வாலயம் கந்தபுராண படிப்பு மடமாக இருந்து பின்னர் இம்மடம் ஆலய வடிவம் பெற்றிருக்கிறது. இவ்வாலயத்தை நிறுவுவதற்கும், தக்கவைப்பதற்கும் இக்கிராமத்து மக்கள் பெரும் அர்ப்பணிப்பு செய்திருக்கின்றார்கள். 19, 20ஆம் நூற்றாண்டில், இவ்வாலயத்தின் வளர்ச்சியுடன் திரு. கந்தவுடையார், திரு. சுப்பிரமணிய விதானையார், திரு வைத்தியநாதர் செல்லையா, திருமதி. கார்த்திகேசு இலட்சுமிப்பிள்ளை, திரு. துரையப்பா பொன்னம்பலம், திரு. வைத்தியநாதர் செல்லையாவின் மகன் திரு. வை. செ. சோமாஸ்கந்தன், திரு. வா. அருணகிரி ஆகியோர் பெரும் பங்காற்றி உள்ளனர். ஆலயத்தை இன்றைய அமைப்பிற்கு கொண்டு வந்ததில் அமரர் அருணகிரியின் பங்கு மிகப் பெரிய தொன்றாகும்.

இம் முருகன் ஆலயம் வேலணை மேற்கில் சிறப்புற வளர்ச்சி பெற்று வந்தபொழுது 1990களில் ஏற்பட்ட இடப்பெயர்ச்சியால் தளர்வுற்றபோதும் மீள் குடியேற்றத்துடன் இன்று பல வழிகளில்

வளர்ச்சி கண்டு வருவது மகிழ்ச்சிக் குரியதாகும். வருடாந்த உற்சவம் முக்கிய சமய நிகழ்வுகள் சிறப்புற நடைபெறத் தொடங்கிவிட்டன. ஆலய செயற்பாட்டில் கிராம மக்கள் முழுமையாகப் பங்கு கொள்ளும் நிலையைக் காண முடிகின்றது.

ஆலயம் ஆலய பரிபாலன சபையினரால் நடாத்தப்பட்டு வருவதும், திரு. வை. செ. சோமாஸ்கந்தன் ஆயுட்கால தலைவராக இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

## ஆலயமும் அதன் அமைப்பு விதிகளும்

சூரபத்மனைச் சங்காரம் செய்தவேல் ஆகாய கங்கையில் நீராடிக் கந்தனை வந்தணைந்த இடம் வேலணை என்பது ஐதீகம். இவ்வேலணையின் மேற்பால் மத்தியில் அமைந்த கோவிலே சிற்பனை முருகன் ஆலயமாகும். இவ்வாலயம் ஏறத்தாழ நூற்றைம்பது வருடங்களின் முன் கந்த உடையார் என்ற சைவ பக்தரின் பூசை மடமாக இருந்ததாகக் கூறுவர். இம்மடத்தில் கந்தஉடையாரால் தாபனம் செய்து வணங்கப்பட்ட வேல், பின்னர் வேல் கோவிலாகி இன்று சிற்பனை முருகன் ஆலயமாக விளங்குகின்றது.

கந்தஉடையார் தமக்குப் பின் இக்கோவிலை நிருவகிக்கும் பொறுப்பை அவரது அபிமானியாகிய **விக்கல் விதானை** என எல்லோராலும் அழைக்கப் பட்ட **சுப்பிரமணிய விதானையிடம்** விட்டுச் சென்றார். சுப்பிரமணிய விதானையார் அதிகார தோரணை கொண்டவர்; சைவசமயப்பற்று மிக்கூரப் பெற்றவர். இவர் அச்சக வசதிகள் அற்ற அக்காலத்தில் நான்கு தடவைகள் கந்தபுராணத்தை தம் கையெழுத்தில் பிரதி செய்ததால் கந்தபுராணத்தை மனனம் செய்தவராகக் கொள்ளப்பட்டார். இவரின் உந்துதல் காரணமாகவே அண்மைக்காலம் வரை எம் ஆலயம் கந்தபுராணம் படித்து வரப்படும் ஆலயமாகத் திகழ்ந்ததோடு சைவத் தமிழ் அறிஞர்கள் தம் கந்தபுராண அறிவுத் திறனை மோதவிடும் களமாகவும் இவ்வாலயம் இருந்து வந்துள்ளது. சுப்பிரமணிய விதானையார் தமக்குப் பின் தம்மிடம் மிக ஈடுபாடுற்ற **திரு. வைத்திய நாதர் செல்லையாவிடம்** ஆலயப் பொறுப்பை விட்டுச் சென்றார்.

திரு. வை. செ. அவர்களிடம் இருந்த ஆலய நிருவாகப் பொறுப்பு சிறிது காலத்திற்கு பிடியரிசித் தொண்டுமூலம் ஆலய திருப்பணி செய்து வந்த பிள்ளைச்சாமி என யாவர்க்கும் அறிமுகமான **திருமதி. கார்த்திகேசு இலட்சுமிப்பிள்ளை** அவர்களுக்கும், **திரு. துரையப்பா பொன்னம்பலம்** அவர்களுக்கும் கைமாறி மீண்டும் திரு. வை. செ. அவர்களிடம் வந்து சேர்ந்தது. திரு. வை. செ. அவர்களின் மறைவின்பின் அவரது தனயனும் இன்றைய பரிபாலன சபையின் ஆயுட்கால தலைவருமான **திரு. வை. செ. சோமாஸ்கந்தன்** அவர்கள் ஆலய நிருவாக பொறுப்பைப் பெற்றார். இவரது நிருவாக காலத்தின் பிற்பகுதியில் இன்றைய பரிபாலன சபையின்

மூத்த காப்பாளராகிய **திரு. வா. அருணகிரி** - சமாதான நீதவான் அவர்கள், ஆலய நிருவாக சபையில் பெரும் பங்கு கொண்டு உதவினார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

ஆலயம் பெருவளர்ச்சி காணவேண்டிய காலத்தில் இறுக்கமான தனி நபர் நிருவாகமோ அல்லது கூட்டுப்பொறுப்பு நிருவாகமோ இல்லாததால் ஆலய திருப்பணிகளுக்குப் பெருந்தனம் வழங்கும் அவாக்கொண்டவர்கள் பலர் இருந்தும் அவர்களது சக்தியை ஒன்று திரட்ட முடியாத நிலை நீடித்தது. திட்டமிட்ட, ஒருங்கிணைந்த, முறையாக நெறிப்படுத்தப்பட்ட வளர்ச்சி இன்றி ஆலயம் பின்னோக்கியது. இந்நிலையில் பல தோல்விகளின் மத்தியில் திரு. சே. க. நாகையா அவர்களின் முயற்சியால் திரு. வை. க. பொன்னம்பலம் அவர்களின் தலைமையில் சிற்பனை முருகன் ஆலய புனருத்தாரண சபை 09 - 06 - 1984இல் உருவானது. ஆலயத்தை புனர் நிருமாணம் செய்து அதன் கும்பாபிஷேக, மண்டலாபிஷேக பணிகளை பூர்த்தி செய்யும் ஒரே நோக்குடன் உருவான மேற்படி சபையைத் தொடர்ந்து பின்வரும் பிரேரணை மூலம் 15 -12 - 1985இல் **"சிற்பனை முருகன் ஆலய பரிபாலன சபை"** ஏகமனதாக அங்குரார்ப்பணம் செய்யப்பட்டது.

> **"15 - 12 - 85** ஞாயிறு மாலை, வேலணை மேற்குச் சிற்பனை முருகன் ஆலயத்தில் கூடியுள்ள அவ்வாலய நித்திய விஷேட பூசைகளின் பொறுப்பாளர், நிதியுதவி அளித்தோர், திருவிழாக்காரர், வழிபடுநர் ஆகிய நாங்கள் இன்று தொடக்கம் "சிற்பனை முருகன் ஆலய பரிபாலன சபை" என்ற பெயரில் நிறுவன ரீதியாக இயங்கி, வியத்தகு வளர்ச்சி பெற்றுவரும் எம் சிற்பனை முருகன் ஆலயத்தையும், அதன் சொத்துக்களையும் பேண, பராமரிக்க, நிருவகிக்க, அபிவிருத்தி செய்ய இத்தால் இறைபக்தியுடன் முடிவு செய்கின்றோம்."

பரிபாலன சபையின் மேற்கூறிய அங்குரார்ப்பண கூட்ட தீர்மானத்திற்கமைய, இருபத்தொரு உறுப்பினர் கொண்ட அமைப்பு விதி தயாரிப்புக் குழுவிடம் சபையின் அமைப்பு விதிகளைத் தயாரிக்கும் பொறுப்பு அளிக்கப்பட்டது. இக்குழுவின் மூன்று உறுப்பினர் தவிர்ந்த ஏனையோரின் பங்களிப்பில் ஒருமனதாக வரையப்பட்டு, சபையின் 29 - 06 - 86ஆம் தேதிய விஷேட பொதுக் கூட்டத்தால் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டு, அத்திகதி தொடக்கம் நடைமுறைக்கு வந்த சபையின் அமைப்பு விதிகளைப் பிரசுரிப்பதில் நிருவாக சபை பெருமகிழ்வடைகின்றது.

இதுகாறும் ஆலயத்தோடு நெருங்கிய ஈடுபாடு கொண்ட அடியார்களின் பிணைப்பை அந்நியப்படுத்தாது பாதுகாக்கும் வகையில், நான்கு பிரிவுகளைக் கொண்ட உறுப்புரிமையும், சிறிது சிரமமான நிருவாகசபைத் தேர்தல்

முறையும் அமைப்பு விதிகளின் விசேட அம்சங்களாகும். பொது நிறுவனங்களில் காணப்படும் நிதி முகாமைத்துவ குறைபாடுகளை சபை தவிர்க்கும் பொருட்டு ஏற்ற ஏற்பாடுகளையும் அமைப்பு விதிகள் கொண்டுள்ளன. இவ்வமைப்பு விதிகள் நாட்டின் சமூக பொருளாதார மாற்றங் களுக்கு இடமளித்து ஆலய வளர்ச்சிக்கு நல்ல அடித்தளமாக அமையும் எனச் சபையின் நிருவாக சபை நம்புகின்றது.

*நிர்வாக சபையின் பணிப்பின்படி,*

***செ. அம்பலவாணர்***

*செயலாளர்,*

*சிற்பனை முருகன் ஆலய பரிபாலன சபை*

## அமைப்பு விதி - உள்ளடக்கம்





உ

# வேலணை ஆலம்புலம் கந்தப்புராண மடம்



வேலணை - 1

# ஆலயங்கள்

## ஆலம்புலம் கந்தபுராண மடம்

*திருமதி. கலைமகள் சிவராசா*
*கிராம அபிவிருத்தி உத்தியோகத்தர்*

யாழ்ப்பாணப் பிரதேசத்தில் சைவமும், தமிழும் மேலோங்கி நின்றதுடன் இங்கு கந்தபுராண கலாசாரம் இறுக்கமாக நிலவியதாகக் கருதப்படுகின்றது. எனினும் தீவுப் பகுதியில் முருகன் கோயில்கள் குறைவாக இருப்பதுடன் அம்மன் கோயில்களும், ஐயனார் கோயில்களும் அதிகமாகக் காணப்படுவது குறிப்பிடத் தக்கது. குடாநாட்டில் நல்லூர் முருகன், மாவிட்டபுரம் கந்தசாமி கோயில், செல்வச்சன்னதி, கொக்குவில் மஞ்சவனப் பதி போன்ற பெரிய முருகன் கோயில்கள் இருக்க தீவுப் பகுதியில் ஏன் பெரிய முருகன் ஆலயங்கள் ஏற்படவில்லை என்பது ஆராயப்படவேண்டியதொன்றாகும். இத்தகைய பின்னணியில் வேலணையில் கந்தபுராண மடத்தின் தோற்றத்தையும் செயற்பாட்டையும் ஆராயவேண்டும். கோயில், மடப்பள்ளி, தீர்த்தக்கேணி ஆகியவற்றைக் கொண்டு இந்த கந்தபுராண மடம் காணப்படுகின்றது. இன்று அழிந்த நிலையில் காணப்படும் கோயில் மடக் கட்டிடங்களின் வயதை நோக்கின் இவைகள் 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் கட்டப்பட்டு இருக்கலாம். கல்லாலும், சுண்ணாம்பாலும் கட்டப்பட்ட வையாகும். இன்று அந்த நிலையிலுள்ள கட்டிடத்துக்கு 150 வருடங்கள் கொடுத்து பார்ப்பின் இந்நிறுவனம் 200 ஆண்டு களுக்கு முற்பட்டதாக இருக்க வேண்டும். சிறியளவில் கந்தபுராண வாசிப்பு, தொடங்கி, இம்மடம் படிப்படியாக வளர்ந்து பின்னர்

மக்களின் ஒத்துழைப்புடனும், பரோபகாரர்களாலும் வளர்த்து எடுக்கப்பட்டிருக்கவேண்டும். இம்மடம் அமைந்துள்ள இடம் பனைவளவுப் பகுதியாக இருப்பதுடன் இதனது அயல் பகுதிகள் பெரும் நெற்செய்கை பிரதேசமாக இருந்தது. இதனால் இப்பகுதியில் வாழ்ந்த குறிப்பாக ஆலம்புலத்து மக்கள் இம்மடத்தில் கந்தபுராண பிரசங்கங்களை கேட்டும் மதச் சடங்குகளை நடத்திருக்க வேண்டும். காலக்கிரமத்தில் இந்நிலைமை போதிய வருமானம் இல்லாமல் படிப்படியாக குன்றியிருக்க வேண்டும்.

இக்கோவில் நிர்வாகத்தின் பரிபாலன சபை அமைக்கப்பட்டு அவர்களே செய்து வந்தனர். இக்கோவில் அமைந்துள்ள காணி பென்சனியர் சரவணமுத்து என்பவராலேயே நன்கொடையாக வழங்கப்பட்டது. அவர்களின் குடும்பத்தினராலேயே இக்கோவில் பரிபாலிக்கப் பட்டது. கந்தர்மடத்தில் உள்ள குருக்கள் பரம்பரையினரே பூசை செய்து வந்தனர். இந்தியாவில் இருந்து காலத்துக்கு காலம் பெரியார்கள் வந்து திருத்தொண்டர் புராணம், பெரியபுராணம், சமயகுரவர், சந்தான குரவர் வரலாறுகள் பற்றி எடுத்துக் கூறி மக்களை நல்வழிப்படுத்தி உள்ளனர்.

கந்தர்மடம் குருக்கள் பரம்பரையினருக்குப் பின்பு முருகனின் உள்ளொளி பெற்ற உத்தமரான ஸ்ரீலஸ்ரீசோமசுந்தரஐயர் கோவிலைப் பொறுப்பேற்று நடாத்தினார். இவருடைய முன்னோர்கள் வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவில் அர்ச்சகர்களாக இருந்தவர்கள். ஆனால் சோமசுந்தர ஐயர் முத்துமாரி அம்மன் கோவிலுடன் இக் கோவிலையும் பொறுப்பேற்று மிகவும் சிறப்பாக நடாத்தினார். பிற்காலத்தில் இவர் இக்கோவிலில் துப்புரவு செய்தல் போன்ற தொண்டுகளையும் செய்துவந்தார். இவரே "கறுவல் ஐயர்" என அழைக்கப்பட்ட பெரும் ஞானி ஆவார்.

இவர் சுகவீனமுற்று தொண்டுகள் செய்யமுடியாது போகவே ஸ்ரீலஸ்ரீ பொன்னுச்சாமி குருக்கள் நித்திய பூசையினை சிறப்பாக செய்துவந்தார். இக்கோவிலில் சிறப்பாக நடைபெற்ற விழாக்கள் சித்திரை வருடப்பிறப்பு, சித்திரைக் கதை, சித்திரைக் கஞ்சி காய்ச்சி பெருவிழாவாக கொண்டாடப்பட்டது. வைகாசி விசாகப் பொங்கல், நவராத்திரி ஒன்பது நாட்கள் விசேட பூசை நடைபெற்று விஜயதசமி அன்று சிறுபிள்ளைகளுக்கு காதுகுத்துதல், ஏடுதொடக்குதல், போன்ற நற்கருமங்களை அயலவர் செய்வர். திருவெம்பாவை காலத்தில் காலையும், மாலையும் "பா" ஓதப்பட்டு பத்தாம் நாள் சிறப்பாக பூசைகள் நடைபெற்றது. சிவராத்திரிக்கு நான்கு யாமப் பூசை நடைபெற்று பக்தர்கள் நித்திரை விழிப்பார்கள். பெருங்குளம் முத்துமாரி அம்மன் வெள்ளைக் கடற்கரைக்கு தீர்த்தம் ஆட வரும்பொழுது இக்கோவிலுக்கும் வந்து தரிசனம் கொடுத்தே செல்வது வழக்கம்.

1980ஆம் ஆண்டளவில் இக்

கோவிலைத் தரிசித்த கரம்பனைச் சேர்ந்த திரு. சிவசம்பு என்பவர் கோவிலைப் புனரமைப்பதற்காக பாலஸ்தாபனம் செய்தார். இதனைக் கருத்திற் கொண்டு அவ்வூர் மக்களின் ஊக்கத்தினால் கோவில் கட்டிடவேலைகள் நடைபெற்றுக் கொண்டு இருக்கும் தறுவாயில் 1991ஆம் ஆண்டு பாரிய இடப்பெயர்வு ஏற்பட்டு மக்கள் அனைவரும் புலம் பெயர்ந்தமையால் முடிவு பெற இயலாது போய்விட்டது.

பின்பு 1996ஆம் ஆண்டு மக்களை மீளக் குடியேற அனுமதித்த போதும் இப்பகுதி மக்கள் முழுமையாக குடியேற வில்லை. தற்போது குடியேறிய ஒருசிலர் இக்கோவிலை புனரமைக்க முன்வந்து ள்ளனர். அவர்கள் திருப்பணி நன்றாக நிறைவேறுவதற்கு இறை அருள்கிட்ட வேண்டும்.

தற்போது ஒருசில விசேட தினங்களில் மட்டும் விசேடபூசைகள் நடைபெற்று வருகின்றது. இக்கோவிலை சிறப்பாக அமைத்து இதனைச்சார்ந்த சுற்றாடலை தெய்வ மணங்கமழும் இடமாக்குவதே அவ்வூர்மக்களாகிய நமது தலையாய கடமையாகும்.

**"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்"**



## ஆலயங்கள்

# கோபுரத்தடி ஞானவயிரவர் கோவில்

*திருமதி. ஞானாம்பிகை இராமநாதன்*
*வேலணை*

கோபுரத்தடி ஞான வைரவர் முந்தாய் குளக்கரையில் மிகப்பெரிய ஆல், தல விருட்சத்தின் கீழ் மிக அழகுற அமைந்து காணப்படுகின்றது. இவ்வாலயத்தின் பரப்பளவு, விழுதுகள் எண்ணிக்கை, தாய்மரத்தின் சுற்றளவு போன்றவையை நோக்கும்போது இது வயதானதொரு மரமாகக் கொள்ளலாம். இவ்வாலயம் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றை சிறப்புறக் கொண்டது. இத்தலம் அக்கவாழி, கட்டுவயல், ஆலம்புலம், உப்புக்குளி, சந்தமுளை, சாட்டி போன்ற குடியிருப்பு பகுதிகளில் வாழும் மக்களின் காவற் தெய்வமாக விளங்கி வருகின்றது.

இக்கோயிலை **கோபுரத்தடி ஞான வயிரவர்** என அழைப்பர். கோபுரத்தடி என அழைப்பதற்கு காரணம் இக்கோயிலிற்கு அருகில் பெரிய கோபுரம் இருந்து அழிவுக்குட்பட்டு ஒருசில பகுதி இன்றுமிருப்பதை காணலாம். இக்கோபுரம் எப்போது கட்டப்பட்டது, யாரால் அமைக்கப்பட்டது, எவ்வாறு அழிவுக்குட்பட்டது என நோக்கின் தெளிவான பதில்களை அறியக் கூடிய தரவுகள் கிடைக்கப் பெறவில்லை. இதனை **"அல்லிராணி"** கோட்டை எனவும், போர்த்துக்கீசர், ஒல்லாந்தர் காலத்தில் அழிக்கப்பட்டது எனக் கூறப்படுகின்றது. எது உண்மை? எது பொய் எனச் சொல்ல முடியாதுவிட்டாலும் இக்கோவிலுக்கு அருகில் ஒரு பெரிய கோபுரம் இருந்தது உண்மை. ஆகவே இக்கோயில்

உ

# வேலணை கோபுரத்தடி ஞானவைரவர் கோவில்



இக்கோபுரத்துடன் தொடர்புபட்டு அது சிறப்புற்ற காலத்தில் கட்டப்பட்டு இருக்க வேண்டும். இக்கோயில் ஆரம்பத்தில் ஒரு கிராமிய தெய்வமாகவும் உள்ளூர் மக்களால் விளக்கு வைத்தல், பூசை செய்தல், சித்திரைக்கதை, வைகாசிப் பொங்கல் போன்றன சிறப்பு நிகழ்ச்சிகளாக இடம்பெற்றன. பின்னர் ஆகமவிதிப்படி பிராமணரால் ஒருகாலப் பூசை, விஷேடபூசைகள் செய்யப்பட்டு வரப்பட்டன. இக்கோயிலின் பலபடி வளர்ச்சிக்கு இங்கு புரோகிதராக இருந்த கறுவல் ஐயர் பெரும் பங்காற்றி வந்துள்ளார். இதன் பின்னர் அராலியைச் சேர்ந்த கணபதி ஐயர், கோவில் பூசகராக செயற்பட்டார். இதன் பின்னர் அவரது மகன் மணி ஐயர் புரோகிதராக இருந்தார். இதன் பின் வேலணை முருகன் கோவில் ஐயர் மகேஸ்வர குருக்கள் இவ்வாலய பூசைகளை செய்து வந்தார்.

இந்த ஆலயத்தை முதலில் ஸ்தாபித்தவர்கள் எவரென்று இன்றும் தெரியவில்லை. ஆனால் இப்பொழுது உள்ள முதியோர்களின் வாக்குப்படி இப்பகுதியில் இருந்த பரம்பரை விதானைமார் இக்கோவிலை பராமரித்து வந்ததாகவும் ஒரு கால் அம்பலவாணர் விதானையாரும், பின்னர் மகன் ஐயம்பிள்ளை விதானையாரும், அவருக்கு ஆண் குழந்தை இல்லாமையால் மகள் இராசப்பிள்ளை அமிர்தம் அம்மையாரும் இக்கோவிலை பராமரித்து வந்ததாகவும் அவரின் பிற்காலத்தில் அவரின் இயலாமை காரணமாக அவர் தம் மைத்துனி இலட்சுமியம்மாவிடம் ஆலயத்தின் முழு பொறுப்பையும் ஒப்புவித்ததாகவும் அறிகின்றோம். இலட்சுமியம்மா அவர்களின் பின் தற்பொழுது அவரின் மகள் ஞானாம்பிகை இராமநாதன் இக்கோவிலை பொறுப்புடன் பராமரித்து வருகின்றார்.

1987ஆம் ஆண்டு ஆலய புனருத்தாரண பணிகளை திருமதி. ஞானாம்பிகை இராமநாதன் ஆரம்பித்த பொழுது திருப்பணி வேலைகள் முற்றுப்பெறுவதற்கு முன்னர் இக்கிராமத்து மக்கள் அனைவரும் இடம் பெயர்ந்ததால் ஆலயம் பெரும் அழிவுக்குட்பட்டது. முற்றுப் பெறாத திருப்பணி வேலைகள் மக்கள் மீள குடியமரத் தொடங்கிய பின்னர் 2002 இல் ஆரம்பமாகின. இத்திருப்பணி வேலைக்கு இங்கிலாந்தில் வாழும் இக் கிராமத்து மக்களும், ஊர்மக்களும் மனமுவந்து பொருளுதவி நல்கினர். திரு. ப. வேதநாயகம் இப்பணிகளை முன்னின்று செயற்படுத்தினார். 2004ஆம் ஆண்டு மாசி மாதத்தில் விமரிசையாக கும்பாபிஷேகம் செய்யப்பட்டது.



## ஆலயங்கள்

# செம்மணத்தி நாச்சியம்மன் ஆலயம்

*திருமதி. அம்பிகாதேவி இராசலிங்கம்*

***வேலணை***

நாவலடிப்புலம் புதுக்குளத்துக்கு வடக்கில், கண்ணாவோடை வாய்க்காலுக்கு அருகாமையிலுள்ள மேட்டு நிலத்தில் நாச்சியம்மன் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயத்தின் தோற்றம் வரலாறு பற்றி எழுத்தில் ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. யாழ்ப்பாணத்தில் நாச்சியம்மன் வழிபாட்டுத் தலங்கள் மிகக் குறைவாகும். இப் பின்னணியில் செம்மணத்தியில் இவ்வாலயம் உருவாவதற்குரிய காரணங்கள் யாவை. நாவலடிப்புலம் ஒரு விவசாயப் பிரதேசம் - நெல்வயல்களும், புகையிலைத் தோட்டங்களும் நிறைந்தவிடம். செம்மணத்திக்கு வடக்கே அராலிவரை ஒரே வெளி, மாரிகாலத்தில் சில நாட்களில் அராலி வெளிமுழுவதும் வெள்ளம் பரவி வெள்ளக்காடாக இருக்கும், இப்பகுதிக்கு கிராமத்து மக்கள் கால் நடைகளை மேய்ச்சலுக்கு கொண்டு செல்வர். கோபுரத்து அடி வைரவ கோயிலுக்கும், மண்கும்பான் பிள்ளையார் கோயிலுக்கும் இடையில் ஒரு ஆலயமும் இருக்கவில்லை. இப்பிரதேசத்தில் விவசாயத்தில் ஈடுபட்டுள்ள பெண்கள் கால்நடைகளுக்கு புல் செருக்கும் பெண்கள் பகல் நேரங்களில் தரவைகளில் மாட்டுச் சாணம் சேகரிக்கும் பெண்கள் போன்றவர்களின் கனவில் தெய்வமாகத்தான் இவ்வாலயம் உருப்பெறத் தொடங்கியது. பின்னர் பெண் பிள்ளைகள் தங்கள் தொழில், கல்வி, விவாகம் போன்றவற்றுக்கு நேர்த்திக்கடன் செய்யும்

உ

# வேலணை செம்மணத்தி நாச்சியம்மன் ஆலயம்



இடமாக மாறத் தொடங்கியது. விவசாயிகளும் பொங்கல் செய்யத் தொடங்கினர். இவ்வாலயம் நாவலடிப்புல பிள்ளைகளை குறிப்பாக பெண் பிள்ளைகளை இணைக்கும் ஆலயமாக மாறியது.

இவ்வாலயம் நூறு ஆண்டுகளுக்கு மேலாகக் கிடுகுக் கொட்டகையாக இருந்து அண்மையில் பெரியளவில் புனருத்தாரண நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவதைக் காணலாம். இக் கிராமத்திலிருந்து இடம் பெயர்ந்து உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் வாழ்வோர் இவ்வாலயத்தின் மகிமையை உணர்ந்து பெருமளவு பொருட்செலவில் கட்டுமானப் பணிகளைச் செய்து வருகின்றனர். இன்று சுவிஸ்ஸில் வாழும் இக்கிராமத்துப் பெண் திருமதி. அம்பிகாதேவி இராசலிங்கம் சுவிஸ்ஸில் எத்தகைய வசதிகள் இருந்தாலும் செம்மணத்தி நாச்சியம்மன் ஆலயத்தில் வழிபடும் போது ஏற்படுகின்ற மனமகிழ்ச்சி அங்கு கிடைக்கவில்லை என்று கூறுவது வழக்கம். இவரின் முயற்சியிலேயே இன்று ஆலய பணிகள் முடிவு பெற கிராம எழுச்சி ஏற்படும் என்பது இவரது கருத்து. இவர் புகழ் இவளை விளக்கேற்றி வழிபடும் பக்தர்களுக்கு மட்டுமே புரியும்.

இந்த சிலையுடன் சூலத்தை சேர்த்தே வணங்குகிறார்கள். இதைவிட இந்தக் கோயிலிலுள்ள ஒரு சிறப்பம்சம் என்னவென்றால், அந்தணர் இன்றிப் பூஜை நடைபெறுவதுதான். இங்குள்ள மக்கள் பால், மஞ்சள், நீர் போன்றவற்றுடன் சந்தனமும், குங்குமம் சேர்த்து அபிஷேகம் செய்வார்கள். தங்கள் குறைகளை அம்மனிடம் கூறி கற்பூரம் கொழுத்தி வழிபாடு செய்வார்கள். எக்குறையாயினும், அம்மனின் வாசல் சென்றால் எல்லாக் குறையும் தீர்ந்துவிடும். அவ்வளவு அற்புதம் நிறைந்த ஒரு தெய்வம் நாச்சியம்மன்.

நாகம் கனவில் காத்து நிற்கும் இந்த நாச்சியம்மன் நாகேஸ்வரியின் மறுவடிவம் என்றும் பக்தர்கள் பேசிக்கொள்வார்கள்.

வேலணையில் அமைந்துள்ள வித்தகியாம் நாச்சியம்மன்<br>
வேண்டும் வரம் தருவாள் வேதனைகள் தீர்த்து வைப்பாள்<br>
தாயே என அழுது சரண் அடைந்து விட்டாலே<br>
தாயாகி வந்து எம்மைத் தாங்கி அணைத்திடுவாள்<br>
குழந்தையாய் மாறியவள் கொஞ்சி விளையாடிடுவாள்<br>
கூப்பிட்டோர் குறைதீர்த்து கொள்ளை இன்பம் கொடுத்திடுவாள்<br>
பிள்ளையென்று நினைப்பவர்க்குப் பிள்ளையாய் தான்வருவாள்<br>
அல்லல்களைத் தீர்த்து, அருள் மழை பொழிந்திடுவாள்.



## ஆலயங்கள்

### வேலணை மேற்கு அம்பிகை நகரில் உள்ள உலவிதோட்டம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் ஈச்சம்பத்தை அம்மன் என வழங்கும்

# ஸ்ரீ மகேஸ்வரி அம்மன் ஆலயத்தின் வரலாற்று நூல்

*திரு. நா. வடிவேலு - தலைவர் (அறங்காவலர் சபை)*

**"வேல்"** அணைந்த இடம் **"வேலணை"**, **"சரம்"** அணைந்த இடம் **"சரவணை"** என்பார்கள். அந்தவகையிலே "வேல்" அணைந்த இடமான சைவமும் தமிழும் கமழும் **"வேலணை"**ப்பதியின் தென் மேற்குப்பால் (8ம் வட்டாரத்தில்) உள்ள கெட்டில் (தற்போது அம்பிகை நகர்) எனும் கிராமத்தில், சைவத்தையும் தமிழையும் பேணிக் காத்து வருபவர்களான, கடல் வளத்தினைப் பெறுவதையே சீவனோ பாயத்திற்கான தொழிலாகக் கொண்ட எமது மக்கள் மத்தியிலே கோவில் கொண்டு அருள்பாலித்துக் கொண்டிருக்கும் அம்பிகை நகர் அன்னை ஸ்ரீ மகேஸ்வரி அம்பாள் ஆலய வரலாற்றினையும் சிறப்புக்களையும் அம்பாளைச் சரணடைந்து மிகுந்த பயபக்தியோடு விபரிக்க விளைகின்றோம்.

எமது கிராமத்தின் அயலிலுள்ள "புளியங்கூடல்" கிராமத்தில் அன்னை "மகாமாரி" அம்பாள் கோவில் கொண்டு எழுந்தருளிய காலந்தொட்டு எமது மூதாதையர்களும் "அம்பாள்" மீது மிகுந்த பற்றுடையவர்களாக வழிபட்டு வந்தார்கள். அக்காலத்தில் சனச்செறிவு இல்லாதிருந் தமையாலும் அம்பாளின் உற்சவங்களைச் செய்வதற்கு ஆளணிப்பற்றாக்குறை நிலவியதாலும் அம்பாளின் உற்சவங்களில் ஒன்றினைச் செய்யும் வண்ணம்

உ

# வேலணை அம்பிகைநகர்
# ஸ்ரீ மகேஸ்வரி அம்மன் ஆலயம்



ஆலயத்தின் அப்போதைய அறங்காவலரும் அவரது அனுசரணையாளர்களும் எமது மூதாதையர்களைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க பயபக்தியோடு அவர்களும் ஏற்றுக் கொண்டனர். அம்பாளின் திருவிழாக்களுள் ஆறாம் திருவிழா எமது மக்களுக்கு ஒப்படைக்கப்பட்டது. இது எமது மக்களுக்குக் கிடைத்த தெய்வீகமானதோர் வரப்பிரசாதமாகும். காரணம் "வேலணை பெருங்குளம்" உறை முத்துமாரி அம்பாளின் "ஆறாம்" திருவிழாவானது வேலணையூர் செட்டிபுலம் கிராமம் வாழ் எமது உறவுகள் தொன்று தொட்டு செய்து வரும் ஒன்று, நயினை நாகபூஷணி அம்பாளின் 6ஆம் திருவிழாவும் எமது உறவினர்களால் செய்யப்பட்டு வருகின்றது. எனவே அம்பாள் ஆலயங்களில் எமது மக்களுக்கு ஆறாம் திருவிழா கிடைப்பதானது அம்பாளின் பெருங் கருணைப் பேறு எனக் கூறுவதில் பெருமையடைகின்றோம். இந்தவகையிலே "மகாமாரி" அம்பாளின் ஆறாம் திருவிழாவினையும் எமது மக்கள் சார்பிலே எமது முன்னோர்களான திருவாளர்கள் இராமர் முருகர், வைத்தி அம்பலவியார், திருமதி சிதம்பரம் வேலாசி ஆகியோர் பொறுப்பேற்றுச் சிறப்பாக நடாத்தி வந்தார்கள். இருந்த போதிலும் திருவிழாக் காலங்களிலே ஏனைய உபயகாரர்கள் அனுபவித்த உரிமைகள் பல இவர்களுக்குக் கிடைக்கவில்லை. சுருங்கக் கூறின் "எங்களுடைய காசு, உங்களுடைய திருவிழா" எனும் முதுமொழி போன்று இவர்களும் புறந்தள்ளப்பட்டார்கள். இதற்கான காரணம் அக்காலத்தில் நிலவிய சமூக ஏற்றத்தாழ்வும் அடக்குமுறை அதிகாரமும் தான் என்று கொள்ளுகின்றோம். இதனால் விரக்தியடைந்த எம்மவர்கள் 1941ஆம் ஆண்டு காலப்பகுதியில் ஆலய அறங்காவலரோடும் அவரது ஆதரவாளர் களோடும் முரண்பட்டுக் கொண்டு அம்பாளின் ஆலய முன்றலிலே நின்று எமது மக்களுக்கென ஓர் அம்பாள் ஆலயம் அமைத்து அதிலேதான் மகாமாரி அம்பாளுக்கான கடமைகளைச் செய்வதெனச் சபதம் எடுத்துக் கொண்டு புறப்படும் போது, எமது உறவினரான சிதம்பரம் வேலாசி அம்மாமீது அம்பாள் உருக்கொண்டு சில வாக்குகள் கொடுத்ததோடு அங்கிருந்து உருக்கொண்ட நிலையிலேயே எமது கிராமத்திற்கு வந்து அவரது சொந்தக்காணியில் செழிப்பாக நின்ற வேப்பம் விருட்சத்தைக் காட்டி அதனடியிலே அம்பாளை வைத்துப் பூசிக்குமாறு வாக்குக் கொடுக்கப்பட்டது. அன்றிலிருந்து புளியங்கூடல் உறை மகாமாரி அம்பாளின் ஞாபகார்த்தமாக அம்பாளின் திருவுருவப்படம் ஒன்றினை வைத்துப் பூசித்து வந்தனர்.

புளியங்கூடல் பதி உறை மகாமாரி அம்பாளின் எட்டாம் மடையிலன்று இங்கேயும் எமது மக்கள் அம்பாள் பேரிலே பொங்கல் செய்து மடைபரவி, வெளி மேளத்துடன் வழிவெட்டி (கடற்கரைப் பக்கம் சென்று) வந்தனர்.

**காணி வாங்கியமையும்**
**ஆலயம் அமைத்தமையும் :**

1943ஆம் ஆண்டு எமது முன்னோர்களான திரு. வைத்தி அம்பலவி யும், ஊர்மக்களின் உதவியைப் பெற்று அயல் கிராமத்தில் உள்ளவர்களிடம் பணம் கொடுத்து 25 பரப்பு உலவி தோட்டம் என்னும் காணியை பொதுக் காணியாக வாங்கி அந்தக் காணியில் ஓர் ஓலைக்குடிசை அமைத்து அதில் அம்மனை ஸ்தாபனம் செய்து வழிபட்டு வந்தனர். எமது உறவினர்கள் அந்தக் காணியை நாளாந்தம் துப்புரவு செய்வது வழக்கத்தில் உள்ளது. அதன் காரணம் கற்களும், ஈச்சம்பற்றையும் நெருக்கமாக உள்ளது. அவ்வாறு துப்புரவு செய்யும் வேளையில் அம்பாளின் சாயல் கொண்ட கல் ஒன்றைக் கண்டெடுத்து ஆலயத்தில் வைத்து வழிபட்டு வந்தனர். அதன் பின்னர் அம்பாளின் மூர்த்திகரம் சிறப்பாகவும் மகிமையாகவும் இருக்கக் கண்டோம். அம்பாளின் சிறு ஆலயம் அமைந்த இடத்தில் ஈச்சம்பற்றை நிறைய காணப்பட்டதால் ஸ்ரீமகேஸ்வரி அம்மன் என்ற நாமம் ஈச்சம்பற்றை அம்மன் என வழங்கலாயிற்று.

1943ஆம் ஆண்டிலிருந்து 1948 ஆம் ஆண்டுவரை எமது மக்களின் வேண்டுகோளின் பேரில் அம்பாளுடைய நித்திய பூசைகளை வேலணை மேற்கு முடிப்பிள்ளையார் ஆலயத்திற்கு அண்மையில் இருந்த சைவக் குருக்களான திரு. மு. கணபதிப்பிள்ளை ஐயா அவர்களும், திரு. ஆ. சபாரெத்தினம் ஐயா அவர்களும் இணைந்து நாளாந்தம் பூசைகள் செய்து வந்தார்கள். சிலர் பூசை செய்ய விடாது அவர்களைத் தடுக்க முற்பட்ட போதிலும் அவர்கள் இருவரும் அவர்களது கபட எண்ணங்களுக்கு இடங்கொடாது தொடர்ந்தும் அம்பாளுக் குரிய கடமைகளைச் செய்து வந்தார்கள்.

1948ஆம் ஆண்டிலிருந்து 1952 ஆம் ஆண்டுவரை நிர்வாகச் செயற்பாடுகள் சீராக அமையாததால் அம்பாளுக்கான கடமைகள் மந்த கதியடைந்திருந்தது. இக்காலப் பகுதியில் எமது மக்கள் மத்தியில் பிறந்த குழந்தைகள் (சிசுக்கள்) உயிர்வாழவில்லை. இதன் காரணமாக எமது மக்கள் அச்சமும் பீதியும் அடைந்தார்கள். இதற்கான காரணம் அம்பாளுக்குக் கடமைகள் செய்யாது கவனிப்பாரற்று விட்டமைதான் என உணர்ந்து, பொது நிதி சேகரித்து சிறு ஆலயம் அமைத்து கரணவாய் குருக்களின் உதவியுடன் சிறப்பாக அபிஷேகம் செய்து அம்பாளுக்குரிய கடமைகள் அனைத்தையும் செய்து வழிபட்டு வந்தார்கள். இதன் பின்னர் எவ்வித அனர்த்தங்களுமின்றி அம்பாளின் அருளால் சிறப்பான வாழ்வு மலர்ந்தது.

1963ஆம் ஆண்டு ஆனி மாதம் சுருவில் ஐயனார் கோவில் ஆலயக் குருக்களான சோமசுந்தரக்குருக்கள் அவர்கள் அம்பாளுக்கு நித்திய பூசை செய்து வந்துள்ளார். அவரின் ஆலோசனைகளை எமது மக்களும்

கேட்டறிந்து அம்பாள் ஆலயத்தை விஸ்தீரணமானதாக கட்டுவதற்காக 1965 ஆம் ஆண்டு தொடக்கம் எமது மக்கள் அன்றாடம் செய்யும் தொழில் வருமானத்திலிருந்து நிதி பெற்று மூலஸ்தானம், வெளி மண்டபம், மணிக்கூட்டுக் கோபுரம் ஆகியவற்றை அமைத்து சங்காபிஷேகம் செய்தனர். அதனைத் தொடர்ந்து 1 ஆம் திருவிழா தொடக்கம் 10 ஆம் திருவிழா வரை அலங்காரத் திருவிழாவாக நடைபெற்று வருகின்றது. 11 ஆம் நாள் அதிகாலை ஸ்ரீ மகேஸ்வரி அம்பாளுக்கு பூந்தண்டிகையில் வைத்து அபிஷேகமும் ஆராதனையும் நடைபெறும். அன்று அம்பாளுக்கு வழிவெட்டுத் திருவிழா நடைபெறும்.

அம்பாளுக்கு நிரந்தர ஆலயம் அமைப்பதற்கான பணிகளை மேற்கொள்வதற்காகத் திருவிழாக்களின் உபயகாரர்களையும் உள்ளடக்கி அறங்காவலர்சபை ஒன்று 1974 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 15 ஆம் திகதி அமைக்கப்பட்டது.

1. தலைவர் : திரு. குழந்தை வேலாயுதம்பிள்ளை அவர்கள்
   6ம் திருவிழா உபயகாரர்
2. உபதலைவர் : திரு. கந்தையா கதிர்காமு அவர்கள்
   2ம் திருவிழா உபயகாரர்
3. செயலாளர் : திரு. இ. சின்னத்தம்பி கந்தசாமி அவர்கள்
   3ம் திருவிழா உபயகாரர்
4. பொருளாளர் : திரு. நவசி நடராசா அவர்கள்
   10ம் திருவிழா உபயகாரர்
5. நிர்வாக உறுப்பினர்கள் :
   திரு. சரவணமுத்து முத்துக்குமாரு அவர்கள்
   4ம் திருவிழா உபயகாரர்
6. திரு. கந்தையா கனகசபை அவர்கள்
   5ம் திருவிழா உபயகாரர்
7. திரு. கோபிலாா் ஐயம்பிள்ளை அவர்கள்
   7ம் திருவிழா உபயகாரர்
8. திரு. சபாபதி செல்லையா அவர்கள்
   8ம் திருவிழா உபயகாரர்
9. திரு. நாகமுத்து சின்னையா அவர்கள்
   9ம் திருவிழா உபயகாரர்

முதலாம் (1 ஆம்) திருவிழாவான அலங்காரத் திருவிழாவும், பதினோராம் (11ஆம்) திருவிழாவான வழிவெட்டுத் திருவிழாவும் பொதுநிதியில் இருந்து செய்யப்படுபவை என்பது குறிப்பிடத்தக்கது. இந்த அறங்காவலர் சபையானது ஆலய நிர்மாணப் பணிகளை முன்னெடுத்து வெளிமண்டபம், மடப்பள்ளி, ஆகியன வற்றைக் கட்டி, தீர்த்தக் கிணறும் அமைத்து 15-08-1974 இல் கைதடியூர் ஐயாத்துரைக் குருக்கள், எஸ். ஆர். சர்மா தலைமையில் அம்பாளுக்கு மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

1978 ஆம் ஆண்டிலிருந்து 1987ஆம் ஆண்டுவரை பிரம்மஸ்ரீ ஆறுமுகசாமிக் குருக்களும் 1988 ஆம் ஆண்டு தொடக்கம் 1991ஆம் ஆண்டுவரை பிரம்மஸ்ரீ சோமசுந்தரக் குருக்களும் அர்ச்சகர்களாகச் செயற்பட்டார்கள். 1991இல் பிரம்மஸ்ரீ சோமசுந்தரக் குருக்கள் அவர்களால் அம்பாளுக்கு விசேட அபிஷேகம்

செய்யப்பட்டது. 1991ஆம் ஆண்டு பிற்பகுதியில் இராணுவ நடவடிக்கை காரணமாக இடம் பெயர்வு ஏற்பட்டதன் பின்னர் இங்கு இருந்தவரான திரு. இ. இராசசேகரம், சோமசுந்தரக் குருக்கள் உதவியுடன் அவர்களது முயற்சியால் 20 - 02 - 1992 இல் அம்பாளுக்குச் சங்காபிஷேகம் சிறப்பாகச் செய்யப்பட்டது.

இடப்பெயர்வு ஏற்பட்டதன் பின்னர் இங்கு இருந்தவர்களிடையே இருந்து மூன்று பேர்களைக் கொண்ட இடைக்கால நிர்வாகம் 15 - 02 - 1997 இல் அமைக்கப்பட்டது. அதன் தலைவராக திரு. இ. சி. கந்தசாமி அவர்களும், செயலாளராக திரு. சி. சிவகடாட்சம் அவர்களும், பொருளாளராக திரு. மு. நாகராசா அவர்களும் செயற்பட்டார்கள்.

மீண்டும் 1999 இல் புதிய நிர்வாகம் தெரிவு செய்யப்பட்டது. அதன் தலைவராக திரு. இ. முருகேசு அவர்களும், செயலாளராக திரு. சி. சிவகடாட்சம் அவர்களும், பொருளாளராக திரு. சி. சிவாஸ்கரன் அவர்களும் மற்றும் நான்கு பேர்களைக் கொண்ட நிர்வாகிகளும் தெரிவு செய்யப்பட்டனர். இவர்களின் முயற்சியால் ஆலயம் புனர்நிர்மாணம் செய்யப்பட்டு 22 - 07 - 99 இல் அம்பாளுக்கு மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

அதன் பின்னர் நிர்வாகப் பிணக்குகள் ஏற்பட்டதால் 15 - 05 - 2000 இல் நிர்வாகம் கலைக்கப்பட்டு புதிய நிர்வாகம் அமைக்கப்பட்டது.

அதில் தலைவராக திரு. ச. இந்திரகுமார் அவர்களும், செயலாளராக திரு. முத்தையா வேல்முருகன் அவர்களும், பொருளாளராக திரு. மு. முத்துலிங்கம் அவர்களும் அங்கம் வகித்தார்கள்.

14 - 06 - 2003 இல் தற்போதைய நிர்வாகம் தெரிவு செய்யப்பட்டது. தற்போதைய நிர்வாகத்தில் அங்கம் வகிக்கும் நிர்வாகிகள் விபரம் வருமாறு :

தலைவர் : திரு. நாகநாதி வடிவேலு அவர்கள்

உபதலைவர் : திரு. சின்னத்துரை சிறீலிங்கநாதன் அவர்கள்

செயலாளர் : திரு. கதிரவேலு குதிரைமலை அவர்கள்

உபசெயலாளர் : திரு. கந்தசாமி சுதாகரன் அவர்கள்

பொருளாளர் : திரு. இராஜேந்திரம் இராசசேகரம் அவர்கள்

நிர்வாக உறுப்பினர்கள் :

திரு. கனகையா குலசேகரலிங்கம் அவர்கள்
திரு. ஐயம்பிள்ளை சுந்தரலிங்கம் அவர்கள்
திரு. சந்திரன் இந்திரன் அவர்கள்
திரு. சண்முகநாதன் சிவகுமார் அவர்கள்

தற்போதைய நிர்வாகத்திலே ஸ்ரீ மகேஸ்வரி அம்பாளின் வருடாந்த உற்சவங்களும் நித்தியபூசைகளும் சிறப்பாக அமையப் பெற்று வருகின்றன. அம்பாளின் ஆலயமும் சிறக்க அம்பாளின் அருட்கருணையால் எமது சந்ததியினரும் கல்வியும் செல்வமும் பெற்று சிறப்பான வாழ்வு வாழ அருள்பாலிக்க வேண்டி அம்பாளை இறைஞ்சி நிறைவு செய்கின்றோம்.

உ

# வேலணை தெப்பக்குளம் நால்வர் மடம்
# (நடராசர் ஆலயம்- சிவன் கோவில்)



## ஆலயங்கள்

# தெப்பக்குளம் நால்வர் மடம்
## (நடராசர் ஆலயம் - சிவன் கோவில்)

*திரு. ச. கைலாயபிள்ளை - அதிபர்*

**வே**லணையில் சமயப்பணி, திருப்பணி செய்த பெருமக்களில் உயர் திரு. செல்லப்பா சுவாமியார் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளார். செல்லப்பா சுவாமிகள் தனது வாலிப காலத்தில் ஏற்பட்ட இறை நம்பிக்கை காரணமாக சிவ நம்பிக்கையுடையவ ராகவும், திருப்பணிகள் செய்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவராகவும் மாறினார். சைவ சமயத்தின் நான்கு குரவர்கள் மேல் அதிக பற்றுக் கொண்டவராக இருந்தார். சேர். கந்தையா வைத்தியநாதன், திருக்கேதீஸ்வர புனருத்தாரணப் பணிகள் ஆரம்பித்த பொழுது அப்பணிகளுடன் தன்னையும் இணைத்து திருக்கேதீஸ்வரத்தில் பெரும்பணியாற்றினார். இதனைத்தொடர்ந்து வேலணையிலும் சமய வளர்ச்சிக்கு ஒரு மடம் அமைக்க வேண்டும் என விரும்பினார்.

வேலணையில் மடம் அமைக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தவர் அதை எங்கே அமைக்க வேண்டும் என்று ஆராயலானார். மட அமைப்பிற்கு அம்மன் கோமிற் சூழலே சிறந்தது என உணர்ந்து பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோமிலிற்கு கிழக்கே பெருங்குளக்கரையை அண்டி இம்மடத்தை அமைக்கலானார். இம்மடம் தெப்பக் குளத்துடன் கூடியதாக அமையப்பெற்றது. இம்மடம் அமைந்துள்ள இடம் -பள்ள நிலமாகவும், நீர் தேங்கும் நிலமாகவும் இருந்ததால் மட அமைப்பும் தெப்பகுள அமைப்பும் பெரியளவு எந்திரி வேலைகள் கொண்டதாகவும் பெரும்

செலவு மிக்கதாகவும் அமைந்தது. எனினும் செல்லப்பா சுவாமிகளினதும் அவரது சகோதரர்களின் கடின உழைப்பிற்கும், மனவலிமைக்கும் எடுத்த வேலைகள் பெரிதாக இருக்கவில்லை. சிறிது காலத்துக்குள்ளேயே மடத்தைக் கட்டி முடித்தார். (1948)

கட்டிமுடிக்கப்பட்ட மடத்தில் பல்வேறு சமய நிகழ்ச்சிகள் இடம் பெறலாயின. வருடாந்தம் தீட்சை கொடுத்தல், நால்வர் குருபூசைகள், அறுபத்தி மூன்று (63) நாயன்மார்கள் குருபூசைகள், ஆனிஉத்தரம் போன்ற நிகழ்ச்சிகளும் சமய பிரசங்கங்களும் இடம் பெறலாயின. இவர் இந்தியாவில் பல சமய ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்து வந்ததால் பல சிறந்த கருத்துக்களை இங்கு கொண்டு வரலாயினார். இவர் காசியில் இருந்து கொண்டு வந்த இலிங்கத்தை இம் மடத்தின் நடுப்பகுதியில் பிரதிஷ்டை பண்ணி பூசைகள் இடம்பெறச்செய்தார். மடத்தின் வடக்குப் பக்கத்தில் நடராஜர் விக்கிரகம் பிரதிஷ்டை பண்ணி நித்திய பூசைகள் இடம் பெறலாயின. ஆனிஉத்தரம் பெருவிழாவாக ஆண்டு தோறும் கொண்டாடப்பட்டது. அன்று நடராஜப் பெருமானை தேரில் எழுந்தருளப்பண்ணி அவரை வேலணையின் முக்கிய வீதி வழியாக ஊர்வலமாக கொண்டு சென்று வெள்ளைக் கடற்கரையில் தீர்த்தமாடி கோயிலை அடைவது வழக்கம். இது ஒரு கண்கொள்ளாக் காட்சியாகும்.

அன்றியும் ஊரில் உள்ள பிள்ளைகள் பண்ணோடு தேவார திருவாசகங்களை பாடுவதற்கேற்ற பயிற்சிகள் பண்ணிசை வல்லார் மூலம் வழங்கப்பட்டன. இந்த கோயிலை அமைக்க, விழாக்கள் முதலியன செய்ய, வேறு பல சமய தொண்டுகளுக்கும் ஊர்மக்களிடம் நிதி திரட்டாமலே செய்து முடித்தார்.

இவரால் ஆக்கப்பட்ட நடராஜர் ஆலயம் பிற்காலத்தில் மிகப்பெரும் ஆலயமாக விளங்குமென நம்புவோமாக.

இவ்வாலயத்தை தனக்குப்பின் நிர்வகிக்க தனது தம்பி திருவாளர் வ. க. சிவகுரு அவர்களிடம் ஒப்படைத்தார். திரு. வ. க. சிவகுரு அவர்கள் தனக்குப்பின் இவ் வாலயத்தை நிர்வகிக்க திரு. ச. மாணிக்கவாசகர் ஆசிரியர் தலைமையில் நிர்வாகசபை அமைத்து அவரிடம் ஒப்படைத்தார்.

இம்மடம், மக்கள் மீள்குடியேற்றம், புனர்வாழ்வு புனருத்தாரண செயற்பாடு களுடன் புதுப்பொலிவு பெறும் நாள் வெகு தூரத்தில் இல்லை.



உ

# வேலணை வங்களாவடி முருகன் ஆலயம்



# ஆலயங்கள்

## வங்களாவடி முருகன் ஆலயம்

*திரு. சு. கனகநாயகம்*
*விரிவுரையாளர் - வேலணை*

**வே**லணை வங்களாவடி 1950 களின் பின்னர் படிப்படியாக ஒரு நகரப் பண்பைப் பெறத் தொடங்கியது. பாடசாலைகள், கிராமச் சங்கம், கிராமக் கோடு, தபாற் கந்தோர், பலசரக்குக் கடைகள் சைக்கிள் கடைகள் என மக்கள் பொருட்களுக்கும், சேவைகளுக்கும் வரும் இடமாக மாறி வந்தது. எனினும் வங்களாவடி பிரதேசம் குடியிருப்புகள் குறைவான பனை வளவுகள், வெளிகள் கொண்டும் காணப்பட்டது. ஆலயம் இல்லாத குறை வங்களாவடி மக்களாலும் வங்களாவடியில் இருந்த நிறுவனங்களாலும் உணரப் பட்டது. இந்நிலையில் 1970 களின் பின்னர் வங்களாவடி தீவுப்பகுதியின் ஒரு முக்கிய நிர்வாக மையமாக மாறியது. கல்விக் கந்தோர், உதவி அரசாங்க அதிபர் பிரிவுக் காரியாலயம், கட்டிடத்திணைக்களம், மின்சார சபை, குடிநீர் வழங்கல் பிரிவினர், பலநோக்கு கூட்டுறவுச் சங்கம், மருத்துவமனை, விவசாய விரிவாக்கல் காரியாலயம், மிருக வைத்தியர் காரியாலயம் போன்ற பல காரியாலயங்கள் அமையப் பெற்றன. இப்பின்புலத்தில் இந் நகரத்திற்கு வழிகாட்டும் திருக்கோயில் அமையப்பெற வேண்டும் என்ற தேவை இங்குள்ளவர் களால் உணரப்பட்டு பெரும் கோரிக்கையாக வலுப்பெற்றது.

இப்பின்னணியில் வங்களாவடி முருகன் கோயில் அமைப்பதற்கு இடம் தேடலாயினர். வங்களாவடியில் சரஸ்வதி வித்தியா சாலைக்கு எதிராக இருந்த வெற்றுப்

திருக்கார்த்திகை போன்ற விஷேட தினங்களும் இடம்பெற்றன. ஞானவைர வருக்கும் பொங்கல் படையல் மடைபரவல் ஆகியனவும் இடையீடின்றி செய்யப்பட்டு வந்தன.

1974 இல் பாராளுமன்ற உறுப்பினர் பண்டிதர் கா. பொ. இரத்தினமும், திரு. இ. க. நாகராசாவும் நிர்வாக சபையில் இணைக்கப்பட்டனர். அயலவர்களைத் தவிர தூர இடங்களிலிருந்தும் வங்களாவடி முருகன் கோவிலுக்கு மக்கள் வழிபடவரலாயினர். திருவிழாக்களும் மேன் மேலும் சிறப்புக்களுடன் நடைபெற்று வரலாயின. சபை மீண்டும் 1979 இல் கூடியது.

1991 இல் ஸ்ரீலங்கா இராணுவம் வேலணையில் செய்த அட்டூழியங்களால் வேலணை மக்கள் இடம்பெயர்ந்து கொழும்பிற்கும், யாழ்ப்பாணத்திற்கும், வெளிநாடுகளுக்கும் சென்றுவிடவே வேலணை வங்களாவடி முருகன் கோவிலும் கவனிப்பாரற்றுக் கிடக்கலாயிற்று.

1997 இல் அயலவர்கள் சிலர் திரும்பிவந்தனர். அவர்களிற் சில பக்தர்களின் முயற்சியாலும் ஊரவர்களின் ஒத்துழைப் பாலும் இடைக்கால நிர்வாகம் ஒன்று அமைக்கப்பட்டுப் பூசைகளும், வழிபாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன. தற்போது தண்ணீர்த்தாங்கி ஒன்றும் கோவிலுக்கு அமைத்துக் கொடுக்கப் பட்டுள்ளது. மீண்டும் பழையபடி வங்களாவடி முருகன் கோவில் வளர்ச்சி பெறத் தொடங்கியுள்ளது.

எதிர்காலத்தில் இக்கோயிலுக்கு ஒரு தேரும் கோபுரமும் அமைக்க வேண்டுமென்ற அவா ஞானவைரவர் முருகன் அடியார்கள் அனைவருக்கும் இருந்து கொண்டே வருகின்றது. இந்த ஆசையும் விரைவில் நிறைவேறவேண்டும் என இறையாசியை வேண்டி நிற்கின்றனர்.

இவ்வாலயம் கிராமிய சிறு தெய்வ வழிபாட்டு வரலாற்றுப் பின்னணியிலிருந்து, புதிய சமுதாய தேவைகளுக்கு ஏற்ப ஆகமமுறைப்படியான முருகன் கோயிலாக வளர்ச்சி பெற்றுள்ளது.



## ஆலயங்கள்

# வேலணை துறையூர் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோவில்

*திரு. க. நவரத்தினம் - வைத்தியர்*

வேலணை துறையூர் மக்களின் வாழ்வும் சமூக செயற்பாடுகள் யாவும் ஹரிகரபுத்திர ஐயனார் ஆலயத்து செயற்பாடுகளுடன் இரண்டறக் கலந்து இருந்தது. ஆலயத்தை மையமாகக் கொண்டே கிராம ஒற்றுமையும் செயற்பாடுகளும் அமைந்திருந்தன. இத்தகைய ஒற்றுமை 1950 களிலிருந்து படிப்படியாக குறைந்து கிராமத்து மக்களிடையே கருத்து வேற்றுமைகளை ஏற்படுத்தின. இதன் காரணமாக 300 ஆண்டுகளுக்கு மேலாக நிலவிய கோயில் நிர்வாக கட்டமைப்புக்கு எதிராக ஒரு பகுதியினர் திரண்டனர். பதவிப் போட்டிகளும், தனிமனித ஆதிக்க நிலைப்பாடுகளும் அங்கத்தவரிடையே கருத்து முரண்பாடுகளை தோற்று வித்ததுடன் கிராமமட்டத்தில் பல பிரிவுகளை உருவாக்கின. இப்பின்னணியில் பிரிந்து சென்ற 28 பேரும் இணைந்து 1960 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் 10ஆம் திகதி வைத்தியர் ஐயம்பிள்ளை கந்தையாவின் வீட்டில் கூடி தங்களது எதிர்கால செயற்பாட்டை ஆராய்ந்தனர்.

திரு. கதிரவேலு பேரம்பலம் ஆசிரியரின் ஆலோசனையின் பேரில் "வேலணை தெற்குவாசிகள் நலவுரிமைச் சங்கம்" உருவாக்கப்பட்டு, அதன் தலைவராக எஸ்தாக்கி இளையதம்பியையும், செயலாளராக வைத்தியர் ஐயம்பிள்ளை கந்தையாவையும், பொருளாளராக வைத்தியர் சின்னர் ஐயம்பிள்ளையையும் தெரிவு செய்து 28 பேர் கொண்ட

சங்கத்தையும் நிறுவினர். நாட்கள் பல உருண்டோட ஐயம்பிள்ளை கந்தையா வினால் ஓர் கனவின் செயற்பாடு வெளிப்படுத்தப்பட்டது.

வேலணை தெற்கு துறைமுகக் கடற்பரப்பில் ஓர் வெள்ளிப் பேழையில் சங்கு வடிவத்தில் ஒரு பொருள் இரைந்து கொண்டு வருவதையும் அதை தானும் ஏனையோர்களும் சேர்ந்து எடுத்துவந்து பார்த்தபோது அது வேல்வடிவத்தில் தெய்வ ஒளியை வீசியதாகவும் எனவே வேலினை மூலஸ்தானத்தில் வைத்து ஒரு கோவில் அமைப்போம் எனக்கூறியதாகவும்.

இதனை ஏற்றுக்கொண்ட குழுவினர் அன்புடன் ஏகமனதாக ஏற்றுக்கொள்ள திரு. சி. சண்முகம், திரு. இ. கணபதிப்பிள்ளை குடும்பத்தினர் தங்கள் மணியகாரன் தோட்டக் காணியில் கோயிலைக் கட்ட ஏற்ற இடம் எனக் கூறியதாகவும், அதனை சபையோர் ஏகமனதாக ஏற்றனர்.

அதைத் தொடர்ந்து கோவில் அமைக்கும் முகமாக 1964ஆம் ஆண்டு பங்குனி மாதம் வில்லூண்டித் தேவஸ்தான தருமகர்த்தாவும் யாழ்.மாநகர முன்னை உபநகர பிதாவுமாகிய சைவசித்தாந்த வித்தகர் சோமசுந்தரம் இராசரத்தினம் அவர்களால் சிவசுப்பிரமணிய சுவாமி கோவிலுக்கான அடிக்கல் நண்பகல் 12 மணியளவில் நாட்டப் பெற்றது. இந்த நிலையைத் தொடர்ந்து சேர்ந்த அங்கத்தவர்களான (பட்டியல் இல. இரண்டு பார்க்கவும்.)

இவர்களும் ஏனைய பக்தர்களின் அயரா உழைப்பினாலும் நாளொரு வண்ணம் பொழுதொரு மேனியாக வளர்ந்து வந்த இக்கோவில் கட்டுமானப் பணியை அராலியூர் ஸ்தபதியார் விஸ்வ லிங்கம் அவர்கள் குழுவினர் பொறுப்பேற்று நடாத்தி வந்தார்கள்.

1வது கும்பாபிஷேகம் 30 - 04 - 1969 ஆம் ஆண்டு புதன்கிழமை (தமிழ் 18 - 1969) பிரதிஸ்டா குருசிவஸ்ரீ நயினையூர் ஐ.கைலாச நாதக் குருக்கள் தலைமையில் நடாத்தப்பட்டது. 2வது கும்பாபிஷேகம் 28 - 06 - 1989 ஆம் ஆண்டு க.மு. ஜெகநாதக் குருக்கள் தலைமையில் நடைபெற்றது.

பின்னர் 3 வது கும்பாபிஷேகம் செய்ய வேண்டியதால் 21 - 10 - 2002 ஆம் ஆண்டு திங்கட்கிழமை பாலஸ்தாபனம் செய்து வைக்கப்பட்டுள்ளது. 1980 ஆம் ஆண்டுவரை நலவுரிமைச்சங்கம் என்ற பெயரில் இருந்த நிர்வாகம் அன்றைய தலைவர் ச.செல்வநாயகம் அவர்களின் முயற்சியினால் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமிகோவில் பரிபாலன சபை எனப் பெயர் மாற்றம் பெற்றது.

அதுமட்டுமின்றி 1989 ஆம் ஆண்டு 6ஆம் மாதம் 28ஆம் திகதி மணிக்கூண்டு, வைரவர் கோவில் முருகன் ஆலய பஜனைக் குழுவினராலும், சண்டேஸ்வரர் கோவில் 15 - 09 - 2000 வெள்ளிக்கிழமை நா. ஐயம்பிள்ளை தனஞ்செயன் அவர்களாலும் அன்பளிப்புச் செய்த நிதியைக் கொண்டு நிர்மாணிக்கப் பட்டது. அத்துடன் அமரர் வைத்தியர்

கந்தையாவின் ஞாபகார்த்தமாக அவரது மகன் வைத்தியர் க. நவரத்தினம் அவர்களால் அன்பளிப்புச் செய்யப்பட்ட ஒரு லட்சரூபா நிதியுடன் ஆரம்பிக்கப்பட்ட மணி மண்டபம் தற்போது பல லட்ச ரூபா கோவில் நிதியுடன் சேர்த்து அது பூர்த்தியாகும் நிலைமையிலுள்ளது. அதனது தளமாபிள் அமைப்பை நவாலியூர் மகாலிங்கம் பவளம் அவர்களால் அன்பளிப்புச் செய்ய ஒப்புதலாகியும் உள்ளது.

மற்றும் இக் கோவிலுக்கும் கிராமத்திற்கும் மேலும் அழகூட்டும் விதமாக ஈ.பீ.டீ.பி. யினரால் அன்பளிப்புச் செய்யப்பட்ட நிதியில் ஒரு கலாசார மண்டபம் நிறுவப்பட்டது. அது மேலும் பூர்த்தியடைய நிதிபற்றாக் குறை காரணமாக தேக்க நிலையை அடைந்துள்ளது.

மக்களை நல்வழிப்படுத்தி சைவ ஆசார சீலராக வாழவைக்கும் இவ்வாலயத்தில் நித்திய நைமித்திய பூசைகள் ஒழுங்காக நடைபெறுவது மட்டுமன்றி வேல் வார்ப்பு தினம், கும்பாபிஷேகத் தினம், கதிர்காமக்கந்தன் தீர்த்தோற்சவ தினம், கந்தசஷ்டிப் பெருவிழா, திருவெம்பாவை, சரஸ்வதி பூசை, மானம்பூ என்பன போன்ற வைபவங்களும் தீட்சை வைப்பித்தல் ஆகிய சமய அனுஷ்டான நிகழ்வுகளும் நடைபெறுவது மட்டுமின்றி தீவகப் பகுதியிலேயே முதல் இடத்தை வகிக்கும் கந்தபுராண விரிவுரை, திருவாதவூரடிகள் புராண விரிவுரை ஆகியன அதிசிறப்பாக ஆற்றிவருவது குறிப்பிடத்தக்கது. அது மட்டுமல்ல புராணம் வாசிப்பதற்கும், பஞ்சபுராணம் ஓதுவதற்கும் தகுதி பெற்றோர் அனேகர் ஆலய நிர்வாகத்தில் இருப்பது மகிழ்ச்சிக்குரியது.

இதில் காலாதி காலமாக விரிவுரை ஆற்றிய வைத்தியர் அமரர் ஐயம்பிள்ளை கந்தையா, அதிபர் அமரர் கதிரவேலு பேரம்பலம், அமரர் பே. சிறிகந்தபாலன் மற்றும் வைத்தியர் கந்தையா நவரத்தினம், வைத்தியர் ந. மணிவண்ணன், வைத்தியர் க. சோதிதாசன், ஆசிரியர் செ. நடேசகாந்தன் ஆகியோருடன் புராணவாசிப்பினை திறம்பட ஆற்றிய அமரர் நா. பரமசாமி, அமரர் க. பழனி, அமரர். ச. செல்லமுத்து, ஆகியோருடனும், திரு. நா. ஐயம்பிள்ளை, திரு. ஐ. தனஞ்செயன், பூமணி ஆசிரியர், ராணி, திரு. அ. நகுலன், திரு. க. கனகரத்தினம், திருமதி. வ. சதானந்தன், முத்து, சி. இந்துமதி, செ. சிந்தாமணி ஆதீவன் ஆகியோருடன் புராணபடனம் சிறப்பாயமைவது ஈண்டு நோக்கற் பாலது.

மற்றும் ஆலய அபிவிருத்தித் திருப்பணியில் முன்னைநாள் தலைவர்கள் அமரர் எஸ்தாக்கி இளையதம்பி, சின்னக்குட்டி கந்தையா, ஐயம்பிள்ளை சண்முகம், நாகமுத்து பரமசாமி, இளையதம்பி கணபதிப்பிள்ளை ஆகியோர் நலம்பட வழிநடாத்தி வந்த பாதையில் தற்போதைய தலைவர் சி. செல்வநாயகம் ஐந்து வருடங்களாக தொடர்ந்து பதவியில் இருந்து, தம் குடும்பத்தவரையும் இணைத்து அயராத சேவை செய்து வருவது கண்கூடு.

மேலும் ஆலயப் பணியில் தற்போதைய நிர்வாக சபையில் முன்னின்றுழைக்கும்

| | | |
|---|---|---|
| நா. தனஞ்செயன் | ந. கனகேந்திரன் | க. தெட்சணாமூர்த்தி |
| க. தெட்சணாமூர்த்தி | ஆ. சத்தியநாதன் | கா. சந்திரபாலன் |
| க. யோகேஸ்வரன் | ப. வடிவேல் | ச. இரங்கநாயகம் |
| கோ. கோணேஸ்வரன் | பு. சோதிலிங்கம் | அ. நகுலேஸ்வரன் |
| இ. சசீந்திரன் | இ. மகேந்திரன் | க. அருளானந்தம் |

ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இவ்வாறாக புகழ்படைத்த எம் கிராமத்தில் தோன்றிய ஸ்ரீ சிவ சுப்பிரமணிய சுவாமி கோவில் கடலலை தாலாட்டும் தென்றல் சீராட்டும் இயற்கை எழில் கொண்ட வேலணையின் தென்பகுதியில் இருந்து அருளாட்சி செய்து வருவது ஈண்டு கண்கொள்ளாக் காட்சியாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

### முதன் முதலில் ஐயனார் ஆலய நிர்வாகத்தில் இருந்து விலகியோர் விபரம் - பட்டியல் ஒன்று

| | | |
|---|---|---|
| 1. | சின்னர் | ஐயம்பிள்ளை |
| 2. | முத்தர் | பிள்ளையார் |
| 3. | முத்தர் | கந்தையா |
| 4. | முத்தர் | சடையர் |
| 5. | நாகமணி | கந்தையா |
| 6. | கணபதி | இளையதம்பி |
| 7. | முருகேசு | செல்லையா |
| 8. | சின்னக்குட்டி | கந்தையா |
| 9. | சின்னக்குட்டி | செல்லையா |
| 10. | மருதர் | செல்லையா |
| 11. | மருதர் | தம்பிப்பிள்ளை |
| 12. | எஸ்தாக்கி | இளையதம்பி |
| 13. | கதிரவேலு | பேரம்பலம் |
| 14. | ஐயம்பிள்ளை | சண்முகம் |
| 15. | ஐயம்பிள்ளை | கந்தையா |
| 16. | வைரமுத்து | இராமலிங்கம் |
| 17. | சின்னத்தம்பி | சண்முகம் |
| 18. | சின்னத்தம்பி | கார்த்திகேசு |
| 19. | நாகமுத்து | ஐயம்பிள்ளை |
| 20. | இளையதம்பி | கந்தையா |
| 21. | இளையதம்பி | கணபதிப்பிள்ளை |
| 22. | இளையதம்பி | வேலாயுதபிள்ளை |
| 23. | இளையதம்பி | கதிர்காமு |
| 24. | பிள்ளையார் | ஆறுமுகம் |
| 25. | பிள்ளையார் | இளையதம்பி |
| 26. | நாகமுத்து | மாணிக்கம் |
| 27. | செல்லையா | பசுபதி |
| 28. | சபாபதி | அமிர்தலிங்கம் |

### முருகன் கோவில் கட்டி கும்பாபிஷேகம் செய்யும் போது அங்கத்தவரானோர் விபரம் பட்டியல் இரண்டு

| | | |
|---|---|---|
| 1. | சின்னன் | இளையதம்பி |
| 2. | நாகமுத்து | பரமசாமி |
| 3. | கந்தர் | வேலாயுதம் |
| 4. | செல்லர் | பொன்னுத்துரை |
| 5. | கணபதி | நல்லையா |
| 6. | செல்லப்பா | பழனி |
| 7. | செல்லர் | அருணம்பலம் |
| 8. | பரமசாமி | இராசதுரை |
| 9. | பிள்ளையார் | நடராசா |
| 10. | ஐயம்பிள்ளை | பாலசுப்பிரமணியம் |

## ஆலய திருப்பணி வேலைகளுக்கு உதவிபுரிவோர்

| | | |
|---|---|---|
| 1. | ஐயம்பிள்ளை | தனஞ்செயன் |
| 2. | பரமசாமி | வடிவேல் |
| 3. | புஸ்பராசா | சோதிலிங்கம் |
| 4. | இராமலிங்கம் | மகேந்திரன் |
| 5. | மாணிக்கம் | ரவீந்திரன் |
| 6. | கந்தையா | தட்சணாமூர்த்தி |
| 7. | கார்த்திகேசு | சந்திரபாலன் |
| 8. | சண்முகம் | இரங்கநாயகம் |
| 9. | அருளம்பலம் | நகுலேஸ்வரன் |
| 10. | கணபதிபிள்ளை | அருளானந்தம் |
| 11. | கோபாலு | கோணேஸ்வரன் |
| 12. | இராசரத்தினம் | சசீந்திரன் |
| 13. | நடராசா | கனகேந்திரன் |
| 14. | ஆறுமுகம் | சத்தியநாதன் |
| 15. | செல்லையா | நடேசன் |
| 16. | செல்லையா | செல்வரெத்தினம் |
| 17. | செல்லையா | மகேஸ்வரி |
| 18. | கார்த்திகேசு | ரவீசந்திரபாலன் |
| 19. | கனகரத்தினம் | யோகேஸ்வரன் |



ஆலயங்கள்

# வேலணை சாட்டித்துறை புனித தீர்த்தமும் வெள்ளைக் கடற்கரையும்

*திரு. க. நவரத்தினம்*
*தபால் அதிபர்*

ஆயிரத்துத் தொளாயிரத்து அறுபத்தி ஐந்து, எழுபதின் நடுப்பகுதியில் ஒருநாள், விடுப்பில் நான் ஊர்வரும் பொழுதெல்லாம் மாலை வேளையில் வெள்ளைக் கடற்கரைக்குப் போவதை வழமையாகக் கொண்டிருந்ததால், அன்றும் அப்படியே போன பொழுது ஒரு பெரியவர் கடற்கரையை அண்டிய இடத்தில் மண்வெட்டியால் வெட்டிக் கொண்டிருப்பதையும், வெட்டப்பட்ட இடம் ஒரு கேணி வடிவில் உருவாகியிருந்ததையும் அவதானிக்க முடிந்தது. அவரை அணுகி விசாரித்தேன். அவர் வேலையை நிறுத்தி தலையிலிருந்த துண்டினால் முகத்தைத் துடைத்துக் கொண்டு என்னைப் பார்த்து, எட மகனே, இந்து மா சமுத்திரத்தின் அலையடிக்கும் கரையல்லவா? இது. புனித தலமாக, தீர்த்தமாக சைவமக்களால் போற்றப்படும் இராமேஸ்வரம் இதிலிருந்து இருபது மைல்களுக்குள்தான் இருக்கிறது. அந்தப் புனிதம் எமது கரையில் மட்டும் இல்லாமலா போய்விடும். அப்படியான ஒரு தீர்த்தம் இங்கு உருவாக வேண்டுமென்பது எனது ஆசை. என்னால் முடிந்ததைச் செய்வேன். என் பின்னால் வருபவர்கள் இப்புனிதப் பணியைச் செய்து முடிக்க இறையருள் கிட்ட வேண்டும் என்று சொல்லி முடித்தார். இன்றைய "சாட்டி புனித தீர்த்தக் கரைக்கு" அன்று கால் கோள் இட்டு **"முயற்சி திருவினை ஆக்கும்"** என்ற முது மொழிக்கிணங்க தள்ளாத வயதிலும் தன்னந்தனியனாக ஒரு தீர்த்தக் கேணியை உருவாக்கியவர்தான்

உ

# வேலணை சாட்டித்துறை புனித தீர்த்தமும் வெள்ளைக் கடற்கரையும்



வேலணை கிழக்கில் பிறந்து, மேற்கில் வாழ்ந்தவரும் **"மருவார்"** என்று எல்லாராலும் அன்பாக அழைக்கப்படும் திரு. வேலுப்பிள்ளை வைத்திலிங்கம் என்ற பெருமகன். அப் பெரியவரின் விடாமுயற்சி கலந்த உழைப்பு, அறிவு பூர்வமான சிந்தனை ஓட்டம், எதிர்காலத்திற்கான பொது நோக்குக் கொண்ட அவா என்பன கண்டு நான் அடைந்த வியப்பு! இன்றும் தான் மாற்றம் பெறவில்லை.

இது நடப்பதற்கு இரண்டொரு மாதங்களின் முன்பு, சில அன்பர்களுடன் மட்டக்களப்பு போயிருந்தேன். அங்கு பட்டிருப்புத் தொகுதியைச் சேர்ந்த **"எருவில்"** என்ற அழகான சிறு கிராமத்தில் இரண்டொரு தினங்கள் தங்கும் வாய்ப்பு ஏற்பட்டது. பட்டிருப்புத் தொகுதியின் எருவில் கிராமத்தையும், பெரிய போரதீவையும் ஊடறுத்து பட்டிருப்பு வாவி அமைந்துள்ளது. வாவியின் நீர்மட்டம் எந்நேரமும் கரைபுரண்டு ஓடிக் கொண்டிருக்கும். வாவியின் இருகரை களிலும் நெல்வயல்கள் தரிசாகக் கிடந்தன. ஒரு போகச் செய்கைக்குப் பின்னர் மறு ஆண்டுதான் விவசாய முயற்சிகள் நடக்குமாம். இதைப் பார்த்த எமது அன்பரிலொருவர் "பார் எவ்வளவு நீரும் நிலமும் வீணாகிப் போகிறது. எமது **'அழகர்' 'இலகர்'** இங்கிருந்தால் இப்படிக் கிடக்குமா?" என்று தனது ஆதங்கத்தை வெளிப்படையாகவே சொன்னார். இதுநடந்து சில மாதங்களின் பின்னர்...... ஊரில் **"மருவார்"** தன்னந் தனியனாக கேணி அமைத்ததைப் பார்த்த பொழுது எம்மவரின் முயற்சிபற்றிய அன்பரின் கணிப்பீடு எவ்வளவு யதார்த்தமானது என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது. (இது 35 வருடங்களுக்கு முன்னுள்ள நிகழ்வு. இன்று எப்படியோ?)

இராமேஸ்வரத்திற்கும் நமது தீவுக்கும் பல்வேறு விதத்தில் தொடர்புகளிருப்பதாக கர்ணபரம்பரையான பல கதைகள் கேள்விப்பட்டிருக்கிறோம். இந் நாட்களிலும் கூட புங்குடுதீவு கண்ணகை அம்மன் கோவில் திருவிழாவுக்கு இராமேஸ் வரத்திலிருந்து நெய்யும் வேறு பூசைத் திரவியங்களும் கடலிலே மிதந்து வந்து கோவில் கரையிலே அடையும் என்று சொல்வதை நான் அவதானித்திருக்கிறேன். இவற்றின் யதார்த்த நிலை பற்றி நாம் விவாதிப்பதில்லை. ஆனால்...... கடந்த 2003ஆம் வருட வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவில் பெருந்திருவிழாவின் போது, அம்மனின் தேருக்கான வடம் பழுதடைந்த படியால் பலவழிகளிலும் முயன்றும் பொருத்தமான வடம் கிடைக்காது செய்வதறியாது திகைத்து நின்ற வேளையில், தேருக்கு மூன்று நாட்களின் முன்பாக, செட்டிபுலத்தினைச் சேர்ந்த வாய் பேச முடியாத இளைஞர்களாகிய திருவாளர்கள் சி. யோகராசா. சோ. கனகேஸ்வரன் ஆகிய அம்பிகை பக்தர்கள் வெள்ளைக் கடற்கரைக் கடலில் தொழிலில் ஈடுபட்டிருந்த பொழுது அவர்களிடம் இவ்வடம் அகப்பட்டு, அவர்கள் பெருமுயற்சி செய்து வடத்தினைக்

கரைசேர்த்து நிருவாகத்தினரிடம் ஒப்படைத்தார்கள். தேவையான நேரத்தில் தேவையான பொருள் கிடைத்தது இறையருள் என்பதில் மாற்றுக் கருத்திருக்க முடியாது. அறிவு பூர்வமான சிந்தனைகளின் மத்தியிலே இவ்வகையான அற்புதங்கள் கர்ணபரம்பரைக் கதைகளை மெய்ப்பிப்பன போல அமைகிறதல்லவா?

வெள்ளைக் கடற்கரையென்ற பெயர் எப்படி ஏற்பட்டது? இது ஆய்வுக்குரியது. ஆனால், வேலணை சாட்டி தொடக்கம் அல்லைப்பிட்டி வரை கரையோரம் முழுவதும் பளிங்குமணல் நிரம்பியிருப்பதும், கடலிலும் கணிசமான தூரத்திற்கு கற்பாறைகளற்றதும், பளிங்கு போல தெளிவான நீராகவுமிருப்பதால் இப்பெயர் வந்திருக்குமென்றே நினைக்க வைக்கிறது. இராமேஸ்வரத்திலமைந்த கடற்கரையும் இதே போல வெள்ளை மணல் நிறைந்த கரையே. இதனை நாம் நேரடியாகக் கண்டிருக்கிறோம். பூகற்பவியலாளர்களின் கூற்றுப்படி இங்குள்ள மணல் மேடுகளுக்கும், இராமேஸ்வரத்து மணல் மேடுகளுக்கும் தொடர்பிருப்பதை உணர்ந்துகொள்ளலாம். இராமேஸ்வரத்து மணல் மேடுகளிலிருந்து காற்றால் அள்ளப்படும் மணல் கடலிலே சேர்ந்து இங்கு கரையொதுங்குவதாக நம்பப்படுகிறது. ஆக மொத்தத்தில் இராமேஸ்வர தீர்த்தக்கரையின் தொடர்பை வேலணைக் கடற்கரையில் ஏற்படுத்திய பெருமை **"மருவார்"** ஐயாவுக்குரியது. **1971**ஆம் வருடத்திலே **"மருவார்"** காலமாகிவிட அவரின் பணி தொடரப்படாதது வேதனைக்குரியது.

1991ஆம் வருடம் தீவகத்திலே ஏற்பட்ட பாரிய இடப் பெயர்வுக்கு முன்னதாக கீரிமலை புனித தீர்த்தம் இராணுவத்தால் தடுக்கப்பட்டதாலும், அடுத்த புனித தீர்த்தமாகிய வில்லூன்றி பிதிர்க் கடன்களை செவ்வனே நிறைவு செய்ய உகந்ததாக அமையாதபடியாலும், தீவகத்தின் பிதிர்க்கடன்களில் அனேகமானவை இங்கு வெள்ளைக் கடற்கரையிலே **"மருவார்"** அமைத்த தீர்த்தக் கேணியிலும், கடலிலும் நிறைவு செய்யப்பட்டன. கேணி, கடல் வசதி தவிர்ந்த வேறு வசதிகளற்ற நிலையில் கிரிகைகள், தற்காலிக கொட்டகைகளிலும், வெளியிலும் நடை பெறுவதைக் கண்ட அன்பர் **திரு. நடராசா சற்குணம்** என்பவர் தமது அன்னை இளையபிள்ளை அவர்கள் நினைவாக ஒரு மண்டபத்தை அமைத்துக் கொடுத்து உதவினார். இதற்குப் பெரிதும் உந்து சக்தியாக நின்று செயற்பட்டவர், பெருங்குளம் முத்துமாரி அம்மன் ஆலய அந்நாள் தலைவர் **திரு. தில்லையம்பலம்** அவர்கள், என்பதை முக்கியமாகக் குறிப்பிடல் வேண்டும்.

வேலணை வங்களாவடி முருகன் ஆலயத்தில் ஆடி அமாவாசையை அந்தமாகக் கொண்டு பத்துத் தினங்கள் திருவிழாக்கள் நடைபெற்று பத்தாவது நாளில் ஸ்ரீவள்ளி தேவசேனா சகித முருகப் பெருமான் அடியவர்கள் சூழ்ந்துவர வெள்ளைக் கடற்கரை தீர்த்தக்கரையில் எழுந்தருளி ஆடி அமாவாசை தீர்த்தமாடி

அடியவர்களுக்கு அருள்புரிவதும், வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவிலிலிருந்து உமையம்மை சிவன் இராத்திரி விழிப்பையும், ஐந்து காலப் பூசைகளையும் நிறைவு செய்து அடியவர்கள் சூழ்ந்து வர இரதத்திலே ஊர்வலமாக வந்து வெள்ளைக் கடல் தீர்த்தக்கரையிலே திரு. முருகதாஸ் என்ற அடியவர் அமைக்கும் பந்தலிலே எழுந்தருளியிருந்து அடியவர்களுக்கு அருள்பாலித்து தீர்த்தமாடித்திரும்புவதும் வழமை. பாரிய இடப்பெயர்வுக்கு முன்னரான காலத்தில் அலங்கரிக்கப்பட்ட வள்ளங்களிலே சுவாமி சமுத்திரத்திலே கொண்டு செல்லப்பட்டு சமுத்திர தீர்த்தம் ஆடியதும் நினைவு கூரத்தக்கது. பாரிய இடப் பெயர்வினால் யாவும் சிதறுண்டுபோக, ஓரளவு அமைதி திரும்பி மக்கள் மீளக் குடியேறிய பின்னர், வழமை போல ஆடி அமாவாசைக்கு முருகப்பெருமானும், சிவன் இராத்திரிக்கு முத்துமாரி அம்பாளும் தீர்த்தமாடித் திரும்புவது நிகழ்கிறது. அம்பிகையின் சமுத்திர தீர்த்தத்தை திரும்பவும் நடைமுறைப்படுத்த நிருவாகம் முயற்சிகள் செய்வதை இங்கு குறிப்பிடுதல் பொருத்தமே.

"வருந்திச் சுமை சுமப்பவர்களே என்னிடம் வாருங்கள், நான் உங்களுக்கு ஆறுதல் தருவேன்" என்ற தேவ மைந்தனைத் தன் திருக்கரங்களிலே ஏந்தி, மாந்தரனைவருக்கும் அபயமளிக்கும் அன்னையாக வீற்றிருப்பதும், பெருவிருட்சங்களின் நடுவே அமைதிச் சூழலில் கம்பீரமாக அமைந்திருப்பதுமான சிந்தாத்திரை மாதாவின் திருக்கோவிலும்..... உன்னதமான உயிரை அதிலும் உன்னதமான உரிமை, சுதந்திரத்திற்காக மகிழ்வோடு அர்ப்பணித்து அமைதியாக உறங்கிக் கொண்டிருக்கும் மாவீரர்களின் துயிலும் இல்லமும்..... பிறந்தோர் அனைவரும் சமமே என்ற தத்துவத்தை உலகத்தோருக்கு இறுதி நேரத்திலாவது புரியவைத்து சமநிலைப்படுத்தும் பெயர்பூத்த செம்படவன்காடு மயானமும்..... கடலோடும் பரதவர்கள் திரும்பக் காலம் தப்பினால், நான் உங்களுக்காகத் தான் காத்திருக்கிறேன் என் ஒளியைப் பார்த்து வாருங்கள் என்று சொல்வதுபோல, மினுக் மினுக்கென தன் தூண்டாமணி விளக்கினால் வழிகாட்டி நிற்கும் காளவாய்த்துறை ஐயப்பனின் திருக்கோவிலும் சூழ அமைந்து சூழலை மிகுந்த ரம்மியமாக ஆக்குகின்றன.

தவிரவும் வேலணையின் புகழ்பூத்த **"சித்தரும்" கறுவல் ஐயர்** என்று எல்லோராலும் போற்றப்படுபவருமான **சோமசுந்தர ஐயர்** தனது இறுதிக் காலத்தில் இத் தீர்த்தக் கேணிக்கு எதிர்ப்பக்கமாக தனது தியான சாலையை அமைத்து தியானம் செய்ததும், அச்சாலையிலிருந்து எழும் ஓம், ஓம் என்ற ஒலி காற்றிலே கலந்து சூழ்நிலையைப் புனிதமாக்கியதும் நினைவு கூரத்தக்கது. அந்தச் சூழல் மாற்றம் பெறாமல் அந்த ஓம் எனும் மந்திரம் இன்றும் ஒலித்துக் கொண்டிருப்பதுபோல உணரும் பொழுது சிலிர்ப்பு ஏற்படுகிறது. அனைத்துக்கும் மேலாக இந்துமாக் கடலின் அலைகள் வந்து சுவரிலே மோதித் திரும்புவதுபோல

அமைந்துள்ள நன்நீர்க் கிணறொன்று இங்கு பள்ளிவாசலிலே அமைந்துள்ளது. இந் நீரின் சுவை சொல்லுதற்கரியது. கடலலை வந்து தாலாட்டும் கிணற்றிலே அமுதம் போன்ற நீர். இதனை அதிசயம் என்பதா? கடவுளின் அருள் என்பதா?

பாரிய இடப் பெயர்வுக்கு முன்னதாக அமைதிச் சூழலில் விடுமுறை நாட்களில் இக்கடற்கரையிலே மக்கள் பெருமளவு கூடுவது வழமை. பளிங்கு போன்ற நீரிலே நீராடி உணவுண்டு தென்னை மரநிழலிலே உறங்கி விடுமுறையை மகிழ்வாகக் கழித்துப்போவார்கள். பள்ளிவாசலின் அயலிலே அமைந்திருந்த முஸ்லீம் அன்பரின் தேநீர்க்கடை மசாலா வடையும், பிளேன் 'ரீ' யும் மிகப் பிரசித்தமானது. நாமும் விடுமுறையில் வரும் பொழுதெல்லாம் இவற்றைச் சுவைக்கத் தவறுவதில்லை. கிராமத்தைச் சேர்ந்த பிற பகுதிகளில் வாழ்வோர் செட்டிபுலத்து பறிக்கூட்டு விளைமீனும், பாரோராவும் வாங்கிக் காய்ச்சிச் சாப்பிட்டுவிட்டு இந்த வெள்ளைக் கடற்கரையிலே தென்னைமர நிழலிலே படுத்துறங்குவதுபோல வராது என்று கூறுவர். அந்நாட்கள் திரும்புமா?

ஆன்மீகம், அழகு, சுகம் அனைத்தையும் தன்னுள் அடக்கி வேலணைக்குப் பெருமை சேர்த்த தீர்த்தக் கேணியும் வெள்ளைக் கடற்கரையும் இன்று அழகொழிந்து கடற்கரை முழுவதும் பற்றைகள் நிறைந்து கால்பதிக்கக் கூசும் நிலை மட்டுமல்ல உல்லாசப் பயணிகளாக வருவோர் ஒரு புறமும், உல்லாசப் பயணிகள் என்ற போர்வையில் பண்பாட்டுக்குறைவாக நடந்து அமைதி குலைப்போர் மறுபுறமுமாக வெள்ளைக் கடற்கரையின் புனிதத்தையும் அமைதியையும் கெடுக்கிறார்கள் என்கிறார்கள் சூழவுள்ளோர். தவிரவும் பிதிர்க்கடன் செய்ய வருவோரின் அமைதியான தியானத்தைக் குலைத்து அவர்களின் நோக்கினையே சிதறடித்து விடுகிறார்கள் என்றும் குற்றம் சாட்டுகிறார்கள்.

நிறைவாக, இந்தப் புனித பூமியின் புனிதத்தன்மை காப்பாற்றப்படல் வேண்டும். நம்மிடம் அழகான கடலும், புனிதமான தீர்த்தமும் இருக்கும்பொழுது, அந்நியரின் காலடி பட்டு புனிதம் கெட்டதோடு, பல்வேறு அடக்கு முறைக்கு உட்பட்டு நாம் கீரிமலை போய் பிதிர்க்கடன் கழிக்க வேண்டியதில்லை. அதே போல வில்லூன்றித் தீர்த்தக் கரைக்குச் சென்று வருவதிலும் பார்க்க நமது தீர்த்தக் கரையில் கடமைகளைச் செய்யும் பொழுது சிரமமும், செலவும் குறையுமல்லவா? எனவே அழகும் அமைதியும் புனிதமும் நிறைந்த இக் கடற்கரையையும் தீர்த்தக் கேணியையும் புனரமைப்பதோடு, பிதிர்க்கடன் செய்ய வருவோருக்கான வசதிகள் அனைத்தையும் செய்து கொடுக்க வேண்டும். ஐயப்பன் கோவில் "ஓம்" ஒலியும், மாதா கோயிலின் மணியோசையும், பள்ளிவாசலின் பாங்கோசையும், கலந்து ஒலித்து இப்பிரதேசத்தின் புனிதத்தை நிலை நிறுத்த வேண்டும். அத்தோடு புனிதர்கள் துயிலும் துயிலுமில்லமும் அருகமைந் திருப்பது சூழலுக்கு மெருகூட்டுகிறது. தனது தள்ளாத வயதிலும் இதனை ஒரு இலட்சியமாக வகுத்து இத் தீர்த்தக்

கேணியை உருவாக்கிய **"மருவார்"** ஐயாவுக்கு நாம் செய்யும் நன்றிக் கடன் இதனைப் புனரமைத்து, இராமேஸ்வரத் தீர்த்தக் கரையாக இச் சூழல் மாற வேண்டுமென்ற அவரின் ஆசையை நிறைவு செய்வதே. இப்பணிக்கான முயற்சியில் ஏற்கனவே சில அன்பர்கள் இறங்கியிருப்பது மகிழ்ச்சி தருகிறது. நம் ஒவ்வொருவரினதும் ஒத்துழைப்பும் அவர்களின் முயற்சிக்கு உந்து சக்தியாக அமைய வேண்டுமென்பதே அனைவரதும் எதிர்ப்பார்ப்பாகும்.

**"நன்றே செய்வோம் - அதனையும் இன்றே செய்வோம்"**

யாழ்ப்பாணத்தில் பிதிர்க்கடன் செய்வதற்கு மிகப் பொருத்தமான புனிதமான கடற்கரையும், அதனுடன் தொடர்பு பட்ட நிறுவனங்களும் இன்று இல்லாது இருப்பது பெரும் குறைபாடாகும். கீரிமலை தற்பொழுது உயர்பாதுகாப்பு வலயத்திற்குள் இருக்கின்றது. கீரிமலைக் கேணி ஒரு புனித நீர் ஊற்றாக இருந்தும், அதன் கடற்கரைப் பகுதி சூண்டு கற்கள் நிறைந்த பகுதியாக இருப்பதால் அடியார்கள், பிதிர்க்கடன் செய்வோர் கடலில் குளிப்பதில் பெரும் சிரமப்படுகின்றனர்.

வில்லூண்டி தீர்த்தக்கேணி யாழ்ப்பாண நகரத்தில் இருப்பதால் சில போக்குவரத்து வசதிகளை பெற்றிருந்தாலும் இதன் கடல் சேற்றுக் கடலாகவும் மாசு நிறைந்த பகுதியாக இருப்பதால் பிதிர்க்கடன் செயற்பாடுகளுக்கு பொருத்தமற்றதாக இருக்கின்றது.

வெள்ளைக் கடற்கரை, பிதிர்க்கடன் செய்வதற்கு, மிகவும் சிறந்த உள்ளார்ந்த வாய்ப்புக்களைக் கொண்டுள்ளது.

1. வெள்ளைநிற மணல் கொண்ட கடற்கரை.
2. கடல் கடற்பார், கற்கள் அற்ற நீரோட்டம் இல்லாத, சுழி இறக்கம் இல்லாத கடற்பகுதியாக உள்ளது.
3. கரையோரத்தில் நன்னீர் கிடைப்பதால் இதனைபயன்படுத்தி புனித தேவைகளுக்கு ஏற்ற நன்னீர் கேணி, கிணறுகள் அமைக்கக்கூடிய வாய்ப்புக்கள் உண்டு.
4. செம்படவன் சுடலை அருகாமையில் அமைந்திருத்தல்.
5. மாவீரர் மயானம் அமைந்திருத்தல்.
6. ஐயப்பன் கோவில் அருகாமையில் அமைந்திருத்தல்.

மேற்குறிப்பிட்ட காரணிகளை கருத்திற் கொண்டு வேலணைப் பிரதேச சபை, வெள்ளைக் கடற்கரையில் தற்போது இருக்கும் கேணியையும் அந்தியேட்டி மடத்தையும் விரிவுபடுத்த நடவடிக்கை எடுக்க வேண்டும். மேலும் தற்போதைய மடத்திற்கும் - ஐயனார் கோயிலுக்கும் இடையில் வாகனம் செல்லக்கூடிய தெரு அமைக்கப்பட வேண்டும். மற்றும் செம்படவன் சுடலை புனிதமாக்கப்பட வேண்டும். தற்போது மாவீரர் மயானம் அமைக்கப்பட்டதால் இப்பிரதேசம் மேலும் மக்கள் புழக்கத்திற்கு வரும்.

தீர்த்த மடத்திற்கும், பள்ளிவாசலுக்கும் இடைப்பட்ட கடற்கரையோரப் பகுதி உல்லாச பயணிகள், மற்றும் பொழுது போக்குவோருக்கு ஏற்ற இடமாக மாற்றினால் பிரதேச சபை குறிப்பிடத்தக்க வருமானத்தைப் பெற வழிவகுக்கும்.

# Feast of Our Lady of Good Voyage "SINTHATHIRAI MAATHA" at Chatty, Kayts

*By S. B. David*

The Shrine of Our Lady of Good Voyage is situated in a village called Chatty in Vellanai, Kayts, in the Jaffna diocese. It is said a Portuguese vessel lost its direction in the Indian Ocean and found it difficult to reach the shore. The Captain of vessel, a firm believer of Blessed Virgin Mary, carried a statue of Blessed Virgin Mary on board and he prayed for their safety and by the miraculous act of Blessed Virgin Mary the ship and its crew safely reached the shores at Chatty.

History records that they took possession of the place and built a fortress in Chatty with a chapel inside and placed the miraculous statue of Mother Mary which was with them on board and venerated her with them on board and venerated her with much piety and devotion and propagated her devotion among the inhabitants.

During the Portuguese regime the developments in the area created Vellanai to be a town and Chatty became the centre of commercial activities with a harbour and many Catholics from other parts of the island settled in Chatty for employment.

Portuguese missionaries came to Jaffna in 1544 to propagate Christianity and built a few churches in the peninsula and the church built at Chatty was dedicated to Our Lady of Good Voyage. During the Dutch rule in Ceylon they destroyed all

places of worship and churches built by the Portuguese and persecuted the Catholics.

It is believed when the vandals burnt this church the Catholics of the area removed the miraculous statue of Mother Mary and hid it in a nearby well. After a long period of abandonment a devotee learnt in her dream the presence of the miraculous statue of our Lady of Good Voyage inside the well and informed the other faithful about her dream. By the act of grace they found the statue inside the well and with the help of the other villagers erected a cadjan shelter for worship and placed this statue of Mother Mary and venerated her with piety and homage.

The Catholics around the neighbouring villages learnt the presence of the miraculous statue and flocked to pay their homage and devotion.

Rev Fr. Anthony maintained the church with the help of his aide Manuel and conducted Holy Mass and other services to propagate Blessed Virgin's devotion.

Late Rt. Rev Dr. Gyomar, the then Bishop of Jaffna, rebuild the Chatty church in 1928 with the help of devotees and well wishers near the well where the statue was found. The depth of this well cannot be traced and it never goes dry. He appointed a Parish Priest to look after churches at Allaipiddy. Mandaithivu and Chatty.

The late Bishop of Jaffna. Rt. Rev. Dr. Emilianus pillai, realising the accommodation inside the church was inadequate for the congregation during festivals built an extension, a porch attached to the main entrance with an altar to conduct services, opening on to the yard making it possible for the large crowd to follow the Holy Mass and services.

Late Rt. Rev. Dr. Deogupillai, Bishop of Jaffna, a prophetic Shepherd with dynamic vision, believer in Mother Mary's protections in all difficulties, propagated her devotion in all the parishes proclaiming Blessed Virgin Mary as the Mother of Refuge and Security when the Catholics were disturbed in their faith by the demands of the situation which prevailed in the country and inspired the Catholics to sustain their faith in Mother Mary.

The present Bishop of Jaffna, Rt. Rev. Dr. Savundranayagam, a son of the soil and a firm believer in Mother Mary followed his predecessors in propagating the manifestation of Virgin Mary. He repaired the damage caused by the ethnic violence and build huts, water tanks, a rosary shop and also provided welfare facilities for the convenience of the devotees and pilgrims who flock to the shrine throughout the year.

The Church of our Lady of Good Voyage is dedicated as a shrine for the

pilgrims in the Jaffna diocese with a resident Parish Priest and having public transport up to the shrine. The environment with soft sand, calm sea with shallow water and palmyrah palms around enable the pilgrims to spend more days in prayer and relaxation.

Our Lady of Good Voyage is called in Tamil **"SINTHATHIRAI MAATHA"** The statue portrays Blessed Virgin Mary having child Jesus on one hand and a ship on the other. Blessed Mother of Good Voyage is popularly known as the Mother and Protector of Navigators and many invoke her blessings for a safe voyage. The miraculous statue, which was treasured and venerated by our ancestors can be seen majestically adorned in gold and placed on a beautifully decorated altar inside the newly renovated church.

The feast of our Lady of Good Voyage "Chatty Sinthathirai Matha" is celebrated annually on 24th September or the previous Sunday in a glamorous and jubilant atmosphere. Devotees from all over the island flock to the shrine during the feast and invoke her blessings.

After nine days of vespers and devotions the feast culminates on the tenth day with solemn festive High Mass celebrations. After the mass the statue of our Lady of Good Voyage is placed on a gaily decorated chariot and taken around the church in a colourful procession singing Veruththam in Tamil and reciting prayers. On its return to the shrine, as the final act of prayer, a very touching prayer recited by one and all with wet eyes for all the favours and blessings received through her intercession. The feast ends with the final blessing with the miraculous statue making it the biggest festival of the parish.

The prevailing peace in the country makes it possible for the displaced devotees from the other parts of the island to attend the annual feast celebration enabling them to fulfil their vows and express their gratitude and favours received through her intercession during their turmoil.



உ

# வேலணை நுழைவாயில் அதிசய வைரவர் ஆலயம்



## ஆலயங்கள்

# வேலணை நுழைவாயில் அதிசய வைரவர் ஆலயம்

திரு. க. நவரத்தினம்
(முன்னாள் தபால் அதிபர் - வேலணை)

### ஆலய வரலாறு

1987 ஆம் வருடம் சித்திரை மாதத்தில் ஒருநாள் சோளாவத்தை என்ற பாரம்பரிய கிராமத்தைச் சேர்ந்த சிறுவர்கள் மூவர் ஈச்சம் மரங்களிலே பழம் பிடுங்கிக் கொண்டிருந்த பொழுது, செடிகளினூடே ஒரு சூலம் இருப்பதைக் கண்டு அதனை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போன பொழுது வீட்டுப் பெரியவர்கள் பயத் தினாலே அவர்களைக் கண்டித்து சூலத்தை எடுத்தஇடத்திலேயே வைத்து விடும்படி சொல்லிவிட்டார்கள். காவல் தெய்வமாகிய வைரவப் பெருமான் வேல ணைக் கிராமத்தின் நுழைவாயிலிலே அமர்ந்து கிராமத்துள் நுழைவோருக்கெல் லாம் அருள் பாலிக்கும் பெருவிருப்புக் கொண்டு அச் சிறுவர்களின் உள்ளத்திலே அருளூட்டியதன் பயனாக அவர்கள் வேலணை - யாழ்ப்பாண நெடுஞ்சாலை யிலே கிராமத்துள் நுழையும் ஓரிடத்தில் நின்ற பூவரச மரத்தின் கீழே இச்சூலத்தை நாட்டி தங்கள் முயற்சிக்கேற்ப ஒரு சிறு கொட்டிலையும் அமைத்துவிட்டார்கள். மறுநாட்காலையிலே சிறுவர்களுக்குரிய ஆவலுடன் சூலம் நாட்டிய இடத்தைப் போய்ப் பார்த்தபொழுது... என்னே அதிசயம். சூலத்தின் முன்னாலே நிறை வான பணம் கிடப்பதைக் கண்டு ஊர்ப் பெரியவர்களைக் கூட்டி வந்து காட்ட பார்த்த பெரியவர்கள் அதிசய வைரவராக இருக்கிறாரே என்று வியந்து அவருக்கு அவ்விடத்திலே ஒரு கோவில் அமைக்கும் முயற்சியிலே இறங்கி 12. 05. 1987 அன்று கோவிலுக்கான அடிக்கல் நாட்டப்பட்டது. தான் நிகழ்த்திய அதிசயத்தினாலே

"அதிசய வைரவர்" என்ற பெயர் பெற்ற பெருமானுக்கு ஊரவரின் இடைவிடா உழைப்பினாலும் பயணிகளின் அன்பளிப் பாலும் சிறு அழகிய ஆலயம் ஒன்று அமைக்கப்பட்டு அன்று வேலணை பெருங் குளம் முத்துமாரி அம்மன் கோவில் பிரதம பூசகராகவிருந்த சிவஸ்ரீ பொன்னுச்சாமிக் குருக்கள் அவர்களால் 16. 08. 1988 இல் கும்பாபிஷேகம் செய்துவைக்கப்பட்டது. இப்பணிக்கு எல்லாருமே பேருதவியாக விருந்தாலும் தங்கள் இடைவிடாத உழைப் பினால் ஒரு வருட காலத்துள் கோவில் கட்டப்பட்டு கும்பாபிஷேகம் நிறைவெய்த முன்னின்று உழைத்த திருவாளர்கள் க. கனகசபை, கு. தங்கராசா, சி. தர்மலிங்கம், திருமதி சின்னத்துரை ஆகியோர் குறிப் பிடப்பட வேண்டியவர்கள். யாவுக்கும் மேலாக அந்தப் பிஞ்சு உள்ளங்களிலே பக்தியை ஏற்படுத்தி தனக்கு ஒரு ஆலயத் தைப் பெற வைரவப் பெருமான் அருள் பாலித்த சிறுவர்களான சின்னத்துரை பஞ்சலிங்கம், சாந்தலிங்கம் கலைச் செல்வன், சபாரத்தினம் குணசேகரம் ஆகியோரே இக்கோவிலின் ஆதீன கர்த் தாக்கள் என்பது மறுக்க முடியாத உண்மை.

முன்னைய நாட்களிலே இருந்த பெரியவர்கள் சொல்லும் கர்ணபரம்பரை யான கதையொன்றுண்டு. பொழுது இரு ளாகி விட்டால் அராலிச் சந்திக்கப்பால் போக முடியாது. அராலிச் சந்தியிலே நிற் கும் "முனியின்" வாணவேடிக்கை பார்ப்ப தானால் போகலாமென்று. எதற்காக இக் கதைகள் உருவாக்கப்பட்டன என்பது எமக் குத் தெரியாது. ஆனாலும் இவ் அதிசய வைரவர் ஆலயம் நுழைவாயிலிலே அமைந்ததன் பின்னால் இப்படியான வேடிக்கைக் கதைகள் கேட்கமுடிவதில்லை. பதிலாக இந் நெடுஞ்சாலையில் பயணம் செய்வோர் எவ்வித பயமுமின்றி தங்கள் பயணத்தைச் செய்வதைக் காணக் கூடிய தாகவிருக்கிறது. இது இப்பெருமானின் அருளே.

## திருப்பணிகளும் பூசைகளும்

பெருமானின் அழகிய திருக் கோவிலுக்கு ஒரு மணிக்கோபுரம் இல்லா தது பெரும் குறையாக இருந்து வந்தது. வேலணை கிழக்கைச் சேர்ந்த திரு. நா. தில்லையம்பலம் குடும்பத்தினர் 21.11.1989 இல் ஒரு அழகிய மணிக்கோபுரத்தை அமைத் துத் தந்து அந்தக் குறையை நீக்கி வைத் தார்கள். அத்தோடு நாளாந்தப் பூசைகளை நலிவில்லாமல் செய்வதற்கு மாதம் ஒருவர் என்ற ரீதியில் பன்னிரெண்டு அடியவர்கள் பொறுப்பேற்று அப்பணியினையும் செவ் வனே நிறைவு செய்தமையும் குறிப்பிட வேண்டும். நவராத்திரி பத்துத் தினங்களும் மற்றும் விசேட தினங்களிலும் ஒவ்வொரு அடியவரின் உபயமாக விமரிசையாக பூசைகள் நிறைவு செய்யப்பட்டது. 1991ஆம் வருடத்தில் தீவகத்தில் இடம்பெற்ற இரா ணுவ நடவடிக்கையால் ஏற்பட்ட பாரிய இடப்பெயர்வு வரை இவ்வழிபாடுகள் செவ்வனே நடைபெற்றன.

## மீள் குடியேற்றமும் புனருத்தாரணமும்

2002ஆம் வருடத்திலே ஏற்பட்ட சமாதான உடன்படிக்கை காரணமாக தீவக மக்கள் சிறுகச் சிறுகக் குடியேறி தாங்கள் தீவிலே இழந்த வாழ்வை மீளக் கட்டியெழுப்ப முயன்றதோடு தங்களின் சமய கலாச்சார பண்பாட்டு விழுமியங் களையும் புனரமைக்க வேண்டிய நிலை யேற்பட்டது. அந்தவகையிலே 12 வருடங் களின் பின்னர் இவ்வாலயச் சூழலைச்

சேர்ந்த மக்களும் மீளக் குடியேறி தமது இருப்புக்களை ஒழுங்கமைத்து உறுதிப் படுத்துவதோடு விசமிகளால் சேதப்படுத் தப்பட்ட கோவிலையும் புனர்நிர்மாணம் செய்யவேண்டியாகிவிட்டது. போதிய அளவில் மக்கள் மீளக் குடியேறாத நிலை யில் குடியேறியவர்கள் ஒன்று சேர்ந்து ஆலயத்தின் புனரமைப்பையும் பூசை ஒழுங் குகளை மேற்கொள்ளும் பணியினையும் பெருமானில் பெரும்பக்தி கொண்டவரும் இவ்வாலயம் உருவாவதற்கு முக்கிய பங்காற்றி உழைத்தவருமான திரு. சி. தர்மலிங்கம் அவர்களிடமே மீளவும் ஒப் படைத்துள்ளார்கள். பொறுப்பை ஏற்ற திரு. தர்மலிங்கம் அவர்களும் மக்களின் நம்பிக்கை வீண்போகாமல் வேலணை 5ஆம் வட்டாரத்தைச் சேர்ந்த திரு. சி. தவராசா குடும்பத்தினரின் நிதிப் பங்களிப்புடனும் மற்றும் அடியவர்களின் பொருட்கள் பங் களிப்புடனும் ஆலயப் புனரமைப்பு வேலை களை நிறைவு செய்தும் மாதப் பூசைகள் நவராத்திரி மற்றும் விசேட தினங்களில் வழமைபோல உற்சவங்கள் இடம்பெறவும் இடப்பெயர்வின் முன்னர் ஆலயம் எப்படி இயங்கியதோ அதேபோன்று இயங்க ஒழுங் கமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இதற்கு இவ்வாலயத்தின் ஆதீனகர்த்தாக்கள் என்று நாம் சுட்டிக்காட்டிய சிறுவர்கள் (இன்று இளைஞர்கள்) திருவாளர்கள் பஞ்சலிங்கம் கலைச்செல்வன், குணசேகரம் ஆகியோர் உறுதுணையாக நின்றார்கள் என்பது குறிப் பிடத்தக்கது. அத்தோடு மேலும் பல வேலைகள் முன்னெடுக்கப்படவேண்டி யிருப்பதால் அடியவர்களின் பூரண ஒத் துழைப்பையும் கோரி நிற்பதாகக் குறிப்பிடு கிறார்.

சைவத்தையும் தமிழையும் தமது இரு கண்களெனப் போற்றி வளர்க்கும் வேலணை மண்ணின் நுழைவாயிலிலே கிராமத்துள் நுழைவோருக்கு சைவமணத்தை உணர வைப்பதோடு எதற்கும் அஞ்சாதீர்கள். உங்கள் காவலுக்காக நான் இங்கிருக் கிறேன் என்று தன் தூண்டாமணி விளக் கொளியால் நினைவூட்டிக் கொண் டிருக் கும் அந்த அதிசய வைரவப் பெருமானின் அருள் அனைவருக்கும் கிட்டப் பிரார்த்திப் போமாக. நமது நாட்களிலேயே வரலாறாகி நிற்கும் அவனின் புகழும் அருளும் நின்று நிலைக்கும் என்பது திண்ணம்.

## வேலணை வெள்ளைக் கடற்கரை
## பள்ளிவாசல்



வேலணை - 1

# வேலணை அமெரிக்கன் மிஷன் தமிழ்க் கலவன் பாடசாலை



வேலணை - 2

## பாடசாலைகள்

# வேலணை அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் பாடசாலை

பேராசிரியர். பொ. பாலசுந்தரம்பிள்ளை - யாழ்பல்கலைக்கழகம்

தீவுப்பகுதியில் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலைகளுள் முன்னோடியாக இக்கல்வி நிறுவனம் விளங்குகின்றது. இந்து சமய ஸ்தாபனங்கள், அரசாங்கம், றோமன் கத்தோலிக்க திருச்சபை மற்றும் சமய தொண்டு நிறுவனங்களின் முயற்சிகளுக்கு முன்னர் அமெரிக்க மிஷனரிமாரால் இப்பாடசாலை 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அமைக்கப்பட்டது. இப்பாடசாலை முன்னர் இயங்கி, கைவிடப்பட்டு மீண்டும் செயற்படத் தொடங்கி இருக்க வேண்டும் என கருத வேண்டியுள்ளது. 19 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வேலணை வாந்திபேதி நோயினால் பெரிதும் பாதிக்கப்பட்டு இருந்தது. வங்களாவடியை சூழவுள்ள பகுதியில் இறந்தவர்களை புதைத்ததாக இன்னும் வழிவழியாக பேசப்பட்டு வருவதை காணலாம்.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்து இப்பாடசாலை சிறப்பாக இயங்கத் தொடங்கியது. 1927 இல் சரஸ்வதி வித்தியாசாலை ஆரம்பமாக முதல் வேலணை கிழக்கில் இருந்த ஒரேயொரு ஆரம்ப பாடசாலை இதுவேயாகும். வேலணை மேற்கில் சைவப்பிரகாச வித்தியாசாலை 1879 இல் ஆரம்பிக்கப் பட்டது இங்கு குறிப்பிடத்தக்கது. வேலணை கிராமத்துப் பிள்ளைகள் அமெரிக்கன் மிஷன் பாடசாலை மூலமாகவே கல்விகற்கலானார்கள். இப்பாடசாலை அமெரிக்கன் மிஷன்

பாதிரிகளால் ஆரம்பிக்கப்பட்ட பொழுதும், இவர்கள் சமூகத்திற்கு கடும் அழுத்தம் கொடுத்ததாக தெரியவில்லை. கிராமத்தில் ஒருசில குடும்பங்களே காலத்துக்கு காலம் கிறிஸ்தவ சமயத்தில் சேர்ந்திருந்தார்கள். எனவே இப்பாடசாலை சமயங்கடந்து கல்விப்பணியில் தன்னை வளர்த்துக் கொண்டது.

சரஸ்வதி வித்தியாலய ஆரம்பத்துடன் இப்பாடசாலைக்கும், சரஸ்வதி வித்தியாசாலைக்கும் மாணவர்களைச் சேர்ப்பதிலும் பாடவிதானம், பாடநூல்கள் தெரிவு, கற்பிக்கும் முறையில் போட்டி ஆரம்பமாகின - இப்போட்டியால் கிராமத்துப் பிள்ளைகள் பயனடைந்தார்கள் - இருபாடசாலைகளும் ஏட்டிக்குப் போட்டியாக மாணவர்களை சேர்க்கத் தொடங்கின. ஆசிரிய நியமனங்கள் மாணவர் எண்ணிக்கையில் கொடுக்கப் பட்டதால் இருபாடசாலைகளிலும் ஆசிரியர்கள் எண்ணிக்கையும் அதிகரித்தன. கல்விச் செயற்பாட்டில் அமெரிக்கன் மிஷன் காலத்துக்கு காலம் முன்னிலை வகித்தது. 1930 க்கு முன்னர் இக்கிராமத்து படித்தவர்கள் யாவரும் இப்பாடசாலை மூலமே வெளிவந்தவர்கள். இதன் பின்னரும் இப்பாடசாலையின் பங்கு குறையவில்லை. 1940, 1950 களில் இப் பாடசாலை பல பிரச்சினைகளை எதிர் நோக்க வேண்டி இருந்தது. வேலணை கிராமத்தின் துறையூரில் பாடசாலை ஆரம்பம், வேலணை கிழக்கு மகா வித்தியாலய ஆரம்பம், செட்டிபுலம் அரசினர் தமிழ் கலவன் பாடசாலை ஆரம்பம், சோழாவத்தை ஆத்திசூடி வித்தியாலய ஆரம்பம் காரணமாக வங்களாவடிக்கு வரும் மாணவர்கள் குறைவடைந்தனர். முன்னர் வேலணை கிராமத்து பாடசாலையாக இருந்த இக்கல்வி நிறுவனம் வங்களாவடியைச் சூழவுள்ள பிள்ளைகள் கல்விகற்கும் நிறுவனமாக மாறியது.

1960 இல் இலங்கை முழுவதும் அரசாங்கம் பாடசாலைகளை பொறுப்பேற்றதால் இப்பாடசாலை அரசினர் பாடசாலையாக மாறியது. அமெரிக்க மிஷனின் கட்டுப்பாடு இல்லாது போனது. மேலும் அமெரிக்க மிஷனின் உதவிகள் இல்லாதுபோயின.

கிறிஸ்தவ பிள்ளைகள் இல்லாத நிலையில் வங்களாவடியில் இருந்த இரு பாடசாலைகளையும் சீர் செய்து 1970 இல் சரஸ்வதி வித்தியாசாலையை ஆண்கள் பாடசாலையாகவும், இதனை பெண்கள் பாடசாலையாகவும் மாற்றினர். இப்பாடசாலை 1991 ஆம் ஆண்டு இடப்பெயர்வு வரையும் சிறப்புற நடைபெற்றது. 1991 - 1996 இடப்பெயர்வுக்குட்பட்ட காலத்தில் யாழ்ப்பாணத்தில் இயங்கியது. 1996 க்குப் பின்னர் மக்கள் மீளக் குடியமரத் தொடங்கிய பொழுது சரஸ்வதி பாடசாலை மீளவும் (ஒரே பாடசாலையாக) இயங்கத் தொடங்கி, தற்பொழுது இப்பாடசாலை மீள இயங்குவதற்கு புனருத்தாரண பணிகள் மேற்கொள்ள வேண்டியதாக இருக்கின்றது.

இப்பாடசாலையில் புகழ் பெற்ற பல அதிபர்கள், ஆசிரியர்கள் கடமையாற்றி இருக்கின்றனர். அவர்களுள் முன்னோடியாக திகழ்பவர் திரு. நா. இளையதம்பி ஆவார். இவரைத் தொடர்ந்து திரு. வி. செல்லத்துரை, திருமதி. க. பொன்னப்பா, திரு. ஈ. டி. இராஜரத்தினம், திரு. இ. நாகராஜா, திருமதி. நடராஜா போன்றோர் கடமையாற்றினர். ஒவ்வொருவரின் காலத்திலும் பாடசாலை வெவ்வேறு துறைகளில் வளர்த்தெடுக்கப்பட்டுள்ளது.

வேலணையில் முதற்பாடசாலையாக இருந்தும் 1991 இல் இடப்பெயர்வுக்குப் பின்னர் இயங்காமல் இருப்பது இக்கிராமத்து மக்களிடையே மிகுந்த கவலையை கொடுத்து வருகின்றது.

தற்பொழுது இடம்பெற்று வரும் புனர்வாழ்வு, புனருத்தாரண பணிகள் மூலம் இப்பாடசாலையை பழைய நிலைக்கு கொண்டுவர வேண்டும் என்பது கிராமத்தவர்களின் விருப்பம். மக்கள் துரிதமாக மீளக்குடியேறி வருவதாலும், வங்களாவடி புதிய நகராக விருத்தி பெற்று வருவதாலும் முன்னிலும் பார்க்க இப்பாடசாலையின் தேவை கூடுதலாக உணரப்படுகின்றது. மேலும் இதனது இடவமைவு கிராமத்து மக்களின் கல்வித் தேவையை பூர்த்தி செய்யக்கூடியது. இப்பாடசாலையை மீளவும் கட்டி வளர்ப்பதற்கு கல்வியதிகாரிகள், கிராம மக்கள், பழைய மாணவர்கள், சமூகப் பெரியோர் முன்வர வேண்டும்.



## பாடசாலைகள்

# வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலை
## (கந்தப்பு உபாத்தியாயர் பள்ளிக்கூடம்)

சைவப்புலவர் - மு. திருஞானசம்பந்தபிள்ளை - அதிபர்

யாழ்ப்பாணக் குடாநாட்டிலே பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் சைவத்தையும் தமிழையும் வீறுபெற்றெழச் செய்தார். சைவமும் தமிழும் தழைத்தோங்க வேண்டுமாயின் சைவத் தமிழ்ப் பிள்ளைகள் தமது சமய, மொழிச் சூழலில் கல்விகற்க வேண்டுமென எண்ணி வண்ணார் பண்ணையில் சைவப்பிரகாச வித்தியா சாலை ஒன்றை நிறுவினார். சைவ நன்மாணாக்கர்கள் சைவச்சூழலில் கற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அவரின் மாணவ பரம்பரை ஒன்று உருவாகியது. அன்றைய நாளில் குடாநாட்டின் பல பகுதிகளிலும் இருந்து மாணவர் அங்குவந்து கற்றனர். "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்றபடி மாணவர் பரம்பரையினர் தத்தம் ஊர்களிலும் சைவத்தையும் தமிழையும் மேம்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டனர்.

வேலணைத் தீவிலே அஞ்ஞான்று நாவலர்தம் நன்மாணாக்கராகப் பெறும் பேறு பெற்றவர் ஸ்ரீமான் வினாசித்தம்பி கந்தப்பிள்ளை அவர்கள். பிள்ளையவர்கள் ஓய்வில் புகழாறுமுகநாவலர் தமக்கன்பினுரிமை மாணாக்கனாகி இலக்கணமிலக்கிய புராணங்களோதியு ணர்ந்து சிவதீட்சை மூன்றும் பெற்ற சீலராக விளங்கியவர். நுண்மதியும் சைவசாத்திர ஞானமும் நிர்வாண தீட்சைப் பேறும் பெற்ற பிள்ளையவர்கள் வேலணைத் தீவிலும் சைவப்பிரகாச வித்தியாசாலை

## வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலை
## (கந்தப்பு உபாத்தியாயர் பள்ளிக்கூடம்)



ஒன்றை நிறுவ உளங்கொண்டார். தம் உள்ளத்தெழுந்த ஆர்வத்தைத் தம் அன்பர்களிடம் கூறி அவர்கள் ஆதரவைப் பெற்று 1879 ஆம் ஆண்டிலே பள்ளம்புலத்துச் சைவாபிமானி கல்வீட்டு நாகமுத்து ஐயம்பிள்ளை அவர்கள் வீட்டுத் திண்ணையிலே வகுப்பினை நன்னாளிலே சமயசார முறைப்படி ஆரம்பித்து வைத்தார்.

அதன் பின் இவ்வாண்டிலே மக்கள் உதவிகொண்டு "வீலிங்கன் கலடு" என்றழைக்கப்பெறும் வித்தியாசாலை வளவில் அஞ்ஞான்று ஊர்காவற்றுறை நீதிபதியாக விளங்கிய வைமன் கதிரவேற்பிள்ளை அவர்களால் வித்தியா சாலைக் கட்டிடத்திற்கு அத்திவாரமிடப் பட்டது. அவ்வித்தியாசாலைக் கட்டிடம் 1880 ஆம் ஆண்டு நிறைவெய்தியது. **"சைவப்பிரகாச வித்தியாசாலை"** தோன்றி ஒளிகான்றது. இப்பாடசாலைக்கு **"கந்தப்பு வாத்தியார் பாடசாலை"** என்றும் பெயர் வழங்கி வந்தது.

வித்தியாசாலையில் சைவமும் தமிழும் கற்க மாணவர் ஆர்வத்தோடு சேர்ந்தனர். உள்ளும் புறமும் சைவாசிரியர்களாகத் திகழ்ந்தவர்கள் கற்பித்தலை நடத்தினர். கந்தப்பிள்ளையவர்கள் பின்னும் அரிதின் முயன்று பல இடைஞ்சல்களுக்கு இடையே பள்ளிக்கூடத்தை அரசினர் நன்கொடைக்குரியதாகப் பதிவு செய்ய முயன்றனர். அவர்களுடைய முயற்சி 1883 ஆம் ஆண்டில் நிறைவெய்தியது.

கந்தப்பிள்ளையவர்களே பாடசாலைக்குரிய முகாமையாளராகவிருந்து பாடசாலையை அரிதின் முயன்று வளர்த்து வந்தார். 1884 ஆம் ஆண்டு பள்ளிக்கூடம் ஓலைக்கூரை, மரத்தூண், நாற்புறமும் அரைச்சுவர், சுவர் சாந்துக்கட்டு, மண் தளம் கொண்டமைந்தது. பின்னர் கட்டடம் சேதமுற 60' x 30' கொண்ட நீளக்கட்டிடம் சாந்துத் தூண்களைக் கொண்டு நிறுவப்பெற்றது.

பிள்ளையவர்கள் பள்ளிக்கூடத்திலே நாயன்மார் குருபூசைகள் நடத்தப்பட வேண்டும் என்று அதற்காக பாடசாலை முற்புறத்தில் மடம் ஒன்று அமைத்து நால்வர் குருபூசைகளைத் தவறாது நடாத்தி வந்தார். பல ஆண்டுகள் இவ்வாறு சைவமும், தமிழும் சைவப்பிரகாச வித்தியா சாலையில் தழைத்தோங்கப் பரிபாலித்து வந்த பெரியார் 1914 ஆம் ஆண்டு தை மாதப் பூர்வ பட்ச ஏகாதசியன்று குஞ்சிதபாத நிழற்கீழ் சென்றடைந்தார்.

**முகாமைத்துவம் :**

பிள்ளையவர்களின் பின் பள்ளிக்கூட முகாமை அவர்தம் மகன் அம்பலவாண பிள்ளையிடம் சேர்ந்தது. இடையே பாடசாலைப் பரிபாலனத்திற்காகச் சில காலங்களில் முகாமை திரு. சே. பொன்னையா, திரு. ச. திருஞானசம்பந்தப் பிள்ளை ஆகியோரிடம் போய் வந்தது. ஆயினும் 1940 ஆம் ஆண்டில் அம்பலவாண பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்தபோது முகாமைத்துவம் அவரால் அமைக்கப்பெற்ற வேலணை

சைவப்பிரகாச சங்கத்திற்கு மாறியது. சில ஆண்டுகளின் பின்னர் முகாமைத்துவம் சைவ வித்தியா விருத்திச் சங்கத்தின் கீழ் இருந்தது. பின்னர் கந்தப்பிள்ளை அவர்களின் சாசனத்திற்கு இணங்க நீதிமன்றக் கட்டளைப்படி அவர்தம் சந்ததியினருக்கு முகாமைத்துவம் மீள வரவே 01-11-1954 ஆம் ஆண்டு தொடக்கம் அரசாங்கம் பாடசாலைகளைச் சுவீகரித்த 03-11-1961 ஆம் ஆண்டுவரை திரு. மு. மயில்வாகனம் அவர்கள் முகாமையாளராக விளங்கினார்.

**கட்டட வளர்ச்சி :**

1884 இல் அமைக்கப்பெற்ற ஓலைக்கூரை சாந்துக்கட்டு கற்றூண் காலத்துக்குக் காலம் திருத்தம் செய்யப்பெற்று வந்தது. இடையில் 1945 ஆம் ஆண்டில் வேலணை மத்திய கல்லூரி எனும் ஆங்கிலக் கல்லூரிக்கு இடந்தருவான் வேண்டி சைவப்பிரகாச வித்தியாசாலை சில காலம் ஒரு வீட்டில் நடைபெற்றது. வேலணை மத்திய கல்லூரிக்குரிய தற்காலிகக் கொட்டகை போடப்பட்டவுடன் மீண்டும் சைவப்பிரகாச வித்தியாசாலை தன் பழைய கட்டடத்துள் நுழைந்து கொண்டது. 1946 ஆம் ஆண்டில் கந்தப்பிள்ளை அவர்களால் அமைக்கப்பெற்ற மடம் நீக்கப்பெற்று அதனிடத்தில் 40' x 20' கொண்ட கட்டிடம் அறையுடன் கூடியதாக அமைக்கப்பெற்றது. இக்கட்டிடத்திலும் தற்காலிகக் கொட்டகையிலும் வேலணை மத்திய கல்லூரி இயங்கியது. பின்னர் அதற்கெனக் கட்டிடம் அயலிலே நிறுவப்பெற்ற பின் கல்லூரி அங்கு செல்லவே தற்காலிகக் கொட்டகையும் அகற்றப்பட்டது. வேலணை மத்திய கல்லூரி அமைவதற்கு இடம் கொடுத்து அது வளரத் தான் ஒதுங்கியிருந்து அதனை உயர்வடையச் செய்த பெருமை சைவப்பிரகாசத்திற்கு உண்டு.

திரு. மு. மயில்வாகனம் அவர்கள் முகாமையாளராகவிருந்த காலத்தில் பழைய கட்டிடத்தை நீக்கி புதிய 70' x 20' கட்டடம் அமைக்கும் நடவடிக்கை எடுக்கப் பெற்று பெற்றார் ஆசிரியர்சங்க முயற்சியுடன் 1959 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது. அரசாங்க சுவீகரிப்பின் காரணமாக அவ்வேலை பின்னர் அரசாங்கத்தினால் பூர்த்தி செய்யப்பட்டது. 1974 ஆம் ஆண்டு பெற்றார் ஆசிரியர் சங்கம் பொதுமக்கள் உதவியோடு 40' x 20' கட்டடம் ஒன்றமைத்தது. 1978 இல் 60' x 20' கட்டடம் விஞ்ஞான அறையாகவும் 1979 இல் 40' x 20' கட்டடம் ஒன்றும் அரசினர் உதவியுடன் நிறைவேற்றப்பட்டுள்ளது.

**அதிபர்கள் ஆசிரியர்கள் :**

சைவப்பிரகாச வித்தியாசாலை ஆரம்பித்த காலத்தே இவ்வித்தியா சாலையில் கற்பித்து வந்த பெரியார்கள் பலர். எனினும் அவர்களுள் ஞாபகத்தில் இருத்தக் கூடியவர்கள் ஸ்ரீமான் வி. கந்தப்பிள்ளை, திரு. க. நமசிவாயப்பிள்ளை, திரு. செ. கனகசபாபதி, திரு. ம. தம்பு, திரு. ச. திருஞானசம்பந்தப்பிள்ளை, திரு. ச.

சொக்கலிங்கம்பிள்ளை, திரு. க. தில்லையம்பலம், திரு. செ. பொன்னப்பா ஆகியோராவர்.

ஆரம்ப காலத்தில் அதிபராக இருந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் பொலிகண்டி திரு. சி. கந்தவனம், புங்குடுதீவு திரு. நீ. சேதுபதி, நயினாதீவு திரு. எஸ். என். கந்தையா, திரு. எஸ். சின்னத்துரை என்பவர்களாவர்.

**சதா அதிபர் திரு. அ. வைரமுத்து :**

செல்லையா உபாத்தியாயர் என்று எம்மவர்களால் அன்புடன் அழைக்கப் பெற்ற மறைந்த பேரன்பர் திரு, அ. வைரமுத்து அவர்கள் 1931ஆம் ஆண்டு இப் பாடசாலைக்கு அதிபராக வந்தவர். அவர் 1970 ஆம் ஆண்டு வரை சதா அதிபராகவே இருந்து வித்தியாசாலைக்கு அளப்பரிய சேவையை ஆற்றினார். சுமார் நாற்பது ஆண்டுகள் கடமையாற்றிய அவரிடம் கல்வி கற்றவர்கள் நம்மூரில் பலர் உளர். நாற்பது ஆண்டு அவர் தம் பணியை நாம் நாலு வரிகளில் கூறிவிடமுடியாது. நம்மவர்கள் அனைவரும் அவரின் பணியினை எடுத்தியம்புவதை காதாரக் கேட்கலாம். திரு. அ. வைரமுத்து அவர்கள் ஓய்வு பெற 1970 ஆம் ஆண்டு தொடக்கம் 1971 ஆம் ஆண்டு வரை திரு. க. காங்கேசு அவர்கள் அதிபராகக் கடமையாற்றினார். அவர் இங்கு சில காலமே அமர்ந்திருந்தார்.

**அதிபர் திரு. ச. சிதம்பரப்பிள்ளை :**

1971 ஆம் ஆண்டு அதிபராக வந்த அதிபர் திரு. ச. சிதம்பரப்பிள்ளை அவர்கள் நாவலர், கந்தப்பர் ஆகியோரின் எண்ணத்தின்படி சைவத்தையும், தமிழையும் தழைத்தோங்கச் செய்ய மிகப்பொருத்தமானவராக விளங்கினார். நாவலர் போன்று "நைட்டிகப் பிரமச்சாரியாக விளங்கிய இவர்" தம் முழுநேரத்தையும் பாடசாலைக்கும் கற்கும் மாணவர்களுக்கும் அர்ப்பணித்து இவ்வித்தியாசாலைக்கு ஒரு தனிப்பெயரை ஏற்படுத்தினார். இவருடைய காலத்தில் கல்வித்துறையில் மாணவர் களிடையே ஊக்கம் மிளிர்ந்தது. உடலாலும் உள்ளத்தாலும் இளமையுடன் விளங்கினும் ஆண்டுகளினால் ஓய்வுபெறும் வயதைப் பூர்த்தி செய்ததால் இவர் 1977 இல் ஓய்வு பெற்றார்.

திரு. ச. சிதம்பரப்பிள்ளையவர்களின் ஓய்வையடுத்து திரு. செ. வரதலிங்கம் சில மாதங்கள் அதிபராக விளங்கினார். ஆயின் திரு. ச. சிதம்பரப்பிள்ளை மீண்டும் சேவை நீடிப்புப் பெற்று வந்தார். பின்னர் 1978 பெப்ரவரி 28 இல் ஓய்வு பெற்றுச் செல்ல அதிபரின் கடமைகளை திரு. கா. காசிப்பிள்ளை ஆற்றினார். பெற்றார் ஆசிரியர் சங்கம் இவ்வித்தியாசாலைக்கு நிரந்தர அதிபர் நியமிக்கப்பட வேண்டும் என்று அரிதின் முயன்றதன் பயனாக 1978 ஆம் ஆண்டு வைகாசி 3 ஆம் திகதி தொடக்கம் திரு. மு. திருஞானசம்பந்தப் பிள்ளை அதிபராக நியமிக்கப்பட்டார். இவர் 18 - 07 - 1983 வரை கடமையாற்றினார்.

இவரின் பின் திரு. வை. இராமகிருஷ்ண ஐயர் அவர்கள் 15-09-85 வரை கடமையாற்றினார். இவரின் திடீர்

மரணத்தை அடுத்து பின்னர் திரு. செ. வரதலிங்கம் அவர்கள் அதிபராக நியமிக்கப்பட்டு 22-09-1989 வரை கடமையாற்றினார். அவருடைய அகால மரணத்தைத் தொடர்ந்து திரு. சு. கலாதரன் அவர்கள் அதிபராக கடமையேற்று 28 -01-91 வரை கடமையாற்றினார். அவருடைய இடமாற்றத்தைத் தொடர்ந்து திரு. பொ. சபாரத்தினம் அவர்கள் இரண்டு மாதம் கடமையாற்றினார். மீளவும் திரு. சு. கலாதரன் 1991 இல் அதிபராகக் கடமையாற்றினார். அவரின் பின் 25-11-91 இல் திரு. பொ. அருணகிரிநாதன் அதிபராக கடமையேற்றார். திரு. பொ. அருணகிரிநாதன் வேலணை சேர் வைத்திலிங்கம் மத்திய மகாவித்தியால யத்திற்கு அதிபராகக் கடமையேற்றதைத் தொடர்ந்து தற்போதைய அதிபரான திருமதி. வி. நாவேந்தன் அதிபராகப் பொறுப்பேற்று கடமை ஆற்றி வருகின்றார்.

இவ்வித்தியாசாலை ஆரம்பத்தில் ஐந்தாம் வகுப்பு வரை இருந்து பின்னர் படிப்படியாக எஸ்.எஸ்.சி. வரை வகுப்புக்கள் நடைபெற்றது. 1945 வரை இந்நிலை நீடித்தது. பின்னர் வேலணை மத்திய கல்லூரி அமைந்தமையால் மேல் வகுப்புக்கள் நீக்கப்பட்டன. 5 ஆம் வகுப்பு சித்திபெற்ற பிள்ளைகள் அக்கல்லூரிக்கே சென்றனர். காலஞ் செல்ல கல்வித் திணைக்கள கொள்கையின் படி 1956 ஆம் ஆண்டு தொடக்கம் மீண்டும் 6 ஆம் வகுப்பு முதல் வருடா வருடம் மேல் வகுப்புக்கள் அமைக்கப்பட்டன.

1961 ஆம் ஆண்டு அரசினால் சுவீகரிக்கப்பட்ட போது இப்பாடசாலை 10 ஆசிரியர்களையும் 287 மாணவர்களையும் கொண்டிருந்தது. அந்நிலை படிப்படியாக வளர்ச்சியடைந்து 1980 ஆம் ஆண்டு 24 ஆசிரியர்களையும் 700 ற்கு மேற்பட்ட மாணவர்களையும் கொண்டதாக வளர்ந்தது. பாலர் வகுப்புத் தொடக்கம் க.பொ.த.சா. தரம் வரை அமைந்திருந்தது. இவ்வித்தியாசாலையில் ஆரம்ப வகுப்பில் பிள்ளைகளைச் சேர்ப்பதற்கு பெற்றோர் பெரிதும் விரும்புவர்.

இவ்வித்தியாசாலையின் வரலாற்றிலே முதன் முதலிலே 1979 ஆம் ஆண்டு அதிபர் தலைமையில் மாணவர்களும், ஆசிரியர்களும் கல்விச் சுற்றுலா ஒன்று மேற்கொண்டு - கொழும்பு, கண்டி, திருகோணமலை ஆகிய இடங்களுக்கு சென்று பார்வையிட்டு பயன் பெற்றனர். அவ் ஆண்டிலேயே முதன் முதலில் துணிவினைச்சங்கம் அமைக்கப்பெற்று ஆசிரியரும், மாணவர்களும் பல்வேறு இடங்களுக்குச் சென்று உரிய பயனைப் பெற்றனர். 1980 ஆம் ஆண்டு மாணவர் பாராளுமன்றம் அமைக்கப்பெற்று மாணவர்கள் பாடசாலை கருமங்களை தமது பொறுப்பில் நிறைவேற்றினர். 1980 ஆம் ஆண்டு நூற்றாண்டு விழா மலர் ஒன்றினையும் வெளியிட்டதுடன் வெகு விமரிசையாக விழாவும் கொண்டாடப் பட்டது. அவ்வாண்டு மின்னிணைப்பு வசதியும் செய்யப்பட்டது.

பெற்றார் ஆசிரியர் சங்கமும்,

பாடசாலை அபிவிருத்திச் சங்கமும் பாடசாலை வளர்ச்சிக்கு பல்வேறு வகையில் உதவின. நன்னீர் தேக்கி வைத்து மாணவர்கள் அருந்துவதற்கு தண்ணீர்த் தாங்கி ஒன்று 1978 இல் கட்டப்பட்டது.

இப்பாடசாலையில் 85, 89 காலப் பகுதியில் கல்வியையும், சமயத்தையம் ஒன்றாக இணைத்து மாணவர்களது ஆக்கங்களை வெளிக்கொணரும் சேவையில் ஈடுபட்டவர் திரு. வரதலிங்கம் அவர்கள். இவரது காலத்தில் ஆசிரியரது எண்ணிக்கையும், மாணவர் எண்ணிக்கையும் அதிகரித்துக் காணப்பட்டது. 1989, 1991 காலப்பகுதியிலே அரசியல் ரீதியாக ஏற்பட்ட நாட்டு நிலைமை காரணமாக தீவககல்வியிலே பெரும்பாதிப்பு ஏற்பட்டது. 1990 - 08 - 24 ஆம் திகதி தீவகமக்கள் அனைவரும் தம் உடைமைகளுடன் தீவகத்தை விட்டு வெளியேறிய வேளையில் சைவப்பிரகாச வித்தியாலயமும் (ஆசிரியர், மாணவர்கள்) இடம்பெயர்ந்தது. இக்காலப்பகுதியிலே திரு. சு. கலாதரன் அதிபராக கடமையாற்றினார். பாடசாலையில் சில ஆவணங்களை எடுத்துக்கொண்டு வித்தியாலயத்தை இடப்பெயற்சியின் போது மிகக் கஷ்ட நிலையில் வழி நடத்தினார். மீண்டும் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக 08-10-91 இல் இடம்பெயர்ந்து சென்றனர். அத்துடன் ஆசிரியர்களும், மாணவர்களும் பல திக்குகளுக்கு இடம்பெயர்ந்து சென்றுவிட்டனர். இடம் பெயர்ந்த காலத்தில் அதாவது 1991 - 2002 வரை மாணவர்களைப் பிரிந்த நிலையிலும் ஆசிரியர்களைப் பிரிந்த நிலையிலும் வித்தியாலயத்தின் தனித்துவத்தைப் பேணும் பொருட்டு இளமையும் செயற்றிறனும், நிர்வாக ஆற்றலும் கொண்ட திரு. பொ. அருணகிரிநாதன் அதிபராக பாடசாலைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

1991-10-18 இல் வேலணையில் இடம் பெற்ற மக்கள் புலம்பெயர்வோடு பாடசாலைகளும் புலம்பெயர்ந்தன. வேலணைக் கொத்தணிப் பாடசாலைகள் யாழ்ப்பாணம் வைத்தீஸ்வராக் கல்லூரியில் மாலைநேரப் பாடசாலைகளாக இயங்கின. சைவப்பிரகாசமும் இதில் இணைந்து இயங்கியது. தனித்துவமாகப் பாடசாலையை இயக்க வேண்டும் என்ற நோக்கில் இக்கொத்தணிப் பாடசாலைகளில் சைவப்பிரகாசம் 1992 ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் பட்டப்படிப்புக்கள் கல்லூரியில் காலைநேரப் பாடசாலையாக இயங்கத் தொடங்கியது. யாழ்ப்பாண நகரத்தின் மத்தியில் 430 மாணவர்களுடன் தன்னை தக்க வைத்துக்கொண்டு தனது பணியை முன்னெடுத்தது.

இடம்பெயர்நிலையிலும் முன்னாள் அதிபர்களான திரு. சு. கலாதரன், திரு. பொ. சபாரத்தினம், திருமதி. தியாகராசா (ஆசிரியர்) ஆகியோருக்கான பிரியாவிடை நிகழ்ச்சியை நல்லை திருஞானசம்பந்தர் ஆதீனத்தில் சைவப்பிரகாச சமூகம் செய்து பெருமை பெற்றது.

யாழ் புனித மரியாள் வித்தியாலய மைதானத்தில் இல்ல விளையாட்டுப் போட்டியை பல தடவை நடாத்தியது.

கல்விக்கண்காட்சி, ஆங்கிலதினம், உடற்பயிற்சிப் போட்டிகள், ஆசிரியர்தினம் ஆகிய அனைத்து நிகழ்ச்சிகளையும் சைவப்பிரகாச சமூகம் தொடர்ந்து செய்து வந்தது. கல்விப் பெறுபேறுகளிலும் தரம் 5 புலமைப்பரிசில் பரீட்சை, க. பொ. த. (சா/த) பரீட்சை ஆகியவற்றில் நல்ல பெறுபேறுகள் பெற்று வேலணைக் கோட்டத்தில் ஒரு முதன்மைப் பாடசாலையாக திகழ்ந்தது மாத்திரமன்றி யாழ் மாவட்டத்தில் பலரது பாராட்டையும் வாழ்த்துக்களையும் பெற்ற ஒரு பாடசாலையாக திகழ்ந்தது.

காலப்போக்கில் பட்டப்படிப்புகள் கல்லூரிக்கு அருகில் இருந்த வைத்திலிங்கம் கொம்பனிக்கு சொந்தமான கட்டிடமொன்றில் தற்காலிக கொட்டில்கள் அமைத்து வித்தியாலயம் தனது பெயருடன் மேலும் உறுதியுடன் வளர்ச்சி பெற்றது. 1992 - 1995 காலப்பகுதியில் பாடசாலை பல நிலைகளில் தனது வெற்றியைப் பதித்து வந்தது. பாடசாலையில் பிரதி அதிபராக கடமையாற்றிய செல்வி. பாலசரஸ்வதி அம்பலவாணர் அவர்களின் பணி போற்றுதற்குரியது. இக்காலத்தில் ஆசிரியர்கள் திரு. க. நவநேசன், திரு. க. கதிரேசபிள்ளை, திரு. ஞா. இரட்ணசிங்கம், திரு. S. D. இம்மானுவேல், திருமதி. இ. ஞானரட்ணம், திருமதி. ம. சுகுமார், திருமதி. ஜெ. சாந்தன் ஆகியோர் பெரிதும் முயன்று தமது ஆற்றல்களை பாடசாலைக்கு வழங்கினார்கள்.

1995 பிற்பகுதியில் ஏற்பட்ட அமைதியற்ற சூழ்நிலையில் வலிகாம மக்கள் வரலாறு காணாத மாபெரும் இடப்பெயர்வை சந்தித்தனர். யாழ்ப் பாணத்தில் இருந்து மக்கள் எல்லோரும் தென்மராட்சி நோக்கிய இடப்பெயர்வை மேற்கொண்டனர். பாடசாலையும அதிபர், ஆசிரியர்களும் இடம்பெயர்ந்தனர். அங்கும் யாழ் மீசாலை வீரசிங்கம் மகா வித்தியாலயத்தில் மாலை நேரப்பாடசாலை யாக இயங்கியது.

யாழ்நகர் நோக்கி மக்கள் மீள்வருகையை தொடர்ந்து 1996 இல் தீவகம் நோக்கிய மீள்திரும்புகையும் ஏற்பட்டது. ஆட்கள் நடமாட்டமற்ற வேலணைப்பகுதியில் மீளவும் கல்வி என்னும் நிகழ்வை ஏற்றும் முயற்சிகள் ஆரம்பிக்கப்படலாயின. அப்போதும் "சைவப்பிரகாசம்" தனது காத்திரமான பங்கை தொடங்கியது. மத்தியகல்லூரி, சைவப்பிரகாசம் என்பவற்றின் பாடசாலைக் கட்டிடங்கள் இராணுவ முகாம்களாக இருந்தன. இதனால் வேலணை கொத்தணிப் பாடசாலைகள் சில சேர்ந்து வேலணை கிழக்கு மகா வித்தியாலயத்தில் ஒன்றாக இயங்கின. 51 மாணவர்களுடன் பாடசாலைகள் மீள் உருவாக்கம் பெற்றன.

படிப்படியாக சைவப்பிரகாசம் சிலகாலம் சரஸ்வதி வித்தியாசாலை கட்டிடத்தில் தனித்துவமாக இயங்கியது. புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் பின்னர் பாடசாலைகளில் இருந்து இராணுவத்தினர் விலகினர். 2003 ஜனவரி மாதத்தில்

சைவப்பிரகாசம் தனது சொந்தக்கட்டிடத்தில் இயங்கத்தொடங்கியது.

மாணவர் எண்ணிக்கை குறைவாக இருந்த போதும் படிப்படியாக கல்விச் செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட்டன. G.T.Z. நிறுவனம், ஏனைய நிறுவனங்களின் உதவியினால் பௌதீகவள விருத்திகள் ஏற்பட்டு வருகின்றன. சேதமடைந்த 60' x 20' நீளமான கட்டிடம் புனரமைப்புச் செய்யப்பட்டுள்ளது.

பாடசாலையின் பிரதான வீதி மக்கள் அனைவரது போக்குவரத்திற்கும் தடை செய்யப்பட்டிருப்பதாலும் பஸ் போக்குவரத்து நடைபெறாததாலும் பாடசாலை பெரும் தடைகளை எதிர் நோக்குகின்றது. பாடசாலைச் சூழலிலும் மக்கள் இன்னமும் குடியேறாத நிலையில் சூனியப்பிரதேசம் ஒன்றில் பாடசாலை இயங்கும் ஒரு நிலை காணப்படுகிறது. யுனிசெவ் நிறுவனத்தின் உதவியுடன் குடிநீர் விநியோக வசதிகள் தற்போது மேற்கொள்ளப்பட்டுள்ளன.

சைவப்பிரகாசத்தின் பாரம்பரிய வரலாற்றுப் பெருமைகள் தொடர்ந்தும் பேணப்படவேண்டும். பாடசாலையின் மதில்கள் எல்லாம் அழிவடைந்து கிடக்கின்றன. தற்போதைய நிலையை மாற்றி பௌதிக வள வசதிகள் மேலும் மேம்படுத்தப்பட வேண்டும்.

வித்தியாலயம் பண்டைய பெருமைக்கு உயர்வதற்கு மக்கள் மீள் குடியேறுவது முக்கியமானது. இயல்பு வாழ்க்கை யாழ்குடா நாட்டில் ஏற்படும்போது தீவகத்திலும் இந்நிலைமை களில் மாற்றங்கள் ஏற்படும். குறிப்பாக இவ்வித்தியாலயத்தின் அயலில் உள்ள கடற்படை முகாம் வேறிடத்திற்கு மாற்றப்பட்டு பிரதான போக்குவரத்துப் பாதை மக்கள் போக்குவரத்திற்காக அனுமதிக்கப்பட வேண்டும். அப்போது தான் பாடசாலைகளும் சுமுகமான சூழ்நிலையில் இயங்க முடியும். அக்காலம் எப்போது வருமென்று மக்கள் எதிர்பார்க்கின்றனர். கூடிய விரைவில் அக்காலம் வரவேண்டும் என சைவப்பிரகாசம் வித்தியாசாலை சமூகம் எதிர்பார்க்கின்றது. ஒளிநிறை அப்பொற்காலம் காண நாமும் காத்திருப்போமாக.



## பாடசாலைகள்

# வேலணை சரஸ்வதி வித்தியாசாலை

திருமதி. நா. பொன்னுத்துரை - ஆசிரியை

ஐரோப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே வேலணைக் கிராமம் கல்வி, பண்பாடு, கலாசாரம் ஆகிய துறைகளில் வளர்ச்சி பெற்றிருந்ததாக பல சான்றுகள் மூலம் அறியப்படுகின்றது. அக்காலத்தில் ஆலயங்களில் ஆன்மீகக் கல்வியும், எண், மொழி, இலக்கியம் ஆகிய சமுதாய மேம்பாட்டிற்கான கல்வி திண்ணைப் பள்ளிகளிலும், குருகுல முறையிலும் வழங்கப்பட்டு வந்துள்ளன. எனினும் முறைசார்ந்த பாடசாலைகள் இருந்திருக்க வில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஊர்காவற்றுறையில் நிறுவப்பட்ட புனித அந்தோனியார் கல்லூரியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் யாழ்ப்பாணத்தில் நிறுவப்பட்ட மத்திய கல்லூரியிலும், வட்டுக் கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும் வசதிபடைத்த ஒருசில குடும்பத்தவர்கள் மட்டும் ஆங்கிலக் கல்வியைப் பெற்று எமது நாட்டிலும், மலாயா நாட்டிலும் அரச தொழில் பெற்று தமது வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொண்டனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வேலணை சாட்டியில் றோமன் கத்தோலிக்க பாடசாலையும், வேலணை வங்களாவடியில் அமெரிக்க மிஷன் பாடசாலையும் நிறுவப்பட்டு முறைசார்ந்த கல்வி போதிக்கப்பட்டது. இதனால் வேலணைக் கிராமச் சிறார்களுக்கு முறை சார்ந்த பாடசாலைக் கல்வியைப் பெறும் வாய்ப்புக் கிட்டிய போதும் இப்

# வேலணை சரஸ்வதி வித்தியாசாலை



வேலணை - 1

பாடசாலைகள் தமது சமயக் கல்விக்கே முக்கியத்துவம் கொடுத்ததுடன் தமது மதத்தைத் தழுவுவோருக்கு பலசலுகைகள் வழங்கி மதமாற்றத்தை ஊக்குவித்தனர். ஆனால் மிக இறுக்கமான வைதீக பாரம்பரியத்தைக் கொண்ட வேலணை மக்கள் மாற்று மதத்தாரின் வஞ்சகப் பொறிக்குள் சிக்கிவிடவில்லை.

எனினும் சைவசமயச் சூழலில் முறையான கல்வியைப் பெறவேண்டுமாயின் ஆறுமுக நாவலரால் நிறுவப்பட்ட வண்ணார்பண்ணை சைவப்பிரகாச வித்தியாசாலைக்கே செல்லவேண்டி யிருந்தது. இந் நிலையை அவதானித்த வேலணை கிழக்கைச் சேர்ந்த திரு. வைத்தியலிங்கம் விஜயரெத்தினம் என்னும் பெரியார், ஊர்மக்களால் 'பெரியவர்' என மரியாதையுடன் அழைக்கப்பட்ட எமது கிராமத்தின் தலைமகன், வேலணைச் சிறார்கள் சைவசமய கலாசார பண்பாட்டுச் சூழலில் கல்விகற்க அவ்வூரில் ஒரு சைவப்பாடசாலை நிறுவ வேண்டும் என உறுதி பூண்டார். அவரது விருப்பத்தை செயற்படுத்த அந்நாளில் காலி நகரில் பிரபல வர்த்தகராக விளங்கிய திரு. சோமசுந்தரம், திரு. மூத்ததம்பி சதாசிவம், சப் போஸ்மாஸ்டர் வைத்திலிங்கம், திரு. சபாபதி நாகலிங்கம் (கிளாக்கர் நாகலிங்கம்) ஆகியோர்களும் முன்வரவே 1925 ஆம் ஆண்டுத் தைப்பூச நன்னாளில் வங்களா வடியில் மூன்று பிரதான வீதிகளின் சந்திப்புக்கு அருகாமையில் பெரியவர் விஜயரத்தினம் அவர்களின் சொந்தக் காணியில் சைவப்பாடசாலைக்கான அடிக்கல் அந்நாள் யாழ் இந்துக்கல்லூரி அதிபர். திரு. W. A. ரோப் (Mr. W. A. Troup) அவர்களால் நாட்டப்பட்டது. அவ்விழாவில் பிரதம விருந்தினரான திரு. W. A. ரோப் அவர்களை சம்பிரதாயபூர்வமாக வரவேற்று திரு. விஜயரத்தினம் அவர்களின் சகோதரியின் புதல்வரான திரு. இராசையா ஆங்கிலத்தில் வரவேற்புரை நிகழ்த்தினார். திரு. இராசையா அவர்களின் பேச்சாற்றலால் கவரப்பட்ட திரு. ரோப் அவர்கள் அவரது திறமையை வெகுவாகப் பாராட்டியதோடு வேலணை மக்களின் திறமைக்கு இராசையா ஒரு சான்று எனவும், இங்கு உருவாகப் போகும் பாடசாலை பல நூறு இராசையாக்களை உருவாக்கும் எனவும் வாழ்த்தினார். பாடசாலையின் உருவாக்கத் திற்கு திரு. விஜயரெத்தினம் அவர்கள் மலாயா நாட்டில் தொழில் புரிந்த அவரது நண்பர்கள், உறவினர்கள், ஊர்மக்களிடமும் நிதி உதவி பெற்றுக்கொண்டதோடு, ஊர்மக்களில் சிலரும் பாடசாலைக் கட்டுமானப் பணிகளுக்குத் தம்மாலான பங்களிப்பை நல்கினர். அவர்களில் அந்நாள் வேலணை தபால் அதிபர் திரு. வைத்திலிங்கம், திரு. மூத்ததம்பிசதாசிவம் (குழந்தைவேலு) சபாபதி நாகலிங்கம் (கிளாக்கர் நாகலிங்கம்) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். திரு. நாகலிங்கம் அவர்கள் கட்டுமானப் பணிகளை மேற்பார்வை செய்வதிலும், தொழிலாளர் களை ஊக்குவிப்பதிலும் திரு. சதாசிவம் கட்டுமானத்திற்குத் தேவையான கல்,

மணல், மரங்கள் ஆகியவற்றை இலவசமாக பெற்றுக்கொடுத்தது மட்டுமன்றி தாமும் இலவசமாக பனைமரங்கள் வழங்கியும் தேவையான கட்டுமான பொருட்களை பெற்றுக் கொடுத்தும் கட்டிடம் முழுமை பெற பங்களிப்பு நல்கினார். பாடசாலைக் கூரைக்குத் தேவையான ஓடுகள் இந்தியாவில் இருந்து திரு. சோமசுந்தரம் அவர்களின் மரக்கலத்தில் கொண்டு வரப்பட்டது.

ஸ்தாபகரினதும் அவருடன் இணைந்து செயலாற்றிய நான்கு பெரு மக்களினதும் தளரா முயற்சியினால் 1926 ஆம் ஆண்டின் இறுதிப் பகுதியில் "ப" வடிவிலான பாடசாலைக் கட்டடம் முழுமையாக நிறைவு பெற்றது மட்டுமன்றி பாடசாலைக்குத் தேவையான அனைத்துத் தளபாடங்களும் செய்யப்பட்டு பூரண வளம்மிக்க பாடசாலையாக உருவாக்கப் பட்டது. பாடசாலைக் கட்டட அமைப்பிலும் தளபாடங்கள் உருவாக்கத் திலும் வேலணைத் தச்சுத் தொழிலாளர்கள் திடகாத்திரமான பங்களிப்பு வழங்கி உதவினர்.

அக் காலத்தில் அத்தகையதொரு வளம்மிக்க பாடசாலை வேலணைக் கிராமத்திலோ அன்றி அயற் கிராமங்களிலோ இருந்திருக்கவில்லை. வேலணை மக்களின் அறிவுக்கண்ணைத் திறக்க வைத்த இவ் அறிவாலயம் 1927 ஆம் ஆண்டுத் தைப்பூசத் திருநாளில் வேலணை சரஸ்வதி வித்தியாலயம் என நாமஞ்சூட்டப்பட்டு சம்பிரதாய பூர்வமாக ஆரம்பித்து வைக்கப்பட்டது. ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் இருந்தே பாடசாலையில் ஆரம்ப வகுப்புத் தொடக்கம் prelim வகுப்புவரை கல்வி போதிக்கப்பட்டு வந்தது. prelim வகுப்பு இரத்துச் செய்யப்பட ஆரம்ப வகுப்பு தொடக்கம் S.S.C வகுப்புவரை வகுப்புகள் நடத்தப்பட்டன. ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பதுகளின் நடுப்பகுதியில் வேலணை மத்திய கல்லூரி அதிக எண்ணிக்கையான மாணவர்களை உள்வாங்கக்கூடிய வளம் பெற்றபோது எட்டாம் வகுப்பு வரை வகுப்புகள் குறைக்கப்பட்டு 1972ஆம் ஆண்டுக் கல்வி மறுசீரமைப்பு வரை கனிஸ்ட மகாவித்தியாலய தரத்தில் இயங்கி வந்தது. 1975ஆம் ஆண்டு தொடக்கம் ஆரம்ப வகுப்பு முதல் G.C.E. O/L வகுப்புவரையுள்ள மகாவித்தியாலயமாக இயங்கி வருகின்றது.

ஆரம்பகாலத்தில் திறமையும் சேவை மனப்பான்மையும் கொண்ட எமது ஊர் ஆசிரியர்கள் இப்பாடசாலையில் கற்பித்தமையால் எமது கிராமத்து மாணவர்கள் மட்டுமன்றி மண்கும்பான், அல்லைப்பிட்டி, சரவணை, நாரந்தனை, கரம் பொன், சுருவில் ஆகிய கிராமங்களில் இருந்தும் மாணவர்கள் இப்பாடசாலையை நாடி வந்தனர். அக்காலத்தில் போக்குவரத்து வசதிகள் மிகக்குறைவாக இருந்தமையால், பாடசாலைக்கு அண்மையில் இருந்த செல்லப்பா விதானையார் வீட்டிலும், பாடசாலையிலும் தூர இட மாணவர்கள் தங்கி இருந்து கற்பதற்கு விடுதி வசதியும்

பாடசாலை முகாமையாளரால் செய்து கொடுக்கப்பட்டது.

பாடசாலை ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து 1932 ஆம் ஆண்டு வரை ஸ்தாபகர் திரு. வை. விஜயரத்தினம் அவர்களே முகாமையாளராக கடமையாற்றினார். 1932 இல் பாடசாலையின் முகாமைத்துவம் சைவ வித்தியா விருத்திச் சங்கத்திடம் கையளிக்கப்பட்டது. 1960 ஆம் ஆண்டு பாடசாலை அரசாங்கத்தினால் சுவீகரிக்கப்பட்டு இன்றுவரை அரசாங்க பாடசாலையாக இயங்குகின்றது. பாடசாலையின் ஆரம்பகாலந் தொட்டே திறமையான ஆசிரியர்கள் கற்பித்து வந்தமையால் பாடசாலையின் கல்வித்தரம் மிக உயர்ந்த நிலையில் பேணப்பட்டு வந்துள்ளது.

ஆளுமையும் அர்ப்பணிப்பும் மிக்க அதிபர்களான திரு. நாகலிங்கம், திரு. காசிப்பிள்ளை, பண்டிதர் இ. மருதையினார், திரு. சபாபதி, திரு. அ. செல்லையா ஆகியோர் பாடசாலையின் செயற்பாடுகளை சிறந்த முறையில் நெறிப்படுத்தி பாடசாலையை சீரான வளர்ச்சிப்பாதையில் இட்டுச் சென்றனர். திரு. அ. செல்லையா அவர்கள் தொடர்ச்சியாக 35 வருடங்களுக்கு மேல் அதிபராக சேவையாற்றி மாணவர்கள் பெற்றோர்களின் நன்மதிப்பைப் பெற்று அந்நன்மதிப்பின் வெளிப்பாடாக எல்லோரும் அவரைப் **"பெரிய வாத்தியார்"** என்று அழைத்தனர். திரு. அ. செல்லையா அவர்களைத் தொடர்ந்து பண்டிதர் அ. பொன்னுத்துரை, திரு. சு. சீவரெத்தினம், திரு. சுப்பிரமணியம், திரு. நா. கனகசபாபதி, திரு. பொ. நடராசா, திரு. ஆ. அருமைநாயகம் ஆகியோர் அதிபர்களாக கடமையாற்றியுள்ளனர். தற்போது திரு. பாஸ்கரன் அதிபராக கடமையாற்றுகின்றார்.

ஆரம்பகாலத்தில் பாடசாலையின் வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் அரும்பணியாற்றிய ஆசிரியப் பெருமக்களில் பின்வருவோர் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள். பண்டிதர். அ. பொன்னுத்துரை, திரு. ஐ. பொன்னையா, வித்துவான் க. வேந்தனார், திரு. பொ. ஜெகநாதன், திரு. நா. கந்தஞானி, திரு. ஐ. நாகநாதன், பண்டிதர். க. கணபதிப்பிள்ளை, திரு. சு. சீவரெத்தினம், திருமதி. நாகரெத்தினம் பொன்னுத்துரை, திரு. சி. இராசரெத்தினம், திருமதி. ருக்மணி இராசரத்தினம் அவர்களைத் தொடர்ந்து திரு. சோ. கந்தையா, திரு. பொ. தியாகராசா போன்றோர் குறிப்பிடத்தக்க சேவையாற்றியுள்ளனர். பிற்காலத்திலும் பல நல்லாசிரியர்கள் இப்பாடசாலையில் கடமையாற்றியுள்ளனர். இவர்களில் வெளியூர் ஆசிரியர்களும் அடங்குவர்.

திருமதி. நாகரெத்தினம் பொன்னுத்துரை அவர்கள் நீண்ட காலம் இப்பாடசாலையில் ஆரம்ப வகுப்பாசிரியராக மிகச் சிறந்த சேவையாற்றியுள்ளார். **"நாகரத்தினக்கா"** என மாணவர்களாலும், பெற்றோர்களாலும் அன்புகலந்த மரியாதையுடன் அழைக்கப்பட்ட

அவ் ஆசிரியை வேலணைக் கிராமத்துப் பிள்ளைகளில் பெரும் பாலானோரின் கல்வியை ஆரம்பித்து வைத்த அறிவுக் தெய்வம் என்றால் மிகையாகாது.

பாடசாலையில் வகுப்பறைக் கல்வி மட்டுமன்றி குருபூசைகள், சமய விழாக்கள், கலைவிழாக்கள், விளையாட்டுப் போட்டிகள் என்பன நடத்தப்பட்டு மாணவர்களின் சமச்சீரான ஆளுமை வளர்ச்சிக்கு வழி செய்துகொடுக்கப்படுகின்றது.

பாடசாலை மட்டத்திலன்றி கோட்ட வலய, மாவட்ட மட்டப் போட்டிகளிலும் மாணவர்கள் பங்குபற்றி தமது திறமைகளை வெளிப்படுத்தியுள்ளனர். ஐந்தாம் தர புலமைப் பரிசில் பரீட்சை, க.பொ.த. சாதாரணதரப் பரீட்சை ஆகியவற்றில் இப்பாடசாலை சிறந்த பெறுபேறுகளைப் பெற்றுள்ளது. இப்பாடசாலையில் ஆரம்ப, இடைநிலைக் கல்வி கற்ற மாணவர்கள் பிரபல கல்லூரிகளில் கற்று உள்நாட்டு, வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களுக்கு தெரிவாகி மிகச் சிறந்த பெறுபேறுகளைப் பெற்று, எமது பழைய மாணவர்கள் வைத்திய நிபுணர்களாக, கணக்காளர்களாக, இறைவரித்திணைக்கள உயரதிகாரிகளாக, சுங்கத்திணைக்கள உயரதிகாரிகளாக, சட்டத்தரணிகளாக, பல்கலைக்கழக பேராசிரியர்களாக, விண்வெளி ஆராய்ச்சி நிலைய விஞ்ஞானிகளாக, பாடசாலை அதிபர்களாக, ஆசிரியர்களாக, கல்விப் பணிப்பாளராக, அரச அதிபர்களாக, சிறந்த வர்த்தகர்களாக, எழுதுவினைஞர்களாக பணியாற்றியுள்ளனர், பணியாற்றி வருகின்றனர் என்பது பெருமையுடன் குறிப்பிடத்தக்கது.

1990 ஆம் ஆண்டுவரை சீரிய முறையில் இயங்கிவந்த இப்பாடசாலை 1991 ஆம் ஆண்டில் எமது கிராமத்தில் மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக மக்கள் இடம் பெயர்ந்ததன் விளைவாக பாடசாலைச் செயற்பாடுகளில் பின்னடைவும், பாடசாலை வளங்களின் பாரிய அழிவும் ஏற்பட்டன. எனினும் 1996 ஆம் ஆண்டு தொடக்கம் மீண்டும் பாடசாலை தன் சொந்த இடத்தில் இயங்கிவருகின்றது.

இப்பாடசாலையில் கற்ற மாணவர்களிற் பலர் உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும், மிக உயர்ந்த பதவிகளை வகித்துள்ளனர், வகித்து வருகின்றனர். எதிர்காலத்திலும் இந்நிலை தொடர பாடசாலையுடன் சம்பந்தப்பட்ட அனைவரதும் ஆக்கமும், ஊக்கமும், பாடசாலையின் எதிரில் எழுந்தருளியிருக்கும் வேலவனதும், ஞான வைரவரினதும் அருளும் கிடைக்க வேண்டுகிறோம்.

# வேலணை மேற்கு நடராசா வித்தியாலயம்
# (இராசா உபாத்தியாயர் பள்ளிக்கூடம்)



## பாடசாலைகள்

# வேலணை மேற்கு நடராஜா வித்தியாலயம்
## (இராசா உபாத்தியாயர் பள்ளிக்கூடம்)

திரு. இ. ஞானசோதியன் - அதிபர்

**வே**லணை மேற்கு சைவப் பாரம்பரியத்தில் பல்வேறு சிறப்புக்களைக் கொண்டது. வேலணை மேற்கு பெரியபுலம் மகாகணபதிப் பிள்ளையார் ஆலயம் இந்த கிராமத்தின் இதயம் போன்றது. இந்த ஆலய சூழலில் பண்டிதர்கள், புராணிகர்கள், புலவர்கள், இலக்கிய ஆராய்ச்சி விற்பன்னர்கள் வாழ்ந்தார்கள். கோவிலில் கூடி பெரிய புராணம், கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம் வாசித்து உரை சொல்கின்ற நீண்ட பண்பாட்டுபாரம்பரியம் இங்கு வளர்ந்திருந்தது.

இவ்வூரில் கந்தப்பு உபாத்தியாயர், பொன்னையா உபாத்தியாயர், சட்டம்பியார், முருகேசு உபாத்தியாயர், நாகலிங்க உபாத்தியாயர், இராஜா உபாத்தியாயர், தம்பு உபாத்தியாயர் இவர்களின் வரிசையில் பிற்காலத்தில் முத்து உபாத்தியாயர், சதாசிவம் விதானையார், அப்பாத்துரை உபாத்தியாயர் (பேரம்பல உபாத்தியாயர்) வே. பசுபதிப் பிள்ளை உபாத்தியாயர், ச. மகாலிங்க விதானையார் ஆகியோர் அவ்வப்போது புராணபடன குழுவில் தமது பங்கைச் செலுத்தி சைவமும், தமிழும் வளர பங்காற்றினார்கள்.

இவர்களின் பாரம்பரியத்தில் தோற்றம் பெற்ற ஒரு பாடசாலையாக நடராஜா வித்தியாலயம் விளங்கியது. நாவலர் மாணவர் அமரர் கந்தப்பர் ஸ்தாபித்த சைவப்பிரகாச வித்தியாசாலை அமரர் இராஜா உபாத்தியாயர் (செங்கமலையர் கனகசபாபதிப்பிள்ளை) அவர்கள் ஸ்தாபித்த

நடராஜா வித்தியாசாலை, வேலணை மத்திய கல்லூரி ஆகியவை வேலணை மேற்கு பகுதியில் சிறப்பாக கல்விப்பணியாற்றி வருகின்றன.

வேலணை மேற்கில் "நெல்லாவில்" என்ற பெயர் கொண்ட குறிச்சியே இராஜா உபாத்தியாயரின் பிறப்பிடமாகவும், வசிப்பிடமாகவும் விளங்கியது. இங்கு குருபூசை மடங்கள், சிவபூசை செய்யும் மடங்கள் அமைந்திருந்தன. இராஜா உபாத்தியாயரின் வழிகாட்டலில் அனைவருக்கும் கல்வி முதல் அனைத்து நிலைகளிலும் எல்லோருக்கும் வழிகாட்டப்பட்டது.

நடராஜா வித்தியாலயம் இராஜா உபாத்தியாயருடைய காணியிலேயே ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்ப காலத்தில் ஓலையால் வேயப்பட்ட சுண்ணாம்புக் கட்டடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. 1912 ஆம் ஆண்டு இப்பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. இப்பாடசாலையின் முதல் ஆசிரியரும், முதல் தலைமை யாசிரியருமாக இராஜா உபாத்தியாயரே விளங்கினார். ஆரம்ப காலங்களில் மட்டுமன்றி இன்றும் ஊரில் வாழும் முதியவர்கள் இராஜா உபாத்தியாயர் பள்ளிக்கூடம் என்றே அழைப்பார்கள்.

இப்பாடசாலை சிதம்பரம் நடராஜப் பெருமானின் பெயரைக்கொண்டதாக விளங்கியது. சிதம்பரத்திற்கும், நெல்லாவிலில் வாழ்ந்தவர்களுக்கும் இடையில் நெருங்கிய தொடர்புகள் நிலவி வந்தன. சைவம் வளர **"சைவ மார்க்க போதினி"** யாழ்ப்பாணத்தின் முதல் சைவப்பத்திரிகை, இராஜா உபாத்தியாயரால் அவரது சொந்த "நடராஜா அச்சு யந்திர சாலையில்" அச்சிட்டு வெளியிடப்பட்டது. இவருக்கு அப்பாத்துரை உபாத்தியாயர், செல்வி. சௌந்தரநாயகி தம்பு ஆசிரியை ஆகியோர் உதவியாக அச்சுப்பதிவு மேற்கொள்ளப்பட்டது.

நடராஜா வித்தியாலயத்தில் ஆரம்பத்தில் ஆரம்ப வகுப்புகளும், பின்னர் க. பொ. த (சா/த) வரை வகுப்புக்களும் நடை பெற்றன. இங்கு புராணபடனம், குருபூசைகள் சிறப்பாக நடைபெற்று வந்தன. இதனுடன் ஞாயிற்றுக்கிழமைகளில் அப்பாத்துரை உபாத்தியாயர் அவர்கள் சமயபாட வகுப்புக்களை இலவசமாக நடாத்தி வந்தார். இதனால் மாணவர்கள் பலர் பயன் பெற்றனர். நவராத்திரி நாட்களில் மாணவர்கள் குழுக்களாக இணைந்து வீடுகளுக்குச் சென்று பாடல்களைப் பாடி சமய வாழ்க்கை வாழ்ந்தனர்.

காலப்போக்கில் இப்பாடசாலை அரசாங்கத்தினால் பொறுப்பேற்கப்பட்டது. பின்னர் ஓலைக் கொட்டகையாக இருந்த பழைய கட்டிடங்கள் அழிக்கப்பட்டு புதிய கட்டிடங்கள் அமைக்கப்பட்டன. இப்பாடசாலையில் பல உபாத்தியாயர்கள் கடமையாற்றியுள்ளார்கள்.

திரு. அப்பாத்துரை உபாத்தியாயர்
திரு. சரவணமுத்து உபாத்தியாயர்

திரு. ஏரம்பு உபாத்தியாயர்
செல்வி. பண்டிதை. த. வேதநாயகி
திரு. சாம்பசிவ உபாத்தியாயர்
திரு. சோமசுந்தர உபாத்தியாயர்
மாதகல் வைத்தியலிங்க உபாத்தியாயர்

இவர்கள் ஆரம்பகாலத்தில் கடமை யாற்றியவர்களில் சிலராவர். இவர்கள் வரிசையில் தலைமையாசிரியர், அதிபர்கள் பலர் பல்வேறு காலத்தில் கடமையாற்றி யுள்ளார்கள். அவர்களை பின்வருமாறு பட்டியல் படுத்தலாம்.

1. திரு. செ. கனகசபாபதி (இராஜா உபாத்தியாயர்)
2. திரு. க. சிவஞானசம்பந்தன்
3. திரு. பொ. பொன்னுச்சாமி
4. திரு. க. கனகரத்தினம்
5. திருமதி. செ. கந்தசாமி
6. திரு. வ. நல்லையா
7. திரு. கு. சரவணபவானந்தன்
8. திரு. இ. ஞானசோதியன்

ஆரம்பத்தில் தரம் 1 - 5 வரை மட்டுமே வகுப்புகள் நடைபெற்றன. பின்னர் படிப்படியாக வகுப்புகள் அதிகரிக்கத் தொடங்கின. தற்போது க. பொ. த. (சா/த) வரை வகுப்புகள் நடைபெறுகின்றன. 1960களில் விசுவலிங்கம் ஆசிரியர், தருமலிங்கம் ஆசிரியர், பொன்னுக்கோன் ஆசிரியர், முருகேசுப்பிள்ளை ஆசிரியர், திருமதி. சிவயோகம் மகாலிங்கம், இராமலிங்கப்பிள்ளை ஐயர், நடராஜா ஆசிரியர், திரு. சு. ஏரம்பு ஆசிரியர், திரு. பேரம்பலம் ஆசிரியர் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

இப்பாடசாலை புளியங்கூடல் வேலணை ஆகிய இரண்டு கிராமங் களினதும் எல்லையில் அமைந்திருப்பதனால் இவ்விரண்டு கிராம மாணவர்கள் ஆரம்ப காலங்களில் இருந்து கல்வி கற்று வந்தனர். கிராமங்களின் உறவுப்பாலமாக இது விளங்குகிறது. சைவப்பண்பாட்டுடன் சார்ந்த உயர் விழுமியங்களை மாணவர் மத்தியில் இது வளர்த்து வந்தது. சமயபாட விசேட வகுப்புகள், புராணபடனம், குருபூசை, சமயதீட்சை ஆகிய சமய நெறியோடு சேர்ந்த பல செயற்பாடுகள் இந்த பாடசாலையில் நீண்டகாலமாக செயற்பட்டு வந்தன.

அரசாங்கம் பாடசாலையைப் பொறுப் பேற்ற பின்னர் அத்தகைய செயற்பாடுகள் அருகி வரத் தொடங்கின. இதனால் இப்பாடசாலையின் பாரம்பரிய பண்பாட்டு நெறிமுறைகள் கைவிடப்படலாயின. எவ்வாறிருந்த போதும் இப்பாடசாலை ஆரம்பிக்கப்பட்டதன் ஆரம்பகால இலக்குகள் தொடர்ந்தும் பேணப்பட வேண்டும்.

இப்பாடசாலையில் ஆரம்பக் கல்வியைப் பெற்ற பலர் உயர்நிலை பெற்றார்கள். யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் கலைப்பீடாதிபதியாக விளங்கிய பேராசிரியர் செ. பாலச்சந்திரன் தனது ஆரம்பக் கல்வியை இப்பாடசாலையில்

பெற்றார். வேலணைப் பிரதேச செயலாளராக பதவி வகித்த திரு. செ. இரத்தினம் இப் பாடசாலையில் ஆரம்பக் கல்வியைப் பெற்றவர். ஆரம்ப காலங்களில் வேலணை மத்திய கல்லூரிக்கு தரம் 6க்கு மாணவர்களை அனுப்பும் பாடசாலைகளில் ஒன்றாக இந்த வித்தியாலயம் விளங்கியது.

காலப்போக்கில் பழைய கட்டடங்கள் அழிக்கப்பட்டு புதிய கட்டடங்கள் தோற்றம் பெற்றுள்ளன. இந்த வித்தியாலயத்தின் மேற்குப் பக்கத்தில் நின்ற மிகப் பிரமாண்டமான "மாமரம்" இன்றும் பலரது மனதில் பல நினைவுகளை ஏற்படுத்தும். இது காலப்போக்கில் வீதி விஸ்தரிப்பு, மின்கம்பங்கள் காரணமாக தறித்து அகற்றப்பட்டது. இந்த வித்தியாலயத்தின் வடக்கு எல்லையில் உள்ள இல்லத்தில் தங்கியிருந்து கல்விப்பணியாற்றிய பண்டிதை வேதநாயகி அவர்களின் பணி போற்றுதற்கு உரியது. மதுரைத் தமிழ்ப் பண்டிதை பட்டம் பெற்ற வேதநாயகி அவர்களை எல்லோரும் **"வேதம்மா"** என்று அன்பாக அழைப்பார்கள். இவரிடம் கற்ற பலர் தமிழை அழுத்தம் திருத்தமாக இலக்கண முறைப்படி கற்றார்கள். அதனுடன் சைவ ஆசாரமுறைப்படி மாணவர் வளர நடவடிக்கை எடுத்தார். இவரிடம் கல்வி கற்க பிற ஊர்களில் இருந்தும் மாணவர்கள் வந்து சென்றனர். இவர் தம்பு உபாத்தியாயரின் மகளாவார். இவர் குடியிருந்த குடியிருப்பு நிலம் இப்போது வித்தியாலயத்திற்கு வழங்கப்பட்டுள்ளது.

சு. ஏரம்பு அவர்களும் இவ் வித்தியால யத்தில் நீண்ட காலம் கல்விப்பணி ஆற்றியவர். அத்துடன் இவர் சிறந்த விவசாயி ஆகவும், சோதிடராகவும் விளங்கினார். மேலும் நில அளவை செய்பவராகவும் செயற்பட்டார். இவரிடம் கற்ற பல மாணவர்கள் இன்றும் இவரது திறமைகளைப் புகழ்ந்து கூறுவார்கள். இவர் கணிதம் கற்பிப்பதில் சிறந்து விளங்கினார்.

**அண்மைக் காலம் :**

1970, 1980 களில் பாடசாலை பௌதிக வள விருத்தியில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. பழைய கட்டடங்கள் இடித்து அழிக்கப்பட்டு புதிய கட்டடங்கள் தோற்றம் பெற்றன. பாடசாலை வளவின் வடக்குப் பக்கத்தில் 1975 இல் 120' x 20' கட்டடம் அமைக்கப்பட்டது. இதில் அதிபர் அலுவலகம் உட்பட வகுப்புகள் இருந்தன. பின்னர் கிழக்கு எல்லையில் 120' x 20' இன்னொரு கட்டடம் அமைக்கப்பட்டது. 1991 இல் புலப்பெயர்விற்கு முன்னர் இந்த இரண்டு கட்டடங்கள் மட்டுமே இருந்தன.

1991 இல் வேலணையில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக பாடசாலையும் புலம் பெயர்ந்து யாழ்ப்பாணத்தில் சில காலம் இயங்கியது. 1995 தென்மராட்சிக்கான யாழ்ப்பாண இடப்பெயர்வின் போதும் இடம் பெயர்ந்து

தென்மராட்சியிலும் இயங்கியது. 1996 இன் மீள்குடியமர்வின் போது ஆரம்பிக்கப்பட்ட பாடசாலைகளில் இதுவும் ஒன்றாகும். 1996 ஏப்பிரல் மாதத்தில் இப்பாடசாலை மீளவும் ஆரம்பிக்கப்பட்டது. மாணவர் வரவு படிப்படியாக அதிகரிக்கத் தொடங்கியது. மீளக்குடியமர்வின் போது ஆரம்பத்தில் 35 மாணவர்கள் வருகை தந்தனர். படிப்படியாக மாணவர் தொகை அதிகரித்து இன்று 380 மாணவர்கள் கல்வி கற்கின்றார்கள். 14 ஆசிரியர்களும் கடமையாற்றுகிறார்கள்.

2000 ஆம் ஆண்டில் உலக வங்கி உதவியுடன் பொதுக் கல்வி சுற்று நிரூபத்தின் அடிப்படையில் 40' x 20' அளவுடைய நவீன நூலகம் ஒன்று அமைக்கப்பட்டது. தற்போது பாடசாலையின் முன்பக்கத்தில் 90' x 25' நீளமான இரண்டு மாடிக் கட்டடம் ஒன்று அமைக்கப்பட்டு வருகின்றது.

ஜி. ரி. சற் நிறுவன பங்களிப்புடன் மலசலகூடத் தொகுதிகள் புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ளன. புதிய நீர்த்தாங்கி ஒன்று புதிதாக அமைக்கப்பட்டுள்ளது. புளியங்கூடல் மகாமாரி அம்மன் ஆலய அறங்காவலர் திரு. து. சிவஞானச்செல்வம் அவர்களால் இது அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

மக்கள் பலர் மீள குடியேறாத நிலையில் இப்பிரதேசத்தின் கல்வி முன்னேற்றங்கள் இன்னமும் எதிர்பார்த்த அளவிற்கு ஏற்படவில்லை. ஆசிரியர் பற்றாக்குறை, போக்குவரத்து பிரச்சினை போன்ற பல பிரச்சினைகள் இருப்பதால் எதிர்பார்த்த விளைவுகளை ஏற்படுத்த வில்லை. இப்பிரதேசத்தில் உள்ள மக்களும் கல்வியில் பெரிய ஆர்வத்தை காட்டி வரவில்லை. தீவகப்பகுதியில் பல பாடசாலைகள் மீளகுடியமர்வின் பின்னர் மீள திறக்கப்பட்ட போதும் மாணவர்களின் கல்வி முன்னேற்றத்தில் திருப்தி அளிப்பதாக இல்லை. இடம் பெயர்விற்கு முன்னர் பல மாணவர்கள் கல்வி கற்ற பாடசாலைகள் இன்று மிகக் குறைந்த மாணவர்களுடன் இயங்குகின்றன. பலர் இன்னமும் வேலணையில் மீளக்குடியேறவில்லை.

நடராஜா வித்தியாலயம் முதன்மை பெறுவதற்கு பலர் அர்ப்பணிப்புடன் பணியாற்றியிருக்கிறார்கள். தற்போதுள்ள அதிபர் திரு. இ. ஞானசோதியன் அவர்கள் நீண்ட காலம் ஆசிரியராக இங்கு கடமையாற்றியவர். அவருடைய துணைவியார் திருமதி. ஞானசோதியன் அவர்களும் நீண்ட காலம் ஆசிரியராகக் கடமையாற்றி வருகின்றார். தீவக கல்வி வலயத்தின் மிகச் சிறந்த ஒரு சமூகக்கல்வி ஆசிரியராகக் கடமையாற்றி வருகிறார். இங்கு நீண்ட காலமாகக் கடமையாற்றி அண்மையில் அமரரான திரு. வ. தியாகராசா ஆசிரியர் இங்கு அர்ப்பணிப்புடன் கடமையாற்றினார். சமூகத்தில் நன்மதிப்பு பெற்றிருந்த ஆசிரியர்களில் இவரும்

குறிப்பிடத் தக்கவர்.

இவ்வித்தியாலயத்தின் ஸ்தாபகர்கள் சைவம், தமிழ் ஆகிய இரண்டையும் முக்கியப்படுத்தி அதன் அடிப்படையில் கல்வி இலக்குகளாகக் கொண்டு கடமை ஆற்றினார்கள். கால மாற்றங்களுக்கு ஏற்ப கல்வியின் நோக்கங்களும் மாற்றமுற்று செல்கின்றன. இப்பிரதேச மாணவர்களின் கல்வி முன்னேற்றத்தில் இன்னமும் வினைத்திறன் மிக்க ஒரு பாடசாலையாக இதை மாற்ற வேண்டும். பௌதிக வள விருத்திகளுடன் மட்டும் திருப்தியடைந்து விடாது சமூகத்தில் இருந்து வரும் மாணவர்களின் கல்வி அடைவுகளை மேலும் விருத்தியாக்கும் வகையில் செயற்பாடுகளை பயனுறுதிமிக்க வகையில் ஆற்ற வேண்டும். சமூகம் எதிர் பார்க்கின்ற நன்மைகளை அடைந்துகொள்வதற்கு பயனுறுதி வாய்ந்த ஒரு பாடசாலையாக மாற்றுவதற்கு இவ்வித்தியாலய சமூகம் உழைக்க வேண்டும். அப்போது தான் நிலைத்து நிற்கக்கூடியதாக இருக்கும். கல்வி அடைவுகளை உயர்த்துவதற்கு பொருத்தமான மாற்றுத் திட்டங்களை செயற்படுத்த வேண்டும். அத்துடன் சமய, பண்பாட்டு ஒழுக்க நெறிகளுக்கு ஏற்ற வகையில் மாணவர்களை வளர்த்தெடுப்பதற் கேற்ப இணைக்கலைத்திட்ட செயற்பாடு களிலும் அக்கறை செலுத்த வேண்டும்.



## வேலணை சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகாவித்தியாலயம்



வேலணை - 7

பாடசாலைகள்

# வேலணை சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகா வித்தியாலயம்
## (வேலணை மத்திய கல்லூரி)

திரு. பொ. அருணகிரிநாதன் - அதிபர்

இலங்கையின் கல்வி வரலாற்றில் 1945 இல் தோற்றம் பெற்ற **"மத்திய கல்லூரிகள்"** குறிப்பாக கிராமப்புற மாணவர்களின் கல்வி வளர்ச்சியில் பெரும் பங்கு வகித்தன. கல்வியில் சமசந்தர்ப்பம், கல்வியில் சமவாய்ப்புகள் என்ற சிந்தனை வெளிப்பாட்டின் விளைவாக கிராமப்புற மாணவர்கள் கல்விக்கான வாய்ப்புகளை விரிவாக்கும் நோக்குடன் இலவசக் கல்வியின் தந்தை எனப் போற்றப்படுகின்ற சீ. டபிள்யூ. டபிள்யூ கன்னங்கரா அவர்களின் பெருமுயற்சியினால் இத்தகைய மத்திய கல்லூரிகள் 54 இலங்கை முழுவதிலும் நிறுவப்பட்டது.

தீவுப்பகுதி பிள்ளைகள் ஆங்கிலம் மூலம் கல்வி கற்பதற்கு ஊர்காவற்றுறை அந்தோனியார் கல்லூரிக்கு அல்லது யாழ்ப்பாண நகரில் அமைந்துள்ள கல்லூரிகளுக்குச் செல்லவேண்டி இருந்தது. இந்நிலையில் தீவுப்பகுதியில் ஆங்கிலக் கல்வி வளர்ச்சிபெற முடியாது இருந்தது. கிராமப்புற பிள்ளைகளின் கல்வி வளர்ச்சிக்கு விடுதிகளுடன் கூடிய மகாவித்தியாலயங்கள் அமைக்கப்பட்டு புலமைப்பரிசில் கொடுத்து விடுதியில் தங்கவைத்தே படிப்பிக்கலாம் என கன்னங்கரா உணர்ந்தார். அன்று மக்கள் ஏழைகளாகவும், கல்வி செயற்பாட்டிற்கு அவர்களது வீட்டுச்சூழல் முற்றாக பொருத்தமில்லாது இருந்ததால் விடுதிகளுடன் கூடிய பாடசாலை முறையே கிராமமக்களின் கல்வியை முன்னெடுக்கலாம் என உணரப்பட்டது. இப்பின்னணியில்

தீவுப்பகுதிக்கு பொதுவானதொரு மகாவித்தியாலயம் அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்து மேலோங்கியது. அன்றைய அரசசபை அங்கத்தவர் சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி இதற்கு முழுமையான ஒத்துழைப்பை நல்கினார்.

இம்மகா வித்தியாலயத்தின் இடவமைவு குறித்து வேலணை சரவணை மக்கள் வேறுபாடான கருத்துக்களை கொண்டிருந்தனர்.

1. புளியங்கூடல் சந்திக்கு அருகாமையில் அமைத்தல்.
2. தற்போது அமைந்துள்ள இடத்தில் அமைத்தல்.
3. யாழ்ப்பாணம் - புங்குடுதீவு வீதியில் சோமசுந்தர மணியகாரனின் வளவில் அமைத்தல். இதற்கான காணியை திருமதி. சோமசுந்தரம் கொடுப்பதாக உத்தரவாதம் கொடுத்ததாக அறியக்கிடக்கின்றது.

இப்படி பல்வேறு சமூகப்பிரிவுகளும் தங்கள் தங்கள் பகுதியிலேயே அமைய வேண்டும் என விரும்பி முயற்சித்த போது திரு. வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்கள் நன்கு ஆராய்ந்து சிந்தித்து இன்றைய இடமே பொருத்தமானதென முடிவு செய்தார்.

இத்தகைய ஒரு பின்னணியிலேயே 1945 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 01 ஆம் திகதி நாவலர் பரம்பரையினரால் உருவாக்கி பரிபாலிக்கப்பட்டு வந்த "வேலணை சைவப்பிரகாசம்" வித்தியாலயத்தில் வேலணை மத்திய கல்லூரி ஆரம்பித்து வைக்கப்பட்டது. தற்காலிகமாக கல்லூரி சைவப்பிரகாச வித்தியாலயத்தில் இயங்கி வந்தது.

சோல்பரி பிரபுவினால் அத்திவார மிடப்பட்டு 1954 இல் சேர். ஜோன் கொத்தலாவலை அவர்களால் திறந்து வைக்கப்பட்ட வரலாற்றுப் பெருமை கொண்டது எமது கல்லூரி. சேர். ஜோன் கொத்தலாவலை அவர்களால் நாட்டி வைக்கப்பட்ட மலைவேம்பு மரம் இப்பொழுதும கம்பீரமாக உயர்ந்து வரலாற்றைச் சொல்லி நிற்கின்றது.

சீ. டபிள்யூ. டபிள்யூ. கன்னங்கரா அவர்கள் கல்வி மந்திரியாக விளங்கிய காலத்தில் வலி. மேற்குப் பிரதிநிதி சட்டசபை சபாநாயகர். சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்களின் வழிகாட்டலில் அப்போதைய வேலணை கிராமச் சங்கத் தலைவர் இ. மருதையினார் அவர்களின் உதவியுடனும் மக்களிடமிருந்து பெற்ற பணஉதவியுடனும் கொட்டில்கள் போடுவித்து ஆரம்பகாலத்தில் கல்லூரி இயங்கி வந்தது.

எமது கல்லூரியின் முதல் அதிபராக விளங்கி கல்லூரியைப் பொறுப்பேற்றவர் ஏ. கே. கந்தையா அவர்கள். 1945 நவம்பர் மாதம் 6 ஆம் வகுப்பில் ஆங்கில மொழிமூலம் கல்வி கற்பிக்கத் தொடங்கப்பட்டது. 1950 டிசம்பரில் நடைபெற்ற எஸ். எஸ். சி. பரீட்சையில் 100% சித்தி பெறுவதற்கு பெரும்பங்கு வகித்தவர் அதிபர் அவர்கள். இவருடைய

காலத்தில் சிறப்பான ஆசிரியர் குழாம் இவருக்கு பக்க பலமாக விளங்கியது. கன்னங்கரா, துரைசுவாமி இல்லங்கள் பாடசாலையில் அமைக்கப்பட்டு விளையாட்டு, தோட்டவேலைகள் போன்ற துறைகளில் போட்டிகள் சிறப்பாக நடைபெற்றன.

இக்காலப்பகுதியில் புலமைப்பரிசில் திட்டம் நடைமுறைக்கு வந்தது. ஊர்காவற்றுறைத் தொகுதி மாணவர்கள் அனைவருக்கும் கல்வி வழங்கும் நிலையமாக விளங்கியது. ஆரம்பத்தில் ஆண்கள், பெண்கள் விடுதிக்கான இரண்டு வீடுகள் வாடகைக்கு எடுக்கப்பட்டு விடுதிகள் அமைக்கப்பட்டன. இந்த விடுதிகளில் புலமைப் பரீட்சையில் சித்தியெய்திய தீவக மாணவர்கள் தங்கி கல்வியை மேற்கொண்டனர். முதலாவது விடுதி மேற்பார்வையாளராக திருமதி. சபாரத்தினம் அவர்கள் விளங்கினார். முதலாவது உதவி அதிபராக செல்வி. எல். பி. முருகேசு அவர்களும், முதலாவது பதிவு செய்யப்பட்ட மாணவனாக திரு. எம். லிங்கப்பிள்ளை அவர்களும் விளங்கினார்கள். முதலாவது காவலாளியாக திரு. இராசையா அவர்கள் கடமையாற்றினார்.

**அதிபர். வீ. தம்பு அவர்கள் :**

1951 ஆம் ஆண்டு ஜனவரியில் திரு. வி. தம்பு அவர்கள் கல்லூரியின் அதிபர் பதவியை அலங்கரித்தார். கல்லூரி சுற்றாடலில் தங்கி கடமையை செவ்வனே செய்தார். இவரது காலப்பகுதியில் புதிய மாடிக் கட்டடங்கள் விருத்தி பெற்றன. கல்லூரிக்கு முன்னதாக ஆண்கள், பெண்கள் விடுதிகள் அமைக்கப்பட்டன. மாணவர் தொகையும் படிப்படியாக அதிகரிக்கத் தொடங்கியது. G.C.E (உ/த) வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. இக்கல்லூரியில் கல்வி கற்று பட்டம் பெற்ற பலர் இங்கு ஆசிரியராக இணைந்து கொள்ளுகின்ற ஒரு சூழல் ஏற்படத் தொடங்கியது. இதனால் புதிய உற்சாகம் ஏற்படத்தொடங்கியது. விஞ்ஞானம், கலை ஆகிய துறைகளில் பல மாணவர்கள் தெரிவு செய்யப்பட்டு பேராதனைப் பல்கலைக் கழகத்தில் கற்கத்தொடங்கினார்கள். இவருடைய காலத்தில் சிவகாமி அம்பாள் சமேத நடராஜப்பெருமானின் ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டப்பெற்றது. அதிபர் தம்பு அவர்கள் மாணவர்கள் மத்தியிலும், மக்கள் மத்தியிலும் தனக்கென ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுக்கொண்டார். இவரது காலத்தில் கல்வி கற்ற பல மாணவர்கள் இன்று இலங்கையிலும், உலகத்திலும் புகழ்பெற்றவர்களாக காணப்படுகிறார்கள். இவரது கடமை உணர்வும், அர்ப் பணிப்பும், கண்டிப்பும் கல்லூரியை வளர்ப்பதற்கு உந்து சக்தியாக விளங்கியது. அதிபர் தம்பு அவர்களின் ஞாபகார்த்தமாக இவரது மாணவர்களால் **"தம்பு ஞாபகார்த்த புலமைப்பரிசில் நிதியம்"** ஆரம்பிக்கப்பட்டு பல்கலைக்கழகம் செல்லும்

மாணவர்கட்கு புலமைப்பரிசில் வசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது. இந்த நிதியத்தின் ஸ்தாபகராக அதிபர் தம்பு அவர்களின் மாணவர்களில் ஒருவரான திரு. இ. சுந்தரமூர்த்தி அவர்கள் (பிரதி இயக்குனர், சுங்கத்திணைக்களம்) விளங்குகிறார்கள். தம்பர் காலம் வேலணை மத்திய கல்லூரியின் பொற்காலம் என சிறப்பித்துக் கூறுவார்கள்.

இவரது காலத்திற்குப்பின்னர் திரு. ஏ. ரி. சபாரட்ணம் அவர்கள் அதிபரானார். (1962 - 1964) மாணவர் கல்வி விருத்திக் கான பல அடித்தளங்களை இட்டார். மீத்திறன் மாணவர்களை இனங்கண்டு ஒவ்வொரு வகுப்பிலும் அவர்களுக்கென வகுப்பை அமைத்து அவர்களுக்கு பொருத்தமான கற்பித்தல் விஷேட திட்டங்களை நடைமுறைப் படுத்தினார். குறிப்பாக ஆங்கிலக் கல்வியின் விருத்திக்காக சிறப்பு ஆசிரியர்களைப் பெற்று நவீன தொழில்நுட்ப சாதனங்களைக் கையாண்டு கற்பிப்பதற்கு உதவினார். குறிப்பாக **"ஸ்போக்கன் இங்கிலீஸ்"** விருத்திக்காக பெரு முயற்சி எடுத்தார். மாணவர்களின் விடுதிகள் சிறப்பான முறையில் இயங்கவும், மாணவர்களுக்கு தரமான உணவு கிடைப்பதை உறுதிப்படுத்தவும் தம்மாலான முயற்சிகளைச் செய்தார். விஞ்ஞான ஆய்வுகூடங்கள் மேலும் விருத்தி பெறத்தொடங்கின. மிகக் குறுகிய காலமே இவர் கல்லூரியில் அதிபராக இருந்தார். இடமாற்றம் கிடைத்து வேறு பாடசாலைக்கு சென்றமை கல்லூரிக்கு துரதிஷ்டமேயாகும்.

இவரைத் தொடர்ந்து திரு. சிவ சிதம்பரம் அவர்கள் (1965 - 1966) காலப் பகுதியில் அதிபராகக் கடமையாற்றினார். இவருடைய தோற்றம் பார்ப்போரைப் பிரமிக்கவைக்கும். மேலைத்தேச உடையணிந்து கோட், சூட் சகிதம் மிககம்பீரமாக நடந்து வரும் காட்சி எமக்கு இப்போதும் ஞாபகம் உண்டு. கல்லூரிக்கு முன்னால் உள்ள அமரர். மு. குமாரசாமிப்பிள்ளை அவர்கள் இல்லத்தில் இவர் வசித்து வந்தார். அங்கிருந்து கல்லூரிக்கு நடந்து வருகின்றபோது மிக கம்பீரமாக வருவார். பார்த்தால் பயம் வந்துவிடும். ஆனால் மிக அன்பானவர். சிறப்பான ஒரு விஞ்ஞான ஆசிரியராகவும் விளங்கினார். இவரது காலத்தில் பல மாணவர்கள் பல்கலைக் கழகத்திற்கு தெரிவு செய்யப்பட்டனர். இவரது காலத்தில் கற்ற பல மாணவர்களுக்கு அரச உத்தியோகத்தில் பல வாய்ப்புகள் கிடைத்தன.

இவரைத் தொடர்ந்து திரு. ஜெ. எஸ். அரியரட்ணம் அவர்கள் (1967 - 1971) அதிபராகக் கடமையாற்றினார். இவர் மிக அமைதியாகப் பணியாற்றினார். இவரது காலத்தில் கல்லூரி பல வழிகளிலும் முன்னேற்றம் அடைந்தது. இக்காலத்தில் இங்கு கல்வி கற்பித்த ஆசிரியர்கள் திரு, ஈ. கே. நாகராஜா அவர்கள், பண்டிதர்

இராசையா அவர்கள், திரு. எஸ். சண்முகநாதன், திரு. பி. கேதாரநாதன், திருமதி. ரி. கேதாரநாதன், திரு. விஜய ரட்ணம் அவர்கள், திரு. நடேசபிள்ளை அவர்கள், திரு. அருணாசலம் அவர்கள், திரு. குமாரசுவாமி அவர்கள், திரு. ச. சுப்பிரமணியம் அவர்கள், திரு. சோமஸ் கந்தன் அவர்கள், திரு. பி. பொன்னுச்சாமி அவர்கள், திரு. பொ. நடராசா அவர்கள் என்ற வரிசையில் பலர் கல்லூரிக்கு பலவகையில் பணியாற்றினர். எல்லோரையும் இங்கு குறிப்பிடுவது மிகக் கடினமான பணியாகும். இவரது காலத்தில் சாதாரண தர, உயர்தர வகுப்புகளில் சிறப்பான பெறுபேறுகள் கிடைத்தன. 1969 ஆம் ஆண்டு இக்கல்லூரியில் பிரமாண்டமான கலை, விஞ்ஞான, கைப்பணிப் பொருட்காட்சி ஒன்று நடத்தப்பட்டது. இது பலரையும் கவர்ந்தது. இது தொடர்பான ஒரு கைந்நூல் ஒன்றும் அப்போது வெளியிடப்பட்டது.

இக்காலத்தில் கல்லூரியின் வெள்ளி விழாவைக் கொண்டாட பெருமுயற்சி எடுக்கப்பட்டது. ஆனால் அது கைகூடவில்லை. இக்காலத்தில் இவர் மாற்றலாகிச் செல்ல வேலணை திரு. வி. பொன்னுத்துரை அவர்கள் குறுகிய காலம் அதிபராகக் கடமை ஆற்றினார். இவரைத் தொடர்ந்து திரு. சி. இராசநாயகம் அவர்கள் 1972 இல் அதிபர் பதவியை ஏற்றுக்கொண்டார். இவர் தீவுப்பகுதியைச் சேர்ந்தவர். இவரது காலம் கல்லூரியின் சிறப்பான காலமாகும். மிகக் கண்டிப்பான ஒரு அதிபராக விளங்கினார். கலை, விஞ்ஞானப் பகுதிகள் புத்தூக்கம் பெறத் தொடங்கின. இவரது காலப்பகுதியில் பாடசாலை எல்லையுள் அமைந்த விளையாட்டு மைதானம் போதாமையால் ஆண்கள் விடுதிக்கு முன்பாகவுள்ள காணி பெறப்பட்டு புதிய விளையாட்டு மைதானம் உருவாக்கப்பட்டது. இந்த விளையாட்டு மைதான விருத்திக்கு கலை விழா மூலம் பணம் சேகரிக்கப்பட்டது. அத்துடன் சிரமதான அடிப்படையில் மைதானம் அமைக்கப்பட்டு படிப்படியாக விருத்தியடைந்தது. இவர் பதவி உயர்வுடன் மாற்றலாகிச் செல்ல திரு. தியாகராஜா அவர்கள் மிகக் குறுகிய காலம் அதிபர் பதவியை வகித்தார். இவரைத் தொடர்ந்து திரு. சி. குணபாலசிங்கம் அவர்கள் அதிபர் பதவியை ஏற்றுக் கொண்டார். இவரது காலத்திலும் பாடசாலை பல வழிகளில் முன்னேறியது. இவர் பல வழிகளிலும் கல்லூரிக்காக உழைத்தார். பொறியியல், மருத்துவத் துறைகளுக்கும், பல்மருத்துவத்துறைக்கும் மாணவர்கள் பல்கலைக்கழகம் செல்லத் தொடங்கினார்கள். இவரது காலத்தில் நூலகம் புதிதாகத் திறக்கப்பட்டது. நூலக வசதிகள் விருத்தி செய்யப்பட்டன. விளையாட்டு மைதானம், சிரமதானப் பணிகள் மூலம் விருத்தி செய்யப்பட்டது. இவரது காலத்திலும் பல மாணவர்கள் பல்கலைக்கழகம் சென்றார்கள். இக்காலப்பகுதியிலேயே

பாடசாலைக்கு பெயர்மாற்றம் செய்யப் பட்டது. தற்போது வழங்கப்படும் யா/சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்தியமகா வித்தியாலயம் என்று பெயர் மாற்றப்பட்டது. இது தொடர்பாகப் பல விமர்சனங்கள் மக்கள் மத்தியில் எழுந்தமையும் குறிப்பிடத்தக்கது, பழைய மாணவர்கள் பலர் இன்றும் இந்த பெயர்மாற்றம் தொடர்பான விமர்சனக் கருத்துக்களை முன்வைத்து வருகின்றனர். கல்லூரியை வித்தியாலயமாக மாற்றியமை கல்லூரிக்கு ஏற்பட்ட தாக்கமாக இன்றும் குறிப்பிடுகின்றனர்.

இவரைத் தொடர்ந்து பிரதி அதிபரான பண்டிதர். திரு. க. இராசையா அவர்கள் சிறிது காலம் அதிபராக கடமையாற்றினார். இவரது காலத்தில் பல மாணவர்கள் இவரிடம் கற்று பல்கலைக்கழகம் சென்றனர். பண்டிதரிடம் தமிழ் கற்றதை இன்றும் பல மாணவர்கள் நினைவு கூருகின்றார்கள். இவரைத் தொடர்ந்து திரு. சிவராஜரட்ணம் அவர்கள் (1984 - 1987) அதிபராகப் பொறுப்பேற்றார். இக்காலப்பகுதி நாட்டுச் சூழலும் திருப்திகரமாக அமையவில்லை. பல்வேறு நெருக்கடி களை மக்களும் பாடசாலையும் எதிர் நோக்கின. இருந்தபோதும் பாடசாலை செயற்பாடுகள் எல்லாம் பொருத்தமான வேளைகளில் நடைபெற்றன. இவருடைய காலத்தில் எமது கல்லூரியில் அமைந்துள்ள சிவகாமி அம்பாள் சமேத நடராஜப் பெருமானின் ஆலயம் பூர்த்தி செய்யப்பட்டு கும்பாபிஷேகம் செய்து வைக்கப்பட்டது. இந்தக் காலப்பகுதியில் கல்வி நிருவாகக் கட்டமைப்பில் கொத்தணி நிருவாக முறை தோற்றம் பெற்றது. வேலணைக் கொத்தணியின் தலைமைக் கல்லூரியாக எமது கல்லூரி விளங்கியது. இதனால் இக்கல்லூரியின் அதிபர் கொத்தணி அதிபராகவும் கடமையாற்றினார்.

இவரைத் தொடர்ந்து இக்கல்லூரியின் பழைய மாணவரான வேலணையைச் சேர்ந்த திரு. எஸ். சண்முகநாதன் அவர்கள் 1987 - 1989) கல்லூரியின் அதிபர் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். இவரும் தனக்கேயுரிய பாணியில் கல்லூரியை நடாத்திவந்தார். நாட்டில் ஏற்பட்ட அசாதாரண சூழ்நிலையிலும் கல்லூரி தனது செயற்பாட்டை கைவிடவில்லை. பல வழிகளிலும் கல்லூரி தனது செயற்பாட்டை விஸ்தரித்தது.

இவரின் பின்னர் (1989 யூன் - 1993 செப்டெம்பர்) இக்கல்லூரியின் பழைய மாணவரும் வேலணையைச் சேர்ந்தவரு மான திரு. பொ. கேதாரநாதன் அவர்கள் கல்லூரியின் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றுக்கொண்டார். இவரது காலமும் பல சோதனைகள் நிறைந்ததாக விளங்கியது. நாட்டின் சூழல் மிக மோசமாகப் பாதிக்கப்படத் தொடங்கியது. இதன் தாக்கங்களால் எமது பிரதேசமும், கல்லூரியும் பாதிப்புகளைச் சந்தித்தது.

18-10-1991 இல் வேலணையில் இடம் பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக

இப்பிரதேச மக்கள் அனைவரும் இடம் பெயர்ந்தனர். எமது கல்லூரியும் இடம் பெயர்ந்து சென்றது. யாழ்ப்பாணத்தில் வைத்தீஸ்வராக் கல்லூரியில் மாலை நேரப் பாடசாலையாக வேலணைக் கொத்தணிப் பாடசாலைகள் அனைத்தும் இயங்கின. காலப்போக்கில் பாடசாலைகள் யாழ்நகரின் பல பகுதிகளிலும் தனித்துவமாக இயங்க முயற்சி எடுத்தன. அந்த வகையில் எமது கல்லூரியும் யா/கொட்டடி நமசிவாய வித்தியாலயத்தில் இயங்கி தனது செயற்பாடுகளை முன்னெடுத்தது. இக்காலப் பகுதியில் பரிசளிப்பு விழாவினை யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி குமாரசுவாமி மண்டபத்தில் நடத்தியது. இதில் யாழ்ப்பாண பல்கலைக்கழக துணைவேந்தர். பேராசிரியர் அ. துரைராஜா அவர்கள் பிரதம விருந்தினராகக் கலந்து கொண்டார்.

காலப்போக்கில் கல்லூரியை தனித்துவமாக இயக்குவதற்காக யாழ்ப்பாணம் அரசடி வீதியில் தனியார் ஒருவரின் வீட்டுடன் ஒரு காணியையும் பெற்று தற்காலிக கொட்டகைகள் அமைத்து கல்லூரி தனித்துவமாக இயங்கத் தொடங்கியது. உலகளாவிய பழைய மாணவர் சங்கங்களின் உதவியுடன் கல்லூரியை நல்ல நிலைக்கு உயர்த்துவதற்கு அனைவரும் பாடுபட்டனர். இங்கு 1993 பெப்ரவரியில் திரு. பொ. கேதாரநாதன் அவர்கள் ஓய்வுபெற திரு. சு. கலாதரன் அவர்கள் கல்லூரியின் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றுக் கொண்டார். அனைத்து நிலைகளிலும் கல்லூரியை முதன்மைப்படுத்த அதிபர் கலாதரன் அவர்கள் கடும் முயற்சி செய்தார். யாழ்ப்பாண கல்லூரிகளுக்கு சமனாக போட்டி போடக்கூடிய நிலையில் எமது கல்லூரி மிளிர்கிறது. குறிப்பாக விளையாட்டுத் துறையில் யாழ்மாவட்ட நிலையில் எமது கல்லூரி முதன்மை வகிக்கத் தொடங்கியது. பல்கலைக் கழகங்களுக்கும் எமது கல்லூரியின் இடம்பெயர் நிலையிலும் மாணவர்கள் செல்லத் தொடங்கினார்கள். பழைய மாணவர் சங்கங்களின் பெரும் உதவியால் பாடசாலைக்கு பல வளங்கள் கிடைக்கத் தொடங்கின. தளபாடங்கள், நூல் நிலையம், மின்பிறப்பாக்கி என பல வசதிகள் கிடைத்தன. இரவு நேரப் படிப்பு வசதிகளும் பாடசாலையில் மேற்கொள்ளப்பட்டன. இதனால் கல்லூரி மீண்டும் தனது செயற்பாடுகளை பல துறைகளிலும் விஸ்தரித்தது.

நாட்டுச் சூழ்நிலைகள் தொடர்ந்தும் பாதகமாக இருந்தமையால் 1995 ஒக்டோபர் 30 ஆம் திகதி யாழ்ப்பாண மக்கள் இடம்பெயர்ந்து தென்மராட்சிக்கு சென்றார்கள். கல்லூரியும் இடம் பெயரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. பெரு வளங்களைக் கைவிட்டு புலம் பெயர்ந்த பாடசாலை தென்மராட்சி டிறிபேக் கல்லூரியில் மாலைவேளை பாடசாலையாக இயங்கி வந்தது.

1996 இல் யாழ்ப்பாணத்திற்கு தென்மராட்சியில் இருந்து மக்கள் மீள்குடியேறத் தொடங்கினார்கள். இதனால் வன்னிக்குச் செல்லாது தென்மராட்சியில் எஞ்சி நின்ற எமது மக்களும், பாடசாலையும் தீவகத்திற்கு மீளத்திரும்பின. பல்வேறு நெருக்கடிகள் சூழ்ந்த அவ்வேளையில் வேலணையில் பாடசாலைகள் தமது செயற்பாடுகளை ஆரம்பிக்கத் தொடங்கின. 1996 ஏப்ரல் மாதத்தில் வேலணை கிழக்கு மகா வித்தியாலயத்தில் யா/சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்தியமகா வித்தியாலயம், வேலணை சைவப்பிரகாச வித்தியாலயம், வேலணை கிழக்கு மகாவித்தியாலயம், வேலணை சரஸ்வதி வித்தியாலயம், வேலணை ஆத்திசூடி வித்தியாலயம் ஆகியன கூட்டுப் பாடசாலைகளாக இயங்கின. இப்பாடசாலைகள் இயங்க ஆரம்பித்த போது 53 மாணவர்கள் ஆரம்பத்தில் கல்வி கற்கத் தொடங்கினார்கள்.

1997 இல் இக்கல்லூரியைத் தனித்துவமாக இயங்க வைக்க வேண்டும் என பலர் முயற்சி செய்தனர். இக்கல்லூரியின் பழைய மாணவரும் அப்போதைய வலயம் 1 இன் கல்விப் பணிப்பாளருமான திரு. சு. இரத்தினராசா அவர்களின் முயற்சியால் வேலணை சரஸ்வதி வித்தியாலய கட்டடத்தில் இக்கல்லூரி இயங்க ஆரம்பித்தது. இக் காலப்பகுதியில் பழைய மாணவரும் அதிபருமான திரு, கு. கணேசலிங்கம் அவர்கள் அதிபர் பதவியை ஏற்றுக்கொண்டார். பல்வேறு நெருக்கடிகளுக்கு மத்தியில் கல்லூரி தனது செயற்பாடுகளைச் செய்து வந்தது.

1998 ஆம் ஆண்டு கல்லூரியின் ஒரு பகுதிக் கட்டடங்கள் பாதுகாப்பு படையினரால் நிர்வாகத்தினரிடம் கையளிக்கப்பட அதில் கல்லூரியின் செயற்பாடுகள் தொடர்ந்தன. பல நெருக்கடிகளின் மத்தியில் கல்லூரி இயங்கத் தொடங்கியது. பாடசாலையின் பிரதான மண்டபம் கோவில் வரை நீட்டப்பட்டது. மண்டபம் புதுப்பொலிவு பெற்றது. படிப்படியாக அபிவிருத்தி வேலைகளும் நடைபெறத்தொடங்கின.

நெருக்கடிகள் நிறைந்ததாக இருந்தாலும் இக்காலப் பகுதியில் கல்லூரிச் செயற்பாடுகள் விருத்தியடையத் தொடங்கின. படிப்படியாக கல்லூரியின் பௌதிக வளவிருத்தியுடன் ஏனையதுறைகளிலும் விருத்திகள் ஏற்படத்தொடங்கின. மாணவர்கள் பல்கலைக்கழகத்திற்குச் செல்லத் தொடங்கினர். படிப்படியாக விருத்திகள் ஏற்பட்டுவரத் தொடங்கியது.

22 - 06 -2002 இல் அதிபர் கணேசலிங்கம் அவர்கள் ஓய்வு பெற பிரதி அதிபர். திரு. ப. ஆரூரன் அவர்கள் பாடசாலைப் பொறுப்புகளை ஏற்று நடாத்தினார். 15 - 07 - 2002 இல் திரு. பொ. அருணகிரிநாதன் அவர்கள் பாடசாலையின் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றுக் கொண்டார். 19 - 07 - 2002 இல் கல்லூரியின் விடுதியில்

இருந்து பாதுகாப்புப் படையினர் விலகிச் சென்றனர். தற்போது 25 இலட்ச ரூபா செலவில் விடுதிகள் புனரமைப்பு வேலைகள் நிறைவேறியுள்ளன. விரைவில் மாணவர்களை விடுதியில் தங்க வைக்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கின்றோம்.

கல்லூரியில் பல செயற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. ஜி.ரி.சற் திட்டத்தின் கீழ் மண்டப புனரமைப்பு, மலசல கூடத்தொகுதி புதிதாகக் கட்டப்பட்டமை, ஓடியோ வீடியோ அலகு நிறுவப்பட்டமை, தகவல் தொடர்பாடல் தொழில்நுட்ப நிலையம் (ஐ. சி. ரி. சி) ஆரம்பிக்கப்பட்டமை, நூலக அபிவிருத்தி, பாடசாலை சுற்றுமதில் அமைத்தல், பாடசாலைக்கு தெற்கு எல்லையில் உள்ள 23 பரப்புக் காணி கொள்முதல் செய்வதற்கான ஏற்பாடுகள், பாடசாலைக்கு மீள மின்இணைப்பு பெற்றமை, நவீன தொழில்நுட்ப கற்றல் கற்பித்தலில் பயன்படுத்தியமை, விஞ்ஞான ஆய்வு கூடங்களைப் புனரமைத்தமை, பாடசாலையை அழகுபடுத்துவதற்கான செயற்திட்டம் ஆகிய பல வேலைகள் தற்போது நடைபெற்று வருகின்றன.

**பழைய மாணவர் சங்கங்கள் :**

எமது கல்லூரியின் அபிவிருத்திப் பணிகளில் பழைய மாணவர் சங்கங்களின் பங்கு மிகப்பெரிய அளவில் உள்ளது. கல்லூரியின் தாய்ச் சங்கம், பழைய மாணவர் சங்கம் - கொழும்பு, பழைய மாணவர் சங்கம் - பிரான்ஸ், பழைய மாணவர் சங்கம் - கனடா, பழைய மாணவர் சங்கம் - இங்கிலாந்து, பழைய மாணவர் சங்கம் - அவுஸ்திரேலியா ஆகியவை கல்லூரியின் அபிவிருத்தியில் அக்கறை கொண்டு உழைத்து வருகின்றன. பழைய மாணவர் சங்கங்கள் கல்லூரியின் பல்வேறு தேவைகளுக்கு தமது நிதி உதவிகளை அளித்து வருகின்றன. ஆண்டு தோறும் ஒன்றுகூடல் நிகழ்வினையும், மலர் வெளியீட்டினையும் நடாத்தி வருகின்றன. பழைய மாணவர்கள் மத்தியில் நல்லுணர்வையும், ஒற்றுமையையும் பேண பல செயற்பாடுகளைச் செய்து வருகின்றன. கல்லூரியில் அனைத்துச் செயற்பாடுகளிலும் பழைய மாணவர் சங்கங்கள் பக்க பலமாக இருப்பதால் கல்லூரி தொடர்ந்து இயங்க முடிகிறது. தொடர்ந்தும் பழைய மாணவர் சங்கங்கள் எமது கல்லூரி அபிவிருத்திக்கு அக்கறையுடன் உழைக்க வேண்டும் என எதிர்பார்க்கிறோம்.

**பாடசாலை அபிவிருத்திச் சங்கம் :**

பாடசாலையின் அபிவிருத்திச் சங்கம் பாடசாலைச் செயற்பாடுகளில் அக்கறை யுடன் உழைத்து வருகின்றது. கல்லூரியில் திணைக்கள ரீதியாகச் செய்யப்படும் அபிவிருத்தி வேலைகளுக்கு பாடசாலை அபிவிருத்திச்சங்கம் ஆதரவாக இருந்து வருகின்றது. பல வேலைத் திட்டங்களை பாடசாலை அபிவிருத்திச் சங்கம்

பொறுப்பேற்று ஒப்பந்த வேலைகளைச் செய்து தரமான வேலைகள் நடைபெறுவதை உறுதி செய்கின்றது. பரிசளிப்பு விழா, விளையாட்டுப் போட்டி, ஆசிரியர் தினம், ஆகிய பாரிய செயற்பாடுகளிலும் சங்கம் தமது பங்களிப்பினை ஆண்டுதோறும் செய்து வருகின்றது.

கல்லூரியை எமது பிரதேசத்தில் முதன்மைப்படுத்துவதற்காக இங்குள்ளவர்கள் அயராது உழைக்கிறார்கள். எமது பிரதேச மாணவர்களின் வீட்டுச் சூழலும் தற்போதைய எம் பிரதேச சூழலும் கற்பதற்கான சூழலைக் கொண்டிருக்கவில்லை. இதனால் விடுதிகளில் மாணவர்களை தங்கவைத்து கற்றலுக்குரிய சூழலை ஏற்படுத்த விரும்புகிறோம். விடுதியை ஆரம்பிப்பதற்கு இப்பொழுது பெருமளவு பணம் தேவைப்படுகின்றது. சமையலுக்குரிய பாத்திரங்கள், சமையலறை உபகரணங்கள், கட்டில்கள், மெத்தைகள், அலுமாரிகள் கொள்வனவு செய்ய வேண்டியுள்ளது. இதற்கு அரச உதவிகள் கிடைப்பது கடினம். எனவே பழைய மாணவர்கள், நலன்விரும்பிகள் இவற்றுக்கு உதவ வேண்டும்.

எமது கல்லூரி அபிவிருத்தியடைந்து எமது பிரதேச மாணவர்களுக்கு தரமான கல்வியை வழங்க அனைவரும் எமக்கு வழிகாட்டலையும், ஆலோசனைகளையும் வழங்கி எம்மை ஊக்கப்படுத்துமாறு கேட்டுக்கொள்கின்றோம்.



# வேலணை கிழக்கு மகாவித்தியாலயம்




வேலணை - 4

## பாடசாலைகள்

# வேலணை கிழக்கு மகாவித்தியாலயம்

திரு. ச. கதிர்காமநாதன்
பழைய மாணவன்-சுவிஸ்

ஒரு சமூகத்தின் விழிப்பிற்கும் வளர்ச்சிக்கும் அடிநாதமாக அமையக் கூடியது கல்வியே என்பதை நன்குணர்ந்த எம்முன்னோரில் சீரியோர் தாம் வாழ்ந்த பிரதேசங்களில் கல்விச்சாலைகளை நிறுவி தமது சமூகத்தின் அறிவு வளர்ச்சிக்கும் பண்பாட்டு வளர்ச்சிக்கும் வழிகோலினர். அத்தகையோருள் ஒருவர் திரு. கந்தர் காங்கேசு ஆசிரியர் அவர்கள். ஊர்மக்களால் காங்கேசு வாத்தியார் என பணிவன்புடன் அழைக்கப்பட்ட இவர் தமது சிற்றூரான வேலணை கிழக்குப் பிள்ளைகள் கல்விகற்பதற்காக வேலணை மேற்கு சைவப்பிரகாச வித்தியாலயத்திற்கோ, வேலணை வங்களாவடியில் அமைந்துள்ள சரஸ்வதி வித்தியாலயத்திற்கோ வெகுதூரம் நடந்து சென்று வரும் அவலநிலையைக் கண்டு வேதனை அடைந்தார். நீண்டதூரம் நடந்து செல்லமுடியாமையால் பல சிறார்கள் உரிய வயதில் கல்வியை ஆரம்பிக்க முடியாத துரதிஷ்ட நிலையையும் கண்டு ஆற்றாது தமது சிற்றூரிலேயே ஒரு பாடசாலை அமைக்கப்பட வேண்டும் என்று உறுதி கொண்டு வேலணை பெருங்குளம் அம்மன் ஆலயத்தில் தெற்கு வீதியை மருவி இருந்த 17 1/2 பரப்பு விஸ்தீரணம் கொண்ட தமது சொந்தக்காணியில் எவரது உதவியும் இன்றி தமது சொந்தச் செலவிலேயே கொட்டகைகள் அமைத்து, தேவையான

தளபாடங்கள் செய்வித்து, ஒரு பாடசாலைக்குரிய அனைத்து வளங்களையும் தமது சக்திக்கு ஏற்றவகையில் ஏற்படுத்தி அக்காலத்தில் - இலங்கை சட்டசபையில் சபாநாயகராக இருந்தவரும் ஊர்காவற்றுறைத் தொகுதி பிரதிநிதியுமான சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமியின் உதவியுடன் இப் பாடசாலைக்குரிய காணி உட்பட அனைத்து வளங்களையும் அரசாங்கத்திற்கு வழங்கினார்.

அரசாங்கம் பாடசாலையைப் பொறுப்பேற்று 1946 ஆம் ஆண்டு யூன்மாதம் 10 ஆம் திகதி இப்பாடசாலை வேலணை கிழக்கு அரசினர் தமிழ் கலவன் பாடசாலை என்ற பெயருடன் சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்களால் உத்தியோகபூர்வமாக ஆரம்பித்து வைக்கப் பட்டது. பாடசாலையின் தலைமையாசிரியராக பாடசாலையின் கர்த்தாவான திரு. கந்தர் காங்கேசு நியமிக்கப்பட்டார். அவருடன் அக்காலத்தில் திறமைமிக்க ஆசிரியர்களாகப் போற்றப்பட்ட பண்டிதர் க. இராசையா திரு. ம. க. சுப்பிரமணியம் (பின்னாளில் நொத்தாரிசாக இருந்தவர்) ஆகியோர் உட்பட ஆறு ஆசிரியர்களும் நியமிக்கப்பட்டனர். ஆரம்பத்திலேயே இப்பாடசாலையில் 180 மாணவர்கள் இங்கு கல்வி பயின்றமை ஒரு குறிப்பிடத்தக்க சிறப்பம்சமாகும்.

ஊரின்மீதும் பிள்ளைகள் மீதும் அன்பும் கரிசனையும் கொண்ட அதிபரும், ஆற்றல் மிக்க ஆசிரியர்களும் இப்பாடசாலையில் இருந்தமையால் பாடசாலைச் சூழலிலிருந்து மட்டுமன்றி தொலைவில் இருந்தும் பிள்ளைகள் இப்பாடசாலையை நாடிவரத் தொடங்கினர். இதனால் மாணவர்தொகை படிப்படியாக உயர்வடைந்தது. மாணவர்கள் தொகைக் கேற்ப கட்டடங்களை விரிவு செய்ய வேண்டிய நிலை ஏற்பட 1951ஆம் 52ஆம் ஆண்டுகளில் இரண்டு நிரந்தரக் கட்டிடங்களும் அதிபர் விடுதியும் அன்றைய எமது தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினர் திரு. A. L. தம்பியையா அவர்களின் முயற்சியால் அமைத்துக் கொடுக்கப்பட்டன. ஐம்பத்தைந்துகளின் நடுப்பகுதியில் திரு. காங்கேசு அவர்கள் வெளிமாவட்டத்திற்கு இடமாற்றம் பெற்றுச் செல்ல திரு. காரை-சுந்தரம்பிள்ளை அவர்கள் அதிபராக நியமிக்கப்பட்டார். சுறுசுறுப்பும் சமயப்பற்றும் சேவை மனப்பான்மையும் கொண்ட திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் திரு. காங்கேசு அவர்களின் எதிர்பார்ப்பை உணர்ந்தவராக பாடசாலையைத் திறம்பட நடாத்தி வந்தார்.

ஐந்து ஆண்டுகளின் பின்னர் திரு. காங்கேசு அவர்கள் மீண்டும் இப் பாடசாலைக்கு அதிபராக இடமாற்றம் பெற்றுவந்தார். பாடசாலை வளர்ச்சியில் மீண்டும் வேகமேற்பட்டது. இக்காலத்தில் திரு. கணபதிப்பிள்ளை, திரு. ஐ. பேரம்பலம், திரு. சிவலோகநாதன், திருமதி.

இராசேஸ்வரி சிவலோகநாதன், திருமதி. முத்தையா, திருமதி. சி. மாணிக்கவாசகர் ஆகிய ஆசிரியர்கள் அதிபருக்குப் பக்கபலமாக விளங்கினர். இக்காலத்தில் திரு. ச. மாணிக்கவாசகர் 1968இல் உதவி ஆசிரியராக இங்கு இடமாற்றம் பெற்று வந்தார். பெற்றோர் தமது பிள்ளைகள் இப்பாடசாலையிலேயே இடைநிலை வகுப்புகளையும் கற்க வேண்டுமென்ற விருப்பங் கொண்டதால் படிப்படியாக தரங்கள் அதிகரிக்கப்பட்டு 1969 ஆம் ஆண்டில் தரம் 1 தொடக்கம் தரம் 8 வரையுள்ள கனிஷ்ட மகாவித்தியாலயமாக தரம் உயர்த்தப்பட்டது. இதனைத் தொடர்ந்து வந்த ஆண்டுகளில் வேலணை மத்திய கல்லூரியில் இடப்பற்றாக்குறை ஏற்பட்டமையும், இப்பாடசாலையைச் சூழவுள்ள பிள்ளைகள் இப் பாடசாலை யிலேயே உயர்வகுப்புகளிலும் கல்விகற்க வேண்டுமென்ற பெற்றோரின் பெருவிருப்புக் காரணமாகவும் பெற்றோர் ஆசிரியர் சங்கம் இப்பாடசாலையை மகாவித்தியாலயமாகத் தரம் உயர்த்த வேண்டுமென கல்வித்திணைக் களத்திடமும் அந்நாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. வ. நவரத்தினம் அவர்களிடமும் கோரிக்கை விடுத்தனர். இவ்விண்ணப்பம் நியாயமானதும் காலத்தின் தேவை என்பதையும் ஏற்றுக் கொண்டார் திரு. வ. நவரத்தினம் அவர்கள், இவரது முயற்சியினால் 1970 ஆம் ஆண்டில் இப் பாடசாலை (Propose Maha Vidyalaya) புறப்போஸ்ட் மகா வித்தியாலயமாகத் தரம் உயர்த்தப்பட்டது.

இக்காலத்தில் அதிபராக கடமை யாற்றிய திரு. க. காங்கேசு அவர்கள் தாமாக இடமாற்றம் பெற்று, வேலணை சைவப் பிரகாச வித்தியாசாலைக்கு தலைமை ஆசிரியராகச் செல்ல, புன்னாலைக் கட்டுவனைச் சேர்ந்த சண்முகம்பிள்ளை அவர்கள் அதிபராக நியமிக்கப்பட்டார். இவருடன் காரை நகரைச் சேர்ந்த திரு. பாலசிங்கம் அவர்கள் உதவி ஆசிரியராக நியமிக்கப்பட்டார். அதிபர் சண்முகம்பிள்ளை அவர்கள், தமது சேவைக்காலத்தில் பாடசாலைத் தர மேம்பாட்டுக்காக, தன்னாலான முழு முயற்சிகளையும் மேற்கொண்டு ஊர்மக்களின் நன்மதிப்பைப் பெற்றார். இக் காலத்தில் இங்கு 9 ஆம், 10 ஆம் தரங்கள் ஆரம்பிக்கப்பட்டன. அவரைத் தொடர்ந்து திரு. பாலசிங்கம் அவர்கள் அதிபராக பதவி உயர்த்தப்பட்டு அதிபர் விடுதியிலேயே தங்கி தமது முழு நேரத்தையும் பாடசாலைக்கு சேவை செய்வதற்கே செலவிட்டார்.

அவரைத் தொடர்ந்து, அதிபர் பதவியை திரு. க. சிவராமலிங்கம் அவர்கள் பொறுப்பேற்றுக் கொண்டார். இவர் சிறந்த நிர்வாகியும், திறமைமிக்க அதிபருமாவார்.

தொடர்ந்து முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. வ. நவரத்தினம் அவர்களினதும், பெற்றோர் ஆசிரியர்சங்க பிரதிநிதியான ஆசிரியர் திரு. ச. மாணிக்கவாசகர்

அவர்களினதும், அயராத பெரு முயற்சி காரணமாக பல முட்டுக்கட்டைகளையும், துணிச்சலுடனும், மதிநுட்பத்துடனும், வெற்றிகரமாகக் கடந்து; முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. வ. நவரத்தினம் அவர்களின் தீவிர செயற் பாட்டினால் 1972 இல் இப்பாடசாலை வேலணை கிழக்கு மகாவித்தியாலயமாகத் தரம் உயர்த்தப்பட்டது.

அதிபர் திரு. க. சிவராமலிங்கம் அவர்கள் பெற்றோர் ஆசிரியர்களின் ஒத்துழைப்புடன் பாடசாலையைப் பல துறைகளிலும் வளர்ச்சிகாணச் செய்தார். அக்காலத்தில் இவருடன் ஆசிரியர் திரு. ச. மாணிக்க வாசகர் பணியாற்றியமை இவருக்குக் கிடைத்த பெரும் வாய்ப்பாகும். அதிபர் செய்ய நினைப்பவற்றை, திரு. மாணிக்கவாசகர் செயற்படுத்திவிடுவார். இவ்வாறு பாடசாலை வேகமாக வளர்ச்சி பெற, அதன் தேவைகளை நிவர்த்தி செய்யும் பொருட்டு விஞ்ஞான கூடம், நூலகம் என்பன அமைக்கப்பட்டன.

தேவையான தளபாடங்கள், கருவி உபகரணங்கள், இரசாயனங்கள், நூல்கள் போன்ற அத்தியாவசியப் பொருட்களை திணைக்களத்திடமும் வேறு வழிகளிலும் பெற்றுக் கொடுப்பதில் திரு. மாணிக்கவாசகர் அவர்கள் முன்நின்று உழைத்தமையால் 1974 ஆம் ஆண்டளவில் சகல வளங்களையும் கொண்ட பாடசாலை யாக 500க்கு மேற்பட்ட மாணவர்களுடன் விளங்கியது. பொதுப் பரீட்சைப் பெறுபேறுகளும் திருப்திகரமாகக் காணப்பட்டது.

இக்காலப்பகுதியில் திரு. எ. நல்லையா, திரு. பா. நாகரத்தினம், திரு. மு. சண்முகசுந்தரம், திரு. செ. நடராசா, திருமதி சுசீலா சிவராசா, திருமதி சிவமலர், செல்வி. திலகவதி தர்மலிங்கம் (திருமதி. பாலகுமார்), திருமதி நல்லையா, செல்வி. சிவபாதசுந்தரம், ஆகியோர் பாடசாலைக்கு நியமிக்கப்பட்டு சிறப்பாக சேவையாற்றி பாடசாலை வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றினர்.

பாடசாலை பௌதிக வளவிருத்தியில் பாடசாலை அபிவிருத்தி சங்கமும், பழைய மாணவர் சங்கமும் கணிசமான பங்களிப்பை நல்கி வருகின்றன. பாடசாலைச் சுற்று மதில் அமைத்தமை, பாடசாலை வளவினுள் கிணறு வெட்டி கட்டியமை, சாட்டியில் இருந்து குழாய் மூலம் குடிநீர் வழங்க ஒழுங்குகள் மேற்கொண்டதோடு குடிநீரைச் சேமித்து வைப்பதற்குத் தொட்டிகள் அமைத்துக் கொடுத்தமை ஆகியவை அவ்வமைப்புகளால் மேல்கொள்ளப்பட்ட குறிப்பிடத்தக்க சேவைகளாகும்.

இப்பாடசாலையில் வகுப்பறைக் கற்றல், மட்டுமன்றி இணைப்பாடவிதான செயற்பாடுகளிலும் மாணவர்கள் ஈடுபடுத்தப்பட்டு மாணவர் ஆற்றல் வளர்ச்சிக்கு வழிசெய்து கொடுக்கப்பட்டு வருகின்றது. வருடந்தோறும் சமய

விழாக்கள், கல்வி சுற்றுலாக்கள், இல்ல விளையாட்டுப் போட்டிகள் நடைபெறுவதுடன் மாணவர்கள் கோட்ட, வலய, மாவட்ட மட்டத்தில் நடைபெறும் அனைத்துப் போட்டிகளிலும் பங்குபற்றி தமது திறமைகளை வெளிப்படுத்தி வருகின்றனர்.

பாடசாலையின் சிரேஷ்ட விஞ்ஞான ஆசிரியர் திரு. அருணகிரிநாதன், கணித ஆசிரியர் திரு. சிவசுந்தரம் ஆகியோரால் விஞ்ஞான மன்றம் அமைக்கப்பட்டு இயங்கி வருகின்றது. அத்துடன் இந்துமன்றம், இலக்கிய மன்றம், விவசாயக் கழகம் ஆகியனவும் ஆரம்பிக்கப்பட்டு அவற்றின் மூலம் ஆசிரியர்களின் வழிகாட்டலில் மாணவர் திறன் வளர்ச்சியும், ஆளுமை வளர்ச்சியும் விருத்தி செய்யப்பட்டன.

பின்தங்கிய மாணவர்களுக்கு பிரத்தியேக விசேட வகுப்புகள் நடாத்தி அவர்கள் கற்றல் மேம்பாட்டிற்கும் வழிசெய்யப்பட்டன.

ஐந்தாம் தர புலமைப்பரிசில் பரீட்சை, க.பொ.த. சாதாரணதர பரீட்சைக்குத் தோற்றும் மாணவர்களுக்கு மேலதிக வகுப்புகள் நடாத்தி அவர்கள் சிறந்த பெறுபேறுகளைப் பெற ஆசிரியர்கள் மேற்கொண்ட முயற்சிகள் பாராட்டத்தக்கன மட்டுமன்றி, சிறந்த பலனையும் பெற்றுள்ளன.

எமது பாடசாலையில் கற்றுத்தேறிய மாணவர்கள் யாழ்நகரின் மிகப் பிரபல்ய பாடசாலைகளில் இணைந்து கற்று பல்கலைக்கழகம் சென்று இன்று உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் உயர் பதவிகளை வகிக்கின்றனர்.

திரு. க. சிவராமலிங்கம் அவர்களைத் தொடர்ந்து திரு. ச. கைலாசபிள்ளை அவர்கள் அதிபராகக் கடமையேற்றார். இப்பாடசாலைச் சூழலில் பிறந்தவரான திரு. ச. கைலாசபிள்ளை அவர்களுக்கு இயல்பாகவே இப்பாடசாலையின்பால் உள்ள பற்றுக் காரணமாக ஓய்வு பெறும் வரை பாடசாலையை திறம்பட நிர்வகித்தது மட்டுமன்றி, மிகுந்த கரிசனையுடன் கற்பித்து மாணவர்களின் மேம்பாட்டிற்கு வழிவகுத்தார். அவரைத் தொடர்ந்து இவ்வூரைச் சேர்ந்த திரு. சோ. வடிவேல் அவர்கள் அதிபரானார். உயர்ந்த பண்பும், மிகுந்த தன்னடக்கமும் மிகையான அறிவாற்றலும் கொண்ட இவரது சேவையும் பாடசாலை வளர்ச்சியில் ஒரு மைல் கல்லாகும். அவரைத் தொடர்ந்து பாடசாலையின் பிரதி அதிபராக இருந்த திருமதி. சி. மாணிக்கவாசகர் அதிபராக நியமிக்கப்பட்டார். இவர் 1964 ஆம் ஆண்டு முதல் உதவியாசிரியராகவும், பிரதி அதிபராகவும், அதிபராகவும் தொடர்ச்சியாக 33 வருடம் சேவையாற்றி இப்பாடசாலையில் இருந்தே ஓய்வு பெற்றது மட்டுமன்றி இப்பாடசாலையின் பழைய மாணவியுமாவார். இப்பாடசாலைச் சூழலிலே பிறந்து வளர்ந்தவர் ஆகையால் பெற்றோர் மாணவர் குடும்பச் சூழலை நன்கு அறிந்திருந்தமையாலும், இயல்பாகவே கொண்டிருந்த ஊர்பற்று காரணமாகவும் மிகுந்த கரிசனையுடன் பாடசாலைக் கருமங்களை ஆற்றியமையால் பெற்றோரின் ஒத்துழைப்புப் குறைவின்றி கிடைக்க பாடசாலை பல துறைகளிலும் வளர்ச்சி கண்டது. இக்காலத்தில் ஏற்பட்ட உள்நாட்டுப் போர் காரணமாக எமது ஊரில் இருந்து மக்கள் இடம் பெயரவேண்டிய நிலையேற்பட்டதால், பாடசாலையும் இடம்பெயரவேண்டிய துர்ப்பாக்கிய நிலையேற்பட்டது. எனினும்

எமது மாணவர்களைச் சிதறவிடாது வேலணைக் கொத்தணிப்பாடசாலைகள் இணைந்து யாழ் வண்ணை வைத்தீஸ் வராக்கல்லூரியில் சிலகாலம் இயங்கியது. எனினும் எமது பாடசாலையின் தனித்துவத்தை இழக்க விரும்பாத அதிபர், ஆசிரியர்கள், பெற்றோர்கள் யாழ் மனோகரா படமாளிகைக்கு அருகில் இருந்த தனியார் கல்விநிலையத்திலும், மனோகரா படமாளிகைக் காணியில் கல்வித் திணைக்கள உதவியுடன் அமைக்கப்பட்ட தற்காலிக கொட்டகைகளிலும் பாடசாலையினை திருப்திகரமாக 1995 ஒக்டோபர் வரை நடத்தினர்.

இந்நெருக்கடியான காலகட்டத்தில் இப்பாடசாலையைச் சிறப்புற இயங்கவைக்க ஆசிரியப் பெருமக்களாகிய திரு. பொ. சிவலிங்கம், திரு. பொ. சிவசுந்தரம், திரு. த. அருணகிரிநாதன், திருமதி. குமாரதாசன், திருமதி. சிவனடியான், செல்வி. லோகநாயகி, செல்வி. மலர்விழி, செல்வி. சிவஞானி ஆகியோர் தம் சிரமம் பாராது வழங்கிய ஒத்துழைப்பு பாராட்டத்தக்கது.

பின்னர் 30 - 10 - 95 இல் இடம்பெற்ற சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பாரிய மக்கள் இடம்பெயர்வு காரணமாக வலிகாமத்தில் இருந்த மக்கள் தென்மராட்சிக்கும், நாட்டின் பிற பாகங்களுக்கும் செல்லவும் நாம் தளர்ச்சியடையாது மீசாலை வீரசிங்கம் மகாவித்தியாலயத்தில் எமது ஆசிரியர்களையும், தென்மராட்சிக்கு இடம் பெயர்ந்த மாணவர்களையும் திரட்டி பாடசாலையை ஓரளவுக்கு இயங்க வைத்தோம்.

பின்னர் 1996 சித்திரை மாத பிற்பகுதியில் மீண்டும் மக்கள் வலிகாமம், தீவுப்பகுதிகளுக்குத் திரும்பத் தொடங்க எமது பாடசாலை மீண்டும் அதன் சொந்த இடத்திற்கு கொண்டுவரப்பட்டு இயங்கி வருகின்றது. அதிபர் திருமதி. சி. மாணிக்கவாசகர் அவர்கள் ஓய்வு பெற சிரேஷ்ட ஆசிரியராகிய திரு. பொ. சிவலிங்கம் அவர்களிடம் பாடசாலை நிருவாகப் பொறுப்பு 1996 ஜூலை மாதம் ஒப்படைக்கப்பட்டது. அன்றிலிருந்து திரு. சிவலிங்கம் நிறைவேற்று அதிபராக கடமையாற்றி நெருக்கடிமிக்க இக்காலகட்டத்தில் பாடசாலையை பழைய நிலைக்கு கொண்டுவர பெருமுயற்சி செய்தார். திரு. சிவலிங்கம் அவர்களைத் தொடர்ந்து திரு. வி. சிவராசா நிறைவேற்று அதிபராகக் கடமை புரிந்தார். அவர் இடமாற்றம் பெற்றுச் செல்ல திரு. என் பத்மநாதன் அதிபராக நியமிக்கப்பட்டு பாடசாலையைத் திறம்பட நடாத்தி வருகின்றார். யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட இப்பிரதேச புனரமைப்புக்கு அரச, தொண்டர் நிறுவனங்களின் நிதியுதவி கிடைக்கப் பெறுவதனால் பாடசாலையின் பல்வேறு தேவைகள் நிறைவேற்றப்பட்டு பாடசாலை துரித கதியில் வளர்ச்சியடைந்து வருகின்றது.

மாணவர்கள் கலைத்திட்ட, இணைக்கலைத்திட்ட செயற்பாடுகளில் ஆர்வத்துடன் பங்கு பற்றி கல்லூரிமட்ட பாடசாலைகளுக்கு இணையாக பலதுறைகளிலும் பிரகாசித்து வருகின்றனர்.

ஊக்கமும், விவேகமும், ஒழுக்கமும் நிறைந்த இவ்வூர் மாணவர்களின் உயர்ச்சிக்கு, பாடசாலை அருகே எழுந்தருளியிருக்கும் அன்னை முத்துமாரியின் அருட்கடாட்சம் துணை புரியட்டும்.

# வேலணை செட்டிபுலம்
# அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலை



வேலணை - 2

## பாடசாலைகள்

# வேலணை செட்டிபுலம் அரசினர் தமிழ் கலவன் பாடசாலை

திரு. பெ. விசுவலிங்கம்
பழைய மாணவன்

1940களில் தீவுப்பகுதிகளில் அரசாங்கப் பாடசாலைகள் நிறுவவேண்டுமென கோரிக்கை பல பகுதிகளில் எழத் தொடங்கின. இந்து, கிறிஸ்தவ சமய நிறுவனங்களால் எல்லா இடங்களிலும் பாடசாலைகள் நிறுவ முடியாமையாலும், அவர்களது பாடசாலைகள் மிகவும் வளம் குறைந்து இருந்ததும், பாடசாலை இயக்கத்திற்கு மக்களை எதிர்பார்த்து இருந்ததை அறிந்த மக்கள் அரசாங்க பாடசாலைகள் அமைக்கப்படின் பல நன்மைகள் கிட்டுமென உணர்ந்தனர். இப்பின்னணியிலேயே வேலணை மகாவித்தியாலயம், புங்குடுதீவு மகாவித்தியாலயம், மண்டைதீவு மகாவித்தியாலயம், செட்டிபுலம் அரசினர் கலவன் பாடசாலை என்பன அமையப் பெற்றன.

செட்டிபுலத்தில் மக்கள் மிகவும் நெருக்கமாக வாழ்ந்தனர். இக் கிராமத்து பிள்ளைகள் தங்களது ஆரம்ப கல்விக்கு வங்களாவடிக்குச் செல்லவேண்டியதாக இருந்தது. வெட்டுக்குளத்தை சிறு பிள்ளைகள் கடந்து செல்லவேண்டியதுடன் விருத்தியடையாத பாதை மூலம் வங்களாவடிக்கு போய்வர வேண்டியதாக விருந்தது. இதனால் பாடசாலை செல்லாத பிள்ளைகள் காணப்பட்டதுடன் வரவு ஒழுங்கின்மை, இடைவிலகல் மற்றும் பெண்கல்வி போன்ற பிரச்சனைகளால்

கிராமத்து பிள்ளைகளின் கல்வி பெரிதும் பாதிக்கப்படலாயின. இப்பின்னணியில் இக் கிராமத்தில் பாடசாலை ஒன்று அமைக்கவேண்டுமென்ற எண்ணக்கரு வலுப்பெற்றது.

1945 இல் திரு. வைரமுத்து ஆறுமுகம் அவர்களின் முயற்சியாலும் அன்றைய அரச சபை சபாநாயகர் சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமியின் ஆதரவில் இப்பாடசாலை அமைக்க அனுமதி கிடைக்கப்பெற்றது. ஐயனார் கோவிலுக்கு அருகாமையில் 15 பரப்புக்காணியை திரு. கணபதி செல்லமுத்து, திரு. வைரமுத்து ஆறுமுகம் ஆகிய இருவரும் பாடசாலை அமைக்க கொடுத்துதவினர். முதலில் தற்காலிக கொட்டகையாக அமைக்கப்பட்ட பாடசாலை, பின்னர் நிரந்தர கட்டடத்தை பெற்றது. இப்பாடசாலையின் முதல் அதிபராக திரு. சி. சீவரெத்தினம் அவர்கள் ஒரு வருடத்திற்கு கடமையாற்றினார். அப்பொழுது தரம் 1 தொடக்கம் தரம் 5 வரை வகுப்புகள் நடாத்தப்பட்டது. சராசரியாக 50 மாணவர்கள் கல்வி கற்று வந்தனர். திரு. சி. சீவரெத்தினத்திற்கு பின்னர் திரு. அருணாசலம், திரு.ச. கைலாசபிள்ளை, திரு. பொ. தவராசா, திரு. சி. தேவராசா, செல்வி. அம்பலப்பிள்ளை, செல்வி. சித்திரா குழந்தைவேலு, திரு. சி. சம்பந்தர், திரு. நடராசா, திரு. செ. இராசலிங்கம் ஆகியோர் முறையே அதிபர்களாகக் கடமையாற்றினர்.

1991 இல் திரு. இராசலிங்கம் அவர்கள் அதிபராகக் கடமையாற்றிக் கொண்டிருக்கும் வேளையில் 1991 ஒக்ரோபர் மாதத்தில் இலங்கை இராணுவத்தால் தீவக பிரதேசத்தில் இராணுவ நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டதால் பாடசாலை சமூகம் இடம்பெயர வேண்டியிருந்ததால் இப்பாடசாலை யாழ்ப்பாணத்தில் தற்காலிகமாக இயங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அவ் வேளையில் செல்வி. சி. யோகேஸ்வரி, செல்வி. ப. இந்திராணி ஆகியோர் உதவி ஆசிரியர்களாகக் கடமையாற்றினர்.

மாணவர்களின் எண்ணிக்கை படிப்படியாக அதிகரித்து கிட்டதட்ட 75 மாணவர்கள் கல்வி கற்றனர். அதிபர்கள் திரு. ச. கைலாசபிள்ளை திரு. செ. இராசலிங்கம், நா. கனகசபாபதி வரையிலான காலப்பகுதியில் தரம் 1 தொடக்கம் தரம் 7 வரையும் வகுப்பு நடாத்தப்பட்டது. 1996 ஏப்ரல் மாதத்தில் மக்கள் மீள குடியேற தொடங்கிய பின்னர் இக்கிராமத்தில் வாழும் பிள்ளைகள் கல்வித் தேவையை பூர்த்தி செய்வதற்கு பாடசாலை மீண்டும் இயங்க வேண்டிய தேவை ஏற்பட்டது. இந்தவகையில் புனர்வாழ்வு அமைச்சினால் ஒதுக்கப்பட்ட ரூபா. 300,000/= நிதி உதவியுடன் பாடசாலை அதிபர்

திரு. சின்னையா ச. சேவியர் அவர்களினால் புனர்நிர்மாணம் செய்யப்பட்டது. 02 - 0 1- 2001 அன்று வைபவரீதியாக தீவக வலய கல்வி பணிப்பாளர் திரு. ப. விக்னேஸ்வரன் அவர்கள் திறந்து வைத்தார். அவ்வேளையில் 40 மாணவர்கள் அனுமதி பெற்றனர். அதிபரும், ஒரு தொண்டர் ஆசிரியரும் கடமையாற்றத் தொடங்கினர். தற்போது அதிபரும் 2 நிரந்தர ஆசிரியரும் 2 தொண்டர் ஆசிரியரும் கடமையாற்று கின்றார்கள்.

பாடசாலையில் அடிப்படை தேவைகள் நிறைவேறும் வகையில் முன்னாள் அதிபர் அமரர் இராசலிங்கம் அவர்களின் ஞாபகார்த்தமாக அவரின் குடும்பத்தினர் பாடசாலை கற்றல் உபகரணங்கள், புத்தகங்கள், மணிக்கூடு, பாத்திரங்கள் போன்றவற்றை அன்பளிப்பாக அளித்து வருவதுடன் பாடசாலைக்கான முட்கம்பி வேலிகளையும் அமைத்து தந்துள்ளனர். இந்தவகையில் பாடசாலைக் காக ரூபா. 15,000/= வரை செலவு செய்துள்ளனர். மேலும் உதவி செய்ய ஆயத்தமாக உள்ளனர். அத்துடன் பழையமாணவர்கள் நலன் விரும்பிகள், பெற்றோர்கள் கல்வித் திணைக்களத்தினரும் அரசசார்பற்ற நிறுவனத்தினரும் பல உதவிகளைச் செய்து வருவதால் கற்றல் கற்பித்தல் செயற்பாடு சிறப்பாக நடைபெற்று வருகிறது.



## பாடசாலைகள்

# வேலணை தெற்கு ஐயனார் வித்தியாசாலை துறையூர்

திருமதி. சிந்தாமணி பழனி - அதிபர்

வேலணைத் துறையூர், மக்கள் செறிவாக வாழும் குடியிருப்பாக இருந்தது. இக் கிராமத்துப் பிள்ளைகள் வங்களாவடியில் அமைந்துள்ள சரஸ்வதி வித்தியாசாலை அல்லது அமெரிக்கன் மிஷன் பாடசாலைக்குக் கல்வி கற்கச் செல்ல வேண்டியவர்களாக இருந்தார்கள். இதனால் சிறு வயதுப் பிள்ளைகள் 2 km தூரத்துக்கு மேல் செல்ல வேண்டியதுடன் நாளுக்கு 5 km தூரம் நடக்க வேண்டியதாக இருந்தது. இதனால் துறையூர்ப் பிள்ளைகள் பாடசாலை செல்லாமல் விடுதல், வகுப்பு ஒழுங்கீனம், இடைவிலகல் போன்றன காணப்பட்டதை உணர்ந்த கிராமத்துப் பெரியோர்கள் இக் கிராமத்தில் ஒரு பாடசாலை அமையின், கிராமத்துக் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும் எனச் சிந்தித்தனர். பெண் பிள்ளைகளின் கல்வியும் பாடசாலை இல்லாததால் பெரிதும் பின்னடைந்து காணப்பட்டது. மேலும் இக்கிராமத்து மக்கள் சைவம், தமிழில் மிகுந்த பற்றுக்கொண்டவர்களாக இருந்ததால் இந்துப் பாடசாலையே இங்கு அமைய வேண்டுமென விரும்பினர். பின்னடியில் இந்துபோட் இராஜரத்தினத்தின் உதவியை நாடுவதெனத் தீர்மானிக்க ப்பட்டது.

இப் பாடசாலை அமைத்தலின் ஆரம்ப முயற்சிகள் 1947 இல் எடுக்கப்பட்டன. இம் முயற்சியில் திரு. ஐயம்பிள்ளை கார்த்திகேசு, திரு. ஐயம்பிள்ளை நாகநாதன் வேலணை கிழக்கைச் சேர்ந்த ஆசிரியர்

# வேலணை தெற்கு ஐயனார் வித்தியாசாலை



வேலணை - 6

சிதம்பரப்பிள்ளை இராஜரத்தினம் போன்றோர் முன்னின்று உழைக்கலானார்கள். பாடசாலையின் பெயரை ஐயனார் வித்தியாலயம் என அழைப்ப தீர்மானித்தார்கள். 1948 இல் இப் பாடசாலைக்கென காணி பெறப்பட்டது. இக் காணியை ஐயம்பிள்ளை கார்த்திகேசு அவர்கள் நன்கொடையாகக் கொடுத்தார். இதன் பின்னர் இது இந்துபோட் பாடசாலையாக விருத்தி பெறலாயிற்று. பாடசாலை ஆரம்பிக்கப்பட்ட போது தரம் 1 தொடக்கம் தரம் 5 வரை வகுப்புகள் இடம்பெற்றன. முதன் முதலில் 60 மாணவர்களையும் 3 ஆசிரியர்களையும் கொண்டு இயங்கியது. முதன் முதலில் இங்கு கற்பித்த ஆசிரியர்கள், திரு. ஐயம்பிள்ளை நாகநாதன் அதிபராகவும், திருமதி. நா. தெய்வானைப்பிள்ளை, திருமதி. இ. உருக்குமணி என்போர் உதவி ஆசிரியர்களாகவும் கடமையாற்றினர். பாடசாலை படிப்படியாக முன்னேறத் தொடங்கியது. பிற பாடசாலைகளுக்குச் சென்ற கிராமத்துப் பிள்ளைகள் இப் பாடசாலையில் சேரத் தொடங்கினார்கள். மாணவர் எண்ணிக்கை அதிகரிக்க ஆசிரியர் வளமும் அதிகரிக்கலாயிற்று.

1960 இல் அரசாங்கம் பாடசாலைகளைப் பொறுப்பேற்றதால் இப்பாடசாலையும் அரசாங்கப் பாடசாலையாகியது. ஆரம்பத்தில் தரம் 5 வரை இருந்த வகுப்புகள் பின்னர் தரம் 8 வரை கூட்டப்பட்டது. இப்பாடசாலையில் கல்விகற்ற மாணவர்கள் பல்வேறு துறைகளில் முன்னிற்பதை இன்று காணமுடிகிறது. பாடசாலையில் மாணவர்களுக்கு கல்வியுடன் பல்வேறு துறைகளில் பயிற்சி கொடுக்கப்பட்டன. மேலும் இவ்வூரில் அமைந்துள்ள ஐயனார் கோயில் திருவிழாக் காலங்களில் இப்பாடசாலை மாணவர்கள் தேவாரம், திருவாசகம் ஓதுதல் மற்றும் சமயப் பணிகளைச் செய்து வருவது அன்றிலிருந்து இன்றுவரை காணப்படும் முக்கிய நிகழ்வாக இருந்து வருகின்றது.

**அதிபர்கள் :**

இப்பாடசாலையில் கடமையாற்றிய அதிபர்கள் ஒவ்வொருவரும் தம்மாலான பணிகளைச் செய்துள்ளனர். இவர்களுள் திரு. ஐயம்பிள்ளை கார்த்திகேசு முக்கிய இடத்தைப் பெறுகின்றார். 1967 இல் இவர் அதிபராகப் பொறுப்பேற்று பல சிறந்த பணிகளைச் செய்துள்ளார். இவர் இக்கிராமத்தைச் சேர்ந்தவர் மாத்திரமல்லாது இவர் கொடுத்த காணியிலேயே இப்பாடசாலை அமைந்திருந்ததும், இவரது குடும்பத்தார் இப்பாடசாலைக்குச் செய்த உதவிகளும் கவனிக்கத்தக்கது.

இப் பின்புலத்தில் இப்பாடசாலையை வளர்க்கப் பெரும்பணியாற்றினர்.

1972 இல் திரு. நா. சிவகுரு பாடசாலைத் தலைமை ஆசிரியராகப் பதவியேற்றார். இவரது காலத்தில் மீண்டும் ஆரம்ப பாடசாலையாக மாற்றப்பட்டது. இப்பாடசாலையின் தலைமை ஆசிரியர்களாக கடமை புரிந்தவர்களில் திரு. ச.

கைலாசபிள்ளை, திரு. சி. அருளானந்த சிவம், திரு. பொ. நடராசா, திரு. செ. நடராசா என்போர் குறிப்பிடத் தக்கவர்களாவார்கள்.

திரு. பொ. நடராசா காலத்தில் பாடசாலை வகுப்பறைகளுடனான 3 கட்டிட வசதிகளைக் கொண்டதாகப் புனரமைக்கப்பட்டது. 1991 ஆம் ஆண்டு காலத்தில் நாட்டில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கைகளுக்கும் பிரச்சனைகளுக்கும் தளம்பல் நிலையில் இருந்த பாடசாலை 1991 இல மக்களோடு இடம்பெயர்வு பெற்று யாழ் பாரதி வித்தியாலயத்தில் வேலணை ஆத்திசூடி வித்தியாலயத்துடன் இணைந்து இயங்கி வந்தது. 1997 இல் வேலணை மக்கள் மீளக்குடியமர்வின் போது ஐயனார் வித்தியாசாலை அமைந்த இடம் இராணுவ முகாமாகக் காணப்பட்டது. எனவே பாடசாலை வேலணை மக்களின் ஒத்துழைப்பினால் தற்காலிகமாக வேலணைச் சர்வோதய வித்தியாசாலையில் இயங்கி வந்தது. இவ்வேளையில் திருமதி. சிந்தாமணி பழனி அவர்கள் பாடசாலையின் அதிபராக நியமிக்கப்பட்டார். அவ்வூர் மகள் என்ற வகையில் அவரின் முயற்சி மகத்தானது. பாடசாலை ஆரம்பித்த இடத்தில் பாடசாலை இயங்குவதற்காக அவரும் அவரது கணவர் அமரர் பழனியும் அவ்வூர் மக்களும் செய்த முயற்சியின் பயனாக 2000 ஆம் ஆண்டு ஐயனார் வித்தியாசாலை தன் சொந்த மண்ணில் நிமிர்ந்து நின்றது. பாடசாலை புனரமைக்கப்பட்டு வருகிறது. எதிர்காலத்தில் பாடசாலை வளம் பல பெற்று வளர்ச்சி பெற வாய்ப்புக்கள் உண்டு என்பதில் ஐயம் இல்லை.

**அதிபர் வரிசையில் ..........................**

| | | |
|---|---|---|
| 1948 - 67 | - | திரு. ஐயம்பிள்ளை நாகநாதன் |
| 1967 - 70 | - | திரு. ஐயம்பிள்ளை கார்த்திகேசு |
| 1970 - 72 | - | திரு. ஐயம்பிள்ளை நாகநாதன் |
| 1972 - 74 | - | திரு. த. சிவகுரு |
| 1974 - 77 | - | திரு. ச. கைலாசபிள்ளை |
| 1977 - 77 | - | திரு. சி. அருளானந்தசிவம் |
| 1977 - 84 | - | திரு. பொ. நடராசா |
| 1984 - 95 | - | திரு. செ. நடராசா |
| 1999 - இன்றுவரை | - | திருமதி. சிந்தாமணி பழனி |

**ஆசிரியர்கள் வரிசையில் ..........................**

திரு. க. திருமேனி
திருமதி. உ. இராசரட்ணம்
திருமதி. தெ. கார்த்திகேசு
திரு. இ. பாலச்சந்திரன்
திரு. நா. முத்தையா
திருமதி. க. வேலுப்பிள்ளை
திரு. இ. இராமச்சந்திரன்
திருமதி. இ. துரைசிங்கம்
திரு. சி. சிவகாமி
திருமதி. பு. சேனாதிராஜா
திரு. பொ. கனகரட்ணம்
திரு. பொ. சிவபாதசுந்தரம்
திரு. சி. அருளானந்தசிவம்
செல்வி. ப. முத்தையா
திருமதி. ச. வினாசித்தம்பி
திரு. கா. குமாரரத்தினம்

திரு. எம். ஐ. ஏ. லத்தீப்
திரு. ப. அ. அ. தவரட்ணராசா
திரு. ஆ. குமரகுருபன்
திரு. சி. கணபதிப்பிள்ளை
திரு. சி. ஞானப்பிரகாசம்
திரு. சு. பசுபதிப்பிள்ளை
திரு. ஏ. சி. எஸ். ஹமீட்
திரு. A. M. சண்முகசுந்தரம்
திரு. ச. இரத்தினசிங்கம்
திரு. G. திருக்கேதீஸ்வரன்
திருமதி. V. சிவசுப்பிரமணியம்
செல்வி. S. ஸ்ரீவாணி
செல்வி. அ. தெ. சிறியபுஷ்பம்
செல்வி. அ. மைதிலி
செல்வி. இ. ஆதிரை
திருமதி. சி. லோகேஸ்வரி
திருமதி. ம. செல்வநாயகம்
திருமதி. வி. சுவர்ணா
திருமதி. T. D. அல்பிரட்
செல்வி. ந. புவனேஸ்வரி
செல்வி. ந. மணிமொழி (Part time English)

## தொண்டர்கள் வரிசையில் ......................

செல்வி. இ. கடம்பவனவாசினி
செல்வி. க. சிவசக்தி
செல்வி. இ. வனஜா
செல்வி. சி. விஜயராணி
திருமதி. குபேந்திரதாசன் இரத்தினராணி
திருமதி. விஜயகுமாரி சிவகுமார்



# பாடசாலைகள்

## வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலை

திரு. பொ. மகாலிங்கம் - அதிபர்

**சோ**ளாவத்தை, மயிலப்புலம் ஆகிய குக் கிராமங்களையும் பள்ளம்புலத்தின் ஒரு பகுதியையும் உள்ளடக்கிய பிரதேசமே வேலணை வடக்கு என எல்லைப்படுத்தப் பட்டுள்ளது. இப்பகுதி மக்கள் செறிவு கூடியது. எனினும் இப்பிரதேசத்தில் நீண்டகாலமாக ஒரு ஆரம்பப் பாடசாலையேனும் இருக்கவில்லை.

இப்பகுதியைச் சேர்ந்த பிள்ளைகள் ஆரம்பக் கல்வியைப் பெறுவதற்குக் கூட சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலை, வேலணை மேற்கு சைவப்பிரகாச வித்தியாசாலை, வேலணை சரஸ்வதி வித்தியாசாலை ஆகியவற்றில் ஒன்றிற்கே செல்ல வேண்டியிருந்தது. இப் பாடசாலைகள் இப் பிரதேசத்திலிருந்து சராசரி 3 ½ கிலோமீற்றர் தூரத்தில் அமைந்திருந்தமையாலும், சீரான வீதிகளோ போக்குவரத்து வசதிகளோ இல்லாமை யாலும் பிள்ளைகளைப் பாடசாலைக்கு அனுப்புவதில் பெற்றோர் பெரும் சிரமங்களை எதிர்நோக்கினர். கணிசமான பிள்ளைகள் உரிய வயதில் பாடசாலைக் கல்வியை ஆரம்பிக்க முடியாத நிலையிலும் சில பிள்ளைகள் அறவே பாடசாலை செல்லாதும் இருந்தனர்.

இதனால் இப்பிரதேசத்தில் ஒரு ஆரம்பப்பாடசாலை நிறுவ இப்பகுதி மக்கள் காலத்துக்கு காலம் முயற்சிகள் மேற்கொண்ட போதும் அவை ஒன்றும்

# வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலை



செயலுருப் பெறவில்லை. இம் முயற்சியில் இப்பிரதேசத்தில் பிறந்தவரும் கந்தர் மடத்தில் வசித்தவருமாகிய ஆசிரியர் திரு. சி. சதாசிவம்பிள்ளை அதீத அக்கறை காட்டி வந்தார்.

1951ஆம் ஆண்டளவில் இக் கிராமத்தவரான வர்த்தகர் திரு. இ. கைலாசபிள்ளை இக்கிராமத்தில் எப்படியாயினும் ஒரு பாடசாலையை நிறுவி விடவேண்டும் என்ற திடசங்கற்பத்துடன் தமது அயலவர்களான திரு. ச. தாமோதரம் பிள்ளை, திரு. க. சி. மயில்வாகனம், திரு. ச. இராசையா ஆகியோரையும் தம்முடன் இணைத்து ஒரு குழுவாக திரு. சி. சதாசிவம்பிள்ளை அவர்களின் உதவியுடன் சைவ வித்தியா விருத்திச் சங்க முகாமையாளர் திரு. இராசரத்தினம் அவர்களை அணுகி வேலணை வடக்கில் சைவ வித்தியா விருத்திச் சங்க முகாமையின் கீழ் ஒரு பாடசாலை நிறுவ வேண்டுமென வேண்டுகோள் விடுத்தனர். அவர்களின் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டு பாடசாலை அமைக்கும் பணிகள் ஆரம்பமாயின.

1952 ஆம் ஆண்டு தை மாதம் தைப்பூசத் திருநாளில் தற்போது பாடசாலை அமைந்துள்ள அதே காணியில் தற்காலிக கொட்டகையில் வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலை என நாமம் சூட்டப்பட்டு, திரு. சி. சதாசிவம்பிள்ளை தலைமையில் சைவ வித்தியா விருத்திச்சங்க முகாமையாளர் திரு. இராசரத்தினம் அவர்களால் பாடசாலை ஆரம்பித்து வைக்கப்பட்டது. ஆரம்பத்தில் குறைந்த மாணவர்களுடன் பாலர் கீழ்ப்பிரிவு தொடக்கம் நான்காம் தரம் வரை வகுப்புகள் நடத்தப்பட்டன. பாடசாலையின் அதிபராக கோப்பாயைச் சேர்ந்த திரு. வல்லிபுரம் அவர்களும் ஆசிரியராக திரு. இராசரத்தினம் அவர்களும் செல்வி. யோகம்மா ஆறுமுகம் அவர்களும் நியமிக்கப்பட்டு இவ்வாசிரியர் களின் கடின உழைப்பினால் கற்பித்தல் செயற்பாடுகள் ஆரம்பம் முதலே மிகச் சிறப்பாக நடைபெற்றன. வெளியூர் ஆசிரியர்களான திரு. வல்லிபுரம், திரு. இராசரத்தினம் ஆகியோர் தங்குவதற்கு இவ்வூரைச் சேர்ந்த ஆசிரியரும், சமூக சேவகருமான திரு. ஐ. பொன்னையா தமது வீட்டில் இடம் கொடுத்து உதவினார். இக்காலத்தில் ஆசிரியர் பற்றாக்குறையாக இருந்தமையால் அயலவரும் திரு. இ. கைலாசபிள்ளையின் உறவினருமான திருமதி. பராசக்தி இராசகோபால் தொண்டராசிரியராக சிலகாலம் பணிபுரிந்து பாடசாலைச் செயற்பாடுகளுக்கு உதவினார். ஒருவருடம் பாடசாலை சிறப்பாக நடைபெற்றது. இக்காலத்தில் பாடசாலைக்கான நிரந்தரக் கட்டடமும் கட்டப்பட்டது.

1953 ஆம் ஆண்டு திரு. வல்லிபுரம், திரு. இராசரத்தினம் ஆகியோர் இடமாற்றம் பெற்றுச்செல்ல, நயினா தீவைச் சேர்ந்த

திரு. ஓ. தில்லையம்பலம் அதிபராகவும், பருத்தித்துறையைச் சேர்ந்த பண்டிதர் கனகசபாபதி, சரசாலையைச் சேர்ந்த ஆறுமுகம் ஆகியோர் ஆசிரியர்களாகவும் நியமிக்கப்பட்டனர். இவர்களும் சிலகாலம் ஆசிரியர் திரு. ஐ. பொன்னையா அவர்களின் வீட்டிலேயே தங்கி இருந்தனர். பாடசாலைக் கட்டடம் பூர்த்தியானதும் பாடசாலையில் தங்குவதற்கான வசதிகளை ஏற்படுத்தி அங்கு தங்கியிருந்து கற்பித்து வந்தனர். திரு. தில்லையம்பலம் சிறந்த அதிபர். பண்டிதர் கனகசபாபதி துறைபோந்த ஆசிரியர். பண்டிதரின் கற்பித்தல் திறமை பற்றி அறிந்து அயற்கிராமங்களான சரவணை, பள்ளம்புலம், நாவலடிப்புலம், இலந்தைவனம் ஆகிய பகுதிகளில் இருந்தும் பிள்ளைகள் ஆத்திசூடி வித்தியாசாலையை நாடி வந்தனர். இதனால் மாணவர் தொகையும் அதிகரித்தது.

1953 ஆம் ஆண்டு ஐந்து மாணவர்கள் ஐந்தாம் தர N. P. T. A பரீட்சைக்குத் தோற்றி அனைவரும் சித்தியடைந்தனர். அவர்களில் மூவர் இடைநிலைக் கல்வியைத் தொடர்ந்தனர். அம்மூவரில் செல்வி. மகேஸ்வரி சோமசுந்தரம் பேராதனைப் பல்கலைக்கழகம் சென்று பட்டதாரியானார். இப்பாடசாலையில் ஆரம்பக்கல்வி கற்றவர்களில் முதலில் பட்டப்படிப்பை நிறைவு செய்த பெருமை அவரையே சாரும்.

1954 ஆம் ஆண்டில் திரு. ஆறுமுகம் இடமாற்றம் பெற்றுச் செல்ல நவாலியூரைச் சேர்ந்த திரு. அரியரெத்தினம், புங்குடுதீவைச் சேர்ந்த திரு. மயில்வாகனம், இக்கிராமத்தைச் சேர்ந்த திருமதி. சரோஜினி படிகலிங்கம் ஆகியோர் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டனர். திரு. மயில்வாகனம் பயிற்றப்படாத ஆங்கில ஆசிரியர். மிகத் துடிப்பும் சேவை மனப்பான்மையும் மிக்க ஆசிரியர். அவர் ஆங்கிலம், சுகாதாரம் ஆகிய பாடங்களைப் போதித்தார். பண்டிதர் கனகசபாபதி கணிதம், சமயம், தமிழ், வரலாறு, புவியியல் ஆகிய பாடங்களை நான்காம், ஐந்தாம் தர மாணவர்களுக்கு கற்பித்ததுடன் மாணவர்களின் பன்முக ஆளுமை வளர்ச்சியில் இவ்விரு ஆசிரியர்களும் காட்டிய அக்கறை அவர்களிடம் கற்ற மாணவர்களால் மறக்க முடியாதவை. சமயவிழாக்கள், மாணவர் மன்றம், நிழற் பாராளுமன்றம் ஆகிய இணைப்பாடவிதான செயற்பாடு களில் மாணவர்களை ஈடுபடுத்திப் பயிற்று வித்ததோடு பாடசாலைகளுக்கிடையிலான போட்டிகளிலும் மாணவர்களைப் பயிற்றுவித்துப் பங்குபெறச் செய்து மாணவர்களின் திறமைகளை வெளிக் கொண்டுவரவும், தன்னம்பிக்கையை வளர்க்கவும் அவர்கள் ஆற்றிய பணி அளப்பரியது. ஊர்காவற்றுறைப் பாடசாலைப் பரிசோதகர் பிரிவில் ஆத்திசூடி வித்தியாசாலையின் பெயரைத் துலங்க வைத்த பெருமை அவர்களையே சாரும்.

1954 ஆம் ஆண்டு நடைபெற்ற ஐந்தாம் தர N. P. T. A பரீட்சை, புலமைப்பரிசில் பரீட்சை, கொழும்பு விவேகானந்த சபையால் நடாத்தப்பட்ட சைவசமய பாடப்பரீட்சை ஆகியவற்றில் இப்பாடசாலை மாணவர்கள் மிகச்சிறந்த பெறுபேறுகளைப் பெற்றனர்.

1955 ஆம் ஆண்டு திரு. தில்லையம்பலம், பண்டிதர் கனகசபாபதி ஆகியோர் இடமாற்றம் பெற்றும் திரு. மயில்வாகனம் உயர்கல்வி கற்க இந்தியாவிற்கும் சென்றுவிட புங்குடுதீவைச் சேர்ந்த திரு. கு. வி. செல்லத்துரை அதிபராகவும், பள்ளம்புலத்தை சேர்ந்த திரு. ச. மகாலிங்கம் ஆசிரியராகவும் நியமிக்கப்பட்டனர். திரு. கு. வி. செல்லத்துரை ஆளுமையும் அனுபவமும் மிக்க அதிபர். திரு. ச. மகாலிங்கம் திறமையும் சேவை மனப்பான்மையும் கொண்ட இளம் ஆசிரியர். இவர்களின் விசுவாசமான சேவையினால் பாடசாலைத் தரம் தொடர்ந்தும் பேணப்பட்டு வந்ததோடு திரு. ச. மகாலிங்கம் தனது முழு நேரத்தையும் பாடசாலை வளர்ச்சிக்காகவே அர்ப்பணித்து பணியாற்றி பாடசாலையைச் சீரான வளர்ச்சிப்பாதையில் இட்டுச் சென்றார்; இவ்வாசிரியரின் திறமை, சேவை மனப்பான்மை, தன்னடக்கம், நன்னடத்தை ஆகியன பெற்றோரை மிகவும் கவர்ந்திருந்தமையால் மாணவர் தொகை அதிகரித்ததோடு பரீட்சைப் பெறுபேறுகள், பாடசாலைகளுக்கிடையிலான போட்டிகளில் மாணவர் திறன் வெளிப்பாடு ஆகியன உயர்ந்த நிலையில் இருந்தன. திரு. மகாலிங்கம் எட்டு வருடங்களுக்கு மேல் இப்பாடசாலையில் நற்பணியாற்றியுள்ளார். ஆத்திசூடியின் வரலாற்றில் இவரது சேவைக்காலம் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியது.

திரு. கு. வி. செல்லத்துரையைத் தொடர்ந்து திரு. ஐ. பொன்னையா, பண்டிதர் அ. பொன்னுத்துரை, வித்துவான் இ. பொன்னையா, பண்டிதர் குமரேசையா, திரு. சி. இராசரத்தினம், திரு. கந்தையா, திரு. தி. சிவசாமி, திருமதி. இராசம்மா தேவராசா ஆகியோர் 1990 வரை அதிபர்களாக கடமையாற்றியுள்ளனர். திரு. ஐ. பொன்னையா அதிபராக கடமையாற்றிய காலத்தில் பாடசாலைக்கு கிணறு, மலசலகூடம், பாலர் வகுப்புகளுக்கு தனியான கட்டடம் ஆகிய வளங்கள் அதிகரிக்கப்பட்டன.

குறுகிய காலத்தில் பல சிறந்த அதிபர்களின் சேவையை இப்பாடசாலை பெற்றுக் கொண்டமை ஒரு சிறப்பு அம்சமாகும்.

இப்பாடசாலையின் வளர்ச்சிக்காக உழைத்த ஆசிரியர் பெருமக்களில் மேற்குறிப்பிட்டோருடன் திரு. சுப்பிரமணியம், திருமதி. கமலாதேவி பூபாலசிங்கம், திருமதி பூமணி, திருமதி. சௌந்தரம் விநாயகமூர்த்தி, திரு. இ. நாகராசா,

திரு. வி. கனகரத்தினம், செல்வி சௌந்தரநாயகி சோமசுந்தரம், செல்வி. யோகேஸ்வரி ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

1952 தொடக்கம் 1990 வரை நல்ல முறையில் இயங்கி பல சிறந்த மாணவர்களை உருவாக்கிய இப் பாடசாலை 1990 இல் இடம்பெற்ற பாரிய மக்கள் இடப்பெயர்வு காரணமாக தற்காலிகமாக மூடப்படவேண்டிய துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது.

தற்போது இப்பாடசாலைக்கு திருமதி. இந்திராணி சிவதாசன் அதிபராக நியமிக்கப்பட்டு மீண்டும் பாடசாலை சரஸ்வதி வித்தியாலயத்தில் ஒரு பிரிவாக இயங்கி வருகின்றது. வேலணை வடக்கில் மீள்குடியேற்றம் முழுமை பெற்றதும் இப்பாடசாலை பழைய இடத்திற்கு செல்லுமென எதிர்பார்க்கலாம்.

இப்பாடசாலையின் பழைய மாணவர்கள், உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும், டாக்டர்களாக, பொறியியலாளர்களாக, சட்டத்தரணிகளாக, கணக்காளர்களாக, நிருவாக சேவை உத்தியோகத்தர்களாக பாடசாலை அதிபர்களாக, தொழில் அதிபர்களாக, வர்த்தகர்களாக, ஆசிரியர் களாக புகழுடன் வாழ்கின்றனர்.



# வேலணை கிழக்கு மகா வித்தியாலயத்தில் நிகழ்ந்த திருக்குறள் மகாநாடு - 1962



பாராளுமன்ற உறுப்பினர்கள்
திரு. வே. அ. கந்தையா - திரு. செ. இராசதுரை
திரு. அ. செல்லையா- அதிபர், வருகை தந்த காட்சி



ஸ்ரீலஸ்ரீ இ. சோமசுந்தர ஐயர்
(கறுவல் ஐயர்)
சாட்டியில் அமைந்துள்ள
அவரின் சமாதி

# சமயப் பெரியோர்கள்

# ஸ்ரீலஸ்ரீ இ. சோமசுந்தர ஐயர் அவர்கள்

## (கறுவல் ஐயர்)

### (முதலியார் குல. சபாநாதன் அவர்கள் தெரிவித்த கருத்துக்களைக் கொண்டு திரு. ச. கைலாசபிள்ளை அவர்களால் இது எழுதப்பட்டது)

உள்ளொளி பெற்ற உத்தமராய் மேலான துறவியாய், ஞானியாய், அம்பாளின் சிறந்த பக்தராக விளங்கியவர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஐயர் அவர்கள்.

இவரைக் கறுவல் ஐயர் என்றாற்றான் பெரும்பாலானவர்களுக்குத் தெரியும். இராமநாத ஐயருக்கும் சீதையம்மாவுக்கும் திருமகனாய் வந்து உதித்த இவருக்குப் பெற்றோர் வைத்த பெயரைவிட ஊர் மக்கள் வைத்த பெயரே நிலைத்தது. வேலணையில் 19ஆம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் 1880இல் பிறந்து 1960இல் காலமானார்.

இவருடைய முன்னோர்கள் வேலணை பெருங்குளம் ஸ்ரீ முத்துமாரி அம்மன் கோவில் அர்ச்சகர்களாக இருந்தனர். இவரும் அவ்வாறே அர்ச்சகராக இருந்தார். அளவிறந்த பக்தி அம்பாள் மீது கொண்டிருந்தார். வருவாய் கருதி கோவிற் கருமங்களைச் செய்யாது அன்னையின் திருத்தொண்டினையே செய்து வந்தார்.

ஓர் உள்ளொளி பெற்ற உத்தமர் இவர். பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்தார். சிறந்த துறவிகளது வாழ்க்கைக்குச் சமானமாக இவரது பிந்திய வாழ்க்கை அமைந்திருந்தது. ஊர்மக்களால் வழங்கப்படும் உணவுப் பொருட்கள், டைகள் அனைத்தையும் தம்மைச் சூழ்ந்திருப்போருக்கே வழங்கி விடுவார். நாளை வேண்டும் என்ற உணர்வே அவரிடம் இருந்தது இல்லை.

பிற்காலத்தில் அடியார் கூட்டம் சூழ வாழ்ந்தார். சித்துக்கள் பல செய்யும் உள்ளொளி மிக்கவராக விளங்கி அடியார்க

ளின் தீராத நோய்களைத் தீர்த்து வைத்துள்ளார்.

தன்னைப் பெற்ற தாயாரைத் தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை என்னும் படியாகப் பேணிப் பாதுகாத்தார். அவர் தமது அன்னைக்குச் செய்த தொண்டுகளைக் கண்டு ஊரவர்கள் வியந்தனர்.

எண்பது ஆண்டுகள் வரை இப்பூவுலகில் வாழ்ந்த இம்மகான் புங்குடுதீவுக்குச் சென்ற சமயம் அன்னையின் அடிசேர்ந்து பிறவிப் பெருங்கடலை நீந்தினார். அவருடைய பூதவுடலை வேலணை மக்கள் புங்குடுதீவில் இருந்து சிறப்புகள் பலவற்றோடு வேலணைக்குக் கொண்டுவந்து சமாதி கட்டிப் பக்தி சிரத்தையுடன் அடக்கம் செய்தனர். ஓய்வுபெற்ற தபால் அதிபர் திரு. நா. சரவணமுத்து அவர்களும் ஆசிரியர் திரு. ச. மாணிக்கவாசகர் அவர்களும் முன்னின்று இதன்பொருட்டுச் செயலாற்றினர். திரு. வ. க. செல்லப்பா சுவாமியார் இச் சமாதியை மீண்டும் திருத்தி அமைத்தார். வேலணை சாட்டி என்னுமிடத்தில் இச்சமாதி உள்ளது.

"புதிய தேர்", - 1973



வேலணைச் சாட்டியில் அமைந்துள்ள
ஸ்ரீலஸ்ரீ இ. சோமசுந்தர ஐயர் அவர்களின் சமாதி





# சமயப் பெரியோர்கள்

## சிவ வளவில் ஒளிர்ந்த சிவகுரு

# திரு. ம. தம்பு உபாத்தியாயர்

### திரு. செ. அண்ணாதாசன் - கிராம சேவகர்

**சை**வமும் தமிழும் செழித்து வளர்ந்த கிராமம் வேலணை மேற்கு. இன்று அந்த செழிப்பு இல்லாவிடினும் அவற்றின் சுவடுகள் அற்றுப் போய்விடவில்லை. பாரம்பரியமும் வாழ்கின்றது. நாவலரின் நித்திய கரும விதிகளையும் சிவபூசைகளையும் அனுசரித்த கிராமம், கரணவாய் சைவக் குருக்கள்மார்தான் இங்குள்ளவர்களுக்கு சமய தீட்சை விசேட தீட்சை, நிர்வாண தீட்சை என்பவற்றை உபதேசித்து வருகின்றனர். பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை வீடுகுடிபுகல், திருமணம் என்பவற்றையும் கோயில் கொடியேற்றுதல் திருவிழாச் செய்தலையும் செய்துவந்தனர். இப்போது மரணக் கிரியை மட்டும் தான் செய்து வருகின்றனர்.

அயலில் உள்ள எல்லைக் கிராமம் சரவணை. சரவணையிற் பிறந்த மருதையனார் தம்பு எனப்படும் தம்பு உபாத்தியாயர் இங்கு நெல்லாவில் குக்கிராமத்தில் திருமணம் செய்து கொண்டார். இராசா உபாத்தியா யர் எனப்படும் செங்கமலையர் கனக சபாபதிப்பிள்ளை, நடராசா வித்தியா சாலை, நடராச அச்சியந்திரசாலை என்பவற்றின் நிறுவனரும் நிர்வாகியும் ஆவர். இவரின் சகோதரி மீனாட்சியைத் திருமணம் செய்துகொண்ட தம்பு உபாத்தியாயர், இராசா உபாத்தியாயர், இராசா உபாத்தியாயரின் மனைவி செல்லம்மாவின் தந்தை நாகலிங்க உபாத்தியாயர் எனப்படும் கார்த்திகேசு நமசிவாயப்பிள்ளை எனும் மூவரும் செய்யும் காலை சிவபூசை மணிகளின் ஒலி இப்பகுதி மக்களுக்கு திருப்பள்ளி எழுச்சி பாடும். இவர்களின் வேதிகைகளில் (பூசை மேடைகள்) பலவகை மலர்களும் நைவேத்தியங்களும் தூப

தீபங்கள், விபூதி சந்தனங்களும் அருகே இராசா உபாத்தியாயர் அமைத்த நடராசா வீதியால் செல்பவரின் மீது மணம் வீசும்.

தம்பு உபத்தியாயர் சிலகாலம் நாரந் தனையில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். 1865 இல் பிறந்த இவர் நீண்ட காலம் நயினா தீவில் மகாவித்துவான் பிரம்மஸ்ரீ. சி. கணேசையா அவர்களுடன் நயினை ஸ்ரீ நாகபூஷணி வித்தியாலயத்தில் பணி புரிந்தார். அங்கு பள்ளிப் பாடம் தவிர திரு முறை ஓதல், புராணபடனம் என்பவற் றைப் பயிற்றுவித்தார். நயினை ஸ்ரீநாக பூஷணி அம்பாள் ஆலயத்தில் கௌரவ கணக்குப் பிள்ளையாகவும் பணிபுரிந்தார்.

அவர் நயினாதீவில் ஆற்றிய பணிகளை இன்றும் வாழும் மூத்த தலைமுறையினர் மிகுந்த பக்தியுடன் குறிப்பிடுகின்றனர். மறைந்த உயர்திரு. ஐயாத்துரைக் குருக்கள் கைலாசநாதக் குருக்கள் அவர்கள், "தம்பு உபாத்தியாயரா"? அவர் இந்த மண்ணில் வாழ்ந்து படிப்பிக்க இந்த மண் எவ்வளவோ தவம் செய்திருக்க வேண்டும். அம்பாள் எனக்கும் அவரைக் குருவாகத் தந்தார். பிராமணருக்கு எவ்வளவு தமிழ் வேண் டுமோ அவ்வளவுக்கு மேலாக அதற்கும் மேலாக அவர் எனக்கும் படிப்பித்தார். அவரை நயினாதீவின் சமகாலத் தலை முறைகள் மறக்காது, பிற்காலம் மறக்கக் கூடாது" தம்மிடம் அவரைப்பற்றிக் கேட்ட தற்கு குருக்கள் இருகரமும் தலைமேற் குவித்து சொன்னவை அவை. திரு. இராமச் சந்திரா அவர்கள், ஐயாத்துரை சோதிடர், நயினாதீவுச் சாமியார் ஆகிய பலர் தம்பு உபாத்தியாயரைப் பக்தியுடன் நினைவு கூர்ந்தனர்.

ஓயாம லுனைவணங் காதவென் தலைதுறுகல்
உன்னடிய ரோடளவளாய்
உன் சரிதை கேளாதவென் செவிவெறுந்துளை
னைத் துதித் தேதழும்பு
பாயா விந்தநாத்தேய்கொழுப் பத்தியாற்
பாராதகண்கணந்தாம்
பரிவினா லுன்னடி அருச்சியாக் கைகள்மண்
பாவைகளு னாலயத்தை
ஆயாச மின்றுசூ ழாதகா லசைதறிகள்
அநவரத மாயாமமோடு
அமைசிவோ கம்பா னைக்குரித் தாகாத
ஆக்கையோ பாழ்முருக்காம்
தாயாக வெமையுதவு தையலே கைவிடிற்
றமியனுக் குதவுகில்லாய்
சரணநாகேசுவரி யே தயாநிதியே
சகம் போற்று பெருமாட்டியே.

கண்கண்ட தெய்வநீ யென்றுல கெலாமுதவ
காணிக்கை யாம்பணிகளாற்
கண்மறைப் புண்டதோ வெம்பணியி னார்பணக்
கவிப்பான் மறைந்ததுண்டோ
எண்கொண்ட பத்தலிரு தசக சிரமெலா
மெதிரின்மலை போற்குவிதலா
லெட்டிடும் பார்க்கமுடி யாமையாய் விட்டதோ
விறுமாப்பு வந்ததுண்டோ
பண்கொண்ட கீதவொலி யாற்செவிடு மானதோ
பரவையொலி மேலிட்டதோ
பாவியேன் படுதுயரமும்வேண்டு கோளுமுன்
பால் வெறும் பாக்கியனவோ
தண்கொண்ட முத்தமணி கங்கரீ யென்னிடைச்
சற்றுநோக் கருளுகில்லாய்
சரணநா கேசுவரி யேதயா நிதியே
சுகம்போற்று பெருமாட்டியே.

அம்மேநின் செய்கையென்னாரா ரெதையெதையாங்கிரத்தார்
தம்மா லூதசில் காணிக்கைக் கேதலை சாய்ந்தது போல்
இம்மா னுடருக் குதவியவ் வூழை யிக கின்றாய்
விம்மா வூழவொகு வேற்கோநா கம்மே விதிவலியே

விதிவலியை வெல்லுதற்கு வேறு மருந்துண்டா
நிதமும் சிவத்தையுட்கொணீங்கு - மதுவெனவெம்
முதாளர் கூறுகிறார் மூகனுக்கு நாசம்மே
ஏதமறுத் தப்பெருவாழ் வீ

உபாத்தியாயர் அவர்கள் எழுதிய திரு நாகதீபப் பதிகத்தில் ஒரு சிறு பகுதி இது.

வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் கோவிலில் நிர்வாக சபையில் உறுப்பினராக பணியாற்றிய போது இவர் கோவிலின் மூத்தநிர்வாகி திரு. சே. பொன்னையா அவர்களுடன் இணைந்து கருங்கல் திருப்பணிக்கு கோவிலுக்கு கருங்கல் வரவழைக்க பெரும் பணி ஆற்றியதை திரு. பொ. கேதாரநாதன் ஆசிரியர் நினைவுகூர்ந்தார்.

வேலைணையிலும் சரி நயினாதீவிலும் சரி புராணபடனம் பண்ணிசை தவிர சமூகப்பணிகளிலும் சரி தம்பு உபாத்தியாயர் மிகவும் சேவை ஆற்றியதோடு, அவர் நல்ல விவசாயி. சென்ற இடமெல்லாம் அவர்

மொழிப்புலமையினை இலக்கிய அரங்கு களில் காட்டியிருக்கிறார்.

நீத்தார் பாடல்கள் எனும் துறையிலும் அவர் ஈடுபட்டு வந்திருக்கிறார். இவரை மறவாது சைவத் தமிழறிஞர் இளைப்பாறிய கிராமத் தலைமைக்காரர் திரு. ச. மகா-லிங்கம் அவர்கள் குருபாதம் துணை எனத் தான் இவரையே விளித்துப் பாடுவதாக தெரிவித்தார்.

மெல்லிய உடல்வாகு, பொன்நிறம், உருத்திராட்ச மாலை அலங்காரங்கள், திரிபுண்டரமாகத் தரித்த விபூதி அலங்காரம், சந்தனத்திலகம், அதிகமாக சட்டை போடு வதில்லை. 1943இல் இறைவனடி சேரும் வரை அவரது தோற்றம் இதுவே.

இவரது குடும்ப வரலாறு பற்றி நோக் கின் மூத்தமகள் சவுந்தரநாயகி மணம் முடிக்கவில்லை. அடுத்த மகள் யோக நாயகியை வேலணை கிழக்கில் இன்றைய தமிழ் வைத்தியகாரரின் முற்சந்ததியின் குருவும் விஷக்கடி வைத்தியர்களின் நெருங் கிய உறவினரும் மூதாதையுமான பரியாரி சிற்றம்பலத்தாரின் பேரன் செல்லையா உபாத்தியாயருக்கு மணம் செய்வித்தார். சச்சிதானந்தன் (அண்ணாதாசன்) என்ற பேரனையும் (தம்பு) தமிழன்பன் என்ற பூட்டனையும் சண்முகப்பிரியா என்ற பூட்டியையும் காண அவர் வாழவில்லை.

மகன் சிவஞானசம்பந்தன் என்ற ஆசிரியரை மண்டைதீவு விதானையார் மகள் நாகம்மா என்ற பெண்மணிக்கு மணம் செய்வித்து ஞானமீனாட்சி, ஞான -கௌரி, ஞானரமணி என்ற மூன்று பேத்தி களுக்கும் பேரனானார். அவ்வழி குமரன், அரவிந்தனுக்கும் அவ்வாறே. தவிர இரண்டு பூட்டிகளும் ஞானமீனாட்சி வழி யில் உள்ர்.

உபாத்தியாயரின் கடைசி மகள் முதலா வது மதுரைத் தமிழ் பண்டிதை செல்வி வேதநாயகி ஆசிரியை. இவரிடம் பாடம் கேட்கவும் சந்தேகம் தீர்க்கவும் அச்சு வாகனம் ஏற்ற கட்டுரைகள் பெறவும் வராத சமகால தமிழ்ப் பண்டிதர்கள் ஆர்வலர் கள் இல்லை எனலாம். மட்டுவில் பண்டித மணி சி. கணபதிப்பிள்ளை தமக்குத் தோன் றும் சில முரண்பாடுகளை இவரிடம் அனுப்பி தெளிவு பெறுவதுண்டு. பண்டி தர் சிவபாக்கியநாதன், பண்டிதர் சிதம்பரப் -பிள்ளை, பண்டிதர் அருளானந்தசிவம், பண்டிதர் இராசையா, வித்துவான் சுப்பையா, வித்துவான் வேந்தனார் எனும் இவர்கள் கலந்துரையாடுவர்.

தம்பு உபாத்தியாயரின் பெறாமகன் இ. மருதையனார், பண்டிதமணி பாணியில் அணுகுவார். இவர்களின் பணிகளில் வேலணை மேற்கு ஆயிரத்து தொள்ளா யிரங்களில் ஒரு தமிழ்ச்சங்கம் ஆக செயல் பட்டது.

தம்பு உபாத்தியாயர் அறுபதுகளில் அவர் படிப்படியாக பார்வையை இழந் தார். ஆயினும் அவரது நா பெரும்பகுதி பணியை, இருந்த இடத்திலேயே செய்து வந்தது. மூத்தமகளுடன் ஏதோ பிணக்கால் அடுக்களையே தேத்தண்ணி, அடுக்க ளையே சோறு, அடுக்களையே பசிக்கிறது எனக் கேட்பார். மலசல விமோசனம் செய் யும் இடத்துக்கும் தான் படுக்கும் இடத்துக் கும் கயிறு கட்டு வித்து அதனைப் பிடித்த படி செல்வார். இறுதிக் காலத்தில் அவரை வறுமை வாட்டியது. ஆயினும் அவர் மனம் தளர்ந்ததில்லை. பிள்ளைகளை ஏதேனும்

தேவார, திருவாசகங்கள், நல்ல பாடல்களை மனனம் செய்ய வைத்தார்.

"விமர்சனம் என்பது எம்மால் ஒத்துக் கொள்ள முடியாதவற்றை எழுதியவனை மனம் நோக வைக்கக் கூடாது. சில வேளை களில் நாம் கருதுவது எழுதுவது கூட பிழையாக இருக்கலாம்!"

பிரம்மஸ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்க ளின் ஒரு கருத்துரையுடன் இக்கட்டுரை நிறைவு செய்யப்படுகிறது. "தம்பு உபாத்தி யாயர் திருமணத்தின் பின் அவர் வாழ்ந்த நெல்லாவில் ஒரு சிவவளவு அவருடன் பேசும் வேளைகள் சிவ வேளைகள்"

**எடுத்தாளப்பட்டவைகளின் தாயேடுகள்**


1. ஈழத்து தமிழ்க் கவிதைக் களஞ்சியம்., பேராசிரியர் ஆ. சதாசிவம்

   வெளியீடு: திருமகள் அழுத்தகம், சுன்னாகம் - 1966

2. ஈழத்துத் தமிழ்ப் புலவர் சரிதம் பிரம்மஸ்ரீ சி. கணேசையர் - 1939

3. வேலணைத் தீவு புலவர்கள் வரலாறு. தில்லைச்சிவன் - 1995

4. வேலணை மேற்கு பெரியபுலம் மாகாகணபதிப்பிள்ளையார் கோவில் கும்பாபிஷேகம் - 1990


திரு. பொ. கேதாரநாதன் - விஞ்ஞானமாணி
இளைப்பாறிய அதிபர்

திரு. செ. பாலச்சந்திரன்.
பேராசிரியர்



# சமயப் பெரியோர்கள்

# திரு. வேலுப்பிள்ளை பேரம்பலம்

## (அப்பாத்துரை உபாத்தியாயர்)

செல்வி. சிவாஜினி கணேசலிங்கம் (பேர்த்தி)

**வே**லவனின் திருவருள் நிரம்பப் பெற்ற கிராமம் வேலணை. புலவர்களும், அறிஞர்களும் தக்கோராய் வாழ்ந்த மண் வேலணை. காலத்தின் தேவை கருதி சைவமும், தமிழும் புரக்க வந்த நல்லைநகர் நாவலர் பெருமானின் நன் மாணாக்கர் ஞான பரம்பரை வாழ்ந்த மண் வேலணை. இந்த ஞான பரம்பரையில் வேலணையில் சுடர்விட்ட சைவசீலர் நாகலிங்க உபாத்தியாயர் உருவாக்கிய ஆசான்களில் ஒருவரே வேலணை மேற்கு வேலுப்பிள்ளை பேரம்பலம் (அப்பாத்துரை உபாத்தியாயர்) இதனால் இவரையும் நாவலர் வழியில் உதித்த நல்லாசான்களில் ஒருவரெனக் குறிப்பிட முடியும்.

வேலுப்பிள்ளை வள்ளியம்மை தம்பதிகளின் மகனாக 1896ஆம் ஆண்டு சித்திரை மாதம் 10ஆம் திகதி இவர் பிறந்தார். இவருடைய சகோதரர்களாக திரு. வே. பசுபதிப்பிள்ளை (பசுபதி உபாத்தியாயர், ஓதுவார்.) திரு. வே. பரமலிங்கம். ஆகியோர் விளங்கினார்கள். இவர்களும் பல்வேறு சமயப் பணிகளில் ஈடுபட்டார்கள். தேவார, திருவாசகங்கள், புராணபடனம் ஆகியவற்றை ஆலயங்களில் ஓதுவதிலும் இவர்கள் அனைவரும் ஈடுபட்டு தொண்டாற்றினார்கள். பசுபதி உபாத்தியாயர் அவர்கள் பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் கோயில், புளியங்கூடல் இந்தன் முத்து விநாயகர் ஆலயம், புளியங்கூடல் மகாமாரியம்மன் ஆலயம், சிற்பனை முருகன் ஆலயம், கரம்பொன் முருகமூர்த்தி ஆலயம், ஊர்காவற்றுறை சிவன் கோயில் போன்ற பல ஆலயங்களில் மிக நீண்ட காலம் ஓதுவாராக பணியாற்றி வந்தார்.

அப்பாத்துரை உபாத்தியாயர் அவர்கள் வேலணை மேற்கு நடராசா வித்தியா சாலையில் தலைமை ஆசிரியர் இராசா உபாத்தியாயர் அவர்களின் கீழ் 30 வருடங் கள் ஆசிரியராகப் பணியாற்றினார். அக் காலத்தில் பாடசாலை முகாமையாளராகப் புங்குடுதீவு பரமசிவம் பசுபதிப்பிள்ளை அவர்கள் கடமையாற்றினார். சைவத்தை யும் தமிழையும் தங்கள் உயிர்ப்பாகக் கொண்ட முகாமையாளர், தலைமை ஆசிரி யர் ஆகியோரின் நட்பு பேரம்பலம் உபாத் தியாயருக்கு மேலும் ஊக்கத்தைக் கொடுத்தது.

இவரிடம் கற்ற பல மாணவர்கள் இவரது கற்பித்தல் பற்றி இன்றும் புகழ்ந்து கூறுகிறார்கள். சிறிய பிள்ளைகளிடம் மிக அன்பாக உறவாடி கற்பிப்பார். அழகான சிறிய சிறிய கதைகளைக் கூறி மாணவர் களின் மனதில் கருத்துக்களைப் பதிய வைப்பார். தேவார, திருவாசகங்களை மாணவர்கள் மனப்பாடம் செய்வதற்கு தூண்டுவார். நன்றாகப் பாடிய மாணவர் களுக்கு கற்கண்டு கொடுத்து மேலும் ஊக்குவிப்பார். தேவாரங்களை நல்ல முறையில் பொருள் பிரித்து விளங்கப்படுத் துவதில் இவர் வல்லவராக விளங்கினார்.

வேலணை மேற்கு நடராசா வித்தியா சாலையில் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமை யும் சமய பாட வகுப்புகளை நடத்தி வந் தார். எவ்வித ஊதியமும் இன்றி மாணவர் களுக்கு சமய பாடம் கற்பித்து வந்தவர். நவராத்திரி நாட்களில் மாணவர்களை வீடுவீடாக அழைத்துச் சென்று பாடல் களைப் பாடுவிப்பார். பிள்ளைகள் நல்ல சமய வாழ்க்கை வாழ்வதற்கு இவர் வழி காட்டியாக விளங்கினார்.

இவரிடம் கற்ற மாணவர்கள் பலர் எமது கிராமத்தில் கோயில்கள், ஏனைய சமயக் கிரியைகளில் இன்றும் பண்ணுடன் தேவார திருவாசகங்களைப் பாடி வருகின் றனர். இவர்கள் தாங்கள் அப்பாத்துரை உபாத்தியாயரிடம் தேவாரம் கற்றதை இன்றும் பெருமையாகப் பேசுகிறார்கள்.

கந்தபுராணம், திருவிளையாடற் புரா ணம், விநாயகபுராணம், திருவாதவூரடிகள் புராணம் ஆகியவற்றை ஆலயங்களில் படித்துப் பயன் சொல்கின்ற புராண படன பாரம்பரியத்தைப் பேணிக் காத்த வர்களில் இவர் குறிப்பிடத்தக்கவர்.

பெரியபுலம் மகாகணபதிப்பிள்ளையார் கோயில், புளியங்கூடல் இந்தன் முத்து விநாயகர் ஆலயம் ஆகியவற்றில் நீண்ட காலமாக புராணபடனத்தை நடத்தி வந்த வர். இவர் பயன் சொல்வதைக் கேட்பதற்குப் பலர் வந்து கூடியிருப்பார்கள். இன்று புராண படன பாரம்பரியம் வெகுவாக அருகி விட்டது. இன்றைய தலைமுறை யினர்க்கு புராண படனம் என்றால் என்ன வென்று தெரியாத நிலை ஏற்பட்டுள்ளது. இது கவலை தரும் விடயமாகும். புராண படனத்தினூடாக பல்வேறு சமய உண்மை களையும் தத்துவக் கருத்துக்களையும் செய்தி களையும் மக்களுக்கு எடுத்துச் சொன்னார் கள். பண்பாட்டு விழுமியங்களைப் பேணு கின்ற சமூகம் ஒன்றை இவர்கள் வழிநடத்தி வந்தார்கள். இதனால் இவர்கள் சமூகத்தில் முதன்மைப்படுத்தப்பட்டார்கள்.

அப்பாத்துரை உபாத்தியாயர் அவர்கள் ஆலயங்களில் சமயப் பிரசங்கங்களையும் செய்து வந்தார். ஆலய திருவிழாக் காலங் களில் சமயப் பிரசங்கம் ஊடாக மக் களுக்கு பல கருத்துக்களை கூறினார்கள்.

சமய வாழ்க்கை முறைகள், நாயன்மார்களின் வரலாறு, பல்வேறு கிரியை முறைகள் ஆகியவற்றை மக்களுக்கு கூறி வந்தார்கள்.

வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப் பிள்ளையார் கோயில் உரிமையாளர்களாகவும் விளங்கி மிக நீண்ட காலம் ஆலய பரிபாலன சபையில் பங்கு கொண்டு ஆலய வளர்ச்சிக்கு உதவி வந்தார். புளியங்கூடல் இந்தன் முத்து விநாயகர் ஆலயத்தின் அறங்காவலராகவும், அறங்காவலர் சபை தலைவராகவும் ஏறக்குறைய 30 வருடங்கள் பணிபுரிந்தார். இவ்வாலயத்தில் மானம்பூத் திருவிழாவை 25 வருடங்கள் செய்து வந்தார்.

பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயத்தின் தெற்கு வீதியிலே இவர்களது குடும்பம் வாழ்ந்து வந்தது. இவருடைய குலதெய்வம் முடிப்பிள்ளையாரே. இவர்களுடைய பரம்பரையினர் இவ்வாலயத்தில் பூசகர்களாக இருந்து வந்தனர். பரிபாலன சபையில் நீண்ட காலம் பணியாற்றியவர். இவரது கருத்துக்கு எல்லோரும் மதிப்புக்கொடுத்து வந்தனர். பிரச்சினைகள் ஏற்படும்போது அவற்றினை சுமுகமாக தீர்த்து வைக்கும் ஆற்றல் கொண்டவர். இவருடைய காணி கோயிலின் தெற்கு வீதியில் அமைந்துள்ளது. இவர் தம் குடும்பத்தவர்களின் பெருந்தன்மையினால் தற்போது இக்காணி கோயிலின் திருக்குளம் அமைவதற்கு கிடைத்துள்ளது. அண்மையில் இக்காணியில் புதிய திருக்குளம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

இவர்களின் குடும்பத்தவர்கள் ஆலய திருவிழாக் காலங்களில் தண்ணீர்ப் பந்தல் அமைத்து அடியார்களுக்கு தாக சாந்தி செய்து வந்தார்கள். ஆலயத்திற்கான தண்ணீர்ப் பந்தலும் இவர்களுடைய காணியில் அமைக்கப்பட்டுள்ளது.

சமயம், கல்வி ஆகிய துறைகளில் மாத்திரமன்றி சமூகத்தின் பல்வேறு துறைகளிலும் இவர் தமது பங்களிப்பை நல்கி வந்துள்ளார். கிராமத்தின் பல்வேறு விடயங்களில் தமது செயற்பாடுகளை செய்துள்ளார். காணிகளை அளவீடு செய்வதிலும் காணிகளின் எல்லைப் பிரச்சினைகளில் தலையிட்டு சமரசம் செய்து வைப்பதிலும் பிரபல்யம் பெற்று விளங்கினார். இணக்கச் சபைகள், சமாதானக் குழுக்கள் என்பவற்றிலும் தமது பங்களிப்பை நல்கிவந்தார். கிராமத்தில் நடைபெறுகின்ற பெரும்பாலான எல்லைப் பிரச்சினைகளில் இவரது பங்களிப்பு இருந்து வந்தது. மிக இங்கிதமாக அன்பாகச் பேசி அனைவரது மனங்களையும் இலகுவாக வெல்லும் திறமையை இவர் பெற்றிருந்தார். ஆலய பரிபாலன சபைகளில் ஏற்படும் பிரச்சினைகளுக்கும் இவர் சமரச முயற்சியாளராக விளங்கினார்.

முருகேசம்பிள்ளை வள்ளியம்மை தம்பதிகளின் புதல்வி பராசக்தியை மணம் செய்து ஐந்து ஆண்களையும் இரு பெண்களையும் மக்கட் செல்வமாகப் பெற்று மகிழ்ந்தார். இவரது மூத்தமகன் அமரர் பே. சந்திரசேகரம் அவர்கள் ஆசிரியராகவும் இலங்கை வானொலி அறிவிப்பாளராகவும் கடமையாற்றினார். இலங்கையில் இருந்து இந்தியாவுக்கு சென்று அண்ணாமலைப் பல்கலைகழகத்தில் சங்கீதபூஷணப் பட்டம் பெற்றவர். மேலும் இசையிலக்கணம் என்னும் நூலையும் வெளியிட்டார். இவரது பணிகளை பாராட்டிக் கௌரவித்து யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் இவருக்கு கௌரவ முதுமாணிப் பட்டத்தை வழங்கியது.

இவரது இரண்டாவது மகன் அமரர் இராஜசேகரம் பண்டிதராக விளங்கினார். மூன்றாவது மகன் அமரர் முருகேசம்பிள்ளை அவர்கள் வேலணை மேற்கு நடராசா வித்தியாசாலையில் நீண்ட காலம் ஆசிரியராகப் பணியாற்றினார். நான்காவது மகன் கணேசலிங்கம் அவர்கள் கொழும்பில் வர்த்தகராகத் தொழில் புரிந்தார். ஐந்தாவது மகன் அமரர் வேதாசலம் ஆவர். பெண் பிள்ளைகளாக காந்திமதி, சுகுணமதி ஆகியோர் விளங்கினர். பிள்ளைகளுடனும் பேரப்பிள்ளைகளுடனும் மகிழ்ச்சியான வாழ்வை வாழ்ந்து அமரரானார்.

இவரது பல்வேறு சமய சமூகப் பணிகளை கௌரவித்து சைவ சேவா சங்கம் இவருக்கு சைவபூஷணம் என்னும் பட்டத்தை வழங்கியது. இவர் அமரத்துவம் அடைந்தாலும் இவருடைய பணிகள் இன்னமும் மக்கள் மத்தியில் நினைவாக உள்ளன. இத்தகைய பெரியவர்களின் சிறப்புக்களை எதிர்கால சந்ததியினர்க்கு தெரியப்படுத்துவது காலத்தின் தேவையாகும்.



# சமயப் பெரியோர்கள்

# திரு. செல்லப்பா வேலுப்பிள்ளைச் சட்டம்பியார் அவர்கள்

பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
(பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்)

இவர் வேலணையில் மிகச் சிறந்த தமிழறிஞராக விளங்கியதுடன் திண்ணைப் பள்ளிக்கூடம் நடாத்தி அநேக மாணவர் களுக்கு உயர்கல்வி கற்பித்தும் கோவில் களில் கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம் முதலான சமய நூல்களுக்கு கேட்போர் விளங்கக் கூடியதாகவும், இர சிக்கக் கூடியதாகவும் பயன் (விளக்கவுரை) சொல்வதில் கீர்த்தி பெற்றவராக விளங்கி யும் வேலணை மக்களுக்கு கல்வியில் பெரும் தொண்டு செய்தவராவார். இவரது திண்ணைப்பள்ளிக்கூடம் உயர்கல்வி பயி லும் கல்விக்கூடமாக விளங்கியது. தமிழ் இலக்கியம், இலக்கணம், நிகண்டு, சமய இலக்கியங்களான கந்தபுராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், திருவாதவூரடிகள் புராணம் ஆகியவற்றைக் கற்பிக்கும் கல்விக்கூடமாக விளங்கியது.

பண்டுதொட்டு சமீபகாலம் வரை கோவில் களில் புராணப்படிப்பு நடைபெறுவது வழக்கம். புராணங்களிலுள்ள பாட்டை ஒருவர் இராகத்துடன் வாசித்துப் பின் ஒவ்வொரு அடியாக வாசிக்க விரிவுரை சொல்பவர் அதன் கருத்தை விளக்கமாக வும் இரசிக்கக் கூடியதாகவும் சொல்வார். அது ஒரு கலை. எல்லோராலும் விரிவுரை சொல்ல முடியாது. இவ்வகையான புராணப் படிப்பில் ஒரு துறைபோகியாக இவர் விளங்கினார். அதிலும் பயன் சொல்வதில் மிகச் சிறப்புற்று விளங்கினர்.

இவர் 1850 ஆம் ஆண்டளவில் பிறந்தார். இவரது தகப்பன் செல்லப்பா அவர்கள். இவரைச் செல்லர், செல்லப்பா என ஊர வர்கள் அழைப்பார்கள். இவர் நிலபுலங்களை உடையவராகவும் பொருளாதார வசதியு

டையவராகவும் பெரும் கமக்காரராகவும் விளங்கினார்.

இவருக்கு நான்கு பெண் பிள்ளைகளும் ஒரு ஆண்பிள்ளையும் இருந்தனர். அந்த ஆண் பிள்ளையே வேலுப்பிள்ளைச் சட்டம் பியார் ஆவார். தந்தையார் இவரை சிறந்த தமிழ் அறிஞர்களிடம் யாழ்ப்பாணத்தில் படிக்க வைத்து சிறந்த தமிழ் அறிஞராக விளங்கச் செய்தார். அன்றியும் வேலுப் பிள்ளைச் சட்டம்பியார் சோதிடக்கலையில் தேர்ச்சிபெற்ற சாஸ்திரியாகவும் நில அளவை செய்வதில் வல்லவராகவும் விளங்கினார். நில அளவை செய்வதில் மிகுந்த நிபுணத்துவம் உடையவராக இருந்த படியால் வேலணை மக்களுக்கு காணி களை அளந்து கொடுத்தல், அளந்து பிரித் துக் கொடுத்தல், காணிப் பிரச்சினை களைத் தீர்த்தல் ஆகிய கருமங்களை இலவச மாகச் செய்து கொடுத்தார்.

வேலுப்பிள்ளைச் சட்டம்பியார் பயன் சொல்வதில் கீர்த்தி பெற்றவர். வேலணை யிலுள்ள அம்மன் கோவில், மண்கும்பான் பிள்ளையார் கோவில், கந்தபுராண மடம் போன்ற அநேக கோவில்களில் கந்தபுரா ணம், திருவாதவூரடிகள் புராணம் முதலான புராணங்களுக்கு பயன்சொல்லி வந்துள்ளார். இவர் பயன் சொல்லத் தொடங்கினால் அலுப்புச் சலிப்பின்றி மக்கள் அமர்ந்து கேட்பார்கள். கந்தபுரா ணம், திருவாதவூரடிகள் புராணம் என் பவற்றுக்கு உரை அல்லது பயன் சொல் லுதல் மிகுந்த தமிழ் அறிவு உள்ளவர் களாலேயே இயலும்.

இவரது பயன் சொல்லும் முறையைப் பின் பற்றி மகன் திரு. வேலுப்பிள்ளை பொன்னையாவும் மருமகன் திரு. வைர முத்து கணபதிப்பிள்ளை முத்தையா ஆகிய இருவரும் இவரது பணியை முன்னெடுத்து வந்தனர். இவர்களின் பின்னர் புராண படனம் பயன் சொல்லும் முறை படிப்படி யாக குறைந்துவிட்டது. வேலுப்பிள்ளை யாரின் கல்வித் தொண்டைவிட வேலணைச் சமூகத்துக்கு சாஸ்திரியாராக இருந்து பிறக்கும் குழந்தைகளுக்கு குறிப்பு, சாதகம் எழுதுதல், வீடுகட்டுவதற்கு நிலையம் எடுத்துக் கொடுத்தல், மங்கள காரியங் களுக்கு நாள் நட்சத்திரம் பார்த்துக் கொடுத்தல் போன்ற கருமங்களை இலவச மாக செய்து வந்தார்.

இவரால் பாடப்பெற்ற பாடல்களோ அல்லது ஆக்கப்பட்ட நூல்களோ இன்று கிடைக்கவில்லை. அவை பிற்கால சந்ததி யினரால் பேணுதலற்று அழிந்து போயிருக் கலாம்.

மேற்காட்டப்பட்ட துறைகளில் திரு. வேலுப்பிள்ளைச் சட்டம்பியார் வேலணை மக்களின் வாழ்வில் இரண்டறக் கலந்த வராக விளங்கினார்.





# சமயப் பெரியோர்கள்

# சித்தாந்த சிரோமணி மு. மயில்வாகனம்

சைவப்புலவர் சித்தாந்தப் பண்டிதர் மு. திருஞானசம்பந்தபிள்ளை
(முன்னாள் அதிபர்)

"வேலணை மேற்கு தலைகாட்டி என்ற பதியிலே 1900 ஆம் ஆண்டு ஒக்டோபர் 5ஆம் திகதி முருகேசு பார்வதி தம்பதியினருக்கு மயில்வாகனம் குழந்தையாகப் பிறந்தார். இவருக்கு இரண்டு சகோதரர்களும் ஐந்து சகோதரிகளும் உடன்பிறப்பாவர்.

மயில்வாகனக் குழந்தைக்கு அவரது ஐந்தாம் வயதில் வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலையில் திரு. செ. கனகசபாபதிப் பிள்ளையவர்கள் ஏடுதொடக்கி வைத்தார். அவரது ஆங்கிலக்கல்வி யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியிலே 1912ஆம் ஆண்டு ஆரம்பமானது. அப்பொழுது அதற்கு அதிபராய் இருந்தவர் "சிவராவ்" என்பவராவார். இவருடன் இந்துக் கல்லூரியில் 5ஆம் வகுப்பில் உடன் கற்றவர்களுள் முன்னாள் ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினர் திரு. வி. ஏ. கந்தையா, திரு. த. முத்துசாமிப்பிள்ளை, அப்புக்காத்து சுப்பிரமணியம், டொக்டர் இராசையா, டாக்டர் என். கோபால பிள்ளை, டாக்டர். வ. பொன்னையா போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

1919ஆம் ஆண்டில் கேம்பிறிஜ் சீனியரும் 1920 இல் லண்டன் மட்றிக்குலேஷனும் சித்தியெய்தினார். இக் கல்வித் தரத்துடன் 1920ஆம் ஆண்டில் மல்லாகம் ஆங்கில பாடசாலையில் ஆசிரியராகக் கடமையாற்றினார். அதன்பின் அளவெட்டி ஆங்கில பாடசாலையில் கற்பித்தார். அங்கு கடமையாற்றியபோது வேதாரணியம் அடங்கன் முறை ஸ்ரீமத் அ. கணபதிக்குருக்கள் மகன் செல்லையாக் குருக்களிடம் சமயதீட்சை பெற்றுக்கொண்டார்.

ஆசிரியராகக் கடமையாற்றிய போதே 1922ஆம் ஆண்டில் கொழும்பு ஆங்கில ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெற இலங்கை முழுவதிலும் 14 பேரே தெரிவு செய்யப்பட்டனர். யாழ்ப்பாணப் பகுதியிலிருந்து மயில்வாகனம் அவர்களுடன் திரு. க. சின்னப்பா அவர்களும் ஆக இருவரே தெரிவு செய்யப்பட்டவராவர். திரு. க. சின்னப்பா அவர்கள் பிற்காலத்தில் தெல்லிப்பளை மகாஜனாக் கல்லூரியில் ரெயிலர் துரையப்பாவுக்குப் பின் அதிபராக விளங்கியவர்.

மயில்வாகனனார் தமது பயிற்சியை முடித்தபின் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியில் ஆசிரியராகச் சேர்ந்தார். அப்பொழுது அதன் அதிபராக இருந்தவர் திரு. நெவின்ஸ் செல்லத்துரை அவர்கள்.

ஆசியர் மயில்வாகனம் அவர்கள் முதன் முதலில் யாழ்ப்பாணச் சித்தர் யோகசுவாமிகளின் அருளாசியை 1924ஆம் ஆண்டில் பெற்றுக்கொண்டார்.

பின்னர் 1925ஆம் ஆண்டு வட்டுக்கோட்டை சைவ ஆங்கில வித்தியாசாலைக்குத் தலைமை ஆசிரியராக மாற்றலாகிச் சென்றார். அங்கு செல்வதற்கு சில தினங்கள் முன் யோகர் சுவாமிகளிடம் சென்று ஆசீர்வாதம் பெற்றார். பின்பு ஒருநாள் வட்டுக்கோட்டையில் இருந்து கொழும்புத்துறை அடைந்து சுவாமிகளைச் சந்தித்து அன்று சுவாமிகள் ஆணைப்படி அங்கேயே சுவாமி சமைத்து அளித்த உணவை சாப்பிட்ட அரும்பெரும் பாக்கியத்தையும் பெற்றார்.

வட்டுக்கோட்டை சைவ ஆங்கில வித்தியாசாலையில் அப்பொழுது கற்பித்த ஆசிரியர்களுள் நவாலியூர் சோமசுந்தரப்புலவரும் ஒருவர். புலவருடைய பிள்ளைகளாய இளமுருகனும், நடராசாவும் மயில்வாகனனாரின் மாணக்கராவர்.

1928ஆம் ஆண்டு மகாத்மா காந்தி அவர்கள் இலங்கைக்கு விஜயம் செய்த போது யாழ்ப்பாணத்தின் பல பாகங்களுக்கும் சென்றார். அவ்வமயம் வட்டு – சித்தன் கேணி வீதியால் வந்தபோது பாடசாலை முன்பாக வரவேற்று உபசரிக்கும் கடமையும் மயில்வாகனம் அவர்களுக்குக் கிடைத்தது.

இவரைத் தனக்குச் சீடனாகும்படி வட்டுக்கோட்டையைச் சேர்ந்த ஸ்ரீமத் அம்பலவாண சுவாமிகள் கேட்டிருந்தார். இதே போல் சேர். பொன். இராமநாதன் அவர்கள் ஒரு சைவ சங்கம் (மிஷன்) ஆரம்பிக்க விரும்பி அதற்குத் தலைவராக இவரை நியமிக்க விரும்பி பெரியார் சு. சிவபாத சுந்தரம்பிள்ளை மூலம் கடிதம் எழுதி அழைத்தார். குடும்பப் பொறுப்புக் கருதி இவர் இரண்டு வேண்டுதலையும் நிறைவேற்றவில்லை.

1930ஆம் ஆண்டில் இந்துக்கல்லூரியில் உதவியாசிரியராகச் சேர்ந்தார். 1938ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையில் அங்கத்தவரானார். 1940ஆம் ஆண்டில் திருமுறை பூஜை செய்யத் தொடங்கினார். திருமுறைப் பூஜை முறையினை நீராவியடிக் குருக்கள் மடத்தில் அக்காலத் திருந்த ஸ்ரீமத் ந. சோமசுந்தரக் குருக்களிடம் பயின்றார். பின்னர் 1944ஆம் ஆண்டு வேதாரணியம் தேவாரம், ஸ்ரீ. க. செல்லையாக் குருக்களிடம் விசேட நிருவாண தீட்சைகளைப் பெற்று இறுதிவரை சிவபூஜையும் திருமுறைப் பூஜையினையும் ஆற்றிவந்தவர்.

1988ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் சைவசமயப் பரிபாலன சபை முகிழ்த்தது.

இச்சபைக்குரிய சைவப்பிரகாச அச்சியந் திரசாலையில் பாடசாலைப் பிள்ளைகளுக் குரிய நூல்கள் சைவப் பிரசுரங்கள் இந்து சாதனம், தமிழ் ஆங்கிலப் பதிப்புக்கள் முதலியவற்றை வெளியிட்டதோடு சைவப் பிரசாரங்கள், சைவ மகாநாடுகள், புராண படனங்கள், பூசைகள், குருபூசைகள், சித் தாந்த வகுப்புக்கள் போன்றவற்றை காலந்த வறாது நடத்திவந்தது. சமயப் பிரசார அமைச்சராக இருந்த மயில்வாகனம் அவர் களே இவற்றுக்கு மூலாதார ஊக்குவிப் பாளராக இருந்து நடத்தியவர் என்பதைத் தொடர்புடையோர் அறிவர்.

1944 ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி இந்து வாலிப சங்கத்தின் தலைவராக இருந்து மயில்வாகனம் அவர் கள் இந்துக்கல்லூரி அதிகாரசபையின் கீழ் இருந்த 14 பள்ளிக் கூடங்களின் இந்து வாலிப சங்கங்களை ஒன்றிணைத்து மத்திய இந்து வாலிப சங்கம் என நிறுவிய போது அதன் தலைவராக நவாலியூர் சோமசுந்தரப் புலவர் விளங்க, மயில்வாகனம் அவர்கள் செயலாளராக அமைந்து சேவை ஆற்றினார்.

யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை யின் காரியதரிசியாக பல ஆண்டுகள் சேவை யாற்றிய மயில்வாகனம் அவர்கள் சபைக்கு பல தர்மச் சொத்துக்களை மடங்களின் நிர்வாகத்தை இணைத்து நடத்த கால் கோள் இட்டவரென்பது குறிப்பிடத்தக்கது.

திருக்கேதீஸ்வரத்தில் திருக்கேதீஸ்வர புராணத்தை வேலணை திருஞானசம்பந்த மடாலய சபையார் அச்சிட்டு 1970ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் அரங்கேற்றுவதற்கு காரண கர்த்தாவாக இருந்தவர் மயில்வாகனம் அவர்களே.

மடாலயங்களின் மகிமையை நாவலர் வழியில் நன்கு உணர்ந்த மயில்வாகனம் அவர்கள் வேலணை சைவப் பிரகாச வித்தியாசாலையில் அமைந்திருந்த திரு ஞான சம்பந்த மடாலயத்தை புனர்நிர் மாணஞ் செய்து புராணபடனம் குருபூசை நிகழ்வுகளையும் தாம் உயிருடன் இருந்த வரை நடத்துவித்தவர். உயிர் இனங்களைக் கோவிலுக்குத் தானமாகக் கொடுப்பதை யும் பலியிடுதலையும் தடுப்பதற்கு ஏதுவாக பசு பாதுகாப்புச் சபை ஒன்றை நிறுவி அதனை முன்னெடுத்துச் செல்ல முன்னின் றுழைத்தவர் மயில்வாகனம் அவர்களே.

1980 ஆம் ஆண்டு ஒக்டோபர் 5ஆம் திகதி மயில்வாகனம் அவர்களுக்கு யாழ்ப் பாணம் இந்துக்கல்லூரி பிரார்த்தனை மண்டபத்திலே அவரின் மாணவர்களாலும் அன்பர்களாலும் அமுதவிழா நடத்தப்பட் டது. அப்போது இப்பெரியாரால் எழுதப் பெற்ற "எனது பழைய சிந்தனைகள்" என்ற சிறு பிரசுரமும் வெளியிடப்பட்டது.

அந்நூலில் வித்துவான் க. கி. நடராஜன் அவர்கள் பின்வருமாறு பாராட்டியுள்ளார்.

வேலணையூர் செய் தவத்தால் வேளாண் குடிவந்த
சாலப்பெரிய மனத் தண்ணளியோன் - வேலவனார்
கோல மயில்வாகனப் பேர்க்கோமானும் வாழியவே
ஞாலமதில் என்றும் நயந்து

சைவபரிபாலனப்பேர்ச்
சபையதனிற் பலவாறாக
மெய்வரு நல்லுள்ளத்தோடு
வியன் பணிகள் பலவே செய்தோன்
ஐயொரு பத்தாண்டுவரை மாணவர்க்கே
யறிவு கொளீஇயன்னார்தாமே
உய்யவழி செய்து வைத்த
உத்தமனாம் பரம ஆசான்.

மேலும் அந்நூலில் வைத்திய கலாநிதி பேராசிரியர் அ. சின்னத்தம்பி, ஆத்மசோதி நா. முத்தையா, திரு. ந. கிரிதர பிரசாத், கயப் பாக்கம் சித்தாந்தவித்தகர் சோமசுந் தரம் செட்டியார் போன்றவர்கள் இப் பெரியாரின் சேவைகளைப் பெரிதும் பாராட்டி வாழ்த்தியுள்ளனர்.

இத்தகைய பெரியார் பெற்ற குழந்தைச் செல்வங்கள் மூன்று ஆண்களும் இரண்டு பெண்களுமாவர். மூத்தமகன் சுந்தரமூர்த்தி சார்டட் கணக்காளராக விளங்குகின்றார். மூத்தமகள் காலமாகிவிட்டார். இரண்டா வது மகன் கனகசபாபதி பொறியியலாள ராக நோர்வே பல் தொழில்நுட்பக் கல்லூரி யில் கடமையாற்றுகின்றார். இளையமகள் பார்வதி கணவனுடன் அமெரிக்காவில் உளர். இளைய மகன் திருஞானசம்பந்தன் எம். எஸ். சி. பட்டதாரியாகி சிங்கப்பூரில் கடமையாற்றுகின்றார். இப்பெரியாருடைய மனைவியார் சிவானந்தநாயகி அவர்கள் தற்போது மகனுடன் நோர்வேயில் வசிக் கின்றார்.

சைவமுந்தமிழும் தழைத்தோங்க ஆசிரியராய் பணியாற்றியதோடு சைவ பரிபாலன சபைமூலம் அப்பணியைத் தொடர்ந்தும் தாம் ஓய்வு பெற்ற பின்பும் தளராது செய்து வந்த இப்பெரியார் 1990 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19 ஆம் திகதி எம் பிரானுடைய குஞ்சிதபாத நிழற் கீழ் பேராவின்பப் பெருவாழ்வினைப் பெற்றுக்கொண்டார்.





## சமயப் பெரியோர்கள்

# சைவத் தமிழறிஞர் ஸ்ரீமத் ச. மகாலிங்கம் (விதானையார்)

(திரு. பொ. அருணகிரிநாதன் - அதிபர்)

**சை**வமும் தமிழும் சிறப்புற்று விளங்கும் யாழ்ப்பாணத்தை அணித்ததாகவுள்ள தீவுப்பகுதி. அழகான கடல் சூழப்பெற்ற தீவுகள் நடுநாயகமாக விளங்கும் வேலணைத் தீவு. இங்கு சிவநறுமணம் கமழும் பகுதி மேற்குப் பகுதியில் பெரியபுலம் என்னும் திவ்ய பூமியாகும். அப்பகுதியில் சதாசிவம்பிள்ளை விதானையார் ஒரு சிவபூசை துரந்தரராகும். அவர் விதானையாக இருந்த அக்காலம் சிவபூசை, குரு பூசை, அதிதி பூசை, வித்தியாபூசை என்பனவற்றில் தன்னிகரற்ற பகுதியாக விளங்கியது. அது மட்டுமல்ல; சைவர்களால் பூசிக்கப்பட்டு வரும் மகா கணபதிப் பிள்ளையார் ஆலயம் (அக்காலத்தில் சிறு கோயில்) அமைந்திருப்பது சிறப்பம்சமாகும்.

### பிறப்பு

மேலே குறிப்பிட்ட சதாசிவம்பிள்ளை விதானையார் பார்வதி ஆகியோருக்கு உத்தம புத்திரனாக 1914 ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் ஆனந்தவருடம் மகாலிங்கம் அவர்கள் அவதரித்தார். இவர் சிறிய வயதில் துடிப்புடன் இருந்தார். இவரது பேரனார் கந்தர் உடையார் ஆவார்.

### கல்வி

ஆரம்பக் கல்வியை வேலணை சைவப் பிரகாச வித்தியாசாலையில் ஆரம்பித்தார். இளமையில் மிகவும் கெட்டிக்காரனாக விளங்கிய இவர் பின் ஊர்காவற்றுறை அந்தோனியார் கல்லூரியில் மேற்படிப்பைத்

தொடர்ந்தார். மாணவ காலத்தில் பலநூல் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டார். கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடல் புராணம், வாதவூரர் புராணம், திருச்செந்தூர் புராணம், உபதேச புராணம் போன்ற புராணங்கள் மற்றும் இதிகாசங்கள் படித்துப் புலமையெய்தினார்.

## தொழில்

தந்தையார் வழிநின்று அவரது தொழிலான கிராம அதிகாரி விதானையார் சேவை ஆற்றினார். இவரது திறமை புலமை சிறப்புகண்டு நீதித்துறையில் மரண விசாரணை அதிகாரியாகவும் பின்னர் சமாதான நீதிவானாகவும் நியமித்தார்கள்.

## கவிபாடும் ஆற்றல்

சிறப்பாகக் கவிபாடும் திறமையிருந்தது. இறந்த ஆத்மாக்கள்பேரில் எண்ணற்ற கவிதைகள் இயற்றினார். அவை நினைவு மலராக உடனுக்குடன் வெளிவந்தது. இவரது பெரிய தந்தையார் இராமலிங்கம் என்பவர் இந்தியா சென்று சாமியானார். அவரது வரலாறை இந்து சாதனம் பத்திரிகையில் “சிதம்பரத்துச் சாமியார்” என்னும் தலைப்பில் தொடர்ந்து எழுதினார்.

## புராண படனம்

ஆலயங்களில் புராணங்கட்கு பயன் சொல்லி வந்தார். நல்ல குரல்வளம் உடையவர். பெரியபுலம் பிள்ளையார் ஆலயம் பக்கத்தில் சிற்பனை முருகன் ஆலயம் மாரியம்மன் ஆலயம், இந்தன் முத்து விநாயகர் ஆலயம் போன்ற ஆலயங்கள் சென்று புராணபடனம் செய்தார். இனிமையாக தெள்ளிய தமிழில் மற்றவர்களையும் கவரத்தக்கதாக புராணபயனுரை செய்தார். திருப்புகழ், பஞ்சாட்சரமாலை அருணகிரிநாதரால் பாடப்பட்ட அந்த ஐந்து பாடல்களையும் மற்றவர்கள் மனம் உருகும் விதத்தில் பாடுவார். இவரது பாடல் ஆற்றல் குரல்வளம் இனிமை என்பதைஅறிந்து பலரும் இவரை வசந்த மண்டபத்தில் பாட விடுவார்கள். சிற்பனை முருகன் உரிமையாளர் சோமாஸ்கந்தன் இவரது சிறப்புணர்ந்து தமது ஆலயத்தில் அழைத்து சிறப்புரை ஆற்றுவிப்பார். அத்துடன் அங்கு சூரசங்கார காலத்தில் சூரபன்மன் யுத்தகாண்டம் புராணபடனம் நிகழ்த்துவிப்பார்.

## இல்லற வாழ்க்கையும் பிறவும்.

இவர் தனது உறவினரான வைத்திலிங்கம் என்பவருடைய மகளைத் திருமணஞ் செய்து இல்லறம் நடாத்தி வந்தார். பல தல யாத்திரைகளை செய்தார். இந்தியாவில் பல ஆலயங்களுக்கும் சென்று வழிபாடாற்றினார். ஆங்கிலத்தில் புலமை பெற்றிருந்தார். ஊரவர் இவரைத் தேடி வந்து தமது சிக்கல்களை தீர்த்துக் கொள்வர். ஒருமுறை பங்கீட்டு அடிப்படையில் எரிபொருள் விநியோகம் நடைபெற்றது. அப்போது ஒரு கட்டம் எரிபொருள் விநியோகிக்கப்பட்டது. மீதி எரிபொருள் இருந்தது. ஆனால் சங்க மனேச்சரை அணுகி அதைமீண்டும் அவற்றைப் பகிர்ந்தளிக்க ஆலோசனை கூறினார். அதன்படி பகிர்ந்தளித்தனர். இப்படியாகப் பலரும் கவரும் விதத்தில் கோபமேற்படாத வகையில் நடைமுறைப்படுத்துவார். சிலர் குடும்பச் சண்டைகள் சமாச்சாரங்கள் ஏற்படும்போது அவற்றை சம்பந்தப்பட்டவர்களை வைத்துப் பிரச்சனைகளைக் கேட்டறிந்து தீர்த்து வைப்பார். கடினமான வேலைகளையும்

சட்டமான செயற்பாட்டுடன் செயற்படுத்து வார். நிர்வாகத்துறையில் தன் கீழ்மட்ட ஊழியர்களைப் பக்குவமாக அணுகி செயற் படுத்துவார். இவரது திறமையை, கடும்போக் கில்லாது இனிமையான செயற்பாடுகளைப் பலரும் பாராட்டுவர். இவர்கள் இலக்கியங் களை நன்குணர்ந்தமையால் பலரும் இவரிடம் வந்து விளக்கங்களை கேட்டதும் பாட்டுக்கு சொல்நயம் பொருள் நயம் என்பவற்றை விரிவாக விளங்கப்படுத்து வார். இவர் தன்னிடத்தில் பல அரிய நூல்க ளைத் திரட்டி வைத்திருந்தார். ஆனால் இவர் வாழ்ந்த இறுதிக்காலம் வன்செயல் கள், இடம்பெயர்வுகள் உள்ளமையால் அவற்றை உறவினர் பாதுகாக்க முடியா மல் போனது, அல்லாவிடில் அவரின் எண்ணிறைந்த புராண அறிவு கருவூலங் கள் பிறிதொரு சந்ததியினரை உருவாக்கப் பயன்பட்டிருக்கும்.

## நீதித்துறையில் பாராட்டு

மகாலிங்கம் அவர்கள் நீதிமன்றத்தால் நீதவானால் பாராட்டும் பெற்றவர். எல்லா விதானைமாரிற்கும் தலைமைப் பொறுப்பை ஏற்றவர். 11 பிரிவு விதானை மாருக்கும் தலைமையாக சேவையாற்றினார். உயர் நீதிமன்றில் இவரது வாதத்திற மையைப் பார்த்து ஜீ.ஜீ. பொன்னம்பலம் வியந்தார். எவரை வென்றாலும் தீவுப்பகுதி குடும்பான் விதானையை வெல்ல முடி யாது எனப் பாராட்டினார். இப்பவும் பழைய ஆட்கள் குடும்பான் விதானையார் எனக் கூறுவதுண்டு.

## இறுதிக்காலம்

இத்தகைய சிறப்புக்களுடன் வாழ்ந்த மகாலிங்கம் அவர்கள் 1991 ஆம் ஆண்டு வைகாசி மாதம் பூர்வபக்க சஷ்டியில் இவ் வுலக வாழ்க்கையை விட்டுத் திருக் கைலாசம் சென்றடைந்தார். அன்னாரின் வாழ்க்கையில் இருந்து ஒருவர் இருக்கும் போது அருமை தெரியாது. வெற்றிடம் அவர் மறைந்த பின் பெரிய இடைவெளி யாகத் தெரியும். எமது கிராமத்தில் அவர் வாழ்ந்தகாலம் அவர் செயற்கரிய செயல் கள் எல்லாம் எம்மனக் கண்ணுள் தோன் றும். அந்த இடைவெளியை நிரப்ப எங்களுக் கேற்ற ஒருவர் யார் வருவாரோ? எல்லாம் இறைவன் செயல்.



# வேலணைப் பெருங்குளம் முத்துமாரியம்பாளின் தலவிருட்சம்



இது நூறு ஆண்டுகளுககு முற்படடது



புதிய தேர் (1973)
புதிய தேரில் அமைந்துள்ள
பிள்ளையானின் சிலை

# சமயப் பெரியோர்கள்

## மெய்யடியார் பலரையீன்ற வேலணையூர் தந்த அடியார்க்கடியன்

# பிள்ளையான்

### முதலியார் குல சபாநாதன் - வேலணை

அண்மையில் சலவை செய்த வெள்ளை வேட்டி; புத்தம் புதிய கொலரும் குறுகிய கையும் கொண்ட ஷேட்; அன்று காலை ஸ்திரிக்கை போடப்பட் ஆரணியன் சால்வை. இவ்விதகோலத்துடன் சோடி சோடியாகப் பலர் என் வீட்டைக் கடந்த மாதம் முற்றுகையிடத் தொடங்கினர். அரசாங்க சேவையிலிருக்கும் போது அதுவும் மணியம், உடையார், விதானை, கோட்டுச் சேவகன், பொலிசுக்காரன் போன்ற அதிகார உத்தியோகத்திலிருக்கும்போது, அவர்களுடைய வீட்டுக்கு முட்டை முடிச்சுகளுடன் பலதிறப்பட்டவரும் காலை தொடக்கம் மாலை வரை சாரிசாரியாக வந்து போவதை அவ்வதிகாரிகளின் மனைவி மக்கள் நன்கறிவார்கள். அவரவர் கையுறைக்கேற்ற உபசாரமும் நடைபெறும். ஆனால் அவ்வதிகாரிகள் அரசாங்க சேவையிலிருந்து இளைப்பாறி விட்டால், அவர்கள் வாழும் வீடுகளில் பிச்சைக்காரரைத் தவிர பிறர் செல்வது குறைவாகவே இருக்கும். நான் அரசாங்கத்தில் ஒரு குட்டிக் கிளார்க்கராக இருந்த காலம் முழுவதிலும் என் வீட்டுக்கு எப்போதாவது ஒரு நாளைக்கு இரண்டொருவர் வந்தாலும், செல்லரித்த பனையோலையுடனும், மேலட்டையில்லாத புத்தங்களுடனும் வந்து, நெடுநேரம் அலட்டிக் கொண்டிருப்பவர்தான் வருவது வழக்கம் என்பதை என் மனைவி மக்கள் நன்கறிவார்கள். எனவே, திடீரென வெள்ளை வேட்டி கட்டிய இளம் வாலிபர்கள், நல்ல தேகக்கட்டுள்ளவர்கள், ஆயிரம் புகையிலைக் கன்றுகளுக்கு ஒரே இறைப்பில்

களைப்பின்றி, நீர்ப்பாய்ச்சக் கூடியவர்கள் இருவர் இருவராகத் தம் "போட்டோ" புளொக்குடன் கூடிய அறிமுகத் தாள் களையும் பிரமுகர் பலரின் கையெழுத்துக் களையும் விலாசங்களையும் ஒரே நிறமை கொண்டு ஒருவரே எழுதிய பெரிய கணக்குப் புத்தகத்தையும், பற்றுச்சீட்டுக் கட்டுகளையும் கொண்டு வந்து சேர்த்தனர். அறிமுகத் தாளில் ஒரு பிரதியை என்னிடம் நீட்டினார்கள். அதிலுள்ள படம் அவ்விரு வருடைய சாயலாகவே இருந்தது என்பதிற் சந்தேகங்கொள்ள இடமில்லை. கதிர்காமத் தண்ணீர்ப் பந்தலுக்காகக் காசு தண்டும் புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபட்டுள்ள பொது நலத் தொண்டர்கள் இவ்விருவரும் என்பதைஅறிந்து கொண்டேன். "எங்களு டைய தண்ணீர்ப் பந்தல் மலைக்குப் போகிற வழியில் இருக்கிறது. மலையுச் சிக்குக் கிட்டப் பந்தல் வைத்திருப்பதால், ஒவ்வொரு தகரம் தண்ணீருக்கும் இரண்டு ரூபா கொடுக்க வேண்டும். அதற்காகத் தான் இப்படிச் சேகரிக்கிறோம்" என்றார் கள். கதிரைமலைக்குச் சென்ற வருடமும் போயிருந்தேன். உங்களையோ தண்ணீர்ப் பந்தலையோ அங்கே காணவில்லையே என்று நான் அதிசயத்துடன் கேட்டதற்கு, "நாங்கள் ஆற்றங் கரையிலிருந்து தண்ணீர் அள்ளிக்கொடுக்க, எங்கட மருமக்கள்தான் மலையிலே வேலை செய்கினம் ஐயா! இம் முறை வந்து பார்த்தால் தெரியுமே" என்று விடாப்பிடி பிடித்தனர் இரு தொண்ட ரும். கணக்குப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தேன். கொழும்பிலுள்ள பெரும் புள்ளிகள் பெயரும் விலாசமும் பெருந் தொகையும் வரிசையாக எழுதப்பட்டிருப் பதைக் கண்டு திடீரென ஒரு மயக்கம் மாதிரி வந்தது. இவ்வளவு தொகை கொடுக்க எனக்கு முடியாது. நான் இம் முறை கதிர்காமம் வர இருக்கிறேன் அங்கே தண்ணீர்ப்பந்தர் அடியிலேயே கொண்டு வந்து தருகிறேன்" என்று சொன்னேன். ஆனால் அவர்கள் கதிரையை விட்டெழுந்து நகர்வதாகத் தெரியவில்லை. "ஆராய்ச்சி செய்தது போதும்; ஏதாவது தருமத்துக்காகக் கொடுத்தனுப்பி விடுங் கள்" என்று உள்வீட்டிலிருந்து கட்டளை பிறந்தது. "சரி, இந்தக் கள்ளரைப் பொலி சாரிடம் ஒப்படைக்கும் பணியை நாம் எதற் காகச் செய்யவேண்டும். தொலைந்து போகட்டும்" என்று முணு முணுத்துக் கொண்டு என் "மணிபர்ஸை" தடவி அற்ப தொகையைத் தானம் செய்தேன். இருபதாம் நூற்றாண்டிலே கள்ளங் கபட மற்ற சைவ பக்தர்களை ஏமாற்றிச் சொகு சாகச் சீவிக்க இலகுவான வழியைக் கண்டு பிடித்தவர்கள் கதிர்காமத் தண்ணீர்ப் பந் தற் தொண்டர்கள். நாமும் ஆண்டாண்டு தோறும் முணுமுணுத்தாலும் கொடுத்தே விடுகிறோம். இவர்கள் கொழும்பில் தங்கித் தண்டிக்கொண்டு சொந்த ஊருக்குத் திரும்பி விடுவது வழக்கம். கதிர்காமத் தலமே தெரியாது. ஆனால் விழாக்காலம் நன்கு தெரியும். ஆனால் இதே இருபதாம் நூற்றாண்டில் வேலணையூரில் பிள்ளை யான் என்ற பெயருடன் தீவுப் பகுதிக ளிலும் பட்டணத்திலும் வேலணை அம்மன் கோயில் திருப்பணிக்காக நாடோறும் கால் நடையாக அலைந்து திரிந்து தண்டுவது வழக்கம். இவரிடம் போட்டோ அச்சடித்த அறிமுகத் தாளும் இல்லை. கணக்குப் புத்தகமும் இல்லை. பற்றுச்சீட்டுப் புத்தகக் கட்டுமில்லை. நெல் சேர்ப்பதற்காகத் தோளிலே இரு சாக்கு மாத்திரம் உண்டு.

என் தாயார் வீடு மேலைக்கரம்பொன் சண்முகநாத ஆலயத் திருக்குளத்துக்

கண்மையிலுண்டு. அயலில் இருப்பவர்கள் கோயிற் சிவப் பிராமணர். இவ்வித சூழலாற் போலும் என் தாயார் திருநீறு அணிந்து காவியுடுத்து எவர் வந்தாலும் அவரை உபசரித்தனுப்பும் வழக்கமுடைய வர். இவர்களாற் பலமுறை ஏமாற்றப் பட்டதும் எனக்கு நன்கு தெரியும். இப்படிப் பட்ட என் தாயார் வீட்டுக்கு நெல் அறு வடையான பின்னர் பிள்ளையான் படலை யைத் திறந்து கொண்டு வந்துவிட்டாற் போதும். "நாச்சியார், அம்மனுக்குப் பிச்சை தாருங்கள்" என்று சொல்ல வாயெடுக்க முன்னரே என் தாயார் புறம்பாக ஒரு ஓலைப்பெட்டியில் வைத்திருந்த நெல் முழு வதையும் கொண்டு வந்து பிள்ளையான் காலடியில் வைத்துவிடுவார். பின்னர் ஓடிப் போய் தேநீர் கலந்துகொண்டு வந்து கொடுப்பார். வெற்றிலை கொடுப் பார். சாப்பாட்டு நேரமானால், சிறிது களைப்பாறியிருந்து சாப்பிட்டுக்கொண்டு போகும்படியும் சொல்லுவார். இவ்வித உபசாரமெல்லாம் முடிந்தபின், மீண்டும் ஒருபடி இரண்டுபடி நெல் வேறாகக் கொடுப்பார். இந் நெல் பிள்ளையானு டைய சொந்த வயிற்றுப் பசியைத் தணிக் கவே கொடுக்கிறார் என்பது பின்னர் தெரியவந்தது. இவ்வாறே பிள்ளையான் செல்லும் ஒவ்வொரு வீட்டிலும் இரா சோபசாரம் நடைபெறுவதைக் கண்ணா ரக் கண்டிருக்கிறேன். ஒவ்வொரு வீட்டின ருக்கும் அவர் சொந்தப் பிள்ளைதான்.

பிள்ளையான் பெறுகிற நெல்லுக்கு ஒருவித கணக்கும் கிடையாது. அவர் பெறுகிற பணத்துக்கும் எவ்வித கணக் கும் அவர் வைத்திருப்பதில்லை. கணக் குக் கொப்பி கிடையாது. எல்லாம் மனக் கணக்காகவேயிருக்கும். பிள்ளையான் தான் சேகரித்ததைக் கொண்டுபோய் வேலணையம்மன் கோயில் மணியத்திடம் கொடுப்பார். அவர் ஒரு முறையாவது பிள்ளையானிடம் கணக்குக் கேட்கும்படி பிள்ளையான் நடந்தால் அல்லவோ பிள்ளையானிடம் எவராவது கணக்குக் கேட்க முடியும். பிள்ளையானை இந்த வேலை செய்யும்படி கோயில் மணியகா ரன் நியமனக் கடிதம் எப்பொழுதாவது கொடுத்ததாகவும் தெரியவில்லை. அவருக்கு மணியகாரனின் அறிமுகக் கடிதமும் தேவையில்லை. வேலணை யம்பாளே அவருடைய உள்ளத்திற் கோயில் கொண்டெழுந்தருளியிருந்தாள். பிள்ளையான் என்னைக் கைவிட்டு விடுவாரோ என்ற ஏக்கம் அம்பாளுக்கு இருந்திருக்கலாமே தவிர, பிள்ளையானுக் குச் சமயத் தொண்டு செய்கிறேன் என்ற உணர்ச்சியோ, பெருமையோ அவர் உள்ளத்திற் குடிகொள்ளவில்லை. அம் பாளுக்கே முழு இடமும் அளித்து விட் டார் பிள்ளையான்.

வேலணையூரில் ஆதி திராவிடர் (பறை யர்) வகுப்பைச் சேர்ந்தவர் பிள்ளையான். சாதி வேளாளர், தன்னைக் கோயிலுக்குள் விடவில்லையே என்ற கவலை அவரை வாட்டவில்லை. "தில்லைக்குச் செல்ல வேண்டும்" என்று திருநாளைப் போவா ரைப் போல ஆசைகொள்ளவுமில்லை. எனது ஊரிலுள்ள அம்பாள் கோயிலில் பக்தர்கள் கஷ்டமின்றி நின்று தொழ, நான்கு வீதிகளிலும் ஒரு வேய்ந்த பந் தலிட்டுத் தான் பார்க்க வேண்டும் என்ற ஒரேயொரு ஆசைதான் பற்றற்ற உள்ளம் படைத்த பிள்ளையானிடம் குடி கொண்டது. இதற்காக அல்லும் பகலும் உழைத்தார் பிள்ளையான். வேலணையம்மனுக்கென ஊரவர் கொடுக்கும் நெல்லில் ஒரு மணியையோ பணத்தில் அரைச்சல்லி

யையோ தீண்டக்கூடாது என்ற விரதத்தை இறக்கும்வரை அநுட்டித்தவர் பிள்ளையான்.

நல்ல அழகிய வசீகரத் தோற்றம். திடகாத்திரமான உடம்பு. முழங்காலுக்கு மேல் நிற்கும் வேட்டி. தோளிலோ இரண்டு சாக்கு. மடியிலோ பெரிய பை. கறுத்த மேனி. வெள்ளையுள்ளம். முத்துப்போன்ற பற்கள். திருநீறு பூசிய நெற்றி. குமிண் சிரிப்புத் தவழும் முகம். பவளமால் வரையில் நிலவெறிப்பதுபோல் அகமும் புறமும் தூய்மை நிறம். "தன்னை யார்க்கும் அறிவரியான்" என்று, மன்னிவாழ் கயிலைத் திருமலையே பிள்ளையான்.

"மாசி லாத மணிதிகழ் மேனிமேற்
பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்
தேசி னாலெத் திசையும் விளக்கினார்
பேச வொண்ணாப் பெருமை பிறங்கினார்"

"கேடும் ஆக்கமுங் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்".

எனச் சேக்கிழார் சுவாமிகள் கூறும் இலக்கணத்துக்கு இலக்கியம் பிள்ளையான். சேக்கிழார் சுவாமிகள் பிள்ளையானை ஒரு முறை தரிசித்திருந்தால் எங்களுக்கு ஒரு பெரிய பிரச்சினையை விட்டுச் சென்றிருப்பார். இருவரும் சந்தித்தபோது, முதலில் வீழ்ந்து வணங்கியவர் யார் என்ற பிரச்சினையைச் சேக்கிழார் சுவாமிகளாதல், கவியரசன் கம்பனாதல் பிள்ளையானைக் கண்டிருந்தால், எங்கள் மூளைக்கு வேலை தந்திருப்பார்கள். நல்லவேளையாக நாங்கள் தப்பிப் பிழைத்துவிட்டோம்.

ஒருமுறை நான் அரசாங்க சேவையில் கிளாக்கராக இருந்தபோது கடுஞ் சுகவீனமுற்று என் தாயாரிடம் சென்றேன். என தாயாரின் அரவணைப்பில் எனது சுகவீனம் விரைவில் மறையத் தொடங்கியது. அத்தருணத்தில் ஒருநாள் பிள்ளையான் என் தாயார் வீட்டுக்கு வந்தார். எனக்குச் சுகவீனம் என்று என் தாயார் தன் வீட்டு இரகசியங்களையெல்லாம் பிள்ளையானிடம் கூறினார். "வேலணை முத்துமாரி தம்பிக்குப் பூரண சுகத்தை விரைவிலே கொடுப்பாள். இன்று காலை அர்ச்சனை செய்த விபூதி இதோ இருக்கிறது. இதைப் பூசினால் சகல வியாதியும் பறந்தோடிப் போய்விடும்" என்று சொல்லி என் தாயாரிடம் கொடுத்தார். என் தாயார் வேலணையம்மன் கோயிலில் அளவிறந்த பக்தி பூண்டவர். அதற்குக் காரணமும் இல்லாமலில்லை. தன் கணவன் பிறந்த ஊரிலுள்ள ஆலயமல்லவா அது. என் தகப்பனாரும் வேலணையம்மன் கோயிலுக்கு என் தாயாரையும் சிறுவர்களாக இருந்த எங்களையும் விசேட தினங்களிற் கூட்டிச் செல்வது வழக்கம். வருடத்துக்கொருமுறை ஒரு விசேஷ பூசை பொங்கல் முதலியனவும் தன் கணக்கிற் செய்வித்து, பிள்ளைகள் மூவரையும் கட்டாயம் கூட்டிக்கொண்டே என் பெற்றார் செல்வது வழக்கம். ஆகவே அம்பாளின் விபூதியை என் தாயார் பயபக்தியுடன் நெற்றியிலணிந்து, இனி எல்லாஞ் சுகமாய் விடும் என்று ஆசீர்வதித்தார். பாண்டிய மன்னனின் வெப்பு நோயைத் தீர்த்த திருநீறு கிளாக்கரின் காய்ச்சலைத் தீர்க்க ஒரு விநாடியே போதுமே. பிள்ளை யானிடத்தில் எங்கள் குடும்பம் முழுவதுமே நம்பிக்கை வைத்திருந்தது. அவர் உண்மையான மெய்யடியார். கோயிற் தொண்டு சமயத் தொண்டு என்ற போர்வையில், பொதுநலத் தொண்டு செய்ய முற்பட்டு எத்தனையோ சுயநலத் தொண்டு புரிந்து, பணம் ஈட்டுகின்றனர். தொண்டர் சபை

களில் நெடுங்காலம் பதவிகளை இறுகப் பிடித்துக் கொண்டு தொண்டு செய்வதாகப் பாசாங்கு செய்து தமக்கு வருவாயும் புகழும் ஈட்டிக் கொள்ள முயல்கின்றனர். தமக்கு அதிகாரமும் புகழும் தேடச் சைவ சமயத் தாபனங்களில் பதவிகளை நெடுங் காலமாகத் தாமே சுவீகரித்துக் கொள்கின்ற னர். இன்னுஞ் சிலர் சமயத் தாபனங்களில் பதவிகளுக்குப் போட்டியிட்டு வீடுவீடாகத் திரிந்து பாராளுமன்ற அங்கத்தவர் தெரிவுப் போட்டி போல், அவசியமற்ற போட்டிச் சூழ்நிலைகளையும் ஏற்படுத்திவிடுகின்றனர். ஒருமுறை பதவியேற்று, பதவியதிகார ருசி கொண்டவர் தாம் புகழ் ஏணியின் மேலே செல்வதற்கு இலகுவான வழி, சமயத் தாப னங்களை தம் சொந்தப் புகழுக்காகக் கைப் பற்றி இறுகப் பிடித்துக் கொள்வதேயெனக் கருதுகின்றனர். இத்தகைய கொள்கை அவர்களுக்கு இறுதியில் பெரும் ஏமாற் றத்தை அளிப்பதை அவர்களே உணர வேண்டி வரும். சுயநலப் பற்றுடன் உண்மை யான சமயத் தொண்டாற்ற முடியாது. இத்தகையினரைக் கண்ட படிக்காசுப் புலவர் உண்மையான கள்வர் இனம் ஐந்து உண்டு. என்று நகைச்சுவையுடன் குறி சுட்டுள்ளார்.

"செழுங்கள்ளி நிறைசோலைத தண்டலைநீள்
நெறியாரே திருடிக்கொண்டே
எழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத
கள்ளரின் யாரோ வென்றால்
கொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர்
திருநீறு குழைக்கும் கள்ளர்
அழுங்கள்ளர் தொழுங்கள்ளர்
ஆசாரக் கள்ளரிவர் ஐவர் தாமே"

ஒரு கிழவி காலந் தவறாது நாடோறும் கோயிலுக்குப் போவாளாம். அயலில் உள் ளவர்களையும் வலோற்காரமாகக் கோயி லுக்கு இழுத்துச் செல்வாளாம். ஆனால் ஒரு நாள் இவள் கோயிலுக்குச் செல்லும் போது வீட்டிலேயிருந்த பாற்சட்டி மீது தகுந்த பாரத்தை வைக்காமல் அடுப்பி லேயே திறந்தபடி பாற்சட்டியை வைத்து விட்டுச் சென்ற நினைவு கோயிலுக்குள் நிற்கும்போது உதித்தது. தீபாராதனை நடக்கும் போது எல்லோரும் "அரோகரா" என்று சொல்லிக் கும்பிடும் சமயத்தில், கிழவிக்குக் கறுத்தப் பூனையொன்று வந்து பாற்சட்டியைத் தட்டிவிட்டுப் பாலைக் குடித்துக் கொண்டிருக்கும் தோற்றமே மூலத் தானத்தில் அவள் கண்ணுக்குப் புலப்பட்டது. ஆகவே அவள் அதைத் துரத் திக் கலைக்கும் சத்தமிட்ட வண்ணமே கைகுவித்துக் கும்பிட்டாளாம். பிள்ளையான் இப்படியான தொண்டு செய்யவில்லை. அவனுக்கு அம்பாள் எங்கும் காட்சி கொடுத் தாள். அவன் இதய கமலத்திற் குடி கொண்டாள். அவன் உண்மைத் தொண்டு புரிந்து, பயன் கருதாததொண்டு புரிந்து அமரரானான். மெய்யடிமைத்திறத்தைச் சேக்கிழார் சுவாமிகளும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் விளக்கமாகத் தெரிவித்துள் ளார்கள். இதே கருத்தை இருபதாம் நூற்றாண் டினரும் ஒப்புக்கொள்ளத் தக்க முறையில் டாக்டர் ரி. எம். பி. மஹாதேவன் அவர்கள் மெய்யடியார்கள் யார் என்பதைத் தாம் எழுதிய மெய்யடியார்கள் என்ற நூலில் மிகத் திட்டவட்டமாக விளக்கியுள்ளார். பிள்ளையானைப் பற்றிச் சிந்திக்கும் இவ் வேளையில் டாக்டர் அவர்கள் கூறுவதை யும் சிந்திப்பது பயன் தருவதொன்றாகும்.

"மெய்யடிமைத் திறத்திற்கு இனம், கொள்கை, ஆண், பெண், சமூகநிலை என்ற வேறுபாடுகள் கிடையாது. குறுகிய நோக் கங்களைக் கடந்து நிற்பவரே மெய்யடியா ராவார். எதிர்பாராத இடங்களிலும் மிகத்

தாழ்ந்த குடிகளிலும் மெய்யடியார்கள் தோன்றியுள்ளனர். செல்வர்களுள் இவர்கள் தோன்றுவதென்பது அரிதாகவே நிகழ் வதாயினும் அவர்களுள்ளும் தோன்றியுள்ள னர். பொதுவாகக் கூறுமிடத்து, இடைக் காலங்களில் பெண்களின் உரிமை வர வரக் கட்டுப்பாடுகளுக்குள்ளாயிற்று எனி னும், எந்தக் கட்டுப்பாடும் இந்தியப் பெண் களுக்குள் மெய்யடியார்கள் தோன்று வதைத் தடுக்கக்கூடவில்லை. மெய்யடியார் களில் பெண்களாயிருந்தவர் இறைவனைப் பின் பற்றுவதற்கு எந்தத் தியாகத்தையும் பெரிதென மதிக்கவில்லை. பிறவகைகளில் வலிவற்றவர்களுக்கும் மெய்யடிமைத்திறம் தனிப்பட்ட வலிவைத் தந்துள்ளது. இறை வனுடைய ஆற்றலுக்குட்பட்டவர்கள் உலகி யல் மரபுகளைப் பெரிதெனக் கருது வதில்லை. மிகச் சிறந்த அடியார்களைக் குறித்து நாரதர் தமது பக்தி சூத்திரத்தில் பின்வருமாறு கூறுகிறார். "தழுதழுத்த குர லுடனும் மெய்சிலிர்ப்போடும் கண்களில் நீர் பெருகவும் அவர்கள் தம்முள் உரை யாடுவர். தாங்கள் பிறந்த குடிகளையும் உலகத்தையும் அவர்கள் தூய்மையுறச் செய்கின்றனர். புனிதமான இடங்களைப் புனிதமாக்குகின்றனர். செயல்களை நலமும் செம்மையுமுறச் செய்கின்றனர்". (68-69) "பிறப்பு, கல்வி, அழகு, குடி, செல்வம், தொழில் போன்றவற்றால் ஏற்படும் உயர்வு தாழ்வுகள் அவர்களுக்குள் கிடையாது" (72) தலைசிறந்த சைவ அடியார்களுள் ஒருவ ரான திருநாவுக்கரசர் பின்வருமாறு பாடுகிறார்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்தரல்ல ராகில்
அங்கமெலாம்குறைந்தழுகுதொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே"

உண்மையில், இறைவனைக் காணும் நற்பேறு பெற்றவர்கள் உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமை பாராட்டுவதில்லை. "கல்வியும் வினையமும் நன்கு கற்ற பிரா மணனிடத்தும், பசுவினிடத்தும் யானை யினிடத்தும் நாயினிடத்தும், நாயைத் தின்னும் புலையனிடத்தும் பண்டிதர் சம பார்வையுடையோர்" என்று பகவத் கீதை கூறுகிறது. மெய்யடியார் உண்மையாகவே உலகக் குடிகள், உலக மக்கள் அனைவருக் குமே அவர்கள் உரியவராவர். அவர்களுக் குக் குறுகிய பற்று யாதும் கிடையாது.

சைவ சமயச் சபைகளிற் காணப்படும் ஊழல்களை அம்பலப்படுத்தி, சமயத் தொண்டு எனும் போர்வையிற் சிலர் செய்துவந்த அட்டூழியங்களையெல்லாம் கண்டிக்க அவதரித்தவர் நாவலர் பெரு மான். ஆனால் இக்காலத்தில் இத்தகைய ஊழல்களைக் கண்டிக்கவும் அம்பலப் படுத்தவும் நாவலருக்குப் பின் இனி யாரு ளர் நமக்கு? எனவே நம் சைவத் தாபனங்க ளில் சுயநலப்பற்று மேலோங்கிப், புகழேணி யில் இலகுவாக ஏற ஆசைப்படுவோர் அதி காரம் வகிக்க இடம்விட்டுக்கொடுத்து வாழப் பார்த்துக்கொண்டிருக்கும் கேவல நிலைமை ஏற்பட்டுள்ளது. இனியாவது இச் சபைகள் சீரான முறையில் இயங்கிப் பொது நலச் சமயத் தொண்டாற்ற முயலுமா என்பது கேள்வி.

– "புதியதேர்", 1973



## சமயப் பெரியோர்கள்

# வேலணை
# உயர்திரு . செல்லப்பா சுவாமிகள்

### (திரு . ச. கைலாயபிள்ளை - அதிபர்)

தற்போதுள்ள திருக்கேதீஸ்வரம் திருக் கோயிலின் உயர்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் கால்கோள் இட்டவர் செல்லப்பா சுவாமி யார் அவர்களாவர்.

இவர் வேலணை கிழக்கில் உள்ள வ. கணபதிப்பிள்ளை - பொன்னு (பொன்னம்மா) தம்பதியினரின் மகனாவார். இவருக்கு முத்தையா, தம்பாப்பிள்ளை (தம்பு), சிவகுரு என மூன்று சகோதரர்கள் இருந்தனர்.

இவர் குடும்பம் பொருளாதாரம் மற்றும் சகல துறைகளிலும் சீரும் சிறப்பும் மிக்க குடும்பமாக இருந்தது. இவர் இளமை தொட்டு கடவுள் பக்தி மிக்கவராகவும் விளங் கினார். இவர் வாழ்நாளெல்லாம் பிரம்மச் சாரியாகவே விளங்கினார். இவர் அளவு கடந்த தன்னம்பிக்கை உடையவராவார். எந்தக் கருமத்தையும் விடாமுயற்சியுடன் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர்; மிகுந்த விவேகி; எவருடனும் அன்பாகவும் பண்பாகவும் நடப்பவர்; பிடிவாத குணம் உள்ளவர். தூய வெள்ளை நிற வேட்டியும் வெள்ளை நிறச் சால்வையும் இவருடைய உடைகள். கழுத்தில் ஒரு உருத்திராட் சங்காய் மாலை இருக்கும். தாடி, மீசை இல்லாமல் முகம் எப்பொழுதும் அழகா கவே இருக்கும். நேரான நிமிர்ந்த தேகம் உடையவர். இவருக்கு மிகவும் விருப்பமான விடயம் திருக்கோவில்களைத் தரிசிப்பதும் சமயத் தொண்டு செய்வதுமாகும்.

திருக்கேதீஸ்வரப் பெருமானின் திரு வருளால் ஈர்க்கப்பட்டு அப்பெருமானை வணங்க விரும்பி 1947ஆம் ஆண்டளவில்

மாந்தையில் உள்ள திருக்கேதீஸ்வரத்துக்கு வந்தார். அங்கு கோயிலின் நிலைமையும் சூழல் சுற்றாடல் நிலைமையும் அவருடைய மனதைப் பெரிதும் பாதித்தது.

மூலஸ்தான தூபியும் அதனோடிணைந்த இரண்டு மண்டபமுமே கோயிலாக இருந்தது. சுற்றுமதில் இல்லை. சுற்றவரக் காடுதான் இருந்தது. அடியார்கள், யாத்திரீகர்கள் வந்து தங்க, மடமோ வேறு கட்டடமோ இல்லை. மன்னார் விடத்தல் தீவு வீதியில் இருந்து அல்லது மாந்தைச் சந்தியில் இருந்து கோயிலுக்கு வர ஒழுங்கான வீதி இல்லை. தீர்த்தக் கேணி இல்லை. மாந்தைச் சந்தியிலோ கோயிலடியிலோ கடைகள் அல்லது சாப்பாட்டுக் கடைகளோ இல்லை. கோயிலைச் சூழ அல்லது சமீபத்தில் குடியிருப்புகள் இல்லை. இதுதான் சுவாமிகள் போன காலத்தில் இருந்த தோற்றம்.

தனி ஆளாக கேதீஸ்வரம் சென்றவர் தன்னால் இயன்ற தொண்டு செய்ய வேண்டுமென்று தீர்மானித்தார். பக்கத்தில் பாலாவி ஆறு ஓடுகிறது. அது ஒரு சிற்றாறு. மாரியில் மாத்திரம் தண்ணீர் ஓடும். அந்தத் தண்ணீர் கடலுள் பாய்ந்துவிடும். மழை பெய்த அடுத்தநாள் ஆற்றில் தண்ணீர் நிற்காது. அதை மறித்துக் கட்டினால் வருடம் முழுவதும் நீர்நிற்கும் என்று தீர்மானித்து அக்காலத்தில் மன்னாரில் நீர்ப்பாசன எஞ்சினியராக இருந்த ஆறுமுகம் அவர்கள் உதவிபெற்று பாலாவி ஆற்றை மறித்து அணைகட்டி முடித்தார். அதன்பின் வருடம் முழுவதும் அந்த ஆற்றில் தண்ணீர் நிரம்பி இருந்தது. பாலாவி ஆற்றை மறித்துக்கட்டி குளமாக்கி அதாவது தீர்த்தக் கேணியாக்கியமை இவர் செய்த முதல் திருப்பணி.

அதன்பின் இவ்வாலயத்துக்கு வருபவர்கள் தங்கியிருந்து போவதற்கு ஒரு மடம் கட்ட வேண்டும் என்று தீர்மானித்து கொழும்பில் உள்ள வணிகப் பெருமக்களின் மற்றும் உயர் அரசாங்க பதவிகளில் உள்ளவர் உதவியுடன் ஒரு பெரிய மடத்தை அமைத்து சமய குரவர்கள் நால்வரின் பெயரால் நால்வர் மடம் என்ற பெயரையும் சூட்டினார். இது இவரின் இரண்டாவது திருப்பணி.

கோயிலுக்கு யாத்திரையாக வரும் அடியாருக்கு இலவச உணவும் அளிக்க வேண்டும் என்று கருதி கொழும்பில் உள்ள வணிகப் பெருமக்களின் உதவி பெற்று அன்னதானமும் செய்ய ஒழுங்குசெய்தார். அன்னதானத்துக்கு வேண்டிய அரிசி காய்கறிகள் கொழும்பிலிருந்து புகைவண்டியில் உயிலங்குளம் ஸ்ரேசனுக்கு வரும். உயிலங்குளம் புகைவண்டி நிலையத்துக்குச் சென்று அவற்றை மடத்துக்குக் கொண்டு வந்து அன்னதானமும் செய்தார். அன்னதானம் கொடுப்பதற்கு தனது சகோதரர் இருவர் உதவியையும் பெற்றுச் சிறப்பாகச் செய்து முடித்தார்.

இது இவரால் ஆற்றப்பட்ட மூன்றாவது திருப்பணி. மடம், அன்னதான ஒழுங்கு இவற்றால் இக்கோயிலுக்கு வரும் அடியார்கள் தொகை அதிகமாயிற்று.

இவ்வாலயத்திற்கு திருப்பணிச் சபை ஒன்றை அமைக்க வேண்டுமென்று கொழும்புக்குச் சென்று சேர் கந்தையா வைத்திய நாதன், தபால் மந்திரியாக இருந்த C. சிற்றம்பலம் முதலான பிரமுகர்களைச் சந்தித்து அச்சபையின் அவசியத்தை விளக்கினார். அவர்களும் இவருடைய கோரிக்கையை ஏற்று திருக்கேதீஸ்வர ஆலயத் திருப்பணிச்சபை என்ற பெயரில் ஒரு

அமைப்பை நிறுவினர். அத் திருப்பணிச் சபை நிர்வாகக் குழுவில் செல்லப்பா சுவாமி அவர்கள் நிரந்தர உறுப்பினர். மற்ற உறுப்பினர் வருடா வருடம் மாற்றத் திற்கும் உட்படலாம். இத் திருப்பணிச் சபை யினால்தான் இன்றைய கோயில் உருவா னது. இன்று இத்திருப்பணிச் சபை என்ற பெயர் திருக்கேதீஸ்வர ஆலய பரிபாலன சபை என்றும் பெயர் மாற்றம் பெற்றிருக் கலாம்.

திருக்கேதீஸ்வர புனருத்தாரண பணி களுடன் திரு. செல்லப்பாச் சுவாமிகளின் இறைபணி முற்றுப்பெறவில்லை. இவர் தான் பிறந்த வேலணைக் கிராமத்தில் தெப்பக் கேணியுடன் கூடிய ஒரு மடத்தை அமைத்தார். இதற்கு நால்வர் மடம் எனப் பெயரிட்டார். இங்கு திரு. எஸ். பி. சாமி அவர்களால் உபயமாகக் கொடுக்கப்பட்ட நடராசர் சிலையை வைத்து அதற்கு பூசை கள் ஒழுங்காக மேற்கொண்டார். இங்கு ஆனி உத்தரம் வெகு சிறப்பாக கொண்டா டப்பட்டு இவ்வுற்சவத்தில் நடராசப் பெரு மான் ஊர்வலம் வந்து, வெள்ளைக் கடற் கரையில் தீர்த்த மாடி மடம் திரும்புவார்.

இவர் தென்னிந்திய திருக்கோவில்கள், இலங்கையில் உள்ள கோயில்கள் எல்லா வற்றிற்கும் சென்று தரிசிப்பார். காசிக்கும் சென்று காசி விசுவநாதரைத் தரிசித்துக் கொண்டு 10 மாதமளவில் அங்கிருந்து விட்டுத் திரும்பி வரும்போது ஒரு லிங்கத் தையும் கொண்டு வந்து இவரால் தாபிக் கப்பட்ட வேலணை நால்வர் மடாலயத் தில் பிரதிஷ்டை செய்துவைத்தார். இக் காசிலிங்கத்துக்கு சிற்றாலயம் அமைத்துக் கொடுத்தவர். "பாதம்" என அழைக்கப்படு வரான திரு. சின்னையா சிவபாதம் ஆவார்.

மேலும் கிராமத்து மக்களுக்குக் குறிப்பாக இளைஞர்களுக்கு வருடந்தோறும் சைவசமயத் தீட்சை கொடுப்பித்தார். சைவ மக்கள் மத்தியில் காலநேரத்துக்கு கருமங் கள் ஆற்றும் பழக்கம் குறைந்து வருவதைக் கண்டித்து, குறித்த நேரத்துக்கு கருமம் செய்யும் பழக்கங்களை முன்னெடுத்தவர். இவர் முயற்சியால் கோவில் பூசைகள் மற்றச் சமய நிகழ்வுகள் ஒழுங்காக குறித்த நேரத்து நடைபெறவேண்டுமென்ற கருத்து மேலோங்க வழிவகுத்தது. இலங்கையில் சைவசமய மறுமலர்ச்சிக்கு வழிவகுத்த பெரியார்களுள் செல்லப்பாச் சுவாமிக்கு முக்கிய இடம் உண்டு.



# சமயப் பெரியோர்கள்

## அம்பிகை பக்தன், திருத்தொண்டர்

# திரு. கந்தையா தில்லையம்பலம்

## (5.3.1903 - 2.7.1975)

திரு. வ. நவரத்தினம்
(பாராளுமன்ற உறுப்பினர் - ஊர்காவற்றுறை)

**கா**லத்தையும் கற்பனையையும் கடந்தவள் எங்கள் முத்துமாரி. பல்லுயிரையும் காத்த வாறு வேலணையூர் பெருங்குளத்தின் தென் கரையிலே நின்று தவம் புரிந்து மோனத்தில் இருப்பவள் எங்கள் முத்து மாரி.

காலத்துக்குக் காலம் தன் திருக் கோவிலுக்குத் திருப்பணிகள் தேவை யென்று திருவுளங்கொள்ளும் சமயங் களிலெல்லாம் தவறாமற் திருத் தொண்டர் களை உற்பவிப்பாள் அம்பிகை. திருத் தொண்டர்கள் பலர் அவ்வப்போது தோன்றி அம்பிகையின் திருக்கடாட்சத் தைப் பெற்றுத் தேவ கைங்கரியத்தில் தம் வாழ் நாளைக் கழித்தமையின் பலனாகவே இப்போதிருக்கும் எழுச்சியுற்ற திருக் கோவிலை நாம் காணக்கூடியதாக இருக் கிறது. காசித்தம்பி என்றும், அம்பல வாண உடையார் என்றும், இராமலிங்க உடையார் என்றும், யாதவராய இராம நாதர், கதிர்காமர் ஆறுமுகத்தார், வைர முத்தர், கந்தர் வைரவநாதர், ஐயம் பிள்ளை கார்த்திகேயபிள்ளை என்று இன்னோரன்னார் செய்துவந்த திருப்பணி களை இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தநந்தனார் குலத்தோன்றலாகிய "பிள்ளையான்" என்னும் திருத்தொண்டர் தொடர்ந்து நடத்தி வந்தார். இந்தத் திருத் தொண்டர் வரிசையில் வந்தவர் தான் கந்தையா தில்லையம்பலம் என்னும் மெய்யடியார்.

இற்றைக்கு அறுபத்து மூன்று வருஷங் களுக்கு முன் வேலணைக் கிராமத்திலே சைவவேளாள குலத்திலே நாகப்பர்

கந்தையா என்ற சிவ பக்தருக்கும் அவரது தர்மபத்தினியாகிய தையல்முத்து அம்மை யாருக்கும் ஐந்தாவது குழந்தையாகப் பிறந் தார் நமது தில்லையம்பலத் திருத் தொண்டர். இளமைப்பருவத்திலேயே அம்பிகையின் திருக்கடைக்கண் பார்வை இவர் மீது படிந்தபடியால் அம்பிகையின் தாசனானார். கோயில் வீதியில் விளை யாடும் பருவத்திற்கூடக் கோவிற் பிரகாரத் தைச் சுத்தம் செய்வதை விளையாட்டோடு விளையாட்டாகச் சேர்த்துக்கொள்ளுவார். ஒத்த வயதினரோடு சேர்ந்து கோயில் வீதியிலேயே காலத்தைக் கழிப்பார்.

தக்க பருவத்திலே செல்லமுத்து அம்மையாரைத் திருமணம் செய்து எல் லோரையும் போல லௌகிக வாழ்க்கை யில் ஈடுபட்டார். குல மரபைப் பின்பற்றி உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்து வாழ்க்கை நடத்தினார். இன்முகத் தோடு விருந்தோம்பி, சேக்கிழார் கண்ட திருத்தொண்டர்கள் வாழ்ந்தவழி வாழ்ந் தார். 1972 ஆம் ஆண்டு ஆடிமாதம் 15ஆந் திகதி இவரது சகதர்மிணி இவரை விட்டுப் பிரிந்து இறைவனடி சேர்ந்தார். லௌகிக சம்பிரதாயத்துக்கு ஈர்த்துப் பிணைத்திருந்த கடைசிப் பற்று இற்றதுடன் தான் துறவு பூணக் காலம் வந்துவிட்டதெனக் கருதி னார் நமது தில்லையம்பலத்தார். அன்றி லிருந்து காஷாயம் பூண்டு திருத்தொண்டர் கூட்டத்திற் சேர்ந்து கொண்டார்.

கடந்த பல் ஆண்டுகளாக வேலணை பெருங்குளத்து ஸ்ரீ முத்துமாரி அம்பாள் கோவிலில் நடந்து வரும் திருப்பணி வேலைகளையும் பூசைச் சிறப்புகளையும் நித்திய நைமித்தியங்களையும் திருவிழாத் திருக்கோலங்களையும் அவதானித்து வந் தவர்கள் தில்லையம்பலத் திருத்தொண்ட ரின் அம்பாள் பக்தியையும் அவரது கண்டிப் பானதும் சுயநலமற்றதுமான நிருவாகத் திறமையையும் பெரிதும் வியந்து பாராட்டா மல் இருக்கமுடியாது. புகழேந்திகளும் சுய நலவாதிகளும் மலிந்து போய், கோவில் மணியகாரன் என்றும் பொதுநல ஸ்தா பனங்களில் உத்தியோகத்தர்கள் என்றும் மக்கள் பிரதிநிதிகள் என்றும் பதவிகளை நாடித்திரிந்து, அப்பதவிகளின் மூலம் தத் தம் சுயநலத்தையும் தமது குடும்பத்தின் நலத்தையும் முன்னேற்றம் அடையச் செய் யும் சுயநலப் பித்தர்களையே எந்தப் பக்கம் திரும்பினாலும் காணக்கூடியதான இந்தக் காலத்தில் திருத்தொண்டர் தில்லையம் பலத்தார் ஓர் அபூர்வப் பிரகிருதியாவார். அவருக்கு அம்பாள்தான் சர்வமும். நான், எனது என்ற சொற்கள் அவரது அகராதி யிலேயே கிடையாது. சுயநலம் மமகாரம் என்பவை அவரை அணுகமாட்டாது. அம் பாள் திருக்கோவிலின் உள்வீதிக்கு ஊர் மக்களிடம் தண்டிச் சீமெந்தினால் தளம் அமைத்தார். அந்தத் திருப்பணியைத் தில்லையம்பலத்தார் செய்தது என்று ஊரார் சொன்னபோதிலும் அவரோ "அம்பாள் செய்து தந்தாள்" என்று தான் சொல்லு வார். செய்ய முடியாத கருமத்தைப் பொறுப்பு ஏற்கும்போதும் "அம்பாள் முடித்துத் தருவாள்" என்று அம்பாள்மீது உரிமை கொண்டாடித் துணிகரமாகப் பேசுவார்.

கோவிற்றிருப்பணிக்காக எதைக் கொடுத்தாலும் ஏற்றுக்கொள்ளுவார். சிலர் புகையிலை முடிச்சுகளைக் கொடுப்பார்கள். அந்த முடிச்சுகளை மூட்டையாகக் கட்டித் தன் தலை மீதேசுமந்துகொண்டு போவார். சிலர் வாழைக்குலைகளைக் கொடுப்பார் கள். அவற்றைத் தன் தோள் மீதே சுமந்து

செல்வார். பிடியரிசிக் கடகத்தைத் தன் தலையிலே சுமந்து வீடு வீடாகத் திரிவார். உழவாரம் ஏந்திய கையினராகிய அப்பர் சுவாமியைப் போலவே தில்லையம்பலத் திருத்தொண்டரும் ஜீவன் முக்தர் நிலையை அடையும் பரிபக்குவத்தை அணுகிக்கொண்டிருக்கிறார் என்பதற்கு அறிகுறியாக அம்பாள் சேவையே ஆண்டவன் கட்டளை என்று சிரமேற்கொண்டு முழுநேரத் தொண்டனானார்.

இவரது தூய்மையான பக்தி கலந்த சேவையுள்ளத்தைக் கண்ணுற்ற ஊர்மக்கள் நிர்வாக சபைத் தலைவராகத் தெரிவு செய்து அம்பாள் கோவிலின் நிர்வாகத்தை இவரிடம் ஒப்படைத்தனர். கோவில் நிர்வாகமே இருபத்துநான்கு மணித்தியாலச் சுமையாக இருக்கும்பொழுது இன்னுமொரு பொறுப்பையும் தன் தலைமேல் சுமக்க வேண்டி நேரிட்டது. தேர்த் திருப்பணிச் சபையின் தலைவராக ஊர்காவற்றுறைக் காரியாதிகாரியாக (D.R.O.-Kayts) இருந்த திருவாளர் எஸ். விநாயகலிங்கம் அவர்கள் அங்குரார்ப்பணக் கூட்டத்திலே தெரிவு செய்யப்பட்டு வழி நடத்தி வந்தார். 1970ஆம் ஆண்டிலே அவர் மாற்றலாகிச் சென்ற பின்பு திருத்தொண்டர் தில்லையம்பலத்தாரே தலைவராக வழிநடத்தி வருகிறார். தேர்த் திருப்பணிச் சபையின் ஜீவநாடி போல் இயங்கும் செயலாளர் சதாசிவம் மாணிக்கவாசகர் புதுச் சித்திரத் தேர் அமைக்கும் மாபெரும் திருப்பணிப் பொறுப்பின் பெரும்பாகத்தை ஏற்று நடத்தி வந்தமையால் தலைவரின் பாரம் சற்று இலோசாக இருந்துள்ளது. திருத்தொண்டர் தில்லையம்பலத்தாரின் நிழல் போன்றவர் சதாசிவம் மாணிக்கவாசகர். அசலும் நிழலும் சேர்ந்து உழைத்துப் பெற்ற தன் பெறுபேறே அம்பாளின் புதிய சித்திரத் தேராக அமைந்துள்ளது. இதனைக் கைகூட வைத்த பிராட்டியின் திருவருளைப் பரவிக் கொண்டிருக்கிறார் நமது திருத்தொண்டர்.

பெருங்குடிப் பிறப்பினால் வந்த பண்பாடும், முற்றிய பரிபக்குவத்தினால் வந்த சாந்தமும், நிறைகுடம் போன்ற மெய்ஞ்ஞான பூரணத்துவத்தினால் வந்த அடக்க ஒடுக்கமும் ஒருங்கு சேர்ந்து இவரது துறவுக்கு மெருகூட்டுவனவாக அமைந்துள்ளன. உண்மைத் துறவிகளுக்கே உரிய குழந்தையுள்ளமும், இன்முகமும் அம்பாள் மேல் வைத்தஅழியா நம்பிக்கையும் மக்களைத் தன்வயப்படுத்தும் ஆயுதங்களாக இவரிடம் அமைந்துள்ளதனாற் கோவிற்றிருப்பணி நிதிக்குவைக்குப் பஞ்சமே நேர்ந்ததில்லை.

சைவம் தழைக்கவும், தமிழ் ஓங்கவும், வேலணையின் எழிலார்ந்த ஏற்றமிகு நல்வாழ்வு செழிக்கவும் தில்லையம்பலத் திருத்தொண்டர் அம்பிகையின் அனுக்கிரகத்தைப் பெற்றுச் சிரஞ்சீவியாக வாழட்டும்.

*"புதிய தேர்", 1973*





# சமயப் பெரியோர்கள்

## வெள்ளை நாகலிங்கம்

### (திரு மதி. அன்னலட்சுமி வீரசிங்கம்)

வேலணையில் தோன்றிய படிக்காத மேதைகளுள் முதன்மையானவராக விளங்குபவர் வெள்ளை நாகலிங்கம் ஆவார்.

1950களில் யாழ்ப்பாணக் குடாநாட்டில் விவசாயத்துறையில் இயந்திர பாவனை அறிமுகமாகத் தொடங்கியது. பல கிராமங்களில் முயற்சியாளர்கள் நீரிறைக்கும் இயந்திரம், உழவு இயந்திரங்களை வாங்கிப் பயன்படுத்தத் தொடங்கினர். விவசாய இயந்திரங்களை வேலணைக்கு அறிமுகம் செய்தவரில் திரு. நாகலிங்கம் முன்னோடியாகத் திகழ்கின்றார். இவரது உழவு இயந்திரமும், மூந்தாய்க் குளத்தில் கிடந்த மண்ணாலும் தான் வேலணை வடக்குப் பகுதியில் பெருமளவு நெற்செய்கை நிலப்பரப்பு தோட்டக் காணிகளாக மாறின. இதுவே கிராமத்தின் பொருளாதார மேம்பாட்டுக்கு வழிவகுத்தது. நாகலிங்கம் ஒரு இளைஞராக, விவசாயத் துறையில் ஏற்படுத்திய தாக்கம் வேலணை விவசாய மக்களின் வளர்ச்சிக்கு அடிகோலியது. இவர் ஒரு பக்கம் விவசாயியாகவும் தொழில் முனைவோனாகவும் மறு பக்கத்தில் இறைபணியிலும், திருப்பணி வேலைகளிலும் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

வேலணையில் சாதாரண குடும்பத்தில் பிறந்து, தனது 'இளமைக் கல்வியை சரஸ்வதி வித்தியாசாலையில் பயின்று, பின்னர் கிராமத்திலேயே விவசாயத்தில் ஈடுபட்டு, கிராமத்திலேயே தனது உறவினரைத் திருமணம் செய்து, கிராமத்திலேயே தனது உற்றார் உறவினருடன் இறுக்கமாக வாழ்ந்தவர்.

திறமைசாலிகளைத் தேடிச்சென்று பாராட்டுவது, உற்சாகப்படுத்துவது, அவர்களுக்கு ஆதரவு அளிப்பது போன்ற இவரது பண்பு காரணமாகவும் அவரது நடை, உடை, செயல் ஆகியனவும் இவருக்கு அன்றைய கறுவல் ஐயர், கைலாச நாதக் குருக்கள், நல்லை ஆதீன முதல்வர், செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி போன்ற பெரியோர் பலரது அறிமுகத்தையும் நட்பையும் கொடுத்தது. இதனால் சமூகத்தில் ஒரு கௌரவமான இடத்தைப் பெற்றுக் கொண்டார்.

கிராமத்தில் நடைபெற்ற பல்வேறு சமூக சமுதாய பணிகள் அபிவிருத்தி செயற்பாடுகள் இவரின் பங்குபற்றுதலுடனேயே நடைபெற்று வந்துள்ளன. இவற்றில் தன்னை முழுமையாக இணைத்துக் கொண்டார். வீடு தேடி யார் எவ்வுதவி கேட்டு வரினும் அவர்களைத் தங்கவைத்து உபசரித்து உதவியளித்து அனுப்புவார். தனது அறிவு, ஆற்றல், திறமை என்பவற்றை ஏனையோருக்கும் கிடைக்கச் செய்வதில் பேரார்வம் காட்டுபவர்.

வேலணை வங்களாவடி முருகன் ஆலயத் திருப்பணிக்காக ஆரம்பத்திலிருந்து தன்னாலியன்றவரை உழைத்து, அதன் குடமுழுக்கு வரையும் அயராது பாடுபட்டு அவ்வாலயத்தின் வளர்ச்சியே சிந்தனையாக வாழ்ந்தவர். வேலணை மேற்கு சிற்பனை முருகன் ஆலயம், வேலணைப் பெருங்குளம் முத்துமாரியம்மன், மண்கும்பான் பிள்ளையார் கோவில், வேலணை வைரவர் கோவில் போன்ற பல ஆலயங்களின் வளர்ச்சிக்காகவும் தன்னாலியன்ற பொருளுதவி புரிந்தும் சரீர உதவி புரிந்தும் வந்தார்.

நயினை நாகபூஷணி அம்மன், நல்லூர் கந்தசுவாமி கோவில் திருவிழாக் காலங்களில் வேலணை வங்களாவடியில் தண்ணீர்ப் பந்தல் சேவையும் மகேஸ்வர பூசையும் பல காலமாகச் செய்து வந்தார்.

திரு. நாகலிங்கம் அவர்கள் விவசாயத் துறையிலும் மன்னராகத் திகழ்ந்தார். புகையிலை, மிளகாய், வெங்காயம் போன்ற இவரது உற்பத்திப் பொருட்களுக்குத் தனி மவுசு உண்டு. பழமைகளைப் பேணிக் காப்பது போல் புதுமைகளைத் தேடிக் கண்டு செயற்படுத்துவதிலும் உதாரண புருஷராகத் திகழ்ந்தார்.

நயினாதீவுக்கு யாத்திரை மேற்கொண்டு செல்லும் சிங்கள அன்பர்களுக்கு வழியில் ஏதாவது தடங்கல் ஏற்பட்டுத் தவிக்க நேர்ந்தால் அவர்களைத் தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்று உரிய உபசரிப்புக் கொடுப்பார்.

இவர் சாதாரண மக்களின் நன்மை தீமைகளில் பங்குகொண்டு அவர்களுக்கு தேவையான உதவிகளைச் செய்து அவர்களின் நன்மதிப்பைப் பெற்றவர்.

அண்மைக் காலப் பிரச்சினைகளினால் வேலணையிலிருந்து மக்கள் இடம் பெயர்ந்த போதும், தனது பாரம்பரியமான "பழனி" இல்லத்தையும் தாய் மண்ணையும் விட்டு வெளியேறாது வைராக்கியதுடனிருந்து கடந்த 5- 5- 1992 இல் உயிரை மானிடர்க்கும் உடலைத் தாயகத்திற்கும் அர்ப்பணித்த மகான் வெள்ளை நாகலிங்கத்தின் புகழ் என்றும் நின்று நிலைக்கும்.

நாகலிங்கம் ஒரு சிறந்த விவசாயியாகவும், தொழிலதிபராகவும் வாழ்ந்ததுடன் இறைபணியில் ஈடுபட்டு பல சேவைகளை செய்துள்ளார். அவர் கிராமத்து மக்களின் நலனில் காட்டிய ஈடுபாட்டால் அன்புக்கும் மதிப்புக்கும் உட்பட்டார்.

# அம்பலவாண உடையார் - இராமலிங்க உடையார்
# கந்தோரும் - வீடும்



18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து 19 ஆம் நூற்றாண்டு இடைக்காலம் வரை வேலணையின் நிர்வாகச் செயலகமாக விளங்கிய விட்டின் இன்றைய தோற்றம்.

# புலவர்கள்

## திரு. கோ. பேரம்பலப் புலவர்

கலாநிதி. க. சிவராமலிங்கம்பிள்ளை
முன்னாள் பதில் அதிபர் யாழ். இந்துக்கல்லூரி

**ஊ**ரால் பெருமை சிலருக்கும் சிலரால் பெருமை ஊருக்கும் கிடைக்கிறது. தன் பெருமையை தன் மக்கட்கும், தன் மக்கட் பெருமையை தானும் பெற்று விளங்கும் ஒரு சில ஊர்களில் வேலணையும் ஒன்று.

செந்நெல் வளத்தாலும் பொன்செய் பயிர்கள் வளத்தாலும் நிரம்பி நிற்கும் வேலணை, சிவநெறி பெருக்கும் சான்றோ ராலும் செந்தமிழ்த்திறம் தெரி புலவர் களாலும் ஏற்றம் பெற்றது. சைவமும் தமி ழும் பாலொடு தேன்கலந்தது போல ஒன்றை ஒன்று தழுவி ஏற்றம் பெற்றது வேலணை மண்ணில்தான்.

காலத்தின் தேவை கருதி, இறைவன் யாழ்ப்பாணத்துக்கு அனுப்பி வைத்த மாமனிதன் நல்லை நகர் நாவலர் பெரு மான். இவரின் மருகரும் முதல் மாணாக் கனும் வித்துவ சிரோன்மணி பொன்னம் பலபிள்ளை.

பொன்னம்பலபிள்ளை சைவப் பேர றிஞரா? தமிழ்துறைபோய புலவனா? கலா ரசிகனா? என்று கேட்டால் விடை தருவது கடினம். உண்மையில் இவர் நிகரற்ற சர்வகலா வித்தகர்.

பொன்னம்பலபிள்ளையை நினைக்கும் போதெல்லாம் பளிச்சென்று தோன்றுவது அவரது சிந்தனைத் தெளிவே.

கந்தபுராணப் பாடல் ஒன்றுக்கு உரை வளம் பெருக்கிக் கொண்டிருந்தாராம். தெய்வயானை திருமணப் படலத்தில் இந்திரன் சிந்தனையாக. கவிக்கூற்றாக, "மருகன் என்றவனை உன்னி" என வரு கிறது. இதற்கு உரைவிரித்தார் வித்துவ சிரோமணி:

"மருகன் என்றவன்" தக்கன் சிவ பிரானைத் தன் மருகன் என்று கணித்து; பரம்பொருளின் பெருங்கருணைத் திறத்தை மறந்து, பின் இடர்பட்டதை நினைவு கூர்ந்து இந்திரன்- தான் மமதை கொள்ளக் கூடாது என்று நினைந்தானாம்" என்றார்.

இவ்வுரை நுட்பம் இவருக்கு முன் யாரும் கூறியதாக வரலாறு இல்லை என்றும், இவ்வியாக்கியானம் கேட்டு நாவலர் பெருமானே வியந்தார் என்றும் மரபு வழி அறிஞர்கள் கூறக் கேட்டிருக் கிறேன்.

இப்பெருந்தகையின் மாணாக்கன் தான் வேலணையூர் சைவ. நாகலிங்க உபாத்தியாயர். சிவநெறி காத்து வளர்த்த செம்மல், தீவகற்பத்தில் தமிழும் சைவமும் செம்மையாக வளர வழிவகுத்த சான் றோன். இப்படி எத்தனையோ!

இச் சிவத்தரையில், வேளாண் ஒழுக்க சீலர் கோணாமலைக்கும் சிவகாமி அம்மை யாருக்கும் தில்லைக்கூத்தன் திருவருளால் 1859 ஆம் ஆண்டு தை மாதம் 24ஆம் திகதி தோன்றிய திருமகனார் பேரம்பலம் என்று காரணப் பெயர்தாங்கி வளர்ந்து, நாடுபோற்றும் நற்புலவனாய் தண்ணளி மிக்க தமிழ்ச்சுடராய், பல அறிஞர்கள் வேலணையில் தோன்றி சைவமும் தமிழும் வளர்க்கக் காரணமானார்.

ஒரு மனிதனுடைய உயர்வுக்கு உறு துணை இரண்டென்பர். அவை குருவும் தாரமும். பேரம்பலவனாரின் அறிவுப் பசிக்கு, ஆர்வத்துக்கு தீனி போடக்கூடிய ஆசான்கள் கிடைத்தமை அவர் தவப்பயனே.

இந்த வரிசையில் இலக்கண இலக்கிய வித்துவான் திரு. கனகசபைப் பிள்ளை சித்தாந்தசாகரம் திரு. வி. கந்தப்ப பிள்ளை. சோதிட வித்தகர் திரு குமாரு என்போரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

புலமை, பயன்தர வேண்டுமானால் தரமுணர் புரவலரும் வேண்டும். "சடை யப்ப வள்ளல் இருந்திலரேல் கம்பன் நமக்குக் கிடைத்திருப்பானா"? புலவர் பேரம் பலவனாருக்கு வாய்த்த புரவலர்கள் - நண்பர்கள் அரசறிய வாழ்ந்ததீவுப் பகுதி மணியகாரர் திரு. வி. முத்தையா பிள்ளை யும் மகன் மு. சோமசுந்தரமும் ஆவர்.

புலவர் பேரம்பலவனார் தம் இல்லறப் பெரும்பேறாக சபாரத்தினம், கனகரத் தினம் என இரு புதல்வர்களையும்; பத்தினிப்பிள்ளை, சிவபாக்கியம், தங்கம்மா என மூன்று புதல்விகளையும் பெற்றார். பெண் வழிப் பேரனே முனைவர். கா. பொ. இ.

பேரம்பலவனாரின் புலமைப்பேறாக எமக்கு இன்று கிடைத்திருப்பன:

1. இலந்தைக்காட்டுச் சித்திவிநாயகர் இரட்டைமணிமாலை
2. வண்ணைச் சிலேடை வெண்பா
3. கடம்பர் யமகவந்தாதி
4. பெருங்குளத்து முத்துமாரி அம்மை ஊஞ்சல்.

தவிர, புலவர் பாடிய பல தனிப் பாடல்களும் சீட்டுக் கவிகளும் பல இருந் திருக்க ஆதாரம் உண்டு. இவை கிடை யாமை எம் தவக்குறையே.

புலவர் பிரானின் பாடல்கள், அவை பாடப்பட்ட காலத்துக்கேற்ப இறுக்கமா கவும், கொடும்புணர்ச்சிகள் கொண்ட

தாகவும் அமைந்திருத்தல் நியாயமே. அக்காலத்து, புலமையின் உரைகற்கள் இவையே. இருந்தும் பொறுமையுடன் கற்போருக்கு இவை தமிழ்க் கவிதை விருந்தே.

புலவர் பேரம்பலவனார் தமிழ்ச்சுடர் என்று கூறியுள்ளேன். இவர் ஏற்றிய விளக்குகளாக ஒரு சிலரைக் காணமுடிகிறது.

"உனக்கெல்லாம் இது சுட்டுப் போட்டாலும் வராது" என்று சப்புக் கொட்டும் சிலரைக் காணும்போதுதான் புலவர் பேரம்பலவனாரின் பெருமை பளிச்சிடுகிறது.

இவர்தம் புதல்வனார் பேர. கனகரத்தினம் இலக்கண, இலக்கிய அறிவும் புலமையும் கொண்டவராகத் தெரிகிறது. இவர் பாடிய "மணற்குன்று விநாயகர் நான் மணிமாலை" சிவப்பிரகாச சுவாமிகளுக்குப் பக்கத்து நிற்கிறது.

மேலும், திருவள்ளுவருக்கு வாழ்வு தந்தவர்கள் பதின்மர். முதல் நிற்பவர் பரிமேலழகர். திருவள்ளுவருக்கும் பரிமேலழகருக்கும் வாழ்வு தந்தவர் ஒருவர் உளர். அவர் எம்மவர். பெருமைப்படுகிறோம்.

தேர்வுகளுக்குப் பாடப்பகுதியாக அமைந்து சிலருக்குக் கசப்புத் தந்த திருக்குறளை, உலகப் பொதுமறை என அறிஞர் ஏற்றுப் போற்றவைத்த பெருமைக்குரியவரும் திருக்குறள் மாநாடுகளை, தமிழ் வழங்கும் நாடெல்லாம் எடுப்பித்தும் 22 தாக்கமான உரைநடை நூல்களையும் 3 கவிதை நூல்களையும் பல நூல்களைத் தொகுத்துப் பதிப்பித்து, தமிழ்த்தாய்க்குத் தொண்டாற்றியும், வள்ளுவனது அரசியல் ஞானத்தை இன்னதென எமக்குப் புகட்டியும் இன்றும் எம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கும் பேராசான் பண்டிதர் வித்துவான், சைவப் புலவர் கா. பொ. இரத்தினம் B.o.L,M.o.L.,B.A.Hons, Lond அவர்களை உருவாக்குவதில் பெரும்பங்கு கொண்டவர் புலவர் பேரம்பலவனார் என்று தெரியும் போது புலவர் பிரான் உச்சிமேற் கொள்ளத் தக்கவரே.

இப்புலமை மரபு வாழையடி வாழையாக வளர்வது கண்டும் கேட்டும் வேலணை மட்டும் இறும்பூதடையவில்லை; நானும் செருக்கடைகிறேன்.

புலவர் பேரம்பலவனாரின் ஆண் வழிப் பேரனார். க. சட்டநாதன் ஒரு விஞ்ஞானப் பட்டதாரி. பயிற்றப்பட்ட ஆங்கில ஆசான். நிறைந்த தமிழ்ப் புலமை வாய்ந்தவர். கருத்தாழம் மிக்க பல சிறு கதைகளை எழுதியுள்ளார். பல விருதுகளையும் பெற்றுள்ளார். இவர் சிறுகதைகள் சர்வதேச அங்கீகாரம் பெற்று ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, மேலைத்தேய சஞ்சிகைகளில் வெளிவந்துள்ளன.

இவர் எனது மாணவன். யாழ்/இந்துக் கல்லூரியில் சில ஆண்டுகள் என்னிடம் பயின்றவர். எனது கர்வம் நியாயமானது தானே.

புலவர் பேரம்பலவனாரின் நூல்கள் புதிய பதிப்புகளாக வெளி வரவேண்டும். உரையும் காணப்பட வேண்டும். இது என் ஆசை. வேலணையூரின் கடமை.



# புலவர்கள்

## புலவர் ஆறுமுகம் தில்லைநாதபிள்ளை

திரு. க. சட்டநாதன் (ஆசிரியர்)

1885ஆம் ஆண்டு (பார்த்திப வருஷம்), சித்திரை மாதம், 18ஆம் நாள் திரு. ஆ. தில்லைநாதப் புலவர் அவர்கள் இம் மண் மகிமை கொள்ளும் வகை அவதரித்தார்.

புலவர் பிறந்த ஊர் வேலணை, சரவணை. இவர் உயர்குடித் தோன்றலான ஆறுமுகம் என்பவருக்கும் நாயகப் பிள்ளை எனும் மங்கை நல்லாளுக்கும் புதல்வராகப் பிறந்தார். இவருக்கு முன் ஒரு சகோதரியும், இளமையாக ஒரு சகோதரியும் இரு தம்பிமாரும் குடும்பம் சிறக்கத் தோன்றினர்.

இவர் உரிய காலத்தில் சிவத் தொண்டரும், முருகபக்தருமான திருமுருகப்பர் சிற்றம்பலத்தின் புதல்வி செல்லம்மாவைத் திருமணம் செய்துகொண்டார்.

இவருக்குப் பெற்றோரிட்ட பெயர் தில்லைநாதபிள்ளை. இவர் இளமையில் கல்விப் பெருங்கடல் கந்தப்பிள்ளை அவர்களிடம் வித்தியாரம்பம் செய்யப் பெற்று வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலையில் கல்வி பயிலுங்கால், நாகலிங்க உபாத்தியாயர், தம்பு உபாத்தியாயர், கந்தப்பிள்ளை உபாத்தியாயர் ஆகிய மூவரிடத்தும் நீதிநூல்களையும் இலக்கணநூல்களையும் நிகண்டு முதலிய கருவி நூல்களையும் கற்றுத் தெளிந்தார்.

மிக இளமையில் சமய தீட்ஷை பெற்ற புலவர் கந்தபுராணம், பெரிய புராணம், திருவிளையாடற்புராணம் ஆகியவற்றைக் கற்றறிந்து சைவ ஆலயங்களில் புராண படனம் சொல்வதிலும் நுட்பமாக உரை சொல்வதிலும் சமர்த்தராய் விளங்கினார்.

பாட்டுப் புனைவது புலவருக்கு

இயல்பாய் அமைந்த கொடையாகும். எந்த இனப் பாட்டையும் அழகுற விரைவாக ஆக்கிடும் வல்லமை பெற்றிருந்தார். இவர் யாத்த பாடல்கள் யாவும் சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்கவையாகும். நல்ல இலக்கிய ஞானமுள்ள இவரது இல்லமோர் அரிய நூல்நிலையத்துக்கு ஒப்பானதாய் ஊர்த் தமிழ் ஆர்வலர்க்கு இருந்தது. இவரிடம் கிடைத்தற்கரிய இலக்கிய, இலக்கண, காவிய, இதிகாச நூல்கள் சொந்தமாக இருந்தன.

இப்பனுவல்கள் யாவும் இவரது இளவல்களான ஆ. சிவசம்பு, ஆ.தம்பிராசா ஆகியோர் தேடிய செல்வங்களாகும். இவரது தம்பி திரு. தம்பிராசா கவிபுனையும் ஆற்றலுடன், நல்லிசைப் புலவராயும் விளங்கினார்.

புராண, இதிகாச நூல்களைப் பலரும் அறிய எடுத்துரைக்கும் புலவரை-உபாத்தியாயர் என அழைப்பது அக்கால வழக்கம். உபாத்தியாயரான இவரை, ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரது தமையனாரின் புதல்வரும், வித்தியாசாகரருமான திரு.த. கைலாசபிள்ளை அவர்களும் அவரது மருகரும் தமிழ்ப்புரவலருமான தீவுப்பகுதி மணியகாரர் திரு. மு. சோமசுந்தரம் ஜே. பி. அவர்களும் "புலவர்" எனும் அரிய பட்டத்தை வழங்கி கௌரவம் செய்தனர். அதன் பின்னரே இவருக்குத் தில்லைநாதப் புலவர் எனும் பெயர் வழங்கலாயிற்று.

சைவ எல்லப்ப நாவலர், நிரம்பவழகிய தேசிகர், சிவப்பிரகாச சுவாமிகள் முதலானோர் இயற்றிய நூல்களைப் படித்து, ஆங்காங்குள்ள கவிநயங்களைப் பிறருடன் பகிர்ந்து மகிழ்ந்த, புலவருடைய பல்லாண்டு கால கேண்மையாளர்களாக வேலணை மேற்கு, சைவத் தமிழறிஞர் திரு. ச. மகாலிங்கம், தமிழ்ச் சான்றோர் திரு. அம்பலவாண நாவலர், வித்துவான் க. வேந்தனார் ஆகியோரைக் கூறலாம்.

புலவர் அவர்கள் தனது கவிபாடும் ஆற்றலுக்குக் குருவாக வரித்துக் கொண்டவர், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் ஆவர். அப்பெரும் புலவர் யாத்த திருவிடைமருதூர் திருவந்தாதி, பாலைவனப் பதிற்றுப் பத்தந்தாதி, திருத்தில்லை யமகவந்தாதி முதலிய பல பிரபந்தங்களை அல்லும் பகலும் அயராது அன்புடன் கற்று ஆவிதளிர்த்து, தமிழறிஞர்களுக்குச் சுவைகுன்றாதுரைக்கும் தமிழ்ப்பற்றுமிக்க உளம் படைத்தவரிவர்.

மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்குக் கிடைத்தவாய்ப்புகள் யாவும் தில்லைநாதப் புலவருக்குக் கிடைத்திருக்குமேயானால் தமிழகம் பாராட்டும் வகை பல பிரபந்தங்களையும் புராணங்களையும் பாடி இவர் தமிழிலக்கிய உலகை வியப்பிலாழ்த்தியிருப்பார் என்பது வித்துவான் க. வேந்தனார் அவர்களது விதப்புரையாகும்.

தில்லைநாதப் புலவர் முருகப் பெருமான் மீது மீளாக்காதலர். அவர் ஆக்கி வெளிவந்த முதல் பக்தி இலக்கியப் பனுவல் சரவணை, பள்ளம்புலம் முருகமூர்த்தி திருவிரட்டை மணிமாலையாகும். இவ்வாக்கம் அவரது இளவல் கவிஞர் ஆ. தம்பிராசா அவர்களால் 08. 12. 1921 இல் வெளியிடப்பட்டது. இந்நூலின் சிறப்பை உணர்த்தும்வகையில் ஒரு பாடலைப் பதச்சோறாய் இங்கு தருகின்றோம்.

"நன்றுறல் தீதறல் வேண்டினெ வற்றைபு
நல்குமருட்
குன்றென மேவிநற் குன்றுதொ றாடிக்
குன்றார்முனிக்குத்
தென்றமிழ் போதித் தெம்பள்ளம் புலத்திருக்
கோவில் கொண்ட
மின்றவழ் வேற்கர வள்ளலைப் போற்றுதிர்
மேலவரே"

புலவரது இரண்டாவது ஆக்கம் சர வணை பள்ளம்புலம் திருமுருகரலங்காரம் ஆகும். இந்நூல் 1927 இல் வெளியிடப்பெற் றது. இதனைத் தமிழ்ப்புரவலரும் தீவுப் பகுதி மணியகாரருமான திரு. வி. மு. சோமசுந்தரம் அவர்கள் வெளியிட்டு வைத் தார்கள். இவ்விலக்கிய நூல் பல தமிழறி ஞர்களால் பாராட்டப்பட்ட ஒன்றாகும்.

திரு. ம. தம்பு உபாத்தியாயர், மகா வித்துவான் மு. ஆறுமுகம்பிள்ளை, வண்ணைநகர் க. வைத்தியலிங்கம்பிள்ளை, வேலணை சைவப் பிரகாச வித்தியா சாலை முன்னாள் தலைமையாசிரியர் திரு. நா. கந்தையா எனப் பலரது பாராட்டைப் பெற்றபோதும் நாடு போற்றும் நற்கவிஞ ரும் தங்கத் தாத்தா நவாலியூர் க. சோம சுந்தரப் புலவர் அவர்களது பாராட்டு மிக மெச்சத்தக்கதாகும். அவரது பாராட் டுப் பாடல்.

"பள்ளம் புலத்துவடி வேற்பகவன் பதம்பரவி
யுள்ளங் கனிந்தொன் கவியலங் காரமொன்றோ
தினன்பேர்
கொள்ளுந் தவமுறு மாறுமுக நற்குரி சிறந்த
தெள்ளும் கலைத்தில்லை நாதபிள்ளைத் திறற்
சீரியனே"

புலவருடைய இளவல் கவிஞர் சு. ஆ தம்பிராசா அவர்களும் கீழ்வரும் வகை பாராட்டியுள்ளார்.

"தருமுருகு விரிமலர் தடந் தொளிர்
பள்ளம் புலத்துத் தளிக்கண்மேவி
யருமுருகி னறுமணமா ரவிமுதற்கொண்
டடியர் செயர்ச் சனையை யேற்று
வருமுருகு தருகடப்ப மலரலங்க
லணி புயத்தெம் வரதர்ப் போற்றித்
திருமுருக ரலங்காரஞ் செய்தமுன்
னோற்கஞ்ச லியான் செய்கின்றேனே"

புலவர் அவர்கள் வாக்கினால் வடிவம் பெற்ற பிறிதொரு நூல் பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் பதிகம். இந்நூல் வேலணை மேற்கு மகா கணபதிப்பிள்ளை யார் (முடிப்பிள்ளையார்) மேல் அருளிய தாகும். இப்பனுவல் 1948 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இப்பதிகம் மீளவும் 25. 05. 1990 இல் வெளியிடப்பட்ட ஆலய மகாகும்பாபிஷேக சிறப்பு மலரில் முழுமை யாக இடம்பெற்றுள்ளது.

மேற்கூறிய பக்திநூல்கள் தவிர, புலவர் அவர்கள் இயற்றிய புளியங்கூடல் மாரியம் மன் பதிகம், வேலணை இலந்தை வனம் சித்திவிநாயகர் பதிகம் என்பன ஸ்ரீதையல் நாயகி அச்சகத்தில் அச்சுவாகன மேறி 1948 இல் வெளியிடப்பட்டன.

புலவர் அவர்களது ஆற்றலை இனங் காண்பதற்கு அவர்தம் புளியங்கூடல் அம்மன் பதிகத்தின் ஒரு பாடலை இங்கு தருகிறோம். அவர் அம்மனை அகம் குழைந்து இறைஞ்சி ஏத்தும் அழகே அழகு.

"நித்தியமு நினைதருட் டிருமேனி யைக்கண்க
ணீரிறைத் துக் காணவும்
நினையெனது புன்றலை வணங்கவும் வலமாக
நின்கோயில் கால்கள் வரவும்
கைத்தலமி ரண்டுஞ் சரி செய்ய வுங்காது
கருதுனது நாமதேயங்
களை மகிழ்வி னொடுகேட்க வும்நினது துதியினைக்
கற்றுநாத் தோத்திரத்தை
மெத்துமன் பொடுபாட வுஞ்செய்து விமலையே
மெய்ப்பேறு கூட அருள்வாய்.
மேதகமி யார்கேட்ட தெல்லாங் கொடுத்திடும்
வித்தகியு னக்கி தெளிதே."

வேலணை சித்திவிநாயகர் பதிகமும் சோடை போனதொன்றல்ல. விநாயகப் பெருமானை; தந்தையும் தாயுமாய்க் கருதி, ஊனுருகி, பக்தி உளமெலாம் பொங்க, இறைஞ்சி ஏத்துகின்றார். இப்பாமாலையி லிருந்து மாதிரிக்காக ஒரு பாடல்:

"கற்பகக் கடவுளே யற்பொடுனை எண்ணடியர்
கருமமெல் லாந்திருப்தி
கரமாக முற்றச் செ யும்விக்ன ராசமா
காருண்ய மெய்த்தெய்வமே
பொற்பகத் துள்ள பரி பூரணா னந்தமெய்ப்
போதமே ஞானஒளியே
பொங்கிவழி தருகருணை வெள்ளமே மேலான
புத்தமிர்த மேகற்பகத்
துற்பவித் தலர்பூவில் வழி செழுந்தேனேந
லோருளத் துள்ளு மொளியே"

புலவரது முதல் இரண்டு ஆக்க இலக்கியப் பனுவல்களுமே முருகன் மீது பாடப் பட்டவைதான். இதனை ஆரம்பத்தில் பார்த்தோம். அவர் குமரக் கடவுள் மீது கொண்ட மீளாக் காதலே - அத் தெய்வச் சிறுவன் மீது பல பாமாலைகளை ஆக்கி அளிக்க அவருக்கு தூண்டுதலாய் அமைந்தது.

அவர் முருகன் மீது ஆறா அன்புடன் பாடிய பாமாலைகள் அவர்தம் கவி ஆற்றலுக்கு உரைகற்களாய் அமைந்தவையாகும். அந்நூல்களில் சில:

1) நாரந்தனை சுப்பிரமணிய சுவாமி பதிகம்
   - 1951 இல் வெளியிடப்பட்டது.
2) மேலைக்கரம்பன் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி பதிகம்
   - 1951 இல் வெளியிடப்பட்டது.
3) நல்லூர் பதிற்றுப்பத்தந்தாதி
   - 1952 இல் நல்லூர் முருகன் சந்நிதானத்தில் அரங்கேறியது.
4) புளியங்கூடல் கதிர்வேலாயுதசுவாமி பதிகம்
   - 1955 இல் வெளிவந்தது.
5) சரவணை பள்ளம்புலம் முருகமூர்த்தி திருப்பதிகம்
   - 1957 இல் வெளியிடப் பெற்றது.
6) சரவணை திருப்பளம்புல யமகவந்தாதி (முருகமூர்த்தி மீதருளியது)
   - 1961 இல் வெளிவந்தது.
7) நல்லைத் திருவருக்க மாலை
   - 1961 இல் வெளியிடப்பட்டது.
8) சரவணை பள்ளம்புலம் முருகமூர்த்தி திருவூஞ்சல்

இத்திருநூல்கள் அனைத்திலுமே புலவர் அவர்களது கற்பனை வளத்தையும், கவின் மிகு சொல்லழகையும் வீறார்ந்த புலமைச் சீலத்தையும் சிறப்பையும் நாம் கண்டுகொள்ள முடியும்.

ஈசன் மகனான முருகனை மட்டுமல்ல, தில்லைவள்ளல் சிவனை நினைந்து பாடிய

அருள்நூல்கள் பலவற்றையும் இவர் யாத்துள்ளார். குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஒரு சில படைப்புகள்:

1) தில்லைச் சிலேடை வெண்பா - 1959 இல் வெளிவந்தது.
2) தில்லை நடேசர் தியானப்பதிகம் 1963 இல் வெளியிடப்பெற்றது.
3) கரம்பன் விசுவநாத சுவாமி தோத்திரசோடசம் 1965 இல் வெளிவந்தது.
4) கரம்பன் விசுவநாத சுவாமி திருவூஞ்சல்

இவை தவிர வாணிவணக்கம் எனும் தோத்திர மாலை, கவி சுப்பிரமணிய பாரதியைப் பின்பற்றி, எளிமை நலன் மிளிர, இன்பத் தமிழ் நடையில் எழுதியுள்ளார். இந்நூல் 12. 10. 1956 இல் வெளிவந்தது.

இவ்வாக்கங்களுடன் 1957 இல் வெளியிடப்பட்ட ஸ்ரீமதி சடையம்மா அவர்களின் ஞான சமாதியின் ஞாபகப் பாக்கள் எனும் நூலும் சீரிய, சைவ மக்கள் மனதை விட்டகலாத பனுவலாகும்.

தமிழ் மீதும் சைவத்தின் மீதும் தளராப் பற்றுறுதியும் பேரன்பும் பூண்டொழுகிய பெரும் புலவரான தில்லைநாதப் புலவர் அவர்களைப் பல சமூக நிறுவனங்களும் இலக்கிய ஆர்வலர்களும் விழா எடுத்து, பொன்னாடை போர்த்தி, கௌரவம் செய்து மகிழ்ந்தனர். தமிழறிஞர்களாலும் சான்றோர்களாலும் அப்பெருமகனாரது பணி பாராட்டப்பட்டுள்ளது.

அப்பாராட்டுரைகள் பற்றி ஈங்கு சிலது பார்ப்போம்:

1) சரவணையூர் புலவர்மணி ஸ்ரீ ஆ. தில்லைநாதபிள்ளை எனும் கட்டுரையில் வித்துவான் க. வேந்தனார் அவர்கள்:

"புலவர் பாடிய பிரபந்தங்களில் தில்லைச்சிலேடை வெண்பா, நல்லைத் திருவருக்க மாலை, சரவணை திருப் பள்ளம்புல யமகவந்தாதி, பள்ளம்புலம் திருமுருகரலங்காரம் என்பன மிகச்சிறந்தன வாகும். புலவர்கள் கூடி, பாடிச் சுவைக்கத்தக்க கற்பனைவளமும் சமய சாஸ்திர மரபும் கொண்டனவாய் விளங்கும் சிறப்பைப் புலவர் கவிதைகளில் காணலாம். பழைய தமிழ் மரபைத் தழுவிப் புலமை நலங் கனியப் புலவர்கள் பாடிய பிரபந்தங்களைத் தில்லைநாதப் புலவர் பிரபந்தத் திரட்டு என்ற பெயருடன் வெளியிட்டு விழாக் கொண்டாடுவதே அவருக்கு நாம் செய்யும் பெரும் நன்றிக் கடனாகும்."

2) யாழ். இலக்கிய வட்ட வெளியீடான தெய்வத் தமிழ்ப் பிரபந்தங்கள் எனும் தொகுதி வெளியீட்டுரையில் திருமுறைச் செல்வர் எஸ். விநாயகமூர்த்தி அவர்கள்:

"இறைவனைப் பாடுதலே மேலான இன்பம். தில்லைநாதப் புலவரும் இறைவனைப் பாடி இன்புற்ற அனுபவத்தைத் தெய்வத் தமிழ்ப் பிரபந்தங்கள் என்ற இந்நூல் நன்கு எடுத்துக்காட்டுகிறது. பக்திச் சுவை மிகுந்த இந்த நூலைத் தொகுத்த இரசிகமணி கனக. செந்திநாதன் அவர்களின் தொண்டும் நூலை வெளியிட்டு வைத்த யாழ். இலக்கிய வட்டத்தின் பணியும் பாராட்டுக்குரியன."

3) அதே விழாவில் வித்துவான். க. சொக்க லிங்கம் அவர்கள்:

"கவிதைக்கு ஓசையே பிரதானமானது. ஓசையின்றிக் கவிதை இல்லை. ஓசையே புலவனையும் இரசிகனையும் ஒன்றிணைக் கின்றது. பக்திப் பாசுரங்களில் இறைவனை யும் அடியவரையும் பிணைக்கும் கருவியாக ஓசை அமைகின்றது. கோயில்களில் பூசை நேரங்களில் இசை இப்பணியையே புரிகின் றது. ஓசைச் சிறப்பு தில்லைநாதப் புல வரின் பாடல்களில் மேலோங்கி நிற்கின்றது.

4) பேராசிரியர் நா. சுப்ரமணியன் அவர்கள்:

"பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும்; அவற்றுட் சில பிள்ளைத் தமிழ், கலம்பகம், மும்மணிக்கோவை, இரட்டை மணிமாலை, அந்தாதி, சிலேடை என்பனவற்றைத் தில்லைநாதப்புலவர் சிறப்புறக் கையாண்டுள்ளார்.

"ஊஞ்சல் மரபு மாணிக்கவாசகர் காலத்துக்குப் பின் சமய தத்துவ மரபாகி விட்டது. மாணிக்கவாசகரால் தோற்று விக்கப்பட்ட இம்மரபைப் பின்பற்றிப் பல ஊஞ்சல்களையும் தில்லைநாதப் புலவர் அழகுறப் பாடியிருக்கிறார்."

5) புலவரின் சமய இலக்கியப் பணி பற்றி, இலக்கியக் கலாநிதி. பண்டித மணி சி. கணபதிப்பிள்ளை அவர்களின் பாராட்டு:

"யாழ்ப்பாணத்திலே கோயில்கள் தோறும் கந்தபுராணம் படித்துப் பொருள் சொல்லுவதிலும் வழிபடு தெய்வங்கள் மீது தோத்திரங்கள், பிரபந்தங்கள் செய்வதிலும் தமது காலத்தைக் கழித்த புண்ணியவான் களாகிய புலவர்களுள்ளே சரவணையூர் ஆ. தில்லைநாதப் புலவர் ஒருவர். இவரு டைய பிரபந்தங்களிலே சிலேடைகள், யமகங்கள் விரவியிருப்பதுண்டு. அவற்றின் பொருளை விளக்குவதற்கு இக்காலத்து வித்துவத் திறமை போதியதாகாது."

6) தெய்வத் தமிழ்ப் பிரபந்தங்கள் எனும் நூலின் தொகுப்பாசிரியர் இரசிகமணி கனக. செந்திநாதன் அவர்கள்:

"நாம் கண் காணக் கூடியதாக வித்துவ சிரோமணி பிரம்மஸ்ரீ சி. கணேசையர் அவர்களும், நவாலியூர் க. சோமசுந்தரப் புலவரும், சரவணையூர் ஆ. தில்லைநாதப் புலவரும் வேறு சில புலவர் பெருமக்களும் வாழ்ந்து, ஈழத்தமிழை வளர்த்தார்கள். பல பாடல்களை தோத்தி ரப் பாடல்களை ஆக்கி அளித்தார்கள். இவர்களில் இறுதியாக 1966 வரை வாழ்ந்த வர் தில்லைநாதப் புலவர் ஆவர்."

"...... திரு. தி. ச. வரததராசன் அவர்கள் இவரைப் பற்றி ஒருமுறை கூறி, ஒரு சில நூல்களைப் படித்துப் பார்க்கும் படி என்னிடம் தந்தார். அவற் றில் ஒன்று தில்லைச் சிலேடை வெண்பா; மற்றது ஒரு யமகவந்தாதி. அவை என்னு டைய புத்திக்கு எட்டாதவையாக, விளங்க முடியாதவையாக, கடும் நடையுடையன வாக இருந்தன."

7) சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவரின் மகன், சென்னை லோயலாக் கல்லூரி முன்னாள் தமிழ் விரிவுரையாளர், கலைமாணி கு. முத்துக்குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள்:

"உலகமெலாம் படைத்தழிக்கும் உமாபதியைப்
போற்றிசெய்ம் உறுதியோடு
அலகில் பல பதிகங்கள் ஊஞ்சல்கள்
துதிக்கவிகள் ஆக்கித் தந்தோன்
பல கலைநூல் கற்றுணர்ந்த பண்டிதனாய்ப்
பாவலனாயப் பண்பின் மிக்க
புலவரெலாம் புகழ்ந்தேத்தும் போதகனாம்
தில்லைநாதப் புலவ ரேறே"

8) வேலணை மேற்கு, சைவத் தமிழ் அறிஞர் திரு. ச. மகாலிங்கம் ஜேபி. அவர்கள்.

"பாவலரென் றிட்டாலும் சாலும் சாலும்
பண்டிதரென் றிட்டாலும் சாலும் சாலும்
நாவலரென் றிட்டாலும் சாலும் சாலும்
நம்மூரில் உபாத்தியாயர் என்றும் சொல்லி
ஆவலினாற் புலவரெனும் சிறப்புப் பேரே
ஐயாட்டைப் பராயமுளார் தாமும் தேர
எவருமே சொலிச் சொல்லி இயற்பேர் தோன்றாது
எங்கு மென்றும் புலவரெனக் குலவினானே."

9. கவிமணி வி. கந்தவனம் அவர்கள்:

"திண்ணிய அறிஞர் வாழும்
செந்தமிழ் யாழ்ப்பா ணத்துக்
கண்ணெனத் திகழும் கந்த
புராணக லாசா ரத்தின்
எண்ணிலாப் பொருள்கள் எல்லாம்
எம்மனோர்க் குணர்த்தி வாழ்ந்த
புண்ணியர் தில்லை நாதப்
புலவர்தம் மேன்மை வாழ்க."

10. நடைபெற்ற பாராட்டுவிழா ஒன்றில் (04. 05. 1966) கவிக்கொண்டல் தில்லைச் சிவன் அவர்கள்.

"தில்லை நாதப் புலவ
திருந்து நற் புலவ ரேறே
"ஒல்லைவா வருக" வென்றே
உவந்துமை வரவேற் கின்றோம்
நல்லநா வலரின் பண்பும்
நவாலியூர்ப் புலவர் வீறும்
தெள்ளிய அறிவுங் கொண்ட
திருவினாய் வருக வாழி!"

"பாண்டியன் சேரன் சோழன்
பாரியின் றில்லை எம்மை
ஆண்டிட இருப்ப ராகில்
ஆனைமேல் நும்மை ஏற்றி
வேண்டிய தெல்லாந் தந்து
விருதளித் துவக்குங் காட்சி
ஈண்டுயாங் காண்ப தன்றோ
இன்தமிழ்ப் புலவ வாழி!"

தமிழ் மணக்க, தமிழ்ப்புலவர்கள், புரவலர்கள் சூழ, வாழ்வாங்கு வாழ்ந்த புலவர் அவர்கள், தமது எண்பத்தோராவது வயதில் (05. 07. 1966) தமிழ் மண் துயருறும் வகை எம்மை விட்டுப் பிரிந்து, இறைபதம் எய்தினார். அவரது ஆத்ம வலிவும் விகசிப்பும் என்றென்றும் எமக்குத் துணையாக இருக்கும்.

தமிழிருக்கும்வரை, தில்லைநாதப் புலவர் நாமம் வாழும்.



## புலவர்கள்

# தமிழ்ப் பேரன்பர், வித்துவான் க. வேந்தனார் (1918 - 1966)

கலாநிதி, சாகித்தியரத்தினம்
குகஸ்ரீ க. சொக்கலிங்கம் (சொக்கன்)

சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியில்

"காலைத் தூக்கிக் கண்ணில் ஒற்றிக்
கட்டிக் கொஞ்சும் அம்மா
பாலைக் காய்ச்சிச் சீனி போட்டுப்
பருகத் தந்த அம்மா"

என்ற பாடலின் அடிகள் ஈழத்தமிழ்ச் சிறுவர் சிறுமியரின் மழலை மாறா வாய் களிலெல்லாம் தவழ்ந்தன. இது போன்ற சிறுவர் பாடல்கள் பலவற்றையும் சிறுவர் கள் தம் பட்டறிவு, சொற் களஞ்சியம் ஆகிய எல்லைக்குள் நின்று பாடிய வித்துவான் க. வேந்தனார், தமிழின் கரைகண்ட பெரும்புலவர் என்றால் அதனை ஏற்றிடத் தயக்கம் உண்டாவது வியப்பன்று. "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொரு ளாயும் பின்னைப் புதுமைக்குப் பேர்த்துமப் பெற்றியனாயும்" விளங்கிடும் சிவபெருமான் போன்றவளே தமிழன்னையும் எனக் கொண்டு அவ்விரண்டினையும் போற்றி அவற்றில் தாம் கண்ட அல்லன தள்ளித் தமிழ்ப் பேரன்பராய்த் தாம் பெற்ற பட்டத் தால் மட்டுமன்றி கொண்ட கருத்திலும் வழு வாது வாழ்ந்தவர் வித்துவான் வேந்தனார்.

"பாடுகின்றோர் எல்லோரும் கவிஞர் அல்லர்
பாட்டென்றால் பண்டிதர்க்கே உரிமையல்ல
ஓடுகின்ற பெருவெள்ளப் பெருக்கே போல
உணர்ச்சியிலே ஊற்றெழுந்த ஒளியாய் ஓங்கி
வாடுகின்ற மக்களினம் மகிழ்ச்சி கொள்ள
மறுமலர்ச்சிப் பெருவாழ்வை வழங்கு மாற்றல்
கூடுகின்ற கொள்கையினால் எழுச்சி கொண்டு
குமுறுகின்ற கோளரியே கவிஞ னாவான்".

இவ்வாறு தமிழின் மறுமலர்ச்சிப் புது வாழ்விற்கு வாய்வலிக்கக் குரலெடுத்துக் கூவிய கவிக்குயில், அறுபதுகளில் பண்டிதர்

கூட்டத்தோடு மரபுப் போராட்டத்தினை இலங்கை முற்போக்கெழுத்தாளர் நடத்திய பொழுது பண்டிதர் பக்கம் சார்ந்து மரபு பேணப் போராடியதும் இவ்விடத்தில் நினைவு கூரத்தக்கதே. மரபை வரம்பு கடந்து மீறுதல், தமிழுக்கு ஊறுவிளைவிக் கும் என்ற அச்சமே, அவரை மரபு போற்றி யோருடன் இணைய வைத்தாலும், விட்டு விடுதலையாகி நின்று தமிழ்க் கவிதையுல கில் புதுமைப் புரட்சி நிகழ்த்த (யாப்பில் அல்ல, கருத்தில்) அவர் தயங்கியதே இல்லை.

கவிதையுலகோடு நின்றுவிடாது கருத் துலகிலும் தமிழர் விடுதலைக்காய் வீறுடன் முழங்கியதும் அம்முழக்கங்கள் கவிதை, கட்டுரை வடிவில் வெளியிட்டதும் விதந்து கூறவேண்டுவனவாகும்.

## வேந்தனாரின் தொலைநோக்கு

ஈழத் தமிழரின் விடுதலைக்கு அஹிம்சைவழிப் போராட்டம் உகந்ததன்று, என்று ஐம்பதாண்டுகளுக்கு முன்பே உணர்ந்து எடுத்துரைத்த தொலைநோக் கும் வேந்தனாருக்கு உண்டு.

புத்தகங்கள் பல அடுக்கிப் பூக்கள் தூவிப்
புதுக்கரும்பும் நறுங்கனியும் படைத்துப்
போற்றி
எத்தனையோ நூற்றாண்டாய் ஏத்தி ஏத்தி
எழிலாரும் கலைமகளை இரந்து விட்டோம்
புத்துணர்வும் போர்விறனும் பொலிய
வேண்டில்
புலம்பூத்த இளந்தமிழர் புகலக் கேண்மின்
கத்தியுடன் ஈட்டிவாள் தீட்டி வைத்தே
கலைத்தேவி கழல்பரவிக் கடல்போல்
ஆர்ப்போம்.

உலகாண்ட தமிழரினம் ஓம்பித் தந்த
உயிர்க்கலையை அடிமைகளாய் உலையும்
நாங்கள்
பலவாண்டாய்ப் பாராட்டி வளர்த்திட்டாலும்
பாரிலுள்ளோர் அதன்பெருமை பகர
மாட்டார்
புலமாண்ட கலைமகளைப் போற்றும் வீரப்
புதல்வர்களும் புதல்வியரும் புலமையோடு
நலமாண்ட நம்நாட்டை நாமே ஆளும்
நல்வாழ்வும் தருக என நயந்து கேட்பீர்

## உயிர்க்கலை

தன்னுயிரைக் காத்துப் பகைவன் உயிரை எடுப்பதும் வேண்டும் பொழுது தன்னுயிரை வழங்குவதுமாகிய போர்க் கலையையே வேந்தனார் உயிர்க்கலை என்று போற்றுகின்றார். போரின் குறியீடுக ளாக வேந்தனார் மட்டுமன்றி அவரின் சமகாலத்தவரான கவிஞர்களும் வேலை யும் வாளையுமே கையாண்டுள்ளமை இங்கு குறிப்பிடவேண்டியதாகும். "கொலை வாளினை எடடா மிகு கொடியோர் பகை அறவே" என்பது பாவேந்தர் பாரதிதாச னின் பாட்டடி. வேலுக்கும் வாளுக்கும் மாற்றாக இன்றைய புதுப் போர்க்கருவிகள் என்று நாம் பொருள்கொள்வது பிழையன்று.

## வேந்தனாரின் வாழ்க்கைப் பாதையில்

முன்பு கடலால் பிரிந்திருந்து, இன்று யாழ்ப்பாண நகரத்தோடு பாலமிட்டு இணைக்கப்பட்டுள்ளதும், சென்ற நூற்றாண் டிலும் முன்னரும் இன்றும் சைவ, தமிழ் அறிஞர் பலரையும் நவீனகாலக் கல்விப்

புலங்களிலே தோய்ந்தோர் பலரையும் தன்னகத்துக் கொண்டதும் வேலணையா கும். இதுவே வேந்தனாரின் தாயகம். இவர் தந்தையார் கனகசபை; தாயார் தையல் நாயகி. 5.11.1918 இல் இவர் பிறந்தார். பெற்றோரின் ஒரே மகனான இவரின் பதிவுப் பெயர் நாகேந்திரம் பிள்ளை. தம் ஆசிரியரான இளமுருகனாரின் அறிவுறுத் தலால் அப்பெயரை மொழிபெயர்த்துத் தனித்தமிழில் "வேந்தனார்" என இவர் இட்டுக்கொண்டார். "நாக" என்னும் அடையை நீக்கினால் எஞ்சுவது இந்திரன். தொல்காப்பியம் இந்திரனுக்கு வழங்கிய பெயர் வேந்தன். (வேந்தன் மேய தீம்புனல் உலகமும்) அதனோடு "ஆர்" என்ற மதிப் புப் பன்மை கூடி "வேந்தனார்" ஆயிற்று அவர் பெயர்.

வேலணையிலுள்ள சைவப் பிரகாச வித்தியாசாலை, சரசுவதி வித்தியாசாலை என்பன வேந்தனாரின் தொடக்கப் பள்ளி கள். ஆங்கிலக் கல்வியைப் பாரதிபோல வெறுத்தோ, தொடர வாய்ப்பின்றியோ இருந்த நிலையில், இவர் தமிழ் உயர் கல்வியை ஆசிரியர் உதவியின்றித் தாமே மேற்கொண்டு யாழ்ப்பாணம் ஆரிய திரா விட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் பிரவேச, பால பண்டிதத் தேர்வுகளிலும் மதுரைத் தமிழ்ப் பண்டிதர்த் தேர்விலும் சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் தேர்விலும் மிகச் சிறப்பாகச் சித்தியடைந்தார். இவற் றோடு உளவியற் கலாநிதி கு. சிவப்பிர காசம் அவர்களை முதல்வராகக் கொண்டு இயங்கியதும் சி. சிதம்பரப்பிள்ளை பி. ஏ., பி.எஸ்சி., இளமுருகனார், நவநீத கிருஷ்ண பாரதியார் முதலியோரை விரிவுரையாளர் களாகப் பெற்றதுமான திருநெல்வேலி பர மேசுவரா பண்டித ஆசிரிய கலாசாலை யிலே பயின்று பயிற்சிபெற்ற ஆசிரியருமாகி, 1946 தொடக்கம் தாம் அமரராகும் வரை (1966) பரமேசுவராக் கல்லூரியின் தலை மைத் தமிழ் ஆசானாகவும் விளங்கினார்.

தமிழிலக்கண இலக்கியங்களில் மட்டு மன்றிச் சைவசித்தாந்தத்திலும் துறைபோன சைவப் புலவராய் வேந்தனார் விளங்கிய மையைப் பாராட்டி "அவர் தண்தமிழ்த் தாயின் தனிச் செல்வத் தகைமைகளைத் தேமதுரத் தமிழ்ப்பாக்களால் திசை மணக் கத் திகழ்வித்திருப்பதற்காகத்" திருவாவடு துறை ஆதீனத்தார் "தமிழ்ப்பேரன்பர்" என்ற மதிப்பார்ந்த பட்டத்தினை திருவாரூர் மொழியரசி அரங்கேற்ற விழாவின்போது வழங்கினர். 1964 இல் ஸ்ரீ லங்கா சைவா தீனம் "சித்தாந்தசிரோமணி" என்ற பட்டத் தைத் தனது மாநாடொன்றின்போது வழங் கிச் சிறப்பித்தது.

## வேந்தனாரின் மங்கல மனைமாட்சி

1947 இல் வேந்தனார் வேலணையைச் சேர்ந்த நாகலிங்கம் என்பாரின் செல்வப் புதல்வி சவுந்தரநாயகியை மணந்து கொண்டார். இந்த அன்புத் தம்பதிக்கு "தம்மில் தம் மக்கள் அறிவுடையராகப் பிறந்த சேய்கள் ஐவராவர். இவர்களில் மூத்தவர் திருவாட்டி கலையரசி சின்னையா. பேரா தனைப் பல்கலைக்கழகத்தில் தமிழைச் சிறப்புப் பாடமாகக் கொண்டு முதல் வகுப் பில் தேர்ந்து அப் பல்கலைக்கழத்திலும், பின்பு யாழ்ப்பாணப் பல்கலைக்கழத்திலும் விரிவுரையாளராகப் பணியாற்றி இன்று, பொறியியலாளரான தமது கணவருடனும் பிள்ளைகளுடனும் அயல்நாடொன்றில் வசிக்கின்றார். இவரின் இளவல் இளங்கோ மொறட்டுவப் பல்கலைக்கழகத்தில் மின் பொறியிலாளராய்ச் சிறப்புத் தேர்வடைந்து

அங்கே விரிவுரையாளராகி புலமைப் பரிசி லோடு ஜேர்மனி சென்று தமது துறையில் கலாநிதியானார். அவரும் இன்று வெளி நாடொன்றில் குடும்பத்தோடு வாழ்ந்து வருகின்றார். அடுத்துப் பிறந்த கலையரசி வித்தியாலங்காரப் பல்கலைக்கழகத்தில் கற்று கலைமாணியானபோதிலும் விதிப்பய னாய் அமரராகிவிட்டார். இவருக்கு அடுத்த வரான இளஞ்சேய் கணக்காளராய் வெளி நாட்டில் குடும்பத்தோடு குடியேறிப் பணி புரிந்து வருகின்றார். இவரின் தங்கை தமிழரசி இளமையிலேயே காலன் வாய்ப் பட்டார்.

## வேந்தனாரின் மேம்பாடுகளும் அமரத்துவமும்.

தம்காலத்தில் ஈடிணையற்ற சொற் பொழிவாளராகவும் தலைசிறந்த கவிஞரா யும் தமிழ் சைவம் சார்ந்த ஆழமும் உணர்ச்சி வளமும் பொருந்திய கட்டுரை யாசிரியராயும் இலக்கிய, சமய பாட வழிகாட்டி நூல்களின் ஆசிரியராகவும் விளங்கிய தமிழ்ப்பேரன்பர் வேந்தனார் 18. 06. 66 இல் புகழுடம்பெய்தினார். இவரின் மறைவு குறித்து வெளியான புகழுரைகள் மிகப் பல. அவற்றுள் குறிப்பிட்டுக் காட்ட ஒன்றை மட்டும் தருகின்றேன். அது பன்மொழிப் புலவர் அமரர் தெ. போ. மீனாட்சிசுந்தரனார் வழங்கியது.

"அவருடைய நினைவு அவருடைய மாணவர் உள்ளத்தில் நிலைத்து நின்று அவருடைய வழியிலே அவர்கள் சென்று தொண்டாற்றி வெற்றிபெறுவார்கள்".

## வேந்தனாரின் எழுத்தாக்கங்கள்

வேந்தனாரின் ஆக்கங்களாய் வெளி வந்தவற்றை மூன்று பிரிவுகளுள் அடக்கலாம்.

1. நூல்வடிவில் வெளியானவை
2. பத்திரிகைகளில் வெளியானவை
3. கையெழுத்துப் படிகளாகவோ, தட்டச்சுப் படிகளாகவோ உள்ளவை.

## I. நூல்வடிவில் வெளிவந்தவை.

க. யாழ்ப்பாணத்துத் திருநல்லூர்த் திருப்பள்ளியெழுச்சி (1961)

உ. கவிதைப் பூம்பொழில் (1964)

ங. கம்பராமாயணம் - கும்பகர்ணன் வதைபடலம் - உரை

சு. கம்பராமாயணம் - காட்சிப் படலமும் நிந்தனைப் படலமும் - உரை

ரு. கம்பராமாயணம் - மந்தரை சூழ்ச்சிப் படலமும் கைகேயி சூழ்வினைப் படலமும் - உரை

சா. பாரதியார் பாடல்கள் - விளக்கம்

எ. இந்து சமயம்

(க. முதல் எ. வரையுள்ளவை க. பொ. த. (சா/த) வழிகாட்டி நூல்கள்)

## II. பத்திரிகைகளில் வெளியானவை.

இலக்கியம், சமயம், சமூக விழிப்பு சார்ந்த சொற்பொழிவுகள் தொடர்பான கட்டுரைகள் இந்து சாதனம், தினகரன், யாழ்ப்பாடி, ஈழநாடு, தமிழ் இளைஞன், வீரகேசரி ஆகியவற்றில் அவ்வப்போது வெளி யானவை எல்லாமாகத் தொண்ணூற்றேழு. இவை நூல்வடிவில் வெளியாகும்பொழுது வேந்தனாரின் ஆளுமையின் முழுப் பரி

மாணத்தையும் நாம் அறிய வாய்ப்புண்டா கும். சமகாலப் பிரச்சினைகளை முன் னிறுத்தி இவர் யாத்த "உற்றதுணை", "காதற்கலை வாழ்வில்" என்ற நெடும் பாடல்கள் அவர்தம் கவித்துவ வீறையும் புதுமை வேட்கையையும் நன்கு புலப் படுத்தும்.

## III. கையெழுத்துப் பிரதியாக உள்ளவை.

1. மாம்பழம்
2. அக்கா
3. பொன். இராமநாதன்

(1–3: சிறுவர் பாடல்கள்)

4. திருநல்லூர் திருவந்தாதி - சமயம்
5. வைத்தீஸ்வரா வித்தியாலயப் பொன் விழா வாழ்த்து - வாழ்த்து
6. கம்பனென்றொரு மானிடன் வாழ்ந் தனன்.

வேலணைவாழ் பெரியோர்கள் மேற் குறித்தவற்றை நூல்வடிவில் வெளியிடும் வாய்ப்பு நேருமானால் (இவை வேந்தனா ரின் மகள் திருவாட்டி கலையரசி சின்னையா விடம் உள்ளன) தேகாந்த நிலையில் வேந்தனாருக்குக் கௌரவக் கலாநிதிப் பட்டம் வழங்க ஈழத்துப் பல்கலைக்கழகங்க ளில் ஒன்றாவது முன்வர வாய்ப்புண்டு. செய்வார்களா?





# புலவர்கள்

# பண்டிதர் பொ. ஜெகநாதன்

## திருமதி பொ. சண்முகலிங்கம் - வேலணை

பண்டிதர் பொ. ஜெகநாதன் ஆசிரியர் அவர்கள் வேலணை கிராமத்தில் அம்மன் கோவிலடியைச் சேர்ந்த வர்த்தக பிரமுகர் பொன்னம்பலம் தங்கமுத்து தம்பதிகளுக்கு 2வது மகனாக 10. 08. 1908 இல் பிறந்தார். ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிசன் பாடசாலையிலும் உயர் கல்வியை வேலணை சரஸ்வதி உயர் நிலைப் பள்ளியிலும் கற்றார். பின்னர் திருநெல்வேலி ஆசிரியர் கலாசாலையில் சேர்ந்து அங்கு இவர் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஐயம் திரிபறக் கற்றார். அதனால் இன்று யாழ்ப்பாணத் தமிழ் கூறும் நல்லுலகம் யாழ்ப்பாணத் தமிழரசர். சரித்திரத்தை உள்ளதை உள்ள படி ஆய்வு செய்து எழுதவல்ல ஓர் வரலாற்று ஆசிரியரைப் பெற்றது.

இவர் 1933 இல் தமது 25 வயதில் வேலணை சரஸ்வதி உயர் நிலைப் பள்ளியில் வரலாற்றாசிரியராக முதன் முதலாக நியமனம் பெற்று பணிபுரியத் தொடங்கினார். அதன் பின்னர் இடைக்காடு புவனேஸ்வரி வித்தியாசாலை, கல்வியங்காடு செங்குந்த கல்லூரி, திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாசாலை ஆகிய பாடசாலைகள் இவர் சேவையினால் சிறந்தன. ஆசிரியர் ஜெகநாதன் அவர்கள் சிறுவயதிலேயே கவிபுனையும் ஆற்றல் உடையவராய் இருந்தார். நினைத்த மாத்திரத்தில் அழகு தமிழில் அர்த்தமுள்ள கவிதைகளை இலக்கணச் சுத்தமாக இயற்ற வல்லவர். தமிழ் மொழியிலும் சைவ சமயத்திலும் கொண்ட பற்றினால் தன் வாழ்நாளின் பெரும் பகுதியை தமிழுக்கும் சைவத்துக்கும் அர்ப்பணித்தார். வேலணை பெருங்குளம்

## வேலணை

## கத்தரித் தோட்டமும் - மிளகாய்த் தோட்டமும்



முத்துமாரி அம்மன் மீது கொண்டிருந்த பெரும் பக்தியால் அம்மன் புகழ்பாடும் பல கவிதைகளை இயற்றி பாடிப் பதிப் பித்துள்ளார். அத்தகைய பாடல்களை 25. 11. 1973இல் யாழ்ப்பாண சைவ பரி பாலன சபை வெளியிட்டு வைத்துள்ளது. ஆசிரியரின் ஆற்றல் கண்ட வேலணையூர் பெரியவர்கள் வேலணை முத்துமாரி அம்மனுக்கு ஊஞ்சல் பாட்டுப் பாடித் தரும்படி கேட்டதற்கிணங்க அவர் அம்மன் திருவூஞ்சற் பாவை இயற்றி வெளியிட் டுள்ளார். இது 1967இல் வெளியிடப்பட்டது. அவ்வாண்டில் இருந்து இவ்வூஞ்சற்பாக் களே அம்மனுக்கு இன்றும் ஆராதிக்கப்படு கின்றன. அத்துடன் வேலணையூர் பிரபல வர்த்தகர் அருணகிரி அவர்களின் வேண்டு கோளுக்கிணங்கி அதி அற்புதமும் அதிசய மும் கொண்ட வேலணை அம்மன் வர லாற்றை கவிதையில் புனைந்து தந்தார். இக்கவிதைகள் பாட்டுக்கொரு புலவன் பாரதியாரின் பாஞ்சாலி சபதம், குயிற்பாட்டு எனும் படைப்புகளுக்கு ஒப்பானவையாகும். இந்நூல் பெருந்தகை மு. வா. அருணகிரி அவர்களின் அனுசரணையில் 21. 8. 1968 இல் அச்சுவாகனமேறியது. இது பற்றி அருணகிரி அவர்கள் நூலின் பதிப்புரை யில் "இவ்வம்மன் கோவில் உண்டாகி பன் னெடுங் காலமாகியும் அதன் வரலாறு வெளி யாகவில்லை என்பது எனக்கு விசாரத் தைக் கொடுப்பதாக இருந்தது. இவ்விசாரத் தால் தூண்டப்பட்ட நான் அக் கோவிலின் வீதியருகே அமைந்த அரசினர் தமிழ் கலவன் பாடசாலை ஆசிரியர் ஆராய்ச்சி யாளர், பண்டிதர், புலவர் திரு. பொ. ஜெக நாதன் அவர்களிடம் எனது விசாரத்தை வெளியிட்டேன். அவர்கள் மேற்படி கோவில் வரலாற்றை எழுதித் தந்ததோடு மேற்படி கோவில் ஊஞ்சற் பாட்டையும் எழுதித் தந்தார்கள். அவர்கள் தந்ததற்கு நன்றி உடையேன்." என கூறியுள்ளார். ஆசிரியர் ஜெகநாதன் மேலும் மேலும் வேலணை அம்மன் புகழ் பரப்பும் ஆர் வத்தால் திரு. க. சோமசுந்தரப் புலவர். பண்டிதமணி பிரம்ம ஸ்ரீ சு. நவநீத கிருஷ்ண பாரதியார், வித்துவமணி பிரமஸ்ரீ சி. கணேசையர் ஆகிய பெரியவர்களை அணுகி வேலணையூர் முத்துமாரி அம்மை மீது பதிகம் பாடித் தரும்படி வேண் டினார். அவர்களும் அவ் வேண்டுகோளுக் கிசைந்து அம்மனுக்குப் பாமாலைகள் புனைந்து கொடுத்தார்கள். அவற்றை எல்லாம் ஒன்றாகச் சேர்த்து நூல் வடிவில் வேலணையூர் முத்துமாரி அம்மை பதிகம் என்னும் பெயரில் ஜெகநாதன் பதிப்பித்து வெளியிட்டார். இதைப்பற்றி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் தமது மதிப் புரையில் "மும்மணிகளை சேர்த்து முத்து மாரிக்கு தோத்திரங்களை செம்மையுறச் செய்தார் ஜெகநாதன். இம்மையிலும் அம்மையிலும் நன்மை பெற அச்சியற்றித் தந்தஇது வெம்மை பிறவியிலும் வித்து" என குறிப்பிட்டுள்ளார். இக் கவிதைகளால் தமிழ்மொழி அழகும் ஆற்றலும் பெற்றது. அதைப் படிப்போர்க்கு அம்மன் மீது பக்தி பெருக்கெடுக்கும் என்பது திண்ணம்.

ஆசிரியர் ஜெகநாதன் அவர்கள் சமயப் பணிகள் மட்டுமன்றி தமிழ் மொழிக்கு வளம் சேர்க்க இலக்கியம், வரலாறு ஆகிய துறையிலும் அரும் பணியாற்றியுள்ளார். அந்த வரிசையில் அடியார்க்கு நல்லார் வரலாற்று ஆராய்ச்சி எனும் ஆய்வு நூலைக் குறிப்பிடலாம். இந்நூலை 1944 இல் இந்தியா வில் அச்சிட்டு வெளியிட்டார். இது ஐம் பெருங் காப்பியங்களுள் ஒன்றாக எண்ணப் படும், சிலப்பதிகாரத்திற்கு உரை இயற்றிய

அடியார்க்கு நல்லாரின் வரலாற்றை ஆராய்ந்து எழுதப்பட்டதாகும். இந்நூலுக்கு தமிழ் நாட்டுப் பேராசிரியர் உயர் திரு. எஸ். சோமசுந்தரபாரதியார் தமது பதிப்புரையில் "யாழ்ப்பாணத்து வேலணை சரஸ்வதி உயர் நிலைப் பள்ளி ஆசிரியர் திரு. பொ. ஜெகநாதன் எழுதிய அடியார்க்கு நல்லார் வரலாற்றாராய்ச்சி எனும் கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். கொங்கு நாட்டு நிரம்பையர் (காவலன் நல்லூர்) ஆய அடியார்க்கு நல்லார் ஈழநாட்டு சிங்கையரசன் குணபூசணசிங்கை ஆரியனுக்கு அமைச்சராயும் அவ்வரசன் படைத் தலைவன் காங்கேசனுக்கு அன்பருமாய் இருந்து சிங்கையில் (நல்லூரில்) சிலப்பதிகார உரை எழுதினார் என்றிவ்வுரைகாரரை முடிவு கட்டுகின்றார்." இப்போது நல்லூர் எனப்படும் பழைய சிங்கையில் மந்திரியாய் இருந்த "பண்டிதமணியான அடியார்க்கு நல்லாரே இளங்கோவடிகளின் முத்தமிழ் முதற்காப்பிய விரிவுரைகாரனால் பெரும் புலவர் அருமரசர் வினையாட்சிக்குரியராம் பெருமை நிறுவிய சீர் அடியார்க்கு நல்லார்க்கும் அவ்வுண்மை கண்டு வெளியிட்ட தனிச்சிறப்பு திரு ஜெகநாதன் பண்டிதருக்கு உரியவாகும். தன் நுண்மதியால் எண்ணு பல சான்றுகளை இணைத்திந்ததுணிபு வலியுறுத்த முயன்றெழுதிய இக்கட்டுரை இப்பண்டிதரின் கல்வி வளம் எதற்கும் வாதவலி உரைப்பவற்றை வற்புறுத்தும் உள்ளவுரன் யாரும் கூறாச் செய்திகளை ஆராயும் பேரார்வம் முதலிய சால்புகளை விளக்குகின்றது. இனிய தமிழ் உரை நடையும் சொல்வளமும் இவ்வுரையை அழகு செய்கின்றன." எனக் குறிப்பிட்டுள்ளார். இந் நூல் இதுவரைகாலமும் ஈழத்தில் வெளிவந்த சிறந்த ஆய்வு நூல்களில் ஒன்றென இலக்கிய பேரவையின் விருதினைப் பெற்றது. 1988 இல் ஆசிரிய ஜெகநாதன் அவ்விருது வழங்கி கௌரவிக்கப்பட்டார். இந்நூல் வெளியிடப்பட்ட காலகட்டத்தில் இந்நூலினைப் பற்றி இந்துசாதன பத்திரிகை 21. 12. 44 இல் இத்தமிழ் வசன நூல் இலகுவான தெள்ளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. படிக்கும் மாணவர்களுடைய அறிவை விரிக்கும் பான்மையது என்றும் தினகரன் பத்திரிகை 24. 01. 45 இல் இந் நூல் மிக விரிவாகவும் நுட்பமாகவும் ஆராயப்பட்டிருக்கின்றது. தக்க ஆதாரங்களை எடுத்துக்கொண்டு நிரூபண முறையாக ஆராய்வு நிறுவப் பட்டிருக்கின்றது. தமிழ் இலக்கிய ஆராய்ச்சி வல்ல தமிழ் மாணவர் ஒவ்வொருவரும் இந்நூலை வாசிக்க வேண்டும் என்றும் வீரகேசரி 03. 12. 44இல் இப் புத்தக ஆசிரியர் தகுந்த ஆதாரங்களோடு தமது ஆராய்ச்சி முடிவை வெளியிட்டிருக்கின்றார். இத் துறையில் இவ் ஆசிரியர் மேலும் ஈடுபட்டால் தமிழுக்கு மேலும் சிறந்த தொண்டு செய்தவர் ஆவர். இலங்கை வித்தியா போதனி யூன் 1945இல் அடியாருக்கு நல்லார் வரலாற்று ஆராய்ச்சி இயற்றிய வேலணை சரஸ்வதி உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் பொ. ஜெகநாதன் அவர்கள் தமது முடிவை ஆதாரங்களோடு நிரூபிக்கிறார் என்று பாராட்டி கருத்து வெளியிட்டுள்ளது.இந்நூலினை படிக்க நேர்ந்த எழுத்தாளரான (செங்கை ஆழியான்) உயர்திரு. க. குணராசா எம்.ஏ. இ.நி. சே. அவர்கள் 10. 7. 87 இல் இவரது இன்னுமொரு படைப்பான யாழ்ப்பாண தமிழரசர் வரலாறும் காலமும் எனும் நூலுக்கு வழங்கிய மதிப்புரையில் "அடியார்க்கு நல்லார் வரலாற்றாராய்ச்சி என்ற ஆய்வு நூலினைப் படித்தபோது எனக்கு வியப்பும் நம் நாட்டவர் ஒருவர் ஆக்கிய நூல்

என்பதனால் பெருமதிப்பும் பெருமிதமும் ஏற்பட்டன. படித்து முடித்தபோது நிச்சய மாக இந்நூல் தத்துவ கலாநிதி பட்டத்திற்கு விதந்துரைக்கத்தக்க ஆய்வு நூல் என்ற எண்ணம் மனதில் தோன்றியது" எனக் குறிப் பிட்டுள்ளார். அடுத்து இவர் யாழ்ப்பாணத் தமிழரசர் வரலாறும் காலமும் எனும் ஒரு வரலாற்று நூலை எழுதியுள்ளார். இந்நூல் 1988 இல் யாழ் இலக்கிய வட்டத்தினால் நல்லூர் திருஞான சம்பந்தர் ஆதீனத்தில் வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணத்தை ஆண்ட தமிழரசர் சரித்திரத்தை கூறும் யாழ்ப்பாண சரித்திர நூல்கள் சிற்சில உண்மைகளை மாறுபட்டுரைக்கின்றன. எனவே பயில்வார்க்கு உள்ளபடியான உண்மைகளை எடுத்துரைக்கும் நோக்கத் தாலும் யாழ்ப்பாண மன்னர்கள் வரலாறு பொய்யாய் பழங்கதையாய் மங்கி மறைந்து போகாமல் காப்பதற்காகவும் நாட்டபி மானத்தால் தூண்டப்பட்டு மூன்று தசாப் தங்கள் முயன்று இலக்கிய ஆதாரங்கள், கல்வெட்டுக்கள் தோம்புகள் என்பவற்றை ஆராய்ந்து இந்நூலினை ஆக்கினார் திரு. பொ. ஜெகநாதன். யாழ்ப்பாணத் தமிழரசு 13ஆம் நூற்றாண்டில் ஆரம்பமானது என வரலாற்றாய்வாளர் கூறுகின்றார்கள். ஆனால் ஆசிரியர் ஜெகநாதன் அவ்வாறன்றி யாழ்ப் பாணத் தமிழரசு 8ஆம் நூற்றாண்டில் உருவாகிவிட்டதென இந்நூலில் அழுத்திக் கூறுகின்றார். சிங்கை ஆரியர் வந்த ஆண்டு எண்ணூற்றெழுபது என்பதை 1170 என பிழையாக பொருள்கொண்டு கலிங்க மாகன் வருகையுடன் தொடர்புபடுத்த நவீன ஆய்வாளர் முயல்வதை ஜெகநாதன் கண்டிக்கின்றார். உண்மையில் அது சிங்கையாரியன் சாலிவாகன சகவருடம் 870ஆம் ஆண்டு வந்தான் என்பது அவர் முடிவு. அத்துடன் சரித்திர ஆசிரியர்கள் உரைத்த பிழைகள் பலவற்றை சான்று களுடன் சுட்டிக்காட்டுகின்றார். இராச நாயகம் முதலியார், சுவாமி ஞானப்பிர காசர் ஆகியோர் கூற்றுக்களை மறுத்து புதிய முடிவுகளை முன்னிறுத்தி வரலாற்றுண் மைகளை இந்நூலில் வலியுறுத்துகின்றார். இந்நூல் தற்சமயம் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் வரலாற்று மாணவர்களுக்குப் பெரிதும் துணைபுரியும் உசாத்துணை நூலாக உள்ளது.

1992ஆம் ஆண்டு மாற்றம் சஞ்சிகை ஆசிரியர் நவமோகன் அவர்கள் யாழ்ப் பாண கலைப் பண்பாட்டுக் கழகத்தின் அனுசரணையுடன் "உயிரோடிருக்கும் போதே தமிழ் அறிஞர்களை கௌரவிக்க வேண்டும்" என்ற கொள்கைக்கமைய பண்டிதர் ஜெகநாதன் அவர்கள் ஆக்கிய "யாழ்ப்பாணத் தமிழரசர் வரலாறும் கால மும்" எனும் நூலைப் பற்றி ஆய்வரங்கு நடாத்தி ஆசிரியருக்கு பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். அன்று அவ்வரங் கில் உரையாற்றியவர்கள் இந்நூல் காலத்தின் தேவையால் எழுந்த ஒன்று என விதந் துரைத்தனர். ஆசிரியர் திரு. பொ. ஜெகநா தன் அவர்களின் மனைவி திருமதி முத்துப் பிள்ளை ஜெகநாதன் அவர்களும் ஒரு பயிற்றப்பட்ட தமிழ் ஆசிரியர். இவர்களுக் குப் பிள்ளைகள் எழுவர். மூத்த மைந்தன் இறப்பர்க் கூட்டுத் தாபனத்தில் ரயர் தரக் கட்டுப்பாட்டாளராக ஜேர்மன் நாட்டில் பணிபுரிகின்றார். இரண்டாவது மைந்தன் ஒரு எம்.பி.பி.எஸ். பட்டதாரி. யாழ் போதனா வைத்தியசாலையில் சத்திர சிகிச்சை டாக்டராக சேவையாற்றுகின்றார். 3வது புத்திரன் ஒரு பயிற்றப்பட்ட கணித ஆசிரியர் கொக்குவில் இந்துக் கல்லூரியில் கல்வி கற்பிக்கிறார். மூத்த மகள் வட்டுக்

கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியில் பட்டப் படிப்பினை மேற்கொண்டவர். 2ஆவது மகள் குண்டசாலை விவசாயப் பட்டதாரி. 3ஆவது மகள் ஆங்கில ஆசிரியர். புத்தூர் சோமஸ் கந்தா கல்லூரியில் கல்வி கற்பிக் கின்றார். 4வது மகள் கலைமாணிப் பட்டதாரி. வேலணை பிரதேச செயலகத்தில் சேவை யாற்றுகின்றார்.

ஆசிரியர் திரு. பொ. ஜெகநாதன் அவர்கள் வேலணை துறையூர் பாடசாலை, அல்லைப்பிட்டி பராசத்தி வித்தியாசாலை என்பவற்றிலும் கல்வி கற்பித்தவர். சேவை யின் இறுதிக் காலத்தில் வேலணை அம்மன் கோவிலடி வித்தியாலயத்தில் கடமையாற் றினார். அக்காலத்தில் அப் பாடசாலை யின் திருக்குறள் மகாநாடு தொடராக நடை பெற்றது. அம்மகாநாட்டுக்கு இந்திய அறிஞர் களும் வருகை தந்திருந்தார்கள். திரு வள்ளுவர் மிகவும் வலியுறுத்துவது பொரு ளுடைமையா அல்லது அருளுடைமையா என்ற விவாத அரங்கில் அருளுடைமை சார்பில் பேசி அவ்வணிக்கு வெற்றி தேடிக் கொடுத்த அவரது பேச்சாற்றலை மகாநாட் டில் பங்கு பற்றிய இந்திய அறிஞரும் போற் றினார். இங்ஙனம் ஆசிரியர் திரு. பொ. ஜெகநாதன் அவர்கள் சைவத்திற்கும் தமிழ் மொழிக்கும் ஆற்றிய பணிகள் காலத்தால் அழியாதவை. ஆசிரியர் திரு. பொ. ஜெகநா தன் அவர்கள் யாழ் நல்லூரில் வசித்த காலத்தில் தமது 85 வயதில் 29ஆம் திகதி வைகாசி 1994 ஆம் ஆண்டு சிவபதம் எய்தினார்.

## அவரது கவிதைகள் சில

பூவாரும் சோலையளி நாதம் செய்யும்
போற்பீழ மண்டலஞ்சேர் யாழ்ப்பா ணத்தில்
தேவாரும் வேலணைப்பெருங் குளத்தின் மேவித்
திருக்கோயில் கொண்டமுத்து மாரி மீது
பாவாரும் ஊஞ்சலிசை யினிது பாட
பண்ணவர்கள் கணந்தோறும் பணிந்து கூட
காவாரும் கரிமுகத்தான் கையைந் துள்ளான்
கணபதிதன் சேவடிகள் காப்ப தாமே

உருவோங்கு நால்வேதம் தூண்க ளாக
உலகோங்கு சிவாகமங்கள் விட்ட மாக
அருவோங்க ஞானகலை வடங்க ளாக
அருளோங்கு நாதவிந்து பலகை யாக
குருவோங்கு பிரணவமொண் பீட மாக
குளிர் மென்பூ மெத்ததையறம் தலையணை யாக
மருவோங்கு வாணிலட்சுமி வடந்தொட் டாட்ட
மன்னுவேலணை முத்துமாரி யாடீ ரூஞ்சல்

மன்னுசிவ னுறைகயிலை யிருந்து வேலணை
வந்துபெருங் குளக்கரையின் வளந்து வாய்து
துன்னுநொச்சிக் கூடலிற்றான் றோன்றி யாகித்
தொல்தவத்தாயள் அவ்வழிசேர் கட்டை மாதவன்
தன்னையழைத் தொருகுடிசை சமைத்திட் டாங்கே
தனிமுதலா யெழுந்தருளி யிட்ட தாயே
முன்னவளே பின்னவளே மூவாத் தேவி
முத்துமாரிப் பெருந்தகையே யாடீ ரூஞ்சல்





# புலவர்கள்

## பண்டிதர் மா. மாணிக்கம் அவர்கள்

### திரு. மா. சிறீகாந்தன்

கற்பகதருவின் அழகுறு காட்சியும் பெருங்குளத்தருகே பேரருள் பொழியும் அன்னை பராசக்தியின் கோவிலும், பண்பாட்டின் விழுதுகளாய் வாழ்ந்து வரும் சைவக் குடிமக்களும் கொண்ட யாழ்ப்பாணத்தின் மரபுவழிக் கிராமமே வேலணை. இவ்வூரில் வாழ்ந்த சைவ வேளாளர் குடியில் தோன்றி பார் போற்ற வாழ்ந்த மாரிமுத்து நாகமுத்து குடும்பத்தின் கடைசி மகன் தான் இந்தப் பண்டிதர் மாணிக்கம் அவர்கள். அவர் தனது ஆரம்பக் கல்வியை வேலணை கிழக்கு அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் தரம் 9 வரை வேலணை கிழக்கு சரஸ்வதி வித்தியாலயத்திலும் தொடர்ந்து கல்வி கற்ற இவர், தமிழில் தனிப்புலமையும் ஆர்வமும் கொண்டவரானார். 1939 - 1942 வரை திருநெல்வேலி பரமேஸ்வரா பண்டித ஆசிரிய கலாசாலையில் படித்து, பின்பு மதுரை தமிழ் பண்டித பரீட்சையில் சித்தி பெற்ற இவர், பயிற்றப்பட்ட இரண்டாம் தர ஆசிரியர் தராதரம் பெற்றார்.

1944ஆம் ஆண்டு தன் ஆசிரியத் தொழிலை வேலணை கிழக்கு சரஸ்வதி வித்தியாசாலையில் தொடங்கி, 1946 இல் இளவாலை மேற்கு மெய்கண்டான் வித்தியா சாலைக்கு மாற்றம் பெற்றார். ஒரு ஆசிரியரிடம் காண வேண்டிய அத்தனை பண்புகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு பூரண மனிதனாகத் திகழ்ந்தார். அதே பாடசாலையில் ஆசிரியையாக கடமை புரிந்த, அளவையூர் சைவ வேளாள குடியில் பிறந்த நாகமணி சின்னாச்சிப்பிள்ளையின் மகளான நாகம்மா அவர்களை விரும்பி விவாகம் புரிந்தார்.

1953ஆம் ஆண்டு புத்தளம் மாவட்டத்தில் ஒரு தமிழ் பாடசாலையை ஆரம்பிக்கும் பொறுப்பை, இந்து கல்வி வித்தியா விருத்திச் சங்கம் இவரிடம் பணித்தது. வீடு வீடாகச் சென்று மாணவர்களைத் திரட்டித் தகுந்த ஆசிரியர்களையும் நியமித்து, ஒரு கொட்டிலாக இருந்த முந்தல் கமலாம்பிகை பாடசாலையை, புதிய கட்டிடத்திற்கு மாற்றி மு/கமலாம்பிகை வித்தியாசாலை என்ற தரத்திற்கு உயர்த்தி முதல் அதிபர் என்ற பெருமையைப் பெற்று அளப்பரிய சேவையைச் செய்தார்.

## இல்லறம்

மாணிக்கம் நாகம்மா இலட்சிய தம்பதிகளின் இல்லறம் சிறக்க எழுவரை பிள்ளைகளாகப் பெற்று அவர்களை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்து திருமணம் செய்து வைத்து மகிழ்ந்தார். மொத்தத்தில் பண்டிதர் தம்பதியினர் பதினாறும் பெற்று பெருவாழ்வு கண்டனர்.

திரு. பண்டிதர் மாணிக்கம் அவர்கள் புத்தளம் முந்தல் கமலாம்பிகை வித்தியாசாலையில் அதிபராய் இருந்து, பின்பு பருத்தி அடைப்பு கதிரேசன் வித்தியாலயம், புன்னாலைக்கட்டுவன் சைவ தமிழ் வித்தியாலயம், ஏழாலை மேற்கு சைவப்பிரகாச வித்தியாசாலை, அளவெட்டி சீனன் கலட்டி ஞானோதய வித்தியாசாலை ஆகிய பாடசாலைகளில், மிக்க ஆளுமை கொண்ட முன் உதாரண அதிபராக விளங்கி 1976இல் அளவெட்டி தெற்கு அமெரிக்கன் மிஷன் தமிழ் கலவன் வித்தியாலயத்தில் அதிபராக இருந்து 17. 03. 1979 இல் ஆசிரியப் பணியில் இருந்து ஓய்வு பெற்றார்.

ஓய்வெடுத்துக்கொண்ட பண்டிதர் ஐயா அவர்களுக்கு சைவம் தமிழ் வளர்ச்சியில் பெரும்பங்கு காத்திருந்தது. சைவத்தையும் தமிழையும் தன் இரு கண்களாகக் கொண்டு, அதன் வளர்ச்சிக்காக முழு நேரமாக அரும்பாடுபட்டார். அத்தோடு கவிதைகள், கட்டுரைகள், கல்வெட்டுக்கள், கதாப் பிரசங்கங்கள், புராணப் படிப்புக்கள், பல நூல் படைப்புக்கள் என பல கோணங்களில் தன் திறமையை வெளிக்கொண்டு வந்தார்.

### இவர் ஆக்கி நமக்களித்த படைப்புகளாவன

01. ஆயிரத்துக்கும் அதிகமான கல்வெட்டுக்கள்
02. அழகொல்லை விநாயகராலய திருப்பள்ளி எழுச்சிப் பதிகம்
03. வேலணை முத்துமாரியம்மன் ஊஞ்சல் பாடல்
04. அணிஞ்சிலடி விநாயகரைத் துதித்துப் பாடிய துதிப்பதிகம்.

## நூல்களாக வடிவமைத்து வெளியிட்டவை

05. பெரிய புராண வசனச் சுருக்கம்
06. கந்தபுராண வசனச் சுருக்கம்
07. திருக்குறள் வசனச் சுருக்கம்
08. ஆண்டு 10இற்கான நளவெண்பா பாக்களின் பதவுரை
09. புற நானூற்றில் சிந்தைக்கினிய செய்திகள் சில.

போன்ற பல தரப்பட்ட வயதினருக்குரிய இலகுநடையில் இந்நூல்களை எமக்கு

அளித்த பெருந்தகை பண்டிதர் ஐயா அவர்கள்.

இவர் ஒரு இலக்கியச் சொற்பொழி வாளர். 1955 ஆம் ஆண்டு யா/வேலணை சேர். வைத்திலிங்கம் துரைச்சாமி மத்திய மகா வித்தியாலயத்தில் திரு. வி. ஏ. கந்தையா எம்.பி. அவர்கள் தலைமையில் நடத்தப்பட்ட திருமுறை விழாவிலும் தமிழ் மறைக் கழகத்தால் திரு. கா. பொ. இரத் தினம் அவர்கள் தலைமையில் யா/ வேலணை கிழக்கு மகா வித்தியாலயத்தில், 1960 இல் நடைபெற்ற முத்தமிழ் விழா, 1962 இல் நடைபெற்ற திருக்குறள் மகாநாடு ஆகிய பெருவிழாக்களில், தமிழகத்தில் இருந்து வருகை தந்த சிறந்த பேச்சாளர்க ளுடன் இவரும் ஒருவராக சிறந்த சொற் பொழிவு ஆற்றிச் சிறப்பித்தமை இன்றும் எவர் மனதிலும் பசுமையாய்ப் படிந் திருக்கும். இசையோடு உட்பொருளை சுவை யோடு வழங்கும் புராணப்படிப்பிற்கு நிகர் அவரே. அதனால் பல கோவில்களில் இருந்து புராணப்படிப்பிற்கு என அழைப் பாணை வரும். ஐயா அவர்கள் அழகொல்லை விநாயகராலயத்தின் தர்மகர்த்தாக்களில் ஒருவராய் இருந்து, ஆலய முன்னேற்றத் திற்கு அரும்பெரும் தொண்டாற்றினார். அதேபோல் கும்பிளாவிளப் பிள்ளையார் கோவில், அளவையூர் முத்துமாரி அம்பாள், வேலணை பெரும்குளத்து முத்துமாரி அம் மன் மீதும் அளவிலா அன்புகொண்டு, அதன் வளர்ச்சியிலும் முன்னின்றார். புராண இதிகாசங்களை பாமர மக்களும் படித் துப் பயன்பெறும் நோக்கில், இலகு தமிழில் இரத்தினச் சுருக்கமான முறையில் நூலாக் கித் தந்தார்.

இவரால் எழுதப்பட்ட கந்தபுராணச் சுருக்கம் தெல்லிப்பளை துர்க்காதேவி தேவஸ்தானத்தில் 1989ஆம் ஆண்டு பங்குனி மாதம் 18ஆந் திகதி வெளியிடப் பட்டபோது, பண்டிதர் ஐயா அவர்கள் இரத் தினச் சுருக்கமாக எழுதிய கந்தபுராண நூலை ஆழ்ந்து அனுபவித்து படித்துச் சுவைத்தவர்கள் "இது மாணிக்கச் சுருக்கம்" என்று கூறி இவரைப் பெருமைப்படுத்தினர். இதேபோன்று பண்டைத் தமிழர் தம் பண் பாட்டின் மேன்மையை இப்பாருலகிற்கு இன்னும் பறைசாற்றிக்கொண்டிருக்கும் ஒப்பற்ற சங்க இலக்கியம் புறநானூறு. இரண் டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தொகுக்கப் பெற்ற இந்தப் புறநானூறு நம்மால் கணக் கிட்டுக் கூறமுடியாத அத்துணைப் பழமை யும் பொருட் செறிவும் கொண்டது. திருக் குறள் உள்ளிட்ட பழந்தமிழிலக்கிய புராண இதிகாச நூல்கள் பலவற்றை, இக்காலத் தவர்களுக்குப் பொருத்தமான இனிய செந் தமிழ் வசன நடையில் எழுதி நூலாக்கித் தந்தவர் பண்டிதர் ஐயா அவர்கள்.

இதேபோன்று பெரிய புராணச் சுருக் கம் இந்து கலாசார அமைச்சினால் வெளி யிடப்பட்டது சிறப்பம்சமாகும். நளவெண்பா 10ம், 11ம் ஆண்டுக்கான பாக்களின் பத வுரை கொழும்பிலும் வெளியிடப்பட்டன. இவை அனைத்தும் இந்து கலாசார அமைச் சினால் பாடசாலைகள், வாசிகசாலைகளுக்கு அன்பளிப்பாக வழங்கியதும் குறிப்பிடத் தக்க அம்சமாகும். இறுதி யில் அச்சு ஏறாது வைத்திருந்த புறநானூற்றில் சிந்தைக்கினிய செய்திகள் சில எனும் சிறிய நூல் அன்னா ரின் நினைவுமலரில் சேர்க்கப்பட்டது. இப் படியான அன்புக்கு இனியவரை, "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிதென்பர் பெரியோர், அப்படிப் பிறந்தாலும் நல் லொழுக்கத்தோடும் இறையுணர்வோடும் இல்லறக் கடமைகளைச் சரிவரச் செய்து வாழ்வதும், மிக அபூர்வமானது. சிறுவயது

முதற் கொண்டே தமிழிலும் இறைவழி பாட்டிலும் ஈடுபாடு கொண்ட, பண்டிதரா கிப் புகழ், பெற்று விளங்கிய பண்டிதர் மாணிக்கம் அவர்கள் கிடைத்தற்கரிய பொக் கிசம் என்று இலண்டன் ஸ்ரீமுருகன் கோவில், பிரதம சிவாச்சாரியார் கயிலை நாகநாத சிவம் குருக்கள் அவர்கள் பாராட்டிச் சென் றது நினைவு கூரத்தக்கது.

இதேபோன்று பண்டிதர் அவர்கள் கடவுள் பக்தி, குருபக்தி, சைவ அனுஷ் டானம் நிரம்பியவர். பூமியில் எவர்க்கும் பொல்லாப்பில்லாத புண்ணியசீலர் இப் பெரியார். சற்புத்திர புத்திரிகளையும் பெற் றெடுத்த பெருமையினால் உயர்வுபெற்றார். இப் பெரியாரைப் பற்றி எழுதுவதென்றால் எழுத்தில் அடங்காது என்று கூறி பெருமை சேர்த்தார். பன்னாலை தெல்லிப்பழை கற்பக விநாயகர் ஆலய ஆதீன கர்த்தா இ. சபாரத்தினக் குருக்கள் அவர்கள், பண்டிதர் மாணிக்கம் அவர்கள் அடக்கம், பழகுதற்கு இனிய பண்பு மாணவரிடத்து கொண்ட பற்று, நல்லனவற்றையே நாடும் உள்ளமும் கொண்டவர் எனக் குறிப்பிட்டுள் ளார். அவர் ஆற்றிய பணிகள் பெற்றோர் களையும் மாணவர்களையும் நண்பர்களை யும் ஈர்த்து ஈர்த்து இன்புறுத்தியது என்று கா. பொ. இரத்தினம் அவர்கள் குறிப் பிட்டமையும் நாம் நினைவு கொள்ளத் தக்கவையாகும். பண்டி தர் ஐயா அவர்கள் தான் பிறந்தவேலணை மண்ணை விசு வாசமாகவே நேசித்தார்.

இது நான் பிறந்த இடம், வணங்கிய கோவில், தாச்சி விளையாடிய வீதி, கிட்டிப் புள்ளு அடித்த இடம், நீந்தித் திரிந்த குளம். படித்தபாடசாலைத் திண்ணை என்றெல் லாம் அடிக்கடி அந்த இடங்களை கோடிட் டுக் காட்டி மகிழ்ந்து கொண்டிருந் தவர். எம் மண்ணில் பிறந்து உலகத்தின் மூலை முடுக்கெல்லாம் வியாபித்துள்ளவர்களில் பண்டிதர் ஐயா வித்தியாசமானவர். சிலர் தீவில் பிறந்தது தமக்கு பெரும் அவமான மாகக் கருதி பிறந்த இடத்தையே மாற்றிக் கூறுகின்றனர்.

ஆனால் இவர் பல்லாண்டு காலம் ஊரைப் பிரிந்து வாழ்ந்தாலும் தனது ஆக் கங்கள் யாவற்றிலும் வேலணையூர் பண்டி தர் மாணிக்கம் என்பதை விருப்புடனும் விறுவிறுப்புடனும் குறித்தே வந்தவர். பிறந்த ஊரை எப்படி நேசித்தார் என்பதற்கு இது ஒன்றே சான்றாகும். பண்டிதர் ஐயா அவர் கள் அமரராகிவிட்டாலும் அவரை எமது மண்ணும் மக்களும் என்றென்றும் நினை வில் கொள்வர் என்பது உண்மை.





# புலவர்கள்

# கவிஞர் தில்லைச்சிவன்

## மயிலங்கூடலூர். பி. நடராசன்.

சங்ககாலத்து ஈழத்துப் பூதன்தேவனார் காலம் முதல் ஈழத்தமிழகம் தமிழ் கூறும் நல்லுலகில் ஒன்றாக உள்ளது. பாரத நாட்டுத் தமிழ் நாடு போல ஈழத்திலும் தமிழ் உயர்நிலையில் இருந்து வருகின்றது. வேலணைத் தீவகத்திலும் காலத்துக்குக் காலம் பல தமிழ் அறிஞர்கள் தோன்றித் தமிழையும் தமிழ் இலக்கியத்தையும் வளர்த்து வருகின்றனர்.

சரவணையூரில் 05. 01. 1928 இல் பிறந்தவர் தில்லையம்பலம் சிவசாமி. மண்டைதீவைச் சேர்ந்தஆறுமுகம் தில்லையம்பலம் இவரது தந்தையாராவர். தாயார் சரவணையூர் சுப்பர் சின்னத்தம்பி (அமாவாசை) அவர்களின் மகள் பொன்னம்மையார். இவர் வேலணை வடக்கில் வாழ்ந்த தாமோதரம்பிள்ளை செல்லம்மா தம்பதிகளின் ஏகபுதல்வியான செந்தமிழ்ச் செல்வியைத் திருமணம் செய்தார். இவற்றால் இம்மூன்று கிராமங்களுக்கும் உரித்துடையவர் இவர் என்பர்.

இவருடைய தாயின் தந்தை சின்னத்தம்பி நாவலரின் மருகரான பொன்னம்பல பிள்ளையிடம் பாடம் கேட்டவர். அதனால் காவிய இதிகாச புராணங்களில் பயிற்சி உள்ளவராக இருந்தார். பேரனுக்கும் அவரது உறவினர்களான சரவணையூர் தில்லை நாதப் புலவர், சித்தாந்தபண்டிதர் சோமசுந்தரம் என்பவர்களுக்குமிடையே நெருங்கிய இலக்கிய ஆய்வுத் தொடர்பிருந்தது. அவர்களுடைய இலக்கிய நயம்புரையாடல் சிவசாமிக்கு இளமைமுதலே தமிழறிவை வளர்த்து அறிவுத் தேடலை ஊக்குவித்தது. பேரனாருடைய வழிகாட்டலில் மூன்றாம் வகுப்புப் படிக்கும் காலத்திலேயே பல அறநெறிப் பாக்களையும் விநோதரசமஞ்சரி

நூலில் காணப் பெற்ற தனிப்பாடல்கள் கதைகள், கட்டுரைகளையும் மனப்பாடஞ் செய்து தமது அறிவை வளர்த்துக் கொண் டார். தில்லைநாதப் புலவர் தாம் ஆக்கிய பாடல்களை மற்றைய இருவருக்கும் பாடிக் காட்டுவார். இதனைத் தொடர்ந்து கேட்டு வந்ததால் சிவசாமிக்கும் தானும் பாடல் எழுத வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது.

சிவசாமி சரவணை நாகேசுவரி வித்தியா சாலையில் தொடர்ந்து கற்று 1945 இல் சிரேட்ட பாடசாலைத் தராதரப் பத்திரத் தேர்வில் சித்தி எய்தினார். இங்கு கற்ற காலத்தில் பாடசாலை மாணவர் சங்கம் திங்கள் தோறும் "சைவ மாணவர் போதினி" என்ற கையெழுத்து இதழை வெளியிட்டது. இவ்விதழில் தனது பதினான் காவது வயது முதல் சிவசாமி கவிதை, சிறுகதை, கட்டுரைகளை எழுதிவந்தார். இவ்விதழின் ஆசிரியரான செ. சுப்பிர மணியம், தில்லையம்பலம் சிவசாமி என்ற இவரது பெயரை "தில்லைச்சிவன்" என்ற புனை பெயராக்கி இவரது ஆக்கங்களை அப்பெயருடன் வெளிவரச் செய்தார்.

தில்லைச்சிவனின் எழுத்துத்துறை விருத்திக்குப் பாடசாலையின் அதிபரான ஆசிரியமணி, பண்டிதமணி இ. மருதைய னார் அவர்களும் ஆசிரியர்களான பண்டி தர். க. சோமசுந்தரம், வித்துவான் இ. பொன்னையா, நுணாவில் வி. மாணிக்க வாசகர் ஆகியோருடைய ஆற்றல் மிக்க கற்பித்தல் வழிகாட்டியானது. அக்காலத்தி லேயே இவரது உறவினரும் ஊரவருமான வித்துவான் வேந்தனாருடைய நெருங்கிய தொடர்பும் ஏற்பட்டது. தில்லைச் சிவன் வேந்தனாருடைய சீடரானார். அவருடைய தூண்டுதலும் பாராட்டுதலுமே தில்லைச் சிவனைச் சிறந்த கவிஞனாக்கியது. பழைய புதிய பாடல்களைப் பாடமாக்கி அறிவை யும் ஓசை தாள இயல்புகளையும் வயப் படுத்தி வளர்ந்ததனால் இயல்பாகவே தொடர்ந்து சிறந்த கவிதைகள் எழுதும் ஆற்றல் ஏற்பட்டது என்பர்.

சரவணை நாகேஷ்வரி வித்தியாசாலை யின் மாணவராக இருந்து இறுதித் தேர்வில் சித்தி எய்தியபின் தொடர்ந்து ஆசிரிய தரா தரப் பத்திரத் தேர்வுக்குத் தோற்றி அத் தேர்விலும் சித்திபெற்றார். 1953 இல் நல்லூர் ஆசிரிய கலாசாலையில் சேர்ந்து ஈராண்டுகள் பயின்று சான்றிதழ் பெற்று 1955ஆம் ஆண்டில் ஆசிரியரானார். ஆசிரி யப் பணியின் நிறைவான பத்தாண்டுகள் தனது மாமனாரான திரு. ச.தாமோதரம் பிள்ளை முயன்றமைத்த வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலையில் அதிபராகப் பணியாற்றி 1988 ஜனவரி ஐந்தில் ஓய்வு பெற்றார்.

1942 இல் தனது பதினான்காம் வய தில் எழுத்துலகிற் புகுந்த தில்லைச் சிவன் தனது வயது முதிர்ந்த இன்றைய பொழுதி லும் பல ஆக்கங்களை நூல்களாக வெளிக் கொணர்கிறார் என்பது வியப்பே. தொடக்க நிலையில் வீரகேசரி மாணவர் பக்கத்தில் முகிழ்த்து புயல், மின்னொளி, வீரன், மறு மலர்ச்சி இதழ்களில் அரும்பி ஈழகேசரி, இந்துசாதனம், சுதந்திரன், தினகரன், சிந்தா மணி இதழ்களில் மொட்டாகி மலர்ந்து இன்று பலநூல்களாக பரிமளித்துக் கொண் டிருக்கின்றன இவரது ஆக்கங்கள்.

தமிழ்நாட்டு ஏடுகளான அணிகலன், பாப்பாமலர், வசந்தம் என்பன இவரின் கவிதைகளை ஏற்று வெளியிட்டதுமல்லாமல் சுதந்திரன் ஏட்டில் வெளிவந்த இவரது இளவுணர்வுக் கவிதைகள் சிலவற்றை "திரா விட நாடு" நன்றியோடேற்றி மீள வெளி யிட்டுள்ளது.

பல்வேறு இதழ்களில் தமது படைப் புக்கள் வெளிவரக் கண்ட தில்லைச் சிவன், தனது நண்பர் வை. தியாகராசனுடன் இணைந்து 1949 - 1950 ஆண்டுகளில் "தமிழன்" என்றொரு திங்கள் ஏட்டை நடத்தினார். தாம் சார்ந்த அரசியலோடு பின்னிப் பிணைந்து "தமிழன்" வெளிவந்து கொண் டிருக்க 1950 - 1952 ஆண்டுகளில் எஸ். இரத்தினசபாபதி, நடமாடி இராசரத்தினம் என்போரது அனுசரணையுடன் "கலைச் செல்வி" என்ற இலக்கிய ஏட்டை ஆசிரிய ராக இருந்து நடத்தினார்.

இக்காலப் பகுதியிலும் இதன்பின்னரும் இவர் ஏறிய கவியரங்குகள் பல. வானொ லிக் கவியரங்குகளிலும் இவரது கவி முழக் கினைக் கேட்கக் கூடியதாக இருந்தது.

இவர் ஆசிரியத் தொழிலில் சேர்ந்த 1955 முதல் பதினொரு ஆண்டுகள் "வீர கேசரியின் வேலணை நிருபராகவிருந்து பாராட்டத்தக்க பணிகளைச் செய்துள்ளார். இதே காலப்பகுதியில் தீவுப் பகுதித் தமிழ் எழுத்தாளர் சங்கத்தைத் தொடங்கி அதன் தலைமைப் பொறுப்பை ஏற்று பல இளம் எழுத்தாளர்களும் கவிஞர்களும் தோன்ற முன்னோடியாகவிருந்தார்.

இவரது இலக்கியப் பணி கலை கலைக்காகவே என்ற மனப்பான்மையோடு ஆக்கப்பட்டவை அல்ல. கலை மக்களுக்குப் பணி செய்வதற்கே என்ற கோட்பாட்டினை உடையது. இவர் முதன்முதலாகப் "புயல்" இதழில் எழுதிய "தீப்பொறி" என்ற கவிதை களே இதற்குச் சான்றாகும்.

நீண்டகால வரலாற்றில் 1949ஆம் ஆண்டில் இருந்தே தீவிர தமிழரசுத் தொண்டனாக இருந்த இவரை "இன உணர்வுக் கவிதைகளின் முன்னோடி" என்று கலாநிதி செ. திருநாவுக்கரசு தனது ஆராய்ச்சி நூல் ஒன்றில் கூறியுள்ளார். இவரது தேர்தல் கால மேடைப் பேச்சால் கவரப்பெற்ற பலர், இவரைப்பற்றிய பேச்சு வரும்போது அதைக் கூறியே மகிழ்வர். தந்தை செல்வா கூட இவரது மேடைப் பேச்சைப் பாராட்டி மகிழ்ந்ததாக இவர் எழுதிய "நான்" என்ற சுயகாவிய நூலில் கூறியுள்ளார். சாதிபேதம், சமயபேதம், ஏழை பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வு பார்க்காத இவர் தனக்கு மூத்தோர் எவரா யினும் அவர்களை உறவுப்பேர் கூறியே அழைப்பார். அவர்களும் இவர் அழைப்பை ஏற்றுக்கொள்வதையும் பார்க்கக் காண லாம்.

1960. 01. 01 தொடக்கம் தென்னிலங் கையில் ஆசிரியர் பணிசெய்து 1970 இல் மீண்டு வந்த இவர் தனது தொழிலிலும் விவசாய, சமூக, சமயப் பணிகளிலும் ஈடு பட்டிருந்தார். இக்காலத்தில் சோளாவத்தை பள்ளம்புலம் கிராம முன்னேற்றச் சங்கத் தைத் தொடக்கி அதன் தலைவராகிப் பணிகள் பல செய்தார். பல கிராம விவ சாய வீதிகளைத் திறந்தார். பொதுக் கிணறுகளைத் தோண்டிக் கட்டுவித்தார். குளங்களைத் திருத்தியும் வாய்க்கால்களைப் புனரமைத்தும் அரச உதவிகளைக் கிரா மம் பயன்பெறத்தக்க வழியில் செலவு செய்தார். தீவகப் பா. உ. பண்டிதர். கா. பொ. இரத்தினம் இவரிடம் வைத்த நம்பிக்கை காரணமாக, ஒரு கிராம முன்னேற்றச் சங்கக் கட்டிடத்திற்கும் ஆத்திசூடி வித்தியா சாலைப் புதுமண்டபத்திற்கும் பெருநிதி பெற்று அவற்றினைக் கட்டி முடித்தார்.

தமிழ்மன்றக் காவலர் பண்டிதர் கா. பொ. இ. அவர்களின் தமிழ் மறைக்கழகச் செயலாளராகிய இவர் பத்துக்கு மேற்பட்ட திருக்குறள் மாநாடுகளையும் திருக்குறள் நூல்களின் காட்சியையும் திருக்குறள்

மனனப்போட்டிகளையும் பரீட்சைகளையும் சிறப்புடன் நடாத்தி மக்களிடத்தில் திருக்குறளின் அருமையையும் திருவள்ளுவரின் பெருமையையும் உலகறியப் பரம்பச் செய்தார்.

இக்காலப் பகுதியில் இவர் தனது கவிதைத் தொழிலில் ஓய்வு பெற்றிருந்தார் என்றே தோன்றுகிறது. ஒன்றிரண்டு சரம கவி நூல்களைத் தவிர வேறொன்றும் குறிப்பிடப்பெறவில்லை. ஆனால் இவரது கிராமத்தைச் சேர்ந்தகட்டுவன்வான் ஐயனார் அறங்காவற்சபையின் தலைவராகவும் பள்ளம்புலம் முருகமூர்த்தி கோவிற் சபையின் செயலாளராகவும் இருந்துள்ளார். இக்காலத்தில் கோவிற் பரிபாலன இடைஞ்சல்களை நீக்கும்பொருட்டு ஒரு யாப்பினை ஆக்கி அதனைப் பல அறிஞர் கூடிய சபையில் அலசி ஆராய்ந்து அங்கீகாரம் பெற்றபின் நூலுருவாக வெளியிட்டு வைத்தார். இன்று ஆலய யாப்புத் தயாரிப்போருக்கு முருகமூர்த்தி ஆலய யாப்பே கைந்நூல் போல உதவுகின்றது. து நிற்க தனது பக்திக்கு எடுத்துக்காட்டாகப் பள்ளம் புலத்து முருகன் பேரில் ஒரு பதிகமும் ஐயனார் பேரில் ஐயனார் அருள் வேட்டலும் திருவூஞ்சலும் என்ற நூலும் இவரால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இறுதியாக இலக்கிய உலகில் இவரது பெயரை என்றும் நிலைக்க வைத்துக் கொண்டிருக்கும் நூல்களின் வரிசையில்:

01. "கனவுக்கன்னி", வேலணை பாரதி இளைஞர் கழகவெளியீடு 1961 ஆம் ஆண்டு
02. "தாய்" அன்பு வெளியீடு 1969
03. ஐயனார் அருள்வேட்டலும் திருவூஞ்சலும் 1972
04. தில்லைமேடைத் திருப்பாட்டு 1974
05. பாப்பாப் பாட்டுகள் 1985
06. "நான்" சுயகாவியம் மல்லிகைப்பந்தல் வெளியீடு 1993
07. வேலணைத்தீவுப் புலவர்கள் வரலாறு. வே. ப. நோ. கூ. சங்க வெளியீடு 1996
08. தாழம்பூ 1996
09. அந்தக் காலக்கதைகள் மல்லிகைப்பந்தல் வெளியீடு 1997
10. நாவலர் வெண்பா செந்தமிழ்ச்செல்வி வெளியீடு 1997
11. பூஞ்சிட்டு, அட்மிரல் கிரபிக் வெளியீடு 1998
12. தில்லைச் சிவன் கவிதைகள், செந்தமிழ்ச்செல்வி வெளியீடு 1998
13. சிறுவர் கதைப் பெட்டகம், அட்மிரல் கிரபிக் வெளியீடு 1999
14. வேலணைப் பெரியார் கா. பொ. இரத்தினம், தாய்நாடு பதிப்பகம் 1999
15. ஆசிரியை ஆகினேன் (காவியம்), செந்தமிழ்ச்செல்வி வெளியீடு 2000
16. படைப்போம் பாடுவோம், செந்தமிழ்ச்செல்வி வெளியீடு 2001
17. காவல்வேலி (சிறுகதை), தேசியகலை இலக்கியப் பேரவை. 2003
18. தந்தை செல்வா காவியம். 2004

இத்தகைய ஒரு பெருங்கவிஞர், எழுத்தாளர் எம்மத்தியில் இருக்கிறார் என்பதை அறிந்து மகிழலாந்தானே. இனி வருங்கால சமூகம் அறிந்துகொள்வதற்காக கவிஞர் தில்லைச் சிவன் அவர்களின் வரலாற்றினைப் பதித்து வைத்திருப்பது சாலப் பொருத்தமானதே.

## வேலணை - 1

# பண்டாரநாயக்கா செல்வா ஒப்பந்தம்



பண்டா - செல்வா ஒப்பந்த நகலுடன் தந்தை செல்வா.
. நகர்பவர் திரு. வி. ஏ. கந்தையா (பா. உ.)



யாழ்ப்பாணம் கச்சேரி முன்பாக இடம்பெற்ற சத்தியாகிரக போராட்டத்தில்
தந்தை செல்வாவுடன் திரு. வி. ஏ. கந்தையா (பா. உ.)

# கல்விமான்கள்

## பழம்பெரும் அதிபர்

# திரு. நா. இளையதம்பி

பேராசிரியர். பொன். பாலசுந்தரம்பிள்ளை
முன்னாள் துணைவேந்தர். யாழ். பல்கலைக்கழகம்

வேலணையில் ஆசிரியத் தொழிலில் ஈடுபட்டவர்களுள் இவர் முன்னோடியாகத் திகழ்கின்றார். 20ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தொடங்கிய இவரது ஆசிரியப் பணி இந்நூற்றாண்டின் நடுப்பகுதி வரையும் நீடித்தது. இவரது ஆசிரியப் பணியின் மிகக்கூடிய பகுதி வேலணையில் அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலேயே இடம் பெற்றது. இவர் பெரும் எண்ணிக்கையான மாணவர்களுக்கு கல்வி கற்பித்து, சமூகத்தில் அவர்களை முன்னிலைக்குக் கொண்டு வந்தவராவார். அன்றைய வேலணைச் சமூகம் கல்வியில் பின்தங்கி நின்றபோது இவருடைய கல்விப் பணியால் பெரும் மாற்றங்களுக்கு அடிகோலப்பட்டது. இதனால் தான் கிராம மக்கள் இவரைப் பெரிய உபாத்தியாயர் என்று அழைத்ததுடன் அவர்களின் மரியாதைக்குரியவராகவும் இருந்தார்.

இவர் 1888ஆம் ஆண்டு வேலணையில் பிறந்து தமது இளமைக்காலக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் கற்று பின்னர் கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையில் சேர்ந்து பயிற்றப்பட்ட ஆசிரியராக வெளியேறினார். இவரது ஆசிரியப் பணி சிறந்ததாக இருந்ததால் அமெரிக்கன் மிஷனரியினர் இவரை வேலணைப் பாடசாலையின் அதிபராக நியமித்தனர். இவர் கிறிஸ்தவராக இருந்த போதும் பாடசாலையில் கல்விகற்ற பெரும்பான்மை இந்துப் பிள்ளைகளின் வளர்ச்சியில் அக்கறை கொண்டவராகத் திகழ்ந்தார். இவர் சிறந்த ஆளுமைமிக்க அதிபராக இருந்துள்ளார்.

இப்பாடசாலை 1870ஆம் ஆண்டு முதல் இயங்கி வருகின்றது. இப்பாடசாலைக்கு இவருடைய தகப்பனார் திரு. நாகலிங்கம்

அவர்களே இவருக்கு முன் தலைமை ஆசிரியர் பொறுப்பை ஏற்று நடாத்தி வந்தார். ஆரம்ப கல்வியின்பின் அங்கு கல்வி கற்பித்த ஆசிரியர்களுடன் இவரும் ஒரு ஆசிரியராக கடமையாற்றி வந்தார். ஆரம்பத்தில் மாணவர் தொகை குறைவாகக் காணப்பட்டாலும் காலம் செல்லச் செல்ல மாணவர் தொகையும் கூடத் தொடங்கியது. இதைக் கண்ணுற்ற பாதிரிமார் பாடசாலையின் தரத்தை உயர்த்தவும் ஆசிரியர், தலைமை ஆசிரியர்களின் தகைமைகளைக் கூட்டவும் நடவடிக்கை மேற்கொண்டனர்.

இதற்கு அமைவாகவே பாதிரிமார் அப்பொழுது அங்கு கல்வி கற்பித்த ஆசிரியர்களுள் திரு. நா. இளையதம்பி அவர்கள் எல்லாவற்றிலும் முதன்மை பெற்றிருந்ததை உணர்ந்து அவரை ஒரு பயிற்றப்பட்ட தமிழ் ஆசிரியராக்கவும் அவரையே அப்பாடசாலைக்கு நிரந்தர தலைமை ஆசிரியராக்கவும் விருப்பம்கொண்டு திரு. இளையதம்பி ஆசிரியர் அவர்களை கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலைக்கு அனுப்பி வைத்தனர். திரு. இளையதம்பி இரண்டு வருட பயிற்சியை முடித்துக்கொண்டு ஒரு பயிற்றப்பட்ட தமிழ் ஆசிரியராக வெளிவந்த போது மேற்படி பாடசாலையின் நிரந்தர தலைமை ஆசிரியராக 01. 01. 1906 ஆம் ஆண்டு நியமனம் செய்யப்பட்டார்.

திரு நாகலிங்கம் இளையதம்பி அவர்கள் நிரந்தர தலைமை ஆசிரியராகப் பதவியுயர்வு பெற்றதும் அவருடைய தனித்துவமும் அவரின் உயர்ந்த உருவமும் அவருடைய உடையும் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்பவற்றுக்கு அவர் உதாரண புருஷராக இருந்தமையும் வேலணை மக்கள் மத்தியில் அவருக்குப் பெரும் மதிப்பைக் கொடுத்தன. அவரை மக்கள் பெரிய உபாத்தியாயர் என அழைக்கத் தொடங்கினர். இவரது பணியினால் பாடசாலைக்கு மாணவர்களின் தொகையும் வருகையும் கூடத் தொடங்கியது. முதலில் ஆரம்ப பாடசாலையாக இருந்து பின்னர் மத்திய பாடசாலையாக உயர்ந்தது. உயர்தர வகுப்புகளை நடத்த வேண்டிய தேவையும் ஏற்பட்டது.

மண்டைதீவு, அல்லைப்பிட்டி, சரவணை, நாரந்தனை போன்ற அயற்கிராமப் பிள்ளைகள் தூரத்தையும் பொருட்படுத்தாமல் இங்கு வரத் தொடங்கினார்கள். கல்வித் தரமும் ஆசிரியர்களின் தன்னலமற்ற சேவையும் இவ்வரவுகளுக்கு காரணமாக அமைந்திருந்தன. ஆகவே பிறிலிம் வகுப்புகளுடன் இருந்த பாடசாலை ஆசிரிய பயிற்சிக் கலாசாலை நுழைவுப் பரீட்சையையும் நடாத்த வேண்டிய தேவை ஏற்பட்டது.

திரு. இளையதம்பி ஆசிரியர் வாழ்க்கையில் ஒரு நிலைத்த கொள்கையுடையவர். தன்னால் செய்யக்கூடியவற்றை மாத்திரம் செய்வதாக உறுதி கூறுவார். இவருடைய ஆரம்ப வாழ்க்கை, மத்திய பகுதி வாழ்க்கை என்பன வேலணையிலேயே கழிந்தன. இவருடைய பிற்காலம் தனிமையிலேயே வாழ்க்கை நடாத்த வேண்டி ஏற்பட்டிருந்தது. இவருக்கு இரண்டு ஆண் பிள்ளைகளும் 3 பெண்பிள்ளைகளும் இருந்தனர். இவருடைய மூத்தமகன் சண்முகரத்தினம் என்பவர். பரியோவான் கல்லூரியில் (St. Johns College). கல்வி கற்ற பின் கொழும்பு பல்கலைக்கழகத்திற்குத் தெரிவாகி வேலணையில் முதன்முதலில் (பீ.ஏ.) என்ற பட்டத்தைப் பெற்றார்.

பெண் பிள்ளைகளின் திருமணங்களை உரிய காலங்களில் செய்து கொடுத்துவிட்டு தனது பிற்பட்ட கால வாழ்க்கையை வேல

ணையில் வாழ்ந்தார். வேலணையில் சேவையில் இருந்து இளைப்பாறிய பின்னரும் வேலணையின் கல்வி வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டவராக இருந்துள்ளார்.

இவர் ஆசிரியப் பணியில் இருந்து ஓய்வு பெற்ற பின்பும் தொடர்ந்து கிராமத்தில் வாழ்ந்து கிராமிய மக்களுக்குப் பல வழிகளிலும் உறுதுணையாக இருந்தும் தலைமைத்துவம் கொடுத்தும் வாழ்ந்தார். சமூக சேவைகளில் நேரடியாக ஈடுபடாத போதும் இளைஞர்களுக்கு சிறந்த வழிகாட்டியாக ஆலோசகராக இருந்துள்ளார். இவரது வழிகாட்டலால் வேலணை இளைஞர்கள் ஆசிரியர்களாகவும் எழுதுவினைஞர்களாகவும் வர வழி வகுத்தது.



# கல்விமான்கள்

## பழம்பெரும் அதிபர்
# அம்பலவாணர் செல்லையா
### (“பெரிய உபாத்தியாயர்” - 03.03.1908 - 12.09.2004)

பேராசிரியர் ச. சத்தியசீலன் யாழ் - பல்கலைக்கழகம்

**வே**லணையின் புகழ்பூத்த பெரியார் வரிசையில் வைத்துக் கருதப்படுபவராக இளைப்பாறிய அதிபர் அம்பலவாணர் செல்லையா அவர்கள் விளங்குகின்றார். அண்மையில் தமது 96ஆவது அகவை நிறைவைக் கொண்டாடிய செல்லையா உபாத்தியாயர் ஆற்றிய பல்வேறுபட்ட சேவைகளை இன்றைய தலைமுறையினர் அறிந்து கொள்வது அவர்களின் அர்ப்பணிப்புணர்வுடனான சேவையை மேலும் வளம்படுத்த உதவிபுரிவனவாக அமையும்.

வேலணை கிழக்கில் கொழும்பார் குடும்பம் என்றழைக்கப்பட்ட புகழ்பெற்ற குடும்பம் ஒன்றில் அம்பலவாணர் பார்வதிப்பிள்ளை தம்பதிகளுக்குக் கனிஷ்ட புத்திரனாக 1908 ஆம் ஆண்டு மார்ச்மாதம் 3ஆம் திகதி திரு. செல்லையா அவர்கள் பிறந்தார். தமது ஆரம்பக் கல்வியை வேலணை வங்களாவடி அமெரிக்கன் மிஷன் தமிழ்க் கலவன் பாடசாலையிலும், வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலையிலும் பெற்றுக் கொண்டார். கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையிலும் 1926 - 1928 காலப்பகுதியில் இருவருட ஆசிரிய பயிற்சியைப் பெற்றுத் தன்னை உத்தம ஆசிரியராக இனங்காட்டிய செல்லையா அவர்கள் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையுடன் சகமாணவராகப் படித்தவர் என்பதும், இருவரும் அக் காலத்தில் புகழ்பெற்று விளங்கிய தமிழறிஞர் பண்டிதர் மகாலிங்கசிவம் அவர்களிடம் கல்வியைப் பெற்றவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

ஆசிரிய கலாசாலைப் பயிற்சியை முடித்துக் கொண்ட செல்லையா அவர்கள் 1928 ஜனவரியில் யா/கரம்பன் சண்முகநாதன் வித்தியாலயத்தில் அதிபராக

நியமனம் பெற்று 1930 வரை அங்கே கல்விச் சேவையை ஆற்றிவந்தார். தொடர்ந்து நயினாதீவில் சைவவித்தியா விருத்திச்சங்க பாடசாலையில் அதிபராக ஒரு வருடம் கடமையாற்றினார். 1932 ஜன வரியில் இருந்து யா/வேலணை சரஸ் வதி வித்தியாலயத்தில் அதிபராகக் கடமை யேற்று 36 ஆண்டுகள் அதாவது 1968ஆம் ஆண்டு வரை அவர் ஆசிரியத் தொழிலி லிருந்து இளைப்பாறும் வரை மிகச் சிறப் பாக வேலணைக் கிராமத்தின் கல்வி வளர்ச்சியில், அபிவிருத்தியில் அயராது சேவையாற்றினார்.

வேலணைக் கிராமத்தைச் சேர்ந்த குமாரு வாத்தியாரின் மகளைத் திருமணம் செய்து இல்லறத்தை நல்லறமாக நடத்திய இவருக்கு நன்மக்கட் பேறு கிடைத்தது. அவரது பிள்ளைகள் உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் உயர்பதவிகளைப் பெற்று அனை வராலும் புகழத்தக்க வகையில் கௌர வத்துடன் வாழ்ந்து வருகின்றனர். திரு. செ. மனோகரன் அவர்கள் நல்லூர்ப் பிர தேச செயலகக் கணக்காளராகவும் உயர் தொழில்நுட்பக் கல்லூரியின் பகுதி நேர விரிவுரையாளராகவும்திரு. செ. வரதராஜன் அவர்கள் பட்டயக் கணக்காளராகவும் சிறப்புடன் பணிபுரிகின்றனர்.

அதிபர் செல்லையா அவர்களின் அர்ப் பணிப்புணர்வுடனான 40 ஆண்டுக்கால நீண்ட ஆசிரியப் பணி ஊரில் அவருக்கு "பெரியவாத்தியார்" என்ற கௌரவமிக்க பட்டத்தைப் பெற்றுக்கொடுத்தது. அவரது நீண்டகால ஆசிரியர் பணி வேலணையில் மட்டுமல்லாது தீவகம் எங்கிலும் பலரா லும் விதந்து பாராட்டப்பட்டது. இவர் அதிப ராக இருந்தகாலத்தில் மனிதாபிமானத் துடன் நடந்து அனைவராலும் விரும்பப் படும் ஒரு கனவானாக, உதாரண புருஷரா கத் திகழ்ந்தார். அன்பு, அடக்கம், பணிவு, பண்பு, மனிதநேயம் கொண்ட ஆசானாக விளங்கியமையால் அவரைப் "பெரிய வாத் தியார்" என்று ஊர் மக்கள் இன்றுவரை அழைத்து வருகின்றனர். அதிபரின் பணிக் காலம் முழுவதும் மாணவர்கள், ஆசிரியர், பெற்றோர்கள் ஆகிய அனைத்துத் தரப் பினரதும் பெருமதிப்பைப் பெற்றிருந்தார்.

செல்லையா அதிபர் மிகவும் கம்பீர மான உயர்ந்த தோற்றம் கொண்டவர். குமிழ்விழும் புன்சிரிப்பும் சால்வை தரித்த வெள்ளைத் தேசிய உடையும் கையில் குடையும் அமைதியான நடையும் கொண்ட வர். எவரையும் கவர்ந்திழுக்கும் தன்மை வாய்ந்தவர். நற்குணம், நற்சிந்தனை, பணிவு, மனிதநேயம், உள்ளவர். இறைவழி பாட்டில் மிக்க நம்பிக்கை உடையவர். தன் னலமற்ற சேவையாளன். இவை அனைத் தும் நமக்குப் பெரிய வாத்தியாரை நினைவு படுத்தும்.

நாற்பது ஆண்டுகால அதிபர் சேவை யிலிருந்து ஓய்வுபெற்றபோது வேலணை மக்களாலும், தீவக மக்களாலும் பல இடங் களில் அவரது சேவைநலன் பாராட்டு விழாக்கள் வெகுவிமரிசையாகக் கொண் டாடப்பட்டன. இவற்றிலிருந்து அவர் பணி யின் சிறப்பை நாம் உணர்ந்துகொள்ள லாம். இச்சேவைநலன் பாராட்டு விழாக் களில் அப்போதைய ஊர்காவற்றுறைப் பாராளுமன்ற உறுப்பினர் திரு. வ. நவரெத் தினம், கல்விமானும், யாழ்/வைத்தீஸ்வரா வித்தியாலய அதிபருமான திரு. எஸ். அம்பிகைபாகன், உப அதிபர் வைரமுத்து, சைவ வித்தியா விருத்திச் சங்க செயற் குழு உறுப்பினர், மற்றும் கல்வியாளர், அவரிடம் கல்வி கற்று உயர்நிலையிலிருந்த மாணவ சமூகத்தினர் எனப் பெருந்திர ளாகக் கலந்து சிறப்பித்தனர்.

அதிபர் செல்லையா அவர்களின் சேவைக்காலத்தில் யா/வேலணை சரஸ்வதி வித்தியாசாலை பல்துறைகளிலும் அபி விருத்தியடைந்தது. மாணவர் தொகை அந் நாளிலே 500ஐயும் தாண்டியது. பாடசாலை யின் பௌதீக வளங்கள் அதிகரிக்கப் பட்டன. ஒரு பாடசாலையில் ஒருவர் 36 வருடங்கள் தொடர்ந்து அதிபராகச் சேவை யாற்றுவது என்பது எளிதான விடயமல்ல. அதுவும் தான் பிறந்த ஊரில் இப்பணி செய்யக் கிடைத்த வாய்ப்பைப் பெரும் பேறாக எண்ணி அடிக்கடி அவர் நினைவு கூர்வார். ஏழைப் பிள்ளைகளின் கல்வியில் அதீத ஈடுபாடு காட்டிய அதிபராக அவர் விளங்குகிறார்.

ஆறுமுகநாவலரின் பாதையை ஒட்டி திரு. இராஜரத்தினம் தலைமையில் உரு வாக்கப்பட்ட சைவவித்தியாவிருத்திச் சங்கத்தின் செயற்பாடுகளில் முன்னின்று உழைத்தவராக திரு. செல்லையா அவர் கள் காணப்படுகின்றார். தீவகத்தில் சைவ வித்தியாவிருத்திச் சங்கத்தின் செயற்பாடு கள் நடைபெறுவதற்கு அரும்பாடுபட்ட வராக அவர் விளங்குகின்றார். தீவுப் பகுதி யின் பல்வேறு இடங்களில் குறிப்பாக எழுவைதீவு, அனலைதீவு, நயினாதீவு போன்ற இடங்களில் உள்ள ஏழைப் பிள்ளைகளை இனங்கண்டு அவர்களுக்குத் திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியா லயத்தில் அனுமதி பெற்றுக்கொடுத்து கல்வி கற்பதற்கு வாய்ப்புக்களை ஏற்படுத் திக் கொடுத்தார். உயர்கல்வி கற்று நல்ல பதவிகளில் அமர்ந்தவர்கள். இன்றும் தங்க ளுக்கு வழிகாட்டிய அதிபரை மறவாது வாழ்ந்து வருகின்றனர். ஏழைப்பிள்ளை களுக்குத் தானாகவே முன்வந்து சிலேற், அப்பியாசக் கொப்பிகள், பாடப்புத்தகங்கள், பென்சில், மற்றும் எழுது கருவிகளையும் வாங்கி உதவியதைப் பலர் கூறக் கேட் கின்றோம். தான் அதிபராக இருந்த பாடசாலைகளில் விடுதி வசதிகளை ஏற் படுத்தி தீவக ஏழைப்பிள்ளைகளுக்கு இட மளித்து கல்வியில் அவர்களுக்கு வழி காட்டியாக இருந்தார். "அன்னசத்திரம் ஆயிரம் வைத்தலில் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்" என்பதையே எல்லாவற் றிலும் மேன்மையானதாகப் பெரிய வாத்தியார் ஏற்று அதற்கேற்பச் செயற் பட்டு வந்தார். அதிபரின் தன்னலம் கருதாத சேவையினால் இவர் காலத்தில் தீவகத்தில் குறிப்பிடத்தக்க ஏழைப் பிள்ளை கள் கல்வியில் முன்னேற வாய்ப்பு ஏற் பட்டது. "பிறர்பிள்ளை தலை தடவ தன் பிள்ளை தானே வளரும்" என்ற முது மொழிக்கேற்ப அவரின் தன்னலமற்ற சேவையினால் அவரது பிள்ளைகள் இன்று உயர்ந்த நிலையில் இருப்பதனை நாம் அவதானிக்கலாம்.

பெரிய வாத்தியார் பொதுச் சேவையி லும் தனது முத்திரையைப் பதித்தவராகச் சிறப்புப் பெறுகின்றார். 1956 – 1960 காலப் பகுதிக்கு வேலணைக் கிராம சபையின் இரண்டாம் வட்டாரத்திற்கான அங்கத்த வராகப் போட்டியின்றி ஏகமனதாகத் தெரிவு செய்யப்பட்டார். ஆட்கடத்தலும், பலதரப்பட்ட தில்லுமுல்லுகளும் இடம் பெறும் இத்தகைய தேர்தலில் ஏகமனதாக தெரிவுசெய்யப்பட்டமை அவரது அப்பழுக் கற்ற சேவைக்குக் கிடைத்த வெகுமதி யாகவே கொள்ள வேண்டும். அவரது பணிவும், பண்பும் தன்னலமற்ற சேவையும் வேலணை கிராமச் சங்கத்தின் தலைவராக ஏகமனதாகத் தெரிவு செய்யப்படவும் வழி வகுத்தது. இவரது தலைமைத்துவத்தின் கீழ் வேலணைக் கிராமம் பல வழிகளிலும் அபிவிருத்தி அடைந்தது. இக்காலப் பகுதி

யில் ஒழுங்கைகள் பல அகன்ற வீதிகளாக் கப்பட்டன. புதிய வீதிகள் அமைக் கப்பட்டன. கிராமத்தின் குடிநீர்ப் பிரச்சினை யைத் தணிப்பதற்கு நன்னீர்க் கிணறுகள் தோண்டப்பட்டன. குளங்கள் துப்புரவாக் கப்பட்டு அணைகள் கட்டப்பட்டு கூடிய நன்னீர்த் தேக்கத்திற்கு வழி அமைக்கப் பட்டது. வாய்க்கால்கள் ஒழுங்கமைக்கப் பட்டு கிராமத்தின் விவசாய வளர்ச்சிக்கு ஊக்கம் கொடுக்கப்பட்டது. நெசவு நிலை யங்கள் அமைக்கப்பட்டு கிராமப் பெண்கள் மத்தியில் நெசவுக் கைத்தொழிலில் ஈடுபட வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டது. சனசமூக நிலையங்கள் அமைக்கப்பட்டு கல்வியறிவும், வாசிப்புப் பழக்கமும் மேம் படுத்தப்பட்டது. இவ்வாறு இவர் சேவைக் காலத்தில் கிராமம் பலவழிகளிலும் முன் னேற்றம் கண்டது.

நீதிநெறி தவறாது இன்சொல்லனாக வாழ்ந்த பெரியவாத்தியார் 1971-1977 காலப்பகுதியில் அரசாங்கத்தினால் இணக்க சபைத் தலைவராக நியமனம் பெற்றார். அக்காலத்தில் இப்பகுதி மக்களிடையே ஏற்பட்ட சச்சரவுகள், குடும்பப் பிரச்சினை கள், காணித்தகராறுகள் போன்றவற்றினை நீதியாகவும், நேர்மையாகவும் அணுகி சமர சமான முறையில் இவற்றிற்குத் தீர்வு கண்டார். இதனால் ஊர் மக்களின் நன் மதிப்பை மேலும் பெருக்கிக் கொண்டார். கிராமத்தில் வாழ்ந்த காலத்தில் அங்கு இடம்பெற்ற வாழ்வு, தாழ்வு, சுகதுக்க நிகழ்வுகள் அனைத்திலும் பங்குகொண்டு மக்களுடன் மக்களாக ஒன்றிணைந்து வாழ்ந்து வந்தார்.

பெரிய உபாத்தியாயர் அவர்கள் கல்விப் பணி, பொதுச் சேவை என நின்றுவிடாது சமயப்பணிகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். மிகச் சிறந்ததமிழ், சைவ அபி மானியாக வெள்ளைத் தேசிய உடையில் காட்சி தரும் அதிபர் பாடசாலைகளில் மாணவர் தம் சைவசமய அடையாளங் களைப் பேணும் வகையில் நடவடிக்கை களை மேற்கொண்டார். தேவாரம் ஓதுதல், தீட்சை கொடுத்தல், சைவ சமய விழாக்கள், குருபூசைகளை நடத்தல் ஆகிய சமயப் பணிகளை அதிபராக இருந்தகாலத்தில் சிறப்பாகச் செய்து சைவத்தையும் தமிழை யும் தீவகத்தில் வளர்த்து வந்தார். மேலும் வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் தேவஸ்தானத்தில் பரிபாலன சபைத்தலைவராகப் பலவருடங்கள் இருந்து சபையை நல்வழிப்படுத்தி அம்பாளுக்குத் தொண்டாற்றி வந்தார். 1936 ஆம் ஆண்டு இராமலிங்க உடையார் தலைமையில் பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவில் புனருத்தாரணம் செய்யப்பட்டபோது தென்னிந்தியாவில் இருந்து சிற்பிகளை வர வழைப்பதற்கும், மூலஸ்தானக் கோபுரம் சிறப்புற அமைவதற்கும் உதவியாக இருந் தார். அத்துடன் கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெறுவதற்கும் முன்னின்று பணியாற் றினார்.

வேலணைக் கிராமத்திற்கும், தீவக மக்களுக்கும் பலவழிகளிலும் தன்னலமற்ற சேவையாற்றிய பெரிய உபாத்தியாயரின் பணிகளை ஆவணப்படுத்துவது அவசிய மானதாகும். சிதறுண்டு போன எமது பிர தேசம் மீளவும் ஒருகால் கட்டியெழுப்பப் படும்போது முன்னோர் எமக்கு செய்த அரும்பணிகளை எதிர்காலத் தீவக மக்கள் உணர்ந்து கொள்ளவும், அறிந்துகொள் ளவும் இத்தகைய சேவையில் தம்மை அர்ப் பணிக்கவும் இந்த ஆவணப்படுத்தல் உதவும் என்று நம்புவோம். சேவையால் உயர்ந்த பெரிய உபாத்தியாயர் அவர்கள் 12. 09. 2004 இல் இறையடி எய்தினார்.



# கல்விமான்கள்

## பழம்பெரும் அதிபர்

# திரு. அருணாசலம் வைரமுத்து

## (செல்லையா உபாத்தியாயர்)

### ஓர் பழைய மாணவன் - சைவப்பிரகாசம் - வேலணை

ஈழமணித் திருநாட்டின் வடபால் யாழ்ப் பாண தீபகற்பத்துக்கு தென்மேற்கே சப்த தீவுகள் என்று கூறப்படும் புகழ் மிக்க தீவு கள் காணப்படுகின்றன. இச் சப்ததீவுகளின் நடுநாயகமாகத் திகழ்வது லைடன் தீவெ னும் வேலணை. இங்கே புகழ்பூத்த சைவப் பெரியார்கள், கல்விமான்கள், கவிஞர்கள் எனப் பலர் வாழ்ந்தனர், வாழ்கின்றனர். இவர்களின் வரிசையில் நாற்பது ஆண்டு கள் கந்தப்பர் பாடசாலை எனும் சைவப் பிரகாச வித்தியாசாலையில் தலைமை ஆசிரியராக (அதிபராக) இருந்து அவ்வூர் மக்களின் பெருமதிப்பைப் பெற்ற செல் லையா உபாத்தியாயர் என அழைக்கப்பட்ட திரு. அருணாசலம் வைரமுத்து அவர் களும் ஒருவர்.

செந்நெல் கழனிகளும் தோட்ட வெளி களும் சூழ்ந்த சரவணை கிழக்கில் பள்ளம் புலமெனும் கிராமத்தில் அருணாசலம் வள்ளியம்மைப்பிள்ளை தம்பதிகளின் ஆறாவது மகவாக 1910ஆம் ஆண்டு சித்திரை பதினான்காம் திகதி (1910.04.14) அன்று முருகனருளால் இப்புவியில் அவதரித்த வைரமுத்து தனது கல்வியை அக்காலத்தில் சிறந்து விளங்கிய கந்தப்பர் பாடசாலையில் மேற்கொண்டார். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய இவர் தனது கல்வியை இனிதே நிறைவேற்றி ஆசிரியப் பணிக்காகத் தன்னை அர்ப்பணிக்கும் சிந் தையுடன் ஆசிரிய தராதரப் பத்திரப் பரீட் சையில் தேறியதுடன் திருநெல்வேலியில் அமைந்திருந்த சைவ ஆசிரியர் கலாசாலை யில் கற்று ஆசிரியப் பயிற்சி சான்றிதழைப் பெற்று தனது பத்தொன்பதாவது வயதில் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டார். ஆசிரியராகத் திகழ்ந்துவரும் காலகட்டத்

தில் இவரின் அளப்பரிய சேவையினாலும் திறமையினாலும் இவரை 1931ஆம் ஆண்டில் இருந்து கந்தப்பர் பாடசாலையின் தலைமை உபாத்தியாயராக பதவி உயர்த்தப்பட்டு அன்றிலிருந்து நாற்பது வருடம் பல இன்னல்கள், இடையூறுகளுக்கு மத்தியில் தலைமை உபாத்தியாயராக பணிபுரிந்ததனால் இவர் சதா தலைமையாசிரியர் என எல்லோரின் போற்றுதலுக்கும் உள்ளானார். இத்தகைய ஒரு தலைமை ஆசிரியராக நீண்ட காலம் சேவையாற்றிய பெருமை இவரையே சாரும். 1970ஆம் ஆண்டு சித்திரை பதினான்காம் திகதி (1970. 04. 14) ஓய்வடையும் வரை அதே பாடசாலையில் அதிபர் பதவியை வகித்து வேலணையூர் மக்களுக்கு அளப்பரிய சேவையை ஆற்றினார் என்பதை மக்கள் இன்றும் நினைவுகூருவதில் இருந்து தெட்டத்தெளிவாகின்றது.

பள்ளம்புலத்தின் முருகனருளினால் செந்தமிழும் சைவமும் ஒருங்கே சிறப்புப் பெற தமிழ் மொழியின் இலக்கணமும், இலக்கியமும், எண்ணும், சிறப்புறக் கற்று, பயிற்சிபெற்று ஆசிரியனாகி சேவை செய்தார். நல்லறிவு, நற்குணம், நன்னடை, நற்செயல், சொல்வன்மை கொண்ட வைர முத்து அவர்கள் ஆரவாரம் சிறிதுமின்றி அறிவுக்களஞ்சியமாய் ஊரார் போற்றும் உத்தமனாய் திகழ்ந்து இறுதிவரை உலாவிய தனித்துவம் வாய்ந்த உயரிய பண்பாளன். தலைமை ஆசிரியனாய் இருக்கும் போது தனது இருபத்தொன்பதாவது வயதில் வேலணை மேற்கில் வசித்த சுப்பிரமணியம் சிவக்கொழுந்து தம்பதியினரின் ஏக புதல்வி மனோன்மணியை நன்னாளில் திருமணம் செய்ததன் பயனாக நவமணிகளைப் பெற்றார்.

தனது சேவைக்காலத்தில் பாடசாலையில் நடைபெறும் சம்பவங்களை சம்பவத் திரட்டு புத்தகத்தில் (LOG BOOK) எழுதியதுடன் அதனைப் பேணிப் பாதுகாத்து, தொடர்ந்து வந்த அதிபரிடம் கையளித்தார். இன்றும் அப்புத்தகம் சைவப் பிரகாச வித்தியாசாலையில் பேணப்பட்டு வருகின்றது. தமிழர் பாரம்பரிய உடையான வெள்ளை வேட்டி, மேலங்கி, சால்வையுடன் உலா வரும் இவர் கல்வி கற்க வசதியற்ற பல ஏழை மாணவர்கட்கு தனது சொந்தச் செலவிலேயே கற்றல் உபகரணங்களை வாங்கிக் கொடுத்து அவர்களின் கல்விக்கு உதவி புரிந்தமை அவரது வெள்ளை மனத்தைத் தெளிவாக்கும். வேலணையில் சிறந்த விவசாயியாகத் திகழ்ந்து பல ஏழைகட்கு வருமானம் பெறுவதற்கு வாய்ப்பாக தனது நில புலங்களில் வேலைக்கமர்த்தி அவர்களின் அன்பைப் பெற்றார். தனது இலக்கண இலக்கிய அறிவை மேம்படுத்தும் நோக்கில் வேலணை மேற்கில் நெல்லாவில் எனும் சிறிய இடத்தில் அன்று ஆசிரியத் தொழிலை மேற்கொண்ட இராசா உபாத்தியாயர், தம்பு உபாத்தியாயர் இவர்களுடன் விதானையாராக இருந்த சைவத் தமிழறிஞர் ச. மகாலிங்கம் போன்ற இவருடைய நண்பர்களுடன் கலந்துரையாடல்களை மேற்கொள்ளுவார். இதனைவிட தனது வீட்டிற்கு வரும் பல அறிஞர்களுடன் குறிப்பாக அவரின் குடும்ப வைத்தியரும் அக்காலத்தில் வேலணையின் பிரபல ஆயுள்வேத வைத்தியருமான முருகேசு பரிகாரியுடன் புராணங்கள், இதிகாசங்கள் பற்றிச் சுவைபடக் கலந்துரையாடி தனது மனையை கலகலப்பாக வைத்திருப்பார்.

சைவசமய நெறிமுறைகளைப் பின்பற்றி வேலணை மேற்கு பெரியபுல மகா கணபதி

யின் அருளைப் பெற வேண்டி விநாயகர் விரதத்தை முறைப்படி நோற்று விரத உத்தியாபனமும் செய்தார். தனக்கு ஓய்வு கிடைக்கும் நேரமெல்லாம் தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள், புராணக் கதைகள், தேவார திருவாசகங்கள் என்பன வற்றை வாசிப்பதுடன் அவற்றைத் திறம் பட பேணி சிறிய நூலகம் போல் பாது காத்து வந்தார். அவற்றில் பல புத்தகங்கள் காலத்தின் கோலத்தால் அழிந்தாலும் ஒரு சிலவற்றை அவரின் புத்திரர்கள் பேணிக் காத்து வருகின்றமை குறிப்பிடக்கூடியது. கவிதை புனைவதில் தனது திறமையையும் இவர் நிலைநாட்டினார். அவற்றை எழுத் துருவிலோ அன்றி அச்சுவடிவிலோ பேணிப் பாதுகாக்கவில்லை. ஆனாலும் அவரின் மாமனாரின் நினைவுமலரில் எழுதிய கவிப் பாக்களில் "பிறந்தோரிடுதல் பேரவணி மார்க்கம்....." எனும் கவிப்பா, பல அரிய கருத்துக்களைக் கொண்டது.

தொழிலிலிருந்து ஓய்வு பெற்றாலும் ஊரிலுள்ளவர்களுக்கு கற்றலுக்காக பல உதவிகளைப் புரிந்துவந்துள்ளார். தனது இறுதிக்காலத்திலும் தனது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வந்தார். தனது ஓய்வூதியத்தைப் பெறும் பொருட்டு காலை யில் சென்று பெற்றுக்கொண்டதன் பின்பு முகச்சவரம் செய்து, வீடு திரும்பி உணவுண்டு மகிழ்ந்திருந்த நவராத்திரி நாலாம் நாளான பதினாறாம் திகதி புரட்டாதி மாதம் 1980ஆம் ஆண்டு (1980.09.16) இரவு வேளை யில் சிறு மயக்கத்தின் மூலம் தனது இன்னு யிரை நீத்தார். கல்விக்கு அவர் செய்த சேவைக்காக கல்வித் தெய்வத்தை வேண்டி நிற்கும் காலத்தில் இறைவனடி சேர்ந்தமை இவரின் சேவைக்கு எடுத்துக் காட்டாகும்.



# கல்விமான்கள்

# பேராசிரியர் பொன்னுத்துரை பாலசுந்தரம்பிள்ளை

B.A. (Hons) Cey. Ph.D (Durham), All Island J.P.

**முன்னாள் துணைவேந்தர் (யாழ் பல்கலைக்கழகம் 1997-2003)**

**பேராசிரியர் கா. குகபாலன் யாழ். பல்கலைக்கழகம்**

பேராசிரியர் பொ. பாலந்தரம்பிள்ளை 29. 04. 1941 ஆம் ஆண்டு வேலணையில் பண்டிதர் பொன்னுத்துரை ஆசிரியை நாகரத்தினம் தம்பதியினரின் நான்காவது பிள்ளையாகப் பிறந்தார். இவர் தனது ஆரம்பக் கல்வியை (1946) கரம்பன் சண்முகநாத வித்தியாசாலையில் பெற்றார். பின் ஊர் காவற்றுறை அந்தோனியார் கல்லூரியில் (1950 - 1953) ஆரம்ப இடைநிலைக் கல்வியைப் பெற்றார். பின் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் (1954-1960) உயர் இடைநிலைக் கல்வியைத் தொடர்ந்து 1961 இல் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் உயர்கல்வி பெற அனுமதி பெற்றார்.

இவர் பாடசாலை நாட்களில் துடிப்பான மாணவனாக விளங்கினார். பாடசாலை இணைச் செயற்பாடுகளில் பெரும் பங்கு கொண்டார். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் படிக்கும் காலத்தில் இவர் கல்லூரி மாணவத் தலைவராவும் கடேற் உறுப்பினராகவும் இல்லத் தலைவராகவும் செயற்பட்டார்.

1961 இல் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் புவியியல், பொருளியல், தமிழ் ஆகிய பாடங்களை முதலாம் ஆண்டில் கற்று பின் மூன்று வருடங்களுக்கு புவியியலை சிறப்புப் பாடமாகக் கற்று இரண்டாம் வகுப்பு மேற் பிரிவில் சித்திபெற்று அணியில் முதல் நிலை மாணவனாக விளங்கினார். 1965 ஒக்டோபர் மாதத்தில் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் புவியியல் உதவி விரிவுரையாளராக பணியாற்றத் தொடங்கினார். இவரது முக்கியத்துவம் உணரப்பட்டு புதிதாக உருவாக்கப்பட்ட இலங்கைப் பல்கலைக்கழகக் கொழும்புப் பிரிவில் புவியியல் விரிவுரையாளராகப்

பணியாற்றுமாறு பணிக்கப்பட்டார். பின்னர் 1967 இலிருந்து பேராதனைப் பல்கலைக் கழகத்தில் பணிபுரியலானார்.

1969 இல் தனது கலாநிதிப் படிப்புக்காக இங்கிலாந்தில் டர்ஹாம் பல்கலைக் கழகத்துக்குச் சென்றார். அங்கு புகழ்பெற்ற விரிவுரையாளர்களான பேராசிரியர் B.D. CLARK, J.F. CLARK ஆகியோரின் மேற்பார்வையில் கலாநிதிப் படிப்பை மேற்கொண்டார். 1972 இல் கலாநிதிப் பட்டம் பெற்று நாடு திரும்பினார். இவர் சமர்ப்பித்த ஆய்வுக் கட்டுரை (வட இலங்கையில் மத்திய இடங்களின் படிமுறை அமைப்பு) Hierarchy of Central places in northern Sri Lanka ஆகும். நாடு திரும்பியவர் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணி தொடர்ந்தார். 1978 இல் சிரேஷ்ட விரிவுரையாளராகப் பதவி உயர்வு பெற்றார். இக்காலப் பகுதிகளில் பேராசிரியர் கற்றல், கற்பித்தல், ஆய்வுகளில் துடிப்பாகச் செயற்பட்டார். 1980 இல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் புவியியல் பேராசிரியராக நியமனம் பெற்று 1990 இல் சிரேஷ்ட பேராசிரியராகப் பதவி உயர்வு பெற்று, பணி புரியலானார்.

கல்வித் துறையில் பெரும் பணியாற்றி வந்த பேராசிரியர் தனது கற்பித்தற் பணியுடன் கல்வி நிர்வாகத் துறையிலும் படிப்படியாக ஈடுபட்டு வந்தார். பேராதனைப் பல்கலைக்கழகத்தில் மாணவ ஆலோசகராகவும், பின் மாணவ நலன் சேவை, பிரதி இயக்குனராகவும் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் 1981இல் புவியியல் துறைத் தலைவராகப் பத்து ஆண்டுகள் பணிபுரிந்தார். 1991 இலிருந்து இரு தடவைகள் கலைப் பீடாதிபதியாகத் தெரிவு செய்யப்பட்டார். 1996 இல் ஜுலை மாதத்திலிருந்து பதில் துணைவேந்தராகவும் 1997 மார்ச் மாதத்திலிருந்து 2003 மார்ச் மாதம் வரை பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பணி புரிந்தார். இவர் 1983, 1985 காலத்தில் இரு தடவைகள் பேரவை உறுப்பினராக தெரிவு செய்யப்பட்டு கடமையாற்றினார். யாழ்ப்பாணப் பல்கலைக்கழகக் கல்வி நிர்வாகத்தில் பல நிலைகளில் நீண்டகாலம் பணியாற்றிவர்களுள் ஒருவராகப் பேராசிரியர் திகழ்கிறார்.

2001 இல் இலங்கைப் பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்கள் சபையின் தலைவராகவும் அதன் வழியாகப் பொது நல அமைப்பு பல்கலைக்கழகங்களின் சங்கத்தின் செயற்குழு உறுப்பினராகவும் செயலாற்றினார். இக்காலத்தில் சங்க செயற்பாடுகளுக்காக இங்கிலாந்து, கானா, சிங்கப்பூர், இந்தியா போன்ற நாடுகளுக்குஞ் சென்றிருந்தமை குறிப்பிடத்தக்கது. 1997 இல் கனடாவிலும் 2002 இல் சைப்பிரசிலும் நடைபெற்ற பொதுநல அமைப்பு நாடுகளின் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாநாடுகளில் பங்குபற்றினார்.

பேராசிரியர் சிறந்த ஒரு புவியியலாளர். இவர் கல்லூரிக் காலங்களிலும் பின் பல்கலைக்கழகக் காலங்களிலும் சிறந்த புவியியல் மாணவனாகத் திகழ்ந்தார். இவர் புவியியல் சார்ந்தஆய்வுகளைச் செய்து பல கட்டுரைகளை எழுதியுள்ளார். இலங்கையின் வடகிழக்குப் பகுதிகள் தொடர்பான பிரதேச அபிவிருத்தி சார்ந்த கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார்.

புவியியலில் புலமை கொண்டவரான பேராசிரியர் கால ஓட்டத்துடன் பிரதேசத் திட்டமிடலிலும் புலமையாளனாகத் தன்னை வளர்த்துக்கொண்டார். "யாழ்ப்பாணத்

திட்டம் - 2000" "யாழ்ப்பாணத் திட்டம் 2003" ஆகிய திட்டத் தயாரிப்புக்களில் பங்களித்துள்ளார். வட பகுதி புனர்வாழ்வு, புனருத்தாரணச் செயற்பாட்டில் அது தொடர்பான கருத்துக்களைப் பேசியும் எழுதியும் வருவதுடன் வட பகுதிப் புனர்வாழ்வு புனருத்தாரணச் சபையின் இயக்குனர்களுள் ஒருவராகவும் விளங்கினார்.

பேராசிரியர் அவர்கள் கல்வியில் தாராளத் தன்மை கொண்டவர். பெரும் எண்ணிக்கையான மாணவர்கள் உயர் கல்வியைப் பெறவேண்டும் என விரும்பு பவர். அதற்காக உழைப்பவர். இவர் யாழ் பல்கலைக்கழகத்தில் கலைப்பீடாதிபதியாக இருந்த காலத்தில் இவரின் முயற்சியால் பட்டப் பின் கல்வி டிப்ளோமா பயிற்சி, வெளிவாரிப் பட்டப்படிப்பு, தொழிலாளர் கற்கை நெறி, புறநிலைப் படிப்பு போன்ற கற்கை நெறிகள் ஆரம்பிக்கப்பட்டன. சமூகவியலைச் சிறப்புப் பாடமாகக் கற்பதற்கு வழிசமைத்தவர். மேலும் இவர் வர்த்தகத் துறையை இரு பிரிவுகளாகப் பிரித்து வர்த்தகத் துறை, முகாமைத்துவத்துறை என செயற்பட வழிகோலினார். இராமநாதன் நுண்கலைக் கழகத்தைப் பெரு மறுசீரமைப்புக்கு உட்படுத்தி அங்கு பணியாற்றிய கட்டுரை ஆசிரியர்களை விரிவுரையாளர்களாகத் தரம் உயர்த்தியும் டிப்ளோமா கற்கை நெறிக்குப் பதிலாக பட்டப் படிப்பு கற்கை நெறியை ஆரம்பித்தும் கலையில் ஆற்றுகைத் துறையை (Dept. of performing Arts) உருவாக்கி, அதனைப் பின் நடனத்துறை, சங்கீதத்துறை என இரு பிரிவுகளாக்கியும் பணி பல புரிந்தார். இவர் கலைப்பீடாதிபதியாக இருந்து அதன் தொடர்ச்சியாகத் துணைவேந்தராக வந்ததன் காரணமாக கலைப்பீடத்தில் பல புதிய கற்கை நெறிகளை அறிமுகம் செய்தார். உளவியல், மனைப் பொருளியல், இந்து தத்துவம், சித்திரமும் வடிவமைப்பும், திட்டமிடல் கற்கை நெறிகள் ஆகியவை இவர் காலத்தில் உருவாக்கப்பட்டவை.

இவரின் கடும் முயற்சியால் முகாமைத்துவ வணிக கற்கை நெறிப் பீடமும் உயர் பட்டப் படிப்புப் பீடமும் உருவாக்கப்பட்டன. வடமாகாண இணைந்த பல்கலைக் கழகக் கல்லூரி யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் வளாகமாக இரு பீடங்களுடன் தரம் உயர்த்தப்பட்டது. மேலும் விளையாட்டுத்துறையில் டிப்ளோமா கற்கை நெறியும், மீன்பிடித் துறையில் டிப்ளோமாக் கற்கை நெறியும், மருத்துவத் துறையில் மருத்துவம் சார் கற்கை நெறிகள் (Para Medical Courses) ஆரம்பிக்கப்பட்டன. இவரின் முயற்சியால் இரு பெரும் பயன்கள் தமிழ் மக்களுக்குக் கிட்டின. பெரும் எண்ணிக்கையான தமிழ் மாணவர்கள் உயர் கல்வி கற்கும் வாய்ப்பைப் பெற்றனர். அடுத்தது பல புதிய துறைகளில் மாணவர்கள் கல்வி பயிலும் வாய்ப்புகள் உருவாக்கப்பட்டன. இவரது காலத்தில் நீண்டகாலமாக முடங்கிக் கிடந்த பல்கலைக் கழக உட்கட்டுமானப் பணிகள் ஆரம்பிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டன. இவற்றுள் முக்கியமானவையாக. பல்கலைக்கழக நூலகம், மாணவர் நிலையம், இராமநாதன் நுண் கலைத் தொகுதி, விளையாட்டு மைதானம் ஆகியவை குறிப்பிடத்தக்கது.

பேராசிரியர் அவர்கள் தனது கல்வி, நிர்வாக நடவடிக்கைகள் தொடர்பாக பல நாடுகள் சென்று கருத்தரங்குகள் ஆய்வுப் பட்டறைகளில் பங்குபற்றியவர். குறிப்பாக இங்கிலாந்து, ஜேர்மனி, பிரான்ஸ், டென்

மார்க், சுவீடன், நோர்வே, சைப்பிரஸ், இந்தியா, பாகிஸ்தான், நேபாளம், கனடா ஆகிய நாடுகளுக்குச் சென்றிருந்தார்.

பேராசிரியர் அவர்கள் கல்வியாளன் மாத்திரமன்று. ஒரு சமூக சேவகனும் ஆவார். இவர் தீவுப் பகுதி யாழ்ப்பாணம் ஆகிய பிரதேசங்களின் அபிவிருத்தியில் மிகுந்த அக்கறை கொண்டவர். பாடசாலை களின் கல்விசார் அபிவிருத்தியில் பங்கு கொள்பவர். யாழ்ப்பாண நூலக அபி விருத்திச் சபையில் நீண்ட கால உறுப்பின ராக விளங்கி நகரத்தின் வளர்ச்சி, மீள் கட்டுமானப் பணியில் பங்கேற்றவர்.

இவர் 1969ஆம் ஆண்டு ஆசிரியை இராஜலக்ஷ்மி என்பவரைத் திருமணம் செய்தார். இவர்களுக்கு புத்திரர் இருவரும் புத்திரி ஒருவரும் உளர். இவரின் சகோதர சகோதரிகள் பதினொருவரும் இவரைப் போன்றே கல்விப் புலம் கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. பேராசிரியரது கல்விப் பணி, சமூகப் பணியைக் கருத்திற் கொண்டு இலங்கை அரசாங்கம் அவருக்கு நாடு முழுவதுக்குமான சமாதான நீதிவான் பட்டத்தைக் கொடுத்துள்ளது. நல்லை திருஞான சம்பந்தர் ஆதீனம் இவருக்கு "ஒப்புரவாளர்" என்னும் பட்டத்தைக் கொடுத்து கௌரவித்துள்ளது. யாழ்ப்பாண இந்துக் கல்லூரி கொழும்புக் கிளை இவ ரது சேவையை பாராட்டிக் கௌரவித்துள் ளது. யாழ்ப்பாணம் றோட்டரிக் கழகமும், மானிப்பாய் லயன்ஸ் கழகமும் இவரது கல்வி, சமூகப் பணிகளை கௌரவித்து உள்ளன. இது போல் பல்வேறு சமூக நிறு வனங்கள் இணைந்து இவருக்கு ஐந்து மணி விழா நிகழ்ச்சிகளைச் செய்திருந்தன.

பேராசிரியர் பாலசுந்தரம்பிள்ளை வேலணை மக்களின் அன்புக்கும் மதிப் பிற்கும் என்றும் உரியவராக இருப்பார். அவர் எங்கள் கிராமத்துக்குப் பெயரும் புகழும் தேடித் தந்தவர்.





## கல்விமான்கள்

# பேராசிரியர் செல்லத்துரை பாலச்சந்திரன்
## (முன்னாள் புவியியற்றுறைப் பீடாதிபதி)

திரு. ந. பேரின்பநாதன் - சிரேஷ்ட விரிவுரையாளர் தரம் 1
பொருளியற்துறை - யாழ். பல்கலைக்கழகம்- யாழ்ப்பாணம்

### பேராசிரியர் பெரிய மனிதன்

"பேராசிரியர் செ. பாலச்சந்திரன் அவர்கள் ஒரு சிறந்த பண்பாளர். எவருடனும் அன்பாகவும் பண்பாகவும் பழகுபவர். நிதானமானவர். எத்தகைய இக்கட்டான சூழ்நிலையிலும் சமாளித்து நடக்கும் சாமர்த்தியம் வாய்ந்தவர். எல்லோர் மத்தியிலும் முதன்மையாக விளங்கிய பேராளன். நல்லவர். வல்லவர். செயற்கரிய செய்யும் செயல் வீரன். உள்ளொன்று வைத்து புறமொன்று பேசாதவர். நல்லாசானாக, நல்ல நண்பனாக நல்லறிஞராக, நல்லதொரு வழிகாட்டியாக விளங்கியவர். நல்ல நிர்வாகியாக சிறந்த ஆளுமை மிக்கவராக தீர்மானங்களை எடுக்கும் திறன் மிக்கவராக விளங்கியவர். பல்கலைக்கழக இளம் தலைமுறையினருக்கு சிறந்ததொரு எடுத்துக் காட்டாக விளங்கிய பேராசான். வரையறைகள் கஷ்டங்கள் என்பவற்றைக் கருத்தில் கொண்டு மாணவர்களின் பிரச்சனைகளைத் தீர்க்கும் ஆற்றல் கொண்டவர். மனிதநேயம் மிக்கவராக மாணவர்களின் உரிமைகளை, உணர்வுகளை மதித்து நடந்தவர். தமிழ்ப்பற்றும் தமிழ் மண்மீது பற்றும் கொண்டவர். காட்சிக்கு எளியவராய் கடுஞ்சொல் கூறாதவராய் வாழ்ந்தவர். வித்துவக் காய்ச்சல், போலி உயர்பகட்டு இல்லாதவராய் வாழ்ந்தவர்."

மேற் கூறிய விடயங்கள் யாவும் பேராசிரியர் செ. பாலச்சந்திரன் உயிருடன் வாழ்ந்த போதும் அவர் இறந்த போதும் கற்றோராலும் நண்பர்களாலும் ஊர் மக்களாலும் கூறப்பட்டவையாகும்.

### ஆரம்பக் கல்வி

11.09.1942 இல் பிறந்த பேராசிரியர்

செ. பாலச்சந்திரன் அவர்கள் ஆரம்பக் கல்வியினை வேலணை மேற்கு நடராசா வித்தியாலயத்தில் பெற்றார். அதன் பின்னர் தனது இடைநிலைக் கல்வியினை வேலணை மத்திய கல்லூரியில் பெற்றார். க. பொ. த. உயர்தரத்தில் திறமைச் சித்திகளைப் பெற்று 1963 இல் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் உள்வாரி மாணவனாக கலைப்பிரிவில் சேர்ந்தார். வேலணை மத்திய மகாவித்தியாலயத்திலிருந்து முதன்முதலில் கலைப்பீடத்திற்கு தெரிவுசெய்யப்பட்ட மாணவன் என்ற பெருமை இவருக்குண்டு.

## பல்கலைக்கழகக் கல்வி

1963 இல் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் மாணவனாகச் சேர்ந்த பேராசிரியர் முதலாம் வருடப் பரீட்சையில் புவியியல் பாடத்தில் அதிக புள்ளிகளைப் பெற்று புவியியல் பாடத்தினைச் சிறப்புப் பாடமாக பயிலத் தொடங்கினார். 1967 இல் புவியியல் சிறப்புக் கலைமாணிப் பரீட்சையில் 2ம் வகுப்பு மேற்பிரிவில் (Second Class Upper Division) சித்தி பெற்றார். அவ்வாண்டு தமிழ்மொழியில் புவியியல் சிறப்புப் பாடமாகப் பயின்றவர்களில் அதிக புள்ளிகளைப் பெற்ற மாணவர் இவர்தான். 1980களுக்கு முன்னர் பல்கலைக் கழகங்களில் சிறப்புப் பாடங்களைப் பயில்வோர் சிறப்புச் சித்தியை (Honours) பெறுவதென்பது மிகக் கடினமான காரியம். அதிலும் அக்காலத்தில் இரண்டாம் வகுப்பு மேற் பிரிவு சித்தி பெறும் மாணவர்களை மிகுந்த திறமைசாலிகளாகவே சகமாணவர்கள், கற்றவர்கள் கணித்துக் கொண்டனர். அத்தகைய திறமைசாலிகளின் பட்டியலில் பேராசிரியரும் இடம்பெற்றிருந்தார் என்பது பெருமைக்குரிய விடயமாகும். இதன்மூலம் தான் கல்விகற்ற வேலணை மத்திய கல்லூரிக்கும் தான் பிறந்த ஊருக்கும் பெருமையைத் தேடிக் கொடுத்திருந்தார்.

## பல்கலைக்கழக விரிவுரையாளர்.

சிறந்த மாணவனாகத் திகழ்ந்து பரீட்சையில் சிறந்த பெறுபேற்றைப் பெற்றதன் காரணமாக, 1968 இல் கொழும்பு பல்கலைக்கழகத்தில் உதவி விரிவுரையாளராகத் தெரிவு செய்யப்பட்டார். 1972 இல் பிரித்தானிய கடல் கடந்த மாணவர் புலமைப் பரிசில் பெற்று இங்கிலாந்தில் உள்ள பேர்மிங்காம் பல்கலைக்கழகத்தில் கல்வி கற்றும் பிரயோகக் கால நிலையியல் துறையில் முதுவிஞ்ஞானிப் (M.Sc) பட்டத்தினை 1975 இல் பெற்றுக் கொண்டார். புவியியல் பயிலும் மாணவர்கள் பலர் காலநிலையியல் பிரிவு கடினமானதெனக் கூறுவர். அத்துறையில் வெளிநாட்டில் பெற்ற அனுபவத்தை வைத்து பேராசிரியர் இலங்கையில் பல மாணவர்களை உருவாக்கி உள்ளார். முது விஞ்ஞானிப் பட்டத்தினைப் பெற்ற பின்னர் நாடு திரும்பிய பேராசிரியர் 1975 இல் விரிவுரையாளராகப் பதவி உயர்வு பெற்று கொழும்புப் பல்கலைக்கழகத்தில் தொடர்ந்து பணியாற்றினார். பின்னர் தான் பிறந்த மண்ணுக்கு சேவையாற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கில் 1978 ஆம் ஆண்டு மே மாதம் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திற்கு மாற்றலாகி வருகை தந்தார்.

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் அபிவிருத்திக்கு பேராசிரியர் செய்த பணிகள் ஏராளமானவையாகும். 1982இல் சிரேஷ்ட விரிவுரையாளராக பதவியுயர்வு பெற்று 1992 இல் இணைப் பேராசிரியரானார். 1992க்கும் 1997 க்கும் இடையில் புவியியல் துறைத் தலைவராக கடமையாற்றினார். 1997 க்கும் 1999 க்கும் இடைப்

பட்ட காலத்தில் தென்கிழக்குப் பல்கலைக் கழகத்தில் புவியியலில் அதிதிப் பேராசிரியா ராகக் கடமையாற்றினார். அப் பல்கலைக் கழகத்திலிருந்த புவியியல் துறையை ஒழுங்கு படுத்துவதும் புவியியல் கற்கை நெறிக்குரிய பாடவிதானங்களைத் தயாரிப்பதிலும் இவர் ஆற்றிய பணியை அப் பல்கலைக்கழகம் விதந்து பாராட்டியுள்ளது. 1999 இல் யாழ்ப் பாணப் பல்கலைக்கழகத்தில் கலைப்பீடாதி பதியாக ஏகமனதாகத் தெரிவு செய்யப் பட்டார்.

## கலைப் பீடாதிபதியாக

தீவுப் பகுதியில் உள்ள பாடசாலையில் கல்வி கற்று அப்பாடசாலையில் இருந்தே நேரடியாகப் பல்கலைக்கழகம் சென்று கலைப் பீடத்தின் அதியுயர் பதவியினை வகித்த முதல் மனிதர் என்ற பெருமை பேராசிரியர் செ. பாலச்சந்திரன் அவர் களையே சாரும்.1999-2001 வரை பீடாதிபதி யாக செயற்பட்ட காலத்தில் பல்கலைக்கழக கல்விச் சீர்திருத்தம் காரணமாக கலைப் பீடத்தில் அறிமுகமாகிய புதிய பாடத் திட் டங்களை உருவாக்குவதில் முனைப்புடன் செயற்பட்டார். தான் ஒரு சிறந்த நிருவாகி என்பதை இக்காலகட்டத்தில் நிரூபித்தார்.

## ஆய்வுகள்

பேராசிரியர் புவியியல் சம்பந்தமான நூல்களையும் ஆராய்ச்சிக் கட்டுரைகளை யும் வெளியிட்டுள்ளார். பிரயோகக்கால நிலையியல், இலங்கையின் பௌதிகப் புவி யியல் ஆகிய இரு நூல்களை வெளியிட் டுள்ளார். யாழ்ப்பாண மாவட்ட காலநிலை, வரட்சியின் பரம்பல், சூறாவளியின் தாக்கம், நீர்வளம், வடகிழக்குப் பிரதேச வளங்கள் போன்ற தலைப்புக்களில் ஆய்வுக் கட்டுரை களை எழுதியுள்ளார். புவியியல் அறிவை யும் பழந்தமிழ் இலக்கியச் செய்திகளையும் வைத்து சங்ககாலத்தில் நிகழ்ந்த சூறாவளி பற்றிய ஆய்வினை மேற்கொண்டிருந்தார். கலைப் பீட ஆய்வேடான சிந்தனையின் ஆசிரியர் குழுவில் ஒருவராகப் பணியாற்றி யுள்ளார். 1986 க்கும் 1988க்கும் இடையில் "The Sri Lankan Journal of South Asian Studies" என்ற கலைப்பீட ஆய்வு சஞ்சிகை யின் ஆசிரியராகக் கடமையாற்றியுள்ளார். கடும் சுகவீனமுற்று வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டிருந்த போதும் கூட கல்விச் சிந்தனையுடனேயே இருந்தார்.

## கல்விசாராப் பணிகள்

பேராசிரியர் செ. பாலச்சந்திரன் அவர்கள் பல்கலைக்கழகத்தில் தனியே விரிவுரையாளராக மட்டும் இருந்து விட வில்லை. கல்விசாரா நடவடிக்கைகள் பலவற்றிலும் பங்கெடுத்துக்கொண்டார். 1985 - 1986 ஆம் ஆண்டுகளில் யாழ்ப் பாணப் பல்கலைக்கழக ஆசிரியர் சங்கத் தலைவராக கடமையாற்றினார். இக் காலத் தில்தான் பல்கலைக்கழக மாணவன் விஜி தரன் காணாமல் போனமை நிகழ்ந்தது. மாணவர்கள் வகுப்புக்களைப் பகிஸ்கரித்து உண்ணாவிரதத்தில் ஈடுபட்டிருந்தனர். மாணவர்கள், அதிகாரிகள், இயக்க முக் கியஸ்தர்கள் ஆகியோருடன் இரவுபகலாக பேசி பிரச்சினையை முடிவுக்கு கொண்டு வர பெரும் பணியாற்றியிருந்தார். மேலும் 1988 முதல் 1997 வரை சிரேஷ்ட மாணவ ஆலோசகராகக் கடமையாற்றியிருந்தார். இக்காலத்தில் பல்கலைக்கழக மாணவர்கள் சிலரை இந்திய இராணுவம் தமது முகாம் களுக்கு கொண்டுசென்ற சம்பவங்கள் பலவுண்டு. அக்காலங்களில் தானே நேரில் முகாம்களுக்குச் சென்று பலமணிநேரம் கால் கடுக்க நின்று இராணுவ அதிகாரி களுடன் கதைத்து மீட்டுக்கொண்டு வந்திருக்கின்றார்.

## தமிழ் மீதான பற்று

கொழும்புப் பல்கலைக்கழகத்தில் இருந்து யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத் திற்கு மாற்றலாகி வந்தமைக்கான முக்கிய நோக்கம் தமிழ்ப் பிரதேசத்தில் தமது சேவையைச் செய்ய வேண்டும் என்பதே யாகும். தனது மதிப்புக்குரிய பேராசிரியர் செல்வநாயகம் அவர்களுடன் இணைந்து 1979 இல் தென்மராட்சிப் பகுதிகளின் கிராமிய பொருளாதார அளவீட்டினை மேற்கொண்டார். பல்கலைக்கழகத்தில் பயி லும் போதே மாணவர் கழகத்தினை உரு வாக்கி ஒன்றுகூடல் மூலம் தீவக மாண வர்களை ஒருங்கிணைத்திருந்தார். மாண வனாக இருக்கும் போதே தீவகத்தின் அபி விருத்தி பற்றி சிந்தித்தவர். பின்னர் தீவக அபிவிருத்திக் கழகத்தினை உருவாக்கி தீவக பிரதேச அபிவிருத்திக்காக உழைத் தவர்.

## வேலணை மீதான தனிப்பற்று

தான் பிறந்த ஊரான வேலணை மண்ணின் மீது அளவிடமுடியாத பற்றுக் கொண்டவர். தமது குல தெய்வமான வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப் பிள்ளையாரின் மீது அளவு கடந்த பக்தி கொண்டவர். அவ்வாலய பரிபாலன சபையின் காப்பாளராக விளங்கி கும்பாபிஷேகத்தின் போது, தானே பதிப்பா சிரியராக இருந்து மலரொன்றினை வெளி யிட்டிருந்தார். வேலணை மண்ணில் நிற் கும்போது மக்களோடு மக்களாக சிறந்த நண்பனாக வித்துவக் காய்ச்சல் இன்றி எல்லோருக்கும் இனியவனாக விளங்கியவர். வேலணை மத்திய கல்லூரியின் வளர்ச்சி யில் பெரும் அக்கறை கொண்டவர். இடப் பெயர்வின் பின்னர் அப்பாடசாலையை இயங்க வைப்பதற்கு முன்னின்று உழைத் தவர். கல்லூரியின் பொன்விழாவின்போது பிரதம விருந்தினராக பேராசிரியர் அழைக் கப்பட்டிருந்தமை மிகவும் பொருத்தமான விடயமாகும்.

பேராசிரியர் உயிரோடு இருந்திருப் பின் 2007 ஆம் ஆண்டு வரை கடமையாற் றியிருப்பார். அவரது திடீர் மறைவு பல் கலைக்கழகத்திற்கும், தமிழ் மண்ணுக்கும் குறிப்பாகத் தீவக மண்ணுக்கும் பேரிழப் பாகும். எனினும் அவருடைய சாதனைகள் வேலணை மண்ணுக்கு பெருமையைக் கொடுப்பனவாகும். வேலணையில் பிறந்த வர்களில் முதல்வரிசையில் வைத்து மதிக் கப்படுபவர்களில் பேராசிரியரும் ஒருவர் என்பது யாரும் மறுக்க முடியாத ஒரு வெளிப்படையான உண்மையாகும்.



# வேலணையிலுள்ள தீவுப்பகுதியின் மணியகாரன் கந்தோர் - மணியகாரன் வீடு



18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து 19 ஆம் நூற்றாண்டு இடைக்காலம் வரை தீவுப் பகுதியின் செயலகமாக விளங்கிய வீட்டின் இன்றைய தோற்றம்.



# கல்விமான்கள்

# திருமதி. கமலாசினி பொன்னப்பா

## (ஆசிரியை)

### திரு . க. நவரத்தினம் (தபாலதிபர்)

உலகிலே தனக்காக வாழ்ந்தவர்கள் இலகுவில் மறக்கப்பட்டு விடுவார்கள். ஆனால் பிறர்க்காக வாழ்ந்தவர்கள் நின்று போற்றப் படுவார்கள். இதற்கு அழிக்கப்பட முடியாத நல்ல உதாரணமாக திகழ்ந்தவர் "செல்லம்மா - வாத்தியம்மா" ஆவார். சைவத்தையும் தமிழையும் கண்ணென போற்றி வளர்த்த வேலணைப் பதியிலே திருவாளர் நாகமணி மருதப்புவுக்கும் அவர் தம் வாழ்க்கைத் துணைவி சின்னத் தங்கத்திற்கும் பிறந்த ஆறு பெண்மக்களில் மூன்றாவதாக 31. 06. 1902 இல் பிறந்த வரே வாத்தியம்மா. பெற்றோர் ஆரம்பத் திலே இட்ட பெயர் செல்லம்மா. இவர் தமது ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் உயர் கல்வியை உடுவில் மகளிர்க் கல்லூரியிலும் கற்றார். அங்கு கற்கும் பொழுதே மிஷன் போதனைகளால் ஈர்க்கப்பட்டு அதிலே ஈடுபாடு காட்டத் தொடங்கினார். இதன் பயனாக ஞானஸ் ஞானம் பெற்று கமலாசனி என்ற பெயர் மாற்றமும் பெற்றார். தனது உயர் கல்வியை நிறைவு செய்தவுடன் அவரது 14 வயதிலே வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலே ஆசிரியப் பணி யைத் தொடங்கினார். வேலணை மக்க ளால் பெரிதும் மதிக்கப்பட்ட இளையதம்பி பெரிய உபாத்தியாயர், கந்தையா உபாத்தி யாயரோடு உபாத்தியம்மாவும் சேர்ந்து கற்பித்தலை தொண்டாகக் கருதி செய்த வர்கள் என்பது மறுக்க முடியாத உண்மையே.

இந்நிலையில் அவரது ஆசிரியத் தொண்டின் ஒன்பதாவது வருடத்திலே இவரது பெற்றோர்கள் இவரது விருப் பப்படியே கிறிஸ்தவ மதத்தை சேர்ந்த திரு.

சின்னத்தம்பி பொன்னப்பா என்ற ஆசிரியரை மணம்முடித்து வைத்தார்கள். இன்பமான இல்லற வாழ்வின் பயனாக மறு வருடமே இரட்டைக் குழந்தைகளைப் பெற்றார்கள். நமது கணக்கு வேறு ஆண்டவன் கணக்கு வேறு அல்லவா? பிறந்தசில நாட்களிலே பிள்ளைகளையும் மறு வருடத்திலே கணவனையும் தேவன் தன்னுடன் சேர்த்துக் கொண்டுவிட்டான். தொடர்ந்த சோகங்களால் நொந்துவிடாமல் தேவநம்பிக்கையால் உரம்பெற்ற அவரது உள்ளம் இளமைக்கால ஆசாபாசங்களைத் துறந்து உணர்ச்சிகளை வெற்றிகொண்டு தனது 25ஆவது வயதிலிருந்தே தவவாழ்வினை மேற்கொள்ள வைத்தது.

யாழ்குடாநாட்டிலே புகழ்பூத்ததும், கல்விப் பசியைப் போக்கியதும் பல விற்பன்னர்களை உருவாக்கியதுமான வட்டுக்கோட்டையின் யாழ்ப்பாணக் கல்லூரி ஆரம்பத்திலேயே வேலணையிலே ஸ்தாபிக்கப்பட விருந்ததாகவும் இப்பிரதேசத்தின் சமயப் பற்றாளர்களால் இது மறுக்கப்பட வட்டுக்கோட்டையிலேயே ஸ்தாபிக்கப்பட்டதாகவும் எம்மூர் பெரியவர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றோம். இன்றைய நமது நோக்கில்... இது நாம் பெற்றிருக்க வேண்டிய அறிவியல், பொருளாதார ரீதியான வளர்ச்சியை இடம் மாற்றிய செயற்பாடு என்றால் தவறில்லை. இக் குறையை ஓரளவாவது போக்குவதற்கு எங்கள் வாத்தியம்மா அத்திவாரம் இட்டவர் என்பதில் மாற்றுக் கருத்தில்லை. “ஆயிரம் மைல் பயணத்தையும் ஒரு அடி எடுத்து வைத்துத் தான் ஆரம்பிக்க வேண்டும்.” என்று ஜோன் கென்னடி சொன்னது போல இன்று பேராசிரியர்களாக, விரிவுரையாளர்களாக வைத்திய கலாநிதிகளாக தொழிலதிபர்களாக, ஏன் இலங்கையின் உயர்பீடமாகிய பாராளுமன்ற பிரதிநிதியாக, இருப்பவர்கள் இருந்தவர்கள் எங்கள் அன்னையால் “அ ஆ” ஊட்டப்பட்டவர்களே என்றால் மிகையல்ல. அதுமாத்திரமல்ல. கற்றிருந்தும் வேலைவாய்ப் பற்றிருந்த எம் பிரதேச இளைஞர்கள், யுவதிகள் பலருக்கு வழிகாட்டியாக இருந்து கல்வியறிவூட்டும் ஆசிரியர்களாக உருவாவதற்கு தளமமைத்துக் கொடுத்தவர் என்பதும் குறிப்பிடப்பட வேண்டியதே.

தமது கல்விப் பணியோடு தெய்வப் பணியையும் இதய சுத்தியோடு மேற்கொண்டவர் என்பதற்கு தென்னிந்திய திருச்சபையின் வேலணை தேவாலயத்தின் ஆயுட்கால உறுப்பினராகவும் மேற்பார்வையாளாராகவும் மேற்படி திருச்சபையின் வைகாசி மாதம் தோறும் மானிப்பாயில் நடைபெறும் விசேட ஆராதனையில் பங்கு பற்றி அதன் சிறப்புக்கும் வெற்றிக்கும் வித்திட்டவர் என்பன உதாரணங்கள். இந்நிலையில் எந்தப் பாடசாலையில் தனது 14 வயதிலே பணியை ஆரம்பித்தாரோ அதே பாடசாலையான வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் இருந்தே தொடர்ந்து 42 வருட கால சேவையை பூர்த்தி செய்த நிலையிலே தனது 55ஆவது வயதில் 31. 06. 1957 இல் ஓய்வு பெற்றார்.

நாம் அறிந்த வரையில் பணியை ஆரம்பித்த பாடசாலையில் இருந்தே அதுவும் மிக நீண்ட வருடங்கள் சேவையின் பின் ஓய்வு பெற்றவர் நமது வாத்தியம்மாவாகவேதான் இருக்க முடியும். இது கின்னஸ் சாதனையாகக்கூட பதிவுசெய்யப்படலாம். ஓய்வு நாட்களிலும் அவரது சமூகப் பணி தொடர்ந்தது.

1958 இல் இருந்து வேலணை நாவலர்

சனசமூக நிலையத்தின் ஆரம்பகால தலைவியாக பொறுப்பேற்ற இவர் 1970 வரை அப்பணியில் திறம்படச் செயற்பட்டதோடு, வேலணை மாதர் முன்னேற்றச் சங்கத்தின் தலைவி ஆகவும், 1956 இல் இருந்து 1970 வரை பணியாற்றி இக்கிராமத்தின் வளர்ச்சிக்கும் குறிப்பாக பெண்களின் முன்னேற்றத்திற்கும் அரும்பணி செய்தவர்.

கறுத்த உயரமான உருவம். எந்நேரமும் பளீரென சிரிக்கும் பல்வரிசை. கண்ணாடிக்கூடாக உள்ளத்தை ஊடுருவும் காந்தக் கண்கள், உருவத்திற்கு சற்றும் தொடர்பில்லாத இரக்கம் நிரம்பிய தூய்மையான உள்ளம். இவை தான் எங்கள் வாத்தியம்மா. அவரிடம் கற்காதவர்கள் கூட அவரின் மாணாக்கர்களே. மாணவப் பிராயத்தினரை கண்டுவிட்டால் "எடேய் மோனே இங்கே வா" என்று கூப்பிட்டு வயிற்றிலே செல்லமாக கிள்ளி விசாரித்து அறிவுரை சொல்லி அனுப்பும் பண்பு அவருக்கு கை வந்தது. சிரித்த முகத்துடன் அழைக்கும் அவரை தாண்டிப் போகும் மனநிலை எவருக்கும் ஏற்படாது. மாறாக தெய்வ சந்நிதியில் நிற்கும் மனநிலை தான் ஏற்படும்.

இவ்வாறு பல தளங்களிலும் முத்திரையைப் பதித்து "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்ற முது மொழிக்கு இணங்க தனது வாழ்வுப் பாதையை வகுத்துக் கொண்ட எமது வாத்தியம்மா 16. 04. 1975 இல் தனது 73 வயதிலே, தனது கணவர் எந்த வைத்தியசாலையில் மறுமைக்குள் பிரவேசித்தாரோ அதே மானிப்பாய் வைத்தியசாலையில் மறுமைக்குள் பிரவேசித்தார். இது அவர் கடைப்பிடித்த தூய்மையான தவவாழ்வின் பயனென்றே சொல்லலாம். அவரின் இறுதிக்கால விருப்பின்படியே அவரது நல்லடக்கத்தைஅவரின் சகோதரியின் பிள்ளைகள் கிறிஸ்தவ முறைப்படி சாட்டியிலே நடாத்தி கல்லறை அமைத்து நிறைவு செய்தது குறிப்பிடக்கூடியது. சாட்டி மயானத்தின் நடுநாயகமாக காட்சி தரும் அவரது கல்லறையைத் தாண்டும் பொழுது அவரது தொண்டும் உருவமும் நிழல் காட்ட எம்மையறியாமலேயே எமது தலை குனிந்து நிமிர்வது இயற்கையே.

நிறைவாக பல தசாப்த காலமாக வங்களாவடிச் சந்தியிலே நிமிர்ந்து நின்று ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் யேசுவின் திருநாமத்தைப் பாடி சுற்றாடலில் தூய்மையை உருவாக்கிய தேவாலயம், போரின் கொடூரமான தாக்கத்தால் சிதைவடைந்து காட்சி தருவது வேதனைப்பட வைக்கும் அதேநேரத்தில், அதன் பக்கத்திலே முதுமையைத் தாங்கமுடியாமல் சிதைந்து உருக்குலைந்து போய் இருந்த போதகரின் வீடு இவரின் பங்களிப்பால் இன்று தீவகத்தை பரிபாலிக்கும் பிரதேச செயலகமாக தலைநிமிர்ந்து கம்பீரமாக காட்சி தருவதையும் காணும் போதெல்லாம் அந்த அன்னையை நம்மிடம் நினைவூட்டிக் கொண்டிருக்கும் என்பது திண்ணம்.

*உள்ளத்தால் பொய்யாதொழுகின் உலகத்தார்*
*உள்ளத்திலெல்லாம் உளன்"*



# கல்விமான்கள்

## திரு. ஐயம்பிள்ளை கார்த்திகேசு
### (அதிபர் ஐயனார் வித்தியாலயம்)

திரு. க. காண்டீபன் - மருத்துவபீட மாணவன்
பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

இவரது தந்தையார் நாகநாதன் ஐயம்பிள்ளை புங்குடுதீவு தபாற்சேவை நடாத்தியவர். ஆயக்குத்தகை செய்தவர். கந்தபுராணம் விளக்கவுரை சொல்பவராகவும் விளங்கினார். முன்னாள் வேலணை கிராமசபை உறுப்பினராகவும் இருந்தவர். ஐயனாரை ஸ்தாபிப்பதற்கும் பூஜைகள் ஒழுங்காக நடைபெறுவதற்கும் அரும்பணியாற்றியவர். இவரது தாயார் ஐயம்பிள்ளை வள்ளியம்மை ஆவார். இவர்களுக்கு இரு ஆண்பிள்ளைகள் பிறந்தனர். அவர்களே கார்த்திகேசுவும், நாகநாதனும் ஆவர். இவர்களை பெரியவாத்தியார், சின்னவாத்தியார் என்று ஊர்மக்கள் அழைப்பார்கள். சைவ வித்தியாவிருத்திச் சங்க பாடசாலைகளில் இருவரும் கற்பித்தல் சேவை புரிந்தனர். அத்துடன் சைவத்துக்கும் தமிழுக்கும் சிறந்த பணியாற்றியுள்ளனர்.

திரு. கார்த்திகேசு அவர்கள் 1907 ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஆரம்பக் கல்வியை வங்களாவடி அமெரிக்க மிஷன் கலவன் பாடசாலையில் பெற்றார். மேல் வகுப்புக்களை தெல்லிப்பளை யூனியன் கல்லூரியில் படித்தார். 1927, 1928 ஆம் ஆண்டுகளில் கோப்பாய் அரசினர் ஆசிரிய பயிற்சிக் கலாசாலையில் பயிற்சி பெற்று பயிற்றப்பட்ட ஆசிரியராக வெளியேறினார். 1930 ஆம் ஆண்டு வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக்கல்லூரியில் ஆசிரியராகக் கடமையாற்றினார். அங்கு நிர்வாகம் இவரை மதம் மாறும்படிகேட்ட போது, இவர் அதை நிராகரித்து ஆசிரியத் தொழிலையே கைவிட்டு வெளியேறினார். பின்பு சைவ வித்தியா விருத்திச்சங்க பொது

முகாமையாளர் திரு. சு. இராசரட்ணம் அவர்களிடம் சென்று அதே ஆண்டில் (1930 இல்) வேலை வாய்ப்புப் பெற்றார். கரம்பொன் சண்முகநாதன் வித்தியாசாலையில் ஆசிரியராக கடமை ஏற்றார். அங்கு படிப்பித்த காலத்தில் திரு. கார்த்திகேசு அவர்கள் முதல் நாளே பாட ஆயத்தம் செய்து கொண்டு தான் வகுப்பறையில் நுழைவாராம். மிக்க கடமையுணர்வு உள்ளவராகவும் விளங்கினார். இவரை நன்னூலில் பவணந்தி முனிவர் கூறிய நல்லாசான் என்று அவ்வூர்பண்டிதர்கள், ஆசிரியர்கள் பாராட்டினார்கள். இதன் பின் ஆனைக்கோட்டை பாலசுப்பிரமணிய வித்தியா சாலையில் அதிபராக கடமையாற்றினார். அங்கு ஆளுமை மிக்க ஒரு அதிபராக விளங்கினார். ஆசிரியர்களுடன் அன்பாக பழகினார். இலக்கிய பாடம் கற்பிக்கும் போது தானும் இரசித்து மாணவர்களையும் சுவைக்கும்படி கற்பித்தார். எண் கணிதம் கற்பிப்பதிலும் வல்லவராக விளங்கினார். மேல்வகுப்பு மாணவர்கள் கூடிய புள்ளிகளைப் பெற வழிவகுத்தவர். அதிபர் காத்திகேசுவிடம் கற்றவர்கள் சிறந்த அரச ஊழியர்களாக இருக்கின்றனர். முள்ளியவளை, தட்டுவான்கொட்டி போன்ற இடங்களிலுள்ள கல்வி வளர்ச்சி குறைந்த பாடசாலைகளில் கல்வியை வளர்க்க விரும்பி தானாகவே சைவவித்தியா விருத்திச் சங்க முகாமையாளரும், வழக்கறிஞருமான திரு. இராசரட்ணம் அவர்களிடம் மாற்றம் கேட்டுப் பெற்றுக் கொண்டார். கஷ்ட பிரதேச பாடசாலைகளில் சேவையாற்றும் போது ஆசிரியப் பணியுடன் இலவச வைத்திய சேவையும் புரிந்தார். இவர் பாடசாலை திருத்தங்களின் போதும், கற்றல் உபகரணங்கள் வழங்குவதற்கும் தனது சொந்தப் பணத்தை செலவளித்து விடுவார். வைத்திய சேவையால் கிடைக்கும் பணத்தையும் பொதுப்பணிக்கே செலவளிப்பார். மாணவர்களுக்கு ஏற்றவாறு கற்பித்தலை மேற்கொண்டார். மாலை நேர வகுப்புக் களையும் நடாத்திவந்தார். தட்டுவான்கொட்டி கண்ணகை அம்மன் ஆலயத்தில் சித்திரக் கதைபடிக்க வழிகாட்டியாக அமைந்தார். அங்கு கல்விப்பணியுடன் சமயப்பணியும் மேற்கொண்டார்.

காரைநகர் மெய்கண்டான் வித்தியா சாலையில் சேவையாற்றிய காலத்தில் அப்பாட சாலைக்குத் தீயசக்திபடைத்த ஒருவர் தீ மூட்டிவிட்டார். பாடசாலை பற்றி எரியத் தொடங்கியது. அதிபரின் துணைவியார் கையிலிருந்த தீ அணைக்கும் உபகரணங்களை வீசிவிட்டு கைகூப்பி "சிவகாமித் தாயே தீயை அணைத்து விடம்மா" என கூவினார் "தீ வைத்தவன் கண் கெட்டுவிடுமே" என ஆவேசமாக அலறினார். அன்னை சிவகாமி மழைபொழிந்து தீயை அணைக்க உதவினாள். தெய்வீகப்பணி செய்தவர்களுக்கு அன்னை அருள் கொடுத்தார். அடுத்தநாளே காரை நகர் சமூகத் தொண்டர்களின் உதவியுடன் கூரை அமைத்து பாடசாலையை நடாத்தினார். இதற்கு தன் சொந்தப் பணத்தையே செலவு செய்தார். பருத்தியடைப்புக் கதிரேசன் வித்தியாசாலையிலும் சில காலம் சேவையாற்றினார். தனது பிறந்த ஊரான வேலணை தெற்கில் சிறார்கள் பல மைல்தூரம் நடந்து சென்று கல்வி கற்பதைக்கண்டு வருத்தப்பட்டார். துறையூரின் கல்வி வளர்ச்சிக்கு பாடசாலை ஒன்று அவசியம் என்பதை உணர்ந்தார். ஐயனாரை வேண்டி நின்றார். தனது சொந்தக்காணியையே பாடசாலை கட்ட அர்ப்பணித்தார். சமூகத் தொண்டர்களின்

ஆதரவுடன் பாடசாலையைக் கட்டிமுடித்தார். ஆசிரியரும், வைத்தியக் கலாநிதியுமான திரு. சி. இராசரட்ணம் அவர்களும் இப்பாடசாலை கட்ட தனது காணியை கொடுத்துதவினார். சைவ வித்தியா விருத்திச் சங்கமும் இப்பாடசாலைக்கு பேருதவி புரிந்தது. கார்த்திகேசு அவர்கள் தனது குல தெய்வமாகிய ஐயனார் பெயரால் "ஐயனார் பாடசாலை" என்று பெயர் சூட்டினார். 1948 ஆம் ஆண்டு பாடசாலை இயங்க ஆரம்பித்தது. பெரிதும் கஷ்டப்பட்டு மாணவர்களை சேர்த்தார். ஆரம்பத்தில் சம்பளமின்றி கற்பிக்க எவரும் முன்வரவில்லை. கம்பராமாயணத்தில் இராமருக்கு இலக்குமணன் இருந்தது போல இவருக்கும் ஒரு தம்பி வாய்த்தார். அவரது தம்பி நாகநாதனும், ஆசிரியர் திரு. திருமேனி அவர்களும், திருமதி உருக்குமணி இராசரட்ணம் ஆசிரியர் அவர்களும் வேதனமற்ற ஆசிரியப்பணியை செய்ய முன் வந்தனர். இவர்கள் மாணவர்களின் அறிவுப்பசியை நீக்கினர். திரு. கார்த்திகேசு அவர்களின் வயிற்றுப் பசியை நீக்கினார்.

வேலணை தெற்கில் முதன்மையாகப் படித்து முதன் முதல் அரச உத்தியோகம் பார்த்தவர் திரு. கார்த்திகேசு அவர்களே. ஐயனார் ஆலயத்தின் மூத்த தலைவராக பல்லாண்டு காலம் பணிபுரிந்தார். கோயில் பூசைகள், திருவிழாக்கள், திருப்பணிகள் என்பன ஒழுங்காக நடைபெற வழிகாட்டியாக இருந்தார். 1980 ஆம் ஆண்டு ஐயனாரின் கும்பாபிஷேகம் நடைபெற முன்னின்று உழைத்தார். கந்தசஷ்டி, திருவெம்பாக் காலங்களில் கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம் என்பவற்றுக்கு பயன் கூறுவார். கேட்போர் இரசிக்கும்படி நகைச்சுவையுடன் பயன் கூறுவதில் வல்லவர். தனது கிராமத்தவர் மட்டுமல்லாது அயல் கிராமத்தவரும் பயனுறும் வகையில் பக்தி நெறி வாழ வழிகாட்டியவர். வேலணை தெற்கு ஐயனார் வித்தியாசாலையிலும் அதிபராகக் கடமையாற்றி 1967 ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார்.

துறையூரில் சனசமூக நிலையத்தின் போஷகராக இருந்தார். சனசமூக நிலையத்துக்கு இலவசமாக நூல்களையும் பத்திரிகை களையும் கொடுத்துதவினார். யாழ்-புங்குடுதீவு வீதியில் துறையூர் சர்வோதய நிலையம் அமைவதற்கு காணி வழங்கியுள்ளார். அதிபர் அவர்களின் சேவையைப் பெற்றவர்கள் அனைவரும் அவருக்கு விழா எடுத்து நன்றி பாராட்டினார்கள்.

திரு கார்த்திகேசு அவர்கள் அமைத்த பாடசாலைக் கட்டடம் பழுதடைந்துவிட்டது. அப்போது அதிபர்களாக கடமையாற்றிய திரு. பொ. நடராசா, திரு. செ. நடராசா ஆகிய இருவரும் சேர்ந்து அரச உதவியுடன் துறையூர் முகப்பில் இரு கட்டடங்களை அமைத்தனர்.

குரு பக்தியும், தெய்வபத்தியும் நிறைந்த அதிபர் வித்துவான் கார்த்திகேசு அவர்கள் ஐயனாரையும், ஐயப்பன் நாமத்தையும் உச்சரித்துக் கொண்டு 11 - 08 -1987 இல் இறைபதம் அடைந்தார். காலச் சூழ்நிலையால் இடைக்காலத்தில் பாடசாலை இயங்காமல் விட்டாலும் ஐயனார் வித்தியாசாலை என்ற அதன் பெயர் மங்காமல் இருந்தது. பின்னர் மீளவும் திரு. கார்த்திகேசு அவர்கள் சர்வோதயத்திற்கு நன்கொடையாக வழங்கிய காணியிலேயே கற்பித்தல் ஆரம்பிக்கப்பட்டது. அப்பாடசாலைக்கே இக்காலத்தில் திருமதி சி. பழனி அவர்கள் அதிபராக கடமையாற்ற முன்வந்துள்ளார்.



## கல்விமான்கள்

# திரு. ஐயம்பிள்ளை பொன்னையா அவர்கள்
**(1910 - 1993)**

திரு. பொ. நடராசா - அதிபர்

இருபதாம் நூற்றாண்டுக் காலப் பகுதியில், வேலணைக் கிராமத்தின் கல்வி, பொருளாதாரம், சமயம், சமூகச்சீர்திருத்தம் ஆகிய பரிமாணங்களின் வளர்ச்சிக்கும். உயர்ச் சிக்கும் உழைத்த பெருமக்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒருவர் அமரர் ஐயம்பிள்ளை பொன்னையா அவர்கள். அன்னார் மேற் குறிப்பிட்ட துறைகளின் வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகள் அளப்பரியன.

திரு. பொன்னையா அவர்கள் வேலணை கிழக்கில் நாகநாதர் ஐயம்பிள்ளை, பொன்னாச்சிப்பிள்ளை தம்பதியினருக்கு புத்திரராக 1910 ஆம் ஆண்டு ஐப்பசிமாதம் இருபத்தோராம் திகதி பிறந்தார்.

அவர் தமது கல்வியை ஆரம்ப வகுப்புத் தொடக்கம் ஆசிரிய கலாசாலைப் புகுமுக வகுப்புவரை வேலணை கிழக்கு அமெரிக்க மிஷன் பாடசாலையில் கற்று பின்னர் திருநெல்வேலி ஆசிரியர் கலாசாலையில் ஆசிரிய பயிற்சி பெற்று பயிற்றப்பட்ட ஆசிரியரானார். ஆசிரிய கலாசாலையில் பயிலுங்கால் விரிவுரையாளர்களின் விருப்பத்திற்குரிய மாணவராக விளங்கினார். குறிப்பாக இலக்கிய கலாநிதி பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்களின் மிக விருப்பத்திற்குரிய மாணவராகத் திகழ்ந்தார்.

**கல்விப்பணி :**

ஆசிரிய பயிற்சியை முடித்து வெளியேறிய இவர் சைவ வித்தியா விருத்திச் சங்கத்தில் ஆசிரியர் நியமனம் பெற்று, வேலணை சரஸ்வதி வித்தியாசாலை, சரவணை

நாகேஸ்வரி வித்தியாசாலை, புங்குடுதீவு சண்முகநாத வித்தியாசாலை, நயினாதீவு கணேச வித்தியாசாலை ஆகியவற்றில் ஆசிரியராகப் பணிபுரிந்தார்.

இவர் கற்பித்தலில் திறமை மிக்கவராக விளங்கியது மட்டுமன்றி மாணவர்களின் கல்வி வளர்ச்சியிலும், ஒழுக்கத்திலும் மிகுந்த கரிசனையுடையவராக இருந்தமையால் பெற்றோரினதும் மாணவர் களினதும் நன்மதிப்புக்குரியவரானார். ஏழை மாணவர்கள் கல்வியை இடைநிறுத்திவிடாது தொடர்ந்து கற்பதற்கு பல்வேறு வழிகளில் உதவினார். இவரின் சேவையால் பயனடைந்த மாணவர்கள் பலர் சமூகத்தில் பல்வேறு துறைகளில் உயர் நிலையை அடைந்தனர்.

இவர் 1952 ஆம் ஆண்டில் தலைமை ஆசிரியராகப் பதவியுயர்வு பெற்று யாழ் குருநாதசுவாமி வித்தியாசாலை, கரம்பொன் கிழக்கு சிவகுருநாத வித்தியாசாலை, வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலை ஆகியவற்றில் அதிபராக கடமையாற்றினார். அப்பாடசாலைகளில் அவர் ஆற்றிய சேவை காரணமாக அவ்வூர் மக்களிடையே மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தார். கரம்பொன் சிவகுருநாத வித்தியாசாலையில் கடமையாற்றிய காலத்தில் கரம்பொன் கூட்டுறவு வைத்தியசாலையின் முகாமைத்துவக் குழு உறுப்பினராகவும், முகாமைத்துவக் குழுவின் தலைவராகவும் பணியாற்றியுள்ளார்.

1952 ஆம் ஆண்டில் வேலணை வடக்கு ஆத்திசூடி வித்தியாசாலை நிறுவப்படுவதற்கு காத்திரமான பங்களிப்பு வழங்கியது மட்டுமன்றி பாடசாலையின் ஆரம்பகாலத்தில் அப்பாடசாலைக்கு நியமனம் பெற்று வந்த வெளியூர் ஆசிரியர்கள் தங்குவதற்கு தமது வீட்டில் இடமளித்து பாடசாலைச் செயற்பாடுகள் சிறப்பாக நடைபெற உதவினார்.

அவர்தம் இருபத்தாறாவது வயதில் வேலணை வடக்கைச் சேர்ந்த பிரபல வர்த்தகர் இராமலிங்கம் அவர்களின் சிரேஷ்டபுதல்வி இலகம்மாவை வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொண்டார். பரோபகார சிந்தையுடைய இவருடைய துணைவியார் இவரின் சமூக சேவைக்கு மேலும் உந்துசக்தியாக விளங்கினார். ஆசிரியர் அவர்கள் பல்வேறு துறைகளினூடாக தமது கிராமத்தின் வளர்ச்சிக்குத் தன்னாலான சேவைகள் ஆற்றியுள்ளார்.

**கூட்டுறவுச்சங்கம் :**

இரண்டாம் உலகமகாயுத்தத்தில் உணவுப் பொருட்களுக்கு மிகுந்த தட்டுப்பாடு நிலவியது. இதனால் மக்கள் பெருங்கஷ்டத்தை எதிர்நோக்கினர். இந்நிலைக்குப் பரிகாரம் காண ஆசிரியர் அவர்களும் அந்நாளில் வேலணைத் தபாலதிபராகவிருந்த திரு. சரவணமுத்து அவர்களும் வேலணையில் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தை நிறுவி அதனூடாக மக்களுக்கு அத்தியாவசியப் பொருட்களைப் பங்கீட்டு அடிப்படையில் விநியோகிக்க வழிசெய்தனர். அந்தக்காலம் தொடக்கம் 1972 ஆம் ஆண்டுவரை வேலணைப் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் வளர்ச்சிக்கு அயராது உழைத்துவந்ததுடன் அதன் முகாமைத்துவக் குழுத்தலைவராகவும் பல ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். இவருடைய

காலப்பகுதியில் பல புதியகிளைகள் திறக்கப்பட்டதுடன் எரிபொருள் நிரப்பு நிலையம் ஆரம்பிக்கப்பட்டமையும் சங்கத்திற்குச் சொந்தமாக லொறி, டிராக்ரர் என்பனவும் கொள்வனவு செய்யப்பட்டு சங்க செயற்பாடுகள் விரிவுபடுத்தப்பட்டன.

## கிராமசபை :

ஆசிரியர் அவர்கள் வேலணை கிராம சபையில் ஐந்தாம் வட்டாரத்தின் பிரதிநிதியாக 1945 ஆம் ஆண்டு தொடக்கம் 1953 ஆம் ஆண்டுவரை சேவையாற்றினார். அக்காலப் பகுதியில் அவ்வட்டாரத்தில் உள்ள குளங்கள் ஆழமாக்கப்பட்டு அணைக் கட்டுக்கள் உயர்த்தப்பட்டு. நெல், உப உணவுப்பயிர் செய்கைக்குப் போதிய நீர் கிடைக்க வழிசெய்யப்பட்டது. மற்றும் ஆத்திசூடி வீதி இராசையா வீதியுடன் இணைக்கப்பட்டு வேலணை வடக்கு, வேலணை கிழக்குப் பிரிவுகளுக்கிடையே போக்குவரத்து இலகு வாக்கப்பட்டது. வீதிகளுக்கு கற்கள் இடப்பட்டு மாரிகாலத்திலும் சிரமமின்றிப் போக்குவரத்துச் செய்யத்தக்க வகையில் வீதிகள் செப்பனிடப்பட்டன.

இவற்றிற்கும் மேலாக வேலணைக் கிராமத்திற்கும் அயற்கிராமத்திற்கும் குடிநீர் (நன்னீர்) விநியோகிப்பதற்காக சாட்டியில் உள்ள தமக்குச் சொந்தமான காணியின் ஒரு பகுதியை நன்னீர்க் கிணறு அமைப்பதற்காக வேலணைக்கிராம சபைக்குக் கொடுத்து உதவினார்.

## கிராமமுன்னேற்றசங்கம் :

ஆசிரியர் அவர்கள் வேலணைக் கிராமமுன்னேற்றச் சங்கத்தின் தலைவராக 1956 ஆம் ஆண்டு தொடக்கம் 1973 ஆம் ஆண்டு வரை சேவையாற்றியுள்ளார். இக்காலப்பகுதியில் இவ்வமைப்பினூடாகக் கிராமத்திற்கு ஆற்றிய சேவைகள் அளப்பரியன. அவற்றுள் பின்வருவன குறிப்பிடத்தக்க சிலவாகும்.

1. வறுமைக்கோட்டின் கீழ் உள்ள பெண் பிள்ளைகள் வருவாய் பெறவழி செய்யும் பொருட்டு சோளாவத்தையிலும், வேலணை கிழக்கிலும் நெசவு நிலையங்கள் அமைத்தமை.
2. வேலணை கிழக்கு பெருங்குளம் மேற்குக் ரையில் நன்னீர் கிணறு அமைத்து (பொதுக்கிணறு) அப்பகுதி மக்கள் குடிநீர் பெற்றுக்கொள்ள வழி செய்தமை.
3. வேலணை கலைமகள் சனசமூக நிலயத்திற்கும், வேலணை துறையூர் ஐயனார் சனசமூக நிலையத்திற்கும் நிரந்தர கட்டடங்கள் அமைத்துக் கொடுத்தமை.
4. வேலணை செட்டிபுலம் பலநோக்குக் கூட்டுறவுச்சங்கத்திற்கு நிரந்தர கட்டடங்கள் அமைத்துக் கொடுத்தமை.
5. சாட்டி மயானக்கிணறு, சோளாவத்தை மயானக்கிணறு என்பன அமைக்கப் பட்டமை.

6. யாழ்மாவட்டக் காணி அதிகாரியின் உதவியுடன் நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு வன்னிக் குடியேற்றத் திட்டங்களில் காணிகள் பெற்றுக் கொடுத்தமை.

7. பருவமழை பொய்த்த காலங்களில் விவசாயிகளுக்கு அரசிடமிருந்து வரட்சி நிவாரணம் பெற்றுக்கொடுத்தமை.

8. ஏழைமக்கள் மலசல கூடம் அமைப் பதற்குத் தேவையான கட்டுமானப் பொருட்களை சமூகசேவைத் திணைக்களத் திடமிருந்து பெற்றுக்கொடுத்தமை.

9. வேலணை மத்திய கல்லூரியில் வகுப்பறைப் பற்றாக்குறை ஏற்பட்டபோது முன்னேற்றச் சங்கத்தினூடாக தற்காலிக வகுப்பறைக் கொட்டகைகள் அமைத்துக் கொடுத்து மாணவர்கள் சிரமமின்றிக் கற்க உதவியமை.

**பயிர்செய்கைக் குழு :**

ஆசிரியர் அவர்கள் வேலணை கிழக்கு பயிர்ச் செய்கைக்குழுவின் தலைவராக நீண்ட காலம் பணியாற்றி விவசாயிகளுக்கு, விவசாயத் திணைக்களத்தினுடாக, தரமான பயிர், விதைகள், மானிய விலையில் உரம், பீடைகொல்லிகள், மண்வெட்டி, தெளிகருவிகள் எனபவற்றைப் பெற்றுக்கொள்ள உதவியதோடு, தேவை ஏற்பட்டகாலங்களில் விவசாயத் திணைக்கள உத்தியோகத்தர்களின் நிபுணத்துவ ஆலோசனைகளையும் பெற்றுக்கொடுத்து உதவினார். மேலும் விவசாயிகளைப் பயிர்க்காப்புறுதித் திட்டத்தில் இணையவைத்து பயிர் சேதமடைந்த காலங்களில் காப்புறுதி நிவாரணம் பெற உதவினார்.

**இதரபணிகள் :**

கிராம விதானை, கிராம நீதிமன்றம், இணக்கசபைகள் ஆகியன செயற்பட்ட காலங் களிலும் ஊர்மக்கள் தம்மிடையே ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு ஆசிரியரை நாடி வருவர். அவரும் பொறுமையுடன் அவற்றை விசாரித்து இணக்கமாகத் தீர்த்துவைப்பார்.

அரசினால் 1970 ஆம் ஆண்டுப் பகுதியில் கிராமங்கள் தோறும் நல்லிணக்க சபைகள் அமைக்கப்பட்டன. அவ்வகையில் வேலணை யில் அமைக்கப்பட்ட இணக்கசபையில் ஆசிரியரவர்களும் ஒரு உறுப்பினராக நியமிக்கப்பட்டார்.

ஆசிரியர் அவர்கள் தினசரி பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் கிரமமாக வாங்குவதுண்டு. ஆர்வமுள்ள அயலவர்கள் அவற்றை வாசிப்பதற்கு அவரின் வீட்டிற்கு வருவர். அவர்களுக்கு தமது வீட்டுத்தலைவாசலில் பத்திரிகைகள், சஞ்சிகைகள் வாசிப்பதற்கு வசதி செய்து கொடுத்திருந்தார். அவருடைய வீட்டுத்தலைவாசல் ஒரு வாசிகசாலை போன்றே இருந்தது.

**சமயப்பணி :**

ஆசிரியர் அவர்கள் மிகுந்த இறை பத்தியும் சமயப் பற்றும் கொண்டவர். அவருடைய முன்னோர்கள் பெரும் ஆசாரசீலர்கள். அவர்

*சிறுவயதிலேயே அயலில் உள்ள பெருங்குளம்* முத்துமாரி அம்மனைத் தினமும் தவறாது வழிபட்டு வந்தார்.

அவ்வாலயத்தில் நித்திய பூசைகள், புராணப்படிப்புகள், வருடாந்த உற்சவங்கள் கிரமமாக நடைபெற்று வந்தன. இவர் இளைஞனாக இருந்த காலந்தொட்டே ஆலயத்தில் புராணம் படித்தல், பயன் கூறுதல், கூட்டுப் பிரார்த்தனை செய்தல் ஆகிய பணிகளில் ஈடுபட்டுவந்தார்.

பின்னர் விவாகமாகி வேலணை வடக்கில் வசித்த காலத்திலும் இப்பணிகளைத் தொடர்ந்ததோடு இலந்தைவனம் பிள்ளையார் ஆலயம், பள்ளம்புலம் முருகமூர்த்தி ஆலயம், மயிலப்புலம் ஐயனார் ஆலயம், சோளாவத்தை வைரவர் ஆலயம் என்பவற்றில் உற்சவ காலங்களில் சமயப்பிரசங்கம் செய்தல், கூட்டுப் பிரார்த்தனை நடாத்தல், சிறுவர்கள், இளைஞர்களிடையே சமய அறிவுப்போட்டி நடாத்தல், பிள்ளையார் கதைபடித்தல், கந்தபுராணம் படித்தல் ஆகிய பணிகளைத் தொடர்ந்து செய்துவந்தார்.

அத்துடன் நீண்டகாலமாகப் புனருத் தாரணம் செய்யப்படாதிருந்த பள்ளம்புலம் *முருகமூர்த்தி ஆலயத்தைப் புனரமைக்க* நியமிக்கப்பட்ட திருப்பணிச்சபையின் பொருளாளராகக் கடமையாற்றி சபை உறுப்பினர்களின் உதவியுடன் மக்களிடம் நிதிதிரட்டி ஆலயத் திருப்பணியைத் திருப்திகரமாக நிறைவு செய்து, நித்திய பூசைகளும், உற்சவங்களும் கிரமமாக நடைபெறத் தன்னாலான பங்களிப்பை நல்கி ஊர்மக்களின் அபிமானத்தைப் பெற்றார். இவ்வாறு தனக்கென மட்டும் வாழாது தனது வாழ்க்கையில் பெரும் பகுதியைத் தான்சார்ந்த சமூகத்தின் வளர்ச்சிக்காக அர்ப்பணித்த பெருமகன். 1991 ஆம் ஆண்டில் தமது ஊரில் இடம்பெற்ற இராணுவ நடவடிக்கை காரணமாக சொந்த ஊரில் இருந்து இடம்பெயர்ந்து உடுவில் ஊரில் தமது மகனுடன் சிலகாலம் வாழ்ந்து 1993 ஆம் ஆண்டு யூலை மாதம் 14 ஆம் திகதி இவ்வுலகை நீத்து இறை அடிசேர்ந்தார்.

அவருடைய சேவை இன்றும் அவருடைய மாணவர்களாலும், சமூகத்தினராலும் நன்றியுடன் நினைவுகூரப்படுகின்றன.

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்**
**வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்"**





## கல்விமான்கள்

# பண்டிதர் அம்பலவாணர் பொன்னுத்துரை

திரு. ச. கைலாயபிள்ளை - அதிபர்

பண்டிதர் அ. பொன்னுத்துரை அவர்கள் பலவகைச் சிறப்புகளும் பொருந்திய புகழ்பூத்த குடும்பத்தில் திரு. வே. அம்பலவாணர்-குணலெட்சுமி தம்பதிகளுக்கு மூத்த புதல்வராக 1911 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 28 ஆம் திகதி பிறந்தார்.

விளையும் பயிரை முளையிலே தெரியும் என்பதற்கிணங்க பண்டிதர் அவர்கள் தனது சிறுவயதிலேயே கல்வியிற் கூடிய ஆர்வம் காட்டி வயதிற்கு முந்திய வகுப்புக்களில் கற்கலானார். இவர் தனது ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் அதனைத்தொடர்ந்து வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலையிலும் கற்றார். இவர் திறமை கண்ட ஆசிரியர்கள் பலர் இவரைத்தொடர்ந்தும் கற்கும் வண்ணம் பல வழிகளிலும் ஊக்குவித்தனர். இவரது கல்வி இறுக்கமான சைவத் தமிழ் பாரம்பரியத்தைத் தழுவியதாக அமைந்திருந்தது. இவர் தனது 17 வயதில் கோப்பாய் ஆசிரிய கலாசாலைக்குத் தெரிவு செய்யப்பட்டார். அங்கு பிரபல ஆசிரியர் கலாசாலை விரிவுரையாளர் திரு. மகாலிங்க சிவத்தின் மாணவனாக இருந்துள்ளார். பண்டித மணி கணபதிப்பிள்ளை, பன்னாலை திரு. சங்கரப்பிள்ளை போன்றோருடன் கலாசாலையில் சகமாணவனாக இருந்துள்ளார்.

1929 இல் பயிற்றப்பட்ட ஆசிரியனாக வெளியேறி சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார். தொடர்ந்து நாரந்தனை கணேச வித்தியாசாலை, வேலணை சரஸ்வதி

வித்தியாசாலை, புங்குடுதீவு பெருங்காடு சுப்பிரமணிய வித்தியாசாலை ஆகியவற்றில் உதவி ஆசிரியராகக் கடமை புரிந்தார். பாடசாலைகளின் தரம் வீழ்ந்து விடாமல் உயர்வதற்கு இந்து போர்ட் நிறுவனம் இவரைப் பயன்படுத்தியது என அறியக்கிடக்கின்றது. இதனால் தான் இவரைப் பல பாடசாலைகளில் சேவை செய்யும்படி கோரினர்.

1945 இல் கரம்பொன் சண்முகநாத வித்தியாசாலையில் அதிபராகக் கடமை ஏற்றார். இங்கு எட்டு வருடங்கள் தம் அரிய சேவையை தனது துணைவியாருடன் சேர்ந்து வழங்கினார். இதன் பின் நயினா தீவு நாகபூசணி வித்தியாசாலை, வேலணை ஆத்திசூடி வித்தியசாலை, புங்குடுதீவு இராச இராஜேஸ்வரி வித்தியாசாலை, சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலை ஆகிய பாடசாலைகளில் அதிபராக இருந்து இறுதியில் வேலணை சரஸ்வதி வித்தியாசாலையில் தனது சேவையை 59 வயதில் நிறைவு செய்தார். அன்னார் 40 வருடங்கள் ஆசிரியராகவும், அதிபராகவும் பணிபுரிந்துள்ளார்.

ஓர் ஆசிரியரிடம் காணப்பட வேண்டிய தருமம், நீதி, நேர்மை, அன்பு, அர்ப்பணிப்பு, பொறுமை, தேசபக்தி, தெய்வபக்தி ஆகிய குணங்கள் இவரிடம் ஒருங்கே காணப்பட்டது. இவரது பாரபட்சமற்ற செயற்பாடும் உறுதியான நேர்மைமிக்க பேச்சும், விரிந்தமனப்பாங்கும் மக்களை எளிதில் கவர்ந்தன. இதனால் சமுதாயத்தில் பெரிய மதிப்புடன் வாழ்ந்தார். இந்து போட் நிறுவன முகாமையாளர் இராசரத்**தினம்** அவர்களின் நன்மதிப்பை பெற்றிருந்ததும், மற்றும் பாராளுமன்ற பிரதிநிதிகள், கல்வி அதிகாரிகள் மற்றும் பெற்றோர்களின் உதவியுடன் தான் கடமையாற்றிய பாடசாலைகளின் பௌதிக வளர்ச்சிக்கு பெரிதும் பாடுபட்டு பல கட்டிடங்களை, விளையாட்டு மைதானங்களை பெற்றுக் கொடுத்தார். ஆசிரியத் தொழிலுக்கு தன்னை முற்று முழுதாக அர்ப்பணம் செய்து மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு பெரிதும் பாடுபட்டார். எந்நேரமும் ஆசிரியச் சீருடையில் ஒரு சைவ ஆசிரியராக காட்சியளித்தார்.

ஆசிரியராக இருந்ததுடன் தொடர்ந்தும் கற்றலில் ஈடுபட்டார். 1937 இல் பண்டிதர் பரீட்சையில் சித்தியடைந்தார். இளமைக் காலத்தில் சைவ / தமிழ் விடயங்களில் சிறந்த பேச்சாளராக இருந்தார். மற்றும் சோதிடம், சைவ சித்தாந்தம், மாந்திரிகம், நிலவளவை போன்ற துறைகளிலே போதிய அறிவைத் தேடிக் கொண்டார். இவருக்கு இத்துறை அறிவுக்குப் பின்புலமாக இருந்தவர் இவரது தாய்வழி பேரனாகிய தமிழ் புலமையாளர் திருவாளர் வேலுப்பிள்ளை சட்டம்பியார் ஆவார்.

ஆரம்ப, இடைநிலை பிரிவு மாணவர்களுக்கு கற்பித்ததோடு நிற்காமல் அவரது ஆசிரியப் பணியில் ஆரம்ப காலங்களில் பிறிலிம் எனப்பட்ட ஆசிரியபயிற்சிக் கல்லூரி புகுமுக ஆயத்த வகுப்பும் நடத்தித் தீவகமெங்கு முள்ள இளைஞர்கள் ஆசிரிய பயிற்சிக் கல்லூரிக்குச் செல்ல வாய்ப்பளித்தார்.

இவர் ஒரு சிறந்த ஆசிரியராக இருந்தது மாத்திரமன்றி கிராமத்தில் சிறந்த விவசாயியாகவும் விளங்கினார். கிராமத்தில் விவசாய வளர்ச்சிக்கு பெரிதும் பாடுபட்டார். இறுதிக்காலம் வரையும் விவசாயத்தில் அக்கறை கொண்டவராய் வேலணை கமநலச் சேவை நிலையத்தின் தலைவராக இருந்து கிராம விவசாயிகளின் நலன்களை நன்கு கவனித்து வந்தார்.

பல்வேறு சமூக சேவை நிறுவனங்களிலும், சங்கங்களிலும் அங்கத்தவராகவும், தலைவரா கவும் இருந்து வேலணை கிராமத்துக்கும் தீவுப்பகுதி மக்களுக்கும் அரும் பெரும் சேவையாற்றினார். தீவுப்பகுதி விளை பொருட் சங்கம், பண்ணை ஆயச் சங்கம், வேலணை கிராமசபை, வேலணை பல நோக்கு கூட்டுறவுச் சங்கம், வேலணை கடன் வழங்கும் சபை, சின்னமூளாய் கூட்டுறவு வைத்தியசாலை, வேலணை கமநல சேவைநிலையம் முதலிய நிறுவனங்களுடன் தன்னை இணைத்து மக்களுக்கு சேவையாற்றினார்.

உள்ளூராட்சி செயற்பாட்டில் மிகுந்த நம்பிக்கை கொண்டவர். இதுவே மக்களுக்கு ஜனநாயக மரபுகளை, செயற்பாடுகளை கற்றுக் கொடுக்கும் என்றும் மக்கள் பங்களிப்பு கீழிருந்து செயற்திட்டங்களை முன்னெடுக்க வழிவகுக்கும் எனக் கருதுபவர். இவர் வேலணைக் கிராம சபையின் முதலாம் வட்டார அங்கத்தவராக இரு முறை தெரிவு செய்யப்பட்டு, வட்டாரத்தின் வளர்ச்சிக்கும் கிராமத்தின் வளர்ச்சிக்கும் பெரிதும் பங்களித்துள்ளார்.

இவர் சிறந்த இறைபக்தியுடையவர். இவருடைய குல தெய்வமாகிய வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோயில் தேர்த்திருவிழா உபயகாரருள் ஒருவராக இருந்தும், பரிபாலன சபையில் காலத்துக்கு காலம் பல்வேறு பதவிகளை வகித்தும், திருப்பணி வேலைகளை மக்களின் உதவியுடன் மேற்கொண்டார்.

1933 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் முதலாம் திகதி செல்வி நாகரெத்தினம் சின்னத்தம்பியை மணம் முடித்தார். இவரும் ஒரு பயிற்றப்பட்ட ஆசிரியை. இருவரும் சிறந்த இல்லறம் நடத்தி பன்னிரெண்டு குழந்தைகளைப் பெற்று அவர்கள் எல்லோரையும் பல்கலைக்கழகம் வரை படிப்பித்து பட்டங்கள் பெற வைத்தார்கள். "சான்றோன் ஆக்குதல் தந்தைக்கு கடனே" என்பதற்கு ஏற்ப தனது கடமையை மிகச் சிறப்புறச் செய்து முடித்தார். இருவரும் 62 வருடங்கள் இல்லறம் நடத்தி தங்களது குடும்ப கடமைகளை இனிதே நிறைவேற்றினார்கள்.

தனது குடும்பம், தனது சமூகம், தனது கிராமம் எழுச்சி பெற்று அறிவும் செல்வமும் பொருந்திய சமூகமாக விளங்கவேண்டுமென தனது ஆயுள் காலம் முழுவதும் மனப்பூர்வமாக உழைத்தார்.

இவரது வாழ்க்கை பிறப்பு முதல் நிறைவு வரை புனிதமானதும் சாதனைகளைத் கொண்டதுமாகும். இவரது கல்விச் சேவை, வேலணை கிராம வளர்ச்சிக்காக ஆற்றிய பணிகள், குடும்பத்தவர் என்ற நிலையில் அவர் செய்த சேவைகள் வேலணை மக்களால் என்றும் நினைவு கூரப்படும் வேலணை தந்த உத்தம புருஷர்களில் ஒருவர்.

## கல்விமான்கள்

# திருமதி. நாகரட்ணம் பொன்னுத்துரை ஆசிரியை

**(31 - 07 - 1914 - 28 - 06 - 2004)**

திரு. ச. கைலாயபிள்ளை அதிபர்

திருமதி நா. பொன்னுத்துரை அவர்கள் வேலணையில் 31 - 07 - 1914 இல் கணபதிப் பிள்ளை சின்னத்தம்பி, செல்லம் தம்பதியினருக்கு மகளாகப் பிறந்தார். பெரும் எண்ணிக்கையான நெருங்கிய பாசமிகு உற்றார், உறவினரைக் கொண்ட குடும்பமாக விளங்கியதால் அவர் சிறுவயதில் யாவரதும் அன்புக்குரிய பிள்ளையாக வளர்ந்தார். நயினாதீவு நாகபூசணி அம்மனுக்கு வைத்த நேர்த்தி காரணமாக அவருக்குப் பெற்றார் நாகரத்தினம் எனப் பெயரிட்டனர். அவர் இளமையில் நாகபூசணி எனவும் அழைக்கப்பட்டார்.

திருமதி நா. பொன்னுத்துரை அவர்களின் ஆரம்பக் கல்வி 15 - 01 - 1921 இல் வேலணை அமெரிக்க மிஷன் பாடசாலையில் ஆரம்பமானது. சிறு வயதிலே அவர் கல்வியிலும் கல்விசார் செயற்பாடுகளிலும் மிகுந்த ஆர்வமும் திறமையும் கொண்டிருந்தார் என அறியப்படுகிறது. அவரின் கல்வி ஈடுபாடு கண்ட அவரின் ஆசிரியை அவரின் மேற்படிப்புக்கு ஊக்கம் அளித்தார். பின் வேலணை சரஸ்வதி வித்தியாசாலையிலும், சுன்னாகம் இராமநாதன் கல்லூரியிலும் தன் கல்வியைத் தொடர்ந்தார். இராமநாதன் கல்லூரியில் ஆசிரியர் பயிற்சிக்கான தகுதிகாண் பரீட்சையில் சித்திபெற்று, இராமநாதன் ஆசிரியப்பயிற்சிக் கலாசாலையில் இரண்டாவது அணி மாணவியாக இணைந்து இரு வருடப்பயிற்சி பெற்று பயிற்றப்பட்ட ஆசிரியையாக 1932 இல் வெளியேறினார். வேலணைக் கிராமத்துச் சூழல் அன்று கல்விக்கு குறிப்பாக பெண் கல்விக்குச் சாதகமாக இருக்கவில்லை. மேலும்,

வேலணையில் இருந்து யாழ்ப்பாணத்திற்குப் போக்குவரத்து வசதிகள் மிகக் குறைந்த நிலையிலும், அவர் யாழ்ப்பாணம் சென்று கல்வி பயின்றது சாதனையாகும். கிராமத்தில் பெண் கல்விக்கு முன்னோடியாக விளங்கினார். அவரின் கல்வி முன்னேற்றத்திற்கு அவரின் தாயார் செல்லமே முக்கிய காரண கர்த்தாவாக விளங்கினார். அவர் இராமநாதன் ஆசிரியர் பயிற்சி கலாசாலையில் கல்வி பயின்ற காலத்தில், சேர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்களும் அக்கல்லூரியிலே வாழ்ந்து வந்தார். அதனால் அவரின் கல்விச் சிந்தனைகள் குறிப்பாக இந்து பாரம்பரியத்தில் பெண் கல்வி பற்றிய சிந்தனைகளை உள்வாங்கிக் கொண்டார்.

அவர் பாடசாலை மற்றும் ஆசிரியப் பயிற்சிக் கலாசாலையில் கல்வி கற்ற காலங்களில் கல்வியில் சிறந்து விளங்கி பல பரிசில்கள் பெற்ற சிறந்த மாணவியாக விளங்கினார்.

பயிற்றப்பட்ட ஆசிரியையாக வெளியேறி வீடு வந்த அவருக்கு ஆசிரிய பணிக்குப் பல பாடசாலை, நிறுவனங்களில் இருந்து அழைப்பு வந்தது. ஆனால் ஊர் பெரியவர்களின் விருப்பத்திற்கேற்ப வேலணை சரஸ்வதி வித்தியாசாலையில் தன் ஆசிரியப் பணியை ஆரம்பித்தார். 10 - 10 - 1932 இல் சரஸ்வதி வித்தியாசாலை முகாமையாளர் திரு. வைத்திலிங்கம் விஜயரட்ணம் தலைமையில் கிராமத்துப் பெரியோர்களும், உறவினர்களும் அவரை வீட்டிலிருந்து அழைத்துச் சென்று ஆசிரியப் பணியைப் பொறுப்பேற்க வைத்தனர். அவர் ஓய்வு பெறும் காலத்தில் மூன்று தலை முறையினருக்கு கல்வி புகட்டிய பெருமையைப் பெற்றவர். அதனால் கிராமத்தில் சகலரும் அவர் மீது தனிமரியாதை கொண்டிருந்தனர். அவரை எல்லோரும் "ரீச்சர் அக்கா" அல்லது "நாகரத்தினம் அக்கா" என அழைப்பர். இறக்கும் வரை அவரிடம் காணப்பட்ட அபார ஞாபகசக்தி அவருக்குக் கிடைத்த கொடை எனக் கூறப்படுவது உண்டு. தன்னிடம் கற்ற மாணவர்கள், ஆசிரியர்கள் பற்றிய விபரங்கள் அனைத்தையும் தனது தொண்ணூறாவது வயதிலும் நினைவு கூறமுடிந்தமை பலருக்கு வியப்பை அளித்தது. அவர் கல்வியில் பின் தங்கியிருந்த கிராமத்துப் பிள்ளைகளை முன்னுக்குக் கொண்டு வரவேண்டும் என்றும், கல்வி மேம்பாட்டால் குடும்பங்கள் சமநிலை அடையும் என்ற சிந்தனையுடன் செயற்பட்டு, கல்விப் பணி புரிந்தவர். அதனால் கல்வி அதிகாரிகளால் பல முறையும் சிறந்த ஆசிரியராக மதிக்கப்பட்டார்.

வேலணை சரஸ்வதி வித்தியாசாலையில் ஆசிரியப் பணியை ஆரம்பித்த அவர், 10 ஆண்டுகள் அங்கு சேவை புரிந்து, பின் புங்குடுதீவு பெருங்காடு சுப்பிரமணியம் வித்தியாசாலையிலும் (1942 - 1945) பின் கரம்பன் சண்முகநாத வித்தியாசாலையிலும் (1945 - 1949) மீண்டும் வேலணை சரஸ்வதி அம்பிகை வித்தியாசாலையிலும் (1950 - 1971) பணிபுரிந்தார். 1971 இல் அரசாங்கம் அரச சேவை வயது எல்லையை 55 ஆகக் குறைத்ததன் காரணமாக 56 ஆவது வயதில் ஓய்வு பெற்றார். தான் 60 வயது வரை பணிபுரிய முடியவில்லையே எனக் கவலை

கொண்டிருந்தார். ஓய்வு பெற்ற நிலையில் நீண்ட காலமாக, கிராம மக்களின் கல்வி முன்னேற்றத்திற்கான ஆலோசனைகளை வழங்கி வந்தார்.

ஓய்வு பெற்று வீட்டில் இருக்கும் காலத்தில், திருக்குறள், சமய நூல்களை வாசிப்பதில் மிக்க ஈடுபாடு கொண்டு, அதில் புலமையைப் பெற்றுக்கொண்டார். அதன் பயனாக, மற்றவர்களுடன் உரையாடும் போது திருக்குறளை சரளமாகக் கூறும் திறமை பெற்றார்.

அவர் கிராமத்து அபிவிருத்தியிலும், முன்னேற்றத்திலும் ஈடுபாடு கொண்டு கணவருடன் இணைந்து பல செயற்பாடு களை மேற் கொண்டார். 1930, 1940, 1950, காலப்பகுதியில் சட்டசபை, பாராளுமன்றம் உள்ளூராட்சி தேர்தல்களில் வாக்குரிமையின் மகிமையையும் வாக்களிக்கும் முறையையும் பற்றி மக்களுக்கு வீடு வீடாகச் சென்று விளக்கினார். நாடு, மக்கள், ஆட்சி போன்ற விடயங்களைப் பற்றி வாசிப்பதிலும், அறிவதிலும் மிக்க ஈடுபாடு கொண்டவர்.

உற்றார், உறவினர், நலன்களில் மிகுந்த அக்கறை உடையவர். அவர்களின் இன்ப, துன்ப நிகழ்வுகளில் கலந்து, வேண்டிய உதவிகளைச் செய்வதில் அவருக்கு நிகர் அவரே. அதனால் ஊரவர்கள் குறிப்பாக மேல் வகுப்பு மாணவிகள் தம் வழிகாட்டியாகவும், தாயாகவும் மதித்தனர்.

1933 - 04 - 01 இல் செல்வி. நாகரெத்தினம் சின்னத்தம்பிக்கும் வேலணையைச் சேர்ந்த வேலாயுதர் அம்பலவாணரின் மகன் பண்டிதர் அ. பொன்னுத்துரை அவர்களுக்கும் திருமணம் நடைபெற்றது. பண்டிதர் அ. பொன்னுத்துரை அவர்களும் கோப்பாய் ஆசிரியர் பயிற்சி கலாசாலையில் பயிற்றப்பட்ட ஆசிரியர் ஆவார். அவர்களது திருமண வாழ்க்கை வைரவிழாக் கண்டு மேலும் 2 வருடங்கள் மகிழ்சிகரமாக அமைந்தது. அவருக்கு ஏழு ஆண் பிள்ளைகளும், ஐந்து பெண்பிள்ளைகளும் உள்ளனர். அவர்தம் பிள்ளைகள் கல்வியில் சிறந்து விளங்க வேண்டும். நற்குணம் உடையவர்களாக இருக்கவேண்டும். உற்றார், உறவினருடன் நல்லுறவைப் பேண வேண்டும் என்பதில் மிக உறுதியாக இருந்து, அதற்கேற்ப அனைவரையும் வளர்த்து ஆளாக்கினார். தன் பிள்ளைகள் பன்னிருவரையும் பல்கலைக்கழக பட்டத்தாரிகளாக்கி அவர்கள் பல உயர் பதவிகள் வகிக்க வழி அமைத்தார். பிள்ளைகளும் பெற்றோரின் ஊக்கத்திற்கேற்ப மேலும் பட்ட மேற்படிப்புக்களை கற்றுத் தேறி இலங்கையிலும் வெளி நாடுகளிலும் மேன்மையுடன் திகழ்கின்றனர்.

அவர் சிறந்த மகளாகவும், மனைவி யாகவும், தாயாகவும், குருவாகவும், சமூக சேவகியாகவும் திகழ்ந்து தன் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி முழு வாழ்வு வாழ்ந்து தனது 90 ஆவது வயதிலே 28 -06 - 2004 இல் இறைவனடி சேர்ந்தார்.



# கல்விமான்கள்

## செல்வி அன்னபூரணி பொன்னப்பா

**(தோற்றம் - 08. 10. 1911 மறைவு - 17. 09. 1995)**

**திருமதி. வேதவல்லி அரசரத்தினம்**
**ஆசிரியை - வேலணை**

இவ்வுலகில் பிறந்து வாழ்ந்து மடிந்த மனிதர்கள் எண்ணற்ற கோடி. அவர்களில் சிலரே பேசப்படுபவர்களாக என்றும் நினைவில் வாழ்பவர்களாக உள்ளனர். எமது கிராமம் வேலணை மேற்கில் 08. 10. 1911 இல் பிறந்து வாழ்ந்த செல்வி அன்னபூரணி பொன்னப்பா அவர்கள் இவ்வுலக வாழ்வை 17. 09. 1995 இல் நீத்தார். ஆயினும் "வாத்தியம்மா" என்ற பெயருடன் மக்கள் மனதில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். கம்பீரமான அவரது தோற்றம், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற சீரிய பண்பின் நேரிய தன்மை யும், கருணையும், தியாக உணர்வு நிறைந்த முகமும் கண்களும் பெண்மையின் சிறப்பைக் காட்டி நின்றன. பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை "உபாத்தியம்மா" என அன்புடனும் மதிப்புடனும் அழைக்கப் பட்டார். அவர் வாழ்ந்த காலம் வேலணை மேற்கின் பொற்காலம். கல்வியில் பொருள் ஈட்டுவதில், விருந்தோம்பலில் சிறப்புற்று மற்றக் கிராமங்களிற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய காலம் அது. மகிழ்ச்சியாக, சுறு சுறுப்பாக இயக்கம் கொண்டிருந்த ஒரு சமூகத்தில் பெண் கல்வியின் பெருமையை யும் கருணையையும் உறுதியையும் ஒருங்கே கொண்டு மற்றப் பெண்களிற்கு ஒரு எடுத் துக் காட்டாக விளங்கினார் செல்வி அன்ன பூரணி பொன்னப்பா அவர்கள்.

உபாத்தியம்மா அவர்களுக்கு அறிவுபுகட் டிய ஆசான் திருவாளர் பொன்னப்பா. இவர் ஆசிரியரின் மகளாவார். பொன் னப்பா ஆசிரியர் சைவப் பிரகாச வித்தியாசா லையை கந்தப்பர் ஆரம்பித்த காலத்தில் இருந்தே அப் பாடசாலையின் ஆரம்பக் கல்வி ஆசிரியராக இருந்தவர். எனவே கற்பித்தலை தன் இரத்தத்திலேயே உயிராகக் கொண்டு

பிறந்தவர் உபாத்தியம்மா அவர்கள். இவர் ஆரம்பக் கல்வியை வேலணையில் முடித்தபின்னர் உடுவில் மகளிர் கல்லூரியில் தனது கல்வியைத் தொடர்ந்தார். கிறிஸ்தவக் கல்லூரிச் சூழலும் நிர்ப்பந்தமும் அவரை திருநீறு அணிவதை நிறுத்தச் செய்தது. கிறிஸ்த வராகி, சைவ சமயத்தை விட்டு விலகத் தூண்டியது. ஆனால் கல்வியை முடித்து வேலணைக்கு திரும்பிய பின்னர் சிற்பனை முருகனும் அவனது ஓங்கார மணியோசை யும் அவரை இறுகப் பிணைத்தது. அவர் தூய சைவ சமயியானார்.

இவர் 1933-34 வரை இரு ஆண்டுகள் கோப்பாய் ஆசிரிய கலாசாலையில் பயிற்சி பெற்றபின் 1935ஆம் ஆண்டு சைவப் பிரகாச வித்தியாசாலையில் ஆசிரியராக பணியேற்றார். அன்றுமுதல் தன் கிராம மக்களின் கல்வி மேம்பாட்டிற்காக அவர் அயராது உழைத்தார். அவர் மாணவர்க ளது கல்வி வளர்ச்சியில் காட்டிய ஆர்வம் அக்கிராமத்தில் பல கல்வி வித்தகர் உருவா கக் காரணமாயிற்று. கட்டிடம் பலமாக இருக்க வேண்டுமெனில் அதன் அத்திவாரம் உறுதியாக அமைய வேண்டும். அவ்வாறே கற்றல் வழுவின்றி அமையவேண்டும் எனில் ஆரம்பக் கல்வி அழுத்தமாக அமைய வேண்டும். இந்த வகையில் எழுத்துப் பிழை யின்றி உச்சரிப்புத் தெளிவுடன் எழுதப்ப டிக்கத் தெரிய வேண்டும் என்ற கருத்தினைக் கொண்டவர் வாத்தியம்மா அவர்கள். சைவப் பிரகாசத்துக்கென ஒரு சிறந்த கல்விப் பரம்பரை உருவாக அடியிட்ட பெருமைக் குரியவர் அவர். வேலணை ஆசிரியர் பல ரும் இணைந்து இதனைப் பெருமையுடன் சொல்லிக் கொள்கின்றனர்.

"கல்லாமற் பாதி குலவித்தை" என்பது இவருக்குப் பல வகையிலும் பொருந்தும். இவர் அரிச்சுவடியை அ, ஆ, இ என உச்ச ரித்து ஒலிக்க கண்கள் கரும்பலகையில் உள்ள எழுத்துக்களைப் பார்க்க, மூளை இவற்றைக் கிரகிக்க, நல்லதோர் ஆசிரிய - மாணவ உறவு சங்கமிக்க மேம்பாடான ஒரு கல்விச் சூழல் அக்காலத்தில் உருவா கியது. மாணவர்கள் அவரிடமிருந்து தமிழ் மொழியின் முழுமையான அறிவையும் அதனூடாக கல்வியையும் ஒழுக்க நெறியை யும் உயர் பண்பையும் பெற்றுக் கொண்டனர்.

இவர் 08. 10. 1971 இல் தனது ஆசிரிய சேவையிலிருந்து ஓய்வு பெற்றார். 1935ஆம் ஆண்டு நியமனம் பெற்றதிலிருந்து ஓய்வு பெறும்வரை அதே பாடசாலையிலேயே சேவையாற்றினார். சிறந்த ஓர் ஆசானாக இருந்து குரு பரம்பரையை உருவாக்கிய வர் என்பதால் வேலணை மக்கள் ஒரு வாத்தியம்மாவைப் பெற்றனர் என்பது மட்டுமல்ல கடமையுணர்வும் தியாக நெஞ் சமும் கொண்ட ஒரு பெண் திலகத்தையும் ஒருங்கே பெற்றனர் எனலாம். தனக்கென வாழாமல் தனது ஆதரவற்ற இரு சகோ தரிகளுக்காக பெற்றோரை சிறுவயதில் இழந்த சகோதரிகளின் குழந்தைகளுக் காகவும் வாழ்ந்து ஊர்ப் பெண்களுக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தார். தான் குடும்ப வாழ்வில் ஈடுபடாமலே தன் சகோதரிகளின் பெருங் குடும்பப் பாரத்தைப் பொறுப்பு டன் சுமந்தார். இது அவரின் மன உறுதி யையும் அன்பின் நெகிழ்வையும் ஒருங்கே புலப்படுத்தின.

அவரது சமயப் பற்றும் ஊர்ப்பற்றும் இறுதிவரை அவரை வேலணையை விட்டு விலகாது ஈர்த்து வைத்திருந்தது. ஊரை விட்டு நாட்டைவிட்டுப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது அதற்கான சந்தர்ப்பம் கிடைத்தபோதும் சிற்பனை

முருகனையும் அவனது திருக்கோயிலையும் இறுகப் பற்றி இறுதி மூச்சுவரை வேலனின் அடியிலேயே வாழ்ந்து அவனது திருப் பாதங்களுக்கே சென்றுவிட்டார். எப்படியும் வாழலாம் என்றில்லாமல் இப்படித்தான் வாழவேண்டும் என்று வரம்புகட்டி தலை நிமிர்ந்து வாழ்ந்த பெருமைக்குரியவர் செல்வி அன்னபூரணி அவர்கள்.

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்.
வேதங்கள் படைக்கவும் நீதிகள் செய்யவும்
வேண்டிவந்தோம் என்று கும்மியடி

என்று பாரதியின் புதுமைப் பெண்ணுக்கு இலக்கணமாக திகழ்ந்தார்.

கொடிய யுத்தமும் இடப்பெயர்வும் வேலணையை சீர்குலைத்து விட்டது. ஊர் வாழ் மக்கள் திக்குத் தெரியாமல் சிதறி வாழ்கின்றனர். வாத்தியம்மா என நெஞ்சம் நெகிழ நேசிக்கப்பட்டவருக்கு இறுதி அஞ்சலி செய்யும் பெருமையையும் பேற்றையும் ஊர்மக்கள் பெறவில்லை. ஆயினும் அவர்களது நெஞ்சங்களில் வாத்தியம்மாவின் பெருமையும் சிறப்பும் என்றும் சுடர்விட்டு அணையாது பிரகாசிக்கும் என்பதை மறுக்க முடியாது. தலைமுறை தலைமுறையாக அவரது தொண்டும் தியாகமும் நினைவில் கொள்ளப்பட வேண்டும். இது அவருக்குப் பெருமை தர அல்ல. வேலணை மக்களிற்கு பெருமை தருவதாகும்.



# பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்களின் வீடு



தற்போதைய தோற்றம் - 2006



# கல்விமான்கள்

## திரு. கந்தர் காங்கேசு

### (ஸ்தாபகர், முன்னாள் அதிபர் வேலணை கிழக்கு மகாவித்தியாலயம்)

திருமதி. வீரலட்சுமி சாமி.

ஆளுமையும், ஆன்மீகமும் ஒருங்கே கொண்டு தமக்கென ஒரு தனியான பாதையில் கம்பீரமாக நிமிர்ந்து நடந்த பெரியோர்கள் பலர். அவர்களின் வரலாற்று சாதனைகள் நேற்று. இன்று, நாளை என முக் காலத்திற்கும் உரியனவாகி என்றும் நிலைத்திருக்கும். அவை இறந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகளின் தரவுகளாக போற்றப்படுகின்றன. அந்த வகையில் வேலணையூர் பெரியார் திரு. கந்தர் காங்கேசுவின் வரலாற்று குறிப்பும் பலருக்கு வழிகாட்டுவதாக அமையும்.

செந்தமிழும், சிவநெறியும் செழிப்புற விளங்கும் வேலணை கிழக்கில், சைவத் தமிழ்த் தென்றல் சதா வீசிக் கொண்டிருக்கும், இந்தச் சூழலில் தான் உயர்திரு. திருமதி கந்தர் வள்ளியம்மை தம்பதிகள் அம்பாளின் திருவருளால் 01.08.1912 ஆம் ஆண்டு செல்வன் காங்கேசு என்னும் மகனையும் ஆறு வருடங்களின் பின்னர் செல்வி பாக்கியலட்சுமி என்னும் மகளையும் பெற்றெடுத்தனர். பெற்றோர் பெரு நிலபுலங்களையுடையவர்களாய் பொருள் வளத்துடன் வாழ்ந்தவர்களாதலால் பிள்ளைகள் இருவரும் இளமை தொட்டு சிறப்புடன் வாழ்ந்தனர். பிள்ளைகள் இருவரையும் தந்தையார் உரிய பருவத்தில் வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் சேர்த்து கல்வி கற்க வைத்தார். இளமையிலேயே தந்தையாரை இழந்த இவருக்கு தாயாரே தந்தையும் தாயுமாகி சிந்தையை தெளிவித்து, அந்தமில் இன்பம் பெற வழி செய்யும் கல்வியைப் பெறவும், சமூகத்தில் பல விந்தைகள் புரியவும் காரணகர்த்தாவாக விளங்கினார். இவர் ஆரம்பக் கல்வியையும் இடைநிலைக் கல்வியையும் அமெரிக்க மிஷன் பாடசாலையில் கற்றார்.

வேலணை வங்களாவடியில் உயர்திரு. வை. விஜயரத்தினம் அவர்களால் ஸ்தாபிக் கப்பட்ட சரஸ்வதி வித்தியாசாலையில் 1928ஆம் ஆண்டில் தலைமை ஆசிரியராக இருந்தஉயர்திரு. இ. மருதையானார் அவர் கள் ஆரம்பித்து நடாத்திய ஆசிரியர் கலா சாலைப் புகுமுக வகுப்பில் சேர்ந்து கல்வி கற்றார்.

பதினாறு வயதிலேயே பரீட்சையிற் சித்தியெய்தி கோப்பாய் அரசினர் ஆசிரிய பயிற்சிக் கலாசாலையிற் (03. 10. 1929 - 08. 08. 1931) சேர்ந்து இரு வருடங்களிற பயிற்சி பெற்று ஆசிரியராகியவுடன் சரஸ்வதி வித்தியாசாலை முகாமையாளராகவிருந்த திரு. வை. விஜயரத்தினம் அவர்களுடைய வேண்டுதலுக்கிணங்கி 17. 08. 1931ஆம் ஆண் டில் உதவி ஆசிரியர் பதவியை ஏற்றுக் கொண்டார்.

நாரந்தனை: கணேச வித்தியாசாலை, நயினாதீவு கணேச வித்தியாசாலை, சர வணை- நாகேஸ்வரி வித்தியாசாலை, ஆகிய வற்றில் உதவியாசிரியராகக் கடமையாற் றிய பின், வேலணை கிழக்கு அரச தமிழ்க் கலவன் பாடசாலையில் 10. 08. 1946 இல் தலைமையாசிரியராக நியமிக்கப்பட்டார். இதன்பின் மாற்றம் பெற்று, மாத்தளை - பலாப் பெத்வல அரசினர் பாடசாலையில் ஒரு சில ஆண்டுகள் தலைமையாசிரிய ராகக் கடமையாற்றினார்.

இளவயதிலேயே சைவத்திலும் தமிழி லும் ஆர்வமுடையவராகக் காணப்பட்டார். அறநெறியில் வாழ்ந்தார். புகழை வெறுத் தார். சைவ உணவையே உண்பவராய் சமயதீட்சை பெற்ற சைவ ஆசாரமுடையவ ராய், சமயத் தொண்டனாய், சமூகத் தொண்டனாய் ஆடம்பரமற்ற அமைதிப் பண்பாளனாய், அமைதியான போக்கும் இனிமையான பேச்சும் உடையவராய் சகல உயிர்களிடத்தும் இரக்கமுள்ளவராய், தன் னைப் போல பிறரை நேசிக்கும் பண்பாளராய் காந்திய கொள்கைகளைப் பின்பற்றி ஒழுகி, கதர் ஆடையினையே தானும் அணிந்து காந்தீய இலட்சியவாதியாய் விளங்கினார்.

இவரது எளிமையான ஆனால் எடுப் பான தோற்றம், இனிய சுபாவம், நிமிர்ந்த நன்னடை எல்லோரது உள்ளத்தையும் கவர்ந்தன. இவருடன் கற்பித்த ஆசிரியர் களும் குறிப்பாக தொழில் நீதிமன்ற நீதிபதி திரு. குருசாமியவர்களும் இவரது மனிதத் துவத்தை மிக வியந்து பாராட்டினர். இவர் ஒரு முறை சுகவீனமுற்றிருந்த போது இந்தி யாவிற்கே இவரை அழைத்துச் சென்று நன்முறையில் சிகிச்சைபெற முன்னின்று ழைத்தாரெனின் இவரது மனிதத்துவப் பண்பினால் எவ்வளவு தூரம் கவரப்பட் டிருந்தார் என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. கடுஞ்சொற்கள் இவர் அறியா தவை. அன்பு, பண்பு, நேர்மை, அஞ்சா நெஞ்சம் இவரது சிறப்பியல்புகள்.

இவர் ஒரு மொழிப்பற்றாளன், இலக் கண, இலக்கிய அறிவும் அழகான கையெழுத் தும் கைவரப் பெற்றவர். அடிமைத் தனமும் ஆங்கில மோகமும் ஊறிப்போன காலத் தில் சம்பளப் பத்திரங்களை எல்லோரும் ஆங்கிலத்திலேயே எழுதிய காலத்தில் தனித் தமிழிலேயே எழுதி வழிகாட்டியவர். ஆங் கிலத்திலே கையொப்பமிடும் ஆசிரியர்களை எள்ளி நகையாடி தமிழிலே கையொப்பமிட வைத்தவர்.

சமயப் பற்று நிரம்பப் பெற்ற இவர் சைவப் பெரியோன் காலஞ்சென்ற கந்தப்பு ஆசிரியர் அவர்களிடம் சமய அறிவைப்

பெற்று வளர்த்ததோடு திருமுறைகளைப் பண்ணோடு ஓதவும் கற்றுக்கொண்டார். கற்றாங்கரிஓம்பி...., அந்தணாளனுன்... போன்ற தேவாரங்களையும் குறைவிலா நிறைவே குணக்குன்றே...., கங்கை தாங்கிய சடை உடைக்கரும்பே.... திருவாசகத்தையும் கண்ணீர் பெருக உருக்கமாகப் பாடுவார்.

அம்மன் கோவிலில் மார்கழித் திரு வெம்பாவையை முதலில் ஆரம்பித்து வைத்து பல வருடங்களாக தொடர்ந்து திருவெம்பாவையைத் தானே பாடியதோடு மட்டுமன்றி கந்தபுராணம் படித்து பயனும் சொன்னார்.

முத்துமாரியம்மன் கோவில் பரிபாலன சபையில் முக்கிய உறுப்பினராக இருந்து கோவில் அபிவிருத்திக்காக உழைத்ததுடன் அக்கோவில் மூலஸ்தானம் அமைப்பதில் பெரும் பங்காற்றினார்.

1942ஆம் ஆண்டு இதேகிராமத்தைச் சேர்ந்த நிவித்திக்கலை பிரபல வர்த்தகர் உயர்திரு கதிரேசு சண்முகப்பிள்ளை பொன்னம்மா தம்பதியினரின் சிரேஷ்ட புத்திரியான செல்வி சிவபாக்கியத்தை திருமணம் செய்துகொண்டார். இவர்களது இல்லறமாகிய நல்வாழ்வில் விமலசோதி, ஞானஸ்கந்தன், ஞானசோதி(அமரத்துவம்), கலாசோதி ஆகிய நன்மக்களைப் பெற்றார். விமலசோதியை தேர்தல் அலுவலக எழுது வினைஞர் இராசையா தவராசா அவர் களுக்கும் ஞானஸ்கந்தனை (Mill Wright Mechanical Engineer) தர்மலிங்கம் பிரே மிலா அவர்களுக்கும் கலாசோதியை இரத்தின சிங்கம் சர்வேஸ்வரன் (Chemical Engineer) அவர்களுக்கும் திருமணம் செய்து வைத்து, திருமதி அசலை சிவகுமார் (Civil Engineer) மாணவர்கள் த. அமலன் (பொறியி யல் மாணவன், மொறட்டுவ பல்கலைக்கழ கம்), செல்வி. த. நிமலி, (விஞ்ஞான பீடம் ரஜறட்ட பல்கலைக்கழம்) செல்வி. த. சாமளை (சட்டபீடம் யாழ். பல்கலைக்கழ கம்) ஞா. சுகன்யா (Business Marketing), ஞா. கபிலா, ஞா. தரோன் (கனடா) ச. மாதங்கி (Aero Space Engineering), ச. பிரணன் (கனடா) ஆகிய பேரக் குழந்தைகளையும் கண்டு மகிழ்ந்தார்.

1940ஆம் ஆண்டளவில் வேலணைத் தீவில் உள்ள ஊர்காவற்றுறை, மண்டை தீவு, அல்லைப்பிட்டி, தவிர்ந்த ஏனைய கிரா மங்களைச் சேர்த்து பதினேழு வட்டாரங் களாகப் பிரித்து உள்ளடக்கிய வேலணைக் கிராம சபையில் மூன்றாம் வட்டார உறுப் பினராக இருந்தார். தேவிகோட்டம் என்று அழைக்கப்படும் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம், ஐக்கிய நாணய சங்கம், கிராம முன்னேற்றச் சங்கம் முதலான பல சங் கங்களில் முக்கிய உறுப்பினராக இருந்து ஊரிற்கு சேவை செய்தார். இன்னும் இல வசப் பால் நிலையம் ஒன்று அக்கிராமத் தில் ஸ்தாபிக்கப்படுவதற்கும் காரண கர்த்தாவாக இருந்தார். "உள்ளத்தனையது உயர்வு" என்பதற்கேற்ப கள்ளம் கபடமற்ற வெள்ளையுள்ளம் உடையவராக இருந்தமை யால் ஊர் மக்களால் உவந்தேற்றப்பட்டார். இது அவரது செயற்கரிய பணிகளுக்கு உறு துணையாக இருந்தது.

இவர் ஆசிரியமணி திரு. மருதையனார் அவர்களை தனது குருவாகவும் தனது அர சியல் தலைவனாகவும் ஏற்றுக் கொண்டார். வேலணைக் கிராம சபைத் தலைவராகப் பல வருடங்கள் இருந்து வேலணைக் கிராமத் தின் அபிவிருத்திக்காக உழைத்த உயர்திரு. வை. விஜயரத்தினம் அவர்களையும் 1948

இற்கு முன் இலங்கை அரசாங்க சபையில் வலிகாமம் மேற்கு தீவுப் பகுதியின் பிரதி நிதியாகவும் சபை சபாநாயகராகவும் இருந்து தீவுப்பகுதிக்கும் தமிழ் மக்களுக்கும் சிறப்பை ஈட்டிக்கொடுத்த சேர். வை. துரைசாமி அவர்களையும் மதித்து நடந்தது மட்டுமன்றி அவர்களது மதிப்பிற்கும் அன்பிற்கும் உரிய வராக வாழ்ந்தார்.

வேலணை கிழக்கில் குடிசனம் நெருக்க மாக உள்ள 3ஆம், 4ஆம், வட்டாரங்களில் உள்ள பெருந்தொகையான மாணவர்கள் கல்வி கற்பிப்பதற்காக வெகுதூரத்திலுள்ள வங்களாவடியிலிருக்கும் பாடசாலை-களுக்கே செல்ல வேண்டியிருந்தது. இத னால் அப்பகுதியில் உள்ள பிள்ளைகள் கல்வியிற் பின்தங்கியிருப்பதை உணர்ந்து மிகவும் மன வேதனைப்பட்டார். தனது கிராமத்திலுள்ள நூற்றுக்கணக்கான மாண வர்கள் பரம்பரை பரம்பரையாக கல்வி கற்கவேண்டிய தேவையை உணர்ந்து தனது சொந்தக் காணியில் தனது சொந் தப் பணத்தில் கொட்டில்கள் அமைத்து தளபாடங்களும் செய்து கொடுத்து சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி அவர்கள் மூலம் அரசாங்கத்திடம் ஒப்படைத்தார்.

1946 ஆம் ஆண்டு இப்பாடசாலைக்கு அரசின் அங்கீகாரம் கிடைத்தது. சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி பாடசாலை நடவடிக்கைகளை ஆரம்பித்து வைத்தார்.

இதனால் இவர்கள் மக்கள் மனதில் நிலையான ஓர் இடத்தைத் தனதாக்கிக் கொண்டார். இப்பாடசாலையானது அரசி னர் தமிழ்க் கலவன் பாடசாலையாக ஆரம்பிக்கப்பட்டது. மனித நேயமிக்க மனித ரான இவர், 1946ஆம் ஆண்டு ஆனி மாதம் 10ஆந் திகதி அன்று அதன் தலைமை யாசிரியராக பதவி ஏற்றுக்கொண்டார்.

இவரது காலத்தில். கல்லூரியின் முன்ற லில் பல மறக்க முடியாத நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. இங்கு இடம்பெற்ற திருக் குறள் மகாநாட்டில் இந்தியாவில் இருந்து பல அறிஞர்கள் வந்து பங்குபற்றினார்கள். முத்தமிழ் விழாக்களில் சங்கிலியன் நாடகம், பூதத்தம்பி நாடகம், அரிச்சந்திரன் நாடகம் போன்றவை குறிப்பிடத்தக்கவை. 1972 இல் இப்பாடசாலை மகாவித்தியாலயமாக தர முயர்த்தப்பட்டது. அதற்கு அதிபர் ஒரு வரை அரசினர் நியமிக்க முற்பட்டபோது தனது கிராமத்தின் நன்மையை கருத்திற் கொண்டு மனமுவந்து 14. 04. 1970 இல் வேலணை மேற்கு சைவப்பிரகாச வித்தியாசா லையின் தலைமையாசிரியராக மாற்றம் பெற் றுச் சென்றார். அங்கிருந்து 31. 12. 1971 இல் இளைப்பாறினார். இவரது பிரியாவிடைக் கூட்டத்தில் பாராட்டுவிழா சபையினருக்

### வெண்பா

அன்புக்கோர் தூய்மை அழகுக்கு ஓர் பொன்மேனி
முன்புக்கோர் கற்றமதி மூதறிஞர் - நண்புக்கோர்
பன்னலமார் காங்கேய பல்லூழி வாழியரே
நன்மனைசேய் வாழ்வார் நன்கு.

காக ஆசிரியமணி மருதையனார் அவர்கள் பாடிய பாடல் இது.

## விருத்தம்

ஊரின் நடுவண் அருட்சுடர்கால் உமையாள் கோவில் - அதனயலில்
சீர்மிக்கூரும் கலைச்சுடர்க்கல் சிறார்க்கோர் மகாவித்தியாசாலை
ஆரும் வியக்க நன்கமைந்தற்கு ஆகும் பொருளும் நிலமுமெல்லாம்
வாரி வழங்க உயருள்ளம் வாய்ந்த ஒருவ "காங்கேய"

கற்றோர் மதிப்பால் கனகமணிக் கவினார் இனிய உரு நிறைவால்
முற்றா நிலவின் முறுவலிப்பால் மேலோர் நெறிக்கண் மேவ்தலால்
மற்றோர் எந்தைவகையாலும் மனங்கோணாமல் காதலிக்கும்

வற்றா அன்புக்கொருவன் நீ
வாழி காங்கேய ஊழிபல

இன்று திரு. க. காங்கேசு உபாத்தியாய ரால் ஸ்தாபிக்கப்பட்ட வேலணை கிழக்கு மகாவித்தியாலயமானது அருகிலுள்ள ஆல மரம் போல தழைத்தோங்கி காணப்படு கிறது. அருகிலுள்ள காணியும் சேர்க்கப் பட்டு அழகாக காட்சி தருகிறது. இப்பாட சாலையில் கல்விகற்று வெளிநாடுகளில் வாழ்ந்துவரும் பழைய மாணவர்கள், ஊரி லுள்ள செல்வந்தர்கள் உதவியினால் மேன் மேலும் வளர்ச்சிபெற, அடுத்தடுத்து பதவி வகித்து வந்த அதிபர்கள், பழைய மாண வர் சங்கத் தலைவர்கள் உதவி வருகின்றனர்.

இவர் தனது கிராமத்தை பலமாக நேசித்து வந்தார். அதனால் இவர்களது மூன்று பிள்ளைகளும் யாழ்ப்பாணத்தில் பிரபல கல்லூரி விடுதிகளில் தங்கியிருந்து கல்வி கற்ற வேளைகளிலும்கூட ஊரை விட்டு புறப்பட்டு யாழ்ப்பாணம் குடியேற விரும்பவில்லை. பின்னர் பிள்ளைகளின் வற்புறுத்தலுக்கு இணங்கி திருநெல்வேலி சிவன்கோவில் வீதியில் நிலமொன்று வாங்கி வீடொன்றை அமைத்து வாழ்ந்து வரலானார். அருகிலுள்ள அம்மன் கோவில், சிவன் கோவில்களுக்கு சென்று அம்மனையும் சிவனையும் தரிசித்து வந்தார்.

இசைப்பிரியரான இவர் யாழ்ப்பாணத் தில் நடந்த அனைத்து இசை விழாக்க ளுக்கும் தவறாது சென்றுவந்தார். 1965 இல் அவரது மகள் ஞானசோதி (சுண்டிக் குளி மகளிர் கல்லூரி மாணவி) தனது 9 ஆவது வயதில் கல்லூரியின் வாசலில் இடம்பெற்ற பஸ்விபத்தினால் மரணித்தார். பிள்ளையின் இறந்த உடலைக்கூட வேல

ணைக்கே எடுத்துச் சென்று ஈமக்கிரியை கள் செய்தார். இரவும் பகலும் மகளின் நினைவால் துடித்தார்.

இதன்பின்னர் 1965இல் சிவதீட்சை பெற்று சிவபூசை செய்து ஒரு வேளை உணவு உண்பவராக தனது வாழ்க்கையில் ஒரு மாற்றம் செய்தார். அவருடைய நண் பர்கள் திரு. வி. செல்லத்துரை (அதிபர்), திரு. ஆ. இராமசுவாமி (ஆசிரியர்) போன் றோர் அவருடன் உரையாடிவிட்டுச் செல்வார்கள். 1969 இல் அவருடைய ஆசி ரிய நண்பர்களுடன் சேர்ந்து, குருமகராஜி காட்டிய நெறியினை பின்பற்றி வாரம் தோறும் குரு மகராஜியின் நிலையத்திற்கு சென்று சற்சங்கங்களில் கலந்து கொள்வ தும் தினந்தோறும் தியானம் செய்வதுமாக இருந்தார். 1981- 1983 இல் டெல்லிக்கு மனைவியுடன் சென்று நேரில் தரிசித்து ஆசிர்வாதம் பெற்று மகிழ்ந்தார்.

அவர்கள் உடலில் வலுவுள்ள வரை யோகாசனப் பயிற்சியை மேற்கொண்டு உடலில் நோயற்றவராக காணப்பட்டபோதும் கண்ணில் ஏற்பட்ட வருத்தம் காரணமாக மகனின் அழைப்பை ஏற்று 1989 இல் மனைவியுடன் கனடா சென்றும் பயனற்ற நிலையில் மனம்நொந்து காணப் பட்டார். உறவினர்களோடு நண்பர்களோடு தொலை பேசியில் உரையாடி மகிழ்ந்தார்.

இந்தநிலையிலும்கூட இவர் இயற்றிய கவிதைகள், கட்டுரைகள், கனடா வானொ லியிலும் பத்திரிகைகளிலும் வெளிவந்தன. பேரக் குழந்தைகளுக்கு திருக்குறள் கற் பித்து சிறப்பித்தார். அன்பு மனைவியின் உதவி யுடன் அருமை மகன், மகள், மருமக்கள், பேரக் குழந்தைகள் அரவணைப்பில் ஒன்பது ஆண்டுகள் வரை அகக்கண்ணின் ஞான ஒளியினால் இறைவனைப் பார்த்து பற்றிய பற்றனைத்தும் பற்றற்று தில்லை நடராசரின் பற்றே பற்றாக வாழ்ந்து 1988 ஆம் ஆண்டு தைமாதம் 15ஆம் திகதி குரு வாரத்தில் இறை வனடி சேர்ந்தார்.

இவரது வாழ்க்கைக்காலம் திரும்பாத சகாப்தம், நிரப்பமுடியாத வெற்றிடம். அன் பால் பண்பால் அழியாத ஓர் இடத்தை நிலையாகப் பதித்துவிட்டு சென்றுள்ளார்.

"நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை
எனும் பெருமை உடைத்ததிவ்வுலகு"



# கல்விமான்கள்

# செல்வி. பண்டிதை தம்பு வேதநாயகி

ஆசிரியமணி அ. பஞ்சாட்சரம்
(காரியதரிசி, பண்டிதமணி நூல் வெளியீட்டுச் சபை)

சைவத்துறை, தமிழ்த்துறையாகிய இரு துறைகளும் நன்கு வளர்ச்சியுற்ற பிரதேசம் வேலணைத் தீவாகும். கல்வி வளம், செல்வ வளம் பொருந்திய வேலணையில் பண்டிதர்கள், புலவர்கள், வித்துவான்கள், ஆசிரியர்கள் நிறைந்து வாழ்ந்தார்கள். இப்பொழுதும் வாழ்ந்து வருகிறார்கள். அந்த ஊரையும் அயலிடங்களையும் கல்வித் துறையில் மேம்பாடடையச் செய்த பெருமை மேலே குறிப்பிட்ட கல்விமான்களையே சாரும்.

வேலணையில் ஸ்ரீமத் ம. தம்பு உபாத்தியாயரவர்கள் பெரும் புகழோடு வாழ்ந்தவர். ஆரம்பத்தில் நெடுந்தீவு, நயினாதீவு முதலான இடங்களில் ஆசிரியராகப் பணி புரிந்து பேரும் புகழும் பெற்றவர். மஹா வித்துவ சிரோமணி சி. கணேசஐயர் அவர்கள் ஆசிரியப் பணி புரிந்தபோது அவருடன் சேர்ந்து கல்விக்காக உழைத்தவர் தம்பு உபாத்தியாயர். அவர் வாழ்ந்த இடம் நெல்லாவில். நெல்லும் ஆவினமும் நிறைந்த பகுதியே நெல்லாவில் ஆகும்.

"தம்பு திருப்பாதமே தஞ்சமென
நெஞ்சே நீ நம்பு"

என்று பெரியவர்கள் அவரைப் பாராட்டி இருக்கின்றார்கள். ஆசிரியர் சேவைக்கென்றே பிறந்தவர் தம்பு உபாத்தியாயர். சிறந்த பௌராணிகர். அவரைப் பற்றிக் கேள்விப்படாதவர் அங்கு யாரும் இருக்க முடியாது.

தம்பு உபாத்தியாயர் மீனாட்சி என்னும் பெயர் தாங்கிய மங்கை நல்லாளைத் திருமணம் புரிந்தார். தம்பு மீனாட்சி தம்பதியினர் ஆண் ஒருவரும் பெண்கள் நால்வருமாக ஐந்து பிள்ளைகளைப் பெற்றெ

டுத்தனர். செளந்தரநாயகி, பெரியநாயகி, யோகநாயகி, சிவஞானசம்பந்தன், வேதநாயகி என்பவர்களே அவர்கள். கனிஷ்ட புத்திரி யான செல்வி வேதநாயகி அவர்கள் பிறந்த ஆண்டு 1912 ஆகும்.

## வேதநாயகி

இளையவரான வேதநாயகி இளமை யில் நன்கு கற்று ஆசிரியரானார். மதுரைத் தமிழ்ச் சங்கப் பரீட்சைக்குத் தோற்றிச் சிறப்புடன் சித்தியடைந்தார். தீவகத்தில் பெண் பாலாரில் முதலாவது மதுரைப் பண்டிதை என்ற சிறப்பும் இவருக்குண்டு.

வேலணை மேற்கில் ஒரு பாடசாலை; இராசா உபாத்தியாயர் பாடசாலை என்றே வழங்குவார்கள். இப்பொழுது பெயர் நடராசா வித்தியாசாலை. இப்பாடசாலை யில் ஆசிரியராகப் பணிபுரியும் சந்தர்ப்பம் பண்டிதைவேதநாயகி அவர்களுக்கு வாய்த் தது.

நாவலருக்குப் பின் நமக்கோர் காவல ராக விளங்கியவர் இந்து போட் சுப்பிர மணியம் இராசரத்தினம் அவர்கள். இந்து போட் என்கின்ற சைவ வித்தியா விருத்திச் சங்கம், சைவத் தமிழ் வளர்ச்சியின் பொருட்டு ஊர்கள்தோறும் பாடசாலை களை நிறுவியது. இலங்கையில் பரவலாக ஸ்தாபித்த பாடசாலைகள் இருநூறுக்கு மேல் ஆகும். விசேடமாகத் தீவகத்தில் பல பாட சாலைகளை நிறுவிய பெருமை சைவ வித் தியாவிருத்திச் சங்கத்தையே சாரும். மேலே குறிப்பிட்ட வேலணை மேற்கு நடராசா வித்தியாசாலையும் சைவ வித்தியா விருத் திச் சங்கத்தினால் கையேற்கப்பட்டது. பாட சாலை நன்கு வளர்ந்தது. இப்பாடசாலை யில் தலைமை ஆசானாகச் சேவையாற்றும் பேறு, தம்பு உபாத்தியாயரது மகன் சிவ ஞானசம்பந்தனுக்கு ஏற்பட்டது. அவரோடு சேர்ந்தும் ஆசிரியப் பணியை நன்கு ஆற் றினார் செல்வி. த. வேதநாயகி அவர்கள். சிவஞானசம்பந்தன் அவர்களைச் "சிவ ஞான வாத்தியார்" என்றே அழைப்பார் கள். நடராசா வித்தியாசாலையில் அவர் பதவி வகித்த காலம் பொற்காலம் எனலாம்.

தீவகத்தைச் சேர்ந்த பிள்ளைகள் உயர் கல்வியைப் பெறும் பொருட்டு யாழ் நகரை அணுகவேண்டிய ஒரு நிலையும் ஏற்பட் டது. திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியா சாலை கைகொடுத்து உதவியது.

இலங்கையில் உள்ள சைவ அநாதர் இல்லங்களில் திருநெல்வேலியில் உள்ள சைவ அநாதர் இல்லமே மிகவும் பழைமை வாய்ந்தது. சைவ அநாதசாலையில் உண்டி யும் உறையுளும் இலவசமாக வழங்கப் பட்டன. சைவ அநாதர் இல்லத்தில் உள்ள பிள்ளைகள் முத்துத்தம்பி வித்தியாசாலை யிலும் அதன் அயலிலுள்ள சைவாங்கில பாட சாலைகளிலும் கல்வி பயின்று மிகவும் முன்னுக்கு வந்தார்கள். இதற்கெல்லாம் வழிகாட்டியாக இருந்தது சைவவித்தியா விருத்திச் சங்கமேயாகும்.

ஒரு காலத்தில் மும்மொழிப் பல்கலைக் கழகமென விளங்கியது திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலை வளாகம். சைவ வித்தியாவிருத்திச் சங்கத்தின் இருதயஸ் தானம் சைவாசிரிய கலாசாலை எனலாம். இங்கு பயிற்சி பெற்ற சைவ ஆசிரியர்கள் இலங்கை முழுவதிலும் பரவலாக நியமனம் பெற்றுச் சைவத்தையும் தமிழையும் நன்கு வளர்த்துப் பிரகாசித்தார்கள்.

சென்ற நூற்றாண்டின் மத்திய காலத் தில் பயிற்சி பெறாதஆசிரியர்கள் ஆசிரிய பயிற்சிக் கலாசாலைகளிற் சேர்ந்து பயிற்சி

பெறலாம் என்ற ஒரு சலுகையை அரசு வழங்கியது. பயிற்சி பெறாதஆசிரியர்கள் பலர் ஆசிரியர் கலாசாலைகளிற் சேர்ந்து பயிற்சி பெற்றனர். தமது கல்விப் பணியை மேலும் சீரிய முறையில் மேற்கொண்டனர். அப்படியான சந்தர்ப்பத்தை மிகவும் பயன் படுத்தியவர்களில் ஒருவரே பண்டிதை வேதநாயகி அவர்கள்.

திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலை யில் அதிபர் மயிலிட்டி திரு. சி. சுவாமி நாதன், உப அதிபர் பொ. கைலாசபதி, பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை ஆகிய பெருமக்களிடம் கல்வி கற்கக் கூடிய அரிய தொரு வாய்ப்பு பண்டிதை வேதநாயகி அவர்களுக்கும் கிடைத்தது. சைவாசிரிய கலாசாலையிற் பயிற்சி பெற்ற பண்டிதை அவர்கள் மீண்டும் வேலணை நடராசா வித்தியாசாலையில் ஆசிரியையாக இணைக் கப்பட்டார். ஓய்வு பெறும்வரை அங்கேயே பணி புரிந்தார். தமக்கென அமைக்கப்பட்ட ஆசிரமத்திலேயே வாழ்ந்து வந்தார். சமய இலக்கிய வகுப்புக்களை நடத்தி அங் குள்ளவர்கள் பயன்பெற அவர் உழைத்த உழைப்பு மகத்தானது.

## பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை அவர்கள்

பண்டிதை த. வேதநாயகி காலத்தில் அவரை அடியொற்றி வாழ்ந்தவர் வேலணையூர் பண்டிதர் ச. சிதம்பரப் பிள்ளை அவர்கள். திருநெல்வேலி சைவா சிரிய கலாசாலையிற் பயிற்சி பெற்றவர். வேலணை சைவப் பிரகாச வித்தியாசாலை யில் மதிப்பார்ந்த அதிபராக இருந்தவர். பண்டிதமணி நூல் வெளியீட்டுச் சபை யின் தலைவராக அவர் இருந்து உழைத்த உழைப்பு உலகமறிந்தது. பண்டிதமணி அவர்களது எழுத்துக்களை அழகுறப் பிரதி செய்வதில் முன்னின்று உழைத்தவர்.

ஒரு வழியில் பண்டிதை வேதநாயகி அவர்கள் பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை அவர்களுக்குச் சிற்றன்னை முறையினர். இருவரும் வருடப் பிறப்புக்குப் பின்னர் நாள் பார்த்துத் திருநெல்வேலிக்குத் தமது குரு முதல்வரான பண்டிதமணி அவர் களிடம் வருவார்கள். பவ்வியமான முறை யில் வணக்கம் செலுத்திவிட்டு அமருங் காட்சி வெகு அலாதியாக இருக்கும். பண்டி தமணி அவர்கள் இருவருக்கும் தனித் தனியே ஒரு ரூபா ஒரு சதம் கைவிஷேசம் கொடுப்பார். ஒரு கோடி பெற்ற மகிழ்ச்சி யுடன் மீண்டும் பண்டிதமணி அவர்களுக்கு வணக்கம் செலுத்திவிட்டுச் செல்வார்கள். வருடா வருடம் நடக்கும் இந் நிகழ்ச்சி இன்றும் என் மனதில் பசுமையாக இருக் கின்றது. சமயத்தில் இலக்கியத்தில் ஏற் படும் சந்தேகங்களை நீக்கும் பொருட்டும் இவர்கள் இருவரும் திருநெல்வேலிக்கு வந்து செல்வதுண்டு. குருநாதரான பண்டி தமணி அவர்களைக் கண்கண்ட தெய்வ மாக வழிபட்டு வந்தவர்கள் இவர்கள். பிரம சரிய நெறியை மேற்கொண்டு வாழ்ந்து வந்தவர்களான வேலணையூர் பண்டிதை த. வேத நாயகி அவர்களும், வேலணையூர் பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை அவர்க ளும் திரிகரண சுத்தி உடையவர்கள் என் பது ஈண்டு விசேடமாகக் குறிப்பிடத்தக்கது.

## பண்டிதையின் எழுத்து

பண்டிதை த. வேதநாயகி அவர்கள் உரையரங்குகளிற் பங்குபற்றுவது குறை வாக இருந்தபொழுதிலும் எழுத்துலகில் மிகவும் பிரகாசித்தார்.

"ஈழம் தந்த கேசரி" என்ற சிறப்புக்கு உரியவர் குரும்பசிட்டியூர் ஈழகேசரி நா.

பொன்னையா அவர்கள். பொன்னையா அவர்களது ஈழகேசரி வட்டத்தில் முக்கிய இடம் வகித்தவர் பண்டிதை த. வேதநாயகி அவர்கள். பெண்களுக்குச் சமூகத்தில் சமவாய்ப்பு இல்லையே என்ற மனச் சலிப்பும் பண்டிதை அவர்களுக்கு இருந்தது. 1938 இல் வெளிவந்த ஈழகேசரி ஆண்டு மலரில் "பெண்மக்கள் விலங்கு" என்ற தலைப்பில் அவர் எழுதிய கட்டுரை இடம் பெற்றது. அம்மையார் அவர்கள் அக் கட்டுரை மூலம் தமது கருத்தை நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். சில பகுதிகள் பின்வருமாறு:

1. நம் ஆண் மக்கள் கல்வியையும் அரசியலையும் ஏன் சமயத்தையும் தான் தம்மிடமே வைத்துக்கொண்டு நம்மைத் தாழ்த்தி வைத்திருக்கிறார்கள். அதன் மேலும் பெண்களால் இவையெல்லாம் ஆகாது என்று கூறுகிறார்கள். பிற நாட்டுப் பெண்களுக்கு ஒவ்வொரு துறையிலும் நாம் தலைகுனிந்து நிற்கிறோம். அவர்கள் தம் ஆண் மக்களுக்கு எவ்வழியிலும் பின்னிற்பதில்லை. நம் முன்னோரராய பெண்கள் அறிவிலும், தவத்திலும், அரசியலிலும் சுதந்திரத்திலும் உயர்வுடைய ஆண்-களுக்குச் சிறிதும் தாழாத - இடத்திலே இருந்தனர். நம்முடைய நிலை எது?

2. சீதன வழக்கத்தாலே பெற்றோர் தம் குழந்தைகளைப் பாவைகளாக வைத்திருந்து நகைகளைப் பூட்டிப் பொருளை அவர்கள் தலையிலே சுமத்திக் கணவன் வீட்டுக்கு அனுப்பி விடுகிறார்கள். படித்த ஆண்களே ஆடம்பரமாய் வாழவோ கடன்களைத் தீர்க்கவோ வேண்டிய பொருளோடு தமது எளிய தேவைகளை நிறைவேற்ற ஒரு மீளா அடிமையுங் கிடைக்கின்றதே என்பதால் மேலான தகுதியுள்ள பெண்களைப் புறக்கணிக்கின்றார்கள். அதனால் சீதனமுள்ள பெண்களது வாழ்வுங் கெடுகிறது.

சமுதாயத்தில் பெண்களது நிலை எவ்வாறு இருக்கின்றது என்பதை அழுத்தந் திருத்தமாக எடுத்துக் காட்டுகின்றார் செல்வி வேதநாயகி அம்மா அவர்கள்.

### குருநாதரைப் பற்றி.....

இலங்கைத் தமிழர் வரலாற்றில் இலங்கைப் பல்கலைக்கழகத்தினால் முதன் முதலாக இலக்கிய கலாநிதி என்ற கௌரவ விருது வழங்கிக் கௌரவிக்கப்பட்டவர் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களாவர். அவர்களது மணிவிழா 1959 இல் திருநெல்வேலியில் கோலாகலமாக இடம் பெற்றது. குறித்த விழாவையொட்டி வெளியிடப்பெற்ற மணி விழா மலரில் பண்டிதை அவர்கள் "உய்ய வந்தார்" என்ற தலைப்பில் எழுதி இருக்கின்றார்கள்.

> "உண்மையுள்ள சமயங்களை நீட்டினால் அவை சைவ சித்தாந்தத்திலே முடியும். உண்மைச் சமயங்களின் அந்தம் சைவ சித்தாந்தம். அது சிவமென்னும் அந்ததரம் எனப்படும். "நீதியினாவிவையெல்லாம் ஓரிடத்தே காண நின்றதியாதது சமயம்" என்று மெய்ச்சமயத்தினிலக்கணம் சைவ சித்தாந்த நூலுட் கூறப்படும் உண்மைகளெல்லாம் ஒத்து முடிவனவே" என்றெடுத்துப் பொருளொருமை காட்டுகின்ற பெருமை பண்டிதமணி அவர்களிடத்திலே பிரகாசிக்கின்றது.

என்று எடுத்தியம்புகின்றார் பண்டிதை வேதநாயகி அவர்கள்.

## நாவலர் விழா மலர்

நாமெல்லாம் உய்யும் பொருட்டு அவதரித்தவரான நாவலர் பெருமானின் பெருமையை உலகறியச் செய்தவர்கள் நாவலர் சபையினர். நல்லூர்க் கந்தசுவாமி கோயிலின் தெற்கு வீதியில் நாவலருக்குச் சொந்தமான காணியில் (அம்மையினான் வளவு) 29. 06. 1969 இல் நாவலர் சிலை பல்லாயிரக் கணக்கான மக்கள் பார்த்து மனங்குளிரப் பிரதிட்டை செய்யப்பட்டது. "வரலாறு காணாத அவ்விழாவை முன்னிட்டு நாவலர் சபை மிகவும் காத்திரமான முறையில் ஒரு மலரை வெளியீடு செய்தது. அம்மலரில் "கந்தபுராணம் காக்கும் கலாசாரம்" என்னும் பொருளில் பண்டிதை வேதநாயகி அவர்கள் அரிய கருத்துக்கள் நிறைந்த ஒரு கட்டுரையை எழுதி உள்ளார். அவரது கட்டுரை பொன் பெறும்.

கடவுளும் புண்ணிய பாவமும் சுவர்க்க நரகமும் மறு பிறப்பும் முத்தியும் உண்டென்னும் உண்மையை ஒரு போதும் மறக்கலாகாது என்னும் நாவலர் வசனம் கலாசாரத்தின் இருதணத்தில் விளங்கற்பாலது.

எவ்வளவு அதிக இரகசியமாகச் செய்யப்படும் நன்மைகளையும் அறிந்து பயன் அளிப்பார்.

"பிறர் அறிந்தென்; அறியாதிருந்தென்!" என்னும் நாவலர் வாக்கு எல்லா நன்மைக்கும் மூலவேர். எந்த இருளிலும் வெளிப்பட்டுச் சூழ்ந்து காக்கும் ஒளி. நாவலர் சீர் வாழ்க!

என்று நாவலர் பெருமானின் மனக்கிடக்கையை எடுத்துக் காட்டுகின்றார் பண்டிதை அவர்கள்.

## காரைநகர் மணிவாசகர்

காரைநகர் மணிவாசகர் விழாச் சபையினர் காலந்தோறும் வெளியீடு செய்த மலர்களில் தொடர்ந்து பல கட்டுரைகளை எழுதியுள்ளார் பண்டிதை வேதநாயகி அவர்கள். நூல் வடிவில் அக்கட்டுரைகள் வெளிவருமானால் அதைப் படித்து வருங் காலச் சந்ததியினரும் பயனடைய வாய்ப்பு உண்டாகும்.

சமய இலக்கியத்துறையில் ஆழ்ந்த புலமையுடையவரான வேலணையூர் பண்டிதை தம்பு வேதநாயகி அவர்கள் இந்தநாட்டின் கல்வி வளர்ச்சிக்குச் செயற்கருஞ் சேவையாற்றியவர். 82 ஆவது வயதில் (1994) ஆயிரம் பிறைகண்ட நிலையில் அமரத்துவம் அடைந்தார். அவரது கல்விப் பணியை உலகு ஒருபோதும் மறவாது.



## கல்விமான்கள்

# திரு. சு. நமசிவாயம்

திரு. பொ. அருணகிரிநாதன் - அதிபர்
சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி ம. ம. வி

வேலணை மேற்கில் சுப்பிரமணியம் சிதம்பரம் தம்பதிகளுக்கு மூன்றாவது பிள்ளையாக 1914 - 03 - 16 ஆம் திகதியன்று திரு. நமசிவாயம் அவர்கள் பிறந்தார். சித்தாந்த பண்டிதர், சோதிட விற்பன்னர் என பலராலும் அழைக்கப்படும் சு. ஏரம்பு உபாத்தியாயர் அவருடைய தமையனார் ஆவார்.

சு. நமசிவாயம் உபாத்தியாயர் சிறிதளவு கல்விகற்று ஆசிரியர் தராதரப் பத்திரம் (Teacher Certificate) உள்ள ஆசிரியராக தொழில் புரிந்தமைக்கான முக்கியகாரணம் அவருடைய தந்தையாரின் வழி நடத்தலும் கண்டிப்பும் என்றால் மிகையாகாது.

இவர் 1935 ஆம் ஆண்டில் இருந்து யாழ்/வேலணை சைவப்பிரகாச வித்தியா சாலையில் கல்வி கற்பித்தார். வெள்ளிக் கிழமைகளில் மாணவர்களுக்குச் சிவபுராணம் சொல்லிக்கொடுப்பது இவரது பொறுப் பேயாகும். பாடசாலையில் நிகழும் சமய நிகழ்ச்சியாயினும் வேறு எந்த நிகழ்ச்சியாயினும் முன்னின்று நடாத்தும் திறமை இவரில் காணப்பட்டது.

யா/வேலணை மத்திய மகாவித்தியா லயத்தில் பெற்றார் ஆசிரியர் சங்கத்தின் அதாவது பாடசாலை அபிவிருத்தி சபை (S. D. S.) என்ற அமைப்பு தோன்ற முதல் இருந்த அமைப்பின் தனாதிகாரியாக மிக நீண்டகாலம் கடமையாற்றி உள்ளார். தீவுப் பகுதித் தமிழர் ஆசிரியர் சங்கம், வட இலங்கைத் தமிழர் ஆசியர் சங்கம், அகில இலங்கைத் தமிழர் ஆசிரியர் சங்கம் என்பவற்றில் நிர்வாக உறுப்பினனாக இருந்து வந்துள்ளார்.

புளியங்கூடல் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தில் நீண்ட காலம் செயலாளராக இருந்து அங்குள்ள மக்களின் விவசாயத்துக்குத் தேவையான மூலப்பொருட்களைக் கட்டுப்பாட்டு விலைக்குப் பெற்றுக் கொடுத்ததோடு நீரிறைக்கும் இயந்திரம் மற்றும் கிருமி நாசினிகள், உரம் என்பவற்றையும் கட்டுப்பாட்டு விலைக்குப் பெற்றுக் கொடுக்கத் தேவையான நடவடிக்கைகளையும் எடுத்தார். அதுமட்டு மல்லாது அக்கிராமத்தில் விளைந்த உற்பத்திப் பொருட்களைச் சங்கத்தின் மூலம் கொள்வனவு செய்து விற்பனைக்கும் ஏற்ற நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

தலைகாட்டி, வேலணை மேற்கில் ஐக்கிய நாணய சங்கத்தின் தலைவராக இருந்து, அச்சங்கத்திற்கு நிரந்தர கட்டிடத்தையும் அமைப்பித்து அச்சங்க அங்கத்தவர்களுக்கு கடனுதவி மேற்கொள்ள நடவடிக்கையும் எடுத்தார்.

பொது ஸ்தாபனங்களில் இவர் செய்த சேவையைப் பொறுக்கமுடியாத ஒரு சிலர் அக்காலத்தில் இருந்த அரசியல்வாதியின் உதவியுடனும் யாழ். கல்வித் திணைக் களத்துக்கு அவரைப் பற்றி எழுதிய பொய் முறைப்பாடுகளாலும் அவருடைய ஐம்பத்து இரண்டாவது வயதில் அதாவது 1966 ஆம் ஆண்டு யாழ்/புங்குடுதீவு சுப்பிரமணிய வித்தியாலயத்திற்கு மாற்றலாகிச் சென்றார். வடஇலங்கைத் தமிழர் ஆசிரிய சங்கத் தலைவர் பொன்னுத்துரை ஆசிரியர் மற்றும் நிர்வாக உறுப்பினர்களின் போராட்டத்தினால் கல்வித்திணைக்களம் சில மாதங்களின் பின்னர் யா/வேலணை மேற்கு நடராச வித்தியா சாலைக்கு அவ் வருடமே மாற்றம் வழங்கியது. இக்கால கட்டத்தில் இவர் தனது பெண்பிள்ளை ஒன்றை இழந்தது அனைவரது வாழ்விலும் துன்பங்கள் ஒன்றாகத்தான் வரும் என்பதை உணரக் கூடியதாக உள்ளது.

வேலணை மேற்கில் உள்ள குருக்கள் மடத்தில் அங்கு வாழும் மக்களின் ஒத்துழைப்புடனும் நிதி உதவியுடனும் செவ் வந்திநாத தேசிகரின் குரு பூசையை நீண்ட காலம் இவர் நடத்தி வந்தமை குறிப்பிடத் தக்கது.

1971 - 01 - 01 அன்று அக்காலத்தில் பிரதமராக இருந்த ஸ்ரீமாவோ பண்டார நாயக்கா அவர்களின் ஆணைப்படி (55) வயது முடிந்த சகலரும் அவர்களின் விருப்பமின்றியே ஓய்வு பெற வேண்டிய துர்ப்பாக்கியத்தின் விளைவால் அவர் ஓய்வு பெற்றார்.

இவர் இரண்டு கிழமைகள் நோய்வாய்ப் பட்டிருந்து பின்னர் 1984 - 01 - 18 அதிகாலை இறைவனடி எய்தினார்.



## கல்விமான்கள்

# திரு. சிதம்பரப்பிள்ளை இராசரத்தினம் (அதிபர்)

திரு. நா. குழந்தைவேலு

இவர் வேலணை மண் ஈன்றெடுத்த பெருமை மிக்க பெரியார். புகழ்பூத்த வைத்திய கலாநிதி, சமாதான நீதிவான். ஒரு ஆசிரியராக, ஒரு அதிபராக நின்று மாணவச் செல்வங்களை வழிநடத்தியவர். அம்மன் கோயில் தலைவராகப் பரிணமித்தவர். பெயர்பெற்ற கமக்காரர். அரசியல் வாதியாக, கூட்டுறவுச் சங்கத் தலைவராக, கிராமசபைத் தலைவராக பல சமூகப்பரிமாணங்களைக் கொண்டவர்.

1916 ஆம் ஆண்டு யூலை மாதம் 6 ஆம் திகதி உயர்குலத்தோன்றல் சிதம்பரப்பிள்ளை சின்னம்மா ஆகியவர்களது ஏகபுத்திரனாகப் பிறந்தார். அன்னை தந்தையின் எல்லையற்ற பாசத்துடனும், உறவினரது செல்ல அரவணைப்புடனும் வளர்க்கப்பட்டமை பற்றி வேலணையூர் மக்கள் பேசிக்கொள்வார்கள். இவரது தந்தையார் பிரபல்யமான வைத்தியர். பல தலைமுறையாகிய இவர்களது வைத்தியம் மிகவும் பிரசித்திபெற்றது. செங்கண்மாரி வைத்தியம் இவர்களது அரிய சொத்து.

பெரியார் இராசரத்தினம் அவர்கள் தனது ஆரம்பக்கல்வியை பெரிய சட்டம்பியார் என அழைக்கப்பட்ட நா. இளையதம்பி அதிபராக இருந்த வேலணை கிழக்கு மிஷன் பாடசாலையில் ஆரம்பித்தார். பின்னர் இடைநிலை கற்றலை வட்டுகோட்டை இந்துக் கல்லூரியிலும், சன்மார்க்க மகா வித்தியாலயத்திலும் படித்து முடித்தார். ஆங்கிலத் திறமை இருந்ததால் 19ஆவது வயதில் ஆசிரியராகப் பொறுப்பேற்றார். கரம்பொன் சிவகுருநாத

வித்தியாலயத்தில் கற்பித்த இவர் குடாநாட்டுப் பாடசாலைகளிலும் ஆசிரியராக இருந்தார். நீண்டகாலம் வேலணை சரஸ்வதி வித்தியா லயத்தில் ஆசிரியராக இருந்தார். ஆசிரியத் தொழிலில் 34 வருடங்கள் பரிணமித்த இவர் இளைப்பாறும் போது ஆத்திசூடி வித்தியால யத்தின் அதிபராகக் கடமையாற்றிக் கொண்டிருந்தார்.

இவரது சமூக வாழ்க்கை 1944 ஆம் ஆண்டு வேலணை கிராமச்சங்கம் இரண்டாம் வட்டார வேட்பாளராக நின்று வெற்றிபெற்றதோடு ஆரம்பித்தது. இவரது சமூகவாழ்வு மகத்தானது. இவர் கிராமச் சங்கம், பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம், சனசமூக நிலையங்கள், இணக்குவோர்குழு, பயிர்செய்கைக் குழு, கமத்தொழில் விளைவுப் பெருக்கக்குழு, கோயில் பரிபாலன சபை ஆகியவற்றின் உறுப்பினராகத், தலைவராக இருந்து பல பொதுத்தொண்டுகளை ஆற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

1944 ஆம் ஆண்டு வேலணை கிராமச் சங்கம் வேலணை, சரவணை, நாரந்தனை, கரம்பொன் உட்பட ஒரு கிராமச்சங்கமாக இருந்தது. அக்கிராமச் சங்கத்தில் இவர் 2 ஆம் வட்டாரத்துக்கு போட்டியின்றி தெரிவு செய்யப்பட்டார். இவருடன் ஏனைய வட்டாரங்களில் இவரது ஆதரவாளர்கள் வெற்றிபெற்றார்கள். அக் கிராமச்சங்கத்தில் கிராமமக்களுக்கு இவர் சிறப்பாக சேவையாற்றினார்.

1947 - 1953 காலப்பகுதியில் நாட்டில் பல அபிவிருத்தித் திட்டங்கள் இவர் தலைமையில் மேற்கொள்ளப்பட்டன. வீதிகள் பல திறக்கப்பட்டன. நூல் நிலையங்கள் விஸ்தரிக்கப்பட்டன. சந்தைகள் வளமூட்டப்பட்டன. பலநன்னீர் கிணறுகள் வெட்டிக் கட்டப்பட்டன. 1956 ஆம் ஆண்டு வேலணைக் கிராமச்சங்கம் சரவணை, சுருவில் வீதியை எல்லையாகக் கொண்டு வேலணை, நாரந்தனை என இரு கிராமச் சபைகளாக உருவாகின. இக் காலத்தில் இவர் கிராம சங்க உறுப்பினராக இருக்கவில்லை. இருந்தும் இவரதும் வேறுபலரதும் முயற்சியினால் இக்கிராமச்சங்கம் உருவாக பாடுபட்டார். இவரது மகத்தான இப்பொதுத் தொண்டுகளாலும் திட்டங்களை செயல் வடிவாக்கியமையாலும் பின்னர் வந்த கிராம சபையினர் இவரிற்கு சமாதான நீதிவான் நியமிக்கும் தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றினர். பல பொது நிறுவனங்களும் சிபாரிசு செய்து 1978 இல் அகில இலங்கை சமாதான நீதிவானாகத் தெரிவுசெய்யப்பட்டார்.

கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து இவர் ஆற்றிய தொண்டு அளப்பெரியது. 1974 ஆம் ஆண்டு வேலணைப் பலநோக்குக் கூட்டுறவுச் சங்க உறுப்பினராக நியமனம் பெற்றார். அக்காலத்தில் சங்கத்தின் வளர்ச்சிக்கும், விருத்திக்கும் அயராது பாடுபட்டார். 28 - 12 - 1977 ஆம் ஆண்டு பலநோக்குக் கூட்டுறவுச்சங்கத் தலைவராகப் பொறுப்பேற்றார். இதனை அன்றைய கூட்டுறவு அபிவிருத்தி உதவிக் கொமிஷனர் உறுதி செய்தார், என்பது கடிதங்கள் மூலம் அறியமுடிகிறது. இவர் தலைமைப் பதவியேற்று ஏறக்குறைய 10 ஆண்டு காலமாக மகத்தான சேவை செய்தமை என்றும் வேலணை வாழ்மக்களால் மறக்க முடியாதவை.

சங்கத்திற்கான காணிகள் கொள்வனவு செய்யப்பட்டன. காரியாலயம் கட்டப்பெற்றது. எரிபொருள் நிலையங்கள் திறக்கப்பட்டன. மக்களிற்குக் கைத்தொழில் வாய்ப்பு வழங்கப் பட்டது. பீடிக் கைத்தொழில் திறமையுடன் செய்யப்பட்டது. வேலணை மத்தியகல்லூரிக் கட்டிடங்கள், மிருக வைத்தியசாலை காரியாலயம், கமத்தொழில் நிலையம், பிரசவ ஆஸ்பத்திரிக்கான வாட் வசதிகள் யாவும் ஒப்பந்தவேலை அடிப்படையில் கட்டி முடித்த பெருமைக்கு அக்காலத்தின் சங்க உத்தியோகத்தர்கள், இயக்குனர்கள், தலைவர் ஆகியவர்களது அயராத உழைப்பே காரணமாகும். இப்பெரியாரின் காலப்பகுதி சங்கத்தின் பொற்காலம் என்று கூறுவது மிகையாகாது. இவரது நிர்வாகத்தில் சங்க பொதுமுகாமையாளர் உட்பட அனைத்து உத்தியோகத்தர்கள், தொழிலாளிகள் தமது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றியமை பாராட்டிற்குரியது. இவரது அயராத உழைப்பும், மகத்தான சேவையும் 1996 ஆம் ஆண்டு சர்வதேச கூட்டுறவுத் தினவிழாவில் வேலணை பலநோக்குக் கூட்டுறவுச் சங்க முகாமை இவரிற்கு பாராட்டும், விருதையும் அளித்து கௌரவித்தது.

இவரது சமூகப் பரிமாணங்களில் இவரது விவசாயச் செயற்பாடு பிரசித்தி பெற்றது. கல்மடு நகரில் கமம்செய்து நெல் வேலணைக்கு எடுத்துவரப்பட்டு சந்தைப் படுத்தப்பட்டமை துணிச்சலான செயலாகக் கருதப்பட்டது. மிளகாய், புகையிலை, வெங் காயம் அத்துடன் உப உணவுப் பயிர்ச்செய் கைகள் மூலம் பொருளீட்டியது மட்டுமன்றி பலரிற்கு வேலை வாய்ப்புக்கள் வழங்கப் பட்டன. இவரது தோட்டங்களில் நாளாந்தம் பலர் வேலை செய்தமை ஒரு அரிய காட்சி என்றே கூறுலாம். பெருங்குளக் கரையில், செழித்து வளர்ந்த தென்னை நிழலில் மிளகாய் பிடுங்குவது தெரிவது போன்ற நிகழ்வுகளில் எவ்வித பேதமுமின்றி பலர் ஈடுபட்டு மகிழ்வுடன் வேலைசெய்து மாலை சம்பளம் பெற்று, மனநிறைவோடு செல்லும் காட்சிகள் எவராலும் என்றும் மறக்கமுடியாதவை.

இதுமட்டுமல்ல இவர் 1971 ஆம் ஆண்டு நீதி அமைச்சர் ரத்னசிறிவிக்கிரம நாயக்கா அவர்களால் 3 வருடகாலம் இணக்கச்சபை அங்கத்தவராக நியமனம் பெற்று, பல பிரச்சனைகளை தீர்த்து வைத்தவர்.

1970 ஆம் ஆண்டு பயிர்ச்செய்கைக் குழு தலைவராகவும் 1974 ஆம் ஆண்டு கமத்தொழில் விளைவுப்பெருக்கக் குழுவில் அப்போதைய காணி அமைச்சர் ஹெக்டர் கொப்பேகடுவ அவர்களால் நியமனம் செய்யப்பட்டமை குறிப்பிடத்தக்கது. கல்மடுநகர் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தில் 59, 60 ஆம் ஆண்டுகளில் காரியதரிசியாகப் பொறுப்பேற்றுள்ளார்.

1962 - 64 காலப்பகுதியில் தீவுப்பகுதி காரியாதிகாரி பிரிவில் யாழ்மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசத்தில் தனாதிகாரியாகவும் பொறுப்பேற்று பல விழாக்கள், விளையாட்டுப் போட்டிகள், படக்காட்சிகள் ஆகியவற்றை நடத்தியதுடன் தேசிய விளையாட்டு விழாவிலும் தீவுப்பகுதி மக்களின் பங்களிப்பை உறுதிசெய்தார்.

இவரது சமய ஈடுபாடு மிகவும்

உறுதியானது. வேலணை முத்துமாரி அம்மன் கோவிலின் பரிபாலன சபையின் தலைவராக இருந்து பல அரியதொண்டுகள் ஆற்றியுள்ளமை 64 - 69 வரையான ஆண்டறிக்கைகளிலிருந்து அறியமுடிகிறது.

அக்காலத்தில் கோயிலில் பல அபிவிருத்தித் திட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்டன. மதில் சுவர் கட்டப்பட்டது. பாலஸ்தான நிகழ்வு, கும்பாபிஷேகம் நடந்தது, தேர்த்திருப்பணி ஆரம்பிக்கப்பட்டது. ஆலயப் பிரவேசம் நடத்தப்பட்டது. இவ்வாறான செயற் பாடுகள் அனைத்தையும் வருடா வருடம் வெளிவரும் ஆண்டறிக்கைகள் சுட்டிக் காட்டுகின்றன.

இவரது ஆங்கில அறிவும் சிறந்தது. ஆங்கில ஆசிரியராகவும் இருந்துள்ளார். ஆங்கில அறிவு இவரது சாதனைகளிற்கு உரமூட்டின என்று குறிப்பிடுவது பொருத் தமானது. அவர் கவிதை, கட்டுரைகள் எழுதுவதில் வல்லவர். பெயர்பெற்ற எழுத்தாளனாக "இறைமணி" என்னும் புனை பெயரில் பல ஆக்கங்களை அளித்துள்ளார். இவர் எமது கிராமத்து வாழ்வு முறையை திறம்பட விளக்கும் தனது "வாழ்வுச்சுவடு" என்னும் நூலை எழுதி வெளியிட்டுள்ளார். கந்தன்மேல் "நல்லூரான் பற்றால் மலர்ந்த பூக்கள்" என 40ற்கு மேற்பட்ட கவிதைகள் எழுதி வெளியிட்டுள்ளார். அம்மனின் மேல் பல பாக்கள் இயற்றியுள்ளார். இடப்பெயர்வின் பின் அம்மன் தேர்ப் பவனிபற்றிய பாடல்கள் வேலணை மக்களின் உள்ளங்களைத் தொட்டு கண்களைக் குளமாக்கும் ஆற்றலுடையவை.

இவர் ஒரு சிறந்த ஆயுள்வேத வைத்தியர். செங்கண்மாரி போன்ற பலநோய்களைக் குணப்படுத்துவதில் வல்லவர் எத்தனையோ நோயாளிகள் இவர் நீண்டகாலம் வாழவேண்டும் என்று வெளிப்படையாகவே வாழ்த்துகிறார்கள். தள்ளாத வயதிலும் தன்னை நாடிவரும் நோயாளிகளுக்குத் தன் சிரமம் பாராது சிகிச்சை அளிக்கின்றார். இவரது இந்தப் பரம்பரை வைத்தியம் தொடர வேண்டுமென்பது குடாநாட்டு மக்களின் ஆதங்கம். அதனை தனது பேரமக்கள் முன்னெடுப்பார்கள் என்பது இவரது அசையாத நம்பிக்கை.

இத்தகு நல்வாழ்வு வாழ்ந்த பெரியாரின் வெற்றியின் பின்னணியில் நின்று உழைத்தவர் இவரது மனைவியார் ருக்மணி ஆசிரியர். "எந்த ஒரு ஆணின் வெற்றிக்குப் பின்னால் ஒரு பெண் உள்ளாள்" என்பது இவரைப் பொறுத்தவரை உண்மை. கணவனுக்கேற்ற மனையாளாக, நல்ல தாயாக, நல்ல ஆசிரியராக, அதிபராக ஊருக்கு உபதேசியாக, கொடுப்பதில் சிறந்தவளாக இருந்தார். அடுத்தவர் பசியோடு இருக்க நாம் வயிறாரச் சாப்பிடுவது தவறு என்ற எண்ணக் கருவை தமது பிள்ளைகட்கு ஊட்டியவர். இவரது இப்பண்புகளே பெரியார் இராசரெத்தினம் அவர்களை சமூக வாழ்வில் சுயமாக ஈடுபட வாய்ப்பளித்தது.

**"தக்கார் தகவிலார் என்பது அவரது எச்சத்தால் காணப்படும்"**

என்னும் வள்ளுவர் வார்த்தைகள் இவர் வாழ்வில் நிஜமாகி உள்ளது. இவர் பிள்ளைகளின் உயர்ச்சி கண்டு மன மகிழ்ந்தவர்.

பேராசிரியராக, கல்விப்பணிப்பூளராக, விரிவுரையாளராக, வங்கி உத்தியோகத்தராக ஆசிரிய ஆலோசகராக, அதிபராக இவரது பிள்ளைகள் நாட்டிற்குத் தொண்டாற்றிக் கொண்டிருப்பது இவரது மேன்மைக்கு எடுத்துக்காட்டு.

இவரது பேரப்பிள்ளைகள், டாக்டர்களாக, பொறியியலாளர்களாக, விரிவுரையாளர்களாக, சட்டவல்லுனர்களாக வெளிநாட்டிலும் எமது நாட்டிலும் இனிதே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். பூட்டப்பிள்ளைகளுக்கும் இனிய "தாத்தாவாக" பரிணமித்துக் கொண்டிருக்கும் இவர் இன்னும் பலகாலம் மன நிறைவோடு சுகமாக வாழ்ந்து ஒரு எடுத்துக் காட்டாக மிளிரவேண்டும்.

வேலணை மண்ணிற்குப் பெருமை தேடித்தந்த இப்பெரியார் தன் மண்ணை நேசித்தவர். பிறந்தநாடு பழைய பொலிவுபெற வேண்டும் என்பது இவரது கனவு. இப் பெரியாரது கனவு நனவாகவேண்டும். முத்துமாரி அம்மனின் மணியோசை எல்லா வேலணை மக்களின் காதுகளில் ஒலிக்க வேண்டும் என்ற பிரார்த்தனை இவர் காலத்தினுள் நிறைவு பெறவேண்டும்.





## கல்விமான்கள்

# அமரர். சு. சீவரெத்தினம் உபாத்தியாயர்

திருமதி. புனிதவதி ஆறுமுகம் (ஆசிரியை)

செந்தமிழும் சிவநெறியும் தழைத்தோங்கிய வேலணையூரில் தாவாடிக் குறிச்சியில் புகழ் பூத்த குடும்பம் சுந்தரத்தார் குடும்பம். ஊருக்குபகாரியாக கடைக்காரச் சுந்தரத் தார் வாழ்ந்தார். அவர் வாழ்க்கைத் துணை வியாக தாவாடி ஆச்சி என்றும் பரிகாரியார் மகள் என்றும் அன்புடன் அழைக்கப்பட்ட சிவக்கொழுந்து அம்மையார் இனிதே இல் லறம் நடாத்தி வந்தார். அவர்கள் பெற்ற மக்கள் ஐவர். அவர்களுள் இளையவராக ஆயிரத்துத் தொளாயிரத்துப் பதினெட்டாம் ஆண்டு புரட்டாதித் திங்கள் ஐந்தாம் நாள் (5.9.1918) தோன்றியவர் தான் சீவரெத்தின உபாத்தியாயர்.

சிறுவனாக இருந்தபொழுதே சிவபக்தி மிக்கவராகவும் ஆசாரசீலராகவும் அன்புள் ளம் உடையவராகவும் பிறவிச் சைவரா கவும் தொண்டு செய்யும் பண்பினராகவும் திகழ்ந்தார். ஆசிரியராகப் பணியேற்று முதன் முதலில் புங்குடுதீவு கணேஷ வித்தியாசாலையில் தன் பணியினைத் தொடங்கினார். தொடர்ந்து நாரந்தனை, சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலை யெனப் பணியாற்றி ஈற்றிற் தன் சொந்த ஊராகிய வேலணையில் சரஸ்வதி வித்தியா சாலையில் ஆசிரியராகவும் அதிபராகவும் கடமையாற்றினார். எங்கெங்கு பணியாற் றினாரோ அங்கெல்லாம் தன் வசீகரத் தோற்றத்தாலும் வளம்மிக்க சொல் ஆற்ற லாலும் அன்புள்ளத்தாலும் அனைவரை யும் கவர்ந்தீர்க்கும் ஆசிரியப் பெருந்தகை யரானார்.

தன் மண்ணையும் மக்களையும் உயிருக் குயிராக நேசித்தஆசிரியர் அவர்கள் ஆசிரி யத் தொழிலை ஊதியம் பெறும் வேலை யென எண்ணாது மக்களுக்குச் செய்யும்

மகத்தான தொண்டாகவே கருதினார். பண்டைக்கால குருகுல முறையிற் கல்வி கற்பித்தார். அவர் இல்லத்தில் இலவசப் பாடசாலை இராப்பொழுதில் நடக்கும். விரும்பிய மாணவர் யாவரும் வந்து கல்வி கற்கலாம். ஆசிரியரின் தொண்டு மனப் பான்மையினைத் துலாம்பரப்படுத்தியது அவரது இலவசப் பாடசாலை.

இன்று அவரால் ஆரம்பக் கல்வியறி வூட்டப்பட்ட எண்ணற்ற மாணவமணிகள் உலகின் பலபாகங்களிலும் தன்னிகரற்ற கல்விமான்களாக, தலை சிறந்த வைத்திய நிபுணர்களாக பொறியியலாளர்களாகத் திகழ்கின்றனர். எத்தனை உயர் நிலையில் இருப்பினும் அவர்கள் சீவரெத்தின உபாத் தியாயரை உளமார-உயர்வாக- உன்னத மாமனிதராக மதிக்கும் பண்பினராகவே வாழ்கின்றனர். இதுவே அவரது தன்னலங் கருதாத ஆசிரியப் பணியின் மகத்துவ மாகும்.

ஆசிரியர் பணியின் உயர் நிலையிவ் வாறிருக்க சமூகத் தொண்டனாகவும் ஊருக் குழைத்த உத்தமனாகவும் திகழ்ந்தார். வேலணை கிராமசபை உறுப்பினராகவும் வேலணை பலநோக்குக் கூட்டுறவுச் சங்க நெறியாளருள் ஒருவராகவும் பணியாற்றி னார். வேலணை பெருங்குளத்து முத்து மாரியம்மன் கோவில் அறங்காவலருள் ஒரு வராகவும் வேலணை வங்களாவடி முரு கன் ஆலயத்தைக் கட்டி முடித்து குட முழுக்காட்டியவர்களுள் முன்னின்றுழைத்த வர்களில் முதல்வராகவும் திகழ்ந்தார். (இன்று முருகனாலயமாகத் திகழும் இவ் வாலயம் முன்னர் பட்டவேம்பு வைரவர் ஆலயமாகவும் பற்பல அற்புதங்கள் நிகழ்த் திய வைரவர் கோவிலாகவும் இருந்தது. பட்டவேம்பு தான் வைரவரின் திருக் கோவில். இன்றும் முருகன் கோவிலின் கிழக்குப் புறத்தில் வைரவரின் சூலங்கள் முன்பாகப் பொங்கல் இட்டு வழிபாடு செய் கின்றனர். வைரவர் தனக்கென ஆலயம் அமைக்க விடவில்லையென முன்னோர் கூறினர்.

தினந்தோறும் முருகன் ஆலயம் சென்று வழிபாடாற்றுவது ஆசிரியரின் வழக்கம்.

அரசியலில் ஆர்வம் மிக்கவராக விளங் கிய ஆசிரியர் அவர்கள் இலங்கை பாரா ளுமன்றத் தேர்தல்களில் தன் பங்கினை ஆற்றத் தவறவில்லை. அவர் காலத்திற் களமிறங்கிய தமிழ் அரசுக் கட்சி வேட் பாளர்களாகிய வீ. நவரத்தினம், வீ.ஏ. கந்தையா, பண்டிதர் கா. பொ. இரத்தினம் ஆகியவர்களுடன் தீவுப் பகுதிகள் அனைத் துக்கும் சென்று தேர்தற் பிரசாரங்களில் ஈடுபட்டார். அவர்களது வெற்றிக்கு அல்லும் பகலும் அயராது உழைத்தவர்களில் ஆசிரிய ரும் ஒருவர். தாய்மண் பற்றும், தமிழ் இனப் பற்றும் மிக்கவராகிய ஆசிரியர் வேலணைக் கிராம முன்னேற்றத்துக்காகத் தன்னாலான பங்கினை ஆற்றத் தவறவில்லை.

ஈழத் தமிழர் வாழ்வில் இடி விழுந்தது போன்ற கொடிய யுத்தம் நடந்தபொழுது மக்கள் நிலைகுலைந்து இடம்பெயர்ந்து உயிர் காக்க ஓடித் திரிந்த காலத்தில் அல் லல் உற்று ஆதரவு தேடி வந்தோரை வரவேற்று உண்டியும் உறையுளும் நல்கி ஆதரித்தார். தான் ஓடும்போது அவர்க ளையும் கூடவே அழைத்துச் சென்றார்.

ஈற்றில் தன் தாய் நாட்டைவிட்டு, தான் கட்டிக்காத்தமாடு, மனை, சுற்றம், சூழல் உற்றார் உறவினர்களையும் துறந்து கட்டிய மனையாளையும் தலைநகர் கொழும்பில் காலன் பிடியிற் கைவிட்டு கனடாவுக்குக் கண்ணீரும் கம்பலையுமாகப் பயணித்தார். அங்கு முன்னரே சென்றிருந்த மக்களுடன்

அவரது மறுவாழ்வு தொடங்கியது. எங்கு சென்றாலும் அவரது ஓய்வறியா உள்ளமும் உள்ளத்துள் ஒளிவிடும் இறைபணியும் சமூகநலக் கண்ணோட்டமும் சுடர் விட்டொ ளிரத் தொடங்கின.

கனடாவில் வாழும் ஈழத்தமிழ் மக்கள் அனைவரையும் ஒன்று திரட்டி ஒருவரை ஒருவர் புரிந்து வாழ்வதற்காகத் தான் வாழ்ந்து வந்த "வடகிப்ளிங்" என்ற இடத் தில் இலங்கைத் தமிழர் முதியோர் சங்கம் என்ற ஒரு சங்கத்தை உருவாக்குவதற்குக் காரணகர்த்தாவானார். அச்சங்கத்தின் பொருளாளராகப் பல ஆண்டுகள் பொறுப் பேற்று அரும்பணி ஆற்றினார். அங்கு நடக்கும் கலைவிழா, கலைமகள் விழா, ஆண்டு விழா, சுற்றுலா யாவற்றிலும் சுறு சுறுப்பாக இயங்கி திறம்பட நடாத்தி வந்தார். தாயகத்தில் எவ்விதம் ஜனரஞ் சகமாக விளங்கினாரோ அவ்வண்ணமே கனடாவிலும் தன்னைச் சுற்றி ஒரு பெருங் கூட்டம் புடைசூழ மக்கள் மனம் கவர் மனித ராக வாழ்ந்தார். சுற்றந்தழுவி உற்றார் உறவினரைப் பேணி இன்னுரையாடி தன்னினம் காத்து சமரச வாழ்வு வாழ்ந்து வந்த ஒரு உதாரண புருஷராக விளங் கினார்.

சைவநெறி தழைத்தோங்கக் கனடா வில் இந்து கலாசார மன்றத்தின் வெளியீ டான "சைவத் திருமுறைத் தோத்திரத் திரட் டையும் திருக்கேதீஸ்வரத்தில் திரு வாசக மடத்தை நிறுவிய சரவணமுத்து சுவாமிகள் நினைவாக "திருவாசகத்தேன்" என்ற நூலை யும் நண்பர். அ.க. கண்ணையா ஆசிரியருடன் இணைந்து வெளியிட்டார். எங்கு சென்றாலும் இறைவனை உளத்திருத்தி, திருமுறை பாரா யணங்களிற் கலந்து பாடல் நெறி பிறளாது பண்ணிசை பாடிப் பரவசமாவார். பிரம குமாரிகள் ராஜயோக நிலையத்தில் உறுப்பினராகி தியானத்திலும் தன்னை ஆட்படுத்திக்கொண்டார்.

ஆசிரியர் அவர்கள் அவுஸ்திரேலியா, சுவிற்சர்லாந்து இங்கிலாந்து ஆகிய நாடு களில் வாழும் தனது மக்கள் மருமக்கள் பேரப்பிள்ளைகளையும் சென்று பார்த்து மகிழ்ந்ததுடன் அந்நாடுகளில் வாழும் உற் றார் உறவினர்களையும் சந்தித்து உறவாடி நலன் விசாரித்து நல்லுறவு பேணினார். கடைசியாக 2003ஆம் ஆண்டும் சுவிற் சர்லாந்து, இங்கிலாந்து நாடுகளில் வாழும் மக்களைக் கண்டு மனமகிழ்வுடன் கனடா சென்றார். கனடாவில் "வேலணை வர லாறு" என்ற நூல் எழுதுவதற்கான விபரங் களை வெகு மும்முரமாகத் திரட்டிவரும் காலையில் காலங்கருதியிருந்தகாலன் கடுகி வந்து அவரது இன்னுயிரைக் கவர்ந்து விட்டான். அகவை எண்பத்தைந்து ஆனா லும் அயராது உழைப்பதில் ஐம்பது தாண்டாத வராகக் காணப்பட்ட கருமயோகி கைலை நாடிக் களிப்புடன் தன் நிறைவாழ்வினைப் பூர்த்தி செய்தார்.

தாய்மண் பற்றாளனாக, சமூகத் தொண்ட னாக, நானிலம் போற்றும் நல்லாசானாக நடுநிலைபெயரா நல்லதிபராக, சைவநெறி பிறளாத சைவசமயியாக, உற்றார் உற வினரை உளமார நேசித்த உத்தமனாக, வேலணையூரில் விரல்விட்டு எண்ணக் கூடிய விழுமியம் மிக்கவருள் ஒருவராக வாழ்வாங்கு வாழ்ந்து வானுறை தெய்வ மாகிவிட்டார் சீவரெத்தின உபாத்தியாயர்.

ஆசிரியர் அவர்களை கனடாவாழ் வேலணை மத்திய மகா வித்தியாலய பழைய மாணவர் சங்கத்தினர் "தீவக ரத்தினம்" என்ற மகுடம் சூட்டிக் கௌர வித்தனர். அவர்களால் அளிக்கப்பட்ட இம்மகுடம் அமரர் சீவரெத்தின உபாத் தியாயருக்கு மிகமிகப் பொருத்தமானதே.



## கல்விமான்கள்

# பண்டிதர். கந்தையா கணபதிப்பிள்ளை
## (வேலணை உபாத்தியாயர்)

திரு. க. விஜயநாதன் - அவுஸ்திரேலியா

*"கற்றவர்கள் உண்ணுங் கனியே போற்றி" என்று திருவாரூர் இறைவனைத் திருத் தாண்டகத்தில் போற்றுகின்றார் அப்பர் சுவாமிகள்.*

*"வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்"*

*கற்றதனால் ஆய பயன் என்? என்பர் திருவள்ளுவர்.*

*கல்வியின் உயரிய பயன் இறை உணர்வு கைவரப் பெறுதல் என்பதுவும், கற்றுயர்ந் தார் என்போர் இறைவனைப் பற்றி நிற்போர் என்பதுவும் இவற்றினாற் பெறப்படும்.*

*அத்தகைய கற்றுணர்ந்த சான்றோர் கள் பலரைக் கண்டது யாழ்ப்பாணம். அதன் வடபால் சப்ததீவுகளுக்கும் நடுநாயகமாக துலங்கும் வேலணையூரில், சைவ வேளாண் குடியில் 1918ஆம் ஆண்டு பங்குனித் திங்களில், ஒரு சின்னக் குழந்தை முன்னைத் தவத்தின் பயனாய் தோற்றம் பெற்றது. கமம் விளைத்து சிவம் தழைக்க வாழ்ந்த மக்களிடையே கதிரேசர் கந்தையா தையல் முத்து தம்பதியினருக்கு ஊரணி நீரென விளங்கப் பிறந்த அந்தப் பிள்ளை "கணபதிப்பிள்ளை" என நாமம் பூண்டது.*

*ஞானவிநாயகனின் பெயரினைப் பூண்ட பேற்றினாலோ என்னவோ கற்பதிலும் கற்ற வழி நிற்பதிலும் அளவிலா ஆர்வம் கொண்ட அச்சிறுவன் வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் ஆரம்பக் கல்வியினைப் பெற்று வளர்ந்தான். கல்வியிடத்து உண்ணத் தெவிட்டாத அவா் மெற்றிகுலேசன் பரீட்சையில் தேறி அறிவுக் கண்ணினைத் திறக்கின்ற ஆசிரியப் பணியினை வேலணை சரஸ்வதி வித்தியாலயத்தில் ஆரம்பிக்கலானார்.*

நாரந்தனையில் சைவ வேளாண் குடியில் பிறந்த செல்லப்பா பார்வதிப் பிள்ளை தம்பதிகளின் சிரேஷ்ட புத்திரியான தங்கம்மாவை 1944 ஆம் ஆண்டில் தமது வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று இல்ல றம் நல்லறமாக நடாத்தி வந்தார்.

தமிழ் மேல் கொண்ட பற்றினால் விஷேட தமிழ் ஆசிரியர் பயிற்சியைப் பெறுவதற்கு 1946 - 1947 ஆம் ஆண்டுகளில் பலாலி ஆசிரியர் கலாசாலையில் சேர்ந்து விசேட சித்தி பெற்றதும் புங்குடுதீவு, சுப்பிரமணிய வித்தியாசாலையிலும், பின்னர் சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலையிலும் கல்வி புகட்டினார்.

வழங்க வழங்க மிகுக்கின்ற செல்வம் அறிவுச் செல்வமே என ஓர்ந்து, அதனைத் தேடித் தேடி வழங்குவதையே வாழ்வின் பயனாகக் கண்டார். அதன் பேறாக 1952 ஆம் ஆண்டு பண்டிதர் பரீட்சையிலும் தேறி தனது பணிக்கு வளம் சேர்த்துக் கொண்டதுடன், திருநெல்வேலி, முத்துத் தம்பி வித்தியாலயத்தில் மேல்வகுப்பு மாண வர்களுக்குத் தமிழ் இலக்கண இலக்கியங் களைத் தொடர்ந்து ஏழு வருடங்கள் கற் பித்து வந்தார். கற்றலிற் சுகமும் கற்பிப் பதில் இன்பமும் காண்கின்ற ஆசானாக விளங்கிய தன்மையினால் "நான் பண்டிதர் கணபதிப்பிள்ளையின் மாணவன்" என்று பெருமை பேசுகின்ற ஒரு சமூகத்தை தமது எச்சமாகப் பெற்றார். அன்னாரிடம் தமிழ் கற்ற மாணவர்கள் இன்றும் அவரது பேச்சு வன்மையையும் கல்வி கற்பிக்கும் ஆற்ற லையும் வியந்து போற்றி வருகின்றனர்.

கற்றலில் கண்ட சுகத்தை மேலும் சுவைக்க 1960 ஆம் ஆண்டில் கலை முதற் தேர்வுப் பரீட்சையில் தோற்றி சித்திபெற் றதுடன், 1964 ஆம் ஆண்டில் அதிபர் சேவை போட்டிப் பரீட்சையிலும் தோற்றி சித்தியடைந்தார். இதைத் தொடர்ந்து கரம்பன் சண்முகநாதன் மகாவித்தியா லயத்தில் உப அதிபராக நியமிக்கப்பட்டார். கல்விப்பணியின் இன்னொரு அம்சமான, பாடசாலைகளில் அபிவிருத்தியிலும் ஆர்வத் தோடு ஈடுபட்டு, பல பாடசாலை மாணவர் களும் அவைசார்ந்த சமூகங்களும் வியத்தகு முன்னேற்றம் காண உழைத்தார். தனது புகுந்த கிராமத்திற்கு தன்னாலான பணி யைச் செய்யும் பொருட்டு 1965 ஆம் ஆண்டு முதல் நாரந்தனை கணேசா கனிஷ்ட வித்தியாலயத்திற்கு இடமாற்றம் பெற்று அதிபராகக் கடமையேற்றார்.

ஒன்பது வருடங்களுக்கு மேலாக, நாரந் தனை கணேசா கனிஷ்ட வித்தியாலயத்தின் அதிபராகவும், சமூகசேவகராகவும் அவர் ஆற்றிய பல பணிகளின் விளைவே அப் பகுதி மக்களின் சமூக பொருளாதார முன் னேற்றமாக உருப்பெற்றது என்றால் அது மிகையாகாது. பாதி ஓலையினாலும் பாதி ஓட்டினாலும் வேயப்பட்டிருந்த கட்டிடத்தில் இயங்கி வந்த பாடசாலையை மேலும் காணி களைப் பெற்று அறைகளுடன் கூடிய இரண்டு கட்டிடங்களாக விசாலித்து மாண வர்கள் தொகையையும் ஆசிரியர் தொகை யையும் இரட்டிப்புச் செய்த பெருமை பண்டி தர் கணபதிப்பிள்ளை அவர்களையே சாரும். அரிவரி முதல் ஐந்தாம் வகுப்பு வரை இருந்த வகுப்புக்களை தான் ஓய்வு பெறும்போது கல்விப் பொதுத் தராதர சாதாரண வகுப்புவரை பாடசாலையைத் தரம் உயர்த்தி, மாணவர்கள் உயர்கல் வியை உள்ளூரிலேயே பெற்றிட வழிய மைத்தார்.

நாரந்தனைப் பலநோக்குக் கூட்டுறவுச்

சங்கத்தின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியதோடு, அது நிரந்தரக் காணி, கட்டிடம், சந்தைப்படுத்தும் நிலையம் என்ற வளங்களைப் பெறவும் காரணகர்த்தாகவாக விளங்கினார். வறுமை ஒழிப்புப் பணியின் மற்றொரு அம்சமாக நாரந்தனைக் கிராமத்திலே ஒரு நெசவு நிலையம் அமைவதற்குத் தூண்டுகோலாக இருந்து, பெண்களுக்கான வேலை வாய்ப்பு, சுயசம்பாத்தியம், தன்னம்பிக்கை என்பவற்றின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினார்.

வேலணை மத்திய கல்லூரி தீவுப் பகுதியின் முதற்தர கல்லூரியாக மிளிர வேண்டும் என்ற அவாவினால் உந்தப்பட்டு ஆக்கபூர்வமான பல ஆலோசனைகளைப் பெற்றோர் ஆசிரியர் சங்கத்தினூடாக வழங்கி அதன் மேம்பாட்டிற்காக உழைத்தார். ஆசிரிய சமூகத்திற்கு இழைக்கப்படும் அநீதிகளைக் கண்டித்து இலங்கைத் தமிழர் ஆசிரியர் சங்கத்தின் செயற்குழு உறுப்பினராகச் சேர்ந்து போராட்டங்கள் நடாத்தி வெற்றியும் கண்டார்.

எந்தப் பணியையும் அதன் பயன்பாடு கருதி முன்னின்று உழைத்து வெற்றி காண்பதில் பெருமிதமும் - அத்தகைய பணிகளிலேயே நிறைவும் கண்டு, வாழ்ந்த பொழுதெலாம் பயனுற வாழ்ந்தார். அவர் கடமை உணர்ச்சியும், செயற்றிறனும், நீதி நியாயத்தைப் போற்றும் திறம்பாடும் வாய்ந்த ஆசிரியர்.

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளும்" பண்போடு வாழ்ந்தபயனோ யாதோ, கல்லுடைப்போர் கல் தோண்டும்போது, நாரந்தனை வடக்கில் அதிசயமாய் வந்துதித்த தான்தோன்றி மனோன்மணி அம்மன் திருப்பணியிலும் அவர் மனம் செலவதாயிற்று. தொழில் நிமித்தம் திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயத்தில் கற்பிக்கும் போது மூன்று வருடங்கள் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் குடும்பத்துடன் இருந்தபோதும், வாரஇறுதி நாட்களில் தனது விவசாயத்தைப் பார்வையிட வருவதுடன், தான்தோன்றி அம்மனுக்கு ஓர் ஆலயம் அமைத்து கும்பாபிஷேகம் நிறைவுறச் செய்வதற்கு தனது பாடசாலை தவிர்ந்த ஓய்வு நேரத்தை முழு மனதோடு ஈடுபடுத்தினார். 1958 ஆம் ஆண்டு தனது நாற்பதாவது வயதிலே தான்தோன்றி மனோன்மணி அம்மனுக்கு கும்பாபிஷேகத்தை முன்னின்று நடாத்தும் பெரும் பேற்றினையும் பெற்றார். "வஞ்சமற்ற தொழில் புரிந்துண்டு வாழும் மாந்தர் குல தெய்வமாவாள்" என்று சரஸ்வதியைப் பாடினான் பாரதி. அது போல மனோன்மணி அம்மன் பண்டிதருக்குக் குலதெய்வமாக விளங்கிய பெருங்கருணை என்னென்பது!

ஆசிரியத் தொழிலும், விவசாயமும், சமூகத் தொண்டும் செய்துகொண்டு தனது இல்லறத்தையும் நல்லறமாக ஏழு ஆண் பிள்ளைகளையும் மூன்று பெண் பிள்ளைகளையும் பெற்று இனிதே நடாத்திவந்தார். அன்னாரது மக்களும் மருமக்களும் பொறியிலாளர்களாகவும், கணக்காளர்களாகவும், விரிவுரையாளர்களாகவும் தொழில் புரிவது அவர் ஆற்றிய தொண்டின் பயனே.

வையந் தழைக்க வாழ்ந்திட எண்ணி வாழ்ந்த அந்தவாழ்வு நிறைந்திட வேளை வந்ததோ! விதி என்ன எண்ணின்றோ!

1974ஆம் ஆண்டில் இலங்கை அரசு அமுலாக்கிய 55 வயதின் மேல் சேவை நீடிப்பு இரத்து என்ற இளைப்பாற்று வயதுச் சட்டத்தின் கீழ், அவரது ஐம்பத்தி

வேலணை சாட்டி
வெள்ளைக் கடற்கரையும் - அந்தியேட்டி மடமும்





வேலணை காளவாய்த்துறை
செட்டிபுலம் மீன்பிடித் துறைமுகம்

ஆறாவது வயதில் கல்விச் சேவையில் இருந்து சட்டபூர்வமாக ஓய்வுபெற்றார்.

தனது ஓய்வு காலத்தை விவசாயம் செய்வதிலும், சமூகத் தொண்டு செய்வதிலும் ஈடுபடுத்த விரும்பியவரை, ஒரு வருடத்திற்கு மேல் இச்சேவையைச் செய்வதற்கு காலன் விடவில்லை. பகல்நேரம் கமத்தைப் பார்த்துவிட்டு இரவு மனைவி மக்களுடன் ஒன்றாய்க்கூடி உணவருந்தி விட்டு நித்திரைக்குச் சென்றவருக்கு மாரடைப்பு என்பது ஒரு சாட்டாக வந்ததோ அன்றோ? வேலணை, நாரந்தனை, சரவணை மற்றும் தீவுப்பகுதி மக்களால் "வேலணை வாத்தியார்" என அன்புடன் அழைக்கப்பட்ட பண்டிதர் கணபதிப் பிள்ளை அவர்கள் 1975 ஆம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் 14ஆம் நாள் தனது ஐம்பத்தியேழாவது வயதில் அமரத்துவம் எய்தினார். வெள்ளை வேட்டி, முழுநீள வெள்ளை அங்கவஸ்திரம், பரமா சால்வை, திருநீற்றுப் பூச்சு இவையே அன்னாரை எம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும் காட்சியாகும்.

*வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த அவர் நாமம் தழைக்க!*





# கல்விமான்கள்

## திரு . இளையதம்பி நாகராசா

பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
யாழ். பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

திரு இளையதம்பி நாகராசா அவர்கள் 5.3.1918 இல், திரு வேலாயுதர் இளையதம்பிக்கும் வேலுப்பிள்ளை பாக்கியலட்சுமிக்கும் மூத்த மகனாகப் பிறந்தார். இவர் தனது ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையிலும் இடைநிலைக் கல்வியை யாழ்ப்பாணம் சன்மார்க்க வித்தியாசாலையிலும் பெற்றார். இவர் தனது பதினெட்டு வயதில் ஆசிரியத் தராதரப் பத்திரப் பரீட்சையில் சித்தியடைந்து மூதூர் பாடசாலையொன்றில் நியமனம் பெற்றார். அதன் பின்பு வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் ஆசிரியராக நியமனம் பெற்றார். 1946 இல் பலாலி ஆசிரிய கலாசாலையில் சேர்ந்து 1948 இல் பயிற்றப்பட்ட ஆசிரியராக வெளியேறினார்.

அமரர் அவர்கள் 37 வருடங்களுக்கு மேல் ஆசிரியராகப் பணிபுரிந்தார். ஆரம்பத்தில் உதவி ஆசிரியராகவும், பின்னர் அதிபராகவும் கடமையாற்றி தனது 55 ஆவது வயதிலேயே அன்றைய அரச விதிகளுக்கு ஏற்ப இளைப்பாறினார். இவர், வேலணை அமெரிக்கன் மிஷன், பிராம்பத்தை அமெரிக்கன் மிஷன், வேலணை மத்திய மகாவித்தியாலயம் ஆகிய பாடசாலைகளில் உதவி ஆசிரியராகவும், வேலணை ஆத்திசூடி வித்தியாலயத்தில் அதிபராகவும் இருந்துள்ளார்.

சிறந்த அறிவு, குரல்வளம், வட்டு உறுப்பான கையெழுத்து, கவர்ந்து ஈர்க்கக்கூடிய கதை சொல்லுந் திறன், பிள்ளைகளையும் அவர்களது பெற்றோர்களையும் பெயர் சொல்லி அழைக்கும் ஆற்றல், பாடசாலைச் சமூகம் பற்றிய பின்புல அறிவு ஆகியன இவரை சிறந்த ஆசிரியராக விளங்க வைத்தன. மாணவர்களுக்கு ஆரம்பக் கல்வியை

கொடுக்கும் திறன் மிக்கவராக இருந் துள்ளார்.

அன்றைய தீவுப்பகுதி ஆசிரியர்களைப் போல் இவரும் தனியே ஆசிரியப் பணியு டன் நின்று விடாது சிறந்த விவசாயியா கவும் விளங்கினார். தோட்ட வேலைகளைச் சிறப்பாக செய்யும் ஆற்றலைப் பெற்றிருந் தார். புகையிலை, நெற்செய்கைகளில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்ததுடன் பனைசார் வளங் களை நன்கு விருத்தி செய்யும் ஆற்றலைப் பெற்றிருந்தார். இவர் வீடுவளவு, தென்னம் தோட்டம் நெல்வயல்கள், புகையிலைத் தோட்டங்கள், தரவை நிலம் என பல்வகை நிலப்பயன்பாட்டு நிலபுலங்களை தனது முயற்சியால் பெற்றிருந்தார். மெய்யாதனங் களை வாங்குவதிலும் விருத்தி செய்வதிலும் நுண்ணறிவும் தூர நோக்கும் கொண்டவ ராகத் திகழ்ந்தார்.

இவர் தனது வாழ்க்கையில் சமூகப் பணியை மறக்கவில்லை. கிராம மக்களின் முன்னேற்ற செயற்பாடுகளிலும், உற்றார் உறவினர் நலன் பேணல்களில் முன்னின்று உழைத்தார். வேலணை கிராமச் சபையின் முதலாம் வட்டார அங்கத்தவராக இருந்து கிராம உட்கட்டுமான பணிகள், சமுதாய அபிவிருத்தி செயற்பாடுகள் பலவற்றை முன்னெடுத்தார். உற்றார் உறவினர் கிரா மத்து மக்களின் இன்ப, துன்ப நிகழ்வுகளில் தவறாது பங்குகொண்டும் நிகழ்வுகளை சபையின் முன்நின்று ஒழுங்காக செய்து முடிக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தார். தமிழ், இந்து, கிராமியப் பண்பாடுகள், சம்பிர தாயங்கள் மற்றும் சமய கிரியை முறை கள் பற்றி தெளிந்த அறிவு கொண்டு விளங் கினார். இவர் வேலணை கிராமத்து சமூக மூலதனமாகத் திகழ்ந்தார்.

இவர் நாட்டு நிலைமைகளால் 1990 இல் இங்கிலாந்துக்கு இடம் பெயர்ந்து போனா லும் அங்கு வேலணை மக்களை ஒன்று கூட்டி உறவு வளர்ப்பவராக இருந்துள் ளார். இங்கிலாந்தில் வாழ்ந்த காலத்தில் சைவம், தமிழ், கலை கலாசாரத்தை பின் பற்றுவதற்கு ஊக்கம் கொடுத்துள்ளார். வேலணை கிராமத்தின் மீள் கட்டுமானம் பற்றி இறக்கும் வரையும் சதா சிந்தித்த வண் ணம் இருந்துள்ளார்.

இவரது குடும்ப வாழ்வு மிகவும் சிறப் பாக அமைந்திருந்தது. அக்குரஸ்ஸ பிர பல வர்த்தர் திரு க. சின்னத்தம்பி, ஆச்சி முத்து, தம்பதிகளின் இரண்டாவது மகள் தெய்வானைப் பிள்ளையை 1943ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 5ஆம் திகதி மணம் முடித்தார். இவர்களுக்கு இரு ஆண் களும், இரு பெண்களும் இருக்கின்றனர். ஆண்பிள்ளைகள் அவுஸ்திரேலியாவிலும் பெண் பிள்ளைகள் இங்கிலாந்திலும் சீரும் சிறப்புமாக வாழ்கின்றனர்.

அமரர் ஆசிரியர் இ. நாகராசா வேலணை யில் பிறந்து, வளர்ந்தபெருமகன் மாத்திர மல்ல. வேலணை கிராம மக்கள் என்றும் நினைவு கூரத்தக்கவர்.



# கல்விமான்கள்

# பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை

சுந்தரம்பிள்ளை கலாதரன்
முன்னாள் பாடசாலை அதிபர்- அவுஸ்திரேலியா

## இரண்டாவது நகல்

இன்றைய உலகில் சைவமும் தமிழும் நின்று நிலைபெறுவதற்குக் காரணமான வர்களில் முதன்மையானவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள். அவருக்கு நகற் பிரதியாக எல்லோராலும் ஏற்றுக் கொள் ளப்படுபவர் இலக்கிய கலாநிதி பண்டித மணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள். பண்டிதமணியை அடியொற்றி வாழ்ந்த அடுத்த நாவலர் நகற்பிரதியாகத் திகழ்ந் தவர் பண்டிதர் ச. சிதம்பரப்பிள்ளை அவர் கள் என்றால் அது மிகையாகாது.

## இளமையும் கல்வியும்

அமரர் சிதம்பரப்பிள்ளை அவர்கள் 22. 10. 1919 ஆம் திகதி தலைகாட்டி வேல ணையில் சரவணமுத்து சீதேவி அம்மை தம்பதியினரின் முதல் மகனாக இவ்வுலகில் அவதரித்தார். நாவலருக்கு ஒரு நல்லூர் போல, தீவகத்தில் சிதம்பரப்பிள்ளைக்கு அமைந்தது நெல்லாவில். இக்காலத்தில் வேலணை மேற்கு நெல்லாவில் சிறந்த தொரு சைவ ஆதீனமாகத் திகழ்ந்தது. நாவலர் வழியில் பாடசாலைகளை அமைத்து சைவம், தமிழ், கணிதம் ஆகியவற்றைப் போதித்து சமய அனுட்டானங்கள், தீட்சை கள், சிவபூசைகள், குருபூசைகள் செய்து புராணங்களைத் துறைபோகக் கற்று, கற் பித்து "சைவ சூக்குமார்த்தபோதினி" என்ற பெயரால் சைவத் தமிழ்ப்பத்திரிகை வெளியிட்டு ஆங்கிலேய ஆட்சி உச்சத் திருந்து எல்லா மக்களையும் மதம்மாற்ற முயற்சிகள் நடைபெற்ற காலத்திலே தீவகம் முழுவதும் சைவத்தையும் தமிழையும் போற்றிக் காத்துப் பேண வழி செய்தது நெல்லாவில்.

இங்கிருந்தவர்கள் சகல தீவுகளுக்கும் சென்று மேற்கூறப்பட்ட கைங்கரியங்களைச் செய்து வந்தனர். இவ்வாதீனப் பிரான்களான திரு. இராசா உபாத்தியாயர், திரு. தம்பு உபாத்தியாயர், திரு. கந்தப்பு உபாத்தியாயர், திரு. நாகலிங்க உபாத்தியாயர், பண்டிதை. செல்வி. த. வேதநாயகி முதலானோரின் அனுக்கிரகங்களைப் பெற்று ஆரம்பக் கல்வியைப் பெற்றவர் எமது சிதம்பரப்பிள்ளை அவர்கள். இளமையிலே கணிதம், தமிழ், சைவம் ஆகியவற்றில் முதற்றர மாணவனாகத் திகழ்ந்த சிதம்பரப் பிள்ளை அவர்கள் மதுரைத் தமிழ்ப்பண்டிதர் பரீட்சையில் சித்தி பெற்ற மிகச் சிலரில் ஒருவராவார்.

நாவலர் பெருமான் பார்சிவல் பாதிரியாரிடம் ஆங்கிலம் கற்க யாழ் மத்திய கல்லூரி செல்ல எமது பிள்ளை அவர்கள் புனித அந்தோனியார் கல்லூரியில் ஆங்கிலம் கற்றுத் தேறினார். விற்பன்னரான சிதம்பரப்பிள்ளை தனது ஆசிரியப் பயிற்சியைத் திருநெல்வேலி சைவ ஆசிரிய கலாசாலையில் பெற்றார். இக் குருந்தமர நிழலில் அவருக்குக் கிடைத்த வாய்ப்புகள் அளப்பரியன. நெல்லாவிலின் பின் அவரை மிகவும் கவர்ந்தகுருமணியாக பண்டிதமணி கிடைத்தார். ஞான குருவான உபஅதிபர் பொ. கைலாசபதி அவர்களின் கடைக்கண் பார்வை கிடைத்தது. இலங்கை முழுவதும் சைவத்தையும் தமிழையும் போற்றிக் காக்கும் வித்தகர்களான ஒழுக்கசீலர்கள் பலநூறு வரின் இனிமையான நட்பும் கிடைத்தது. இங்கே அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட முதல் மாணவராக இவர் திகழ்ந்தமையை பண்டிதர் ஆர். ரி. சுப்பிரமணியம் அவர்கள் நன்றியுடன் நினைவு கூருகிறார். சைவத்தையும் தமிழையும் கலப்பில்லாமல் கற்று ஆராய்ந்து உயர்நிலை அடைந்த பண்டிதர் அவர்கள் பல தடவைகள் இந்தியாவுக்குச் சென்றும் இலங்கைவரும் இந்தியப் பேரறிஞர்களான வச்சிரவேலு முதலியார், தண்டாயுதபாணி தேசிகர் முதலான நிபுணர்களின் நேரடி வகுப்புகளில் சென்று கற்று உபநிடதங்களிலும் ஸ்ரீருத்திரம் முதலான வேதாகம நூல்களிலும் காணப்பெற்ற நுணுக்கங்களையெல்லாம் அறிந்த சைவத் தமிழ் மாமேதையானார்.

## ஆசிரிய சேவை

தொழில்ரீதியாகத் தனது மதிப்புக்குரிய தாய்மாமனார் ஆசிரியமணி இ.மருதையனாரின் வழிகாட்டலைப் பின்பற்றிய பண்டிதர் அவர்கள் முதலில் வேலணை சைவப்பிரகாச வித்தியாலயத்தில் கற்பித்தார். இவரது அபரிமிதமாக விளங்கிய கற்பித்தல் திறமையைக் கண்ட மனேஜர் இந்துபோட் இராசரத்தினம் அவர்கள் இவரை, தனது ஆஸ்தான வித்தியாலயமாகிய திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயத்துக்கு இடம் மாற்றி அழைத்துச் சென்றார். அதுமட்டுமன்றி மனேஜரின் கீழிருந்தபல நூறு பாடசாலைகளுக்கு அரசநிதியை வழங்குவதற்கு விதப்புரை செய்யும் நோக்கில் பரிசீலனைக்கு வருகின்ற அதிகாரிகளுக்கு இவரது செயற்பாடுகளை மாதிரியாகக் காட்டி வந்தார். அந்த அளவுக்கு ஆசிரியத் தொழிலுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தது இவரது ஆசிரிய வாண்மை.

இன்று வளர்ச்சியடைந்த நாடுகளில் பற்பல ஆய்வுகள் கண்டுபிடிப்புகளின் பின்பு சகல வளங்களுடனும் நடைமுறைப் படுத்தப்படுகின்ற வகுப்பறைக் கல்விக்குச் சிறிதும் குறைவில்லாத வகையில் ஐம்பது வருடங்களுக்கு முன் கற்பித்தவர் பண்டி

தர். கற்றல்-கற்பித்தல் என்பன தவிர வேறெந்தத் தொழிலிலோ அரசியல், சமூக சேவைகளிலோ தனிப்பட்ட குடும்ப அலு வல்களிலோ சிறிது நேரத்தையேனும் செல விடாதவர் அவர்.

இதற்காகத் தூய பிரம்மச்சரியம் காத்து நின்றார். இளவயதிலேயே தந்தையை இழந்த இவர் தாயைத் தெய்வமாகப் போற்றி வாழ, தாயாரும் இவரது அடிப் படைத் தேவைகளைப் பூர்த்தி செய்தமை இவர் வாழ்க்கை முழுவதும் பூரணமாகக் கற்றல் கற்பித்தலில் ஈடுபட உதவிற்று.

குறிப்பிட்ட பாட அலகைக் கற்பிப்பதற்கு வருடாவருடம் ஆயத்தம் செய்து, விருத்தி செய்து, எழுதிப் பேணிவைத்த அடுக்கி லிருந்து அவ்வாரத்துக்கான அலகுக் குறிப் புத் தாள்களை வார இறுதி நாட்களில் எடுப்பார். அதில் நீலம், கறுப்பு, சிவப்பு, பச்சை நிற ஊற்றுப் பேனாக்களால் சங் கேத முறையில் எழுதப்பெற்ற குறிப்புக் களை அடிப்படையாகக் கொண்டு அவ் வாரத்துக்குரிய குறிப்புகளை நீல நிறத்தில் எழுதுவார். அப்பாடம் கற்பித்து முடிந்த தும் ஏனைய நிறங்களிலான மேலதிகக் குறிப்புகள் அதில் இடம்பெற்றுவிடும்.

அவரை அடையாளம் காட்டுவனவாக அவரது வெள்ளைவெளேரென்ற வேட்டி, சட்டை, சால்வை, பையொன்று, குடை, உத்தரியமான திருநீற்றுப்பூச்சு என்பன இருந்தன. அவரது பைக்குள் பாடக்குறிப்பு ஞாயிற்றுக்கிழமை போய்விடும். ஆனால் பையிலிருந்து அவரது மூக்குக்கண்ணாடி வெளிவந்திருக்காது. வகுப்பில் ஒரு செக் கனையாவது வீணாக்க விரும்பாத அவர் தவறுதலாகக் கண்ணாடியை மறக்கும் நிலையைத் தவிர்க்க, வாங்கும்போதே இரண்டை வாங்கி பாடசாலையில் பயன் படுத்த ஒன்றைப் பைக்குள்ளேயே வைத்து விடுவார். வீட்டில் எடுக்கமாட்டார். மேலும் அவரது பையில் கொண்டுவராத மாண வர்களுக்கு வழங்குவதற்கான கொப்பிகள், எழுதுகருவிகள் அழிரப்பர்கள் என்பனவும் அவரது கற்பித்தல் உபகரணங்களுடன் "கஸ்தூரியார் வளவு" மருந்தும் இருக்கும். அவருக்கிருந்த கற்பித்தலுக்கென்றே இறை வனால் படைக்கப்பட்ட மூளையில், உரு வாகின்ற மிக நுணுக்கமான வினாத் தொடர் களும் கற்பித்தல் நுணுக்கங்களும் மாண வர்களின் அடிமனதில், அடிப்படை எண் ணக்கருக்கள் தாமாக வளர்ச்சி பெற்று, வாழ் நாள் முழுவதும் ஞாபகத்தில் இருக்கக் கூடிய வகையில் உருவாக்கும். இந்த எண் ணக்கரு உருவாக்கத்தை அவரது மாண வராக இருந்து நேரில் அனுபவித்த பெற் றோர்கள், கல்விமான்கள் அல்லது தங்கள் பிள்ளைகளிடத்து கண்ட பெற்றோர்கள், விற்பன்னர்கள் தமது மற்றைய பிள்ளைக ளும் இவரிடம் கற்கும் சந்தர்ப்பத்தை எப் படியாவது ஏற்படுத்தத் துடிப்பர்.

ஒவ்வொரு மாணவரினதும் திறமை களையும் குறைபாடுகளையும் கண்டறிந்து முறையே விவேகப் பயிற்சி, பரிகாரக்கற் பித்தல் மூலம் குறிப்பிட்ட காலத்துக்குள் ளேயே அவர்களைப் புலமை பெற வைத்து விடுவார். எந்தப் பெரிய விடயத்தையும் எந்தச் சிறிய பிள்ளைக்கும் தெளிவாகப் புரியவைப்பதில் நிபுணராக இருந்தார். வகுப்பில் அவரது கற்பித்தலும் வழிகாட் டலும் ஆர்வம் தரும் கதைகளும் சிறப்பான நகைச்சுவை கலந்த பேச்சும் புன்சிரிப்பும் மாணவர்களிடத்து அவர் கொண்டிருந்த அளவற்ற அன்பும் காரணமாக, மாண வர்கள் அவரைத் தெய்வமாகக் கொள்ள

வும், அவருக்கு ஏற்ற படி நடக்க எண்ணி மாமிச போசனத்தையே விடுத்து வாழவும் தலைப்பட்டனர்.

இவரிடம் கற்பதற்காகப் பெற்றோர்கள் இவர் பணியாற்றும் பாடசாலைகளுக்கு தூர இடங்களிலிருந்தும் பிள்ளைகளைக் கொண்டு வருவர். வேலணை சைவப் பிரகாச வித்தியாலயம், புங்குடுதீவு கணேச வித்தியாலயம், சரவணை நாகேஸ்வரி வித்தியாலயம், திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயம், பண்டத்தரிப்பு சைவ வித்தியாலயம் ஆகியவற்றில் கற்பித்த பண்டிதரவர்கள் வேலணை சைவப்பிரகாச வித்தியாலயத்தில் அதிபர் பதவியேற்றார்.

## அதிபர் பதவி

வாழ்க்கையை கற்றலுக்கும் கற்பித்தலுக்கும் அாப்பணித்த பண்டிதரின் சேவையை முழுவதாகப் பெற வேலணை சைவப் பிரகாசம் "கொடுத்து வைத்திருந்தது". தனது நேரம், சம்பளம், சிந்தனை, முயற்சி, திறமை, செல்வாக்கு அனைத்தையும் அதற்கே அர்ப்பணித்து அப்பாடசாலையை அதன் பெயருக்கு ஏற்றபடி தூண்டித்தூண்டிவிட்டு ஒளிதுலங்கிப் பிரகாசிக்கச் செய்தார். வெளிவருகின்ற நூல்களிலெல்லாம் இதுவரை இரண்டு பிரதிகளுக்கு மேல் வாங்கிவந்த அதிபர் அவற்றை இப்போது மூன்று பிரதிகளுக்கு மேல் வாங்கி தனது சொந்தச் செலவில் இக் கல்லூரிக்கு நூலகம் ஒன்றை அமைத்தார். அள்ளிக்கொடுத்த மக்களிடம் பெற்ற பணத்தில் பாடசாலைக் கட்டிடங்களைக் கட்டுவித்தார். "ஆடுகின்ற மாட்டை ஆடியும் பாடுகின்ற மாட்டைப் பாடியும்" ஊக்குவித்துத் திறமையான கற்பித்தலை மேற்கொள்ளச் செய்தும் மாலைவேளைகளிலும் விடுமுறை காலத்திலும் தானே வகுப்புக்களை நடாத்தியும் மிகமிகச் சிறந்த பெறுபேறுகளைக் கல்வியில் பெறவைத்தார். பொருட் காட்சிகள், கலைவிழாக்கள், விளையாட்டுக்கள் மூலம் மாணவர்கள் ஆளுமைத் தன்மையைப் பூரணமாகப் பெறவும் வழி செய்தார். இக்காலத்தில் எமது பாராளுமன்ற உறுப்பினராக இருந்த தமிழரினதும் தமிழினதும் காவலர் மாமேதைபண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள் இலங்கைப் பாராளுமன்றத்தில் நிழல் கல்வி மந்திரியாக இருந்தார். ஓய்வுபெற்ற அதிபர்களுக்கு ஒப்பந்த அடிப்படையில் மீள் நியமனம் வழங்க வேண்டுமென்ற கருத்தை அவர் பாராளுமன்றத்தில் ஓங்கி ஒலிக்கச் செய்து வெற்றி காண்பதற்கு அவரது உள்ளார்ந்த எண்ணத்தில் இருந்தது இவ்வதிபரின் செயற்பாடுகளே. அப்போது இலங்கைத் தமிழர் ஆசிரியர் சங்கத்தின் பொதுச்செயலளராக இருந்த அமரர் பாலசுப்பிரமணியம் அவர்கள் தனது ஆசிரியரான பண்டிதர் மீள் நியமனம் பெறவேண்டுமென்பதற்காக, பல்வேறு முயற்சிகளைச் சங்கமூலம் மேற்கொண்டது மட்டுமன்றி, பண்டிதர் மீள்நியமனம் பெற மறுத்தபோதும் பெற்றோர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் கொண்ட பெரும் கூட்டத்துக்குத் தலைமை தாங்கி, பொது நலத்திற்காக அதிபரை மீள் நியமனத்தை ஏற்கச் செய்திருந்தார். சைவப்பிரகாசம் ஆரம்பக் கல்விக்கு, தீவுப்பகுதியில் முதலாவதாகவும் வடமாகாணத்தில் மூன்றாவதாகவும் சிறப்பிடம் பெற்றது.

எவர் மனமும் சிறிதும் புண்படாது, எவரிடத்தும், எத்தகைய உதவியும் பெறாது, தன் வருமானத்தில் பெரும் பகுதியை பாட

சாலைக்கே செலவிட்டு ஆசிரியர்களினதும் பெற்றோரினதும் பூரணமான ஒத்துழைப் பைப் பெற்று பலர் பின் அவரைப் பின்பற்றி நடக்க வழிசெய்த இவரது செயற்பாடுகள் பொன் எழுத்துக்களால் பொறிக்கப் படவேண்டியன.

## தலைமைப் பதவி

ஆசிரியப் பயிற்சிபெற்ற காலத்திலி ருந்து பண்டிதமணிக்கும் பண்டிதருக்கும் இடையே ஞான உறவு- குருசிஷ்ய உறவு ஏற்பட்டது. அதன்பின்னர் சராசரியாக வாரம் இருமுறையாவது வேலணையி லிருந்து திருநெல்வேலி சென்று பண்டித மணியை பண்டிதர் சந்தித்து வந்தார். சமயம், தமிழிலக்கியம், தமிழிலக்கணம் முதலானவற்றில் மிகமிக உயர்வான கருத் துக்களை இவர்கள் பேசியும் கேட்டும் வந்த னர். பண்டிதமணியின் ஆக்கங்களில் பல வற்றை தனது மிகமிக அழகான முத்துப் போன்ற எழுத்துகளில் எழுதி பதிப்பித்த லுக்குத் தயார் செய்வதில் பண்டிதர் ஈடு பட்டார்.

குறிப்பாக, பண்டிதமணியின் வித்து வத்துக்குச் சான்று பகரும் விடயங்களில் தலைசிறந்த விடயமான கந்தபுராணத் தட்ஷ காண்ட் உரையைப் பிரதி செய்தவர் பண்டிதர் அவர்களேயாவர். இவ்வரிய நூலின் முன்னுரையில் பண்டிதமணி நேர்த்தியாகப் பிரதி செய்தமையையும் அவ் வப்போது இவரும், இவரது ஆசிரியரும் சிறிய தாயாருமான பண்டிதை. த. வேத நாயகியும் திருத்த ஆலோசனைகள் வழங் கியமையையும் சிறப்பாகக் குறிப்பிட் டுள்ளார்.

குருசிஷ்ய உறவுக்கு மிகச்சிறந்த எடுத் துக்காட்டாக விளங்கிய இவர்களது உறவு குருவை வீழ்ந்து வணங்குதல், ஆசீர்வாதம், கைவிசேஷம் பெறல், உபசாரப் பொருள் கள் வழங்குதல் என்று பிரபல்யமானவை.

பண்டிதமணியினதும் ஏனைய பண்டிதர் களினதும் பெருவிருப்பத்தின் பேரில் பண்டிதர், பண்டிதமணி நூல் வெளியீட்டுச் சபையின் தலைவராகத் தெரிவுசெய்யப் பெற்றார். இத்தெரிவின் மூலம் ஈழத்துச் சைவத் தமிழ் மரபின் தலைமையை எமது தீவகம் பெற்றுக்கொண்டு பெருமை பெற் றது. இவர் தலைவராக இருந்த காலத் திலேயே பண்டிதமணிக்கு இலக்கிய கலா நிதிப் பட்டம் கொடுத்து இலங்கைப் பல்கலைக்கழகம் தன்னை உயர்த்திக் கொண்டது. இந்த நாட்களில் பேராசிரியர் ஆ. வி. மயில்வாகனம், பேராசிரியர் துண வேந்தர் சு. வித்தியானந்தன் முதலானோ ரது தலைமைகளில் நடைபெற்ற விழாக் களிலெல்லாம் பண்டிதர் சிதம்பரப்பிள்ளை ஆற்றிய உரைகளும், பண்டிதமணி நினைவுமலரில் எழுதிய "பிரார்த்தனை உரை" யும் எமது பண்டிதருக்கு அறிஞர்களி டையே பெருமதிப்பை ஏற்படுத்தின. பத்திரி கைகள் புகழ்மாலை சூடின. இவை நாவலர் காலக் கலாசாரம் இன்னும் நீடிக்கிறது என்பதற் குச் சான்றுகளாக இருந்தன. நூல் வெளியீட்டுச் சபையின் எல்லா முயற்சி களுக்கும் இவர் பெருமளவு உழைத்தாலும் எச்சந்தர்ப்பதிலாவது முன்னுக்கு வந்து அடையாளம் காட்டமாட்டார். அதிபர் கூட் டம், ஆசிரியர் கூட்டம், ஓய்வூதியர் கூட்டம் எதுவாயிருந்தாலும் பதவி எதுவும் எதிர் நோக்காமல் பக்கச்சார்பு எதுவுமின்றி இவர் தெரிவிக்கும் நுண்ணிய கருத்துக்கள் அவ் வச்சங்கத் தலைவர்களினால் அவ்வப் போது பெரிதும் மெச்சப்பட்டவை.

## இறைபதவி

திடீரென்று தீவகமக்கள் இடம் பெயர்ந்தனர். இந்தியாவிலிருந்தும் கொழும்பிலிருந்தும் யாழ்ப்பாணத்திலிருந்தும் தனது வாழ்நாளில் வாங்கிக் குவித்த, தான் உயிரினும் மேலாக மதித்த சொத்தான அரிய நூல்களை விட்டு வந்த பெருந்துன்பம் அவரை வாட்டியது. தாயாரையும் பண்டித மணியாரையும் இழந்த துன்பத்திலிருந்து விடுபட அவரால் இயலவில்லை. பிறருக்குச் சிறிதேனும் துன்பம் விளைவிக்க விரும்பாத அவரது மனம் எவரிலும் தங்கியிருக்கவும் விரும்பவில்லை. இரங்கற்பாவில் பண்டிதை பொன் பாக்கியம் பாடியது போல, உம்பர் சபையில் பண்டித மணியாரோடு சேர்ந்து இனிய தமிழ்ச் சபையை அமைக்கும் அவசரத்தில் வலிந்து புறப்பட்டார் போலும்.





# கல்விமான்கள்

## உயர்திரு. ஈ. கே. நாகராசா

பேராசிரியர் கா. குகபாலன்
(தலைவர், புவியியற்றுறை - யாழ். பல்கலைக்கழகம், யாழ்ப்பாணம்)

வேலணை கிழக்கு, வேலணையில் வர்த்தகத் துறையுடன் விவசாயத்தையும் பொருளாதார பலமாகக் கொண்ட இளையதம்பி கந்தையா அவர்களுக்கும் கணபதிப்பிள்ளை பொன்னம்மா அவர்களுக்கும் மூத்தபுத்திரனாகப் பிறந்தவரே உயர்திரு. ஈ.கே. நாகராசா அவர்களாவர். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றைத் தனது வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்து மற்றவர்களுக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்து வரும் திரு. நாகராசா 27. 11. 1929 ஆம் ஆண்டு பிறந்தார். அவரைத் தொடர்ந்து ஈ. கே. தியாகராசா, ஈ. கே. தங்கராசா, ஈ.கே. யோகராசா, ஈ. கே. செல்வராசா, திருமதி.தவமணிதேவி சிவபாலசிங்கம், காலஞ்சென்ற செல்வி. லீலாவதி, திருமதி. லலிதாதேவி ஸ்ரீதரன் ஆகிய எழுவர் உடன்பிறப்புக்களாவர். அவர்கள் வர்த்தகத் துறையில் பிரபல்யம் பெற்றவர்களாகவும் அரச தொழில்களில் ஈடுபாடு கொண்டவர்களாகவும் உள்ளனர்.

தந்தையாரின் வர்த்தகம். மற்றும் விவசாய செயற்பாடுகளூடாக வசதியான குடும்பத்தில் பிறந்த திரு. நாகராசா அவர்கள் தனது ஆரம்பக் கல்வியினை வேலணை சரஸ்வதி வித்தியாலயத்தில் 1934ஆம் ஆண்டு ஆரம்பித்தார். அதனைத் தொடர்ந்து ஊர்காவற்றுறை புனித அந்தோனியார் கல்லூரியில் ஆறாம் வகுப்பு வரை கல்வி பயின்றார். அரசின் மத்திய மகாவித்தியாலயத் திட்டத்திற்கமைய வேலணையில் ஸ்தாபிக்கப்பட்ட வேலணை மத்திய மகா வித்தியாலயத்தில் தன்னை முதல் தொகுதி மாணாக்கர்களில் ஒருவராக இணைத்துக் கொண்டு சிரேஷ்ட தராதர வகுப்பு வரை பயின்றார். இப்பாடசாலையில் சிரேஷ்ட

தராதர பரீட்சையில் சித்தியடைந்த மூன்று மாணாக்கர்களில் இவரும் ஒருவராவார். இராசதுரை, குருசாமி என்பவர்களே ஏனையோராவர். இதனைத் தொடர்ந்து திரு. நாகராசா அவர்கள் கரம்பன் சண்முகநாத வித்தியா லயத்தில் ஆசிரியர ாகப் பணிபுரிவதற்கு அழைக்கப்பட்டார். அக்காலத்தில் தனது குடும்ப நிலையினைக் கருத்திற்கொண்டு ஆசிரியராக இணைந்து ஓராண்டு பணி புரியும் வாய்ப்புக் கிட்டி யது. ஒரு மனிதனின் வாழ்வின் உயர்ச் சிக்கும் வீழ்ச்சிக்கும் ஆசான்கள், நண்பர் களின் பங்கு முக்கியமானது. அந்த வகை யிலே திரு. நாகராசா அவர்களின் வாழ் வில் வேலணை மத்திய மகாவித்தியாலயத் தில் பணியாற்றிய ஆசிரியர் உயர்திரு. திருநீலகண்டன் அவர்களின் ஆலோசனை களும் அன்புகலந்த கண்டிப்பான உத்தர வுகளும் அவரது வாழ்வுப் பயணத்தை சரியான திசைக்கு இட்டுச் செல்ல வழி வகுத்தது என திரு. நாகராசா அவர்கள் அடிக்கடி நினைவுகூருவதை இங்கு குறிப் பிட்டேயாக வேண்டும். அதாவது அக் காலத்தில் இலங்கையில் உயர் கல்வி என் பது உயர்ந்த பொருளாதார அரசியல் பலம் கொண்டவர்களால் மட்டுமே சாத்தியப்பட முடிந்த காலப்பகுதியாகும். இந்நிலையில் திரு.திருநீலகண்டன் அவர்கள் "இந்தியா வுக்குச் சென்று உயர் கல்வியினைக் கற்க வேண்டும்" என விடுத்த அன்புக் கட்ட ளையை தனது குடும்பத்தாரிடம் தெரிவிக் கவே அவர்களும் அதற்கு சம்மதம் அளித் தனர்.

1952ஆம் ஆண்டு பெங்களூரில் உள்ள சென்ஜோசேப் கல்லூரியில் (1952-1954) இன்ரர் மீடியேட் கற்கைநெறியில் இணைந்து இரு வருடங்கள் கற்று மிகச் சிறப்பாக சித்தி பெற்றார். தன்னுடைய வாழ்வில் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு அதாவது நேரமுகாமைத்துவம் (Punctuality discipline) ஆகியவற்றை தான் கடைப் பிடிப் பதற்கு கல்லூரியில் கல்விகற்பித்த மற்றும் நிர்வாகிகளான கத்தோலிக்க சுவாமிகளின் வழிகாட்டல் தன்னை மிகவும் கவர்ந் திருந்தது மட்டுமல்லாது அதனை தன் னால் முடிந்தளவு கடைப்பிடித்து வருவதாக தெரிவிக்கின்றார். திரு. நாகராசா அவர் கள் அதனைச் செயலிலும் காட்டி வந் துள்ளார் என்பதை அவரது மாணவர்கள் பலரூடாக அறியவும் முடிந்தது.

இன்ரர் மீடியேட் பரீட்சையில் சிறப்பாக சித்தியடைந்த திரு. நாகராசா அவர்கள் (1954 – 1957) இந்தியாவில் அன்றும் இன்றும் மிகவும் பிரசித்திபெற்ற சென்னை மாநிலக் கல்லூரியில் தனது பட்டப்படிப்பினை 1954ஆம் ஆண்டு ஆரம் பித்து 1957ஆம் ஆண்டு பீ. ஏ. பட்டத்தினைப் பெற்றார். வரலாறு. தமிழ், ஆங்கிலம் ஆகிய பாடங்களுடன் புவி யியலைச் சிறப்பாகக் கற்று கலைப் பட்ட தாரியானர். இவருக்கு இக்கல்லூரியில் அனுமதி பெற்றுத் தருவதற்கு தமிழறிஞரும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினருமான திரு. கா. பொ. இரத்தினம், பேராசி ரியர் களான அ. ச. ஞானசம்பந்தன், மு. வர தராசன் ஆகியோர் உதவிபுரிந்துள்ளனர்.

நாடு திரும்பிய திரு. நாகராசா அவர் களுக்கு உடனடியாகவே தொழில் வாய்ப் புக்கான கேள்வி அதிகரித்தது. 1957ஆம் ஆண்டின் பிற்பகுதியில் காரைநகரில் உள்ள வார்தா (WARTHA) பாடசா லையில் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில், யாழ்ப்பாணத் தைச் சேர்ந்தவரும் கொழும்பில் நீதிபதி யாகவுமிருந்த திரு. அப்துல் காதர் என்ப வரை சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது.

ஆங்கில மொழியிலும் தான் கற்ற கல்வி புலத்திலும் ஆழமான அறிவினைக் கொண் டிருந்ததைக் கண்ட அவர் அளுத்கம சாஹிராக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்ற வருமாறு கேட்டுக் கொண்டார். அதனை ஏற்று 1958ஆம் ஆண்டு அக்கல் லூரியில் ஆசிரியராக இணைந்துகொண் டார். அங்கு புவியியலையும் ஆங்கிலத்தை யும் மாணவர்களுக்குப் போதித்தார். இந் நிலையில் 1959ஆம் ஆண்டு முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் திரு. நாகராசா அவர் களுடன் தொடர்பு கொண்டு தீவுப்பகுதிப் பாடசாலையொன்றில் இணைந்துகொள்ளு மாறு வற்புறுத்தினார்.

அளுத்கம சாஹிராக் கல்லூரிச் சமூகத் தின் விருப்புக்கு மாறாக இடமாற்றத்தைப் பெற்று மண்டை தீவு மகா வித்தியா லயத்தில் 1959-1960ஆம் ஆண்டுகளில் பணி யாற்றும் சந்தர்ப்பம் கிட்டியது. ஓராண்டு தான் இங்கு பணியாற்றிய போதிலும் தனது வாழ்வில் கடைப்பிடித்துவரும் ஒரு கொள்கையினை அங்கேயே பெற முடிந் தது என திரு. நாகராசா அவர்கள் அடிக் கடி கூறுவதைக் கேட்டிருக்கிறேன். அதா வது தனது பணியினை பொறுப்பேற்கச் சென்ற அன்று அப்பிரதேசத்தைச் சேர்ந்த ஒருவர் "அவரது உடைக்கோலத்தைக் கண்டு நீர் என்ன தமிழ் வாத்தியார் போல உடை அணிந்து வருகின்றீர்? பட்டதாரி என்றால் நீளக் காற்சட்டை, சேட் எல்லோ போட்டுக் கொண்டு வரல்வேண்டும்" எனக் கேட்டாராம் அதாவது இவர் வேட்டி கட்டிக் கொண்டு சென்றதனாலேயே அவ்வாறு கேட்டுள்ளார். அப்போது பட்டதாரிகள் கட் டாயம் நீளக்காற்சட்டை அணிந்து தான் பாட சாலைக்கு செல்ல வேண்டுமா? என ஒரு கணம் சிந்தித்த திரு. நாகராசா அவர்கள் அன்றிலிருந்து பாடசாலைக்கு வேட்டி கட்டித்தான் செல்ல வேண்டும் எனத் தீர்மானித்து இளைப்பாறும்வரை அதனைக் கடைப்பிடித்துவந்தார் என்பது குறிப்பிடத் தக்கது.

1961ஆம் ஆண்டு வேலணை மத்திய கல்லூரிக்கு மாற்றலாகி 1989ஆம் ஆண்டு இளைப்பாறும்வரை அங்கேயே ஆசிரியத்து வத்தினை கண்ணியமாகவும் கட்டுப் பாடு டனும் கற்பித்து வந்துள்ளார் என்பதை அவரது மாணவர்களின் மூலமாக அறிய முடிகின்றது.

திரு. நாகராசா அவர்களின் குடும்ப வாழ்வினையும் சிறப்பினையும் அவர்களது பிள்ளைகளின் உயர்ச்சியிலிருந்து காண முடிகின்றது. பண்டத்தரிப்பும் புளியங் கூடலும் இணைந்த குடும்பத்தில் பிறந்த திவ்யசிரோன்மணி அம்மையார் பண்டத் தரிப்பு மகளிர் கல்லூரியில் கற்றபின்பு இந்தியாவில் கொலிகுறோசரி கன்னியர் மடத்தில் பி.எஸ்.சி. கல்வியினை கற்ற பின் னர் பண்டத்தரிப்பு இந்துக் கல்லூரியில் 1958- 1977ஆம் ஆண்டுவரை ஆசிரியரா கப் பணிபுரிந்தார். அதனைத் தொடர்ந்து 1977இல் யாழ்ப்பாணம் இந்து மகளிர் கல்லூரியில் ஆசிரியராக இணைந்து கொண்டார். 1986ஆம் ஆண்டு இக்கல்லூரி யின் அதிபராகப் பொறுப்பேற்று 1993ஆம் ஆண்டு இளைப்பாறும் வரை அதிபராகக் கடமையாற்றினார் என்பது குறிப்பிடத் தக்கது. திவ்யசிரோன்மணியை விவாகம் செய்ததன் மூலம் மூன்று பெண்பிள்ளை களுக்கும் இரண்டு ஆண்பிள்ளைகளுக்கும் பெற்றோர் ஆகினர். மூத்தமகள் ரஜனி யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் .

டுவியியல் சிறப்புக்கலையினைப் பயின்று சிறப்பாக சித்தியடைந்ததன் விளைவாக முதலில் தற்காலிக உதவி விரிவுரையாளராக இருந்து பின்னர் உதவிப் பதிவாளராக கடமையாற்றியவர். திரு. ராமேஸ்வரன் என்ற பொறியியலாளரை விவாகம் செய்து முதலில் புறூணையிலும் அதனைத் தொடர்ந்து அவுஸ்திரேலியா சென்று இரு குழந்தைகளுக்குப் பெற்றோராகி நல்வாழ்வு வாழ்ந்து வருகின்றார். திருமதி. ரஜனி அவர்கள் அவுஸ்திரேலிய பல்கலைக் கழகம் ஒன்றில் சர்வதேச மாணவர் அனு மதிக்கான பொறுப்பினை ஏற்று செயற் பட்டு வருகின்றார்.

இரண்டாவது மகனான அசோகன் என்பவர் இந்தியாவில் எம்.எஸ்.சி. கற்று புறூணையில் பிரதி அதிபராகக் கடமை யாற்றி வருவதுடன் வசந்தியை விவாகம் செய்து இரு குழந்தைகளுக்குப் பெற்றோரா கியுள்ளனர். மூன்றாவது மகளான கல் யாணி யாழ் பல்கலைக்கழக வரலாற்றுப் பட்டதாரியாகவும் அதனைத் தொடர்ந்து வரலாற்றுத் துறையில் நிரந்தர விரிவுரை யாளராகவும் கடமையாற்றியவர். புலமைப் பரிசில் பெற்று இந்தியா சென்று வரலாற்றில் எம்.ஏ., எம். பில் பட்டங்களைப் பெற்ற வர். யுத்த சூழ்நிலையைக் கருத்திற் கொண்டு அப்பதவியினை இராஜினாமாச் செய்தார். இருப்பினும் 1999ஆம் ஆண்டு தென்கிழக்கு பல்கலைக்கழகத்தில் வரலாற் றுத்துறை சிரேஷ்ட விரிவுரையாளராக நிய மிக்கப்பட்டு ஒராண்டு காலம் பணியாற் றிய வேளை விவாகத்தின் பொருட்டு அதனையும் இராஜினாமாச் செய்தார். அவர் லண்டனில் கணக்காளராக கடமை யாற்றும் திரு. நடராசா என்பவரை விவா கம் செய்து ஒரு குழந்தைக்குத் தாயாக லண்டனில் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றார்.

நான்காவது மகளான சுமதி யாழ்ப் பாணப் பல்கலைக்கழக புவியியல் சிறப்புப் பட்டதாரியும் முன்னாள் தற்காலிக உதவி விரிவுரையாளரும், தற்போது கொழும்பு இந்துக் கல்லூரியில் ஆசிரியராகவும் பணி புரிகின்றார். அச்சக உரிமையாளரான திரு. ரஞ்சகுமாரினை மணந்து ஒரு குழந்தை யுடன் சந்தோஷமாக வாழ்ந்து வருகின்றார். கடைசி மகனான உதயணன் புறூணை யில் தொழில் பார்த்துவிட்டு தற்போது கொழும்பில் Dish Asia Network நிறு வனத்தில் பணிபுரிவதுடன் ஆசிரியையான ரதினி என்பவரை விவாகம்செய்து சிறப் புடன் வாழ்ந்து வருகின்றார்.

திரு. நாகராசா அவர்களுக்கு பிரதி அதிபர், அதிபர் பதவிகள் தேடிவந்த போதிலும் அவற்றினை விரும்பியேற்காது மாணவர்களின் கல்வி வளர்ச்சியினையே கண்ணும் கருத்துமாகக் கொண்டுழைத்தவர். "கடமையைச் சரிவரச் செய்" என்பதில் அசையாத நம்பிக்கை கொண்ட ஆசிரியர். பாடசாலைக்கு கடமை நேரத்திற்கு முன் னரேயே வந்துவிடுவார். ஆரம்பத்தில் பண்டத்தரிப்பிலிருந்தும் பின்னர் யாழ்ப் பாணத்திலிருந்தும் தனது சொந்தக்காரில் பிரயாணம் செய்து பாடசாலைக்கு வருப வர். சிலவேளைகளில் போக்குவரத்தில் காலதாமதம் ஏற்படுமேயானால் குறிப்பாக ஒரு நிமிடம் கூட பிந்துமானால் வேலணை தபால் நிலையத்திற்கு சென்று அதிபருக்கு கடமைக்குச் சமூகமளிக்க முடியவில்லை என லீவு விண்ணப்பத்தினை தந்தி மூலம் அறிவித்துவிட்டு திரும்பிச்செல்வார். அதா வது கடமைக்கு உரிய நேரத்திற்கு செல்வது முக்கியமானது மட்டுமல்லாது ஏனைய ஆசிரியர்களுக்கும் இதனை உணர்த்தவே

யாகும் என ஊகிக்க இடமுண்டு. இது மட்டுமல்லாது மாணவர்களைக் கூட நேரம் தவறாது பாடசாலைக்கு வருவதற்கும் இவை வழிவகுத்தது என்பதும் குறிப்பிடத் தக்கது.

வேலணையில் பிறந்தவர் என்ற ரீதியில் பிள்ளைகளின் கல்வி முன்னேற்றம், ஒழுக்கம் ஆகியவற்றினைப் பற்றி பெற்றோர்கள் இவரிடத்திலே முறையிடும் நிலை இருந்து வந்துள்ளது. எனவே பாடசாலை மாணவர்களின் கல்வி, ஒழுக்கம் ஆகியவற்றில் கண்டிப்புடன் நடந்துகொள்வதை அவரின் மாணவர்கள் பலர் கூறக்கேட்டுள்ளோம். எனினும் வகுப்பறைக்கு வெளியே மாணவர்களுடன் மிக நெருக்கமாகப் பழகும் சுபாவமும் கொண்டவர். பாடசாலையில் இரு பாலாரும் கல்வி கற்பதனால் மாணவர்களிடையே ஒழுக்கக்குறைவுகள் காணப்படாதிருக்க வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டவராக இருந்துள்ளார் என்பதே உண்மை நிலையாகும்.

ஆங்கிலத்தையும் புவியியலினையும் உயர் வகுப்புக்களுக்கு போதித்த ஆசிரியர் அவர்கள் இலங்கையில் முன்னோடி புவியியலாசிரியர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர். அவரது கற்பித்தலினால் க.பொ.த. (சா.த), க.பொ.த. (உ.த) ஆகியவற்றில் புவியியல் பாடத்தை பயில்பவர்களில் 90% சதவீதத்துக்கு மேல் சித்தியடைவது வழக்கமாகும். 1969ஆம் ஆண்டு கல்வி அமைச்சினால் ஒழுங்கு செய்யப்பட்ட புவியியல் ஆசிரியர்களுக்கான கருத்தரங்குக்கு வட மாகாணத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட மூன்று ஆசிரியர்களில் இவரும் ஒருவராவர். யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியிலிருந்து திரு. வ. மகாதேவனும் கொக்குவில் இந்துக்கல்லூரியில் இருந்து அமரர் திரு. குணபாலசிங்கமும் மற்ற இருவருமாவர்.

மாணவர் வரவில் மிகவும் கண்டிப்பாக நடந்து கொண்ட திரு. நாகராசா அவர்களின் வழிகாட்டலினாலும் கற்பித்தலினாலும் பல மாணவர்கள் பல்கலைக் கழகம் சென்றனர். அவர்களில் முதலாமவர் முன்னாள் கலைப்பீடாதிபதி அமரர் பேராசிரியர். செ. பாலச்சந்திரன் ஆவர். ஒரு கட்டத்தில் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் இவரது மாணவர்கள் பத்துப் பேர் விரிவுரையாளர்களாக சம காலத்தில் பணி புரிந்ததையிட்டு இவர் பெருமை கொள்வதுண்டு. அவர்களைத் தவிர சிறந்த நிர்வாகிகளைத் தயார்படுத்தியுள்ளார். குறிப்பாக முன்னர் வடக்குக் கிழக்கு மாகாணக் கல்வி அமைச்சின் செயலாளராக விருந்து அமரத்துவமடைந்த திரு.சி. சடாட்சர சண்முகதாஸ் அவர்களை அடிக்கடி நினைவு கூருவார்.

சென்னையில் பட்டப்படிப்பினை பயின்ற காலத்தில் பேராசிரியர்களான தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்களின் மாணவனாக இருந்தவர். இவர்களுடன் மிக நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்துவதற்கு தமிழறிஞரும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினருமான திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள் பாலமாக அமைந்திருந்தமை குறிப்பிடத்தக்கது. ஒருமுறை பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்கள் இலங்கைக்கு வருகை தந்தபோது வேலணை மத்திய கல்லூரிக்கு அழைத்து "ஆழ்நிலை தியானம்" என்ற பொருளில் சிறப்புரை ஆற்றுவதற்கு திரு. நாகராசா அவர்களே முன்னின்றுழைத்தவர். அன்றைய நிகழ்வில் அவரது சொற்பொழிவைக் கேட்ட மாணவர்கள், ஆசிரியர்கள், பொதுமக்கள் ஆகி

யோர் குண்டூசி விழுந்தாலும் சத்தம் கேட்கக் கூடியளவிற்கு நிசப்தமாகவிருந்து செவி மடுத்தமையையிட்டு திரு. நாகராசா அவர்களை பேராசிரியர் அவர்கள் வாயாரப் புகழ்ந்துரைத்தார் என்பதை மாணவர்கள் வாயிலாக அறிய முடிந்தது.

பாடசாலைக் கல்வி வளர்ச்சியில் மட்டுமல்லாது விளையாட்டுத் துறையிலும் பெரும் அக்கறைகொண்டு விளையாட்டு மைதானம் ஒன்றை உருவாக்கிக் கொடுத்துள்ளார். கல்லூரிக்கு அருகே நெற்காணியொன்றினைக் கொள்வனவு செய்வதற்கு கல்வி அமைச்சு ஒருதொகைப் பணத்தினை வழங்கிய போதிலும் அதனைக் கொள்வனவு செய்வதற்காக கதம்ப நிகழ்ச்சி ஒன்றினை ஒழுங்கு செய்து ரிக்கற் விற்பனையில் பெரும் பங்கினையேற்று காணியை வாங்குவதற்கு ஏற்ற ஒழுங்கினைச் செய்தபெருமை திரு. நாகராசா அவர்களையே சாரும். அது மட்டுமல்லாது நெல் விளைவிக்கப்படும் காணி என்பதால் மிகவும் பள்ளக் காணியாக இருந்தது. அதற்கு அராலித்துறைக் கடற்கரைப் பகுதியிலிருந்து ஊரிமணலைப் பெற்று மைதானம் ஆக்குவது என்பது பெரியவிடயமாகும். திரு. நாகராசா அவர்கள் சிரமதானத்தின் மூலம் மண்போட்டு உயர்த்தி மைதானமாக்கலாம் எனவும் ஆலோசனை கூறிய வேளை பலர் ஏளனமாகச் சிரித்தனர். அந்நேரத்தில் செய்வதாயின் 400,000 ரூபா வேண்டும். நான் இதனை முன்னின்று செய்து தருகின்றேன் எனவும் அதிபர், உப அதிபர்களின் உதவி இருந்தால் இக் காரியத்தைச் செய்யமுடியும் எனக் கூறியது மட்டுமல்லாது வேலணை கிழக்கிலிருந்து நாரந்தனை வரையுமுள்ள உழவு இயந்திர உரிமையாளர்களை அணுகி அவர்களதும் கூலியாட்களதும் (பெரும்பாலும் பெற்றோர்) உதவியுடன் குறுகிய காலத்தில் விளையாட்டு மைதானத்தை உருவாக்கி மாணவர்களின் பாவனைக்கு விட்டவர் திரு. நாகராசா அவர்கள் என்றால் மிகையாகாது. இது விடயமாக பாடசாலைக்கு ஏற்பட்ட செலவு 800/- ரூபா மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது.

வேலணையில் ஆசிரியர் தொழில் பெற்ற சிறிது காலத்தில் மோட்டார் வாகனத்தில் வந்து போவார். வரும்போது எந்த விதபலனையும் எதிர்பாராது தன்னுடன் கற்பிக்கும் ஆசிரியர்களையும் காரில் அழைத்து வருவார். ஏனெனில் ஆசிரியர்கள் நேரகாலத்தோடு வந்தால் கல்வி கற்பித்தலில் அக்கறை கொள்வார்கள் எனக் கருதியதனாலேயாகும். அத்துடன் 1961 – 1963 ஆம் ஆண்டுகளிடையில் ஆசிரியர் கழகச் செயலாளராகவிருந்து சிறப்பாகப் பணிபுரிந்ததுடன் பல ஆண்டுகள் இளங்கோ இல்ல ஆசிரியராக இருந்துள்ளதுடன் தொடர்ச்சியாக மூன்றாண்டுகள் சம்பியனாகவும் வரப்பாடுபட்டவர்.

இளமைக் காலத்தில் விளையாட்டில் சிறந்து விளங்கிய திரு. நாகராசா அவர்கள் கோட்டமட்டத்தில் குண்டெறிதலில் முதலாமிடத்தையும் நீண்டதூர ஓட்டத்தில் மூன்றாமிடத்தையும் ஓட்டப்போட்டிகளில் பங்குபற்றியதையும் அடிக்கடி நினைவு கூரும் ஆசிரியர் அவர்கள் வறுமையில் வாடும் மாணவர்களின் நலன்களில் அக்கறை கொண்டு பல சந்தர்ப்பங்களில் தனது செலவில் இலவசமாகப் பாடப் புத்தகங்களை வழங்கி மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு ஊக்கம் கொடுத்தவர்.

திரு நாகராசா அவர்கள் சமூக சேவைகளிலும் அக்கறை கொண்டுழைத்

தவர். வேலணை கிழக்கு கலைமகள் சேவா சங்கத்தில் தனாதிகாரியாகவும் இந்துசமயத் திணைக்களத்தின் அனுசரணையுடன் ஆரம் பிக்கப்பட்ட இந்துசமய விருத்திச்சங்க செய லாளராகவும் பணியாற்றியபோது 300 இற் கும் மேற்பட்ட மாணவர்களுக்கு சமய தீட்சை செய்து வைத்ததுடன் மாணிக்க வாசகர் குருபூசையினை வருடாவருடம் ஒழுங்கு செய்து நடாத்தியவர். அத்துடன் மகாத்மா காந்தியின் நினைவு தினத்தைக் கொண்டாடும் முகமாக ஏற்படுத்தப்பட்ட சபையின் செயலாளராகவிருந்து வருடம் தோறும் அறிஞர்களை வரவழைத்து நினைவு தினத்தை நடாத்திய பெருமையும் இவரையே சாரும்.

காவிரிப்பூம் பட்டினம் கடல் கொண்டு போனது பற்றிக் கேள்விப்பட்டுள்ளோம். அண்மையில் நிகழ்ந்த சுனாமி கடலலையின் தாக்கத்தினால் அந்தமான் தீவுகள், சுமாத் திராத்தீவு நாலு அடி தூரம் நகர்ந்துள்ளது என புவியியலாளர்கள் கருதுகின்றனர். புவியியற் கல்வியில் ஆர்வம் கொணட திரு. நாகராசா அவர்கள் வேலணை சாட்டிப் பிரதேசத்தில் 100 அடி தூரம் கடல் கொண்டு போய்விட்டது என்பதை ஆதார பூர்வமாக எடுத்துக் கூறுவதுடன் 100 அடி தூரத்தில் கடலுக்குள் கட்டுக்கிணற்றின் சிதைவுகள் காணப்படுவதையும் உறுதிப் படுத்துவதுடன் அகழ்வாராய்ச்சியாளர்கள் இதனை ஆய்வு செய்ய வேண்டும் என வலியுறுத்திக் கூறுகின்றார்.

திரு. நாகராசா அவர்கள் தன்னைக் கவர்ந்த ஆசிரியர்கள் பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில் பண்டிதர். பொன்னுத் துரை, திரு. சி. இராசரத்தினம், திரு. அ. செல்லையா, திரு. திருநீலகண்டன், திரு. ஏ. கே. கந்தையா, வித்துவான் சிவப்பிர காசம் போன்றவர்களைக் குறிப்பிட்டுக் கூறுவதுடன் அவர்களது தன்னலமற்ற சேவைகளையும் நினைவுகூருகின்றார். அதே போல தனக்கு பல நூற்றுக்கணக்கான நண்பர்கள் இருந்த போதிலும் அமரர் திரு. எஸ். வரதலிங்கம், திரு.எஸ். இராசநாயகம், சுளிபுரம் ஜெகநாதன், நீர்வேலி பஞ்சாட்சரம், திரு. பொன்னுத்துரை மாஸ்டர், காலஞ் சென்ற கல்விப் பணிப்பாளர் அமரர் திரு. சு. இரத்தினராசா போன்றோர் தனது இன்ப துன்பங்களில் இணைந்தவர்கள் என்கிறார்.

யாழ்ப்பாணப் பல்கலைக்கழக முன் னாள் துணைவேந்தரும் புவியியற் பேரா சிரியருமான பேராசிரியர் பொ. பால சுந் தரம்பிள்ளை அவர்கள் திரு. நாகராசா அவர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் "வேலணைப் பிரதேசத்தில் பட்டதாரிப் பாரம்பரியத்தை உருவாக்கிய பெருமை யாவும் நாகராசா மாஸ்டரையே சாரும்" எனக்கூறிச் செல்வது குறிப்பிடத்தக்கது. அதாவது திரு. நாகராசா அவர்களைத் தொடர்ந்து அவரது உதவியுடன் இளைஞர் கள் பலர் இந்தியா சென்று பட்டதாரி களாக வந்துள்ளனர் என்பதே அதனுடைய விளக்கமாகும்.

திரு. நாகராசா அவர்கள் பாட சாலை யில் கற்பித்தவை தவிர அங்கு எழுந்தருளி யிருக்கும் கோவில் புனரமைப்பு வேலைக ளில் அதிகம் நாட்டம் கொண்டிருந்தார். அதிபராகக் கடமையாற்றிய சிவராஜரட்ணம் அவர்களின் காலத்தில்-பாடசாலை தொடங் கிய காலத்திலிருந்து அரைகுறையாகக் கட்டப்பட்டிருந்த கோவிலுக்கு வேண்டிய விக்கிரகங்களை யாழ்ப்பாணத்தில் அன்னா ரின் வீட்டுக்கு அருகிலிருந்த சிற்பியான திரு. பாஸ்கரனைக் கொண்டு செய்வித்து அவ் விக்கிரகங்களை பாலஸ்தானம் செய்வித்து

மாணவர்களுக்கு முழுமையான வழிபாட்டினை மேற்கொள்வதற்கு வழிவகுத்தவர். இவருடன் அதிபரும் அமரர்களான திரு. கேதாரநாதன், திரு. வரதலிங்கம் ஆகியோர் உதவி புரிந்தனர் என்பதை திரு. நாகராசா அவர்களுடன் கற்பித்த ஆசிரியர்கள் மூலமாக அறிய முடிந்தது.

முடிவாக மிக அமைதியாக ஆடம்பரமில்லாமல் எமது சமூகத்திற்கு குறிப்பாக மாணவர் சமூகத்திற்கு அளப்பரிய சேவையாற்றிய திரு. நாகராசா அவர்கள், வீதியில் போக்குவரத்து வழிக்காட்டித்தூண் இருந்த இடத்தில் இருந்துகொண்டே மற்றவர்களின் போக்குவரத்தினைச் சுலபமாக்குகின்றதோ அதேபோல இவரும் தனது முன்னேற்றத்திலும் பார்க்க இளம் சமூகத்தினர் குறிப்பாக மாணவர்களின் உயர்ச்சிக்கு பெரிதும் உழைத்தவர் என்பதை மறக்க முடியாது. இவரை இவரது மாணவர்கள் மிகவும் கண்டிப்புடன் நடந்துகொள்பவர் என்பதை தமக்கிடையே கூறிக்கொண்டதை திரு. நாகராசா அவர்கள் அறியாதவர் அல்லர். ஏறத்தாழ 30 ஆண்டுகள் பணியாற்றிய காலத்தில் ஏன் தான் மாணவர்கள் மற்றும் கல்லூரிச் சமூகத்தினர் மத்தியில் கண்டிப்புடன் நடந்துகொண்டேன் என்பதை இளைப்பாறிய பின்னர் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என எண்ணியிருந்தார். அதாவது தனது பிரதேசத்தைச் சேர்ந்த மாணவர்கள் கல்வி, ஒழுக்கம் மற்றும் ஆளுமை வளர்ச்சியைக் கருதியே இவ்வாறு நடந்துகொண்டேன் எனக்கூறும் திரு. நாகராசா அவர்கள் தான் இளைப்பாறிய போது பிரிவுபசாரம் நடத்தப்பட்டிருந்தால் சொல்லலாம் என்றிருந்தார். ஆனால் அந்நிகழ்வு நிகழாததால் தனது மேற்குறித்தவற்றிற்கான விடையினை அளிக்க முடியாது போய்விட்டது எனக் கவலை கொண்டுள்ளார் என்பதே உண்மை நிலையாகும்.

திரு. நாகராசா அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் மனோதிடத்தினையும் எல்லாம் வல்ல இறைவன் வழங்குவார் என்ற நம்பிக்கை எம் எல்லோருக்கும் உண்டு.

வாழ்க வளமுடன்!





# கல்விமான்கள்

## திரு. பொன்னையா நடராஜா

திரு. த. தர்மராஜா (ஆசிரிய ஆலோசகர் - வேலணை)

யாழ்ப்பாண மாவட்டத்தின் ஓர் அங்கமாக விளங்கும் தீவகம் பல்வேறு வளங்களையும் ஆன்மீகம் அறிவியல் மற்றும் ஆற்றல்கள் வாய்க்கப்பெற்ற மக்கள் சமூகத்தையும் கொண்டு விளங்குகின்றது. பூகோளரீதியாக பரந்தமைந்ததீவகத்தின் மையப் பகுதியில் நீர் வளமும் நிலவளமும் விசேடமாக வாய்க்கப் பெற்றது வேலணைக் கிராமம். அதன் கிழக்கில் 2ம் வட்டாரம் செல்வநாய கம் வீதியில் தமிழ் மொழிப் பற்றும் சைவச் செழுமையும் சோதிடக்கலை திறன்களும் எனப் பல திறமைகளையுமுடைய பண் பாளப் பெருந்தகை வேலுப்பிள்ளை பொன் னையா அவர்கள். அவரது இல்லறத் துணை வியார் அவரது உறவினுள் முகிழ்ந்த சிவக் கொழுந்து அம்மையார். கல்வி கேள்வி நிலபுலம் பொருட்செழுமையும் கொண்ட தாக பொன்னையா சிவக்கொழுந்து தம்பதி களின் குடும்பம் வாழ்ந்தது. பிறர் மீது அன்பும் கருணையும் கொண்டு வாழ்ந்த இக்குடும்பம் கிராம மக்களின் நல்வாழ்வு; சுருதி சோதிடம், மனை சாத்திரம், பயன் சொல் லுதல் போன்ற அறப்பணிகளை தொண் டாகவே ஆற்றி சிறந்த வழி காட்டியாக வாழ்ந்ததன் மூலம் மக்களது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய தம்பதியினராகவே வாழ்ந்து வந்தனர்.

> மங்கலம் என்பது மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு.

எனும் திருவள்ளுவர் வாக்கிற்கமைய இறைவன் திருவருளினால் ஒன்பது குழந் தைகளை மகவாகப் பெற்று மகிழ்ந்தனர். அவர்களில் நான்காவது பிள்ளையாக 1930 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 24 ஆம் திகதி பிறந்தவர் நடராஜா அவர்கள். எப்பொழு

தும் தனக்காகவும் குடும்பத்திற்காகவும், சமூகத்திற்காகவும் இயங்கிக் கொண்டிருப்பதால் சிவனின் நடராசா நாமம் இவருக்கு சூட்டப்பட்டதோ என்று எண்ணத் தோன்றுகின்றது. இவரது சிறு வயதிலேயே தாயாரை இவர் இழந்தபோதும் சிறிய தாயாரின் அரவணைப்பில் கண்ணும் கருத்துமாகவும் செல்லமாகவும் வளர்க்கப்பட்டு வந்தார்.

திரு நடராசா அவர்கள் விளையும் பயிரை முளையில் தெரியும் என்பதற்கமைய ஆன்மீகப் பற்றும் அறிவுப் பற்றுக் கோடும் உடையவராக வளர்க்கப்பெற்று வந்தார். அவர் தமது ஆரம்பக் கல்வியை வேலணை சரஸ்வதி வித்தியாசாலையிலும் இடைநிலைக் கல்வியை வேலணை மத்திய கல்லூரியிலும் திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாசாலையிலும் கற்றுத் தேறி சிரேஸ்ட பாடசாலைத் தராதரப் பரீட்சையில் சித்தியெய்தினார். அதனைத் தொடர்ந்து உயர் தொழிற் கல்வியை யாழ்ப்பாணம் நல்லூர் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையிலும் பயின்று வெளியேறினார்.

இவர் 1958 ஆம் ஆண்டு மே மாதம் 14 ஆம் திகதி குருநாகல் இலங்கை திருச்சபை தமிழ் கலவன் பாடசாலையில் ஆசிரிய நியமனம் பெற்றுக் கடமையேற்றார். ஆசிரியர் திரு. நடராஜா அவர்கள் தமது தாய் மாமன் மகளான கமலாதேவியை இல்லறத் துணைவியாக ஏற்று மகிழ்வுடன் வாழ்ந்தார். இவர்கள் ஒரு மகனையும் ஒரு மகளையும் பிள்ளைச் செல்வங்களாக பெற்றெடுத்து இன்புற்றனர். சேவையில் இடமாற்றம் பெற்று 1964 ஆம் ஆண்டு முதல் தான் கல்வி பயின்ற வேலணை மத்திய கல்லூரியில் மகிழ்வோடு கடமையேற்றுக்கொண்டார். கடமை கண்ணியம் கட்டுப்பாட்டுடனும் மனத்திருப்தியோடும் 1972 ஆம் ஆண்டு வரை அங்கு ஆசிரியராகக் கடமையாற்றினார்.

மாணவர்களின் கல்வியில் மிகவும் அக்கறையுடையவராகவும் கண்டிப்பும் பரிவும் மிக்க ஆசிரியராக மத்திய கல்லூரியிலும் கடமையாற்றினார். மாணவர்களது ஒழுக்கம் சமய சிந்தனை வளர்ச்சி மற்றும் ஆசிரியர்களுடன் நல்லுறவு, பெற்றோர் நலன் விரும்பிகளுடனும் பாடசாலை அதிபர் முகாமைத்துவத்தை சேர்ந்தவர்கள் பாடசாலை அபிவிருத்திச் சபை, பழைய மாணவர் சங்கம் பாடசாலைச் சமூகத்தவர் யாவருடனும் சமூக உறவை வளர்த்துப் பேணியதுடன் கல்லூரியின் கல்வி வளர்ச்சிக்கும் அபிவிருத்தி முன்னேற்றங்களுக்கும் வேண்டிய ஒத்துழைப்புக்களை வழங்கி மிகத் திறமையாகச் செயற்பட்ட ஓர் முன்னோடி ஆசிரியராக விளங்கினார்.

ஆசிரியப் பெருந்தகை திரு. நடராஜா அவர்கள் தமது பல்வேறு திறமைகளையும் ஆற்றல்களையும் கல்விச் சேவைக்கு முழுமூச்சோடு பணியாற்றியதன் பெறு பேறாக 1972 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அதிபர் பதவி உயர்வு பெற்று வவுனியா மாவட்டத்தின் பண்டாரிக்குளம் அ.த.க. பாடசாலையில் (தற்போது விபுலானந்தா மகாவித்தியாலயம்) கடமையேற்றார். அக் காலத்தில் அங்கு அவர் ஒரு சிறந்தகல்வி முகாமைத்துவத்திற்கு இருக்கவேண்டிய தலைமைத்துவப் பண்புகள் யாவற்றையும் பேணி வந்தார். கடமையுணர்வு, பொறுப்புணர்வு, கட்டுப்பாடு, ஈவிரக்கம், நெகிழ்வுத் தன்மை, முன்னோடி, முன்மாதிரி, நேரம் தவறாமை போன்ற, உயரிய பண்புகளையும் தமது நடத்தைகளோடு இரண்டறக் கலந்து வழிகாட்டியான அதிபராக 1974 ஆம் ஆண்டு வரை அங்கு புகழ்பூத்த அதிபராக

விளங்கினார்.

அதிபர் திரு. நடராஜா அவர்கள் 1975 ஆம் ஆண்டு வவுனியாவில் இருந்து யாழ் மாவட்டத்திற்கு இடமாற்றமாகி வந்தார். முதலில் மண்டைதீவு கார்த்திகேசு வித்தியாலயத்திலும் தொடர்ந்து வேலணை ஐயனார் வித்தியாலயத்திலும் அல்லைப்பிட்டி பராசக்தி வித்தியாலயத்திலும் அதிபராகக் கடமையாற்றினார்.

நிறைவாக தான் ஆரம்பக் கல்வியை கற்ற வேலணை சரஸ்வதி வித்தியாசாலையில் அதிபராகப் பொறுப்பேற்று மிகுந்த ஆர்வத்தோடும் ஆவலோடும் அதிபர் கடமையை ஆற்றினார்.

மாணவர்களினது கல்வியைத் தன் உயிர் மூச்சாகக் கொண்டு அரிய பணியாற்றினார். ஆசிரியர்களது நலனையும் அவர்களது வாண்மை விருத்தியையும் அன்போடும் பண்போடும் தனது உள்ளத்தில் பதிய வைத்து அவர்களைத் திருப்தியடைய வைத்தார். வித்தியாசாலையின் பௌதீகக் கட்டிட விருத்தியையும் வளங்களையும் தனது உடல் போல் கட்டி வளர்த்துப் பேணினார். 1990 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23 ஆம் திகதி வித்தியாசாலையின் அதிபர் பதவியில் இருந்து ஓய்வு பெற்றார்.

அதிபர் உயர்திரு நடராஜா அவர்கள் ஆசிரியராகவும் அதிபராகவும் சிறப்பாக வேலணை மக்களுக்கும் தீவக மக்களுக்கும் ஆற்றிய பணிகள் மகத்தானவை. ஆசிரியத்துவத்திற்கு அர்த்தபுஷ்ட்டியான உணர்வோடு வடிவம் அமைத்துச் சேவையாற்றிய பெருமகனாக விளங்கியதை எண்ணிப் பார்க்கும் போது மிகவும் மகிழ்ச்சியாகவுள்ளது.

அவரது இத்தகைய சிறப்புக்களுக்கு அவர் ஓர் ஆசிரியர் என்ற வகையில் அவர் பேணிய தெய்வபக்தி, தேசபக்தி, தர்ம பண்புகள், நீதியான வாழ்வியல் முறை யாவரிடமும் பேணிய பேரன்பு, நேர்மையான நடத்தைகள், அர்ப்பணிப்பான சேவைகள். எப்பொழுதும் பொறுமை பேணி நிறைவு கண்டமை போன்ற உயரிய பண்புகள் துலாம்பரமாக தென்பட்டதை யாவரும் அறிவர்.

திரு. நடராசா ஆசிரியர் அவர்கள் தான் கடமையாற்றிய குருநாகல், வவுனியா, தீவகம் போன்ற பிரதேசங்களில் சிறந்தஒரு தொழிற்சங்கவாதியாகவும் விளங்கியுள்ளமையும் நோக்குதற்குரியது. ஆசிரியர்களது உரிமைகளுக்காக அமைதியோடும் தன்னடக்கத்தோடும் பணியாற்றி தொழிற்சங்கவாதியாகவும் இலங்கை தமிழர் ஆசிரியர் சங்கத்தின் பொதுச் சபை உறுப்பினராக விளங்கி அரும்பணியாற்றியுள்ளார்.

ஆசிரியர் அவர்கள் குருநாகலில் கடமையாற்றியபோது குருநாகல் சைவ மகாசபையின் செயலாளராக விளங்கி பின்தங்கிய மாணவச் செல்வங்களுக்கு சைவ சமயத்தையும் தமிழையும் இலவசமாக கற்பித்தும் நாயன்மார் குருபூசைகளையும் நடாத்தி மாணவர் மனதிலும் இளைஞர் சமூகத்திலும் சைவ விழிப்புணர்வையும் திருமுறைகளைப் மனப்பாடம் செய்து பாடி மகிழவும் வைத்து சமயப் பணிகள் ஆற்றினார்.

வேலணையிலும் தீவகத்திலும் ஏனைய பகுதிகளிலும் திரு. நடராஜா ஆசிரியர் அவர்கள் ஆலயப் பணிகளிலும் சமயப் பணிகளிலும் கூட்டுறவு சேவைகளிலும் சமூகப் பணிகளிலும் சிறப்பாக நீதித்துறை சார்ந்த சமாதானப் பணிகளிலும் அயராது தொண்டுகள் ஆற்றி சமூகத்தின் நன்மதிப்

பிற்கும் நம்பிக்கைக்கும் உரியவராக விளங்கி வருகிறார். அத்தகைய பணிகளை ஓய்வு பெற்ற பின்னரும் இன்றுவரை ஆற்றி வருவதிலிருந்து அவரது சமூக சிந்தனைகளையும் ஜனரஞ்சகமான உணர்வுகளையும் வெளிக்காட்டி நிற்கின்றது. அந்த வகையில் வேலணை மக்களதும் தீவக மக்களினதும் பெரும் நன்றிக் கடனுக்கும் பாராட்டிற்கும் உரியவராக விளங்குகின்றார்.

ஆசிரியப் பெருந்தகை அவர்கள் வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் ஆலயத்தின் பரிபாலன சபைச் செயலாளராகப் பதினாறு ஆண்டுகள் பணியாற்றினார். அக்காலத்தில் ஆலய பரிபாலனத்தை மிகத் திறமையாக மேற்கொண்டதோடு ஆலயம் பொதுமக்களது நம்பிக்கைச் சொத்து என்பதை உறுதிப்படுத்தி அதனை பதிவும் செய்வித்து சகல அடியார்களின் நம்பிக்கைக்குரிய வணக்கத்திற்குரிய ஆலயமாக நிர்மாணம் செய்வித்து ஆன்மீக நம்பிக்கையையும் உறுதிப்பாட்டையும் மக்களுக்கு பெற்றுக்கொடுத்தார்.

வேலணைப் பிரதேசம் ஒரு கல்வி வட்டாரமாகப் பிரகடனப்படுத்தப்பட்ட பின்னர் அதிபர் நடராஜா அவர்கள் 1978 முதல் 1985 காலப் பகுதியில் வட்டார அதிபர் சங்கச் செயலாளராகக் கடமையாற்றினார். அக்காலம் அவர் சங்க செயலாளர் என்ற வகையில் வேலணை கல்வி வட்டாரப் பாடசாலைகளின் பொதுப் பரீட்சைகள், விளையாட்டுப் போட்டிகள், உடற்கல்வி போட்டிகள் போன்றவற்றை வட்டாரக் கல்வி அதிகாரி திறம்படத் திட்டமிடுவதற்கும் செயற்படுத்துவதற்கும் பெரும் பக்கபலமாக விளங்கியதோடு அப் பணிகளைப் பொறுப்பேற்றும் நடாத்தி கல்வி வட்டாரத்தின் இணைப் பாடவிதானக் கல்வி செயற்பாடுகளுக்கும் வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது. வேறு வார்த்தைகளில் கூறுவதாயின் வேலணைக் கல்வி வட்டாரத்தின் கல்வி வளர்ச்சிக்கு ஓர் உறுதுணையான அதிபராக திரு. நடராஜா அவர்கள் விளங்கினார் எனலாம்.

வேலணை பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் நெறியாளர் குழு உறுப்பினராகவும் பின்னர் தலைவராகவும் 1980 ஆம் ஆண்டுகளின் பிற்பகுதியில் அரிய கூட்டுறவுப் பணிகளை ஆற்றினார். பணிப்பாளர் சபையை செயற்றிறன் வாய்ந்ததாக இயங்க வைப்பதிலும் உயிரோட்டம் உள்ளதாகவும் செயற்படவைத்தார். அதேபோல் பணியாளர்களையும் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி அவர்களை திருப்தியோடு பணியாற்ற வைத்தார். அதனால் சங்கம் முன்னேற்றமடைந்து சங்கத்திற்கு எழில் மிக்க தலைமைக் காரியாலயத்தை அமைத்து அதன் வளர்ச்சியின் வெளிப்பாட்டை எடுத்துக் காண்பித்தார். சங்கத்திற்கு விவசாயப் பயிர்ச்செய்கைக்குரிய பெரிய தோட்டம் ஒன்றையும் அவர் தலைவராக இருந்த காலத்தில் கொள்வனவு செய்து அசையாச் சொத்து ஒன்றை அழியாச் சொத்தாக தேடிக்கொடுத்தார். இவைபோன்ற இன்னும் பல கூட்டுறவுப் பணிகளை வேலணைப் பிரதேசத்திற்கு அவர் அர்ப்பணிப்போடு நிறைவேற்றி வழங்கியுள்ளார்.

வேலணை கமநல கேந்திர நிலையத்தின் கீழ் இயங்கிவரும் வேலணை கிழக்கு மத்தி மற்றும் தென்கிழக்கு, விவசாய சம்மேளனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதையடுத்து விவசாயிகளுக்கு பல நற்பணிகளை ஆற்றியுள்ளார். விவசாயிகளுக்கு வேண்டிய கடன்வசதிகள், விதை தானியங்கள், உர வகைகள், நல்லின நாற்றுக்கள், போன்றவற்றையும் விவசாய

உபகரணங்களையும் பெற்று வழங்கியும் விவசாயிகளை ஊக்கப்படுத்தி விவசாய வளர்ச்சிக்கும் விருத்திக்கும் அரும்பணி யாற்றியுள்ளார்.

இளைப்பாறிய அதிபர் அவர்கள் வேலணைப் பிரதேச சபையின் கீழ் இயங்கும் சனசமூக நிலையங்களின் சமாசத் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டு அவற்றின் வளர்ச்சியில் அக்கறையுடன் ஈடுபட்டு வருகின்றார். சமூகத்திற்கு வழிகாட்டியாகவும் வேண்டிய நேர்த்தியான தலைமைத்துவ ஆற்றலையும் அறிவுத் திறனையும் சனசமூக நிலையங்கள் மக்களுக்கு பெற்றுக் கொடுக்க வேண்டும் என்ற சிந்தனையை கொண்டவர் ஆசிரியர் நடராஜா அவர்கள்.

மக்களின் வேண்டுகோளுக்கு அமைய நீதியமைச்சு அவரது சமூக சமய அறிவியற் பணிகளையும் நடத்தைக் கோலங்களையும் பண்புகளையும் மதிப்பிட்டு அகில இலங்கை சமாதான நீதவான் பட்டத்தை வழங்கி கௌரவித்துள்ளது.

வேலணை சமூகத்தின் நல்வாழ்வுச் சிந்தனை மிக்க செயல் வீரனான திரு. நடராஜா அவர்கள் ஓய்வூதியர் என்ற வகையிலும் வேலணைப் பிரதேச செயலகத்தின் ஓய்வூதியர் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பணியாற்றி வருகின்றார். ஓய்வூதியர்களின் வேதன அளவுகள் ஓய்வூதிய அதிகரிப்புகள் ஓய்வூதியர்களின் வருமதிகள் ஓய்வூதிய வேறுபாடுகளை நீக்குதல் போன்ற பல ஓய்வூதிய பணிகளை ஓய்வூதியர்களுக்கு பெற்றுக் கொடுத்துவருகிறார். ஓய்வூதியம் தொடர்பான சுற்று நிருபங்கள் நன்கு படித்தறிந்து சங்கத்தின் ஊடாக அதிகாரிகளையும் ஓய்வூதியர்களையும் இணைத்து பல நலன்களை அவர்களுக்குப் பெற்றுக் கொடுத்து வருகிறார்.

சமூக இசைவாக்கம் நிறைந்த வாழ்நாள் ஆசிரியராக விளங்கும் திரு. நடராஜா அவர்களை தொகுத்து நோக்கினால் நேர்த்தியான சிறுவனாக வளர்ந்து சிந்தனையும் விவேகமும் மிக்க இளைஞராக மிளிர்ந்து ஒழுக்கமும் கட்டுப்பாடும் கடமையுணர்வும் மிக்க நல்லாசிரியனாகக் கடமையாற்றி கோபம் கொள்ளாது உறுதியான வெளிப்பாடுகளைக் காண்பிக்கும் கண்டிப்பும் கருணையும் மிக்க பொறுப்புள்ள அதிபராக விளங்கி நேர்மையும் நம்பிக்கையும் புனிதமும் கூடிய சமய சமூக கூட்டுறவுத் தலைவனாக வாழ்ந்து எவருடனும் அன்பாகப் பழகி அவரவர் உளநிலை அறிந்து ஆரோக்கியமான ஆலோசனைகள் வழங்கும் வழிகாட்டியாக நடந்து எழுபத்தைந்து வயதையும் தாண்டி ஓர் இளைஞனுக்குரிய உளச் சிந்தனைகளும் உடல் ஆரோக்கியமும் கொண்டவராகவும் சிந்தனை முழுதும் தாய் மண்ணில் வாழ்வும் வளமும் நலமுமாக வாழும் மங்காத சிந்தனையாளர் என்றால் மிகையாகாது.

சிறப்பாக வேலணையின் நல்வாழ்விற்காகவும் பொதுவாகத் தீவகத்தின் வாழ்விற்காகவும் உத்தியோகப் பற்றுள்ள ஆசிரியர் அதிபர் கடமைகள் ஊடாகவும் உத்தியோகப் பற்றற்ற சமூகப் பணிகள் ஊடாகவும் உயர்திரு நடராஜா ஆசிரியர் அவர்கள் வழங்கிய அர்ப்பணிப்பான சேவைகளுக்கு வேலணை மண் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. அதிலும் அவரது பணி புகழ் விரும்பாத தன்னடக்கமான பணிகள் என்பதை எண்ணும் போது வேலணை மக்களால் அடையாளம் மிக்க கௌரவம் வழங்கப்பட வேண்டியவர் என்பதை

எவரும் ஏற்றுக் கொள்வர். அத்தகைய ஓர் அடையாள கௌரவத்தை வேலணை யின் நலனில் அக்கறையுடைய ஒவ்வொரு அன்பர்களதும் நிறுவனங்களினதும் எதிர் காலத்தினதும் சிந்தனைக்குரிய விடயமாகக் கொள்ளவேண்டியது தலையாயதாகும். அதுவே அவரது சேவைகளுக்கு அன் போடும் பண்போடும் நம்மால் செய்யக் கூடிய நன்றி உணர்வின் ஒரு சிறிய பங் காக இருக்க முடியும். எல்லாம் வல்ல முத்துமாரி அம்மன் ஆசிரியருக்கும் அவரது துணைவியாருக்கும் பிள்ளைகள் மருமக் களுக்கும் பேரக்குழந்தைகளுக்கும் உள உடல் ஆரோக்கியத்தை நிறைவாக வழங்கி சகல செல்வங்களையும் வழங்கி அவர் இன்னும் நீண்ட காலம் வாழ்ந்து நற் பணிகள் தொடரவேண்டும் என இறைஞ்சு கின்றேன்.

சுபம்.





# கல்விமான்கள்

# திரு. பொ. கேதாரநாதன்

திரு சுந்தரம்பிள்ளை கலாதரன்
(முன்னாள் அதிபர்- சேர் வைத்திலிங்கம் துரைசுவாமி
ம.ம.வி.வேலணை)

## ஆளுமையின் அடையாளம்

இரசாயனவியலை மூலமாகக்கொண்டு பெரும் பதவிகள் பெற்று, கல்விச் செல்வத்துடன் பொருட்செல்வமும் நிரம்பப் பெற்று, தீவகத்தைச் சேர்ந்தபலர் இன்று உலகின் பல நாடுகளிலும் வாழ்கிறார்கள். அமெரிக்க விண்வெளி ஆய்வு விஞ்ஞானிகள், பிரபல பொறியியலாளர்கள், பிரித்தானிய மகாராணியின் விருதுகள் பெற்ற வைத்திய விற்பன்னர்கள், பேராசிரியர்கள் தொடக்கம் இன்று பல வைத்தியர்களையும் பொறியியலாளர் முதலானவர்களையும் உருவாக்கிக்கொண்டிருக்கும் ஆசிரியர்கள் உட்படப் பலரும் இவர்களிலடங்குவர். இவர்கள் அனைவராலும் மனத்திலேற்றித் துதிக்கப்படுகின்றவர் ஒருவர். அவர்தான் அமரர் பொ. கேதாரநாதன்.

"சேரிடம் படித்த எனக்குப் பிழையாக எழுதக் கை வராது". இது யாழ் பிரபல பாடசாலை ஒன்றின் விஞ்ஞான ஆசிரியர் ஒருவரின் கூற்று. "எமக்கு அம்மாதான் இரசாயனம் கற்பித்தார். அவரைப்போல லண்டனில் எவராலும் கற்பிக்க முடியாது அம்மாவுக்கு, பெருமதிப்புக்குரிய ஆசிரியர் ஒருவர் கற்பித்தாராம்." இது ஒக்ஸ்போட் பல்கலைக்கழக மருத்துவ மாணவிகள் இருவரின் கூற்று.

அமரர் பொ. கேதாரநாதன் அவர்கள் வேலணையின் மேற்குப்பகுதியில் நல்லொழுக்கமும் நற்செய்கைகளும் தெய்வ பக்தியும் பெருஞ்செல்வப்பேறும் நிரம்பப் பெற்ற ஒரு குடும்பத்தில் பொன்னையா செல்லம்மை தம்பதிகளுக்கு இரண்டாவது பிள்ளையாக 11.01.1933 ஆம் திகதி பிறந்தார்.

# வேலணைத் துறையூர்
# மீன்சந்தையும் - அம்பலவாணர் பாலமும்



இவரது முன்னோர்கள் வேலணை மேற்கு ஸ்ரீ மகா கணபதிப்பிள்ளையார் ஆலயப் பரிபாலகர்கள். பெற்றோர்கள் அத் திருக்கோவிலுக்குக் கருங்கல் திருப்பணி செய்து புனருத்தாரணம் செய்த பெரும் பேறு பெற்றவர்கள்.

சிறுவன் கேதாரநாதன் தனது ஆரம் பக் கல்வியை வேலணை சைவப் பிரகாச வித்தியாலயத்தில் பெற்றார். இடைநிலைக் கல்வியை வேலணை மத்திய கல்லூரியில் ஆரம்பித்துப் பின் யாழ் இந்துக்கல்லூரியில் பெற்றார். இந்துக் கல்லூரியில் கற்ற காலத் தில் இவர் நல்லொழுக்கத்திலும் கல்வியி லும் சமயச் செயற்பாடுகளிலும் விளையாட் டுக்களிலும் மிகச் சிறந்த மாணவராகத் திகழ்ந்தார். அவரது சிறப்புச் செயற்பாடு களும் நட்புறவுடன் பழகும் தன்மையும் பல மாணவர்கள் இவரைத் தமது வழி காட்டியாகக் கொள்ளக் காரணமாயின. பல மாணவர்கள் இவரிடம் பாடங்கேட்டு ஐயங்களைத் தீர்த்துக்கொண்டனர். ஆசிரி யர்களிடம் இவர் பெற்றிருந்த நற்பெயரும் மாணவர்கள் இவர்மேல் கொண்டிருந்த நன்மதிப்பும் காரணமாக இவர் யாழ் இந்துக்கல்லூரியின் சிரேட்ட மாணவர் தலைவராகத் தெரிவு செய்யப் பெற்றார்.

அங்கிருந்து கொழும்புப் பல்கலைக் கழகத்துக்குத் தெரிவுசெய்யப்பெற்ற அமரர் அங்கும் கல்வியிலும் புறக்கிருத்தியங்க ளிலும் தனது முத்திரையைப் பதித்து விஞ் ஞானப் பட்டதாரியாக வெளிவந்தார்.

ஆசிரியத் தொழிலைப் பெருவிருப்பு டன் தெரிவுசெய்தஅவர் தனது முன்னைய பாடசாலையான யாழ் இந்துக் கல்லூரியில் இரசாயனவியல் ஆசிரியராக நியமனம் பெற்று, சேவையை ஆரம்பித்தார்.

இக்காலத்தில் தனது தீவக மக்களுக்கு அங்கேயே சேவையாற்ற வேண்டும் என்ற பெரு விருப்பு மேலோங்க, இவர் வேலணை மத்திய கல்லூரிக்கு மாற்றலாகி வந்தார்.

இதுவரை தனது சகல ஆளுமைத் தன் மைகளையும் உயர்ந்த ஒரு நிலைக்கு வளர்த்திருந்த கேதாரநாதன் அவர்கள், மத்திய கல்லூரிக்கு வந்ததும் அவற்றைத் தீவகம் அனுபவிக்கத் தொடங்கியது. தீவா ரின் கண்கண்ட தெய்வங்களில் ஒருவரான அதிபர் தம்பு அவர்கள் தலைமையில், அமரர்களான சண்முகநாதன், கோபால பிள்ளை ஆகியோருடன் எம் நாயகனும் இணைந்து மத்திய கல்லூரியைக் கணித விஞ்ஞானக் கல்லூரியாக மாற்றியமைத் தனர். அனைத்துத் தீவுகளில் இருந்தும் மாணவமணிகள் மத்திய கல்லூரிக்குத் திரண்டு வந்து விடுதிகளில் இருந்து கற்றுத் தேறி மிக உயர் நிலையை அடைந்தனர்.

அழகான தோற்றம், ஆழமாக அளந்து பேசும்இயல்பு, சிறந்த நகைச்சுவை உணர்வு என்பனவும் பாடத்துறையில் சிறப்பான மேதாவிலாசமும் அவற்றைக் கற்பித்தலில் கையாண்ட நுணுக்கங்களும் மாணவரிடத் தில் அமரருக்குப் பெரும் மதிப்பை ஏற் படுத்தின. இரசாயனவியலை மாத்திரமன்றி இலக்கியம், சமூகவியல், நாளாந்த வாழ்க்கை முறை முதலானவற்றையெல்லாம் நகைச் சுவையுடன் கற்பிக்கும் வல்லாளர் அவர்.

குடும்பப் பின்னணி காரணமாகப் பெருமைகள் பல பெற்றிருந்த அமரருக்கு இந்த ஆசிரியத் தொழில் மேலும் நன்மதிப் புக்களையும் பெருமைகளையும் சமூகத்தில் அள்ளிக்குவித்தது. இச்சந்தர்ப்பதிலேதான் அமரர் அவர்கள் எண்ணிலடங்காப் பெருமை களையும் அளவற்ற பாண்டித்தியத்தையும்

பெரும் புகழையும் பெற்று எங்கும் எப் போதும் தான் நினைத்த எக்காரியத்தையும் சாதிக்கக்கூடிய வல்லமையுடன் விளங்கி, தீவகத்தின் முடிசூடா மன்னராக இருந்த அமரர் இ. மருதையனார் அவர்களின் திருமகள் திருமகளைத் திருமணம் செய்து கொண்டார்.

உடலழகிலும் கல்வியழகிலும் குண வழகிலும் திருமகள் தனக்குவமையில் லாதிருந்த காரணத்தினால் தம்பதிகளின் பெருமை கல்லூரியில் முதலிடம் பெற, சமூகத்தில் உயர்விடத்துக்கு வந்தது. மாணவர்கள் பெற்ற சிறப்புப் பெறுபேறு கள் காரணமாக யாழ் மாவட்ட இரசாயன வியற் பாடத் தலைமையுட்படப் பல கல்வி சார் பதவிகள் அமரரைத் தேடி வந்தன. தம்பதிகள் இருவரும் கல்வி டிப்ளோமாப் பட்டதாரிகளாயினர். பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்ந்தனர்.

எவரிடத்தும் அன்புடன் பழகி, தேவை யறிந்து தானாக முன்வந்துதவி, அனைவரது நன்மை தீமைகளிலும் தவறாது பங்கு பற்றி ஆலோசகராக, வழிகாட்டியாக, எடுத்துக்காட்டாக அமரர் விளங்கிய கார ணத்தினால் பற்பல சமூகத் தலைமை களையும் அவர் ஏற்கவேண்டி இருந்தது.

வகுப்புக்கு உள்ளேயும் வெளியேயும் அவர் வெளிப்படுத்திய ஆளுமைப் பாங்கு கள் மாணவர்கள் பார்த்து "நாயகராக" ஏற்றுப் பாவனை செய்து அவர்வழி முன் னேறக்கூடிய வகையில் சிறப்பாக அமைந் திருந்தன. இக்காரணிகள் காரணமாக தான்கற்ற, கற்பித்த அதே பாடசாலையில் அமரர் அதிபராகவும் அவ்வழி, வேல ணைக் கொத்தணியின் அதிபராகவும் பதவி உயர்வு பெற வழிவகுத்தன. மாணவர் களின் கல்வியிலும் எதிர்கால நலனிலும் மிகுந்த அக்கறை கொண்டு அமரரும் அம் மையாரும் கண்ணும் கருத்துமாக உழைக்க உழைக்க, இப்போது உலகமே வியந்து போற்றும் பெருமைவாய்ந்த நற்பண்புக ளும் மிக உயர் தகைமைகளும் கொண்டு விளங்குகின்ற பிள்ளைகள் எழுவர் பிறந்தார்கள்.

தான் கற்பித்த மாணவர்களின் பிள் ளைகளைப் பெரும்பான்மையினராகவும் தனது மாணவர்கள் பலரைக் கல்லூரி ஆசிரியர்களாகவும் கொண்ட நிலையில், அவர் வகித்த அதிபர் பதவியானது அதிபர் பதவிக்கே இலக்கணமாகவும் முன்னுதார ணமாகவும் திகழ, கல்லூரி சகல துறை களிலும் சிறப்பிடம் பெற்று வரலாயிற்று.

அரச நீதி, நிர்வாகம் சீர்குலைந்த நிலையில், சமூக நீதிக் கடமைகள் பலவற் றையும் குறிப்பாக மேன்முறையீடுகளையும் கவனிக்க வேண்டிய நிலை அமரருக்கு ஏற்பட்டது. எக்கடமையாயினும் அனைத் தையும் தன் அதி உயர் பண்பினாலும் திறமையினாலும் தர்ம சிந்தனையினாலும் சகலரும் ஏற்கும் விதத்தில் நீதி வழுவாது செய்துகாட்டிப் பெருமை பெற்றார் அமரர் பொ. கேதாரநாதன். சமூகத்தில் எந்த வயதில் எந்த நிலையில் உள்ளவர்களும் அமரரது குடும்பத்தில் இருந்தவர்களைப் பார்த்து பின்பற்றி முன்னேறக்கூடிய வகை யில் அமரரது குடும்பத்தினர் வாழ்ந்து காட் டினார்கள்.

. இந்த நிலையில் தீவகம் இடம் பெயர்ந் தது. உடல் பொருள் ஆவி அனைத்தையும் கல்லூரிக்கு அர்ப்பணித்திருந்த அமரரின் சக்திக்கு அப்பாற்பட்ட நிலை இது. ஒரு முறை மனங்கலங்கிப் போனார். உடனலங்

குன்றிப் போனார். ஆனாலும் சோர்ந்து விடவில்லை. உடனேயே யாழ்ப்பாணத்தில் பாடசாலையைத் தற்காலிக இடங்களில் நடத்தத் தொடங்கினார். யாழ்மாவட்டத்தின் கல்வி, சமூக, சமயத்துறைகளில் எல்லாம் அவர் பெற்றிருந்த உயர் நிலைகளும் அவர் செய்திருந்த தொண்டுகளும் அவரது நுண்ணிய அறிவும் தீவகத்தின் பால் குறிப்பாகக் கல்லூரியின் மேல் அவர் கொண்டிருந்த அளவிலாப் பற்றும் காரணமாக கல்லூரியைத் தனித்துவத்துடன் யாழ்நகரில் சிறப்பாக நடத்த அவருக்கு இயலுமானதாக இருந்தது. இக்காலத்தில் நடைபெற்ற பாடசாலைப் பரிசளிப்பு விழாவுக்குப் பிரதம விருந்தினராக வந்திருந்த மாமனிதர் துணைவேந்தர் க. துரைராசா அவர்கள், இவரது துணிச்சலான செயற்பாட்டையும் இவருக்குக் கிடைக்கும் ஆதரவையும் பாராட்டிச் சென்றமை குறிப்பிடத்தக்கது.

தீர்க்கதரிசனமான சிந்தை கொண்ட அமரரவர்கள் கல்லூரித் தாய்க்கேற்பட்ட இடரை நீக்கி உடனடியாகக் கல்லூரியைக் காப்பாற்றி உயிர் தப்ப வைத்ததுடன் நின்று விடாமல் நீண்டகாலப் போக்கில் அதனைச் சொந்த இடத்தில் நிலைபெறச் செய்து முதற்றரப் பாடசாலையாக்க வேண்டும் என்னும் முயற்சியில் ஈடுபட்டார்.

உடல் நலம் குன்றிய நிலையிலும், உயிரைக் கையில் பிடித்தபடி மட்டுமல்ல கடலில் போட்டுவிட்டுத் தேடவேண்டும் என்றிருந்த கிளாலிப் பயணத்தை மேற்கொண்டு கொழும்பு சென்று தனது பல்துறை ஆளுமையைப் பயன்படுத்தி. பழைய மாணவர் சங்கத்தின் கொழும்புக் கிளையை ஸ்தாபித்து, அன்பர்கள் மூலம் பெருந்தொகைப் பணத்தைச் சேகரித்தும் அதே சமயம் இலண்டன், பிரான்ஸ், கனடா, அவுஸ்திரேலியா முதலிய நாடுகளில் தனது மாணவர்களைத் தொடர்பு கொண்டு கிளைகளை அமைப்பித்தும் கல்லூரியின் நீண்டகால தொடர் வளர்ச்சிக்கு வித்திட்டார். அன்றைய நிலையில் உயிரோடிருந்த வேறு எந்த ஒருவராலுமே சாதித்திருக்க இயலாத காரியம் அது. இச் செயற்பாடானது உலகம் முழுவதிலும் எமது கல்லூரி பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தியதுடன் அவரது பெருமைகளும் உலகெங்கும் மேலும் துலங்க வழி வகுத்தது. ஏனைய பல பாடசாலைகளும் தமது பாடசாலைக்கான வெளிநாட்டுக் கிளைகளை ஆரம்பிப்பதற்கு வழிகாட்டியாகவும் அமைந்திருந்தது.

சாதனைகள் பல படைத்த அதிபர் அவர்கள் தனது அறுபதாவது வயதில் ஓய்வு பெற்றார். அவரது ஓய்வை முன்னிட்டு, பாடசாலைச் சமூகம் அவரது முன்னாள் பாடசாலையான யாழ் இந்துக் கல்லூரியின் மண்டபத்தில் அறிஞர்கள், அதிகாரிகள், அன்பர்கள் புடைசூழ மாபெரும் பிரியாவிடை வைபவம் ஒன்றை நடத்திக் கௌரவித்தது.

தனது சொந்தக் காரணங்களுக்காக அவுஸ்திரேலியா சென்ற அவர் அங்கும் தனது இறுதிக்காலம் வரை தனியே சேர் வைத்திலிங்கம் துரைசுவாமி வித்தியாலயப் பணியை மட்டுமன்றி யாழ் இந்துக் கல்லூரிக்கும் பற்பல சமய நிறுவனங்களுக்கும் காப்பாளராக இருந்து சேவையாற்றி அனைவரும் ஏங்கிய நிலையில் 1. 11. 96 அன்று அமரரானார்.



## கல்விமான்கள்

# திரு. சுப்பிரமணியம் சண்முகநாதன்

திருமதி. புனிதவதி ஆறுமுகம் - ஆசிரியை

செந்தமிழ் அறிஞர்களையும் சீர்சால் சைவப் பெரியார்களையும் தன் மக்களாகப் பெற்றமையால் மங்காப் பெரும்புகழினைத் தனதாக்கி மாட்சிமை பெற்ற ஊர் வேலணை. வெற்றி வடிவேலனின் வேல் வந்தணைந் தமையால் வேலணையெனப் பெயர் பெற்றது என்பது ஓர் ஐதீகம். இங்கு விரல் விட்டு எண்ணத்தக்க விழுமியம் மிக்க குடும்பங்கள் பல இருந்தன. அவற்றுள் ஒன்று வேலணை கிழக்கில் வாழ்ந்த புலமைசால் பேரம்பலப் புலவர் குடும்பம். மற்றையது அவரது உறவினராக அயலிலே வாழ்ந்த கடைக்காரச் சுந்தரத்தார் குடும்பம்.

சுந்தரத்தாரின் தலைமகன் சுப்பிரமணியம் புலவரவர்களின் கடைசி மகள் தங்கம்மாவைக் கைத்தலம் பற்றினார். அவர்கள் இல்லறத்தின் நற்பேறாக மக்கள் எழுவர் பிறந்தனர். அக்காமார் இருவருக்கு அருமைத் தம்பியாக தங்கைமார் நால்வருக்குப் பாசமிகு அண்ணாவாக ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பந்தைந்தாம் ஆண்டு பங்குனித் திங்கள் ஏழாம் நாள் (7. 3. 1935) பாரினில் வந்து பிறந்த குழந்தை தான் "சண்முகநாதன்" எனப் பெயரிய தகைசால் செம்மல். அவர் மண்ணுலகுற்ற ஆண்டே புலவரவர்கள் விண்ணவர் விருந்தாளியானார்.

சண்முகநாதன் தன் ஆரம்பக் கல்வியை வேலணை சரஸ்வதி வித்தியாசாலையிலும் இடைநிலைக் கல்வியை வேலணை மத்திய மகா வித்தியாலயத்திலும் யாழ் இந்துக் கல்லூரியிலும் கற்றார். மாணவனாக இருந்த பொழுதே பல்துறைசார்ந்த புலமையாளராகவும் விளையாட்டு விற்பன்னராகவும் விளங்கினார். சென்னை பல்கலைக் கழகம் - திருச்சி தூய வளவன் கல்லூரியில்

படித்து தாவரவியல் விஞ்ஞான பட்டதாரி யாகி வெளிவந்தார்.

பெற்ற தாயையும் பிறந்த பொன்னாட் டையும் உயிருக்கு உயிராக நேசித்த சண் முகநாதன் தன் சொந்தமண்ணில் தன்னை உருவாக்கிய வேலணை மத்திய மகா வித்தியாலயத்தில் தனது ஆசிரியப் பணியை ஆயிரத்துத் தொளாயிரத்து ஐம்பத்தொன்ப தாம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் பதினா றாம் நாள் (16. 11. 1959) தொடங்கினார்.

கடமை உணர்வுடனும் கண்ணியம் கட்டுப்பாட்டுடனும் கவர்ச்சிகரமாகத் தாவர வியலைக் கற்பிக்க வகுப்பறை நோக்கி வரும் ஆசிரியருக்காக மாணவர்கள் வழி மேல் விழிவைத்துக் காத்திருப்பர். மாண வர் உளம் கவர்ந்த ஆசிரியனாகவும் உற்ற விடத்து அவர்க்கு உதவும் நண்பனாகவும் அறிவுரை நல்கும் ஆசானாகவும் அவர் விளங்கினார். தனது கள்ளமில்லா வெள்ளை உள்ளத்தாலும் நகைச்சுவை உரையாடலா லும் பண்பு நிறைந்த நன்னடத்தையாலும் அதிபர், ஆசிரியர் என்போரின் அன்பினை யும் ஆதரவினையும் பெருமளவிற் பெற்றார்.

பொறுப்புணர்வுமிக்க செயற்றிறனாள னாகத் திகழ்ந்த சண்முகநாதன் ஆயிரத் துத் தொளாயிரத்து அறுபதாம் ஆண்டில் (1960) விடுதிச்சாலைப் பொறுப்பாசிரியர் ஆகக் கடமையேற்றார். விடுதி மாணவர் களை விழிப்பு உணர்வுடன் அன்பாலரவ ணைத்து, கட்டுப்பாட்டுடன் வாழ்வதற்கு வழிகாட்டியானார். அவர்களது உடல் உள நலம் பேணி நற்பண்பினராக நாட்டின் நன்மக்களாக வாழச் செய்த பெருமையை யும் தனதாக்கிக் கொண்டார்.

இங்கு கடமையாற்றிய காலத்தில் (1967-1973) வடமாகாண விஞ்ஞான ஆசிரிய சங்கச் செயலாளராகவும் தலைவராகவும் பொறுப்பேற்று சங்கப் பணிகளைச் செவ் வனே ஆற்றிப் பல்லோர் பாராட்டுதலுக் கும் ஆளானார். தன்னலந் துறந்து தாய் நாட்டின் நலனுக்காக தமிழ்ச் சமுதாய நலனுக்காகக் குடாநாட்டின் மண்பரிசோ தனை, நீர்நிலப் பரிசோதனை, நீர்நிலை உயிரியல் ஆராய்ச்சி என்பவற்றுக்காகப் பல பாடசாலைகளில் ஆய்வுகூடங்கள் அமைத்து வழிநடத்தியமையால் தமது சமூக விஞ்ஞான அறிவின் தாக்கத்தினை வெளிப்படுத்தினார். வடமாகாண விஞ் ஞான ஆசிரியசங்கப் பரீட்சைக் குழுமூலம் ஒருங்கிணைந்த பரீட்சைத் திட்டத்தை உரு வாக்கி, பாடசாலைகளுக்கிடையில் அதனை நடைமுறைப்படுத்தினார். "விஞ்ஞானி" என்ற வடமாகாண விஞ்ஞான ஆசிரிய சங்க வெளியீட்டின் வெளியீட்டாளராகவும் செயலாற்றித் தன் திறனை நிலை நாட்டினார்.

எண்ணிய யாவற்றுக்கும் செயல்வடி வம் கொடுத்துச் செயலாற்றுவதிற் சளைக் காதவர் சண்முகநாதன் என்ற பெருமைக் குரியவரானார். இவரது சாதனைகளுக்கெல் லாம் மூலகாரணர் அவரைத் தன் மகன் போல் எண்ணி ஆதரவு நல்கி, அன்புடன் வழிகாட்டியாக விளங்கிய அவரது அதிபர் கருகம்பானைப் பெரு மகனார். வீ. தம்பு என்ற பெரியாரே. அவர்களுக்கிடையில் இருந்த பாசப்பிணைப்பு பகர்தற்கரியது.

தான் பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்த்த சண்முகநாதன் புகுந்த மண்ணாம் மண்டைதீவில் தன் அதிபர் பணியினை ஆயிரத்து தொளாயிரத்து எழுபத்தெட்டாம் ஆண்டு பங்குனித் திங்கள் இருபத்தோராம் நாள் (21. 03. 1978) ஆற்றத் தொடங்கினார்.

மண்டைதீவு மகாவித்தியாலயத்தைக் கட்டியெழுப்பிய பெருமைக்குரியவரானார். பாடசாலைக் கீதம், இலச்சினை, விஞ்ஞான கூடம், க.பொ.த. உயர்தர வகுப்பாரம்பம், திறந்த வெளியரங்கு, புதிய கட்டடத்துடன் மண்டைதீவுக் கொத்தணியும் சண்முகநாத னவர்களால் மண்டைதீவுக்கு மனமுவந்து அளிக்கப்பட்ட அழியாச் சின்னங்களாகும்.

அவரது பிறந்த மண் பின்னரும் அவரைத் தன்பாலீர்த்தது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தேழாம் ஆண்டு வைகாசித் திங்கள் பத்தாம் நாள் (10. 5. 1987) வேலணை சேர் வைத்தியலிங்கம் துரைசாமி மத்திய மகா வித்தியாலயக் கொத்தணி அதிபராகக் கடமையேற்றார். ஈழத்தமிழர் வாழ்வில் இன்னல்கள் பல நிறைந்த காலகட்டம். போர்ச்சூழல் மக்கள் தம் இருப்பினை இழந்து அலைந்து திரியும் அவலநிலை. இக்கட்டான இக்கால கட் டத்திலும் கொத்தணியைச் சிறப்பாக நிர் வகிக்கவும் மாணவர்களின் கல்விக்கான யாழ்ப்பாண மோகத்தைத் தணித்து, தீவுப் பகுதிக் கல்வித் தரத்தை உயர்த்தவும் பிர யோக ரீதியாகப் பாடத்திட்டங்களை உரு வாக்கினார். வேலணை கொத்தணி இலச் சினை, வேலணை சேர் வைத்தியலிங்கம் துரைசாமி மத்திய மகாவித்தியாலய பழைய மாணவர் சங்கப் புனரமைப்பு, பாடசாலை மண்டப விஸ்தரிப்பு, கல்வி மூலவள நிலையம், கல்விக்கோட்டப் பரீட் சைச் சபை, கணித விஞ்ஞான ஆசிரிய சங்கம், சங்கீத, நடன, சித்திர ஆசிரிய மன்றம் என்பவற்றை உருவாக்கி நடைமுறைப் படுத்த அல்லும் பகலும் அயராதுழைத் தார். முறைசாராக் கல்வி ஆரம்பிக்கப் பட்டது. இங்கு சண்முகநாதனின் சேவைக் காலம் மிகக் மிகக் குறுகியதாயிற்று.

ஆயிரத்துத் தொளாயிரத்து எண்பத் தொன்பதாம் ஆண்டு ஆடித் திங்கள் பதினைந்தாம் நாள் (15. 07. 1989) பதவி உயர்வு பெற்று வேலணை கல்விக் கோட் டக் கல்வி அதிகாரி ஆனார். தனது கோட்ட உதவிப் பணிப்பாளருடனும் சக கல்வி அதிகாரிகளுடனும் கொத்தணி அதிபர் களுடனும் நல்லெண்ணப் புரிந் துணர்வு டன் பழகி, மனிதநேயத்துடன் பிரச்சினை களைத் தீர்த்து வைப்பதில் கைதேர்ந்தவரா கத் திகழ்ந்தார். இவரது இறுதி எண்ணக் கருவாக அமைந்தது வடமாநிலக் கல்விக் கல்லூரியை வேலணை சாட்டிப் பிரதேசத் தில் அமைக்க வேண்டும் என்பதே.

திரிகரண சுத்தியுடன் தீவகத்தின் கல்வி வளர்ச்சிக்காகத் தன்னை அர்ப் பணித்த சண்முகநாதனவர்களின் இல்லறம் பற்றியும் சில வார்த்தைகள். மண்டைதீவில் வர்த்தகராகவும் சிவநெறிச் செல்வராகவும் விளங்கிய தம்பையா மனோன்மணி தம்பதி யினரின் தலைமகள் அகிலத் திருநாயகியை ஆயிரத்துத் தொளாயிரத்து அறுபத்தாறாம் ஆண்டு ஆவணித்திங்கள் இருபத்தாறாம் நாள் (26-08-1966) தன் அன்புக்குரிய அருந்துணை ஆக்கினார். அவர்கள் இல்ல றம் இனிதே நல்லறமாக மிளிர குமரன், காந்தன், சயந்தன், வரதன் என நன்மக்கள் நால்வரையும் பயந்தனர். தந்தையெவ்வழி மைந்தரும் அவ்வழி என்பதற்கிணங்க மக்கள் நால்வரும் கற்று வல்லவர்களா கவும் உற்றார் உறவினர் ஊரார் மெச்சும் நற்பண்பாளர்களாகவும் திகழ்கின்றனர்.

அஞ்சா நெஞ்சமும் ஆளுமைத்திறனும் இனிய புன்சிரிப்பும் கொண்டு எவரையும் தன்பாலீர்க்கும் வசீகர நாயகன் சண்முக நாதன் அரசியல் வாழ்விலும் ஆர்வலராக

விளங்கினார். தனக்கு வழிகாட்டியாகவும் உறுதுணையாயும் விளங்கிய அண்ணர் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினராகிய முனைவர் பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்களின் தேர்தற் களத்தில் அவருக்குத் தோள் கொடுத்துதவி உழைத்தார்.

தம்பி சண்முகநாதன் நாட்டு விடு தலைக்காகத் தன்னாலான பணிகளைச் செய்யத் தவறவில்லை. இழப்புக்கள் பலவற் றைச் சந்தித்த எம்மினத்தின் விடிவுக்காக உழைப்பவர்களுக்கு உற்றவிடத்தெல்லாம் உதவிக்கரம் நீட்டினார். தேவையேற்படின் எல்லைப் பாதுகாப்புக்கும் தயாரானர். தன் மானத் தமிழனாக வாழ்வதற்கே விரும் பினார்.

ஆயிரத்துத் தொளாயிரத்துத் தொண் ணூறாம் ஆண்டு (1990) இரண்டாம் கட்ட ஈழப்போர் மூண்டது. தமிழினம் வீடிழந்து, நாடிழந்து அகதிகளாக அலையும் அவல வாழ்வு தொடர்ந்தது. அல்லோலகல்லோ லப்பட்ட மக்கள் அலை கடல் தாண்டி, தமிழகம் சென்று, தம்முயிர் காக்க ஓடி அலைந்தனர்.

ஆயிரத்துத் தொளாயிரத்து தொண் ணூறாம் ஆண்டு புரட்டாதித் திங்கள் பத்தாம் நாள் (10. 09. 1990) மக்கள் நால் வரையும் தமிழகம் அனுப்புவதற்கு அனும திச் சீட்டுப் பெறுவதற்காக கல்வியங்காட்டு முகாமுக்குச் சென்றார். உடலும் உளமும் சோர்வுற்றுத் தன்பக்கத்தில் அனுமதி பெறு வதற்காகக் காத்து இருந்த அவரது அக்கா திலகத்தின் மடியில் மயங்கி வீழ்ந்தார்.

யாழ் வைத்தியசாலை செயலிழந்து, அங்குள்ள வைத்திய நிபுணர்களும் வைத் திய கலாநிதிகளும் மானிப்பாயில் கடமை யாற்றிய காலம். உச்சக் கட்ட ஷெல் வீச்சுக் கும் குண்டுமழைப்பொழிவுக்கும் இடையில் மானிப்பாயில் கடமையில் இருந்த தனது மருமகள் வைத்திய கலாநிதி யசோதா தரு மரத்தினத்தினதும் தனது நண்பரும் வைத் திய நிபுணருமாகிய சிவகுமாரன் அவர் களதும் கண்காணிப்பில் உயிர்காப்பதற் காக மக்கள் நால்வராலும் உதவப்பட்ட உதிரத்துதவியுடன் ஒரு கிழமை உயிருக்கா கப் போராடினார்.

ஆயிரத்துத் தொளாயிரத்துத் தொண் ணூறாம் ஆண்டு புரட்டாதித் திங்கள் பதினெட்டாம் நாள் (18. 09. 1990) பிள்ளைப் பாசம் நெஞ்சைப் பிளக்க, அன்புடன் அமுதூட்டி வளர்த்த சிறிய தந்தையார் சீவரத்தின உபாத்தியாயர் சிந்தை கலங்கித் துடிதுடித்தலறத் தன் மருமகள் யசோவின் மடிமீது தலைவைத்து விழிமூடி மீளாத் துயிலில் ஆழ்ந்துவிட்டார் அமரர் சண்முக நாதன்.

மக்களின் மாண்புறு நிலையினையும் மங்கல நல்வாழ்வினையும் கண்குளிரக் கண்டுகளிக்காது, காலன் அழைப்பையேற் றுத் தனது ஐம்பத்தைந்தாவது அகவை யிலேயே அரனடி சேர்ந்தார். கல்வி உல கம் நல்லதொரு கல்விமானை கர்மவீரனை இழந்தது. தீவகம் தனது கல்வி மேம்பாட்டு க்காக ஓய்வறியாது ஓடியோடி உழைத்த தோர் உத்தமனைப் பறிகொடுத்துப் பரிதவித்தது. வேலணையூர் தனது விடி வெள்ளியாகத் தோன்றிய உத்தம மைந் தனை இழந்து ஏங்கித் தவித்தது. என்

செய்வாம்? இறப்பினை வெல்ல வல்லார் யாருளர்?

ஈழத் தமிழராகப் பிறந்த குற்றத்துக் காகப் புலம் பெயர்ந்து பல்துறை விற் பன்னர்களாகப் பாரெங்கும் பரந்து வாழு கின்ற அமரர் சண்முகநாதனின் அன்புக் குரிய மாணவமணிகளே, நீங்கள் அவருக்கு ஆற்ற வேண்டிய நன்றிக் கடன் ஒன்றுண்டு. தீவகத்தின் கல்வி மேம்பாட்டுக்காக தீவக மக்களின் நல்வாழ்வுக்காக உங்களாலான உதவிகளைச் செய்வீர்களா? நீங்கள் கற்ற கல்வியும் ஈட்டிய பெருந்தனமும் உங்கள் சொந்த மண்ணைச் சுவர்க்க புரியாக்க உதவி உங்கள் ஆசான் சண்முகநாதனின் இதய தாகத்தைப் பூர்த்தி செய்வீர்களாக.

தமதூரான வேலணையில் தம் அண் ணர் முன்னைநாள் பா. உ. கா. பொ. இரத்தினத்தின் உதவியுடன் ஒரு திருமண மண்டபத்தையும் நூல் நிலையத்தையும் நிறுவ வேண்டுமென அவர் திட்டமிட்டார். இத்திட்டம் விரைவில் நிறைவெய்துக.



## கல்விமான்கள்

# முதலியார் சிறீ. குல. சபாநாதன்

"வேலணை பள்ளம்புலத்தைச் சேர்ந்த திரு. குலசேகரம் அவர்களின் மகனான திரு. குல. சபாநாதன் அவர்கள் நல்ல ஆராய்ச்சியாளர். தாம் கொண்டதே உண்மை என வலியுறுத்தாமல், எதிர் கொள்கைகளைக் காட்டி மேலும் ஆய் வோரை ஊக்குவித்து விடுவார். செம்மை யான இவ்வுள்ளப் பாங்கை முதலியார் குல சபாநாதன் கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். "இவர் ஈழத்திலே அறிவால் சிறந்து புலமை எய்தியோரின் வரலாற்றை முறைப்படி எழுதக் கூடியவர்" என வண. சுவாமி ஞானப்பிரகாசர் அவர் களால் விதந்தோதப்பட்டவர் முதலியார் குல சபாநாதன் அவர்கள்.

யாழ்ப்பாண இலங்கைத் தமிழர் சரித் திரத்திலும், புராதன சைவ ஆலயங்களின் சரித்திர, புராண வரலாற்று ஆராய்ச்சி களிலும், புனருத்தாரண வேலைகளிலும் மிகுந்தஆர்வம் காட்டி அவற்றைப்பற்றிய நூல்களையும் கட்டுரைகளையும் எழுதுவ தில் தம் வாழ்நாளின் பெரும்பகுதியை அர்ப் பணித்தவர். யாழ்ப்பாண வைபவ மாலையை நல்ல ஆராய்ச்சிக் குறிப்புகளோடு பதிப்பித் தமை இவரது அரிய தொண்டு "இலங்கை யின் புராதன சைவ ஆலயங்கள்" என்ற தொடரில் கதிர்காமம், நயினை நாகேஸ்வரி, நல்லூர் கந்தசுவாமி என்பன நூல்வடிவம் பெற்ற முதலியார் அவர்களின் படைப் புக்களில் சில.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பற்றிய ஏராளமான கட்டுரைகள் (ஒன்று தங்கப்

பதக்கமும் பெற்றது) நா. கதிரவேற்பிள்ளை, முதலியார் இராசநாயகம், சுவாமி ஞானப் பிரகாசர், சுவாமி விபுலானந்தர், சேர் பொன் அருணாசலம் என்பவர்களைப் பற்றி அருமையான கட்டுரைகளை இவர் எழுதி யுள்ளார்.

நீறுபூத்தநெருப்புப் போல் தமது கல் வித் திறனையும், தமிழறிவையும், நுண்ணிய விவேகத்தையும், ஆராய்ச்சி நுட்பத்தையும் வெளிப்படுத்தலன்றி யாதுமறியார்போல் மௌனமாகத் தம் கடமையைச் செய்த பண்பாளர். முதலியார் குல சபாநாதன் அவர்கள்.

யாழ்ப்பாணம் கரம்பொனைப் பிறப் பிடமாகக் கொண்ட இப்பெருமானார் 1986ஆம் ஆண்டு ஏப்ரல் 2ஆம் திகதி தமிழகத் தின் திருநெல்வேலி மாவட்டம் பாளையம் கோட்டையில் அமரரானார்.

நன்றி: வீரகேசரி வாரவெளியீடு
27. 03. 2005





# கல்விமான்கள்

# தபால் அதிபர்
# அமரர். நாகலிங்கம் சரவணமுத்து

## திருமதி. இராஜேஸ்வரி சிவலோகநாதன்

வேலணைக் கென்றோர் தபாற் கந்தோர்
விளங்கிடு வங்களா வடி தனிலே
சேதுபதி மகன் நாக லிங்கம்
சேயென வந்தஒரு மகனே
சான்ற சரவண முத்தா கும்
அன்னா ரும்தான் ஆண்டு பல
அமைத்து நடாத்திய கந்தோரில்
தபால் விநியோகம் தந்தி யொடு
சம்பளம் கொடுத்தல் பண மாற்று
சகலதும் கிராம மக்களுக்காய்
நாளும் நடைபெற வழி செய்தார்

குற்றம் குறைகள் தவிர்த் தங்கு
குணமாய்ப் பலரது உதவி யுடன்
தனது நாட்டம் ஊக்க மதால்
தபால் நிலையமும் தழைத் தோங்கத்
தளரா முயற்சி செய் திட்டார்
சான்றாண் மையோ டதி காரம்

சகலமும் பெற்று வாழ்ந் திட்டார்
விவசாயத் தால் விளை பயனை
வியாபாரத் தால் வரு பயனை
ஒன்றாய்க் கூட்டி ஓங்க வைத்து
உள்ளூரில் ஒரு செல்வந் தர்
என்னும் பெயரையும் பெற்றிட் டார்
உற்று அவர் வாழ்வை நோக்கினால்
உண்மை ஒன்று புலப் படுமே
வள்ளுவர் வாக்கோ பொய்க் காது
வளமாய் அவர்வழி பற்றி விடின்

**ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்**
**தாழாது உஞற்று பவர்**
என்ற குறள் தனக் கிலக்கியமாய்
எந்நே ரமும் கண் துஞ்சாது
பாடு பட்டுப் பயன் கண்டார்
பலரும் அறிந்தபோஸ்ற் மாஸ்ரர்

முடிப் பிள்ளையை முழு மனதாய்
முற்றாய் நம்பி வழி பட்டார்
பக்தி செய்தும் பணி செய்தும்
பரமன் அருளைப் பெற்ற துடன்
பலரின் மதிப்பை நட் பதனைப்
பற்றிக் கொண்ட போஸ்ற் மாஸ்ரர்
புளியங் கூடல் பல நோக்குக்
கூட்டுற வோடமை சங்கமதில்
தலைமைப் பதவி தனை வகித்து
தக்கபடி அதன் நிர்வாகம்
தாழா தோங்கும் படியாகப்
பல்லாண் டாகப் பாடுபட்ட
பண்பைப் பலரும் அறிந்திடுவர்
மேலும் வேலணை மேற்கதிலே
பயிர்ச் செய்கைக் கென் றமர்ந்திட்ட
குழுவின் தலைவரு மிவரானார்
எடுத்தமுயற்சி எதனை யுமே
இயன்ற வரையில் பக்குவ மாய்
முடிக்கும் திறனைக் கொண்ட அவர்
சொந்தக் காரரில் அக்கறை யும்

சொந்தமண்ணில் அக்கறை யும்
சுயமாய்த் தனது பண் பாகக்
கொண்டு வாழ்ந்தார் குணத்துடனே
சிறந்தநல்ல சித் தப்பா
சேயன்னா கானா வழி காட்டச்
சீடன் குரு வெனச் சீராகச்
செம்மை யாக நாள் நாளாய்ச்
செல்வம் பலவும் பெற் றிட்டார்
நம்பிக்கை ஒன்று நம தென்றால்
நாம்விரும் பியதைப் பெற்றிடலாம்
என்ற பொன்மொழி அவர் வாழ்வில்
இயல்பாய்ப் பலனைக் கொடுத் ததுவே

தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்
ஒழுங்கு பொருந்திய வாழ் வதனை
உயர் வாய்க் கண்ட போஸ்ற் மாஸ்ரர்
சைவ னென்ற நிலைக் கேற்பத்
தனது வாழ்நாள் முழுவதுமே
புன்புலா லுணவைப் புசி யாது
பொல்லா நோயையே அறி யாது
வாழும் பேற்றினைப் பெற் றிட்டார்
வகையாய் வாழ்ந்தார் பல் லாண்டு

எளிய வாழ்வே எந் நாளும்
ஏற்றம் கொடுக்கும் எனும் கூற்றைப்
பொய்யா மொழி யெனக் கண்டுமே
போற்றி யவ்வாறே வாழ்ந் திட்டார்
இமைப் பொழுதேனும் சோர்வின்றி
இறைநிலை எய்தும் வேளை யிலும்
ஏதுதுன் பமும் இல் லாது
இன்பப் பெரு வெளி கண்டாரே.

வேலணைத் துறையூர்

மீன்பிடித் துறைமுகமும் - அம்பலவாணர் பாலமும்






வேலணைத் துறையூர்

கடற்றொழிலாளர் கூட்டுறவுச் சமாசம்



# ஆயுர்வேத வைத்தியர்கள்

# திரு. விசுவநாதர் சிதம்பரப்பிள்ளை

திரு. சி. ஞானேஸ்வரன்

**வே**லணையில், சிதம்பரப்பிள்ளை என்னும் பெயரைக் கூறினால் பரியாரியார் என்று பொதுப்படக் கூறினால், கூழா தோட்டம் என்னும் பகுதியில் தன்னிகரின்றி வாழ்ந்த விசுவநாதர் சிதம்பரப் பிள்ளை அவர்களையே குறிக்கும்.

இவர் 83 வருடங்கள் வாழ்ந்தவர். இவரது கம்பீரமான உடல் வனப்பு; எவரையும் கவர்ந்திழுக்கும் வசீகரம் கொண்டது. நீண்ட மூக்கு; நேரிய பார்வை; 6 அடிக்கு மேற்பட்ட உயரம் இவற்றின் அம்சமே பரியாரியார் அவர்கள்.

இவர் 22.11.1875ஆம் ஆண்டு உயர் சைவ வேளாண்குலத் தோன்றல் விசுவநாதர் அவர்கட்கும் பாக்கியலட்சுமி அம்மையாரிற்கும் மகனாகப் பிறந்தார். பாக்கிய லட்சுமியின் திருமண அழைப்பின்போது வேலணை மேற்கிலிருந்து கூழாதோட்டம் வரை சீதனமுதிசக் காணிகளால்தான் மணமக்கள் வந்தார்கள் என பலராலும் கூறப்பட்டது குறிப்பிடத்தக்கது.

இவருடன் மருதையினார், நடராசப் பிள்ளை, தையல்முத்து, வள்ளியம்மை, ஆச்சி முத்து ஆகியோர் உடன்பிறந்தவர்கள். இவர்கள் சகோதர பாசத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கியவர்கள். பெரியண்ணை, பெரியக்கா, சின்னண்ணை, என ஒருவரை ஒருவர் பாசத்துடன் அழைப்பது கண்டு வியப்பாக இருக்கும்.

இப்பெரியார் சுப்பிரமணியம் தம்பிப் பிள்ளையின் மகள் சின்னம்மாவைத் திருமணம் செய்து இனிய இல்லறம் நடத்தினர். சின்னம்மா கடவுள் வழிபாட்டில் அதிக ஈடுபாடுடையவர்கள். இவர்களது வழி

காட்டலில்தான் பேரப்பிள்ளைகள் இறை நம்பிக்கையில் பரிணமிக்கின்றனர். இவர்களது ஒரே புத்திரர்தான் பெரியார் இராசரெத்தினம் அவர்கள். தந்தை தாயின் அரவணைப்பு, உற்றார் உறவினரின் அளப்பரிய பாசம் ஆகியவற்றிற்கு மத்தியில் செல்லமாக வளர்ந்தவர்.

"மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை என் நோற்றான் கொல் என்னும் சொல்"

என்னும் குறளிற்கேற்ப இவரது மகன் பல்துறை நிபுணத்துவம் பெற்ற ஒரு சமூக சேவகராக, அரசியல்வாதியாக நாட்டிற்கு ஒரு நல்ல தலைவராக விளங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

சிதம்பரப்பிள்ளைப் பரியாரியார் வேலணை மண்ணிற்குச் செய்த தொண்டுகள் அளப்பரியது. மணியகாரன் தீவுப் பகுதி கிராமச் சங்கத் தலைவராக இருந்த போது இவர் வேலணை இரண்டாம் வட்டார அங்கத்தினராக இருந்தார். அச்சபையில் இவரின் பேச்சிற்கு அதிக மதிப்பு வழங்கப்பட்டது. பல வழக்குகள் இவரால் தீர்த்து வைக்கப்பட்டது. 1932ஆம் ஆண்டு மீண்டும் ஒரு தேர்தலில் இரண்டாம் வட்டார அங்கத்தவராகப் போட்டியின்றி தெரிவுசெய்யப்பட்டார். அதனை அந்நாள் அரச அதிபர் 3 வருடங்களிற்கு உறுதி செய்து அக்காலத்தில் பல அபிவிருத்தி வேலைகள் செய்யப்பட்டன. இதற்குப் பின்னர் இவர் கிராமச் சங்கத் தலைவராகவும் இருந்தார்.

அக்கால கட்டத்தில் போக்குவரத்துப் பாதைகள், வாய்க்கால்கள், வீதிகள் அமைக்கப்பட்டன. மண்கும்பான் சாட்டி வீதி திறக்கப்பட்டது. இவர்கள் ஆரம்பித்து வைத்த இந்த அபிவிருத்தி வேலைகள் இவரது மகன் உட்பட பின்னால் வந்தவர்களால் நிறைவு செய்யப்பட்டது.

இவர் பிரபல செங்கண்மாரி சிறுபிள்ளை வைத்தியர். இவர் வைத்தியம் பார்க்கும் பாங்கு போற்றத்தக்கது. அன்பும் அருளும் பொதிந்தகனிவான பேச்சு ஆதரவோடு கூடிய ஆராய்வான சிகிச்சை, நல்ல உபசரணை, ஏழை பணக்காரன், சிறியவர், பெரியவர், நல்லவர் தீயவர் என்ற பாகுபாடு ஏதுமின்றி சமமாக எல்லோரையும் மதித்து வைத்திய சேவை புரிந்தவர். ஆஸ்பத்திரியால் கைவிடப்பட்டு மரண விளிம்பில் இருந்த பலரை இவர் குணமாக்கி உள்ளார் என்பது மக்கள் இவரைத் தெய்வமாக போற்றியமையிலிருந்து அறிய முடிகிறது. வேலணை மட்டுமல்ல தீவுப் பகுதி எங்கும் இவரது வைத்தியம் பிரபல்யமானது. புங்குடுதீவு, நயினாதீவு போன்ற இடங்களில் இவரிற்குப் பல நண்பர்கள் இருந்தார்கள். அவர்களுடன் தங்கி நின்று தன் வைத்தியத் தொழிலை மேற்கொள்வார். பல சமயங்களில் இவரது தம்பியார் நடராசபிள்ளையுடன் ஆலோசித்து மருந்து வழங்குவதும் உண்டு.

வீடுதேடி வருபவர்களிற்கு இடமளித்து உணவளித்து வைத்தியம் செய்து குணமாகிய பின் வீட்டிற்கு அனுப்பிவைப்பார். இவ்வாறு மனிதனது பிணி, பிணக்கு போன்றவற்றைத் தீர்த்து வேலணை மக்கள் மத்தியில் அழியாத தடம் பதித்த இப்பெரியார் 15.1.1959 இல் இறைபதம் அடைந்தார்.

"ஒருவனது வாழ்வின் செம்மைக்கு அவனது எச்சங்களே சான்று" என்பதற்கேற்ப இப்பெரியாரது மகன் வேலணையின் ஒரு புகழ்பூத்த மைந்தன். பேரப் பிள்ளைகள் படித்துப் பட்டம் பெற்று நாட்டின் முன்னோடிப் பிரசைகளாக உள்ளமை கண்டுதான் மறைந்தார்.

இவர் மறைந்தாலும் வேலணை மண் இவரை மறக்கவில்லை. இவரது மகனை இன்னும் பரியாரியார் மகன் என்றும் பேரப் பிள்ளைகளை பரியாரியார் பேரப்பிள்ளை கள் என்றும் விழிப்பது இவரது பெருமைக்கு நல்ல எடுத்துக்காட்டு.

இவரது பெருமையை காலம் சென்ற வித்துவான் க. வேந்தனார் அவர்கள், அவ ரது மறைவின் போது கவி வடிவில் கூறி யுள்ளமை இங்கு தரப்படுகிறது.

பொன் மலைபோல் எழில்மேனி பொலிந்து தோன்றப்
புரவலன் போல் அருள் சுரந்து புலமை வீறும்.
மன்னளியால் மருந்துதவி மக்கள் வாழ்வை
மறுமலர்ச்சி செய்தருளும் வாய்மையாளன்
அன்னையினும் எமக்கினியான் ஆன்றோர் நண்பன்
ஆண்மைவளர் பெரும்குலத்தின் அணியாய் வந்தோன்
செந்நெல் வளர் வேலணையூர் செல்வன் அன்றோ
சிவமானான் சிதம்பரப் பிள்ளை அந்தோ"



# ஆயுர்வேத வைத்தியர்கள்

# வேலணை ஆயுர்வேத வைத்திய திலகம் திரு. சின்னையா

திரு. எஸ். சேனாதிராசா (ஆசிரியர்)

இப்பெரியார் இவ்வுலகைவிட்டு மறைந்தாலும் இவர் புகழ் மறையாது. இன்றும் இவரது சேவையைப் பலர் பாராட்டத்தான் செய்கிறார்கள். இவரது வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் மக்கள் பின்பற்றக் கூடியவை. தூய வெள்ளை உடை, காலில் செருப்பு அல்லது மிதிவடி, கையில் குடையுடன் தான் வெளியில் செல்வார். சிறந்த குணமும் பண்பாடும் பொறுமையும் இவரோடு ஒன்றாகச் சேர்ந்தவை. இறைபக்தி நிறைந்தவர். வேலணை அம்பாள் ஆலய ஆனி உத்தர அபிஷேகம் இவருடைய உபயமாக இருந்தது. தவறாது தொடர்ந்து செய்து வந்தார்.

இவரது சுவாமி அறையும் புனிதமாக இருக்கும். இரு நேரமும் வழிபாடு செய்வார். தேவாரத்திரட்டு, கந்தபுராணம் இவை இவருடைய அறையில் எப்போதும் இருக்கும். எல்லோருடனும் நன்றாகப் பழகுவார். இவருக்கு ஒரு சில நெருங்கிய நண்பர்களும் இருந்தார்கள். அவர்களையும் அருமையாகத்தான் சந்தித்து மகிழ்வார். உறவினர் வீடுகளுக்கும் அருமையாகத் தான் போய்வருவார். தனது நேரத்தின் பெரும்பகுதியை மருந்துகள் தயாரிப் பதிலேயே செலவழிப்பார். இவரது மனைவியும் இந்தத் துறையிலே பெருந் துணையாக இருந்தார். வேலணையில் வைத்தியம் செய்தாலும் வெளியிடங்களில் இருந்தும் நோயாளிகள் இவரிடம் வந்து சிகிச்சை பெறுவார்கள். இவருக்கு வருவாயும் ஒரளவு திருப்தியாக இருந்தது. பெரிதாகக் கிடைத்தது என்று சொல்ல முடியாது. பொதுவாக அந்தக் கால வைத்தியர்களுக்கு வருவாய் குறைவுதான்.

வைத்தியர் அவர்கள் வாலிப வயதில் யாழ் நகரின் பல இடங்களுக்கும் சென்று வைத்தியம் செய்து வந்தார். சேர். பொன். இராமநாதன் துரை அவர்களுக்கும் வைத்தியம் செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. சேர் பொன் இராமநாதன் அவர்களது குடும்ப வைத்தியர் சுழிபுரம் பெரிய பரியாரியார். இராமநாதன் துரை அவர்களுடைய பாராட்டுப்பத்திரம் ஒன்றும் இவருக்குக் கிடைத்தது. அதனை இவர் தனது வைத்தியசாலையில் பேணி வைத்திருந்தார். யாழ் நகரில் வைத்தியம் செய்த காலத்தில் அங்கு ஒரு நல்ல குடும்பத்தில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். சிறிது காலம் சென்றதும் வேலணையில் வைத்தியசாலையை அமைத்து வாழ்க்கையின் இறுதிவரை சேவை செய்தார்.

இவர் பலதுறை வைத்தியராக இருந்தாலும் மகப்பேற்றில் நிபுணராக இருந்தார். அக்காலத்தில் பிரசவத்துக்கு துணை புரிபவர் மருத்துவமாது (மருத்துவச்சி) என்றுதான் அழைப்பார்கள். ஊருக்கு ஒருத்தி இருப்பார். அவரே சமாளித்துக் கொள்வார். கஷ்டமான பிரசவங்களுக்குத்தான் வைத்தியரை அழைப்பார்கள். இவர் நோயைக் கண்டறிவதிலும் அதற்குரிய சிகிச்சை அளிப்பதிலும் நோயாளிகளின் மனநிலையைத் தளரவிடாது வைத்திருப்பதிலும் சிறந்த வைத்தியராக விளங்கினார். அக்காலத்தில் பிரசவம் பெரிய பிரச்சனையாக இருக்கவில்லை. காரணம் அக்காலப் பெண்கள் உடல் உழைப்பாளிகள். வைத்தியர் அவர்களுக்கு ஆண் வாரிசுகள் இல்லாத காரணத்தினால் இவருடைய வைத்தியத்துக்கு நேரடி வாரிசு ஒருவருமில்லை. உறவினர்கள் இருவர் இவரிடம் வைத்தியத்தைக் கற்றனர். ஒருவர் வைத்தியர் கந்தசாமி. மற்றவர் சங்கரப்பிள்ளை கார்த்திகேசு. வைத்தியர் கந்தசாமி கிளிநொச்சியில் வைத்தியசாலை அமைத்து சிறந்த சேவை செய்து செல்வமும் சீருடனும் வாழ்ந்தார். அவர் இறந்தபின் அவருடைய பிள்ளைகள் வைத்தியர் திருலோகமூர்த்தி வைத்தியர் ஜெயச்சந்திர மூர்த்தி. இவர்கள் அங்கு வைத்தியத்தைத் தொடர்ந்து நடத்தி வருகின்றார்கள். வைத்தியர் ஜெயச்சந்திரமூர்த்தி வேலணையிலும் வைத்தியச் சேவையைச் செய்துகொண்டிருக்கின்றார். இவர்கள் வைத்தியர் சின்னையாவின் குருசிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர்களாக வளர்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

சுதேச வைத்தியத்தில் பக்கவிளைவுகள் ஏற்படுவதில்லை. ஆங்கில வைத்தியத்தில் பக்கவிளைவுகள் உண்டு. பல வைத்தியர்களுடைய பிள்ளைகள் அவர்களுடைய வைத்தியத்தில் ஈடுபடுவதில்லை. இவர்கள் வேறு உத்தியோகங்கள், வேறு தொழில்களில்தான் விரும்பி ஈடுபடுகின்றார்கள். தென்னிலங்கையில் அரச உதவியால் சுதேச வைத்தியம் வளர்ந்து கொண்டிருக்கின்றது. எங்களுடைய சுதேச வைத்தியத்துறைக்கும் அரச உதவி கிடைத்தால் வளர்ச்சியடைய முடியும் என்பதில் ஐயமில்லை. வாரிசு அற்ற போதும் வைத்தியர் சின்னையா என்ற சுதேச வைத்தியரின் வைத்தியம் குருசிஷ்ய பரம்பரை மூலம் சிறப்பாக வளர்ச்சி யடைகின்றது.



# ஆயுர்வேத வைத்தியர்கள்

## திரு. சி. முருகேசு

திரு. க. காண்டீபன் - மருத்துவபீட மாணவன்
பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

1901ஆம் ஆண்டு வேலணை தெற்கில் சின்னத்தம்பி முருகேசு அவர்கள் அவதரித்தார். தன் சிறு வயதிலேயே வைத்தியத் துறையில் நாட்டம் மிகக் கொண்ட இவர் திரு. சி. சிதம்பரப்பிள்ளை அவர்களைத் தன் குருவாக வரித்துக் கொண்டார். குரு மெச்சும் சீடனாய் வைத்தியத் துறையில் அனைத்தும் கற்று வல்லவரானார்.

தன் ஆரம்ப காலங்களில் பிறந்த ஊரில் மட்டும் சேவையாற்றிக் கொண்டிருந்தவர் பின்பு பிற ஊரவர்களும் உய்யும் பொருட்டு தன் சேவையை நடமாடும் சேவையாக விஸ்தீரணம் செய்தார். நடமாட முடியாத நிலையிலிருந்த நோயாளிகட்கு இவர் தேடிச் சென்று வைத்தியம் செய்தது பெரும் வரப்பிரசாதமாய் அமைந்தது. இதனால் மக்களின் ஏகோபித்த ஆதரவையும் பேரன்பையும் தனதாக்கிக் கொண்டார். தவிர ஏழை எளியவர்கட்கு இலவச வைத்தியம் பார்ப்பதில் பேரானந்தம் கொண்டவராயிருந்தார். நோயாளிகள் பலரை தம் வீட்டிலேயே தங்கவைத்து வைத்தியம் செய்வதும் உண்டு. இதற்கு இவரது இல்லத்தரசியார் பொன்னாச்சி அவர்களும் உறுதுணையாய் இருந்தார். பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாய் இவரும் அனுபவ வைத்தியத்தில் சிறந்து விளங்கினார். கணேச மந்திர உச்சாடனத்துடன் அவர் மருந்து புகட்டி குணமாக்கியவர்கள் பலருளர். இவர்களின் அருமருந்தன்ன புத்திரனும் (திரு. மு. வினாசித்தம்பி) தாய் தந்தையர் வழி காட்டலில் வைத்தியத்துறையில் நிபுணத்துவம் பெற்று விளங்கினார். இவ்வாறு திரு. சி. முருகேசு அவர்களின் குடும்பமே வைத்தியத்துறைக்குத் தம்மை அர்ப்பணித்

துக் கொண்டது. இவர்கள்தான் துறையூர் சமூகத்தின் முதல் வைத்தியர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

திரு. சி. முருகேசு அவர்களின் வைத்திய முறை சமயத்தோடு பின்னிப் பிணைந்ததாகவே இருக்கும். இவர் இன்குரலால் தேவாரப் பாராயணம் பண்ணி மருந்துகளை அளிக்கும் வேளையில் நோயாளிகள் தம் பிணியில் பாதி குறைந்தாற்போல் உணர்வார்கள்.

சத்திரசிகிச்சை மூலம் பிரசவிக்க வேண்டிய சிக்கலான பிரசவங்களை யெல்லாம் இவர் தனது எளிய சிகிச்சை மூலம் சுகப் பிரசவமாக மாற்றியிருக்கிறார். அது எவ்வாறெனின் கர்ப்பிணித் தாயின் நாடியைப் பரிசோதித்தபின்னர் விநாயகக் கடவுளின் பாதத்தில் தேங்காய் ஒன்றை வைத்து பிரார்த்தித்துவிட்டு அதை குறிப்பிட்ட கர்ப்பவதி இருக்கும் அறைவாசலில் அடித்து உடைப்பார். அதன்பின் ஒரு மணி நேரத்தில் குழந்தை சுகமாகப் பிரசவித்துவிடும். இவர் இவ்வாறு பல கர்ப்பஸ்திரீகட்கு வைத்தியம் பார்த்துள்ளார். இதனாற்றானோ என்னவோ "முருகேசு நாடிபிடிக்க வியாதி ஓடிவிடும்" என்பார்கள் ஊரவர்கள்.

சிறந்த பக்திமானாக விளங்கிய இவர் சகல விரதங்களையும் அனுஷ்டித்ததுடன் மற்றவர்களையும் விரதங்களை அனுட்டிக்க வைப்பார். வேலணை ஐயனார் ஆலய நிர்வாகக் குழுத் தலைவராகவும் தனாதிகாரியாகவும் செயலாற்றிய இவர் கந்த புராணத்திற்குப் பயன் கூறுவதிலும் வல்லவராயிருந்தார். ஒரு நிறைவான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்த இவர் தம் உயிரன்ன மகனின் (திரு. மு. வினாசித்தம்பி) திடீர் மரணத்தினால் பெரும் துயருற்றார். இந்த புத்திர சோகமே அவர் ஆரோக்கியத்தைச் சிதைத்து அவரை விண்ணுலக செய்தட செய்தது.



# ஆயுர்வேத வைத்தியர்கள்

# வரணியம்புலம் வைத்தியர் திரு. பெருமாள்

திரு.க. நவரத்தினம் - தபால் அதிபர் - வேலணை

வேலணை கிழக்கு முதலாம் வட்டாரத்திலே "வரணியம்புலம்" எனும் பகுதியுள்ளது. இப்பகுதி அந்நாட்களிலேயே கற்றோரும் காராளர்களும் செறிந்து வாழ்ந்த பகுதியாகும். இங்கு வாழ்ந்த சின்னத்தம்பி வேலாயுதர் என்ற பெருமகனுக்கும் மனைவி சின்னாச்சிக்கும் தலைமகனாக அமரர் வைத்தியர் பெருமாள் 1880ஆம் வருடத்திலே பிறந்தார். இவருக்கு சின்னத்தம்பி, ஆறுமுகம், கணபதி ஆகிய இளவல்கள் சகோதரர்களாயமைந்தனர். இக்குடும்பத்தினருக்கும் தென் இந்தியாவிலுள்ள வளமான "பொன் பரப்பி" என்ற ஊருக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது பற்றி ஊர்ப் பெரியவர்கள் பேசுவதைக் கேட்டிருக்கிறோம். நேர்மை, கண்ணியம், விடாமுயற்சி, தொழிலில் புலமை நிரம்பிய ஆண் மக்களான படியால் இப்பகுதி மக்களின் மதிப்பைப் பெற்று வாழ்ந்தவர்கள். இந்நிலையில் மூத்தவராகிய பெருமாளுக்கு ஆயுர்வேத வைத்தியத்திலே ஆர்வம் ஏற்பட்டு குருசிஷ்ய முறையிலே இதனை முறையாகக் கற்றார். விடா முயற்சியுடனும் பற்றுறுதியுடனும் இவர் வைத்தியத்தைக் கற்றதனால் அதிலே புலமை பெற்ற ஒருவராக அவரால் வர முடிந்தது. ஆயுர்வேத வைத்தியத் திற்கே ஆணிவேராக அமைந்த "கைநாடி" பார்க்கும் முறையிலே மிகுந்த பாண்டித்தியம் நிறைந்தவராக இருந்தார். "பெருமாள் கைநாடி பார்த்துச் சொன்னால் அதிலே எதுவித மாற்றமுமிருக்காது" என்று அக் காலப் பெரியவர்கள் அடிக்கடி சொல்வதை எங்கள் சிறுவயதிலே கேட்டிருக்கிறோம். ஏடுகளை ஆய்வு செய்து மூலிகைகளை தேடி எடுத்து மருந்துகளைத் தயாரிப்பதிலும் கைதேர்ந்தவராக இருந்தார். இவ்வேடுகள் இவருக்கு

எங்கிருந்து கிடைத்தன என்பதுபற்றி நாம் ஆராயத் தேவையில்லை. ஆனால்....... இன்று நாம் அந் நாட்களைச் சிறிது திரும்பிப் பார்த்தால் ... தென் இந்தியாவின் பொன்பரப்பிக்கும் இவற்றிற்கும் தொடர் பிருப்பது போல உணர முடிகிறது மாத் திரமல்ல அவரின் இளைய மகன் சின்னத் தம்பி (நடேசு) தந்தையாரிடம் ஆயுர்வேத வைத்தியத்தை முறையாகக் கற்று பின் நாளில் தந்தையாரின் பெயர் காத்த பிர பல வைத்தியனாக வாழ்ந்து மறைந்தவர். இவர் தனது காலத்திலே "குறுமுனி" இல வச வைத்தியசாலை என்ற வைத்திய நிலையத்தை அரச அங்கீகாரத்துடன் நிறுவி அளப்பரிய சேவை செய்து மக்கள் மனதில் இடம் பிடித்தவர். இக் "குறுமுனி" யார் என்பது பற்றிய விளக்கம் அந்நாட் களில் எங்களிடம் இருக்கவில்லை.

ஆனால்..... சைவத் தமிழர்களிடம் ஒரு ஐதீகமான கதை உலாவருவது அனை வரும் அறிந்ததே. சிவபெருமானுக்கும் உமையம்மையாருக்கும் கைலயங்கிரியிலே திருமணம் நடந்தபொழுது கூடியிருந்த மக் கள் கூட்டத்தினால் கைலயங்கிரி பக்கம் தாழத் தொடங்கியதாகவும், இதனைக் கண்ட சிவபெருமான் குறுமுனியான அகத்தியரை அழைத்து இந்தியக் கண்டத் தின் தென்பகுதிக்கு அனுப்பியதாகவும் அகத்தியர் தென்நாடு வந்ததும் இருபகுதி யும் சமனாக ஆனதாகவும் சொல்லக் கேள்விப்படிருக்கிறோம். ஆயுர்வேத வைத் தியத்திற்கும் அகத்தியர் பெருமானுக்கு முள்ள தொடர்பினையும் "பொன் பரப்பி" பெருமாள் வைத்தியர் ஆராய்ந்து விசேட மருந்துகளை செய்யக் காரணமாகவிருந்த ஏடுகள், பின் நாட்களில் அவரின் மகன் தனது வைத்தியசாலைக்கு "குறுமுனி" எனப் பெயரிட்டது யாவற்றையும் ஒப்பு நோக்கி பெருமாள் வைத்தியரின் வைத்திய மூலத்தைக் கற்பனை செய்து பெருமைப் படுவதுண்டு.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப நாட்களிலே ஆங்கில வைத்தியம் நமது பகுதிகளிலே அவ்வளவு தூரம் பெயர் பெற்றிருக்கவில்லை. எந்தநோயையும் தீர்க் கும் வல்லவர்களாக இவ் ஆயுர்வேத வைத் தியர்களே விளங்கினார்கள். தீவகம் எங்கும் சென்று நோய் தீர்க்கும் வல்லானாகவும், தீவக மக்கள் ஏன் குடாநாட்டு மக்களும் தேடி வந்து பிணிதீர்த்து போகும் ஒரு பிரபல வைத்தியனாக வாழ்ந்து மறைந் தவர் பெருமாள் அவர்கள். தென் இந்தியா விலிருந்து வரவழைத்த வைத்திய நிபுணர் ஒருவரின் வழிகாட்டலில் ஆயுர்வேத வைத் திய உலகில் மிக உயர்ந்ததாகப் பேசப் படும் "மாத்திரைக்கட்டு" என்னும் மருந் தினை தேவையான மூலிகைகள், மருந்து களைப் பெற்று தனது வீட்டிலேயே ஏழு வகையிலே தயாரித்து புடமிட்டு வைத் திருந்து நோய் போக்கியவர். உரிய காலத் தில் உறவினராகிய வேலாசிப்பிள்ளை என்ற பெண்மணியைத் திருமணம் செய்து மூன்று ஆண்மக்களைப் பெற்று குடும்ப வாழ்விலும் நிறைவுகண்டவர். அவரது மக்கள் கந்தையா, வேலுப்பிள்ளை ஆகி யோர் தந்தையாரின் துறையில் ஓரளவு பயிற்சி பெற்றிருந்தாலும், இளைய மகனா கிய சின்னத்தம்பியே (நடேசு) இதில் புலமை பெற்றவராக இருந்தார் என்பது குறிப் பிடத்தக்கது.

ஊருக்கெல்லாம் பிணிதீர்த்த பிரபல வைத்தியர் பெருமாள் தனக்கு ஏற்பட்ட திடீர் நோயினால் 1940 ஆம் வருடத்தில்

தமது 60 ஆவது வயதில் காலமாகியது வைத்திய உலகிற்குப் பேரிழப்பே. ஆறு அடி உயரத்தில் சிவந்த ஆஜானுபாகுவான தோற்றம். நீண்ட கரும் கூந்தல். அதனைக் குடுமியாக முடிந்திருப்பதும், தூய வெள்ளை வேட்டியும், வெள்ளைச் சால்வையும் அணிந்து, மருந்துச் செப்பினை மடியிலே வைத்து நடந்து வருவது டிகை படிந்த சித்திரம் போல கண்ணிலே தெரிகிறது.

"தக்கார் தகவிலர் என்பது – அவர்தம் எச்சத்தால் கொள்ளப்படும்" என்ற குறள் மொழிக்கிணங்க அவரின் பிள்ளைகள் அவரின் துறையிலே டிலமை பெற்றிருந் ததும், பேரப்பிள்ளைகள், நமது மண்ணி லும் கடல் கடந்தநாடுகளிலும் அதேதுறை யில் திறமையுடன் ஈடுபட்டிருப்பதும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியது. நாட்டிலே ஏற்பட்ட யுத்த சூழ்நிலையாலும் பாரிய இடப் பெயர்வினாலும், வைத்திய பாரம் பரியத்திற்குரிய விலை மதிக்க முடியாததும், மிக அவசியமானதுமான ஏடுகளையும் உபகரணங்களையும் இழந்து போனமை ஆயுர்வேத வைத்தியத்துறைக்கு ஈடுசெய்ய முடியாத இழப்பே.

வேலணை மண்ணில் வாழ்ந்து ஒவ் வொரு துறையிலும் வரலாறு படைத்த பெரு மக்களை, இன்றைய சந்ததியினருக்கு அறிமுகப்படுத்திப் பெருமை கொள்ளும் நோக்கில் அவர்களின் வரலாறுகளை ஆய்ந்து ஆவண வடிவிலே கொண்டுவரும் பெரு முயற்சியிலே முன் நின்று ஆர்வ முடன் உழைக்கும் "வேலணை வரலாற்று நூல் வெளியீட்டுச் சபை" யினருக்கு எமது இதயபூர்வமான நன்றிகளைச் சமர்ப்பிப்ப தோடு அவர்களின் இம்முயற்சி பெரு வெற்றி பெற இம்மண்ணின் காவல் தெய்வ மாகிய பெருங்குளத்தம்மையை பிரார்த் திப்போமாக.





# ஆயுர்வேத வைத்தியர்கள்

# திரு. சின்னர் ஐயம்பிள்ளை

திரு. க. நவரத்தினம் (வைத்தியர்)

**ம**ந்திரமாட்சி மகிதரம் போற்ற, வைத்திய சேவை வையகம் வாழ்த்த, ஐயனார் கோவில் ஆக்கவேலைகள், முருகன் கோவில் முதன்மைப் பணிகள், கந்தபுரா ணப் படிப்புஞ் செய்து அரிகரபுத்திர சித்த ஆயுள் வேத இலவச வைத்தியசாலை அமைத்து நாடுவார் சகல பிணிகளும் சாடி ஊரூராக நடந்து நாடிபார்த்து நலம் பெற வைத்தியப் பணிகள் செய்து பார் புகழ் பெரியோன் இந்தியா சென்று ஏற்ற திருத்தலங்கள் யாத்திரை செய்து ஈழக் கதிர்காமம் பலமுறை தரிசித்து பயன் மகிழ் சைவன் வயது முதிர்ந்தும் முதிரா இளைஞ னாய் அயராது சைக்கிள் அங்கும் இங்கும் ஓடி ஓயாச் சேவையால் உலகு முழுவதும் நல்லோர் நண்பால் வளர்ந்தவர் செல்ல மாய் மக்கள் அழைக்கும் பரிகாரி ஐயன் என்னும் வைத்திய மேதை. இவர் 1901ஆம் ஆண்டு நாடு முழுவதும் புகழ்பூத்த வேலணையம்பதியில் பிறந்தவர். இவர் பெயர் ஐயம்பிள்ளை.

தகப்பனார் பெயர் சின்னர்

தாயார் பெயர் வள்ளியம்மை

இளமையில் கல்விமானாகவும் சைவப் பண்பாளனாகவும் திகழ்ந்த இவரை வேலணை மேற்கு ஊரில் வாழ்ந்த தில் லையம்பலப் புலவர் கவர்ந்து விட்டார். அதனால் அவரின் உற்ற நண்பனாக ஆனார். அவரின் வழிகாட்டலின் பெயரில் கந்தபுராண படலத்தையும் வைத்திய கல்வியையும் ஆரம்பித்தார். அதன் பின்னர் வைத்திய சேவையை ஆரம்பித்த இவர் நாட்டில் புகழ்பூத்தார்.

இந்த சித்த வைத்தியத்தில் பெயர் பெற்ற வைத்தியனாக அரசாங்கத்தில் தன்னைப் பதிவு செய்து சட்டப்படி வைத்தியப் பணியை ஆரம்பித்தார். இலவச வைத்திய சாலை அமைத்து தன்பணியை ஆரம்பித்த இவருக்கு, அதற்காக அரசாங்கமும் வருடாந்த, மான்யமாக ஒரு தொகைப் பணத்தை வழங்கி வந்தது. நோயாளர் கொடுக்கும் பணத்தை அவர் தனது மேசையில் ஒரு மூலையில் வைத்துச் செலுத்துவதற்கு அனுமதித்தார். காசு கேட்டு கையால் வாங்கிய நிலை அரிதினும் அரிது என்பது விசேடமாகக் குறிப்பிடத்தக்கது. இவர் புகழ் தீவுப் பகுதியில் மட்டுமல்ல வலிகாமப் பகுதி, வன்னிப் பகுதிக்கும் பரவ ஆரம்பித்தது.

நாடி சாத்திரக் கலையில் மகா விற்பன்னனாக திகழ்ந்த இவர் நோயாளர்களுக்கு நாடி பார்த்து மக்கள் மனம் கவர்ந்தார். நாடிப் பரீட்சையின் மூலம் மணித்தியாலக்கணக்கில் நிகழ இருக்கும் சம்பவங்களை கச்சிதமாக கூறுவார். என்ன சாப்பாடு சாப்பிட்டது இரவு என்ன மாதிரியான கனவு கண்டது, என்ன கனவு, எத்தனை மணித்தியாலத்தில் நிகழ இருக்கும் மரண நாட்களை அப்படியே அச்சொட்டாகக் கூறுவதில் இவர் ஒரு சமர்த்தர். சேவையாளர் மனம் கவர்ந்த மாமேதை.

இவரின் அரிய தயாரிப்பு மருந்து, புன்னைவேர் குளிகையும், நீரும் ஆகும். பிரசவ வலி ஏற்படும் தாய்மாருக்கு முருங்கைப் பூவும் வெந்தயமும் அவித்த குடிநீரில் இக் குளிகையைக் கொடுப்பாரானால் சுகப் பிரசவம் வரும் பல சம்பவங்கள் நடந்து இருக்கின்றது. பெரிய வைத்தியசாலைக்கு செல்லவிடாமலே பிரசவ வேதனையை சுகமாக்கி சாதனை படைத்தவர். இவரின் வைத்திய சாணக்கியத்தை இவரின் புத்திரர் மூலமாக கேட்டறிந்த தகவல் ஒன்றையும் இங்கு குறிப்பிடலாம்.

ஒருவர் தன் மனைவியை அழைத்துக் கொண்டு மருந்துக்கு வந்தார். தன் மனைவி சுவாசத்தால் கஷ்டப்படுவதாகச் சொன்னார். விசாரித்தபோது பல இடங்களிலும் வைத்தியம் செய்ததாக சொன்னார். பொதுவாக நோயாளர்கள் சொல்லும் வழக்கம். முயற்சி செய்வதில் தவறில்லை என்று உணர்ந்தார். மூன்று நாள் கழித்து வந்தால் மருந்து தரமுடியும் என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

பின்னர் முசித்து முட்டை எடுத்து வறுத்து தூளாக்கி சீலையில் வடித்து வைத்துக் கொண்டார். அவர்களும் மூன்று நாள் கழித்து மருந்து வாங்க வந்துவிட்டார்கள். தன்னிடமிருந்த சுவாத புன்னைவேர் குளிகைகளையும், முசித்தமுட்டை தூளையும் வேறுவேறாகக் கடதாசியில் மடித்து கொடுத்தார். 1 வேளைக்கு மூன்று குளிகைகளையும் தூளாக்கி அத்துடன் தான் கொடுத்த தூளையும் வெருகடிப்பெருமாணம் சேர்த்து வெந்நீர் விட்டுக் கலந்து குடிக்க வேண்டும். இவ்வாறு தினமும் 1 வேளை என்று கூறினார். (கொடுத்த தூள் என்ன என்பதை சொல்லவில்லை.) அகத்தியர் அருளிய அங்காதி பாதம் 400ல் கூறப்பட்ட பொதுவான பத்தியங்களையும் சொல்லி அதன்படி உணவு அமைய வேண்டும் என்று கூறினார். 7 வேளை குளிகை குடித்ததும் அவரிடம் வந்தார்கள். நிலைமையில் முன்னேற்றம் இருந்தது. திரும்பவும் நோய் தீரும்வரை கொடுத்தார். நோய் சுகமாகி திருப்திப்பட்டார்கள்.

சந்தர்ப்பம், சூழல், தேவை என்பவற்றிற்கேற்ப மருந்துகைளப் பற்றிய ரகசியங்கள் காக்கப்படுவதால் நோயாளர்களுக்கு நன்மை ஏற்படுவதை இந்த அனுபவம் காட்டுகின்றது.

வைத்திய சேவையுடன் நின்றுவிடாது, இனமக்களின் மனநிறைவுக்காக மந்திரம், நூல்கட்டுதல், மைபார்த்தல் போன்றவைக ளையும் செய்து மக்களின் மனம் கவர்ந் தார்.

இவரின் புகழ் இத்துடன் மட்டுமல்ல. இரு புதல்வர்கள் உள்ளூராட்சி மன்ற அரச ஆயுர்வேத வைத்திய அதிகாரிகளாக கடமை பார்த்தும் உள்ளார்கள். இவரது 4வது பரம்பரையாக வைத்தியம் தற்போது நடைபெறுகின்றது.

இவரின் வைத்திய சேவைக்கு சிகரம் வைத்தாற் போல புகழாரம் சூட்டி வேலணை சோளாவத்தையில் வசிக்கும் கவிஞர் தில்லைச் சிவன் ஆக்கிய கவிதை ஒன்று இங்கு பிரசுரமாகின்றது.

## பழிவிட்டடைந்தான் பதம்

மெய் வருத்தமுற்றோர் மிக நொந்து நெஞ்சினிலே
“ஐயம்பிள்ளை” யென அழைத்திடவே - வெய்ய
கொடு நோயும் விட்டுக் கோல்தூரம் ஓடிப்
படு மென்பர் உற்றோர் பலர்.

“ஈருளி யேறி ஈரிழைத்துண்டோடும்
பேருவிற் கூனல் பிறங்க - “கார்” விசையில்
வாராரே ஐயன்” என்றவுடன் வந்தநோ
போறேன் போ றேனென்று போம்.

வேலணைக்குள் நாளும் வீற்றிருந்து பிள்ளைநோ
சாலக்கடி தோட்டுந் தன்மையதால் - கோல
எழில் பெற்று வாழ்ந்தோம். இங்கினியென் பிள்ளை?
பழிவிட்டடைந்தான் பதம்

- தில்லைச் சிவன்





# ஆயுர்வேத வைத்தியர்கள்

## விஷக்கடி வைத்தியர் திரு. முருகேசு கதிரவேலு

திரு. இ. சற்குருநாதன் - வேலணை

யாழ்ப்பாண பிரதேசத்தில் சுதேச வைத்தியத்துறையில் பிரசித்தி பெற்ற பல குடும்பங்கள் நீண்ட வரலாற்றைக் கொண்டுள்ளன. அன்று மக்கள் பெருமளவு சுதேச வைத்தியத்திலேயே தங்கியிருந்தனர். சுதேச வைத்தியத்துறையிலும், குறிப்பாக பெண் நோயியல், மகப்பேறு குழந்தை, முறிவு, பாரிசவாதம், விஷக்கடி போன்ற துறைகளில் விஷேச வைத்தியப் புலமை பெற்ற குடும்பங்கள் காணப்பட்டன. இத்தகைய சிறப்புப் பெற்றவர்களிடம் குறிப்பிட்ட கிராம மக்கள் மாத்திரமன்றி, யாழ்ப்பாணப் பிரதேச மக்களும் வைத்திய சேவையைப் பெற்று வந்தமை குறிப்பிடத்தக்கது. மேலும் வைத்தியர்களின் வீடுகள் வைத்தியசாலைகளாவும் செயற்பட்டன. வைத்தியர்கள் நோய்க்கு சிகிச்சை அளிப்பதுடன், நோயாளிகளைச் சிறந்தமுறையில் முகாமைப்படுத்தி, அவர்களின் நோய் பிணி நீக்குவார்.

யாழ்ப்பாணத்தில் இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் விஷக்கடி வைத்தியத்துக்கு வேலணையில் பிரசித்தி பெற்ற வைத்தியர் முருகேசு கதிரவேலு அவர்கள் மிகச் சிறந்தபணியை ஆற்றியுள்ளார். இவர் விஷக்கடி வைத்தியத்துறையில் பெற்றிருந்த அறிவும், ஆற்றலும் வளர்வதற்கு அவர் தந்தைவழியாகப் பெற்றிருந்த அறிவும் ஞானமும் மாத்திரமன்றி அவரின் அறிவுத் தேடலும் முக்கிய பங்கு அளித்தது. அவருக்கு முன்னர் அவரின் ஆறு பரம்பரையினர் தொடர்ச்சியாக விஷக்கடி வைத்தியத்தில் ஈடுபட்டு வந்ததாக அறியப்படுகின்றது. பரம்பரையாகப் பெற்ற வைத்திய அறிவையும் சேவையையும் கைவிடாது வளர்த்து வந்தமை பெருமைக்குரியது. அவர் தனது

அறிவை தனது பிள்ளைகளுக்குப் பின்னர் கையளித்துள்ளார். பெண் நோயாளிகளுக்கு வைத்தியம் செய்வதில் எதிர்கொண்ட சில இடர்பாடுகளை மனதிற்கொண்டு தன் மகள் அனுஷம்மாவுக்குக் குருவாக இருந்து தன் வைத்திய அறிவை வழங்கியுள்ளார். மகள் திருமதி. இளையதம்பி அனுஷம்மா அவர்கள் தந்தைவழி வைத்தியத்துறையில் சிறந்த பணியாற்றி வருகின்றார்.

1960ஆம் ஆண்டுகளுக்கு முன்னர் யாழ்ப்பாணத்து மக்கள் வாழ்ந்த சூழலும் அவர்களது வாழ்க்கை முறைகளும் விஷக் கடிகளுக்கு உட்படுவதற்கு ஏதுவாயிருந் தன. கிராமங்களில் மக்கள் தொகை குறை வாக இருந்ததும், தாவரப் போர்வை அதிக மாகக் காணப்பட்டதும் கலட்டுப் பிரதேசங் கள் கொண்டதாகவும் மின்சார வசதிகள் அற்றதாகவும் விளங்கியது. மக்கள் காலணி அணியும் வழக்கம் மிகக் குறைவாக இருந்தமையும் விஷக்கடிகளுக்கு உட்படும் சாத்தியம் நிறையவே காணப்பட ஏதுவாயின. இதனால் அன்று விஷக்கடி யாழ்ப்பாணத் துக் கிராமங்களில் பெரும் பிரச்சினையாக விளங்கியது. இப்பின்னணியில் விஷக்கடி வைத்தியர் முருகேசு கதிரவேலு அவர் களின் சேவை வேலணைக் கிராமம் கடந்து, ஏழு தீவுகள் கடந்து யாழ்ப்பாணப் பிரதேசம் முழுவதும் பரவி நின்றது. அவரின் வாழ்நாள் காலத்தில் அவரின் வைத்தியத் தால் சுகம் பெற்றோர் ஏராளம்.

இத்தகைய பிரசித்தி பெற்ற வைத்தியர் கதிரவேலு அவர்கள் வேலணை மண்ணில் முருகேசர் அவர்களுக்கும் பெரிய நாச்சி யார் அவர்களுக்கும் பிறந்த ஏழு பிள்ளைக ளுள் நான்காவது பிள்ளையாகும். அவர் பொன்னம்மா அவர்களைத் திருமணம் செய்து ஆறு பிள்ளைகளுக்குத் தந்தையா னார். இவர்களுள் திரு. க. தியாகராசா, திரு. க. சிற்றம்பலம், திரு. க. சிவபாதலிங் கம், திருமதி. இ. அனுஷம்மா ஆகியோர் தற்போது தந்தை வழி அறிவையும் புலமை யையும் பெற்று கல்விப்பணியையும் வைத் தியப் பணியையும் சிறப்பாக ஆற்றி வருகின் றார்கள். இவர்களுள் மகள் திருமதி. இளைய தம்பி அனுஷம்மா அவர்கள் தந்தையின் வைத்தியப் பணியை முழுநேரப் பணியா கக் கொண்டு யாழ்ப்பாணத்திலும் வேலணை யிலும் சிறப்பாகக் கடமைபுரிந்து வருகின் றார். இவர் நான்கு பிள்ளைகளின் தாயாவார்.

வைத்தியர் முருகேசு கதிரவேலு அவர்கள் சிறந்த இறைபக்தியும் சித்தாந்த அறிவும் மிக்கவர். வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் மேல் அளவற்ற பக்தி கொண்டவர். அம்பாளின் அருளாசி பெற்ற வர் எனக் கூறலாம். அம்பாளின் அடியார் களின் நலன் கருதி, கோயிலின் வருடாந்த திருவிழாக்களின்போது தாக சாந்தி செய் வதற்காகத் தண்ணீர்ப் பந்தல் அமைத்து உதவியுள்ளார். மேலும் இப்பணி சிறப்பாக நடைபெறும் பொருட்டு நிரந்தரமாக ஒரு மடமும் நிறுவியுள்ளார். அவர் இந்தியாவி லுள்ள சிதம்பர நடராஜனின் தரிசனம் பெறுவதற்கு 32 வருடங்கள் இந்தியா சென்று வந்துள்ளார். தமிழ் நாட்டிலுள்ள சைவத் தலங்கள் பலவற்றைப் பலமுறை தரிசித்த ஈழ நாட்டு புண்ணியவான் வைத் தியர் முருகேசு கதிரவேலு ஆவார். அவர் வைத்தியத்துறையில் சிறப்பாகப் பணி புரிந்தமைக்கு அவரின் வைத்திய அறிவும் ஆற்றலும் ஈடுபாடும் மாத்திரமன்றி, அவ ரின் இறைபக்தியும் பெற்ற இறையருளும் முக்கியமளிக்கின்றன.

வேலணை கிராமத்தில் விஷக்கடி வைத்தியராக விளங்கியதுடன் சிறந்த

விவசாயியாகவும் விளங்கினார். வேலணை கிழக்கில் குறிப்பாகத் தாழிட்லம் பகுதியில் பல சமூக சேவைகளையும் ஆற்றியுள்ளார். வறியவர்கள், நலிந்தவர்கள் மேலுள்ள ஈடு பாட்டின் காரணமாக அவர்களுக்கு நிலம், பொருள், கொடுத்தது மாத்திரமன்றி, அவர்களின் வாழ்க்கை மேம்பாட்டிற்கும் வழிகாட்டியாக விளங்கினார்.

வேலணை கிராமத்தின் வாழ்விலும் வளத்திலும் நிலைத்து நிற்கும் மறைந்த பெரியோர்களில் விஷக்கடி வைத்தியர் முருகேசு கதிரவேலு அவர்களும் என்றும் நினைவு கூரத்தக்கவர்.





## கலைஞர்கள்

# சித்திரக்கலைஞர் பா. சண்முகநாதன்

### திரு. ப. ரஜீவன் - வேலணை

இந்து சமுத்திரத்தின் நித்திலம் என வர்ணிக்கப்படும் இலங்கைத் தீவிலே சிவ பூமி என பெயர் பெற்ற யாழ்ப்பாண தீப கற்பத்தின் அருகே உள்ள சப்த தீவுகளிலே ஒன்றாக கணிக்கப்படுவது, வேலணைத் தீவு. நாற்புறமும் கடலால் சூழப்பட்டு உள்ள அத்தீவிலே, மூர்த்தி, தலம், தீர்த்தம், என மூன்றும் ஒருங்கே அமையப்பெற்ற பிர சித்திபெற்ற தலமாகிய பெருங்குளம் முத்து மாரியம்மன் ஆலயம் அமைந்துள்ள அழ கிய இயற்கையான வனப்பு மிக்க இவ்வூரின் 3ஆம் வட்டாரத்தில், பாலகிருஷ்ணசாமி, சின்னம்மா தம்பதியினருக்கு சிரேஷ்ட புத்திரனாக சண்முகநாதன் 1922ஆம் ஆண்டு பிறந்தார்.

அறிவு தெரிந்த நாள் முதல் அம்பாள் பக்தனாக விளங்கிய சண்முகநாதன், சிறு வயது முதல் கலையின் பால் கொண் டிருந்த ஆர்வம் வியப்பிற்குரியது. அவரது கலையார்வத்திற்கு வழி வகுத்தவளும் அவளே. பெருங்குளம் முத்துமாரியம்மா ளின் ஆலயத் திருப்பணிக்காக இந்தியா விலிருந்து சிற்ப கலைஞர்கள் வருகை தந்து சிற்பங்களை செதுக்கும் போது அந்தகலை மேல் கொண்டுள்ள ஆர்வம் காரணமாக அவற்றை அவர் ஆர்வத்துடன் கவனித்த தோடல்லாமல் "கண் பார்த்ததை கை செய்யும்" என்னும் சொல்லுக்கிணங்க அச் சிறுவயதிலேயே சிலைகளை இயற்கையா கவே செய்யும் ஆற்றலையும் கொண்டிருந் தார். இவ்வாற்றலுடன் சித்திரம் வரை யும் ஆற்றலும் அவருக்கு உந்துகோலாக அமைய, சிறு வயதில் இருந்தே சித்திரம் வரைவதிலும் சிலைகள் வார்ப்பதிலும்

தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். காலம் செல்ல செல்ல "சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்" எனும் வாக்குறுதிக் கிணங்க அவரிடம் காணப்பட்ட இச்சித்திரம் வரையும் திறமை, மென்மேலும் மெருகேறியது.

சித்திரம் வரையும் திறனும், கூடவே ஆற்றல், அறிவு, ஆளுமை, என்பனவும் வளர்ந்து அவர் பூரண மனிதனாகிய போது அவர் தாய், தந்தை அவருக்கு அவ்வூரில் புகழுடன் வாழ்ந்த செல்லையா தம்பதியினரின் சிரேஷ்ட புத்திரி மங்கையர்க் கரசியை இல்லாளாக்கி மகிழ்ந்தனர். அக் காலத்தில் அவர் வெள்ளுடை தரித்து அஞ்சா நெஞ்சுறுதியும் கொண்டு, நிமிர்ந்த நடையுடன் எல்லா இடமும் வலம் வருவார். எல்லோராலும் "நாதன்" என அழைக்கப்படும் இவர், அக்காலகட்டத் திலேயே சித்திரத்துடன் கூடிய புகைப்படத் துறையின்பால் கொண்ட ஆர்வத்தால் இந்தியாவிற்கு சென்று தமிழ் நாட்டின் சென்னை மாநகரத்தில் மிகவும் புகழுடன் திகழ்ந்தஏ. வீ. மெய்யப்பச் செட்டியாரின் ஏ. வீ. எம். புகைப்படக் கலையகத்தில் புகைப்படக் கலையினை கற்றுத் தேர்ந்து போதிய பயிற்சியுடன் தனது ஆற்றலை சுய தொழிலாக தனது நாட்டிலே முதலீடு செய்ய எண்ணி, மீண்டும் இலங்கை திரும்பி யாழ் மண்ணிலே நாதன் Studio என்ற புகைப்பட கலையகத்தை நிறுவினார். இவரது கலையகம் அக்காலகட்டத் திலே மிகவும் பிரசித்திபெற்ற ராணி திரையரங்கின் அருகில் அமையப் பெற்றிருந் தமை அவருக்கு மிகவும் வாய்ப்பாகவே அமைந்தது. செய்யும் தொழிலையே தெய்வமாக போற்றிய அவர் தனது கைவண்ணத் தால் யாழ் நகரின் மிகவும் பிரபலமான பல திரையரங்குகள் அனைத்திற்கும் விளம்பர ஓவியராக சிறப்பாகவே பணிபுரிந்தார். பிரபல சினிமா நட்சத்திரங்களின், குறிப்பாக மக்கள் திலகம் எம். ஜி. ராமச்சந்திரன், நடிகர் திலகம் சிவாஜி கணேஷன் ஆகியோரின் கட் அவுட் என்று அழைக்கப் படும் ஓவியங்கள் சண்முகநாதன் கை வண்ணத்திலே மிளிர்ந்தன. இவரது கைவண்ணத்தில் உருப்பெற்ற சினிமா நட்சத்திரங்களின் முழு உருவப் படங்கள் யாழ் மண்ணின் திரையரங்குகளின் முன்னால் உயிர் பெற்று, அக்கால யாழ் மண்ணின் அழகிற்கு மேலும் மெருகூட்டின.

சித்திரக் கலையிலும், புகைப்படத் துறையிலும் தன்னை முழுமையாக ஈடு படுத்திக் கொண்ட சண்முகநாதனிற்கு கூடவே ஒரு திறமையும் இருந்தது. அது எவரையும் முழுமையாக ஒரு முறை பார்த்தால் அவரை அப்படியே தத்ரூபமாக வரைவது. இத்தகைய திறமைகளுடன் தான் பிறந்த வேலணை மண்ணிற்கு புகழும் பெருமையும் சேர்த்த சண்முகநாதன் நீண்ட நாட்களாக தன் மனதில் இருந்த கனவொன்றினை நனவாக்க எண்ணினார். பொருளாதாரத்தின் பெருவளம் இல்லாவிடினும், உறுதியான நம்பிக்கையும் இடைவிடாத முயற்சியும் வெற்றியினை தேடித் தரும் என முயற்சிப்பவர்களுக்கு, இவரின் தேடல் ஒரு முன்னுதாரணம். தான் ஈடுபாடு கொண்ட சித்திரத்துறையுடனும், புகைப்படத் துறையுடனும் நேரடியாகச் சம்பந்தப்பட்ட சினிமா திரையரங்கொன்றினை யாழ்நகரில் நிறுவவேண்டும் என்பதே இவரின் தேடலாக இருந்தது. அதனை அவர் முத்துமாரி அம்பாளின் துணையுடன் நிறைவேற்ற மிகவும் பிரயத்தனப் பட்டார். பெருமுயற்சியின் பயனாகவும் அம்பாளின் அருள் மற்றும் அவரது வீட்டருகில் உள்ள தவிடுதின்னி விநாயகரின்

ஆசியுடனும் கூடிய அருளால் 1975ஆம் ஆண்டு இவரின் கனவு யாழ் நகரில் நனவாகியது. அதுதான் "ஹரன் திரையரங்கு". பெருமுயற்சியுடன் நிறுவப்பட்ட திரையரங்கில் முதல் படமாக பொன்னூஞ்சல் திரைப்படம் வெளியிடப்பட்டு, வெற்றிகரமாக தனது ஆரம்ப விழாவைக் கொண்டாயது, ஹரன் திரையரங்கு.

இவர் இத்துடன் நின்றுவிடாது, அரசியல் வாழ்விலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். தமிழ் மேல் கொண்ட பற்றின் காரணமாக 1956ஆம் ஆண்டு நடந்த சத்தியாக்கிரக போராட்டங்களிலும் சிறீ எதிர்ப்பு போராட்டங்களிலும் தீவிரமாக ஈடுபட்டார். தமிழர் தரப்பு போராட்டங்களில் பங்குபற்றிய தலைவர்கள் பலர் இவருக்கு நெருக்கமான நண்பர்களாகவும் இருந்துள்ளனர். அரசியல் வாழ்வில் தான் பெற்ற செல்வாக்கினை என்றுமே தன்னுடைய தனிப்பட்ட நலங்களிற்காகவோ அன்றி தன் குடும்பத்தின் நலங்களிற்காகவோ பயன்படுத்தியிராத சண்முகநாதன் மாறாக வேலணை கிராமத்தின் முன்னேற்றத்திற்கும் கிராம இளைஞர்கள் தொழில் வாய்ப்பு பெறுவதற்கும் மட்டுமே பயன்படுத்தியிருந்தார். வேலணை கிழக்கு மகா வித்தியாலயம் தரம் உயர்த்தலிலும் இவரின் பங்கு அளப்பரியது.

பெருங்குளம் முத்துமாரி அம்பாளின் பேரில் மிகவும் பக்தியுடையீவராக இருந்து இவர் கோயில் திருப்பணிகளிலும் ஆலயத் திரைச்சீலைகளில் தெய்வத் திருவுருவங்களை தத்ரூபமாக வரைந்து கொடுக்கும் பணிகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். எப்போதுமே தமிழ் அன்னையை போற்றுவதிலும் அதன் வழி நடக்க ஆர்வம் கொண்டிருந்தவர், காலில் செருப்பு அணிந்து நடப்பதில்லை. இவர் தான் பிறந்த கிராமத்திலேயே இறுதி மூச்சு வரை வாழ்ந்து தமிழ் பற்றியும் அம்பாள் பற்றியும் தன் சொந்த மண் பற்றியுமே அளவளாவிக் கொண்டிருந்து விட்டு, உயிர் நீத்தார். தனது இறுதி மூச்சை 1986 இல் அவர் நீக்குமுன் தான் பக்தி கொண்ட அம்பாள் கோவில் குளத்தில் நீராடி விட்டு வீடு வந்து சேர்ந்த வேளையில் அவர் உயிர் உடலை விட்டு அகன்றது. மது அருந்துதல், புகைத்தல், போன்ற எந்தவிதமான தீய பழக்கங்களும் இன்றி உத்தமனாகவே வாழ்ந்து உயிர் நீத்த சித்திர கலைஞனான அவர் இன்றும் வேலணைக் கிராம மக்கள் மனதில் நின்று நிலைத்து வாழ்கின்றார்.

★ மண்ணின் மீது கொண்ட பற்றும் தமிழ் மீது கொண்ட பற்றும் காரணமாக பல இன்னல்கள் வந்து சூழ்ந்த போதும் அவற்றினை பொருட்படுத்தாது தனது சொந்தக் கிராமத்திலேயே இறுதிவரை வாழ்ந்து வந்த சித்திர கலைஞர் சண்முகநாதனின் வாழ்க்கை இன்றைய இளம் சந்ததியினருக்கு என்றும் ஒரு எடுத்துக்காட்டாக திகழும்.

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப்படும்"*





# கலைஞர்கள்

# திரு. சபா சதாசிவம்


திரு. க. நவரத்தினம்
(தபால் அதிபர் - வேலணை)


சைவத்தையும் தமிழையும் இரு கண்ணெனப் போற்றி வளர்த்த வேலணை எனும் புண்ணிய பதியிலே திருவாளர் சபாபதிப்பிள்ளை எனும் பெருமகனுக்கும் அன்னப்பிள்ளை என்ற மங்கை நல்லாளுக்கும் ஏகபுத்திரனாக 1932ஆம் வருடத்தில் பிறந்தவர் திரு. சதாசிவம் அவர்கள். இவர் தமது ஆரம்பக் கல்வியை வேலணை சரஸ்வதி வித்தியாலயத்திலும், தொடர்ந்து இடைநிலை உயர்கல்வியை வேலணை மத்திய கல்லூரியிலும் பெற்றார். கல்வி கற்கும் பராயத்திலேயே பாடசாலையில் நடைபெறும் கலைநிகழ்வுகள் எதுவாக இருப்பினும் இவர் பங்குபற்றாத கலை நிகழ்வுகள் இல்லையென்றே சொல்லலாம். பாடசாலைக் கல்வியை விடவும் கலைத் துறையில்தான் இவருக்கு அதிக நாட்டமிருந்தது. தான் கற்ற கல்லூரியில் நிகழும் எந்தக் கலை நிகழ்விலும் முன்நின்று தனது திறமையை வெளிப்படுத்தத் தவறவில்லை. எந்தப் பாத்திரத்தை ஏற்றாலும் அதுவாகவே மாறி, தான் ஒரு குணசித்திர நடிகன் என்பதை அந்த வயதிலேயே வெளிக்காட்டியவர். பாடசாலை நாட்களிலே அனேகமாக நகைச்சுவைப் பாத்திரங்களையே ஏற்று நடித்து அனைவரையும் சிரித்து மகிழவைத்தவர். மேடையிலே சதாசிவம் தோன்றிவிட்டால் பார்வையாளர் மத்தியிலே முகமலர்வும் சிரிப்பும் தானாகவே வந்துவிடும். இது அன்று நாம் கண்ட யதார்த்தம்.

இவரது கலைவாழ்வை இருகூறாகப் பிரித்தே நோக்க வேண்டும். முப்பது பராயத்திற்குட்பட்ட முதற்கூறில் அவர் முற்று முழுதாக தன்னை ஒரு நாடகக் கலைஞனாக, நாடக நெறியாளனகவே (அந்நாளில்

அண்ணாவியார்) வெளிக் காட்டியிருந்தார். இவர் நெறிப்படுத்தியிருந்த இரு நாடகங்கள் மக்கள் மத்தியிலே பெரு வரவேற்பைப் பெற்றிருந்தன. ஒன்று "ஸ்ரீவள்ளி". மற்றையது "ஔவையார்". இரு நாடகங்களுக்கும் தனது திறமை முழுவதையும் காட்டி மிகுந்த பக்திமயத்தோடு நெறிப்படுத்தியிருந்தார். அவரின் எதிர்பார்ப்பு வீண்போகவில்லை. நாடகங்கள் பெரு வெற்றி பெற்றதோடு இளம் கலைஞர்களையும் சுவைஞர்கள் இனம் காண வைத்தார். ஸ்ரீவள்ளியில் முருகனாக நடித்த திரு. தில்லைநாயகம் வள்ளியாக நடித்த திரு. அரசரெத்தினம் இருவரும் பாத்திரங்களுக்கேற்ற தோற்றத்துடன் கணீரென்ற தமது இனிய குரலால் கீதமிசைத்து மக்களை மெய்மறக்க வைத்தவர்கள், அது மாத்திரமல்ல நாரதர் பாத்திரத்தைத் தானே ஏற்று நாடகத்தின் பெருவெற்றிக்கு நடிப்பாலும் மெருகூட்டியவர். "ஔவையார்" நாடகத்தில் வேலணை மண்ணின் புகழ்பூத்த சிற்பக் கலைஞரும் இசைப் பிரியருமான திரு. நாகரத்தினம் என்ற இளைஞனை ஔவை மூதாட்டியாகவே மாற்றி நாடகத்தை நெறிப்படுத்தியிருந்தார். ஒரு சிற்பக்கலைஞனை நாடகக் கலைஞனாக மாற்றிய இவரின் திறமை கண்டு வியக்காதார் இல்லையெனலாம். இரு நாடகங்களும் மக்களால் பல நாட்கள் மறக்கப்படாமலிருந்தன என்பது உண்மை.

கல்வியை முடித்து, யாழ்ப்பாணம் விவசாயத் திணைக்களத்திலே விவசாய விரிவாக்க உத்தியோகத்தராகப் பதவியேற்றதன் பின்னான காலத்தை நாம் இவரின் இரண்டாவது கூறாகப் பார்க்கலாம். நாம் குறிப்பிட்ட முற்கூறில் இவர் வில்லிசையிலும் நாட்டம் கொண்டு சில நிகழ்வுகளைச் செய்திருந்தாலும் பிற்கூறில்தான் அதில் ஆர்வமாகச் செயற்படக்கூடிய காலம் அவருக்கு வாய்த்ததெனலாம். வில்லிசை மீது தனக்குள்ள ஆர்வத்தை வெளிப்படுத்தியவர். அந்தக் கலை அதன் நுணுக்கம் தெரியாதவர்களால் படும் பாட்டைக் கண்டு மனம் வருந்தினார். அதனால் முறையான ஓர் ஆசானிடம் அந்தக் கலையை முற்றுமுழுதாக அறிந்து அதனை வளர்ப்பதற்கு உறுதி பூண்டார். தனது ஆர்வத்திற்கேற்ற சிறந்த ஆசான் தமிழகத்திலேயுள்ள மதுரை ஆதீன ஆஸ்தான வித்துவான் சாத்தூர் திரு. சபா பிச்சைக்குட்டி என்பவர்தான் என்பதை உணர்ந்தார். அதன்படி 1968ஆம் வருடத்திலே தமிழ்நாடு சென்றார். அங்கு திரு. பிச்சைக்குட்டி அவர்களிடம் வில்லிசையின் நுணுக்கங்களையெல்லாம் ஐயம் திரிபறக் கற்றார். இவரது ஆர்வத்தையும், திறமையையும் கண்ட பிச்சைக்குட்டி அவர்கள் இவரைத் தமது பிரதம சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார். ஆறுமாத பயிற்சி முடித்து 02.9.1969 அன்று மதுரை ஆதீன மண்டபத்தில் குருமகாசந்நிதானம் அவர்களது தலைமையில் அரங்கேற்றம் நிகழ்ந்தது. தமிழ்நாடே கூடியிருந்தது போன்று ஒரே மக்கள் கூட்டம். எங்கும் புதிய வில்லிசை இளவலைப் பார்க்கத் துடிக்கும் ஆர்வமுள்ள முகங்கள். சதாசிவம் அவர்கள் மேடையில் தோன்றினார். "பிட்டுக்கு மண்சுமந்த பேரருளாளன்" என்ற திவ்விய சரிதம் பற்றி வில்லிசை நிகழ்த்தினார். எங்கும் ஒரே பிரமிப்பு. இரண்டு மணித்தியாலங்கள் தொடர்ந்து நடைபெற்ற அரங்கேற்றம் முடிவுற்ற பின்பும் சபையோர் மெய்மறந்து அமர்ந்திருந்தனர். எங்கும் ஒரே கரகோஷம். நமது ஈழமண்ணிற்கு சிறந்ததொரு மதிப்பீடு அந்த மாபெரும் சபையிலே கிடைத்தது.

இலங்கை திரும்பிய கலைஞர் தனது கடமையோடு கலைப்பணியையும் தொடர்ந் தார். இந்நாட்களிலே இவரின் பெற்றோரின் விருப்பத்திற்கமைய பேபி என்னும் நல் லாளை வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டார். இன்பமான இல்லற வாழ்வின் பயனாக வேல்மாறன், மணிமாறன், இரஞ்சினி, திருமாறன் ஆகிய நான்கு பிள் ளைச் செல்வங்களைப் பெற்றார். அவர் களை கல்வி வளர்ச்சியிலே ஆர்வம் காட்டி யது போலவே கலைத்துறையிலும் ஈடுபாடு கொள்ள வைத்தார். அதிலும் அவர் பெரு வெற்றிகண்டார் என்றே சொல்லலாம். இவரின் புகழ் தமிழ் கூறும் நல்லுலகெங் கும் பரவியதன் பயனாக ஈழத்தில் மாத்திர மல்ல கடல் கடந்த நாடுகளான மலேசியா, சிங்கப்பூர் வரை அழைத்துக் கௌரவிக் கப்பட்டார். இலங்கை வானொலி நிலையத் தாரின் கோரிக்கையையேற்று மாதாந்த கலைநிகழ்விலே கலந்துகொண்டு சிறப் பித்தார். இவரின் திறமை கண்டு மகிழ்ந்த கலையுலகம் இவருக்கு வில்லிசை மன்னன், முத்தமிழ் கலாரத்தினம், வில்லிசை விற் பன்னன் என்ற பட்டங்களையும் தந்து கௌரவித்தது.

இந்நிலையில் 1984ஆம் வருடத்தில் அரச பயங்கரவாதத்திற்கு இவரது இரண் டாவது மகன் தனது 16ஆவது வயதிலே பலியானார். இந்த எதிர்பாராத இழப்பு அவரை வெகுவாகப் பாதித்து படுக்கை யில் விழுத்தியது. ஈற்றில் 15. 02. 1986 இல் அந்த மாபெரும் கலைஞர் இறையடி சேர்ந் தார். கலைக்காகவே வாழ்ந்த அப்பெரு மகனை தமிழுலகம் இழந்துவிட்டது. ஆயினும் ....

"தக்கார் தகவிலர் என்பது அவர்தம்
எச்சத்தால் கொள்ளப்படும்"

என்ற முதுமொழிக்கிணங்க அவரின் பிள்ளைகளாகிய வேல்மாறன், திருமாறன் ஆகியோர் இன்று தமிழ் ஈழத்தில் மாத்திர மல்ல கடல் கடந்த நாடுகளிலும் புகழ்பூத்த அணிசெய் இசைக் கலைஞர்களாகப் பாராட் டப்படுபவர்கள். திரு வேல்மாறன் மிருதங்க ஆசானாகவிருந்து பல இளம் கலைஞர் களை உருவாக்குவதன் மூலம் "மகன் தந்தைக்கு ஆற்றும் .... கடமையைச் செவ் வனே செய்து வருபவர் என்பதையும் குறிப் பிடலாம்.

நிறைவாக, கலைஞர் சபா சதாசிவத் துடன் இணைந்து இளவயதிலிருந்தே நாட கங்களைத் தயாரித்து நடித்த, குறிப்பாக சீர்திருத்த நாடகங்களைத் தயாரித்து நடித்த எழுத்தாளர் ஜீவா- நாவுக்கரசன் கலைஞ ரின் மறைவின் பொழுது சொல்லிய கவிதை யின் ஒரு சில வரிகளைக் குறிப்பிடுவது பொருத்தமாகவிருக்கும்.

"தாளம், ராகம், கீதம்பாடுதல்
சதாசிவத்தின் உதாரபண்புகள்
விழா எடுப்பதும் வில்லிசை செய்வதும்
களம் அமைத்துக் கச்சேரி வைப்பதும்
பாரதம் சென்று வில்லிசை பயின்ற
வித்தகனின் சாதாரண நிகழ்வுகள்
இருவரும் சேர்ந்து இசைத்தகவிதைகள்
இயற்றிய வில்லிசை, நாடகம், கூத்துக்கள்
எத்தனை எத்தனை எப்படிச் சொல்வேன்.
இத்தனை செய்தவன் இப்போ இல்லையே".

கலையுலகு உள்ளவரையும் அவரின் புகழ் நின்று நிலைக்கும்!



# தொழிலதிபர்கள்

# திரு. கணபதிப்பிள்ளை அம்பலவாணர்

திரு. செ. மனோகரன்
(கணக்காளர் - நல்லூர் பிரதேசச் செயலகம்)

திரு. க. அம்பலவாணர் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கொழும்பிலும் களுத்துறையிலும் இரு பெரிய வர்த்தக நிறுவனங்களை ஸ்தாபித்துச் சிறப்புற நடத்தியவர். வேலணையிலிருந்து தென் னிலங்கைப் பகுதியில் வர்த்தக நடவடிக்கையில் ஈடுபட்ட முன்னோடிகளில் ஒருவர். திரு. அம்பலவாணர் 1865ஆம் ஆண்டு திரு. வேலாயுதர் கணபதிப்பிள்ளைக்கு மகனாகப் பிறந்தார். இவருக்கு சின்னத்தம்பி, கோபாலர், குணமாலையர் ஆகிய 3 சகோதரர்கள் இருந்தனர். இவர்கள் யாவருமிணைந்து வர்த்தகத்தில் ஈடுபட்டனர். திரு. அம்பலவாணர் இளமையிற் தனது ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்க மிஷன் பாடசாலையில் கற்ற பின்னர், இளமையிலேயே வர்த்தகத்தில் ஈடுபட்டு சமூகத்தில் முன்னிலைக்கு வரலானார். வேலணையில் விவசாயத் துறையில் முன்னிலை வகித்த (ஆறுமுகத்தார்) ஆறுமுகத்தின் மகள் பார்வதிப் பிள்ளையை மணந்து 6 ஆண் குழந்தைகளையும் ஒரு பெண் குழந்தையையும் பெற்றார். இவரது இளைய மகனே வேலணை சரஸ்வதி வித்யாசாலையில் அதிபராகக் கடமையாற்றி அண்மையிற் காலமான பெரிய வாத்தியார் செல்லையா ஆவார்.

திரு. அம்பலவாணர் வர்த்தகத்தில் தேடிய செல்வத்தை வேலணை மக்களின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தினார். வேலணை முத்துமாரியம்மன் ஆலயத் திருப்பணியில் கூடிய ஈடுபாடு காட்டி, 1936 இல் கும்பாபிஷேக நிகழ்ச்சியில் பெரும் பங்குகொண்டார். ஆலயத்திற்கு நிதியுதவி

கள் கொடுத்தும் மேலும் வேலணை, மண் கும்பான் பிள்ளையார் ஆலயம் மற்றும் கிராமத்துப் பல ஆலயங்களின் திருப்பணி வேலைகளுக்கும் செயற்பாடுகளுக்கும் காலத்திற்குக் காலம் நிதியுதவி செய்து வந்துள்ளார். இவர் யாழ்ப்பாணத்துப் பிள் ளைகளின் கல்வி வளர்ச்சியில் முக்கிய கவ னம் கொண்டவராவகத் திகழ்ந்தார். யாழ்ப் பாணம் நாவலர் வித்தியாசாலை, வேலணை சரஸ்வதி வித்தியாசாலை கட்டிட வேலை களுக்கு நிதியுதவி செய்தார்.

திரு அம்பலவாணர் கிராமத்து மக் களை நன்கு உபசரிப்பவராகத் திகழ்ந்தார். வேணையிலிருந்து யாழ்ப்பாணம், கொழும்பு போகும் உற்றார் உறவினர் இவருடன் தங்கி தங்கள் கருமங்களை ஆற்றிப் பின் கிராமந் திரும்புவர். கொழும்பிலும் யாழ்ப் பாணத்திலும் வீடுகள் மற்றும் அசையாச் சொத்துக்களை வைத்திருந்துள்ளார்.

வர்த்தக ஸ்தாபனங்களை அம்பலவா ணரும் அவரது பிள்ளைகளும், சகோதரர் களும் நடாத்தி வந்தனர். வர்த்தக நிலை யங்களுக்கு வேலணை, சரவணை புகையி லைகளையும் தாவடி இணுவில் புகையிலை களையும் கொள்வனவு செய்து மேற்படி ஸ்தாபனங்களுக்கு அனுப்பி வியாபாரம் செய்து வந்தனர்.

இவர்கள் யாழ்ப்பாணம் நாவலர் வீதி யிலுள்ள வீட்டிலும், காங்கேசன்துறை வீதி யிலுள்ள வீட்டிலும் இரண்டு சுருட்டுத் தொழிற்சாலைகளில் சுருட்டு உற்பத்தி செய்துவந்தனர். அச்சுருட்டுக்களை மேற் குறிப்பிட்ட 2 வர்த்தக ஸ்தாபனங்களுக்கு அனுப்பி அவ்வர்த்தக ஸ்தாபனங்கள் மூலம் ஏனைய நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் அனுப்பி சந்தைப்படுத்தி வியாபாரம் செய்து வந்தனர். மேற்குறிப்பிட்ட தொழிற்சாலை களில் 50 பேர்களுக்குக் குறையாத தொழி லாளர்களுக்குத் தினமும் வேலைவாய்ப் பைப் பெற்றுக்கொடுத்தனர்.

மேற்குறிப்பிட்ட வர்த்தக ஸ்தாபனங் களையும் சுருட்டுத் தொழிற்சாலைகளையும் திரு. அம்பலவாணர் அவர்களே திறம்பட மேற்பார்வை செய்து தனது சகோதரர் களையும் நன்முறையில் வழிநடத்தி வந்தார்.

அக்காலத்தில் கொழும்பு போன்ற தென்பகுதி நகரங்களில் வர்த்தகஞ் செய்யும் தமிழர்கள் மிக மிகக் குறைவாகவிருந்தனர். அவர்கள் அக்காலத்தில் வர்த்தகத் துறை யில் வர்த்தகர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தனர். இவருக்கு 6 ஆண்பிள்ளைக ளும் ஒரு பெண்பிள்ளையும் இருந்தனர். இவர் கள் சிறந்த முறையில் கல்விகற்று மேற்குறிப் பிட்ட ஸ்தாபனங்களை நடாத்தி வாழ்க்கை யிற் சிறந்து விளங்கினர்.

அக்காலத்தில் வேலணையிற் சிறந்த நிலபுலங்களையும் யாழ்நகரிற் சிறந்த நில புலங்களையும் வீடுகளையும் கொண்டவரா கத் திகழ்ந்தார். 1930 ஆம் ஆண்டு வேலணை பெருங்குளம் முத்துமாரியம்மன் ஆலய மூலஸ்தானக் கோபுரத் திருப்பணிக்கும் வீதிப் புனரமைப்பிற்கும் பெரும் பங்காற் றினார். 1936ஆம் ஆண்டு நடைபெற்ற அம்பாளின் கும்பாபிஷேகப் பணிகளையும் முன்னின்று சிறப்புற நடாத்தி வைத்தார்.

மண்கும்பான் பிள்ளையார் ஆலயம், வேலணை பெருங்குளம் முத்துமாரியம்மன்

ஆலயம் மற்றும் வேலணையிலுள்ள சிற்றா லயங்களிலும் கந்தபுராணம் படிப்பதற்கு ஊக்கமும் ஆக்கமும் கொடுத்துள்ளார். இவர்கள் வேலணையிலுள்ள மக்களில் வர்த்தகத்தில் ஈடுபட்டவர்களுக்கு முன்னோடி யாக இருந்துள்ளார்கள்.

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வேலணைக் கிராமத்தில் வாழ்ந்து பிற பகுதிகளில் பொருளீட்டி, உற்றார் உற வினர், கிராமத்தவர்களுக்கு உதவியாகவும் வழிகாட்டியாகவும் திகழ்ந்தவர். இவர் வேலணைக் கிராமத்துக்குப் பல சேவைகள் புரிந்துள்ளார். இவர் என்றும் நினைவு கூரத்தக்கவர்.





# தொழிலதிபர்கள்

## அமரர். கதிரேசு சண்முகம்பிள்ளை அவர்கள்

### திரு. ச. கதிர்காமநாதன் (அவுஸ்திரேலியா)

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்"

எனும் தெய்வப்புலவர் திருவாக்குக்கமைய வாழ்ந்தவர் பிரபல வர்த்தகர் சண்முகம் பிள்ளை அவர்கள்.

வேலணை தந்த சிறந்த வர்த்தகப் பெருமக்களுள் திரு. கதிரேசு சண்முகம் பிள்ளை ஒரு முக்கிய இடத்தை வகிக்கின்றார். தென்னிலங்கையில் இரத்தினபுரியை அண்டிய சிறு நகரங்களாகிய டால, நிவித்தி கலை ஆகிய நகரங்களில் இளமைக்காலத்திலிருந்து வர்த்தகத்தில் ஈடுபட்டு பெரும் பொருள் சம்பாதித்து நன்நிலைக்கு வந்த பெரியவர். இவரை வேலணை மக்கள் ஓட்டு வீட்டுச் சண்முகம், மெத்தைவீட்டுச் சண்முகம், நிவித்திகலை முதலாளி எனச் செல்லமாக அழைப்பர். இவர் முறையாக கல்வி கற்காது விட்டாலும் தனது முயற்சியால் நாளாந்த தேவைக்கும் தொழிற் தேவைக்கும் ஏற்ற ஆங்கிலம், கணிதம், சிங்களம் போன்றவற்றில் போதிய அறிவைப் பெற்றிருந்தார்.

திரு. கதிரேசு சண்முகம்பிள்ளை வேலணை கிழக்கில் 6.5.1891ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தையார் வீரகத்தி கதிரேசு, தாயார் பொன்னையா மகள் பொன்னு. இவர் தமது தந்தையாரை 12 வயதில் இழந்தமையால், மிக இளவயதிலேயே குடும்பப் பாரத்தை சுமக்க வேண்டிய சூழ்நிலைக்கு உட்பட்டார். 1921ஆம் ஆண்டு இவர் தனது தாய்மாமன் பொன்னையா ஆறுமுகத்தின் மகள் பொன்னம்மாவை

திருமணம் செய்தார். இவர்களுக்கு 3 பெண் பிள்ளைகளும் 6 ஆண்பிள்ளைகளும் இருக்கின்றனர். இவர்களின் பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், இலங்கையிலும் பிறநாடு களிலும் வாழ்வதுடன் கல்வித்துறையில் முன்நிலை வகிக்கின்றனர்.

திரு. சண்முகம்பிள்ளை அவர்கள் மிக இளவயதில் தொழில்முயற்சியில் ஈடுபட வேண்டிய குடும்பச் சூழ்நிலை ஏற்பட்ட போதும் அதற்கு சிறந்தமுறையில் முகம் கொடுத்துள்ளார். சிறு முயற்சியிலிருந்து படிப்படியாகப் பொருள் சேர்த்து வர்த் தகராகினார். தான் தேடிய தேட்டங்களை நல்லமுறையில் கிராமத்திலும் தனது தொழில் இடமான நிவித்திகலையிலும் முதலிட்டு தொழில்வளம் பெருக்கினார். ஊரிலும் நிவித்திகலையிலும் சமூக உறவை நன்கு வளர்த்துக்கொண்டார். தனது வரு மானத்தில் பத்து வீதத்தை இறைபணிக்கு, சமூகப்பணிக்கு செலவு செய்தார். வேலணை முத்துமாரியம்மனில் அளவற்ற பற்றுக் கொண்டவராகப் பல திருப்பணி வேலை களைச் செய்துகொடுத்தார். திருவிழாக் காலங்களில் ஊரில் நின்று அம்மன் ஆலயப்பணி செய்வது அவரது தனி விருப்பமாகும். உற்றார் உறவினர் அயல வர்களுக்கு உதவிசெய்து அவர்களை நன் நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென செயற்பட்டார். கிராம முன்னேற்றத்திலும் அதீத அக்கறை கொண்டவர். இதேபோல தான் தொழில் செய்யும் நிவித்திகலையிலும் ஒதுங்கி வாழாது பிரதான நீரோட்டத்தில் இணைந்து செயற்பட்டார்.

உயர்ந்த கட்டழகன், சிவந்தமேனி, நீறுபூத்தநெற்றி, வெள்ளை வெளேறென்ற அரைக்கைச் சட்டை, வேட்டி சால்வை, காலில் செருப்பு. இவற்றோடு தண்ணளி நிறைந்த வார்த்தை, இறை சிந்தனை நிரம்பிய உள்ளம். இவையே அமரரை எண்ணும் போது எம் கண்முன் தோன்றும் காட்சிக் கோலங்களாகும்.

எவரும் எதிர்பாராதவிதமாக பாலகன் சண்முகம்பிள்ளையின் வாழ்க்கையில் பேரிடி விழுந்தது. தந்தை கதிரேசு, நாயக னின் பூங்கமலச் சீரடியை இளவயதில் சென்றடைந்தார். விதியாலே! கிட்டத்தட்ட பன்னிரண்டு வயதுப் பாலகனை விட்டு விட்டு எப்படித்தான் செல்ல இவர் மன மும் ஒப்பியதோ? சண்முகம்பிள்ளை யின் நெஞ்சம் குமுறியது. கலங்கியது. "என் செய்ய? இறைவனே விட்ட வழி! போனா லும் வந்தாலும் புண்ணியனின் செயல் தானே!" என்று பெருந்துயரால் இடர்பட்ட மனதுக்கு ஆன்றோர் அறிவுரையை நவின்றார் தனக்குள்ளே.

தந்தையின் மரணத்தின் பின் என்ன செய்வது எனத் தவித்தார். பன்னிரண்டு வயதுப் பாலகனுக்குக் குடும்பத்தின் சுமை இவரது தோளில் சுமத்தப்பட்டது என்பதை நினைக்கும்போது நெஞ்சம் வலிக்கின்றது. தொழில் பார்ப்பதற்கு இயலாத வயதில் சிறுவன் இருந்தான். அக்காலத்தில் திண் ணைப் பள்ளிக்கூடங்களோ வேறு பாட சாலைகளோ இருந்தன என்பதற்குச் சான் றுகள் இல்லை. எனினும் காலப்போக்கில் அன்னார் சுயமுயற்சியின் மூலமே எழுத வும், வாசிக்கவும், கணக்குகளைச் செய்யவும் கற்றுக்கொண்டார். அவர் ஓர் படிக்காத மேதை. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பெயர்ப் பலகைகளை வாசிக்கவும் ஆங்கிலத்தில் "என்வலோப்" இல் எழுதப்பட்டிருக்கும் விலாசதாரரின் பெயரையும் முகவரியையும் வாசிக்கவும் மேல் விலாசத்தை ஆங்கிலத் தில் எழுதவும் கற்றுக்கொண்டார். சுருங்கக்

கூறின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான ஆங்கில அறிவையும் கணிசமான அளவிற்குப் பெற்றுக்கொண்டார். சிங்கள நாட்டில் தொழில்புரிந்த காரணமாக சிங்கள மொழியில் தாராளமாகச் சம்பாஷிக்கத் தெரிந்துகொண்டார்.

அக்காலத்துத் தனது குடும்ப சூழ்நிலைக்கேற்ப இளம் வயதிலேயே வர்த்தகத் துறையில் ஈடுபடவேண்டியவரானார். 1910ஆம் ஆண்டு கொழும்பு காங்கேசன்துறை புகையிரதப் பாதை பூர்த்தியடைந்தது. ஆங்கிலத்தில் கணிசமான அளவிற்கு எழுத வாசிக்கத் தெரிந்த யாழ்ப்பாணத்தாருக்கு கொழும்பில் அரசாங்க இலாகாக்களிலும் தனியார் ஸ்தாபனங்களிலும் வேலை வாய்ப்புக் கிடைத்தது. அக்காலத்திலேயே வெளிநாட்டு மோகம் ஆரம்பித்துவிட்டது என்று கூறலாம். ஏனெனில் ஆங்கிலம் தெரிந்த யாழ்ப்பாணத்தவர் பலர் மலேசியாவிற்குச் சென்று அங்குள்ள இரப்பர் தோட்டங்களிலும் புகையிரத இலாகாக்களிலும் எழுத்தர், மேற்பார்வையாளர், புகையிரத நிலைய அதிகாரிகள் போன்ற துறையில் அழுக்குப்படாத தொழில்களில் ஈடுபட்டனர். அதே சமயத்தில் இன்னொரு சாரார் தென்னிலங்கைக்குச் சென்றால் பிழைத்து விடலாம் என எண்ணி அங்கு சென்று வர்த்தகத் தொழிலில் ஈடுபட்டனர். இவர்களுள் ஒருவர்தான் சண்முகம்பிள்ளை.

அன்னார் 1914ஆம் ஆண்டு டாலையில் ஒரு கடையில் விற்பனையாளராகச் சேர்ந்து கொண்டார். அக்காலத்தில் பல நிகழ்ச்சிகள் அன்னாருக்குச் சாதகமாக நடைபெற ஆரம்பித்தன. 1914ஆம் ஆண்டு முதலாவது உலக மகாயுத்தம் ஆரம்பமாயிற்று. போரில் பயன்படுத்துவதற்கு இரப்பர் தேவைப்பட்டது. இத்தேவையைப் பூர்த்தி செய்வதற்காக பிரிட்டிஸ் கம்பனிகள் பல, டாலை, நிவித்திகலை சுற்றுவட்டாரங்கள் அனைத்திலும் இரப்பர் தோட்டங்களை திறந்தனர். அங்கு வேலை செய்வதற்கு கூலியாட்கள் பலர் இந்தியாவிலிருந்து வருவிக்கப்பட்டனர். இரப்பர் தோட்டங்களின் எண்ணிக்கை அதிகரித்தது. சிறு கிராமங்கள் பட்டணங்களாக உருப்பெற்றன. வேலை வாய்ப்பு அதிகரித்தது. தென்னிலங்கையின் பல பகுதிகளிலிருந்து தொழிலாளிகள் பலர் தச்சராகவும் கொல்லராகவும் கட்டிட ஒப்பந்தக்காரராகவும் இன்னும் சிலர் கூலிகளாகவும் வந்து குவிந்து கொண்டிருந்தனர். சனத்தொகை பெருகப் பெருக அவர்களுடைய தேவைகளும் பெருகின. இதன் பலனாக கடைகளும் விற்பனையாளர்களும் அதிகரித்தன. யாழ்ப்பாணக் குடாநாட்டில் புகையிலையை காசுப்பயிராகப் பயிரிடத் தொடங்கினர். குறிப்பாகப் புகையிட்ட புகையிலைக்கு சப்பிரகமுவ மாகாணத்தில் கிராக்கி ஏற்பட்டது. இத்தருணத்தில் டாலையில் 1916ஆம் ஆண்டு அமரர் ஒரு புகையிலைக் கடையையும் புடைவைக் கடையையும் ஆரம்பித்தார். வியாபாரம் அமோகமாக நடை பெற்றது. அதிக லாபம் கிடைத்தது. குட்டி முதலாளி அகமகிழ்வடைந்தார்.

1918ஆம் ஆண்டளவில் நிவித்திகலைச் சுற்றாடலில் மாணிக்கக்கல் வியாபாரமும் அமோகமாக நடைபெற்றது. நிவித்திகலை இவரைக் கவர்ந்தது. எனவே எந்நலமும் ஓங்கியிருந்த நிவித்திகலை நகரதனில் கடையொன்று நிறுவினால் வளமோங்கும் என்று எண்ணி டாலையிலிருந்த கடையிரண்டையும் மூடிவிட்டு நிவித்திகலையில் புகையிலைக் கடையொன்றினையும் புடைவைக்

கடையொன்றினையும் திறந்தார். தீவகத்தில் தான் கொள்வனவு செய்த புகையிலையை நிவித்திகலையிலும் களுத்துறையிலும் காலி யிலும் கொழும்பிலும் விற்றுப் பெரும்பொரு ளைத் தேடிக் கொண்டார்.

ஆரம்பத்தில் சாதாரண புடைவைக் கடையாக இருந்த கடையை மாற்றி அமைத்தார். காலத்திற்கேற்பப் புடைவை களைக் கொள்வனவு செய்தார். "ஃபேசன்" நாளை பழசாகி விடுகின்ற இன்றைய உல கில் அதற்கேற்றவாறு புடைவைகளை வாங்கி விற்றார். காலகதியில் "பளயகாட்", "மௌலானா", சாரங்கள் "அரோ" ஷர்ட்டு கள், விலையுயர்ந்த சேலைகள், வானொலிப் பெட்டிகள் போன்ற நவீன சுகபோகங்க ளோடு கூடிய பொருட்களை விற்கும் ஒரு பெரிய ஸ்தாபனமாக மாற்றி அமைத்தார். இதைவிட இரண்டாம் மகாயுத்த காலத்தில் புடைவைகளை இந்தியாவிலிருந்து வரு வித்து இலங்கையில் விற்பனை செய்து பெரும் பொருளை ஈட்டிக்கொண்டார்.

1921ஆம் ஆண்டளவில் தனது தாய் மாமன் பொன்னையா ஆறுமுகம் என்ப வரின் மகளும் கந்தவனத்தின் பேத்தியு மாகிய பொன்னம்மா அம்மையாரைத் தமது வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று இல்லறம் நல்லறமாக வாழ்ந்து மக்கட் பேறு பெற்று உயர்மனச் செம்மலானார். சண்முகம்பிள்ளை 10. 04. 1970 அன்று சிவபதமடைந்தார்.

வருமானத்தில் பத்து வீதத்தைத் தெய் வத் திருப்பணிக்கு ஒதுக்கி வைக்க வேண்டு மென்பது அன்னாரின் கொள்கை. கோயில் பூஜைகள் முட்டின்றி நடக்கச் செய்தல் தெய்வத்திற்கு மனிதர் செய்யவேண்டிய கடமையாகும் என்று எண்ணிய பெருந் தகை. வேலணை பெருங்குளம் விளங்குறு அம்மன் முத்துமாரியின் பக்தி நனிகொண் டோன். அக்கோயில் திருப்பணிகள் பல வற்றை மேற்கொண்டிருக்கின்றார். அக் கோயில் தெய்வத்தில் கொண்ட அன்பால் அர்ச்சனைப் பூசைக்காகிய புஷ்பம் பஞ்ச மின்றி எஞ்சாது வேண்டுமென்றுள்ளங் கொண்டு ஒரு பூந்தோட்டம் அமைத்துக் கொடுத்த அருஞ்சமய பக்தன். பலிபீடம் மணியும் பாங்குறச் செய்து கோயிலுக்கிட்ட கோமானாவான். நடராசர் விக்கிரகம் நனி பொருட்செலவில் செய்து கோயிற்கிடச் சித்தமாயிருந்தோன். அவர் தனது ஆசையை நிறைவேற்ற முன்னர் தேகவியோகம் அடைந்தார். எனினும் அவரது மனைவி அவரது ஆசையை நிறைவேற்றி வைத்தார். ஆலய பரிபாலன சபையில் மதிப்பிற்குரிய உரிமையாளராகக் கடமையாற்றிப் பல பூசைகள், விழாக்கள், நித்திய நைமித்திய நிகழ்ச்சிகள் குறைவின்றி நிகழ்வதைக் கண் காணித்து வந்தார். விழாக்கள் நிகழும் காலத்தில் திருத்தொண்டு செய்ய, செய் விக்க கோயில் மண்டபத்தில் உலவி வரும் காட்சியை இனிக் காணமுடியுமா?

வேலணை மத்திய மகா வித்தியாலயம் முளைகொள்ளுவதற்குச் சிறிது முன்னரே வேலணையில், உயர்தரக் கலாசாலை ஒன்றில்லா வறுமையை உணர்ந்திரங்கி, இவ்வில்லாமையை இல்லாமையாக்க அன் னார் சிலர்க்குத் தன் சிந்தனையை உணர்த் திப், புதிதாக ஒரு கலாசாலை உருப்பெறு வதற்கு உவந்து உதவ தாமாகவே முன் னின்றவர் சண்முகம்பிள்ளை. மத்திய மகா வித்தியாலயத்தின் தோற்றத்திற்குக் காரண மாயிருந்தவர்களுள் ஒருவர் இவராவார். இன்னொன்று, முத்துமாரியம்மை தெற்கு வீதியில் முளைத்துத் தழைத்துப் பயன்

விளைந்தோங்கும் மகாவித்தியாலயமும் இடங்கொண்டிருப்பது சண்முகம்பிள்ளை அவர்கள் தம் முதல் மகளார் கணவனார் முகமாக உவந்துதவிய நன் கொடை நிலமே.

அன்னாரின் வாழ்வும் அவர் ஆற்றிய தெய்வத் திருப்பணிகளும் எமக்கு ஆதர்ச மாக, வழிகாட்டியாக விளங்குகின்றன. முயற்சி திருவினையாக்கும் என்ற குறளின் வடிவமாக அவர் வாழ்வு அமைந்துள்ளது. அன்னாரின் வாழ்வால் பயன்பெற்ற நாம் தன்னலமற்ற சேவைகளை செய்வதன் மூலமே அவர் நினைவைத் தக்கவைத்துக் கொள்ள முடியும்.

இவரது முயற்சி, தன்னம்பிக்கை, தொழில் வாண்மை, இறைபணி, சமூகப்பணி என்பன எங்கள் கிராமத்துக்கு புகழ் சேர்ப்பதாகவும் பின்பற்றக் கூடியதாகவும் இருக்கின்றது.



# தொழிலதிபர்கள் திருத்தொண்டர் சேதுபதி பொன்னையா (சே. பொ)

திரு. வைத்திலிங்கம் சிவநாதன்

ஈழநாட்டின் வடபால் அமைந்த நிலக் கடல் உடுத்த நிலமங்கையர் எழுவருள் எழில் பல நிறைந்தவள் அன்னை வேலணை ஆவாள். இவளின் அரவணைப்பில் வாழ்ந்து வளம் பெற்றவர் வரலாறு இளம் சமுதாயத் துக்கு உந்துசக்தியாக அமையும்.

வேலணையின் மேற்குப் பகுதியில் இராஜகோபுரம், மணிமண்டபம், தீர்த்தக் குளம் ஆகியவற்றுடன் யாழ் குடாநாட்டி லேயே கருங்கற்களால் அமைக்கப்பட்ட முதன்மையான ஆலயத்துள் வேண்டு வார்க்கு வேண்டுவன ஈயும் பெரியபுலம் மகாகணபதிப் பிள்ளையார் ஏறக்குறைய நூற்று ஐம்பது வருடங்களாக பேரருள் பாலித்துக் கொண்டிருக்கிறார்.

இங்கு வாழ்ந்து வருபவர்கள் தென்னிந் தியாவிலுள்ள வேதாரணியம், இராமநாத புரம் போன்ற இடங்களிலிருந்து புலம் பெயர்ந்தவர்கள் என்பதற்கு ஆதாரம் உண்டு. இப் பூர்வீகத்தைக் கொண்ட இராமநாதர் சின்னத்தங்கம் தம்பதிகளின் பெண்கள் எழுவரில் முன்னையவளான வள்ளியம்மை, சேதுபதி என்பவரை மணந்து வேலணை மேற்கில் வெல்லப்பிட்டி என்ற வளவில் வசித்து வந்தனர்.

இவர்கள் விநாயகரைத் தம் குல தெய்வ மாக ஏற்று நாளும் பொழுதும் அவரடி வணங்கி வருங்கால் நாகலிங்கம் (சே. நா.) கந்தையா (சே. க) பொன்னையா (சே. பொ), செல்லத்துரை, (சே. செ.) என்ற நான்கு ஆண் குழந்தைகளையும் முத்துப் பிள்ளை, நாகப்பிள்ளை என்ற இரு பெண் குழந்தைகளையும் விநாயகர் அருளால் பெற்றனர்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஏற்பட்ட நவீன வசதிகளுள் ஒன்றான யாழ் - கொழும்பு புகையிரதச் சேவை இவர்கள் காலத்தில் ஆரம்பித்தது. இது தமிழ் மக்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதமாகும். அறிவும் ஆற்றலும் நிறைந்த இக்கால கிராம இளைஞர்கள் சிலர் ஈழத்தின் மேற்கு, தெற்கு, மத்திய பகுதிகளுக்குச் சென்று அவற்றை அறியவும், அவற்றை பலனுடையதாக்கவும் முயற்சிக்க ஆரம்பித்தனர். "திரை கடலோடியும் திரவியம் தேடு" என்பது தமிழரது முதுமொழி. இதற்கிணங்க சேதுபதியின் பிள்ளைகளுள் ஒருவரான பொன்னையா காலி மாநகருக்குச் சென்றார்.

பொன்னையா அவர்கள் சிவந்த, சிறிய தோற்றமுடையவர். சைவ நெறியினின்றும் வழுவாதவர். திறமைசாலி எனப் பலராலும் போற்றப்பட்டவர். இவர், வேலணை விவசாயிகள் பயிரிடும் புகையிலையை காலி மாநகருக்குக் கொண்டு சென்று பெருஞ் செல்வம் ஈட்டினார். அக்காலத்தில் புகையிலை விவசாயிகளின் பணப்பயிராக இருந்தது. இவரின் முயற்சியால் விவசாயிகளிடம் பணப்புழக்கம் ஏற்பட்டது. இவரது வியாபாரத்திற்கு புகையிலையைக் கொள்வனவு செய்பவர் அவரது அண்ணர் கந்தையா (சே.க.) அவர்கள் ஆகும்.

கந்தையா, பொன்னையா அவர்கள் செல்வம் ஈட்டியபோதும் அதைத் தமதாக்கி வாழவில்லை. கிராம மக்கள் தமக்கு ஏற்பட்ட கஸ்டங்களை நீக்க பண உதவி கோரி பொன்னையாவிடமே செல்வார்கள். கேட்பவர்க்கு இல்லையென மறுக்காத இயல்புடையவர். எவரிடம் இல்லையென்றாலும் பொன்னையாவிடம் எப்படியும் பெறலாமென்ற நம்பிக்கையுடன் செல்வார்கள். அவ்வாறான செல்வப்பெருக்குடையவராக இருந்தார் என்பதை கிராம மக்கள் ஊடாக நாமறிந்தோம்.

பலர் இவரிடம் தம் பிள்ளைகளின் திருமணங்களுக்கும், வேறு பலர் மரணச் சடங்கு, மற்றும் அவசர தேவைகளுக்கும் தமது நிலங்களைப் பொறுப்பாகக் கொடுத்தும் பணம் பெறுவர். ஒருவரின் மேன்மைக்கும் இழிவுக்கும் உரைகல்லாக இருப்பது அவரவர் செயல்கள் தான். பொன்னையா தமது சேவையினால் மக்களிடம் நன்மதிப்பும் பெற்றார். இதனையே வள்ளுவர் பெருமான்,

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக்கல்"

என்கிறார்.

ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன் தனது குலதெய்வமான பெரியபுலம் மகா கணபதிப் பிள்ளையார் ஆலயத் திருப்பணிச் சபையில் நாகலிங்கம், கந்தையா என்ற சகோதரர்களோடு இவரும் அங்கம் வகிக்கும் காலத்தில் விநாயகப் பெருமான் ஒருமுறை கனவில் தோன்றி "நான் மகாபலிபுரம் பார்க்கவேண்டும்" எனக் கூறினார்.

மகாபலிபுரம் கடற்கரையில் பல்லவ மன்னன் கருங்கற் திருப்பணி செய்து ஆலயங்கள் கட்டியமையை நினைவு கூர்ந்தார். விநாயகரின் விருப்பத்தை நிறைவேற்றுவதுதான் பிறவியெடுத்த பெரும் பேறு என புளங்காங்கிதமடைந்தார். வளமிருந்தாலும் பலருக்கு மனமிருக்காது. ஆனால் பொன்னையாவிடம் இரண்டும் இருந்தன. பல்லவ மன்னன் கருங்கற் பாறைகள் இருந்த இடத்தில் கோவில்களை அமைத்

தான். ஆனால் வேலணை மேற்கு அத்த கைய பூமியல்ல. பொன்னையா வர்த்தகம் செய்யுமிடமே கருங்கல் நிறைந்த பூமி.

"இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து"

அவனிடமே தன் திருக்குறிப்பை விநா யகப் பெருமான் அருளினார். அதாவது "இச்செயலை இத்தகைய ஆற்றல் உள்ள இவன் செய்து முடிப்பான்" என்பதே பொருள்.

பொன்னையரும் தெய்வக் குறிப்பை சிந்தையிலிருத்தி சகோதரர் கந்தையாவு டன் கலந்துரையாடிய பின் உற்றார் உறவி னருடன் ஆலோசித்து செயற்படத் தொடங் கினார். ஆலயத்திருப்பணிக்கு ஏற்ற கருங் கற்கள் பாய்க்கப்பல் மூலமாக தீவகத்தின் தென் பகுதியிலுள்ள சுருவிற் துறையில் வந்திறங்கி மாட்டு வண்டி, மர உருளை கள், கப்பி, கயிறு, மரத்தூண்கள் என்பவற் றோடு அடியார்களின் அயரா முயற்சியால் ஆலய வளவிற்குக் கொண்டு வரப்பட்டன.

திறமை வாய்ந்த சிற்பிகளின் கைவண்ணத் தால் வேலைகள் பூர்த்தியடையும் நேரத்தில் பொன்னையா அவர்கள் நோயுற்று இறை வனடி சேர்ந்தார்.

இவரது திருப்பணியை அவ்வூர் மக்கள் நினைவுகூர்ந்து இவரின் சகோதரரான கந்தையாவை ஆலயத்திருப்பணிச் சபை யின் தலைவராக நியமித்தனர். 1948ஆம் ஆண்டு திருப்பணி நிறைவேறி குடமுழுக் கும் செய்யப்பட்டது. கந்தையாவும் தனது இறுதிக்காலம் வரையும் திருப்பணிச் சபைத் தலைவராகப் பணிபுரிந்து இறை வனடி சேர்ந்தார். இவர்களின் வழித்தோன் றல்கள் பலர் புலம்பெயர்ந்து அவுஸ்திரே லியா, பிரித்தானியா, பிரான்ஸ், கனடா, அமெரிக்கா போன்ற இடங்களில் வாழ்ந் தாலும் தமது முன்னோரின் குல தெய்வத் திற்கு திருப்பணி செய்வதில் எப்போதும் முன்வருகிறார்கள். அவ்வாறே அவர்கள் தம் இளம் சந்ததியினருக்கும் அறியத்தரு கிறார்கள்.





# தொழிலதிபர்கள்

## திரு முருகேசு குமாரசாமிப்பிள்ளை

திரு. கு. சுந்தரலிங்கம் (பொறியியலாளர்)

திருவாளர் முருகேசு குமாரசாமிப்பிள்ளை யாழ்ப்பாண நகரில் பிரபல வர்த்தகரா கத் திகழ்ந்தவர். வேலணையில் பிறந்து, யாழ்ப்பாண நகரில் வர்த்தகத்தில் ஈடுபட்டு கொட்டடியில் மிகவும் பிரபல்யமாக திகழ்ந்தார். இவர் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த பொழுது யாழ்ப்பாண நகரில் தீவுப் பகுதி மக்களின் நலன்களை பல தசாப்தங்களா கக் கவனித்து வந்தவர். தீவுப் பகுதி மக் களின் போக்குவரத்து மற்றும் நகரில் கிடைக்கும் சேவைகள் அவர்களுக்கு உரிய முறையில் கிடைக்க வேண்டுமென்ற கொள் கையுடன் சிறப்பாகச் செயற்பட்டவர். யாழ்ப் பாணம் பண்ணை தாம்போதி வேலை பலர் முயற்சியால் கைகூடின போதும் இவ் வேலையில் முருகேசு குமாரசாமிப் பிள்ளை யின் பங்கு மிகப் பெரியது. அவர் தனது பணத்தை, நேரத்தைச் செலவு செய்து இவ்வேலை வெற்றி பெற உழைத்த செம்மல்.

திரு முருகேசு குமாரசாமிப்பிள்ளை வேலணை மேற்கில் 1906ஆம் ஆண்டு பிறந் தார். தனது இளமைக் காலக் கல்வியை வேலணையில் முடித்துக்கொண்டு யாழ்ப் பாணம் சென்று வியாபாரத் துறையில் ஈடுபடலானார். 1935 இல் திருவாளர் செல்லத்துரை தம்பதிகளின் மகளைத் திரு மணம் செய்து நன்மக்கள் பேறுகளைப் பெற்றார். இவரது பிள்ளைகள் இன்று உள் நாட்டிலும் பிறநாடுகளிலும் வாழ்வதுடன் கல்வியிலும் முன்னணி வகிக்கின்றனர்.

இவர் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த பொழுது சமூக சேவை, இறைபணியில் பெரும் சேவை செய்துள்ளார். வேலணை கிராமச் சபை உப தலைவராக இருந்து

வேலணைக் கிராமத்தின் முன்னேற்றத் துக்கும் குறிப்பாக அவர் பிரதிநிதித்துவம் செய்த 8ஆம் வட்டாரத்தின் வளர்ச்சிக்கும் ஆற்றிய பணிகள் இன்று கிராமத்து மக்க ளால் நினைவு கூரப்படுகின்றன. வேலணை மேற்கு பெரியபுலம் மகாகணபதிப் பிள்ளை யார் ஆலயத்தின் கட்டுமானப் பணிகள், தேர் அமைத்தது போன்ற பணிகளைச் செய்தார். மேலும் கோயிலுக்கு நிரந்தர வருமானம் கிடைக்க வழிசெய்வதற்கு தனது காணியில் கிடைக்கும் வருமானம் கோயிலுக்குச் சேரவேண்டுமென எழுதி வைத்திருக்கின்றார். கோயிலுக்கு திருப்பணி வேலைகள் செய்ததுடன் நிற்காமல் பெரிய புலம் மகாகணபதி பிள்ளையார் ஆலயம் தொடர்ந்து சிறப்புற இயங்குவதற்கேற்ப மக்களை அணிதிரட்டி, சபைகள் அமைத்து பணிகளை தடைப்படாது இடம்பெற வழி வகுத்துள்ளார். புளியங்கூடல் மாரியம்மன் கோயில் திருவிழாக் காலங்களில் அன்ன தானம் கொடுத்து அடியார்களின் பசிப் பிணி தீர்ப்பவர்.

திரு. குமாரசாமிப்பிள்ளை அவர்கள் உற்றார், உறவினர், நண்பர்கள் மேல் மிகுந்த அன்பு கொண்டவராகவும் உதவி செய்பவராகவும் திகழ்ந்தார். எடுத்த கருமத்தை முடிப்பதில் கடும் முயற்சி யாளர். சில சமயங்களில் முற்கோபம் கொண்டவராக இருப்பினும் உதவி செய்வ தில் முன்னிற்பவர். இதுபோல் பல்வேறு நற்பண்புகளையும் கொண்டு பொதுநல சேவையில் தன்னலமற்ற ஈடுபாடு கொண் டவர். துணிந்து யார் முன்னிலையிலும் நீதி கேட்கக் கூடியவர்.

யாழ்ப்பாணத் தீபகற்பத்தின் முதற் பட்டினமான யாழ்நகரையும் தீபகற்பத் தினால் அரவணைத்தாற்போல் ஆங் காங்கே பரந்துகிடக்கும் பற்பல தீவுகளில் பரந்த மணற்பரப்பைக் கொண்டதும் மண் கும்பான், வேலணை, ஊர்காவற்துறை போன்ற பொருள் செறிந்த பெயர்களைக் கொண்ட கிராமங்களைக் கொண்டதுதான் "லேடன் தீவு". இத்தீவு சமூக பொருளா தாரப் பிணைப்புகளால் தீபகற்பத்துடன் சிறிதளவு பின்னப்பட்டிருந்தாலும் கடலி னால் பிரிந்திருந்த காலம் அன்று. பல பேரை தோணிப் பிரயாணத்தின்போது பலி கொண்ட வரலாறும் இக்கடலில் பொதிந் திருப்பது அன்று வாழ்ந்து இன்று இருப் பவர்களுக்கு நினைவிருக்கும்.

பிரிந்து நின்ற தீவையும் தனித்து நின்ற தீவின் சமூகப்பொருளாதாரத்தை தீபகற் பத்திற்கு முற்றுமுழுதாக இணைத்த பெருமை "மு.கு" என்று பலராலும் பாசத்துடனும் மதிப்புடனும் அழைக்கப்பட்ட திரு முரு கேசு குமாரசாமிப்பிள்ளைக்கே சாரும். கடலை ஆக்கிரமிக்கும் இவ்வீதி அன்றும் இன்றும், ஏன், என்றுமே பிள்ளையவர் களின் ஆற்றலுக்கும் ஆக்கத்துக்கும் ஓர் உதாரணமாக அமையும். மோதும் அலை களுக்கு ஈடுகொடுத்து இன்றும் உருக்குலை யாமல் இருப்பது பிள்ளையவர்கள் வீதி நிர்மாண நேரங்களில் காட்டிய அயராத அக்கறையும் தலையீடும் என்றே சொல்ல வேண்டும்.

பிள்ளையவர்கள் வேலணைத் தீவிற் குப் பாலமமைத்ததை விட பல்வேறு சமூகப் பணிகளிலும் ஈடுபட்டு மகத்தான சேவை கள் செய்துள்ளார். வேலணைக் கிராமச் சபையிலே அங்கத்தவராகவும் உபதலை வராகவும் இருந்தவேளை பல்வேறு அபி விருத்தித் திட்டங்களையும் நிறைவேற்றி

னார். அரசினரிடமிருந்து பன்னீராயிரம் ரூபாய் அளவில் நன்கொடை பெற்று அளப்பரிய சேவை ஆற்றினார்.

திரு. குமாரசாமிப்பிள்ளையின் வாழ்க்கையும் வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயத்தின் முன்னேற்றமும் இரண்டறக் கலந்து அன்றும் இன்றும் என்றும் பிரிக்க முடியாத பிணைப்பு எனலாம். 1948ஆம் ஆண்டில் அன்னார் எழுதிய உயிலில் தன் கடைசிப் பிள்ளையை "பச்சத்தை" என்ற காணியில் இருந்து வரும் பயன்களை இக்கோவிலின் உபயோகத்திற்கு பணித்திருந்தது இதற்கு ஓர் உதாரணம்.

அக்காலை அந்த நகரிலுள்ள பிரபல பெரியார்கள் அடங்க நூற்று நாற்பத்தைந்து பேருடைய கையொப்பத்தோடு ஒரு விளம்பரம் வெளியிட்டு 16. 06. 1938 இல் அன்று கோவில் சந்நிதானத்தில் விளம்பர அழைப்பின்படி ஒரு கூட்டம் நடைபெறச் செய்து ஒரு தத்துவ சாதனத்தை நிறைவேற்றினார்.

இத்திருப்பணி வேலைகளை ஆரம்பிக்க பலரிடம் பொருள் சேகரிக்க வேண்டுமென எண்ணி, தமது சொந்தப் பணத்தில் ஒரு வாகனமும் வாங்கி, பல்வேறு இடங்களுக்குத் தனது நண்பர்களுடன் சென்று பல புண்ணிய சீலர்களிடமிருந்து பணம் வசூலித்து வந்து வேலணை மேற்கு பெரியபுலம் மகாகணபதிப் பிள்ளையார் கோவிலில் கண்ணும் கருத்துமுள்ள பலரையும் துணையாய்க் கொண்டு இத்திருப்பணி வேலையை மீண்டும் ஆரம்பிக்கச் செய்தார்.

இத்திருப்பணிகளுடன் திருவிழாக்கள் கோவில் முன்னேற்றம் ஆகியவற்றோடு பொதுப்பணிகளுக்கும் தேர் செய்வதற்கும் வாகை மாலை வாங்குவதற்கும் இன்னோரன்ன சேவை சம்பந்தமான தந்திகள், கடிதங்களுக்கும், தனது பணத்தை பெருந்தொகையாகச் செலவு செய்திருக்கின்றார். இவர், தனது மூத்த சகோதரரான சிவபதமடைந்த நாகநாதபிள்ளைக்குப் பெருமதிப்புக் கொடுப்பவர். அவருக்குப் பின் இவரே தேர்த் திருவிழாவிற்குப் பொறுப்பாளியாகித் தலைமை தாங்கித் தங்கள் குடும்பத்தாரின் ஒத்துழைப்போடு ஒரு தேரும் செய்வித்தார்.

திரு. குமாரசாமிப்பிள்ளைக்கு, இக் கோவிலைப் பற்றி இன்னுமோரெண்ணம் பலகாலமாக அவரது மனத்தில் குடிகொண்டது. அது அவ்வாலயத்திற்கு தூலலிங்கமாகிய கோபுரம் வேண்டும் என்னும் ஆசை: அதற்குப் பலபல வருஷமாக முயற்சி செய்து, ஒரு சில தருமசீலரிடம் அப் பணியை ஒப்படைத்து சில ஆண்டுகளின் பின் கோபுர அத்திபாரம் இடப்பட்டதையும் கண்டு மனம் பூரிப்படைந்தார். இக் கோவிலிலே ஸ்நபனாபிஷேகம், திருவிழா முதலியவற்றை நிறைந்த மங்கள வாத்திய சகிதம் செய்விக்கும் ஒவ்வொரு அம்சமும் அதியுன்னத சிறப்பும் பக்திப் பெருக்கும் தனிப்பெருமையும் கொண்டிருந்தது.

குமாரசாமிப்பிள்ளை தம்பதிகளின் தாம்பத்திய வாழ்க்கையில் தலைசிறந்த ஓர் அம்சம் அவர்கள் ஆற்றிய தர்மம் என்பது பலரறிந்த உண்மை. வேலணைப் புளியங்கூடல் அம்மன் ஆலயத்தின் தேர்த்திருத்தோற்சவத்தில் பலநூறு மக்களுக்கு பல வருடங்களாக அன்னதானம் வழங்கினார்கள். அவரின் பாரியார் பாக்கியலட்சுமி பசிக்குதென்று வீடுதேடி வந்தவர்க்கு வயிராற உண்பதற்கு உணவளித்

தார். அன்றைய அயலவர்களாக இருந்த அயலவர்கள் இன்றும் அதை நன்றியோடு நினைவுகூர்ந்து நெஞ்சைத் திறந்து பலரிடம் கூறுவதைக் காணலாம்.

"தோன்றில் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

(வள்ளுவர்)

என்னும் குறளுக்கமைவாக புகழுடன் வாழ்ந்தஇப்பெரியார் பெரியபுலம் மகா கணபதிப் பிள்ளையார் கோவிலுக்கு ஆக்கிக்கொடுத்த கட்டுத்தேர் இன்றுவரை தேர்த் திருவிழாவன்று கோவில் வீதியில் பவனி வருவது என்றும் நினைவை விட்டகலாத கண்கொள்ளாக் காட்சியாக பக்தர்களின் மனதில் நிலைத்து நிற்கின்றது. மேலும் இப்பெரியார் இக்கோவிலுக்கு ஒரு தீர்த்தத் தடாகமும் புதிதாக ஓர் அச்சுத்தேர் அமைப்பதற்கு தேர்த்திருப்பணிச் சபையும் அமைக்கப்படவேண்டுமென பெரிதும் ஆசை பூண்டிருந்தார். அவரின் கனவுகள் நனவாக வேண்டும். இவைமட்டுமன்றி வேலணை மேற்கு எட்டாம் வட்டாரத்துக்கு அரசினால் கிடைக்கப்பெற்ற நெசவு நிலையம் அமைப்பதற்கு தனது காணியில் மூன்று பரப்பு காணியை இலவசமாகவும் வழங்கியுள்ளார். அவர் எங்களை விட்டுப் பிரிந்தாலும் அவரின் சேவைகள் என்றென்றும் நினைவு கூரும்.





# தொழிலதிபர்கள்

# திரு. இளையதம்பி கைலாசபிள்ளை

## திரு. பொ. மகாலிங்கம் - அதிபர்

சைவமும் தமிழும் தழைத்து இனிதோங்கும் வேலணைப்பதியில் செந்நெற்கள் செழித்து வளரும் பள்ளம்புலம் என்னும் பண்பார் குறிச்சியில் காசிநாதமுதலி வழிவந்த இளையதம்பி அவர்களுக்கும் அவருடைய மனைவி தையல்முத்து அவர்களுக்கும் மூன்றாவது பிள்ளையாக திரு. இ. கைலாசபிள்ளை அவர்கள் 1907ஆம் ஆண்டு தைமாதம் 21ஆம் நாள் பிறந்தார்.

மனைவி, மக்கள், மருமக்கள், சகோதரர், பேரர் பேத்தியராம் எனும் சுற்றம் சூழ இனிய பண்புடன் இன்முகம் காட்டி எழிலுடன் வாழ்ந்தவர். யாருடனும் அன்பாகப் பழகுவார். இனிமையுறப் பண்பாகப் பேசுவார். உலகியலறிவும் எவ்வகை விஷயங்களிலும் சீர் தூக்கிப் பார்த்து நடுநின்று, ஆலோசனை கூறி வழிநடத்தும் திறமை கொண்டவர். கிராமத்துக் குழந்தைகளுக்குக் கல்விச் செல்வம் நிரம்ப வழங்க வேண்டும் எனப் பேரவா கொண்டிருந்தவர். தனக்கென ஒன்றும் கேட்கமாட்டார். ஊர்ப்பற்று இனப்பற்று மிகுந்தவர்.

தூய வெள்ளை வேட்டி, சால்வை, வெள்ளை நஷனல், செம்மேனி, சிரித்தமுகம், நீறணிந்த நெற்றி, அன்பு ததும்பும் கண்கள், பண்பான சிரித்துப் பேசும் அழகான பேச்சு. இவைதான் எல்லோராலும் E.K. என அழைக்கப்படும் திரு. கைலாசபிள்ளை அவர்களின் அடையாளங்கள்.

திரு. கைலாசபிள்ளை அவர்கள் தனது ஆரம்பக் கல்வியை வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் பெற்ற பின் தொடர்ந்து கொக்குவில் இந்துக்கல்லூரியில் கல்வி பயின்றார்.

## தொழில் அதிபர்.

அவ்வாறு கற்குங்கால் தனது குடும்பப் பொறுப்பை இளவயதிலேயே தீர உணர்ந்து பிறவூர் சென்று தொழில்புரிய உறுதி கொண்டு முதலில் பலாங்கொடவிலும், தொடர்ந்து காலி மாநகரிலும் தனது வர்த்தகத் தொழிலை இ. கைலாசபிள்ளை அன் கொம்பனி என்ற பெயரில் ஆரம்பித்துத் திறம்பட நடத்தினார்.

இவரது கண்ணியமும் நாணயமும் வியாபாரத்தில் இவருக்கு நல்ல பெயரையும், பெரும் புகழையும் நிலை நாட்டித் தந்தது. காலி மாநகரில் யாழ்ப்பாணப் புகையிலை வர்த்தகத்தைத் தனது வாழ்நாள் முழுவதும் மதிப்புடன் செய்து வந்தார். பொருளாதாரத்தில் விற்பவரும் வாங்குபவரும் நன்மையடைத்தக்கதாகத் தீவுப் பகுதியின் பொன்னாம்-மாணிக்கக் கல்லாம் புகையிலையைத் தீவுப் பகுதி உற்பத்தியாளரும் தென்னிலங்கைப் பாவனையாளரும் நியாயமான விலை என்று மனதார ஏற்றுக்கொள்ளும்படி நிதான விலைக்கு வாங்கியும் விற்றும் வந்தார். இதன் மூலம் பிறந்த நாட்டு உற்பத்தியாளர்களின் பொருளாதார வளர்ச்சிக்கும் தொழில் மேம்பாட்டுக்கும் உதவி புரிந்தார்.

இவர் தனது தம்பியார் அமரர் இ. தம்பையா, மருகர் அமரர் க.கனகலிங்கம் ஆகியோரை இள வயதிலேயே தென்னகம் கொண்டு சென்று தனது வர்த்தகத்தில் ஈடுபடுத்தினார். பின்னர் திரு. க. கனகலிங்கம் அவர்களைத் தன் பங்காளியாக்கிக் காலகதியில் எவ்வித கைமாறும் எதிர்பாராது நிறுவனத்தை அவருக்கே உரிமையாக்கினார்.

அதன் பின்பும் தீவுப்பகுதியின் புகையிலையை விவசாயிகளிடம் இருந்து பெருமளவிற் கொள்வனவு செய்து அவற்றைத் தரப்படுத்தித் தென்பகுதியின் வர்த்தகர்களுக்கு மொத்தவியாபாரம் செய்து வந்தார். இதன்மூலம் பல உள்ளூர் வெளியூர் தொழிலாளர்களுக்குத் தொழில் வாய்ப்புக்கள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டதுடன் வேலணை விவசாயிகளின் புகையிலை உற்பத்திகளுக்குச் சந்தை வாய்ப்புக்களையும் அதிகரித்துக்கொடுத்தார்.

சிறுவயது முதல் விவசாயத்துறையில் மிகவும் ஆர்வம் உடையவராக இருந்த திரு. கைலாசபிள்ளை அவர்கள் தமிழினம் உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடைய வேண்டும் என்பதில் மிகவும் விருப்பம் உடையவராக இருந்தார். காலம் காலமாக வேலணையிலும் பின்னர் 1953ஆம் ஆண்டில் இருந்து கல்மடு இரணைமடுக்குளம் விவசாயத் திட்டத்தின் கீழும் பெரு விவசாயம் செய்து எமது நாட்டின் உணவு உற்பத்திக்குப் பெரும் பங்காற்றினார். இந்த விவசாயத் திட்டத்தின் கீழ் நவீன தொழில் முறைகளைக் கையாண்டதுடன் கல்மடு மக்கள் பலருக்கும் தொழில் வாய்ப்பும் ஏற்படுத்திக் கொடுத்தார்.

வேலணையில் தோட்டக் காணிகள், நெற்காணிகளுக்கு உரிமையாளராக இருந்த திரு. கைலாசபிள்ளை அவர்கள் இராமேஸ்வரத்தில் இருந்து தருவிக்கப்பட்ட வடக்கன் மாடுகளையும் ஏர் முறையையும் உபயோகித்துப் பழைமை முறைகளைப் பேணித் தனது விவசாயத்தைத் தான் இறக்கும் வரை செவ்வனே செய்தார்.

## சிவப்பணி

காலிமாநகரில் தனது வர்த்தகத்தைச் சிறப்புறச் செய்துகொண்டிருந்த கால கட்டத்தில் தென்னிலங்கையின் அருட் டேக்கமாகத் திகழும் காலி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தின் புனர் அமைப் பில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். இதன்பின்பு 1948ஆம் ஆண்டில் ஆலயத்தைச் செம்மையாக நிர்வகிக்க ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலய பரிபாலன சபை என்ற அமைப்பை உருவாக்கி மேலும் சபையின் விதிமுறை கள் அமைப்புக் குழுவின் உறுப்பினராகவும் பணிபுரிந்தார். பின்னர் 1953ஆம் ஆண்டு முதல் 1956ஆம் ஆண்டு வரை ஆலய நிர்வாகத்தராகக் கடமையாற்றித் தன்னை சிவப்பணியில் மேலும் ஈடுபடுத்திக் கொண் டார். அத்துடன் காலி மாநகர சபை ஆணை யாளர் திரு. சின்னையா, நீதியரசர் மாணிக்க வாசகர், தொழிலதிபர் திரு. நீதிராசா போன்ற பெரியோர்களைச் சிவன் சேவை யில் ஈடுபடுத்திச் சைவ சமய வளர்ச்சியிற் பெரும் பங்காற்றினார்.

இனக் கலவரங்களினால் ஆலயம் பாதிக்கப்படக் கூடாது என்று கருதி பல சிங் கள மக்களையும் சிவன் பக்தர்களாக்கு வதிற் பெரிதும் உழைத்தார். தென் மாகாண பிரபல அரசியல்வாதிகள் திரு. அமர சூரியா, DR. W. தகநாயக்கா, திரு. விஜய சூரியா போன்றவர்களுடன் நெருங்கிய தொடர்புகளைப் பேணி ஆலயத்தின் முன் னேற்றத்திற்கும் பாதுகாப்பிற்கும் இவர்க ளின் முக்கிய உதவிகளைப் பெற்றுக் கொண்டார்.

காலி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலய கதிர்காம யாத்திரிகர்கள் அன்னதான மடம் ஒன்றைக் காலி மாநகரில் நிறுவிச் சிறப்புடன் நடத்திக்கொண்டிருந்த முன் னோடிகளில் திரு.கைலாசபிள்ளை அவர் களும் ஒருவராவர்.

## சமூகப் பணி

தனது கிராமத்தின் வளர்ச்சி சிறார் களின் கல்வி வளர்ச்சியிற் தங்கியுள்ளது என்பதைத் தீர்க்கதரிசனமாக உணர்ந்த திரு. கைலாசபிள்ளை அவர்கள் சேர். வைத்தியலிங்கம் துரைசாமி, மற்றும் பெரி யோர்களுடன் சேர்ந்து வேலணை மத்திய மகா வித்தியாலயத்தை அமைப்பதிலும் பின் 1956ஆம் ஆண்டு ஆத்திசூடி வித்தியா சாலையை அமைப்பதிலும் காலத்திற்குக் காலம் அவற்றிற்குச் சிறந்த ஆசிரியர்களை நியமிப்பதிலும் அயராது உழைத்தார். இத் தகைய கல்வித் தொண்டோடு அவரது சமூகப்பணி நின்றுவிடவில்லை. புதிய வீதி கள் அமைக்க நிலம் கொடுத்தும் பணம் கொடுத்தும் புதிய வீதிகளை அமைப்பித் தும் பழைய வீதிகளைப் புனரமைப்புச் செய்தும் கிராமத்தை அழகுறச் செய்தார். இவரின் தந்தை வழித்தோன்றல் அமரர் வி. ஏ. கந்தையா அவர்கள் ஊர்காவற் துறைத் தொகுதிப் பாராளுமன்றப் பிரதி நிதியாக இருந்த காலத்தில் அவரது உதவி கொண்டு சோளாவத்தைக் கிராமத்திற்கு உப தபால் நிலையம் நிறுவுவதற்கும் ஆவன செய்தார்.

வேலணையின் அபிவிருத்தியில் தீவிர அக்கறை கொண்டிருந்த திரு. கைலாச பிள்ளை அவர்கள் பாராளுமன்ற உறுப் பினர்களான திரு. அல்பிரட் தம்பியையா, திரு. வீ. ஏ. கந்தையா, திரு வ. நவரத்தினம்,

திரு. கா. பொ. இரத்தினம் மற்றும் கிராம சபைத் தலைவர்களாக இருந்த திரு. பு. சுப்பிர மணியம், திரு. க. சதாசிவம் மற்றும் அவரது நண்பன் திரு. ஐ. பொன்னையா ஆசிரியர் அவர்களுடன் சேர்ந்து வேலணைக் கிராம அபிவிருத்திக்கான ஆலோசனை களை வழங்கியதுடன் அப்பணியிற் தம்மை முழுமையாக ஈடுபடுத்தித் தன்னலமற்ற சமுகப்பணி செய்தார்.

கமத்தொழிலில் ஈடுபாடுடைய இவர் தனது கிராமத்தின் நீர்வசதி எதிர்காலத் தில் விவசாயத்திற்குப் போதியதாக இருக் காது என்பதை உணர்ந்து கல்மடு, கிளி நொச்சி போன்ற பகுதிகளில் தனது கிராம மக்களை நடுத்தர கீழ்வகுப்பு குடியேற்றத் திட்டங்களிற் காணி பெறச் செய்தது மட்டு மல்லாமல் தான் அதற்கு முன்னோடியாக வும் விளங்கினார்.

## குடும்பு வாழ்வு

வேலணையின் வடதிசையிலே மேழிச் செல்வத்தால் மேம்பட்டு விளங்கிய பல குடும்பங்களில் ஒப்புயர்வற்று ஒளிவிளக் காய்த் திகழ்ந்த சைவத் தமிழ் மரபில் உதித்த இராமநாதர் இளையதம்பிக்கும் பண்ணை விவசாய குடும்பத்தில் வந்த சின்னார் என அழைக்கப்பட்ட திரு. சின்னத்தம்பியின் மகள் தையல்முத்துவிற்கும் சிரேஷ்ட புதல் வனாய் திரு. கைலாசபிள்ளை அவர்கள் 21. 01. 1907 ஆம் ஆண்டு பிறந்தார். இவருக்கு மூத்தவர்களாக திருமதி. இரா சம்மா சபாபதிப்பிள்ளை திருமதி. தங்கம்மா கந்தையா அவர்களும் இளையவராக திரு. தம்பையா அவர்களும் பிறந்தார்கள்.

இவர் 1947ஆம் ஆண்டு வேலணை பள்ளம்புலம் வர்த்தகரும் விவசாயியுமான நீ. க. நாகலிங்கத்தின் மகள் அன்னம்மா அவர்களை மணம் செய்து ஐந்து பிள்ளை கட்குத் தந்தையானார். மனைவியின் மறை விற்குப் பின் மூளாய் திரு. வி. முருகேசம் பிள்ளை அவர்களது மகள் தெய்வானைப் பிள்ளையை மணம் முடித்து மூன்று பிள் ளைகளின் தந்தையானார். இவரது பிள்ளை கள் திருமதி. கலாவல்லி கோபாலபிள்ளை (கனடா) திருமதி. இமயவல்லி விஸ்வலிங்கம் (கனடா) திருமதி. கமலவல்லி நாகராசா (யாழ்ப்பாணம்) திருமதி கருணாவதி வில்வராஜா (வட்டுக்கோட்டை) திருமதி. ஞானவல்லி தனபாலசுந்தரம் (கனடா) திரு. சிவகுமாரன் (கனடா) திருமதி. சுசீலாதேவி சிவநாதன் (கொழும்பு) திருமதி. சகுந்தலா தேவி சிறீகரன் (அமெரிக்கா) ஆவர்.

தனது சொந்தச் சகோதரி திருமதி. தங்கம்மா கந்தையா அவர்களின் இரண்டு பிள்ளைகள் திரு. விஸ்வலிங்கம் திரு. கோபாலபிள்ளை அவர்களைத் தனது சொந்த மருமக்களாக எடுத்துக் குடும்பப் பிணைப்பை மேலும் பலப்படுத்தினார்.

அமரர் திரு. கைலாசபிள்ளை அவர் களுக்கு மொத்தமாக 24 பேரப்பிள்ளைகள். அழகிய அன்பு உருவமும், நிறைந்த அனு பவமுங் கொண்ட இவ்வுத்தமர் மூத்தோர் களுக்கு உறவாகியும், இளையோர்களுக்கு வழியாகியும் இழக்கலுடை வழி ஊன்று கோலாகியும் தனது குடும்ப வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அரும்பாடுபட்டார். குறிப்பாகத் தனது வளரும் சமுதாயத் தினரான பிள்ளைகள் பேரப்பிள்ளை களுக்கு அவ்வப்போது அறிவுரை கூறி

அவர்களது சக்தி மிக்க ஆற்றலையெல்லாம் நன்னெறிப்படுத்தி அவர்களின் சிறப்பான கல்வி, பழக்கம், தொழில் முன்னேற்றத் திற்கு ஊன்றுகோலாக இருந்தார்.

இவரது மக்கள் மருமக்கள் பேரர்கள் இன்று பட்டதாரி ஆசிரியர்களாய், பொறியி யலாளராய், கணக்காளராய், உயர் அதி காரிகளாய், பிரபல வர்த்தகர்களாய், முதன்மை பெற்று நிற்கும் பெருமையும் அமரர் கைலாசபிள்ளை அவர்களுக்கே உரியது என்றால் அது மிகையாகாது

திரு. கைலாசபிள்ளை அவர்கள் ஆனி 20, 1979ஆம் ஆண்டு தனது 72ஆவது வயதில் மாரடைப்பால் யாழ்ப்பாணம் வைத்தியசாலையில் சிவனடி சேர்ந்தார். இவர் எழுபத்திரண்டு ஆண்டுகள் நல் வாழ்வு வாழ்ந்து சீரிய பண்புடன் நற் பணிகள் பல செய்து ஏனையோருக்கும் நல் வழிகாட்டி குறைவிலா நிறை வாழ்வு வாழ்ந்து மறைந்தவர்.





# தொழிலதிபர்கள்

# திரு. வைத்தியநாதர் கந்தையா பொன்னம்பலம்

## திரு. ஈசன் பொன்னம்பலம்

யாழ் குடாநாட்டின் வடமேற்குத் திசையில் இந்துமா சமுத்திரத்தில் அமைந்துள்ள சப்ததீவுகளில் ஒன்றான லைடன் தீவில் வேலணை அழகுற அமைந்துள்ளது. வேலணை கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்ற திசை ஒழுங்கில் பிரிக்கப்பட்டு, மக்கள் தனித்துவமாக வாழ்ந்தாலும், ஊர்ப்பற்றோடு ஒற்றுமையாக வாழ்ந்தார்கள்.

வேலணை மேற்கில் கந்தஉடையார் பரம்பரையில் உதித்த வைத்தியநாதர் கந்தையா அவர்களுக்கும் இராசசேகர முதலியார் வம்சத் தொடர்புள்ள சேதுபதி முத்துப்பிள்ளை அவர்களுக்கும் இரண்டாவது பிள்ளையாகத் தோன்றியவர் தான் இப்பத்தியின் கதாநாயகன் ஆவார்.

இவர் வேலணை மேற்கில் அமைந்திருக்கும் சிற்பனை முருகன் ஆலயத்திற்கு அண்மையில் அமைந்துள்ள பதியிலே 26. 10. 1908 இல் பிறந்தார். இவருக்கு மூத்தவர் மனோன்மணி எனும் தமக்கையாராகும். இளையவர்களாக கனகம்மா, கமலாம்பிகை, வாலாம்பிகை, சிவகடாட்சம்பிள்ளை, காமாட்சி என்பவர்கள் அமைந்திருந்தனர்.

இவர் தந்தை கந்தையா கணிதவல்லுனரும் வணிகவளம் வாய்ந்தவராகவும் திகழ்ந்திருந்தார். இவர் தன் மகன் பொன்னம்பலம் அவர்களை இளவயதிலேயே கணிதத்திலும், தமிழிலும் ஆற்றல் மிக்கவராக ஆக்கினார். பொன்னம்பலம் அவர்கள் தனது கல்வியை கந்தப்பு உபாத்தியாயரால் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலையில் இன்று சைவப் பிரகாச வித்தியாசாலை என அழைக்கப்படும் பாடசாலையில் ஆரம்பித்து

தொடர்ந்து வரும் வேளையில் அவரது பதின்நான்காவது வயதிலே அவர் தம் தந்தையார் இறந்துவிட்டார். இவர் ஐந்து பெண்களுக்கு சகோதரனாக இருந்தமை காணமாகவும் அன்றைய பொருளாதார நெருக்கடி நிலை காரணமாகவும் தொடர்ந்து கல்வியை முன்னெடுத்துச் செல்ல முடியாத நிலை ஏற்பட்டது. இவ் வேளையிலே இவர் தம் தாய்மாமனாகிய சேதுபதி பொன்னையா அவர்கள் காலி மாநகரிலே வணிகத்துறையிலே சிறந்து விளங்கினார். அவர் தன் சகோதரி முத்துப் பிள்ளையினது வேண்டுகோளுக்கு இணங்க மருகர் பொன்னம்பலம் அவர்களை தனது வணிக நிலையத்திற்கு அழைப்பித்து தன்னுடன் இணைத்துக்கொண்டு வணிகத் துறையைத் திறம்படப் பயிற்றுவித்தார். இதே காலகட்டத்திலே சேதுபதி பொன்னையா அவர்கள் தன் மூத்த சகோதரன் சேதுபதி கந்தையா அவர்களின் மூத்த புதல்வன் நாகையா அவர்களையும் தன் அதே வணிக நிலையத்திற்கு அழைப்பித்து தன்னுடன் இணைத்துக்கொண்டு வணிகத் துறையில் சிறந்தோனாக பயிற்றுவித்தார்.

அச்சிறு பிராயத்திலே பொன்னம்பலம் துடிப்புள்ள இளைஞன் ஆகவும் கல்வியில் நாட்டமுள்ளவராகவும் தென்பட்டார். இதன் காரணமாக அவர் தம் பாடசாலைக் கல்வி மறுக்கப்பட்டிருந்தாலும் தானாகவே பல நூல்களைக் கற்றுத் தன் தமிழ் அறிவை வளர்த்துக்கொண்டார். அவருக்கு இயற்கையாகவே அமைந்த கணித வல்லமையினால் அக்காலத்திலே வணிகத்துறையில் துரித வளர்ச்சியை எய்தினார். அதன்பால் தேடிய செல்வ வளங்களைக் கொண்டு தனது சகோதரிமார்களுக்கு ஏற்ற துணைவர்களைத் தேடிப்பெற்று ஏற்றமுற வைத்தார். தனது இளைய சகோதரன் சிவகடாட்சம் பிள்ளை அவர்களை கல்வியில் மேலோங்க ஆவன செய்து அவரைப் பண்டித ஆசிரியராக உயரச் செய்தார்.

இவர் காலி மாநகரிலே அமைந்திருந்த சிவன் ஆலயத்தில் சிவன் தொண்டராக இருந்தமை மாத்திரமல்ல. சிவன் ஆலயத்தின் பரிபாலன சபையில் நீண்டகாலமாக பொருளாளராக பதவி வகித்து ஆலயத்தின் முன்னேற்றத்திற்கு அயராத பங்களிப்பை ஆற்றியவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் இந்தியாவிலிருந்து வெளியாகும் கல்கி, ஆனந்தவிகடன் சஞ்சிகைகளைத் தவறாது வாசிப்பது மாத்திரமல்லாது ஆனந்தவிகடனில் வெளிவரும் குறுக்கெழுத்துப் போட்டிகளில் பங்குபற்றி பல தடவைகள் பரிசில்களையும் தனதாக்கிக் கொண்டார்.

சேதுபதி பொன்னையா காலத்தின் மாற்றம் காரணமாக காலி பிரதான வீதியில் அமைந்திருந்த வணிக நிலையத்தை தனது பெறாமகன் நாகையா அவர்களுக்கும் மருகர் பொன்னம்பலம் அவர்களுக்கும் உரித்தான முறையில் கையளித்து விட்டு வணிகத்துறையிலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்டார். அதன்பின் இவ்விருவருமே வணிக நிலையத்தை V.K.P & S.K. Nagaiah & Co., எனப் பெயரிட்டு மிகவும் சிறப்பாக 1951 ஆம் ஆண்டுவரை இயக்கி வந்தனர். இக்காலத்திலே வேலணையில் உற்பத்தி செய்யும் புகையிலையை மாத்திரமல்ல, சரவணை, புளியங்கூடல், நாரந்தனை, அனலைதீவு முதலான இடங்களில் உற்பத்தி செய்யப்பட்ட புகையிலையையும் கொள்வனவு செய்து காலியில் மொத்தமாகவும் சில்லறையாகவும் விற்பனை செய்து மேற்கூறிய இடங்களுக்

குப் பணவளத்தை ஈட்டிக்கொடுத்தது மாத்திரமல்லாது தாங்களும் செல்வத்தை தேடிக்கொண்டனர். இவ்வேளைகளில் நாகையா அவர்கள் கொள்வனவு செய்பவராகவும், பொன்னம்பலம் அவர்கள் விற்பனை முகவராகவும் திகழ்ந்தார் என்பது வெளிப்படை. 1950 ஆம் ஆண்டு வரை அவர்கள் எழுச்சிக்காலம் என்று கூறினால் மிகையாகாது.

பொன்னம்பலம் அவர்கள் தன் மூத்த சகோதரியை அன்று ஹற்றன் (Hatton) டிக்கோயா (Dickoya) வணிகர் நா. க. பசுபதிப்பிள்ளை அவர்களுக்கு மணமுடித்து மகிழ்வெய்தினார். சகோதரி கனகம்மா அவர்களை தனது தாய்மாமன் மகனும் வணிகப் பங்காளியுமான சே. க. நாகையா அவர்களுக்கு மணமுடித்து இறும்பூதெய்தினார். சகோதரி கமலாம்பிகையை தபாலதிபர் சிவசிதம்பரம் (சுந்தரம்) அவர்களுக்கும் மணமுடித்து மகிழ்ந்தார்.

இவர் வேலணை சட்டம்பியார் பரம்பரை வந்த துரையப்பா நாகத்திரனம்மா தம்பதிகளின் மூத்த புதல்வியான அன்னபூரணி அவர்களை 1942 ஆம் ஆண்டு மணம் புரிந்தார். சகோதரி வாலாம்பிகை அவர்களை சகோதரன் சிவகடாட்சம் பிள்ளையின் அன்பராகத் திகழ்ந்த காரை நகரைச் சார்ந்த ஆசிரியர் காசிப்பிள்ளை அவர்களுக்கும், தம்பி சிவகடாட்சம்பிள்ளை அவர்களுக்கு திலகவதி அவர்களை மணமுடித்து வைத்து மகிழ்ந்தார். இளைய சகோதரி காமாட்சி மணவாழ்க்கையே வேண்டாமென இருந்துவிட்டார். இவர்கள் அனைவருமே இன்று மேலுலகு எய்தி விட்டனர்.

இவர்தன் இல்லறப் பேற்றால் நான்கு புதல்வர்களையும் நான்கு புதல்விகளையும் ஈன்று இன்புற்றிருந்தார். இவ்வேளையிலே இவர் தம் உறவினருக்கும் வேலணை வாழ் மக்களுக்கும் பல்வேறு வழிகளில் உதவி புரிந்தார்.

இவர்தம் வணிக வாழ்விலே 1951ஆம் ஆண்டு இவருக்கும் இவர்தம் மைத்துனர் திரு. சே. க. நாகையாவிற்கும் இடையே ஏற்பட்ட மனமுறிவு காரணமாக வியாபார நிலை வீழ்ச்சியுற ஆரம்பித்தது. இதன் காரணமாக இவ்விருவரும் நடாத்தி வந்த வணிக நிலையத்தை பொன்னம்பலத்திடம் கையளித்துவிட்டு கூட்டு வணிகத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தனர்.

“ஒற்றுமை நீங்கின் அனைவர்க்கும் தாழ்வு” என்பதற்கு இணங்க சில ஆண்டு காலமாக அவர்தம் வணிகம் வீழ்ச்சியுற்ற நிலையாகவே இருந்தது. மீண்டும் முன்னைய நிலைமையை எய்துவதென்பது முயற்கொம்பானது.

இவரின் மண நாளன்று ஆசிரியப் பெருந்தகை திரு. இ. மருதையினார் திருமண வாழ்த்துதலில் “நீலமணி கருமேனி .....” என்ற பா தொடரிலே குறிப்பிட்ட “நீலமணி” என்பது காலப்போக்கில் அவரது பட்டப் பெயராகி பொன்னம்பலம் என்று அழைப்பதை விட்டு “நீலமணி” என்றே அழைக்கலாயினர்.

இவரது மூத்தமகன் ஈசன் அவர்களைப் பேராதனைப் பல்கலைக்கழக விஞ்ஞான கணிதப் பட்டதாரியாக்கி மகிழ்ந்தார். இவரை அவர் தம் தாய்மாமன் திரு. துரையப்பா தியாகராசாவின் மகள் சரசாம்பிகைக்கு மணமுடித்து மகிழ்வெய்தினார்.

இவர் மகன் கணித ஆசிரியராகப் பணியாற்றியதோடு வேலணை சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகாவித்தியாலயத்தில் பிரதி அதிபராகவும் கடமைபுரிந்தார்.

இரண்டாவதாகப் பிறந்த மகள் இரத்தினம்பாள் அவர்களை நயினாதீவைச் சார்ந்த தபாலதிபர் திரு. வேலாயுதம் சிவபாத சுந்தரம் அவர்களுக்கு மணமுடித்து மன நிறைவெய்தினார். தனது இரண்டாவது மகன் மகேசன் அவர்களைத் தனது காலி வணிகத்துறையில் ஈடுபடுத்தி அவரையும் அவர்தம் தாய்மாமன் திரு. துரையப்பா இராம சாமி அவர்களின் புதல்வி கௌசல்யா அவர்களுக்கு மணமுடித்து மகிழ்ந்தார். தனது மூன்றாவது மகன் சிறீதரன் அவர் களையும் பேராதனைப் பல்கலைக்கழக கணிதச் சிறப்புப் பட்டதாரியாக்கி அவரை யும் விஞ்ஞானப் பட்டதாரியான நகுலேஸ் வரி அவர்களுக்கு மணமுடித்து மகிழ்ந் தார். இவர்கள் இன்று லண்டனில் வசிக் கிறார்கள். நான்காவது மகன் சந்திரசேகரம் அவர்களையும் தனது வணிகத்துறையில் ஈடுபடுத்தி திரு. மயில்வாகனம் அவர்களது புதல்வி சிவகலை அவர்களுக்கு மண முடித்து மகிழ்வெய்தினார்.

தனது இரண்டாவது புதல்வி கமலாசனி அவர்களை வீடமைப்பு அதிகாரசபைக் கணக்காளர் அனலைதீவைச் சேர்ந்த திரு. ஐயாத்துரை செல்லத்துரை அவர்களுக்கு மணம் புரிந்து இறும்பூதெய்தினார். இவர் கள் இன்று கனடாவில் வாழ்கின்றனர். மூன்றாவது புதல்வி மகேஸ்வரி அவர்களை வேலணைக்கிராம சபை தொழில்நுட்பவிய லாளர் நாரந்தனையைச் சார்ந்த திரு. மாணிக்கம் புவனதாசன் அவர்களுக்கும் மண முடித்து மகிழ்வடைந்தார். இவர்க ளும் கனடாவில் வாழ்கின்றனர்.

தனது நான்காவது மகள் இராசேஸ் வரி அவர்களை தன்னுடன் அடுத்ததாகப் பிறந்த சகோதரி திருமதி. நாகையா கனகம்மா வின் மகன் விசாகன் (கணனிப்பொறியி யலாளர் -லண்டன்) அவர்களுக்கும் மண முடித்து வைத்ததோடு மாத்திரமல்லாது தனது மைத்துனர் திரு. சே. க. நாகையா உடன் பல ஆண்டு காலமாக நிலவி வந்த மனக்குரோதங்கள் யாவையும் மறந்து இரு வரும் ஒன்றுபட்டு மகிழ்ந்திருந்தனர். இவ் வேளையிலே திரு. நாகையா அவர்கள் தனது மருகியை லண்டனுக்கு விமானமேற் றிவிட்டுத் திரும்பும்போது கோட்டை புகை யிரத நிலையத்தில் 1984ஆம் ஆண்டு ஆவணி மாதம் நோயெதுவும் இன்றி இறை பதம் எய்திவிட்டார்.

திரு. பொன்னம்பலம் அவர்கள் வேலணை மேற்கூர் சிற்பனை முருகன் தொண்டர் ஆலயப் பொறுப்புவாய்ந்த உரிமையாளரு மாக இருக்க வேண்டிய தகுதிபெற்றிருந் தார்.

அவரது மைத்துனர் திரு. சே. க. நாகையா அவர்களின் பெருமுயற்சியால் திரு. வை. க. பொன்னம்பலம் அவர்களின் தலைமை யில் சிற்பனை முருகன் ஆலய புனருத்தாரண சபை 09. 06. 1984 இல் உருவானது. ஆல யத்தை புனர்நிர்மாணம் செய்து அதன் கும்பாபிஷேகப் பணிகளைப் பூர்த்திசெய்யும் நோக்குடன் ஆரம்பிக்கப்பட்ட மேற்படி சபை சிற்பனை முருகன் ஆலய பரிபாலன சபை என மாற்றப்பட்டு இச்சபைக்கு ஆயுட் கால தலைவராகக் கடமை புரிந்தார்.

இவரது நெடுங்கால வாழ்வு இவரின் தெய்வ வழிபாட்டின் மகிமையை எடுத்தியம்புகின்றது எனக் கூறின் மிகையாகாது.

## பிற்கால வாழ்க்கை

தான் ஈன்ற பிள்ளைகள் சிறப்புடன் வேலணையில் இனிதே வாழ்ந்துவரும் காலை 1990 ஆம் ஆண்டு வேலணையில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக இடம்பெயர்ந்து சிறிது காலம் யாழ்ப்பாணத்தில் தனது இரண்டாவது மகள் கமலாசனியுடன் வாழ்ந்து வந்தார். மீண்டும் 1991 ஆம் ஆண்டு வேலணையில் இடம்பெற்ற இரண்டாவது இராணுவ நடவடிக்கையின் போது முழு வேலணையும் இடம்பெயர்ந்தது. அக்காலகட்டத்தில் பொன்னம்பலம் அவர்கள் கொழும்பிற்கு இடம்பெயர்ந்து தன் மகன் மகேசனுடன் தம்பதிகள் சமேதராக வாழ்ந்திருந்தனர். பிந்திய காலப் பகுதியில் தனது மூத்தமகள் இரத்தினம்பாள் சிவபாதசுந்தரம் அவர்களின் வேண்டுகோளின்படி தெமட்டகொடவில் வாழ்ந்திருந்தார். அத்தோடு கொழும்பிலே தனது மூத்த பேரப்பிள்ளை எழிலரசி ஈசனின் திருமண வைபவத்தையும் கண்ணுற்று மகிழ்ந்ததோடு மாத்திரமல்லாது மூத்தபேரன் கேசவன் ஈசன் (கணனிப் பொறியியலாளர்) அமெரிக்கா சென்றதையும் கேள்வியுற்று மகிழ்ந்தார். இவர் தன் பேரப்பிள்ளைகள் யாவரும் கல்வியில் முன்னேற்றம் அடைகின்றார்கள் என்பதையும் கேள்வியுற்று மகிழ்வடைந்தார்.

சிறிது காலம் நோயுற்ற நிலையில் இருந்து தனது மூத்தமகளின் இல்லத்திலே தெமட்டகொடவில் 05. 03. 2003 அன்று விண்ணகம் விரைந்தார்.

### இப்பந்தியை வரைந்தவரின் கூற்று:

"என்னை இளவயதில் பாடசாலை விடுமுறை நாட்களிலே காலிக்கு அழைப்பித்து பகல்நேர வேளைகளில் கல்கியோ அன்றி ஆனந்தவிகடனையோ தந்து வெள்ளைத் தாளில் பேனாக்கோலுடன் மையையும் தந்து (ஊற்றுப் பேனா அல்ல) பார்த்து எழுது என்று சொல்லி என் தமிழ் எழுத்தை உறுப்பு ஆக்கியவர் என்பது உண்மை."

என் சிறு வயதிலேயே கணியன் பூங்குன்றனார் சொன்ன வார்த்தைகளை "யாதும் ஊரே யாவரும் கேளிர்" "தீதும் நன்றும் பிறர்தர வாரா" என்பதை அடிக்கடி கூறுவது இன்றும் என் மனக்கண் உதித்திருக்கும் என்பது உண்மையாகும்.





# தொழிலதிபர்கள்

# திரு. மு. சி. சிற்றம்பலம்

திரு. இ. க. தியாகராசா

வேலணையில் பிறந்து வேலணையிலேயே தொழில் துறைகளில் ஈடுபட்டு, வேலணையிலே சிறந்த வர்த்தகராகவும், சமூகப் பெரியாராகவும் விளங்கியவர் அமரர் மு. சி. சிற்றம்பலம். இவர் விவசாயம், வர்த்தகம், கால்நடை வளர்ப்பு, விவசாயம் சார் கைத்தொழில், போக்குவரத்து போன்ற பல துறைகளில் ஈடுபட்டு கிராமத்தில் முன்னோடி முயற்சியாளனாகத் திகழ்ந்தவர். சிறு வியாபார முயற்சியிலிருந்து பெரிய வியாபார நடவடிக்கைகளை முன்னெடுத்தவர். மாட்டுவண்டியிலிருந்து புதிய ஜப்பான் லொறிகளை கிராமத்துக்கு அறிமுகமாக்கியவர். "ஓம் முருகா" என்பதே இவரது தாரக மந்திரம்

அமரர் மு. சி. சிற்றம்பலம் 2.4.1908 இல் வேலணையில் முருகேசர் சின்னத்தம்பிக்கும் சீனிப்பிள்ளைக்கும் மகனாகப் பிறந்தார். இவருக்கு இரண்டு சகோதரர்களும் ஐந்து சகோதரிகளும் இருந்தனர். இவர் இளமைக் காலக் கல்வியை வேலணை அமெரிக்க மிசன் பாடசாலையில் கற்ற பின்னர் வேலணையிலேயே சிறு வியாபாரத்திலும் விவசாயத்திலும் ஈடுபடலானார். இவர் வேலணை மேற்கு திரு. சபாபதிப்பிள்ளை பொன்னாச்சி அம்மையாரின் மகள் இலட்சுமிப்பிள்ளையை விவாகம் செய்து இரு ஆண்பிள்ளைகளையும் ஒரு பெண்பிள்ளையையும் பெற்றார். வி. ஜே. எஸ். நிறுவன உரிமையாளர் திரு. சரவணபவன் இவரது மூத்த புதல்வராவார். இளைய மகன் திரு. அமரேசன் ஆசிரியராக இருந்து காலமாகி விட்டார்.

இவர் வியாபாரத்தில் ஈடுபட்டபோது சமயப்பற்று மிக்கவராக இருந்ததால் மக்களிடம் அதிக இலாபம் பெறுவதில்லை.

மேலும் இவர் தன்னிடம் பொருள் வாங்கும் வாடிக்கையாளருக்கு வருடக் கணக்கில் கடனுக்கு பொருள் கொடுப்பதும் உண்டு. அவர்கள் புகையிலை செய்து அதை விற்றே பணத்தைக் கொடுப்பர். இவர் ஒரு ஆத்மீக வாதியாகவும் காந்தீயவாதியாகவும் திகழ்ந் தார். நல்லூர்க் கந்தன் மேல் மிகுந்த ஈடு பாடு கொண்டவர்.

எதற்கும் "முருகா, முருகா" எனக் குறிப்பிடுவார். பெயரிடுவார். உச்சரிப்பார். மேலும் யோக சுவாமிகள் மேல் கொண்ட பற்றுக் காரணமாக அவரிடம் சென்று ஆசி பெறுவதுடன் அவரது கருத்துக்களை தனது வாழ்வில் கடைப்பிடித்தவர். சமயப் பணி திருப்பணிகளில் தன்னை ஈடு படுத்திக்கொண்டவர். மொறிசீயஸ் நாட் டுக்கு பல சமய நூல்களை அனுப்பி அங்கு சைவம் தளைக்க வழிவகுத்தவர். வேலணை வங்களாவடியில் முருகன் கோவில் அமை வதற்கு கடுமையாக உழைத்த பெரியார். சைவ சமய நாயன்மார்களில் மிகுந்தபக்தி கொண்டவர். உழவாரப் பணிபுரிந்த திரு நாவுக்கரசரை நாயன்மார்களில் மிகுந்த விருப்புற்று, அவர் ஆற்றிய சேவைகளை பெருமையாகக் கொண்டு, தனது வீட்டி லும் வேலைத்தலங்களிலும் அவரின் பெயரை இட்டு மகிழ்ந்தார். அடியார் களுக்கு களைப்பு, தாகம், பசி தீர்க்க தண்ணீர்ப் பந்தல், மகேஸ்வர பூசை செய் வதற்கு பெரும் விருப்புற்றவராக திகழ்ந்தார்.

இவரது இரண்டாவது புதல்வர் அமரேசன் B.A (Diploma in Education) பட்டம் பெற்று யாழ்/செங்குந்தா இந்துக் கல்லூரி யில் இல்லப் பொறுப்பாசிரியராக ஒழுக் காற்றுச் சபை உறுப்பினராக, இந்து மாமன்றப் பொறுப்பாசிரியராக, சாரண பொறுப்பாசிரியராக, ஆசிரியர் கழக தலைவராக பகுதித் தலைவராக இன்னும் பல பதவிகளை வகித்து எல்லாவற்றிற் கும் மேலாக ஒரு நல்லாசிரியனாக விளங்கி 17.12. 1996 இல் இறைபதம் அடைந்தார்.

இவரது ஒரே மகளான விருத்தாசல அம்மாளை இந்துமகளிர் கல்லூரியில் உயர் தர கல்விபயில வைத்தவர், திருவாளர் மு. சி. சிற்றம்பலம் அவர்கள். இளமை தொட்டு புலால் உண்ணாமையோடு நல்லூர் கந்தனை வழிபடுவதிலும் ஆர்வம் மிக்கவராக வாழ்ந்தவர். முருகப் பெரு மானையே தனது வழிபடு தெய்வமாக வணங்கி வந்தவர். இவர் தனது மடியி னுள் வைத்திருக்கும் விபூதிச் செப்பினுள் வெண்ணீறும் வேலும் சேர்த்து வைத்துக் கொண்டு தரிசித்துக் கொண்டே இருப்பார்.

அப்பூதியடிகள் நாயனார், திருநாவுக் கரசு நாயனாரினது மகிமையைக் கேள்வி யுற்று அவர்மீது அன்புடையவராய் தம்மு டைய வீட்டிலுள்ள அளவைகள், தராசுகள், பிள்ளைகள், பசுக்கள், தான் ஆக்கும் திரு மடங்கள், தண்ணீர்ப்பந்தல்கள், பூங்கா வனங்கள் என்பவற்றுக்கு திருநாவுக்கரசு என்று பெயரிட்டு அழைப்பதில் ஆர்வ முடையவராக இருந்தார். திருவாளர் சிற்றம்பலம் அவர்களும் நாயனாரைப் போன்று தனது வீடு, வியாபாரத்தலம் வாகனங்கள், தான் அணியும் உடைகள் எல்லாவற்றிலும் "ஓம் முருகா" என்ற நாமத்தை இடுவதில் ஆர்வமுடையவராக விளங்கினார். திருநீற்றுப் பூச்சும் கழுத்தில ணியும் உருத்திராட்ச மாலையும் கதருடை யும் காண்போரது உள்ளத்திலே முருகப் பெருமானைக் காண்பது போல காட்சி யளிக்கும். சிறுவர் தொடக்கம் முதியவர்

ஈறாக எல்லோரும் இவரை "முருகா முருகா" என்றே அழைத்து வந்தனர்.

திருவாளர் சிற்றம்பலம் அவர்கள் காந்தீயக் கொள்கையில் நிறைந்த பற்றுள்ளவர். இவர் தனது இளமைக்காலம் தொடக்கம் கதர் நாலுமுழமும், கதர் மேலங்கியும் கதர் உத்தரியமும் அணிந்து வந்தவர். இவர் யாழ்ப்பாண தவயோக சுவாமிகளில் மட்டற்ற பேரன்புடையவர். சிவனடியாரைப் பேணுவதிலும் சைவ சமய அபிவிருத்திக்காக தொண்டுகள் செய்வதிலும் ஈடுபாடுடையவராக வாழ்ந்தவர். சிவாய சுப்பிரமணிய சுவாமிகளின் விருப்பத்தின்படி மொரிசியஸ் தீவிலுள்ள சைவ மக்களின் நன்மைக்காக நாவலரது புத்தகங்கள் பலவற்றையும் யோக சுவாமிகளின் புத்தகங்கள் பலவற்றையும் அனுப்பி வைத்தார். நல்லூர் கந்தன் தேர்த் திருவிழாவுக்காக நயினாதீவிலிருந்து பாதயாத்திரையாக வரும் பக்தர்களுக்கு ஆரம்பத்தில் தனது இல்லத்திலும் பின்னர் முருகன் ஆலயத்திலும் மகேஸ்வர பூசை செய்து மகிழ்வித்து வழியனுப்புபவர்.

வயது, நடை, குன்றவும் முருகன் அருளால் முத்திபெற வேண்டி வேலணை வங்களாவுக்கு அண்மையிலிருக்கும் ஞான வைரவர் கோவிலுடன் சேர்த்து முருகன் ஆலயம் அமைக்க எண்ணினார். கோவில் பரிபாலன சபை ஒன்றைக் கூட்டித் தான் தனாதிகாரியாக இருந்து மக்களை நாடினார். மக்களும் சேர்ந்துகொண்டனர். எண்ணம் பூர்த்தியாகவே தனது பொருளுடனும் மக்களின் பொருளோடும் வங்களாவடி முருகன் ஆலயத்தை கட்டி முடித்தார். பரவசம் அடைந்தார். நாள்தோறும் முருகனை வணங்கி வந்தார். இக் கோவிலுக்கு ஒரு சபையையும் ஆக்கினார். 10 நாட்கள் அலங்காரத் திருவிழாக்கள் நடைபெற ஒழுங்குகள் செய்தார். இத்தொண்டு புகழ் குன்றாத தொண்டாகும்.

இவர் தனது 80ஆவது வயதில் 18. 05. 1988இல் இறைவனடி சேர்ந்தார்.



வேலணை வங்களாவடி நகரம், 2006இல்





# தொழிலதிபர்கள்

## திரு. நா. க. பசுபதிப்பிள்ளை (இராசையர்)

திருமதி. ஈசு. துரைசிங்கம் - வேலணை.

**வே**லணை மேற்கில் வாழ்ந்த பிரபல்யமான பரோபகாரமான வர்த்தகர்களில் இவரும் ஒருவர். 1902 ஆம் ஆண்டில் பிறந்த இவர் தனது பாடசாலை படிப்புமுடிய மலைநாடு சென்றிருந்தார். இவரது சிறிய தந்தையார் திரு. நா. சுப்பிரமணியம் முதலே டிக்கோயா சென்று வர்த்தகம் செய்து வசதியுடன் வாழ்ந்திருந்தார். அவரின் வழிகாட்டலில் இவரும் சென்று தனது விடாமுயற்சி யினாலும், விவேகத்தாலும் ஹற்றன் நகரில் ஒரு கடையும் டிக்கோயாவில் மூன்று கடைகளையும் வாங்கி நடத்தினார். தனது தம்பிமார் இருவர் நா. க. பிரமநாயகம்பிள்ளை, நா. க. பரமசிங்கம்பிள்ளை இவர்களையும் அழைத்துச் சென்று முதலாளிமார் ஆக்கினார். ஹற்றன், டிக்கோயா வாழ் மக்கள் இவர்களை N. K. P. சகோதரர்கள் என்றே அழைப்பார்கள்.

வேலணை மேற்கில் வாழ்ந்த உறவினர்களில் அனேகமானோரை தனது கடைகளில் வேலைக்கு அமர்த்தி அவர்கள் குடும்பங்களின் நன்மை தீமைகளில் பொருள் உதவி புரிந்து மகிழ்ந்திருப்பார். வயல் நிலம் தோட்டநிலங்களிலும் உறவினர்களை வேலைக்கு வைத்து வேளாண்மை செய் திருந்தார். மாட்டு வண்டில் ஒன்றையும் திருக்கல் வண்டிகளையும் வைத்திருந்தார். அந்தக் காலத்தில் இவ்வாறான வண்டிகள் பணக்காரரிடமே காணப்பட்டது. கல்வீடுகள் மிக மிக குறைவு. இவரை எல்லோரும்

"கல்வீட்டு இராசையர்" என்றே அழைப்பார்கள். தனது தம்பிமாரும் கல்வீடுகளில் வாழ்வதற்கு வழிகாட்டி யிருந்தார். எப்போதும் புன்சிரிப்புடனும், அழகாகவும், வெண்மை உடுப்புடனும் காணப்படுவார். தன்னைப் போலவே தனது குடும்ப்ம் உறவினர்கள் எல்லோரையும் சந்தோசமாகவே வைத்திருக்கப் பாடுபட் டிருந்தார்.

பொது வாழ்வில் நிறைய ஈடுபாடு கொண்டவர். வேலணையில் மத்திய கல்லூரி (சேர் வைத்தியலிங்கம் துரைசாமி வித்தியாலயம்) ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் இவரின் பங்களிப்பும் பெற்றுக்கொள்ளப்பட்டது.

திரு. இ. மருதையனார் இவரின் உற்ற இணைபிரியா நண்பர். அவரின் பொதுத் தொண்டுகளில் இவரும் பங்கு பற்றி பொருள் கொடுத்து பங்களிப்பு செய்துள்ளார். சிற்பனை முருகன் ஆலயம், பெரியபுலம் மகாகணபதிப்பிள்ளையார் ஆலயங்கட்கும் சேவையும் பொருள் உதவியும் செய்துள்ளார். பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையாருக்கு முதன் முதலாக ஆவணி சதுர்த்தி திருவிழாவை மிகப் பெரிய திருவிழாவாக நடாத்தியிருந்தார். வேலணை மேற்கின் சமய வளர்ச்சிக்காக கரணவாய் குருக்களுக்கு மடம் அமைத்துக் கொடுத்து அவர்கள் கடமை செய்ய நின்று உழைத்தவர்களுள் இவரும் ஒருவர். புகழ்பூத்த சிறப்புமிக்க பரோபகாரமான வர்த்தகர், வேளாண்மைகாரன். எல்லோருடனும் அன்பு காட்டி உதவி புரிந்து வாழ்ந்து மறைந்தவர். மனித நேயத்துடன் வாழ்ந்தவர்களை மீள நினைவு கூரவைத்தல் இளம் சமூகத்தினருக்கு வழிகாட்டலாக அமையலாம்.





# தொழிலதிபர்கள்

# உடுகம வர்த்தகர் அமரர் அ.க. முருகேசு

திரு. ச. கைலாயபிள்ளை - அதிபர்

தென்னிலங்கையில் உடுகமையில் வர்த்தகத்தில் ஈடுபட்டு உடுகம மக்களாலும் வேலணை மக்களாலும் கௌரவமாக நோக்கப்பட்ட பெரியவர். இவர் தமிழிலும் சிங்களத்திலும் நல்ல புலமை பெற்றிருந்ததுடன், சைவம், பௌத்தம் சமயங்களில் நல்ல ஆழமான அறிவைப் பெற்றிருந்தார். தமிழ், சிங்களம் ஆகிய மொழிகளில் ஆறுதலாகவும், தெளிவாகவும் பிறர் துன்புறாது பேசும் ஆற்றலைப் பெற்றிருந்தார். இதனால் இந்து, பௌத்தவிடயங்கள் பற்றி மேடைப் பேச்சாளராக தென்னிலங்கையில் திகழ்ந்துள்ளார். இவர் வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்தாலும் இவரது புகழ் இவரது ஏனைய செயற்பாடுகளிலிருந்தே கிடைக்கப்பெற்றது.

முருகேசு வேலணையில் பிறந்து, வேலணையிலேயே விவாகம் செய்து அங்கேயே வாழ்ந்தவர். இவர் தனது சுற்றுச் சூழலுடன் மிக இறுக்கமாக வாழ்ந்த பெரியார்.

தென்னிலங்கையில் இவரது சமயப் பணி முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. காலி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலய பரிபாலன சபை உப தலைவராக, தலைவராகப் பல காலம் இருந்து திருப்பணி வேலைகளை முன்னெடுத்தவர். தென்னிலங்கையில் சைவ சமய வளர்ச்சிக்குத் தனது பேச்சாலும் செயலாலும் பங்காற்றியுள்ளார்.

வேலணை வடபாலில் அமைந்துள்ள சாட்டி, ஆலம்புலம் கிராமம் நீர்வள, நிலவளம் உடையது. வேலணையில் பூர்வீகப் பெருங்குடி வேளாண் மக்கள் இங்கு பலவகையிலும் சீராகச் சிறப்பாகத்

தங்கள் குலத்தைப் பேணி, குடியைப் பேணி, பொருளாதார பலத்தைக் கூட்டி, கல்வி வளத்தைக் கூட்டி கிராமத்திலே சகல துறையிலும் வல்லார் என்று ஊரார் போற்ற பேருடனும் புகழுடனும் வாழ்ந் தார்கள்.

இவர்கள் வழித்தோன்றலில் வந்த அருணாசலம் துணை வேண்டி வள்ளி யம்மையை மணம் புரிந்து இல்லறமாம் நல்லறம் செய்யும் காலை அவர்களின் முந்து தவத்தால் முத்துத்தம்பி, கந்தையா, மருதப்பு எனும் ஆண்களையும் பெருந் தவப் பயனாக பொன்னு எனும் நங்கை யையும் பெற்றுப் பெரும் பேறாக, புகழாக வாழ்ந்து வந்தனர். இவர்களில் கந்தையா எனும் சீரோன் கண்ணியம் பலவுடைய பார்பதிப்பிள்ளையை மணம் புரிந்து இல்லறம் இயற்றுங்கால் மூத்தோனாக கணபதிப்பிள்ளையும், பின்னோனாக முரு கேசுவும் ஒரே பெண்ணாக சிவக் கொழுந்து வையும் பெற்றனர்; வளர்த்தனர்; கல்வியறி வூட்டினர். வயதடைய "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்றாங்கு மூத்தோன் தென்னிலங்கை சென்று பொருள் தேட அதனைப் பின்பற்றி திரு. முருகேசுவும் தென்னிலங்கை சென்றார்.

இளமைக் காலந்தொடங்கியே தென் னிலங்கையில் வர்த்தகத்தில் ஈடுபாடு கொண்டார். காலி, உடுகம என்னும் ஊரிலே உறுதிகொண்டார். இவரது நுண் மதியும் பேச்சாற்றலும் ஆழ்ந்த அறிவும், எவரையும் கரங்கூப்பி சிரந்தாழ்த்தி வணங்கி வரவேற்றுபசரிக்கும் சீரிய பண்பும் சிங்கள மக்கள் மத்தியில் பெரும் ஆதரவையும் மதிப்பையும் பெறக் காரணமாயிருந்தது. பௌத்தரது எந்த வைபவத்திலும் இவருக்கே முதலிடமளித்து கௌரவிப்பார்கள். புத்த ரின் பஞ்சசீலக் கொள்கையைச் சிங்கள மக்கள் கூட வியக்கத்தக்க சிங்கள வசன நடையிலே இடை இடையே நகைச்சுவை யான பழமொழிகளையும் சொல்லித் தன்வயம் ஈர்க்கும் வகையிலே உரையாற் றும் திறமை பெற்றவர்.

காலி மாநகரின் உடுகம என்னும் பட்டி னத்தில் ஏறக்குறைய அரைநூற்றாண்டு களுக்கு மேலாக வர்த்தகத்தில் நீதிக்கு விரோதமாய் நிதி சேர்க்கும் வழக்கம் அறவே அற்றவராக ஈடுபட்டிருந்ததுடன் தனது வாழ்க்கையில் இறைவன் தொண்டே இனிய தொண்டென்ற குறிக்கோளுடன் இருபது மைல் தூரத்தில் இருந்து காலி மாநகரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத் திருப் பணிகளுக்கு நிதி உதவி செய்தமையும் ஒவ் வொரு விசேட தினங்களில் பங்குபற்றிய மையும் அவரின் இறைபக்தியை வெளிக் காட்டியது. அத்தோடு ஆலய பரிபாலன சபையின் நீண்டகால உறுப்பினராகவும் பதினைந்து வருடங்களுக்கு மேலாக உப தலைவராகவும் இடைக்காலங்களில் தலை வராகவும் கடமையாற்றியமை தென் னிலங்கை இந்து பக்தர்களால் இவருக்கு வழங்கிய கௌரவமே.

"இல்லறமல்லது நல்லறமன்று" என் னும் ஔவையார் வாக்கு முன்னின் றுணர்த்த தாய்மாமன் குன்றாப்புகழுடைய குழந்தைவேலரின் இரண்டாவது மகள் பெண்ணுக்கணிகலமாய் பேரழகுக்கோரு ருவாய் விளங்கிய சின்னம்மாவைத் திரு மணம் செய்து வாழ்ந்த இல்லற வாழ்வு உலகம் போற்றும் நல்லற வாழ்வாய் விளங்கியது. "பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை ஆமாகில் எத்தானும் கூடி வாழலாம்" என்றார் பட்டினத்தடிகள்.

கருத்தொருமித்த குடும்பம். இல்லற ஞானிக்கேற்ற தர்மபத்தினி. முகத்தில் இரண்டு கண்கள் இருந்தாலும் இரண்டும் ஒரு பொருளையே நோக்குவது போல், ஒத்தமன ஒருமைப்பாட்டுடன் வாழ்ந்த குடும்பம். பெற்ற புத்திரர்கள் மூவர். எழுது வினைஞராகவும் வணிகராகவும் கிராம அபிவிருத்தி உத்தியோகத்தராகவும் தந்தையின் சால்புடன் வாழும் மக்கட் செல்வங்களும் அவர்களின் வழிவந்த பேரப்பிள்ளைகள். பூட்டப்பிள்ளைகளும் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் சிறப்பாக இருப்பதும் அவர் செய்த புண்ணியமே.

இவர் வேலணையில் நிற்கும் காலங்களில் ஊரில் இருக்கும் பெரியோர்கள், உறவினர்கள் வீடுகளுக்குச் சென்று நலம் விசாரித்து வருவது இவருடைய பண்பை பறைசாற்றும்.

இல்லற வாழ்வின் துறவறங் கண்ட மெய்ப்பொருள் உணர்ந்த மேன்மையாளர், அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் என்னும் மனக்குற்றங்கள் இல்லாத அறப்பண்பாளர்.





# தொழிலதிபர்கள்

# திரு. க. சி. முத்துத்தம்பி

## திரு. க. நவரத்தினம்

திரு. க. சி. முத்துத்தம்பி அவர்கள் 1912 ஆம் வருடம் சித்திரை மாதம் நான்காம் திகதி வேலணை மண்ணில் திருவருள் கைகூடி சின்னையா அன்னப்பிள்ளை தம்பதிகளின் இரண்டாவது மகனாக வந் துதித்தார். இவருடன் உடன் பிறந்தவர்கள் இரு ஆண்பிள்ளைகளும் ஒரு பெண்ணும் ஆவர். இவர் தனது ஆரம்பக் கல்வியையும் இடைநிலைக் கல்வியையும் வேலணை சைவப் பிரகாச வித்தியாலயத்தில் பெற் றார். ஆரம்பத்தில் தாயின் அரவணைப் பிலும் தந்தையின் வழிகாட்டலிலும் வளர்ந்து வந்த இவர் குடும்ப பொருளாதார நிலை மை காரணமாக தனது பதினெட்டு வய தில் கொழும்பு சென்று கொம்பனித் தெரு வில் ஒரு நிறுவனத்தில் சாதாரண ஊழிய ராக தொழில் பார்த்து வந்தார். அவ் வேளையில் தம் பெற்றோர் ஒப்புதலுடன் 'பிள்ளையார்' கந்தையா தெய்வானை தம் பதிகளின் மூத்தமகள் செல்லம்மாவை மணம் முடித்தார். இவர்கள் சிறப்பாக வாழ்க்கை நடாத்தி வந்தனர். 1945 ஆம் ஆண்டளவில் கோட்டையில் காகில்ஸ், மில் லர்ஸ் நிறுவனங்களுக்கு அண்மித்தாக தனக்கு சொந்தமாக ஒரு நிறுவனத்தை ஸ்தாபித்தார். அதில் தனது சகோதரர் களையும் மனைவியின் சகோதரர்களையும் இணைத்து சிறப்பாக நடாத்தி வந்தார். தனது தொழிலில் கண்ணும் கருத்துமாக இருந்து மிக முயற்சியுடையவராக உழைத்து அந்நிறுவனத்தை மிக இலாபம் மிக்கதாக கொண்டுவந்தார். சிறு நிறுவனமாயிருப் பினும் பெரும் தொகை வியாபாரம் நடை பெற்றமைக்கு அவரின் கடின உழைப்பே காரணமாகும். காலை 6 மணிக்கு வேலை தொடங்கினால் மாலை 6 மணி வரை

தொழிலிலே முழு மூச்சாக இருந்து செயற்பட்டார். சிறந்த நிர்வாகியாகவும் நேர்மையாளனாகவும் விளங்கினார். அதிகம் கதைக்க மட்டார். மற்றையோருக்கு முன் மாதிரியாக இருந்ததால் அவரது ஊழியர்களும் அவ்வாறே நடந்து கொண்டனர். சிறிது காலத்தின் பின் அவரது சகோதரர்கள் தனித்தனியே தமக்கென நிறுவனங்களை ஸ்தாபித்து சிறப்பாக வாழ்ந்து வருகின்றனர்.

இவருக்கு 3 ஆண் பிள்ளைகளும் 4 பெண் பிள்ளைகளும் உள்ளனர். அவர்கள் யாழ்ப்பாணத்தில் பிரபல பாடசாலைகளில் கல்வி கற்றனர். பெண் பிள்ளைகள் மணம் முடித்து சிறப்பாக வாழ்ந்து வருகின்றனர். ஆண்பிள்ளைகள் படித்தபின் தந்தையுடன் சேர்ந்து அவரது தொழிலில் உதவி வந்தனர். பின் அவர்களும் மணம் முடித்து சிறப்பாக வாழ்ந்து வருகின்றனர். முத்துத்தம்பி அவர்கள் வேலணையில் பணக்கார முத்துத்தம்பி என்று எல்லோரும் கூறுமளவிற்கு தனது தொழிலில் சிறந்த வருமானம் ஈட்டி வந்தார். மூத்தமகன் சண்முகலிங்கத்துக்கு கொள்ளுப்பிட்டியில் நவீன சுப்பர் மார்கட் ஸ்தாபிப்பதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து ஸ்தாபனத்தை நிறுவிக் கொடுத்தார். மற்றைய பிள்ளைகளுக்கும் அவ்வாறே கோட்டையில் தனித்தனி ஸ்தாபனங்கள் உருவாக்குவதற்கு உதவியளித்தார்.

இவர் பெருங்குளம் முத்துமாரியம்மனில் அளவிலாப் பக்தி கொண்டவர். அவரது மனைவியும் சிறந்த ஒரு பக்தை ஆவார். இருவரும் ஒரு முகமாய் ஒரு மனதாய் மாரியம்மனின் திருப்பணிகளில் ஈடுபட்டு வந்தனர். அம்பாள் வீதி வலம் வரும் காட்சியிலேயே இருவரும் இலயித்திருப்பர். அலங்கார ரூபியாய் வீதிவலம் வரும் அம்பிகையின் தரிசனத்தை தம்மைப் போலவே திரண்டு வரும் எல்லா அடியார்களும் குழந்தைகளும் கண்டு அருள் பெற வேண்டுமென்ற இல்லாளின் வேண்டுகோளையும் அவ்வப்போது அவர் நிறைவேற்றி வந்தார்.

அம்பாளுக்குப் பட்டுக்குடை, சாமரை, வெள்ளித்திருவாசி, கயிலாய வாகனம் என்பவற்றை அளித்து, அவள் பவனிவரும் கண்கொள்ளாக் காட்சியை கண்டும் மக்களின் "அரோகரா" கோஷத்தையும் கேட்டும் இன்புற்றனர். இதனுடன் திருப்தியுறாது மார்கழி மாதத்தில் வரும் திருவெம்பாவையை சில வருடங்கள் பெருவிழாவாக செய்தனர்.

கடல்போல் பெருகியிருக்கும் பெருங்குளத்தில் அம்பாள் கப்பலில் வருவது போன்றதொரு காட்சியை அமைத்து, படகில் மின்னொளி அலங்காரத்துடன் பெருங்குளத்திலும் திருக்கேணியிலும் பௌர்ணமி நிலவில் அம்பாள் வலம் வரும் அற்புத காட்சியைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் மல்க அம்பாளை வணங்கிய காட்சி இன்னும் என் நெஞ்சை விட்டகலாது உள்ளது.

பெற்றோர் விட்டுச் சென்ற திருப்பணிகளை மூத்தமகன் சண்முகலிங்கம் தொடர்வதற்கு பலகாலமாக எண்ணியும் நாட்டின் அரசியல், யுத்த நெருக்கடி காரணமாக செய்ய முடியவில்லை. தற்போது அம்பிகை அடியார்களின் ஒத்துழைப்போடு இராஜ கோபுரம் அமைக்க அடிக்கல் நாட்டியுள்ளனர். அதற்கு இவர் தாராளமாக உதவியுள்ளார். மேலும் உதவிக் கொண்டிருக்கின்றார்.

முத்துத்தம்பியின் இல்லாள் செல்லம்மா உற்றார் உறவினர் வீடுகளில் நடைபெறும் நன்மை தீமைகளில் முன்னின்று

தன்னாலான அனைத்து உதவிகளையும் செய்பவர். திருமண வீடுகளில் முன்னின்று உதவிபுரிவார். கஷ்டப்பட்டவர்களின் திரு மண வைபவங்களுக்கு தேவையான நிதியை கொடுத்து உதவுபவர். உறவினர், கஷ்டப் பட்டவர்களின் இல்லங்களில் மரணம் நிகழ்ந் தால் முதலாவதாக அவர்களுக்கு உணவு அளிப்பவரும் செல்லம்மாவாகவே இருப் பார். அவ்வளவு சிறந்த பண்பாடு மிக்க இல்லாளாக செல்லம்மா இருந்தார்.

ஊரிலுள்ள பாடசாலைகளில் கட்டிடப் பணிகள், விளையாட்டுப் போட்டிகளுக்கு பரிசளிப்பதற்கு கேடயங்கள், சனசமூக நிலை யங்களுக்கு நிதியுதவி என்பனவும் இவர்கள் தாராளமாக செய்துள்ளனர்.

இவர்கள் செய்த புண்ணியத்தின் பல னாக இவர்களது பிள்ளைகள் இன்று வெளி நாடுகளிலும் உள்ளூரிலும் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.





# தொழிலதிபர்கள்

## திரு. பொன்னையா முத்துத்தம்பி அவர்கள்

### காலி முத்துத்தம்பி அன் சன்ஸ் உரிமையாளர்

திரு. ச. மாணிக்கவாசகர் - ஆசிரியர்

இவர் வேலணையின் பிரபல தென்னிலங்கை வியாபாரிகளுள் ஒருவர். இவர் காலி மாநகரில் சிறந்த புகையிலை வியாபாரியாகத் திகழ்ந்தார். காலியில் இவர் பி. எம். முதலாளியென்று பெயர் பெற்றவர். இவரொரு குடும்ப விளக்காகவும் திருப்பணிகள் செய்பவராகவும் தொழில் முயற்சி கொடுப்பவராகவும் திகழ்ந்தார்.

அமரர் பொன்னையா முத்துத்தம்பி, பொன்னயருக்கும் அன்னப்பிள்ளைக்கும் 30. 06. 1920 இல் பிள்ளையாகப் பிறந்தார். இவருக்குத் தங்கம்மா, இராசம்மா, பூரணம்மா என 3 சகோதரிகள் இருந்தனர். இவர் தனது இளமைக்காலக் கல்வியை வேலணை மேற்கு நடராசா வித்தியாசாலையில் கற்றார். இளவயதில் தந்தையாரை இழந்ததால் கல்வியை நிறுத்தி தங்களது நிலபுலத்தில் புகையிலைச் செய்கையை மேற்கொண்டு, பின்னர் இதிலிருந்து புகையிலை வியாபாரத்தை மேற்கொள்ளலாயினார். இவர் வேலணை மேற்கூரைச் சேர்ந்த திருவாளர் கந்தையா சுப்பிரமணியத்தின் மகள் சிவயோகத்தை விவாகம் செய்தார். இவர்கள் ஏழு நன்மக்களைப் பெற்றனர். நால்வர் மகன்மார். மூவர் மகள்மார். இன்று இவர்கள் யாவரும் பெற்றோரின் சிறந்த வளர்ப்பால் நல்ல நிலையில் வாழ்கின்றார்கள்.

அமரர் முத்துத்தம்பி காலி சிவன் கோயில் மீனாட்சி சுந்தரேசர், வேலணை மேற்கு பெரியபுலம் மகா கணபதிப் பிள்ளையார், புளியங்கூடல் இந்தன்முத்து விநாயகர் ஆகிய ஆலயங்களில் பெரிய திருப்பணிகள் பலவற்றைச் செய்து வழிபாட்டுத் தலங்களை முன்னேற்றியவர். திருப்பணி வேலைகளுடன் திருத்தலங்

களின் பரிபாலன சபையில் பங்குகொண்டு கோயில் நிர்வாகம், முகாமைத்துவத் துறைகளில் பங்காற்றியுள்ளார். இவர்தான் தேடிய தேட்டத்தில் உற்றார், உறவினர் கிராமத்தவர்களின் நன்மை தீமைகளில் உதவிசெய்தும் தொழில்முனைவோருக்கும் உதவிசெய்தும் வந்துள்ளார். இவரது உதவியால் பலர் தங்கள் வாழ்வுக்கு ஆதாரமாகத் தொழில்களைத் தேடிக்கொண்டனர். மேலும் சிறு தொகையினர் இவரது நிலபுலங்களில் வர்த்தக நிறுவனத்தில் தொழில்பெற்றனர். தனக்குக் கீழ் வேலை செய்தவர்களை நன்கு கவனித்து அவர்களின் வாழ்வுக்கு வழிகாட்டியாகவும் காவலனாகவும் திகழ்ந்தார்.

முத்துத்தம்பி ஒரு சிறந்தசெயல்வீரர்; அதிகளவாகப் பேச மாட்டார். செயலில் கண்ணுங்கருத்துமாக இருப்பார். குறுக்கு வழியில் சம்பாதிக்க மாட்டார்; நேர்மையான முறையில் கடும் உழைப்பை விரும்பும் ஒருவர். தன்னம்பிக்கையுடையவர். சாதாரண விவசாய குடும்பமாக விளங்கியது இவர்களது குடும்பம். பொன்னையா புளியங்கூடல் கிராமத்தில் பெருமளவு நிலபுலங்களை உடைய விவசாயியாக விளங்கினார். புளியங்கூடல் கிராமத்தில் பலருக்கும் உதவி வரும் ஒரு குடும்பமாக இவர்களது குடும்பம் விளங்கியது. புளியங்கூடல் மகாமாரி அம்பாள் மீது அளவிலாத பக்தி கொண்டவர். இவருக்கு ஒரே ஆண் பிள்ளையான முத்துத்தம்பி அவர்கள் வேலணை மேற்கு நடராஜ வித்தியாசாலையில் (இராசா வாத்தியார் பள்ளிக்கூடம்) சைவப் பண்பாட்டுடன் கூடிய கல்வியை நல்லாசிரியர்களிடம் பெற்றுக்கொண்டார். இளம் வயதிலே சமயப் பண்பாட்டு பழக்க வழக்கங்களுடன் தெய்வ நம்பிக்கையும் கொண்டவராக விளங்கினார்.

தந்தையார் இளம் வயதிலேயே காலமாகியதால் மேற்படிப்பை இடையில் நிறுத்திக்கொண்டார். புளியங்கூடல் இந்தன் முத்து விநாயகர் ஆலயத்தின் அண்மையில் உள்ள தோட்டம் இவரது முதுசொத்தாகும். இந்ததோட்ட நிலத்தை ஆதாரமாகக் கொண்டு இவர் பாரம்பரியமாக செய்து வந்த விவசாய தொழிலை மேற்கொண்டார். இதன்மூலம் நல்ல வருமானத்தையும் பெற்றார். தமது தோட்டத்தில் விளைந்த புகையிலையை ஆதாரமாகக் கொண்டு புகையிலை வியாபாரத்தையும் ஆரம்பித்து நடத்தி வந்தார்.

காலி மாநகரத்தில் முத்துத்தம்பி அன்சன் என்ற பிரபல புகையிலை வர்த்தக நிலையத்தை ஆரம்பித்து வர்த்தகத் துறையில் பிரபல்யம் பெற்று விளங்கினார். அந்த நகரத்தில் முக்கியம் பெற்ற ஒருவராக விளங்கினார். காலி மாநகரில் உள்ள மீனாட்சி சுந்தரேசர் ஆலயத்திற்கும் பலவகையில் உதவியவர். காலி சிவன் கோயிலில் அமைந்துள்ள கொடித்தம்பம் இவரால் உபயமாக வழங்கப்பட்டதாகும்.

நல்லாசிரியர்களும் பெற்றோர்களும் வழங்கிய நல்லறிவினாலும் திருவருளும் கூட இவர்களது இல்வாழ்வு நல்வாழ்வாக அமைந்து சிறப்புப் பெற்றது. இந்த நல்லறத்தின் பயனாக இராஜேஸ்வரி, சண்முகராஜா, மகேந்திரன், மகேஸ்வரி, செல்வராசா, நாகேஸ்வரி, யோகராஜா, ஆகிய நன்மக்கட் பேறு கிடைத்தது.

இவர்களும் நல்லவர்களாக வல்லவர்களாக எல்லோருக்கும் உதவுபவர்களாக வளர்ந்து தமது குடும்பப் பெருமைகளையும் சிறப்புகளையும் பேணி சமூகத்தில் கண்ணியம் மிக்கவர்களாக வாழ்கின்றார்கள். தங்களது பிள்ளைகள் அத்தனை ·பேரை

யும் நன்மக்களாக வளர்த்தெடுத்து பெருமைதரும் சான்றோர்களாக இவர் களை ஆக்கினார்கள்.

புளியங்கூடல், வேலணை ஆகிய கிராமங் களை ஒன்றிணைக்கும் ஒரு குடும்பமாக இவரது குடும்பம் விளங்கியது. விவசாயம், வர்த்தகம் ஆகிய இரண்டு துறைகளிலும் தமது முயற்சிகளை மேற்கொண்டு அதன் மூலம் பொருளீட்டி தான தருமங்களிலும் ஆலயத் திருப்பணிகளிலும் தமது பங் களிப்பைச் செய்து வந்தார்கள்.

"அருள் என்னும் அன்பின் குழவிபொருள்
என்றும்
செல்வச் செவிலியால் உண்டு"

என்பது வான்புகழ் வள்ளுவன் வாக் காகும். பொருள் வளத்துடன் அருள் வளமும் சேர்ந்ததால் அது மேலும் சிறப் பைக் கொடுத்தது. தமது தந்தையார் செய்த பணியை தொடர்ந்தார்.

புளியங்கூடல் மகாமாரி அம்பாளின் தேர்த்திருவிழாவை பல வருடங்களாக பக்தி சிரத்தையுடன் சிறப்புற நடத்தி வந்தார். தேரின் மேல் வேலையை அழகுற அமைத்து உதவி அம்பாள் அலங்கார மாக அழகு மிளிரத் தேரில் வீதி உலா வரும் அழகுக் காட்சியைக் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தார். .

இதேபோல வேலணை மேற்கு பெரிய புலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயத் தின் மகா மண்டபத்தின் மேற்பகுதியை கொங்கிறீற் கூரை அமைத்து பாதுகாப் பான மண்டபமாக அழகுற அமைத்து திருப்பணியில் மகிழ்ந்தவர். பிள்ளையார் மீது அளவில்லாத பக்தி கொண்டவர். ஒரு முறை எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. ஊரில் நீண்ட நாளாக மழை இன்மையால் கோயில் மகோற்சவம் தடைப்படும் நிலை ஏற்பட்டது. தண்ணீர் கிணறுகளில் இன்மை யால் திருவிழாவைச் செய்யமுடியாது என பலர் கூறியபோது திரு. பொ. முத்துத்தம்பி அவர்கள் திரு. சரவணமுத்து (பரிபாலன சபை தலைவர்) திரு. அ. கணபதிப்பிள்ளை (பிள்ளைகுட்டியார்) ஆகியோர் ஆலயத்தில் கூடி என்ன செய்வது என்று ஆலோசனை செய்தனர். முடிவில் கிணறுகளை மேலும் ஆழமாக்கி நீரைப்பெற்று அவ்வருடம் திருவிழாவை சிறப்பாக நடத்தினார்கள்.

மேலும் புளியங்கூடல் இந்தன்முத்து விநாயகர் ஆலயத்தின் திருப்பணி வேலை களிலும் தமது பங்களிப்பை நல்கியவர். ஆலய தூபி வேலையில் பெரும்பங்கு கொண்டு அதனை நிறைவேற்றி வைத்தார். இவ்வாறு அறப்பணிகளிலும் இறைவன் திருப்பணிகளிலும் ஈடுபட்டதோடு மாத்திர மன்றி அவர்களுடைய பிள்ளைகளையும் தொடர்ந்தும் இன்று வரையும் இப்பணி களில் ஈடுபடுவதற்கு அவர்களை ஆற்றுப் படுத்தி வழிநடத்தினார்.

ஆலய பணிகளோடு மாத்திரமன்றி சமூகப் பணியிலும் பெரும் பங்கு கொண்ட வர். இவரது விவசாய வர்த்தக துறை களில் இக்கிராமத்தவர்கள் பலர் வேலை வாய்ப்பைப் பெற்றனர். பல குடும்பங் களுக்கு வாழ்வுகொடுக்கும் குடும்பமாக இவரது குடும்பம் விளங்கியது.

அத்துடன் ஊரில் பல குடும்பங்களின் பணத்தேவையை பூர்த்திசெய்யும் குடும்ப மாகவும் விளங்கியது. இவரை நாடிச் சென் றால் தப்பாமல் உதவி கிடைக்கும் என் பது எல்லோரது எண்ணமுமாகும். கிரா மத்தவர்கள் எல்லோரும் மிக்க அன்புடன் "முத்தர் குடும்பம்" என பெருமையாக சொல்வார்கள். அந்தளவுக்கு கிராமத்தின்

அத்தனை குடும்பங்களுக்கும் உதவுப வராக திகழ்ந்தவர். தன்னை சேர்ந்த வர்களை வாழவைத்து தாமும் வாழ்ந்தவர் முத்துத்தம்பி அவர்கள். பிறர் துயர் துடைத்து வாழ்ந்தார். தக்கன, தகாதன தெரிந்து நடந்து வந்தவர். அருளுள்ளம் படைத்தவராகவே அவர் இறுதிவரை மக்கள் அனைவருக்கும் வேண்டியவராக விளங்கினார். அதனால் மனிதருள் மாணிக்கமாய்த் திகழ்ந்தார்.

அளவாகப் பேசி எதையும் சிந்தித்து நிதானமாக நடந்து தெய்வ நம்பிக்கையுடன் வாழ்ந்த இவர் பிள்ளைகளும் அவ்வண்ணமே வாழ வழிகாட்டினார். தமது பிள்ளைகளை உயர்கல்வி வரை கற்கச் செய்து உத்தியோகத்திலும் விவசாயத்திலும் வியாபாரத்திலும் ஈடுபடுத்தி ஆக்கபூர்வமான எதிர்கால வாழ்வுக்கு வழியமைத்து உதவினார். பெண்கள் மூவருக்கும் கல்விச் செல்வத்துடனான குணநலன்கள் பொருந்தப் பெற்ற வரன்களை தேர்ந்தெடுத்துக் கொடுத்து அவர்கள் நல்வாழ்வு கண்டு மகிழ்ந்தார். இவருடைய குடும்பம் இன்று பல்வேறு சிறப்புக்களையும் பெற்று தந்தையார் காட்டிய வழியில் வாழ்ந்து பெருமை சேர்ப்பவர்களாக விளங்குகிறார்கள்.

முத்துத்தம்பி அவர்கள் நல்வழியில் முயன்று பொருளை ஈட்டினார். அப்பொருளை பல நல்ல வழிகளில் செலவு செய்தார். அவர் அருள் வழியில் செலவு செய்த பொருள் அவருடைய ஆத்மாவுக்கும் உலகியல் வாழ்வுக்கும் உதவியது. ஏறக்குறைய 65 வருடங்கள் இவ்வுலகில் வாழ்ந்து 26. 02. 1985 இல் இவ்வுலக வாழ்வைத் துறந்து அமரத்துவமடைந்தார். இறுதிவரை கண்ணியம் மிக்க ஒரு கனவானாக சமூகத்தில் வாழ்ந்து மற்றவர்களையும் வாழவைத்தார். இவரது வாழ்க்கை எல்லோருக்கும் ஒரு வழி காட்டியாகும்.





# தொழிலதிபர்கள்

# திரு. கந்தையா சிவசரணம்

திரு. கை. ஜெகதீசன்

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் வேலணையில் பிறந்து இளமைப் பருவத்திலே தொழில் புரிய தென்னிலங்கை சென்று இலங்கை சுதந்திரமடைந்த காலப் பகுதியிலே கொழும்பிலே தனித்துவமாக பிரபல்யம் பெற்று விளங்கிய வர்த்தகர் அமரர் கந்தையா சிவசரணம். அவர்களின் ஊடாக ஒரு காலகட்டத்தில் வேலணையில் வாழ்ந்த மக்கள் கூட்டத்தின் ஒரு சாராரின் வாழ்வியல் முறைகளை நாம் சற்று நோக்கலாம்.

சிவசரணம் அவர்கள் ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்து ஏழாம் ஆண்டு மார்கழி மாதம் இருபத்து ஏழாம் திகதி வேலணையில் பிறந்தார். இக்காலப் பகுதியில் வேலணையானது அரச நிர்வாக வசதிக்காக மேற்கென்றும் கிழக்கென்றும் பிரிக்கப்பட்டிருந்தது. பின்னர் இது மேற்கு, கிழக்கு, வடக்கு, தெற்கு எனப் பிரிக்கப்பட்டது. வேலணை அடங்கிலும் வாழ்ந்த மக்கள் கூட்டத்தினரின் பிரதான தொழிலாக விவசாயமே திகழ்ந்தது. ("வேலணை சரவணை வெள்ளாமை எப்படி" என்ற மரபு வழி சொற்றொடர் தற்போதும் நிலவி வருகின்றது.) கிழக்குத் தெற்குக் கடற்கரைப் பிரதேசங்களையண்டி மீனவக் குடும்பங்களும் காணப்பட்டன.

கொல்லர், தச்சர் போன்ற கைவினைக் கலைஞர்களும் கணிசமான அளவு இப்பிரதேசத்தில் வாழ்ந்து வந்தனர். ஆங்கிலேயர் ஆட்சி நிலவிய காலப் பகுதியிலே இப்பிரதேசத்தில் வாழ்ந்தவர்களில் சிலர் சிறு வியாபாரம் செய்தல் பொருட்டும் இப்பிரதேசத்தில் விளைந்த புகையிலையை விற்கும் பொருட்டும் தென் இலங்கைக்குச்

சென்றனர். பெரும்பாலும் அனைத்து வர்த்தகர்களும் தங்கள் குடும்பங்களை தென்னிலங்கைக்கு அழைத்துச் செல்லவில்லை. அங்கே பொருளீட்டி வந்து வேலணையிலேயே சீரோடும் சிறப்போடும் வாழ்ந்து வந்தனர். இவ்வர்த்தகர்களின் செல்வச் செழிப்பினைக் கண்டு உந்தப்பட்ட சிவசரணம் அவர்களும் தானும் அப்படியான தொழிலில் ஈடுபடவிழைந்தார்.

இவருடைய தந்தையார் ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்தபோதும் உள்ளூரிலே சிறு வியாபாரியாகத் திகழ்ந்தார். புடைவைகள் மற்றும் அழகுசாதனப் பொருட்களை அந்நாளில் பிரபலமானதாக விளங்கிய "வழி வியாபாரம்" (போக்குவரத்து வசதி, வீதி வசதிகள் குறைந்த நாட்களில் இவ் வியாபாரமே அமோகமாக நடைபெற்றது. இதில் சீனர்கள், சோனகர்களும் முதன்மையாக ஈடுபட்டதாக மரபு வழியாக அறியக் கிடக்கிறது) செய்து வந்தவர்.

அவர் வழி வந்த தனயன் சிவசரணமும் வியாபாரம் செய்தற் பொருட்டு கொழும்பு சென்று தனது உறவினர் ஒருவரின் பழக்கடையில் சிப்பந்தியாகத் தொழில் புரிந்தார். அக்காலப் பகுதியில் கொழும்பு பிரதான வீதியில் இருந்த பல பழக்கடைகள் (பெட்டிக் கடைகள்) தமிழருக்குச் சொந்தமாகக் காணப்பட்டன. சிவசரணம் அவர்கள் சில காலத்திற்குள்ளேயே தனக்கென ஓர் தனியான பழக் கடையை பிரதான வீதியில் அமைத்து திறம்பட நடத்திக் கொண்டிருந்தார்.

அத்தருணத்தில் (1954) சிவசரணம் அவர்களுக்கு அவரது வாழ்க்கைத் துணைவியாக அவ்வூரைச் சேர்ந்தவரும் அக்காலத்திலே கொழும்பில் வர்த்தகராகத் திகழ்ந்த கணபதிப்பிள்ளையின் மூத்தமகள் குகனேஸ்வரியை அவரது பெற்றோர் நிச்சயித்துக் கொண்டனர். சிவசரணமவர்களுடைய சகோதரரும், மைத்துனர்களும் வர்த்தகம் செய்பவர்களாகவே காணப்பட்டனர்.

திருமணத்தின் பின்பு தனது மைத்துனருடன் பங்காளியாகி கொழும்பிலே பல சரக்குக் கடையொன்றை நடாத்திய அமரர் சிவரணம் அவர்கள் சில காலத்தின் பின் தனது தம்பிமாரையும் சேர்த்து புகழ் பெற்ற "லங்கா ஸ்ரோர்ஸ்" எனும் வியாபார நிறுவனத்தை கொழும்பிலே (தெகிவளை சந்தியில்) நிறுவினார். இவருடைய உழைப்பினதும், திறமையினதும் வெளிப்பாடாக லங்கா ஸ்ரோர்ஸ் திகழ்ந்தது. இந்நிறுவனத்திலே தன்னுடைய உறவினர்கட்கும், ஊரவர்கட்கும், அயலூரவர்கட்கும் எனப் பல பேருக்குத் தொழில் வாய்ப்பை வழங்கினார். தொழிலதிபர் சிவசரணத்தின் ஸ்தாபனத்தில் தொழில் புரிவோர் நல்லொழுக்க சீலர்களாகவும் நாணயம் மிக்க வர்த்தகர்களாகவும் வளர்த்தெடுக்கப்பட்டனர். தற்போது பிரபல்யம் பெற்று விளங்கும் வர்த்தகர் திரு. தி. சீவரத்தினம் அவர்கள் அமரர் சிவசரணத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது "இவரிடம் நான் கற்றுக் கொண்டவை ஏராளம். என்னை வழி நடத்தியவர் இவர். இவரே என் குருநாதர்" எனக் கூறுகின்றார்.

பொதுவாகத் தீவகத்திலே உள்ள சமூக, சமயப் பணிகளுக்கு நிதியுதவி செய்வதில் அப்பிரதேசத்திலே பிறந்து தென்னிலங்கையில் வர்த்தகம் செய்த வர்த்தகர்கள், தொழிலதிபர்கள் முன்னிலையில் திகழ்ந்தனர். அமரர் சிவசரணம் அவர்கள் வேலணை பெரியபுலம் முடிப்பிள்ளையார் ஆலய வளர்ச்சியிலும் அதனை ஒட்டிய

சமூகத்தின் வளர்ச்சியிலும் ஆர்வமிக்கவராகத் திகழ்ந்தார். தனது தந்தையாரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட "தண்ணீர்ப் பந்தல்" சிவத்தொண்டை தனது வாழ் நாளின் இறுதிவரை பேணிவந்தார். முடிப் பிள்ளையார் ஆலயத்திலே நவக்கிரகங் களுக்கான கோவில் அமைத்து கும்பாபிஷேகம் செய்து மகிழ்ந்தார்.

வேலணை மேற்கில் முடிப்பிள்ளையார் கோவிலை அண்டிய மக்கள் சைவ ஆசார சீலர்களாகக் காணப்பட்டனர். சிவசரணம் அவர்கள் தொழில் நிமித்தம் கொழும்பிலே வாழ்ந்தபோதும் ஆசார சீலராக வாழ்ந் தார். பிதிர்க்கடன்களைப் பேணுபவராகக் காணப்பட்டார். எல்லோரிடமும் இன்சொல் பேசி அன்பு பாராட்டி விருந்தளிப்பதில் சிவசரணம் அவர்கள் ஈடிணையற்றவர் என்றே கூறவேண்டும்.

1983 இனக் கலவரத்தின்போது இவருடைய ஸ்தாபனம் முற்றாகவே எரிந்து சாம்பலானது. அதன்பின்னர் யாழ்ப்பாணத் திலே (சுண்டுக்குழியில்) "துவாரகா பார் மசி" என்னும் மருந்தகத்தை தனது சகலன் ஒருவருடன் சேர்ந்து நடாத்தினார். இதன் பின்னர் மீண்டும் கொழும்பு சென்று தனது மகனின் கடை ஒன்றினை நிர்வகித்தார்.

தன்னுடைய பிள்ளைகட்கு உரிய கல்வியை வழங்கி தன்னைப் போன்றே நாணய மிக்க தொழில் அதிபர்களாய் உருவாக்கிய சிவசரணம் அவர்களின் வாழ்வியல் முறை யினூடாக வேலணையில் வாழ்ந்த வாழ்ந்து கொண்டிருக்கின்ற வர்த்தக சமூகமொன் றின் வரலாற்றை நாம் புரிந்துகொள்ளலாம் என எண்ணுகின்றோம்.

அமரர் சிவசரணம் அவர்களின் அன் பால் கவரப்பட்டவர் அவருடைய சம்பந்தி கவிஞர் தில்லைச் சிவன் அவர்கள் சிவசர ணத்தின் மெய்க்கீர்த்தி பற்றிப் பாடிய பாடல்களில் இருந்து இவர் பற்றியும் வேலணை பற்றியும் சில வரிகள்.

சுவர்க்கமோ நரகமோ
சொந்தவூர் பிரிந்தஎமக்கு
எந்தவூர்ஆனால் என்ன
இருக்கும் வரை எனக்கு
தங்குமிடம் கேட்டுத்
தவித்த பொழுதினிலே
இங்கு வாவென்று
எமை அழைத்து இடமளித்து
பொலிசில் பதிந் தெடுத்துப்
புதியவரை விட்டுவந்த
செம்மனத்தான் நல்லன்புச்
சிவசரணம் பற்றியான்
இங்கு உரை செய்தேன்
எல்லோரும் கேட்குகவே!

தள்ளா விளையுளும்
தக்காரும் தாழ்வில்லாச்
செல்வருஞ் சேரச்
செழித்த திருநாடு

சீலமும் கல்வியும்
சேர்ந்த வேலணை மேற்கு
கடலும் கடற்காற்றும்
கடலோடி வரும்பெரிய
படகில் வரும் பொருளும்
பனைகள் தருந் திருவும்
அடவிகளில் வேம்பும்
ஆங்காங்கே நிறைந்துள்ள
புன்செய்யும் புகையிலையும்
பூவரசு வேலிகளும்
எங்கும் பசுமை
இலங்கு கின்றஒரூராம்

அங்கே அருள் பரப்பி
ஆனந்தக் கூத்தாடும்
சிற்பனை வேல்முருகன்
திருத்தனியும் பக்கலிலே
கருங்கற் பொழிந்து
கவின் பெறவே கட்டிவைத்த
பெருங்கோட்டு மும்மதத்து
பேர்யானைப் பிள்ளைமுடிப்
பிள்ளையார் கோயிலயல்
திருமாலுக் கொருகோயில்
திகழ விருட்சம் பலகாவற்
பெருமான் வைரவரை
பேணி வழிபாடுசெய்து
வாழுமிடங்கள் என
வண்ணமுள இவ்வூரே.

ஆசாரம் பக்தி
அடக்கமொடு ஈசற்கு
நேசம் மிகுத்த நல்ல
நெறியினராய் நின்றேத்தி
பூசனைகள் செய்தும்
பொங்கல் இட்டும் நோன்பிருந்தும்
பாசம் வளர்த்துப்
பல நேர்த்திகள் வைத்தும்
போற்றும் மரபினர்கள்
பொன்மனத்தராம் செயற்கு
ஆற்றல் தரவேண்டி
ஆனைமுகன் அருள்வேண்டி
நோற்குந்திறலார்ந்த
நுண்இடையார் வாழ்ஊரே.

ஈழத் திருநாட்டு
எவ்வூர்க்கும் முன்னதாய்
கோலம் விளக்கி
குலம் விளங்கச் சைவ
சீலம் புரிந்து, சிவபூசை
செய்து தினம்
ஞாலக் கலியோட்டும்
நல்லோர்கள் வாழ்ந்ததுவும்
அன்னவரே!
தமிழோ டிசை பாடித்
தண்டமிழை வளர்த்ததுடன்
சைவநெறி புகட்ட
சைவசூக்ம போதினியாம்
செய்தி இதழ்கள் பல
திங்கள் தொறும் வெளியிட்டும்
தெய்வத் தமிழ் வளர்க்க
திருமுறைப் பாராயணமும்
புராணப் படிப்பும்
புகல் அச்சுயந்திரமும்

சைவ ஒளிவிஞ்சும்
சைவப் பிரகாசம்
கல்விக் கழகம் முதல்
கலைதேற நடராச
வித்தியா சாலையும்
விளங்க வைத்து ஆங்காங்கே
குருபூசை மடங்களும்
குருக்கள் வளவுகளும்
சாமியார் சந்நிதிகள்
சமாதிக் கோயில் என்று
பூமி நிறைந்த
புகழூராம் அவ்வூரில்

கந்தையர்வேளும்
சுந்தரம்மா வேற்கண்ணியும்
சந்தித்துக் கொண்ட
தாம்பத்திய வாழ்வினிலே
வந்துதித்த செல்வன்
வண்ணப் பொன் மேனிச்
சுந்தர எழில்சேர்ந்த
சுதனார் சிவசரணம்
அந்தியிலும் சந்தியிலும்
அரனார் கமலபதம்
வந்துதித்துத் தொழும்சைவ
மரபுயர மக்களுள்ளே
பேதம் அறியாத
பெருமனத்தர் இவன் என்று
ஓதும் படிக்கு உயர்ந்தார்
வளர்ந்தாரே.





# தொழிலதிபர்கள்

# திரு. அமிர்தலிங்கம் இராசையா

திருமதி. ஈசு துரைசிங்கம்

அமரர் திரு. அமிர்தலிங்கம் இராசையா அவர்கள் வேலணை கிழக்கில் பிறந்து, கடின உழைப்பு, விடாமுயற்சி, ஊக்கம், தன்னம்பிக்கை என்பவற்றை மூலதனமாகக் கொண்டு உழைத்து தனவந்தனாகி ஹோட்டல் தொழிலில் நிபுணத்துவமான ஒரு நிலையை எட்டியிருந்த வேளை தமது 77ஆவது வயதில் அமரரானார். மனித வாழ்வில் ஓய்வுபெறும் வயது வரும்போது அநேகமானோர் ஓய்வு பெற்றிருப்பார்கள். ஆனால் இவர் இறக்கும் வரை ஓய்ந்து இருந்ததே இல்லை.

இவர் 15. 01. 1925 இல் திரு. அமிர்த லிங்கம் சின்னத்தங்கம் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். இவருக்கு நான்கு சகோதரிகள் இருந்தனர். இளம் வயதிலேயே தந்தையாரை இழந்துவிட்டனர். குடும்பப் பொறுப்பு ஒரே மகனாகிய இவரிடமே வந்துவிட்டது. ஆரம்பக் கல்வியை முடித்து விட்டு இவர் தொழில் தேடி கொழும்புக்குச் சென்றார். கொழும்பில் வியாபாரத்தில் ஈடுபட்டு திறமையுடன் விளங்கினார். கொழும்பில் பல வருடங்கள் ஜெயலட்சுமி உணவகம், தவளகிரி உணவகம், வூட்லண்ட்ஸ் உணவகம் ஆகியவற்றைத் திறம்பட நடாத்தி தரமான உணவு வகைகளை வழங்கி, சிறந்த சுத்தமான ஹோட்டல் என்று பரிசுகள் பெற்றுக் கொண்டதோடல்லாமல் பெரும் தனவந்தராகவும் விளங்கினார். தனது சகோதரிகள் நால்வருக்கும் வீடுகள் அமைத்துக் கொடுத்து திருமணமும் செய்து வைத்து, தாயாரையும் இறுதி வரை வைத்துக் காப்பாற்றினார்.

இவரின் அயலில் வாழ்ந்த திரு. வை. நாகலிங்கம் பராசக்தி தம்பதியரின் இரண்டாவது புத்திரி பரமேஸ்வரியை திருமணம்

செய்து சிறப்பாக வாழ்ந்தார். இவருக்கு சகுந்தலா, ஆனந்தி, ஜெயந்தி, வசந்தி என்ற நான்கு பெண் பிள்ளைகளும் தவராஜா, ராஜ்குமார் என்ற இரு ஆண்பிள்ளைகளும் பிறந்தனர். எல்லோருக்கும் நன்கு கல்வி புகட்டி சிறப்பாக வாழ வழி அமைத்துக் கொடுத்தார்.

இவருடைய கடைசி 22 வருடகாலம் யாழ்ப்பாணம் "மலாயன் கபே" யிலேயே கழிந்தது. யாழ் நகரில் தரம்மிக்க சுத்த மான ஹோட்டல் இது. எந்நேரமும் மக்கள் கூட்டம் நிரம்பி வழியும். இதற்கு தனியே இவரே காரணமாவார். இவரது சிறந்த நிர்வாகம், எந்நேரமும் சுறுசுறுப்பாக இயங் கும் தன்மை என்பன எல்லோரையும் கவர்ந்தன. சந்தைக் கொள்வனவு தொடக் கம் சமையல் வேலை, சர்வர் வேலை, கணக்கு மேசை என்று எல்லாவிடயங்களி லும் இவரைக் காணலாம். தான் சுத்தமாக இருப்பதுடன் தனது ஹோட்டலையும் சுத்த மாக வைத்திருப்பதில் மிக கூடிய கவனம் செலுத்தி வந்துள்ளார். சமையலுக்குத் தேவையான மரக்கறிகள் வாங்கும்போது தரமானதையே வாங்குவார். பழுதடைந் தவைகளையோ அழுகியவைகளையோ வாங்கவே மாட்டார். சமையல் வேலைக ளிலும் தான் பங்குபற்றி சகல பாகங்களும் செய்து கொடுப்பார். எல்லா இடங்களிலும் சுத்தத்திற்கு முதலிடம் கொடுப்பார். பல கார வகைகளும் பழையது எதையும் பரிமாற அனுமதிக்க மாட்டார். எல்லாம் புதியவையே பரிமாறுவார். வாழையிலை கூட எந்நாளும் புதிதாகவே வாங்கி பயன் படுத்துவார். ஹோட்டல் ஊழியர்களும் சுத்தமாக இருக்கவும், சுத்தமான ஆடை அணிவதற்கும் ஊக்குவிப்பார். சமைய லறை, மலசல கூடம் என்பனவும் சுத்தமா னதாகவே இருக்கும்படி கவனித்துக் கொள்வார். இவ்வாறு அனைத்து விடயங் களிலும் சுத்தத்திற்கும் தரத்திற்கும் முன்னு ரிமை கொடுப்பவராக விளங்கினார். இக் காரணங்களினால் இவர் மக்கள் மத்தியில் மதிப்பு மிக்க, திறமை மிக்க தொழிலதிப ராக திகழ்ந்தார்.

யாழ். நகரத்திலுள்ள பல பாட சாலை களுக்கு பரிசளிப்பு விழாக்கள், விளையாட் டுப் போட்டிகள் கட்டிட வேலைகள் என்ப வற்றிற்காக தாராளமாக நிதியுதவி செய் துள்ளார். அத்துடன் தமிழரசுக் கட்சியின் சகலவிதமான போராட்டங்களிலும் பங்கு பற்றியதுடன் தன்னாலான சகல உதவி களையும் செய்து ஒரு கொள்கை வாதியாக வும் விளங்கியவர்.

இக்காலத்தில் படிப்பின் மூலம் பெறும் பட்டறிவுகளை இவர் தனது அனுபவத்தி னாலும் நுண்மதியினாலும் பெற்று சிறந்த ஹோட்டல் முதலாளியாக 42 வருடங் களுக்கு மேலாக உழைத்து உழைக்கும் போதே நோயுற்று சில நாட்கள் வைத்திய சாலையில் இருந்து பின் மரணமானார். கடைசிக்காலம் வரை இவரிடமிருந்த தன் னம்பிக்கை, விடாமுயற்சி, தோல்வியைக் கண்டு துவண்டுவிடாத மனநிலை என்பன மாறாமலேயே காணப்பட்டது. தனது குடும் பத்தை சிறப்பாக வாழவைத்தமையும் 77 வயதிலும் சிறப்பாகவும் சுறுசுறுப்பாகவும் இயங்கியமையும் பாராட்டப்பட வேண்டிய விடயங்களே.





## தொழிலதிபர்கள்

# திரு. வாதவூர் அருணகிரி

**(26 - 04 - 1927 - 16 - 02 - 1987)**

பேராசிரியர் ச. சத்தியசீலன், பல்கலைக்கழகம் - யாழ்ப்பாணம்

**சை**வமும் தமிழும் செழித் தோங்கும் வேலணைக் கிராமத்தின் மேற்கில் மரபுவழி விவசாயத்தைக் குலத்தொழிலாக மேற்கொண்டு வரும் குடும்பத்தில் வாதவூர் அன்னப்பிள்ளை தம்பதியரின் மூத்த மகனாக தவமணியாம் திரு. அருணகிரி அவர்கள் 1927 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26 ஆம் திகதி பிறந்தார். அன்னாரின் வாழ்க்கை வரலாறு மற்றையோருக்கு ஒரு உதாரண மாகவும் வேலணை கிராமத்திற்கும் அவர் தொழில் புரிந்த வறக்காபொலவிற்கும் மிகப் பயனுள்ளதாக அமைந்திருந்தது என்பது மிகையானதல்ல.

இளமையில் வேலணை மேற்கு சைவப்பிரகாச வித்தியாசாலையில் கல்வி கற்று, அங்குள்ள ஆசிரியர்களின் அபிமானத்துக்குரிய மாணவராக விளங்கிய அருணகிரி அவர்கள் வணிக நடவடிக்கைகளுக்காக தென்னிலங்கையில் வறக்காபொல நகரத்திற்கு சென்றிருந்தார். அவரின் மாமனார் வேலணையிலிருந்து புகையிலையைக் கொள்வனவு செய்து அங்கே வாணிபத்தில் ஈடுபட்டிருந்தார். மாமனார் வழியில் சென்ற மருமகன் மிகக் குறுகிய காலத்தில் வறக்காபொல வாழ் அனைத்து மக்களின் அன்பிற்கும் மரியாதைக்கும் உரியவராக கண்ணியம் பெற்றார்.

வேலணை கிராமத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்த கனவான்களில் திரு. அருணகிரி அவர்களும் ஒருவராவார். அவரது வாழ்க்கையை அறிந்துகொண்ட

எவருமே அவரிடம் பொதிந்திருந்த உன்னதமான குணங்களை உணர்ந்திருப்பர். சிறப்பானதொரு குடும்பத் தலைவனாக, உறவினர் மேல் அளவிலாப் பற்றுக்கொண்டு வழிநடாத்தும் தலைவனாக மிகச்சிறந்த சமூக சேவகனாக கிராமத்திலும் வறக்காபொலவிலும் அனைத்து மக்களினாலும் விரும்பப்பட்ட மனிதராக அவர் வாழ்ந்திருந்தார். தாய்மேல் மாறாத பற்றுக்கொண்ட அருணகிரி அவர்கள் எந்தக் காரியத்தைச் செய்யும் பொழுதிலும் தாயின் ஆலோசனையை, அறிவுரையைப் பெற்றே நடந்துவந்தார். அவரது அனைத்து உயர்வுகளுக்கும் தாயின் அரவணைப்பும் ஆலோசனைகளும், ஆசீர்வாதமும் இருந்தது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

அருணகிரி அவர்கள் தனது குடும்பத்தினர். உறவினர் உயர்விற்கு வழிவகுத்தது மட்டுமல்லாது வேலணை வாழ் அனைத்து மக்களதும் நலனில் அக்கறை கொண்டவராக வாழ்ந்திருந்தார். தனது சகோதரர்கள், பிள்ளைகள் அனைவரதும் நிறை வாழ்விற்கு வழிகாட்டியாக, தொழில் நடவடிக்கைகளை முன்னெடுக்க உதவியவராக, மேற்கு நாடுகளுக்கு இடம்பெயர்வின் ஆரம்ப காலங்களில் அவர்களை அனுப்பி அவர்களை பொருளாதாரச் செழிப்பு நிலைக்கு ஆளாக வித்திட்டவராக அவரை நாம் காணலாம்.

வேலணை மேற்கு கிராம அபிவிருத்திச் சங்கத்தின் தலைவராகப் பல வருடங்கள் கடமையாற்றி கிராமத்தின் அபிவிருத்திக்கு பல வழிகளிலும் சேவையாற்றினார். வேலணை பழைய வைத்திய சாலையின் அருகாக மேற்கே போகும் வீதியைப் பெருப்பித்துப் புனரமைத்ததுடன், தோட்ட வயல் வெளி களூடாக காணிக்காரர்களுடன் பேசி அனுமதி பெற்று அகலமாக அப்பாதையை நீட்டி சிற்பனை முருகன் கோயில் வரை நல்லதொரு பாதையாக அமைக்க முன்னின்று உழைத்தார்.

அதுமட்டுமல்ல இந்த வீதியை (சிற்பனை வீதி) மின்சார சபை விதிகளுக்கு அமைய அனைத்துக் காணிக்காரர்க ளுடனும் பேசி பெருப்பித்து அதனூடாக வேலணை மக்களுக்கு மின்சார வசதியைப் பெற்றுக் கொடுப்பதில் முன்னின்று உழைத்தவராக அருணகிரி அவர்கள் விளங்குகின்றார். அவரின் இம்முயற்சி பின்னர் சிற்பனை முருகன் கோயிலுக்கு அப்பால் உள்ள வயல் வெளிகளின் ஊடாக பாதை அமைக்கப்பட்டு கைத்தனை வீதியுடன் இணைக்கப்பட்டு வேலணை மேற்கு கிராமத்து மக்களின் போக்குவரத்துக்குப் பெரிதும் உதவியது. இதற்கு முன்பாக பல கிலோ மீற்றர் தூரம் நடந்து பழைய பஸ் கம்பனிக்குத் தெற்காக இறுப்பிட்டி வீதியுடன் இணைந்திருந்த பனை வளவுகள், பழைய குடியிருப்பு இடங்களின் ஊடான போக்குவரத்து இந் நடவடிக்கையால் மிக இலகுவாக்கப் பட்டதுடன் துாரமும் நேரமும் குறைக்கப்பட்டது. வேலணை மத்திய கல்லூரிக்கு முன்பாக வேலணைக்கிராமத்தை ஊடறுத்துப் போகும் பெரு வீதிக்குச் சமாந்தரமாக இவ் வீதியைப் பெருப்பித்து வேலணை மேற்கு மக்களின் போக்குவரத்துப் பிரச்சனைக்கு தீர்வு கண்டது அவரது

பெருவெற்றியாகும்.

அகில இலங்கைச் சமாதான நீதிபதியாக அரசாங்கத்தால் நியமனம் பெற்ற அருணகிரி அவர்கள் பல்வேறு பிரச்சினைகளுக்கும் சுமுகமான தீர்வை வழங்கி அனைத்துப் பிரிவிரினரதும் நன்மதிப்பைப் பெற்றார். குடும்பப்பிரச்சினை, காணிப்பிரச்சினை, பொது அமைப்புக்களின் பிரச்சினை எதுவாக இருந்தாலும் அருணகிரி அவர்களிடம் சென்றால் நல்ல தீர்ப்பு கிடைக்கும் என்பதில் அனைவரும் மிக நம்பிக்கை கொண்டிருந்தனர்.

சைவ சமயத்திலும், தமிழ் மொழியிலும் அளவிலாப் பற்றுக்கொண்ட அருணகிரி அவர்கள் வேலணையில் புகழ்பெற்று விளங்கும் அனைத்து ஆலயங்களின் அபிவிருத்திக்காக நிதியுதவி உட்பட பல்வேறு உதவிகளை வழங்குபவராகக் காணப்பட்டார். மிகச் சிறந்த முருகபக்தரான அருணகிரி அவர்கள் சிற்பனை முருகமூர்த்தி கோயில் பரிபாலன சபைக்கு காப்பாளராக இருந்து கோவிலின் சண்முகரின் திருவுருவத்தை வார்ப்பித்து உதவி, அக்கோயிலின் கும்பாபிஷேக நடவடிக்கைகளை முன்னின்று நடத்தியவராக அவர் காணப்பட்டார். கும்பாபிஷேக நிகழ்விற்கு முன்பாக அவரின் மரணம் நிகழ்ந்த போதும் கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது இங்கு குறிப்பிடத்தக்கது. பெரியபுலம் மகாகணபதி (முடிபிள்ளையார்) கோவிலின் மீதும், வேலணை பெருங்குளம் முத்துமாரியம்மன் கோயில் மீதும், வங்களாவடி முருகன் கோவில் மீதும் மாறாத பற்றுக் கொண்ட அருணகிரி அவர்கள் இக்கோயில்களின் அபிவிருத்திக்கு **தனது** பூரண ஒத்துழைப்பை வழங்கினார். முரு**கன்** மீது மாறாத காதல் கொண்ட இவ**ர்** பெயரிற்கேற்ப திருப்புகழ், கந்தரலங்காரம், தேவாரம் போன்ற பக்திப் பாடல்களைக் கோயில்களில் மெய்யுருகி இசைக்கும்போது பக்தர்களின் கண்களில் கண்ணீர் பெருகச் செய்யும் அற்புதம் கொண்ட குரல் வளத்தைப் பெற்றவர் என்பது இங்கு சுட்டிக்காட்டத் தக்கது. கதிர்காமக் கந்தன் மீது பற்றுக்கொண்ட இவர் வருடாவருடம் அங்கு செல்வதும், தீ மிதித்தலில் பங்கு பற்றுவதும் பலர் அறிந்த விடயமாகும். அத்துடன் சிற்பனை முருகமூர்த்தி கோவிலில் சூரன்போரின்போது தீ மிதிப்பு விழாவைத் தொடக்கி வைத்து காவடியோடும் மனைவியோடும் முதன் முதலில் தீக்குளித்த பக்தர் ஆவார். வங்களாவடி முருகன் கோயிலில் நடைபெற்ற திருக்குறள் மகாநாட்டைத் தலைவராக இருந்து சிறப்பாக நடத்திய பெருமையையும் அருணகிரி பெற்றுள்ளார்.

வறக்காப்பொலவில் தொழிலதிபர் திரு. அருணகிரி அவர்கள் நடத்திய வர்த்தக நிறுவனம் அங்கு வாழ்ந்த இந்துக்கள், முஸ்லிம் மக்களின் அபிமானத்தைப் பெற்றதோடு அருணா பீடிக் கம்பனியை ஆரம்பித்து அங்கு வாழ்ந்த பலருக்கு வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுத்தார். இவரது கடின உழைப்பும். கண்ணியமான போக்கும் வர்த்தகர்கள், வாடிக்கையாளர்கள், ஏனையோர் மத்தியில் இவருக்கிருந்த பெருமதிப்பும் வியாபாரத் துறையில் இவர் வெற்றியடைவதற்கு

உறுதுணையாக இருந்தன. வறக்கா பொலவில் அவர் பெற்ற பிரபல்யம் டெடிகம தேர்தல் தொகுதியின் அரசியல் வாதிகளையும் அவருடைய நெருங்கிய நண்பர்களாக ஆக்கிவைத்தது. இலங்கையின் முன்னாள் பிரதமர் டட்லி சேனநாயக்கா, நீதி அமைச்சர் நிஸங்க விஜயரத்தின போன்ற தலைவர்கள் அவரின் நெருங்கிய நண்பர்களாவார்.

அருணகிரி அவர்களின் தந்தையார், தாயாரின் மரணச் சடங்குகளில் வேலணைக்கு வந்து கலந்து கொண்டதும் அவர்களது முப்பத்தோராம் நாள் நினைவு மலரிற்கு அனுதாபச் செய்திகளை அனுப்பியிருந் தமையும் இங்கு கவனிக்கத்தக்கது. அவ்வாறே அருணகிரி அவர்களின் சிவப் பதபேறு குறித்த நினைவு மலருக்கு அப்போதைய நீதி அமைச்சர் நிஸங்க விஜயரத்தின அனுதாபச் செய்தி வழங்கியிருந்தமையும் குறிப்பிடத்தக்கது.

வறக்காபொலவில் திரு. அருணகிரி அவர்கள் மிகப்பெரும் கௌரவத்தைப் பெற்றிருந்தார். அவரது நினைவு மலரினை நோக்கினால் இவரது சிறப்பு நன்கு தெரியவரும். சமூக, சமய நிறுவனங்களுக்கு வேலணையைப் போலவே தாரளமாக நிதியுதவி செய்த வள்ளலாகவே அவர் குறிப்பிடப்பட்டிருந்தார். பன்சாலைகளும், பள்ளிவாசல்களும், பாடசாலைகளும், மனிதநேய அமைப்புக்களும் அவரிடம் இருந்து பல வழிகளிலும் உதவி பெற்றுக்கொண்டன. வறக்காபொல பாபுல் ஹஸன் மத்திய கல்லூரி பெற்றோர் ஆசிரியர் சங்கம், வறக்காப்பொல கணிதபுர ஜும்மாமசூதி, வறக்காப்பொல உதவி அரசாங்க அதிபர் போன்றோரின் செய்திகள் ஏற்கனவே குறிப்பிட்ட கருத்துக்களை உறுதிப்படுத் துகின்றன. வறக்காப்பொல உதவி அரசாங்க அதிபர் T. P. குலசேன நினைவு மலருக்கு வழங்கிய செய்தியிலிருந்து ஒரு பகுதியை இங்கே எடுத்துக் காட்டுவது சாலப் பொருத் தமாகும்.

"சுமார் நாற்பது வருட காலமாக வியாபார நடவடிக்கையில் ஈடுபட்டிருந்த இவர் சிங்கள, முஸ்லிம், தமிழ் இனத்தவருடன் நட்புடனும் ஒற்றுமையுடனும் செயல்புரிந்தார். விசேடமாக அவருடைய வர்த்தகத் தொழில் அப்பிரதேச சிங்கள மக்களுக்கு பெரும் நன்மை அளித்ததுடன் அவர், பிரதேச வாசிகளின் சமூக சமய அபிவிருத்திகள், பொது நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் அயராது உழைத்தார். அப்பிரதேச பௌத்த தலங்களின் முன்னேற்றத்திற்கும் அவர் அளப்பரிய சேவையைப் புரிந்தார். சிங்கள, தமிழ் முஸ்லிம் மக்களின் சுகதுக்கங்களில் பங்கு கொண்ட ஓர் உத்தமனாக தொகுதி மக்கள் திரு. அருணகிரியை கருதினார்கள்."

கௌரவ நீதியமைச்சர் கலாநிதி நிஸங்க விஜயரத்தின அவர்கள் திரு. அருணகிரி பற்றி குறிப்பிட்டது இங்கு மேற்கோளாக எடுத்துக்காட்டத்தக்கது.

"இவர் ஒரு கொடைவள்ளல். சாதி, சமயபேதம் பாராட்டாது ஊரில் எந்த வைபவமானாலும் தாமாக முன்வந்து தாராளமாகவே பண உதவி செய்யும் சுபாவமுடையவர். இதனால் இவருக்கு இந்துக்கள், பௌத்தர்கள், கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் ஆகிய சகல இன மக்களிடையேயும்

நன்மதிப்பு இருந்தது. இவர் பழகுவதற்கு எளிமையானவர். சமயப் பற்று மிக்கவர், சண்டை சச்சரவை அடியோடு வெறுப்பவர், நல்லொழுக்கமும், கட்டுப்பாடும் கொண்ட சமுதாயத்தைக் கட்டியெழுப்பும் எந்த அரசாங்கத்தையும் எந்தக் கழகத்தையும் அவர் ஆதரிக்கத் தவறமாட்டார். இவர் மக்களின் நண்பன், ஏழைகளின் இரட்சகன், உழைப்பாளிகளின் தோழன், மக்கள் சேவையே மகேசன் சேவை எனக்கொண்டு டெடிகம தேர்தல் தொகுதி வாழ் தமிழ் மக்களின் தலைவன் எனப் போற்றப்படும் அளவுக்குத் தலையாய குடிமகனாகத் திகழ்ந்தவர். அவர் எனது ஆப்த நண்பர்களுள் ஒருவராக எண்ணப்பட்டவர். அவரின் இழப்பு என்னைத் தொடர்ந்து வாட்டும் ஒன்றாகும்."

தனது அறுபதாவது அகவையை நிறைவு செய்வதற்குச் சிலமாதங்கள் இருக்கையில் அவர் அமரராகியது அனைத்து மக்களுக்கும் பேரிழப்பாக அமைந்தது. அருணகிரி அமரராகி பதினைந்து வருடங்களின் பின்பாக வறக்காபொல சமூக அபிவிருத்தி நிலையத்தால் வெளியிடப்பட்ட வறக்கா பொலவின் பிரபலமான மனிதர்களைக் கௌரவிக்கும் மலரில் இனப்பிரச்சனை கூர்மையடைந்துள்ள இந்நிலையில் தமிழர் ஒருவராக அமரர் அருணகிரி அவர்கள் படத்துடன் நன்றியோடு நினைவு கூரப்பட்டிருப்பது அவரின் பெருமையை வெளிக்காட்டுவதுடன் வறக்காபொல சிங்கள மக்களின் நன்றி மறவாத பண்பையும் மனித நேயத்தையும் எடுத்துக் காட்டுகிறது.





# தொழிலதிபர்கள்

# திருமதி. வாதவூர் அன்னம்

திருமதி. வரதா சண்முகநாதன், முன்னாள் ஆசிரியை - கனடா

மற்றவர் மனதில் நினைக்க வேண்டிய வர்களாக அறிஞர்கள், வள்ளல்கள், நாட்டுப் பற்றாளர்கள், ஞானிகள், தியாகிகள், இருப்பர். ஆனால் ஒரு சமுதாயத்துக்கு, தாய்க்குலத் துக்கு முன்னோடியாக சாதாரணப் பெண்கள் இருப்பது அபூர்வம். திருமதி வாதவூர் அன்னப்பிள்ளை அவர்களும் வேலணை மக்களால் நினைவு கூரப்பட வேண்டிய ஒருவர்தான். இவர் வேலணை மேற்கில் தும்பளப்பிட்டி எனும் இடத்தில் பிறந்தவர். அன்னப்பிள்ளை என்று அன்போடு அழைக்கப்படுபவர்.

இவர் ஆரம்பத்தில் சாதாரண குடும்பப் பெண்ணாக அன்றாட வாழ்விற் பல நெருக் கடிகளையும் எதிர்கொண்டவர். பிள்ளைகள் பலரைப்பெற்று அவர்களை வளர்த்து ஆளாக்க மிகவும் சிரமப்பட்டவர். இல்லறத்தை நடத்த இவரது கணவரின் உதவி பலமாக இல்லாதிருந்தும் இவர் மனம் சளைக்க வில்லை.

"இல்லவள் மாண்பானால் இல்ல தென்" என்கிற வள்ளுவரின் கூற்றுக்கேற்ப நற்கு ணங்களும், நற்செயல்களும், உடைய இல்லத் தரசியாக இருந்து குறைவின்றி குடும்பத்தை நிர்வகித்து வந்தமையால் திருமதி. வாதவூர் அவர்கள் நிறைவுடன் வாழ்ந்து வந்தார்.

"வாழ்வில் மலர்ச்சி உண்டாகும் விடி யலைக்காண்பேன்" என்ற துணிவுடன் தன் குடும்பத்துக்காக மட்டுமன்றிப் பிறருக்காகவும் அர்ப்பணிப்புடன் வாழ்ந்து வந்தார், மழை யென்றும் பனியென்றும், வெயிலென்றும் பாராமல் எந்நேரமும் உற்சாகத்தோடு வயலிலும் தோட்டத்திலும் பயிர்வளர்ப்பார். வீட்டில் உயிர் வளர்ப்பார். ஓய்வு நேரத்தில் கைவேலையில் ஈடுபடுவார். எல்லோருடனும் பணிவாகவும் இனிமையாகவும் கதைப்பார். ஆனால் இவரது சிந்தனை பிள்ளைகளை எவ்வாறு நல்வழிப்படுத்துவது, எத்தகைய உழைப்பை அவர்களுக்குக் உருவாக்குவது, எத்தகைய வாழ்க்கையை எவ்விடத்தில் அமைத்துக் கொடுப்பது என்பது பற்றியதே. தம் குடும்பத்தினரின் எதிர்காலம் பற்றித் தீர்க்கமாக முடிவெடுக்கும் நுண்மதி உடையவராக இருந்தார். அவரது காலம் பெண்கள் கல்வி நிலையில் பின் தங்கிய காலம். ஆனால் இவரது முன்னேற்றத்துக்கு கல்வித்தரம் எதுவும்

பாதிப்பை உண்டாக்கவில்லை.

காலப்போக்கில் இவரது பிள்ளைகள் வாணிபத் துறையில் வளம் கண்டு பொருளீட்டத் தொடங்கினர். தும்பளப்பிட்டியில் ஒரு வீடு, இருவீடு, பல வீடுகளாயின. முதன் மகன் அருணகிரி தலைமையிலான பீடிக் கைத்தொழில் வளம் பெருக்கியது. இலட்சுமி இவர் வீட்டில் குடிகொள்ளத் தொடங்கி விட்டாள் என்று கூறுமளவுக்கு அன்னத்தின் செல்வமும் செல்வாக்கும் வளர்ந்தது. எனினும் அவரது சீரிய பண்பும் அயராத உழைப்பும் மாறவில்லை. "செல்வம் வந்துற்ற போதும் தெய்வமும் சிறிது பேணார் வெல்வதே கருமமல்லால் வெம்பகை கொடிதென் றெண்ணார்" என்று கம்பன் கூறுகிறான். ஆனால் அன்னம் அவர்கள் செல்வத்தினால் செருக்கடையவில்லை. மற்றவர்களை அலட்சியப்படுத்தவில்லை. வளம்மிக்க காலத்திலும் சாதாரணமான உழைப்பாளியாகவே காணப்பட்டார். தனது வளத்தை ஆடையணிகளிலோ சுகபோகங்களிலோ காட்டவில்லை. புதியதொரு வருமானத்தை ஈட்டும் முயற்சியில் ஈடுபட்டார். தீவகத்தில் பயனற்று அழிந்து போகும் கணுப்புகையிலையை பீடிக் கைத்தொழிலின் மூலப் பொருளாகவும் பயன்படுத்தலாம் என மகனுடன் கலந்தாலோசித்தார். கணுப் புகையிலையைப் பதப்படுத்தித் தூளாக்கிப் பொருளீட்டத் தொடங்கினார். இத் தொழில் பலருக்கு வருமானத்தைக் கொடுத்தது. கணுப் புகையிலையை இவரிடம் விற்றுப் பாடசாலை மாணவர்கள் உபகரணம் வாங்கினர். வசதியற்றோரும் சீவனம் நடத்தினர். இவ்வருமானத்தால் இல்லிடம் அமைத்த வரும் உண்டு. அவர் தொடங்கிய தொழில் இன்றும் பலருக்கு உதவியளிக்கிறது.

தான் பெற்ற செல்வத்தையும், செல் வாக்கையும் கொண்டு தன்னளவில் மாத்திரம் வாழ இவர் நினைக்கவில்லை. பிறருக்கும் அள்ளி, அள்ளி வழங்கினார். கோயில்களுக்கும் உதவினார். அதேபோல் உதவிகள் வழங்கும் படி பிள்ளைகளையும் வலியுறுத்தினார். வேலணை முத்துமாரி அம்பாள் ஆலய தேர்திருப்பணி சபையினர் தேர் அமைப்பதற்கு ஆரம்ப நிதியை நல்ல மனம் படைத்த ஒருவரிடம் பெறவேண்டும் என எண்ணினர். திருமதி அன்னம் அவர்களே அதற்கு ஏற்றவர் என எண்ணி அவரை அணுகினர். அவரும் அது தனக்கு கிடைத்த பெரும்பேறு, அருட்பேறு என எண்ணி உரிய மரியாதை யோடு அவர்கள் மகிழும் வண்ணம் பணம் கொடுத்தார். இன்றும் அவரது புதல்வர்கள் அம்பாளின் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

அவரது இறுதிக் காலத்தில் தீராத நோயொன்று பீடித்துக் கொண்டது. அவர் கொழும்பு வைத்திய சாலையில் சிகிச்சை பெற்றுக்கொண்டிருக்கும்போது அவருடன் இருந்த வசதிகுறைந்த நோயாளிகள் வைத்திய சாலையே தஞ்சமென்றிருந்தனர். அவர்களைப் பார்த்து மனம் வருந்திய அவர் தனக்கென்று பிள்ளைகளால் அனுப்பப்படும் பிரத்தியேக உணவுபோல் சகநோயாளிகளுக்கும் கொடுக்கும்படி பணித்து அவ் நோயாளி களையும் ஆறுதலடைய செய்தார்.

1969 ஆம் ஆண்டு 65 வயதில் மறைந்த காலத்திலும் அதன் பின்பும் எத்தனையோ ஆத்மாக்கள் அவருக்கு ஆசித் துதிகள் சொரிந்தன. அவரது இறுதிக் கிரியைகளில் கலந்து கொள்ள உயர்மட்ட அதிகாரிகளும், பிரமுகர்களும், அரசியல்வாதிகளும் இலங்கையின் பல பாகங்களிலுமிருந்து வந்தனர். பலவீனமான பயிரானது வளர்ந்து உரமான நெற்கதிரை ஈன்று பயன் தருவது போன்ற வாழ்க்கையே அவரின் வாழ்க்கையாகும்.

"உழைப்பின் உயர்வு தெரியாமல் ஏழ்மையில் உழலும் பலருக்கு இவரது வாழ்க்கை ஒருபாடமாகும்"

"அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரம் தொழில் செய்திடுவீரே"

என்ற பாரதியின் கனவையும் கருத்திற் கொள்வோம்.



நான் எனது பிறந்த மண்ணிற்கும் இனத்திற்கும், ஏதாவது செய்திருந்தால் அது எனது பெற்றோரினது ஆசியும் வழி காட்டலுமே. எனது மனைவியார் தந்த ஒத்துழைப்பு, எனது பிள்ளைகள் தந்த ஊக்கமும் இல்லாமல் நான் எதனையும் செய்திருக்க முடியாது. எனது உடன் பிறப் புக்களின் அன்புச் சூழலும் எனது மாமியார் திருமதி மருதையா பாக்கியலட்சுமி அவர்க ளின் அன்பும் என்றுமே மறக்க முடியாதன.

என்றும் அன்புடன்
எஸ். பி. சாமி.

உ

ஓம்

மறக்கமுடியாதன....!





அமரர்களான திரு. திருமதி. வ. பி. செல்லையா.



திருமதி. மருதையா பாக்கியலட்சுமி

"அப்பன் நீ அம்மைநீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமும் சுற்றமும் ஊரும் நீ

துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ
துணையா யென் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணிநீ இம்முத்தும் நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே."



# தொழிலதிபர்கள்

# வேலணை நா. வீரசிங்கம்

*" பாலமுரளி "*

**த**மிழ் கூறும் நல்லுலகம் போற்றும் வட மாநிலத்தின் புகழ்பூத்த கிராமங்களில் வேலணைக் கிராமமும் ஒன்று.

இந்தவேலணை மண்ணில் பெரியார்கள், கல்விமான்கள், புலவர்கள், வணிகப் பெருமக்கள், சுயமுயற்சியால் முன்னேறிய தொழிலாளர்கள், எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் என பலர் உருவாகிய, வாழ்ந்து கொண்டிருக்கின்ற நிகழ்வுகள் மிகையாக உள்ளதை வரலாறு சுட்டும். இந்த வரலாற்றில் வேலணைக்கிராமத்தின் நாமத்தை உலகில் பரப்பி நிற்கும் வேலணை வீரசிங்கத்தின் சேவைகளும் பதியப்பட வேண்டியதே.

பெருமையுடனும் புகழுடனும் சிறப்பாக நற்பணி செய்து வாழ்ந்து வரும் தொழிலதிபர்களில் இவர் முதன்மை வாய்ந்தவர். தமிழ் மொழிப் பற்றாளர்; இன உணர்வு மிக்கவர்; நாட்டுப்பற்று நிறைந்தவர்; பகுத்தறிவுச் சிந்தனையாளர். நலிந்தோருக்கு உதவும் நல்லிதய வள்ளலார். இப்படி பல்வேறு கோணங்களில் இவரை நாம் காணலாம்.

வேலணை சோளாவத்தையைப் பிறப்பிடமாகக் கொண்ட வீரசிங்கம் அவர்கள் நாகமணி ஆச்சிமுத்து தம்பதியரின் இளைய மகனாக 1938ஆம் ஆண்டு ஜூலை மாதம் இரண்டாம் திகதி பிறந்தார்.

வாழ்வின் அடிமட்டத்திலிருந்து சகல துறை அனுபவங்களையும் அறிந்து, உணர்ந்து, அனுபவித்து வளர்ந்த இவர், சாதாரண கடை லிகிதராகவே தொழிலைத் தொடர்ந்தார். இவரது விடா முயற்சியும், நேர்மையான தொழில் செயற்

பாடுகளும் இன்று நல்லுலகம் போற்றும் நல்லிதயங்கள் மதிக்கும் தொழிலதிபராக இவரை உயர்த்தியது எனலாம். சிறிய அள வில் ஆரம்பித்த இவரது தொழில் முயற்சி இன்று ஆலவிருட்சமாக விழுதுகள் வேரூன் றியிருக்கிறது. சிறு பராயம் முதலே பிறந்த மண்ணில் பற்றுறுதி கொண்ட இவர், ஊரின் பெயரை இணைத்து தனது பெயரை "வேலணை வீரசிங்கம்" என்றே வழக்கில் கொண்டு வந்தார்.

"பிறவுன்சன் இன்டஸ்ரீஸ்" என்ற அவரது தொழில் நிறுவனத்தின் பெயரைச் சொன் னால் வீரசிங்கம் என்றும் வீரசிங்கம் என்ற பெயரைச் சொன்னால் பிறவுன்சன் இன்டஸ்ரீஸ் என்றும் இவரின் பெயரும் நிறுவனப் பெயரும் தமிழ் கூறும் உலகில் எல்லோர் நினைவிலும் நிற்பதைக் காண் கின்றோம். இந்த வகையில் அவரது நேர்மை யான செயற்பாடுகளும் தொழிலின் சிறப் பும் இவருக்கு புகழ் கொடுத்த இணைப் பாகும். புத்தக வெளியீடுகள், பத்திரிகை வெளியீடுகள் போன்ற அறிவுக் கருமங் களுடன் ஈடுபாடு கொண்டு வாழும் இவர் ஊடகவியலாளர்களுடனும் எழுத்தாளர்களு டனும் கலைஞர்களுடனும் மிக நெருக்க மான உறவுள்ளவர்.

தமிழ் அறிஞர்கள் என்ற வரிசையில் தென்புலோலியூர் மு. கணபதிப்பிள்ளை, பண்டிதர் கா. பொ. இரத்தினம், பண்டிதர் பரந்தாமன், சிவன் கருணாலய பாண்டி யனார், கா. இளையதம்பி, அ. பொ. செல்லையா, தமிழ் உலகம் ஆ. நடராசா போன்றவர்க ளுடன் நெருக்கமான சேவைத் தொடர்புகள் உள்ள இவர், தனித் தமிழ் இயக்கச் செயற் பாடுகளுடனும் ஈடுபாடு நிறைந்தவராவார்.

தூய தமிழ் நடைமுறைக்கு வித்திடுப வர்களுக்கு என்றும் உதவி நிற்கும் இவர் திருவாளர்கள் எஸ். பி. சாமி, பொன் தியாகராசா போன்றோருடன் இணைந்து வேலணை வாலிபர் முன்னேற்றச் சங்கம் என்ற அமைப்பை உருவாக்கி அதன்மூலம் தமிழ் விழாக்கள், இலக்கிய விழாக்களை நடத்தி கலை கலாசார வளர்ச்சிக்குப் பணி யாற்றினார். 1960 இல் புதிதாக அமைத்த தனது இல்லத்திற்கு "தமிழ் மனை" என்று பெயர்சூட்டி பெருமை கொண்டவர். தன் தொழிலோடு மட்டும் நின்று வாழாது தமிழினத்தின், மொழியின் உயர்வுக்கும் பணியாற்ற வேண்டும் என்ற நோக்குடைய வராக வாழ்ந்த இவர், 1964 இல் "தாய் நாடு" எனும் மாதசஞ்சிகை ஒன்றை வெளி யிட்டு "யாழ்தாசன்" என்ற புனைபெயரில் ஆக்கங்களைப் படைத்துவந்தார்.

1960, 1961 காலப் பகுதிகளில் வெளி யாகி உலாவந்தபத்திரிகைகள் பலவற்றுடன் நெருக்கமான தொடர்புகள் கொண்ட இவர் "இனமுழக்கம்", "தென்மராட்சி", "பகுத்தறிவு" போன்ற வெளியீடுகளுக்கு பொறுப்பாசி ரியராகவும் விளங்கியவர். "மறைமலை அடிகள் மலர்", "அறிஞர் அண்ணா பிறந்த நாள் மலர்", "பாரதிதாசன் பிறந்தநாள் மலர்" என்பவை போன்ற அறிஞர்களது நினைவு மலர்கள் பலவற்றை வெளியிட்டு விழாக்களை நடத்திய வரலாற்றுக்கும் இவர் சொந்தமாகிறார்.

தமிழ் இலக்கியப் பணிகளில் ஈடுபாடு கொண்ட எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பணியில் உதவிவரும் இவர், எழுத்தாளர் கள் பலரது ஆக்கங்கள் நூலுருவில் வெளி வர தனது ஒத்துழைப்பையும் நிதி உதவி யையும் கொடுத்து வந்தவர்.

முகிலன் என்ற (வ. மாணிக்கவாசகன்) கவிஞரின் "முகிலன் கவிதைகள்", "மண்டூர் அசோகாவின் "கொன்றைப்பூக்கள்",

திரு. அ. பொ. செல்லையாவின் "காலத்தின் விதி", "யார் கொலைகாரன்", ஜீவாநாவுக்கர சனின் "சூழ்வினைச் சிலம்பு" சிவசாமியின் (தில்லைச் சிவன்) "தில்லைச்சிவன் கவிதை கள்", வரணியூரானின் "இரைதேடும் பறவை கள்" ஓவியமாமணி வீகே. யின் நினைவுநூல் போன்ற பல்வேறு நூல்களை வெளியீடு செய்துதவிய அழியாப் பெருமைக்கும் இவர் உரித்துடையவராவார்.

"யாழ் கலை அரங்கம்" என்ற கலைக் கழகத்தைஉருவாக்கி அதன் செயலாளராக செயற்பட்ட இவர் இக்கலையரங்கின் மூலம் நாடகங்கள் பலவற்றை மேடை ஏற்றி கலைஞர்களுக்கு உதவி வந்தார் என்பதை கலை உலகம் மறக்காது.

கலைஞரின் "நச்சுக்கோப்பை" நடமாடி யின் "சங்கிலியன்" அ. பொ. செ. யின் "ஒன்றே குலம்", வரணியூரானின் "புளுகர் பொன்னையா" டாக்டர் கோவூரின் நம்பிக்கை போன்ற நாடகங்கள் யாழ் கலை அரங் கின் மூலம் இவர் ஆற்றிய கலைப்பணி களைச் சுட்டத்தக்கவை.

வரணியூரானின் "புளுகர் பொன் னையா" நாடகம் கொழும்பிலும், யாழ்ப் பாணத்தின் பல இடங்களிலும் மேடையேற் றப்பட்டது. இதுபோல் "நம்பிக்கை" என்ற நாடகமும் பல முறை மேடையேறியதைக் குறிப்பிடலாம். "புளுகர் பொன்னையா" நாடகம் இருபத்தைந்தாவது (25) முறை யாக மேடை ஏற்றப்பட்டபோது, இதன் வெள்ளிவிழா நிகழ்ச்சியை ஏற்பாடு செய்து கலைஞர்கள் அனைவருக்கும் பரிசில்களும் வழங்கப்பட்டன.

"நம்பிக்கை" நாடகம் ரூபவாஹினியில் காண்பிக்கப்பட்டபோது வரணியூரான், கே. எஸ். பாலசந்திரன் போன்றோரின் நடிப் புத்திறனை நாடுபூராவும் உள்ள கலை ஞர்கள், கலை ஆர்வலர்கள் கண்டுகொள் ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இச்சிறப்பு யாழ் கலை அரங்கின் சிறப்புக்குள் அடங்குபவை யாகும்.

தமிழ்ச்சங்கப் பணிகளுக்கு உதவிகள் செய்து வரும் இவர், கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் ஆயுட்கால உறுப்பினராகவும் இச்சங்கத்தின் "ஓம்" படை நம்பிக்கைக்குழு உறுப்பினராகவும் இருந்துள்ளார். வெளியீட் டாளர்களையும் இலக்கிய கர்த்தாக்களையும் ஊக்குவிக்கும் வகையில் வெளியீட்டின் முதற்பிரதியையும் ஒலிப்பேழைகளையும் பெற்று ஊக்குவிப்பு உதவிகளை வழங்கி வருவது இவரது இலக்கியப் பணிகளின் சிறப்பில் அடங்கும். இசைக் கலையிலும் உணர்வுபூர்வமான ஆர்வமும் அபிமான மும் கொண்ட இவர் இசைக்கலைஞர்களை ஊக்குவிக்கும் வகையில் பல நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து உதவியவர்.

தமிழகத்திலிருந்து கவிப் பேரரசு வைர முத்துவையும், தென்னகப் பாடகர்கள் பலரையும் வரவழைத்து இசைநிகழ்ச்சி களை நடத்திய பெருமையில் இவருக்கு நிறையப் பங்குண்டு என்பதை மறக்க முடியாது.

வாழ்வின் நடைமுறையில் தமிழர்களின் மொழி, கலை, கலாசார நிகழ்ச்சிகளுக்கு பாரிய பங்களிப்புகளைச் செய்து வரும் இவர் தனது இல்லறவாழ்விலும் நல்லறம் புரிந்து இலட்சியத்துடன் சிறப்பான வாழ்க்கை முறைகளையே கைக்கொண்டு இன்புற்றுள்ளவர் என்பதைசொல்லி மகிழ் வது நம் கடன்.

இவரது தொழிற் சிறப்பிற்கும் பொது சேவைக்கும் பகுத்தறிவுச் சிந்தனையுட னான வாழ்க்கை முறைக்கும் பிள்ளைகளின் சிறப்பான வாழ்வியல் உயர்வு, கல்விச்

சிறப்பு எல்லாவற்றுக்கும் துணைநின்று சோர்வின்றி உதவிவரும் இவரது துணைவி (அமரா) அன்னலட்சுமி அவர்களையும் இச்சந்தர்ப்பத்தில் நினைவு கொள்ளாமல் இருக்க முடியாது. "இல்லறச் சிறப்பே நல்லறம்" இவரது சேவைத்திறனுக்கும், பெருமைக்கும் அமராவும் பங்காளியே என்பதை மறுக்க முடியாது.

ஆ. வேலாயுதம், முகிலன், வேலழகன் போன்றோருடன் இணைந்து அகில இலங்கை பகுத்தறிவுக் கழகத்தை நடத்தி, பகுத்தறிவுக் கொள்கைகளைக் கொண்டவர் களை ஒன்றிணைத்த பெருமை இவருக்கு ண்டு. தஞ்சாவூர் வல்லம் என்ற ஊரில் அமைக்கப்பட்ட பெரியார் பொறியியல் கல் லூரியின் வளர்ச்சிக்கு இவர் உதவியதன் சிறப்பையும் காணலாம். இவை வேல ணைக்கு மட்டுமல்ல, ஈழத் தமிழருக்கே மதிப்பளிப்பதாகும். தமிழகத்தில் பெரியார் நூற்றாண்டு மாநாட்டில் "பெரியார் பெருந்தொண்டர்" என்றும் இலங்கை தேசியக் கலைப் பேரவையால் "புத்தகப் புரவலர்" என்றும் அரசால் சமாதான நீத வான் என்றும் பாராட்டி கௌரவிக்கப் பட்டவர்.

தனது பிள்ளைச் செல்வங்களுக்கு கல்வி, கலை, கலாசாரம், தொழில் என்ப வற்றில் வழிகாட்டி அவர்களையும் இலட் சிய வாழ்வில் நெறிப்படுத்தியவர். இனிய தமிழ்ப் பெயர்களே தனது குடும்பத்தில் வேரோட வேண்டும் என்ற நோக்கில் தனது பிள்ளைகளுக்கு "குறளரசு", "வேழ வேந்தன்", "ஈழகாந்தன்", "இளங்கோவன்", "தமிழினி", "இளவரசி" என தனித் தமிழில் அழகுப் பெயர் சூட்டி மகிழ்ந்தவர்.

சிறந்த குடும்பத் தலைவராகத் திகழ்ந்து பிள்ளைகளை பொறியியல் துறையிலும் நுண் உயிரியல் துறையிலும் பட்டதாரி களாக்கி கலைத்துறையிலும் விற்பன்னர் களாக்கி மேடையேற்றி மகிழ்ந்தவர். இவர் கள் எந்த நாட்டில் தொழில் புரிந்தாலும் தாயக உணர்வுடனும் தமிழ்ப் பற்றுடனும் வாழ்ந்து வருவது மகிழ்ச்சிக்குரியதே.

தந்தையின் வழிகாட்டலில் வாழ்ந்து வரும் இவரது பிள்ளைகள் தங்களது குழந்தைகளுக்கும் ஆதவன்", அற்புதன்", அபிநயா", கீர்த்தனா", "ஓவியா என்று அழகுப் பெயர்களையே சூட்டியுள்ளதும் போற்றற்குரியதே.

1983 இல் இலங்கையில் இடம்பெற்ற இனக் கலவரத்தின்போது கொழும்பில் பாதிப்புக்குள்ளான வீரசிங்கம் அவர்கள் உயிரையும், உடுத்த உடையையும் தவிர ஏனைய சொத்துக்கள் அனைத்தையும் இழந்த நிலையில் இடம் பெயர்ந்தார். முதலில் யாழ்ப்பாணத்திலும் பின்னர் தமிழ் நாட்டிலும் பிள்ளைகளது கல்வி வளர்ச்சியை நோக்காகக் கொண்டு அங்கு தொழிலை மேற்கொண்டு வசித்து வந்தார். இதன் பின்னர் மீண்டும் இலங்கை திரும் பிய இவர் கொழும்பில் அழிக்கப்பட் டிருந்த தனது வீட்டைப் புனரமைப்புச் செய்து குடியமர்ந்து கொழும்பில் தொழில் முயற்சியை மீண்டும் தொடரலானார். இதில் வெற்றியும் கண்டார்.

ஈவேரா, பெரியார், அறிஞர் அண்ணா, டாக்டர் கோவூர், கந்தமுருகேசனார் போன்றவர்களின் நூல்களையே இவர் அதிகம் படிப்பதுண்டு. இவை இவரது பகுத்தறிவுச் சிந்தனைக்கு வித்திட்டவை எனலாம். இவரது இல்லத்தில் இருக்கும் நூலகத்தில் தத்துவங்களும், பகுத்தறிவு

நூல்களுமே அதிகமாக இருப்பதைக் காண லாம். திராவிடக் கழக பொதுச் செய லாளர் வீரமணி அவர்களையும் அவரது தோழர்களையும் கொழும்புக்கு அழைத்து 1982இல் பெரியாரின் நூற்றாண்டு விழாவை சிறப்பாக கொண்டாடி மகிழ்ந்தவர். பெரியார் தொண்டர்களில் ஒருவரான திருச்சி ஞானசெபஸ்தியன் சினிமா நெறி யாளர், எழுத்தாளர் புகழேந்தி, மணவைத் தம்பி போன்றோர் இவருடன் நிறைந்த தொடர்புடையவர்கள். மும்மொழி ஆற்ற லும் நிறைந்து சகலருடனும் அன்பாகப் பேசிப் பழகி தனது அனுபவ ஆற்றல் கொண்ட தத்துவங்களை மற்றவர்களுடன் பகிர்ந்தும் வழிகாட்டியும் வருபவர் என்பது அனைவரும் அறிந்ததே.

தனது தொழிலின் மூலம் இல்லங் களுக்கு உகந்த 25க்கும் மேற்பட்ட உற்பத் திகளை உருவாக்கி, இதன் மூலம் தொழில் வாய்ப்பையும் பலருக்கு ஏற்படுத்தி வருவது இவரது தொழிலின் மாசற்ற சிறப்பென லாம்.

இவரது பிறவுன்சன் உற்பத்திகளை நாட்டின் பல பாகங்களிலும் அறிமுகப் படுத்தித் தரமான உற்பத்தியாளர் என்ற சான்றிதழையும் பெற்றுள்ளார். பிறவுன்சன் உற்பத்திகளின் விற்பனை விரிவாக்கமும் விளம்பரத் திறனும் நட்சத்திர ஹோட்டல் களிலும் இவரது உற்பத்திகளுக்குக் கிராக்கி ஏற்பட்டுள்ளதைக் காணலாம்.

இலங்கை அரசியலில் தமிழரசுக் கட்சி உருவான காலத்தில் தந்தை செல்வாவின் இலட்சியம், கோட்பாடுகளை ஏற்று, மதித்து அவரது கருத்துக்களை சிறிய நூல்வடிவில் தயாரித்து கொள்கை பரப்பி உதவியவர் களில் இவரும் முன்னணி வகித்தவர் என்பதை நாடறியும்.

சைவசமய மரபுவழிக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தாலும், எல்லாச் சமயங்க ளையும் படித்து அறிந்து சகலசமய தத் துவங்களையும் நன்கறிந்த இவர், ஈவேரா பெரியாரின் பகுத்தறிவுப் பண்புகளுட னேயே இன்னும் வாழ்பவர்.

தமிழினத்தின் விடுதலை எதிர்பார்ப் புடன் வாழ்ந்து வரும் இனப் பற்றாளர் களில் இவரும் ஒருவர் என்றால் மிகை யாகாது.

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி
நல்லை வாழியர் நிலனே"

என்ற பாடலின்படி, மக்கள் எப்படி நல்லவர்களாக வாழ்கிறார்களோ அப் படியே நாடும் வளமாகும். என்ற மனப் பாங்கு கொண்டு நாட்டுப்பற்றாளராக நற்றமிழ் காத்து வாழ்ந்து கொண்டிருப் பவர் வேலணை வீரசிங்கம்.





# தொழிலதிபர்கள்

# திரு. முருகேசு கணபதிப்பிள்ளை

திரு. ந. ஜெகநாதன்

திரு. முருகேசு கணபதிப்பிள்ளை அவர்கள் முருகேசு சின்னத்தங்கம் தம் பதிகளுக்கு ஏக புத்திரனாக 1923இல் மண்கும்பானில் பிறந்தார்.இவருக்கு ஆறு சகோதரிகள் உள்ளனர். இவரது தந்தை யார் முருகேசு ஒரு சிறந்த விவசாயி ஆவார். இவர் தந்தையாருக்கு மிக உதவி யுடையவராக இருந்தார்.

திரு கணபதிப்பிள்ளை அவர்கள் தனது ஆரம்பக் கல்வியையும் இடைநிலைக் கல்வியையும் மண்கும்பான் அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலையில் கற்றார். 8ஆம் வகுப்புடன் படிப்பை நிறுத்தி தந்தை யின் விவசாயத்துக்கு உதவியாக இருந்தார். இவருக்கு 14 வயது ஆகும்போது தந்தை யார் இறந்து விட்டார். அதன் பின் குடும் பப் பொறுப்பு இவர் மீது வந்தது. எனினும் மனம் தளராமல் தன் சகோதரிகளின் கல் விக்கும் உறுதுணையாய் இருந்ததுடன் குடும்பச் சுமையையும் பொறுப்பேற்று நடாத்தினார்.

பொருளாதார சிக்கல் காரணமாக, 1943 இல் கொழும்பு சென்று கடை ஒன்றில் சிற்றூழியராக தொழில் புரிந்தார். 1950 ஆம் ஆண்டு வரை இங்கு தொழில் செய் தார். அதன் பின் ஸ்ரீ கதிரேசன் வீதியில் 210 ஆம் இலக்க அறையை எடுத்து சுருட்டு வியாபாரம் ஆரம்பித்தார். சில நாட்களில் வியாபாரம் நல்ல முன்னேற்றம் கண்டது. இது ஒரு மொத்த வியாபாரக் கடையாக மிளிர்ந்தது. கொக்குவிலிலிருந்து பெருந் தொகையாக சுருட்டுக்களை இங்கு கொண்டு வந்து, கொழும்பிலுள்ள சுருட்டு விற்பனைக் கடைகள் அனைத்திற்கும் சுருட்டு விநி

யோகித்து வந்தார். ஊழியர்கள் எவரு மின்றித் தானே தனித்து இத்தொழிலை திறம்பட நடாத்தி வந்தார்.

1953 ஆம் ஆண்டு வேலணையைச் சேர்ந்த கந்தையா தெய்வானைப் பிள்ளை யின் மகள் நாகம்மாவை திருமணம் புரிந் தார். இவரது மனைவியாரின் குடும்பம் இவரது குடும்பத்திற்கு உதவியாக இருந் தமை குறிப்பிடத்தக்கது. தனது வியாபாரத் தையும் சிறப்பாக நடாத்தித் தந்தையாரின் கமடிலங்களையும் நிர்வகித்து குடும்ப முன் னேற்றத்திற்கு அரும்பாடுபட்டு உழைத் தார். தனது சகோதரிகளின் திருமணங்க ளையும் சிறப்பாக நடாத்தி வைத்தார்.

இவரது இல்லற வாழ்வின் சிறப்பாக 6 ஆண்பிள்ளைகளைப் பெற்றார். அவர்கள் நன்கு கல்விகற்று நல்ல நிலையில் வாழ்ந்து வருகின்றனர். இவர் குடும்பத்தை நன்கு கவனித்து முன்னேற்றினார். காணிகள் வாங்கி வீடு கட்டி சிறப்பாக வாழ்ந்ததுடன் தனது சகோதரிகளுக்கும் தேவையான உத விகள் அவ்வப்போது செய்து வந்தார். வேலணை முத்துமாரியம்மன் ஆலயத்திற் கும் மண்கும்பான் பிள்ளையார் கோவி லுக்கும் திருப்பணி வேலைகளுக்கு உதவி செய்துள்ளார். திருவிழாக்காலங்களிலும் தேவையான உதவிகள் புரிந்து வந்தார் ஊரிலுள்ள பாடசாலைகள், சனசமூக நிலையங்களுக்கும் சகல உத்விகளும் புரிந் துள்ளார்.

1970 ஆம் ஆண்டுவரை இவர் சுருட்டு மொத்தவிற்பனைத் தொழிலை நடாத்தி வந்தார். 1971 இல் கொழும்பு கோட்டை யிலுள்ள முதலிகே மாவத்தையில் மூத்த மகன் குகனேசனை உதவியாக சேர்த்து புதிய நிறுவனம் ஒன்றை ஆரம்பித்தார். 1974 வரை இந்நிறுவனத்தை சிறப்பாக நடாத்தி வந்தார். 1974 இல் சிவபதமடைந் தார். இவரது இறப்பிற்குப் பின் மூத்தமகன் குகனேசன் அந்நிறுவனத்தை நடாத்தினார். தனது சகோதரர்களையும் இணைத்து முன் மாதிரியாக நிர்வகித்து வந்தார். சிறிது காலத் தின் பின் சகோதரர்கள் தனித்தனியே ஒவ் வொரு நிறுவனங்களை ஆரம்பித்தனர். தந்தையாரின் வழிகாட்டலையும் முன் மாதிரியையும் துணையாகக் கொண்டு கோட்டையில் ஒவ்வொரு பிள்ளைகளும் தத் தமது நிறுவனங்களை சிறப்பாக நடாத்தி வருகின்றனர். கொழும்பில் வீடு வாங்கி, திருமணமும் புரிந்து மிக சிறப்பாக வாழ்ந்து வருகின்றனர். இவர்களின் சிறப் பான வாழ்விற்கும் தந்தையே காரண கர்த்தா ஆவார்.

1990 இல் நடந்த இடப்பெயர்வின் பின் ஊரிலுள்ள ஆலயங்கள் மூடப்பட்டு பூசை கள் எதுவும் இன்றி இருந்தன. 1996 இல் மீள் குடியேற்றத்தின் போது, முத்துமாரி யம்மன் ஆலயம் திறக்கப்பட்டுப் புனருத்தார ணப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இப் புனருத்தாரணத்திற்கும் கும்பாபிஷேகத்திற் கும் கணபதிப்பிள்ளை அவர்களின் புதல் வர்கள் மிகப்பெரும் பங்களிப்பு செய்துள்ள னர். வெள்ளிதோறும் வேலணை முத்து மாரியம்மன் கோவிலில் அன்னதானம் கொடுப்பதற்கும் இவர்கள் பெரும் பங் களிப்பு நல்கியுள்ளனர். இராஜகோபுர திருப்பணி வேலைகளிலும் சிறப்புப் பூசை

கள், திருவிழாக்களுக்கும் இவர்கள் பெரும் பங்காற்றியுள்ளனர். மேலும் அயலிலுள்ள ஏனைய ஊர்களின் பாடசாலை, ஆலய புனருத்தாரண பணிகளுக்கும் இவர்கள் தாராளமாக உதவி செய்துள்ளனர். இராஜ கோபுர திருப்பணிக்கு பெருமளவு நிதி யுதவி செய்ததுடன் மேலும் செய்யக் காத் திருக்கின்றனர்.

கணபதிப்பிள்ளை அவர்கள் தனது உற்றார் உறவினர்களின் நன்மை தீமை களில் முன்னின்று உதவி புரிவதில் வல்ல வராக இருந்தார். சரீர உதவி முதல் நிதி யுதவி வரை அனைத்தும் முன்னின்று கருமமாற்றக் கூடியவர். அவரைப் போலவே அவரது புதல்வர்களும் இன்று கொழும் பில் பல உறவினர்கள், அயலவர்களின் குடும்பங்களின் நன்மை, தீமை விடயங்களில் முன்னின்று உதவி வருகின்றனர். வறியோ ருக்கும் தம்மாலான உதவிகள் புரிவதற்கு தயங்கமாட்டார்கள்.



இரு நூற்றாண்டுகளும்
50 தமிழ் அறிஞர்களும் - அதில்
தமிழ்மறைக் காவலர் கா. பொ. இரத்தினம்




நன்றி - இருநூற்றாண்டுகளும்
50 தமிழ் அறிஞர்களும்



# அரசியற்றுறைப் பெரியோர்கள்

## சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி

### (முன்னாள் சட்டசபை உறுப்பினர் (1920 - 1930), முன்னாள் சபாநாயகர் (1936 - 1947)

திரு. த. துரைசிங்கம்
(முன்னாள் கல்விப் பணிப்பாளர் -யாழ்ப்பாணம்)

இலங்கை வரலாற்றில் அழியா இடம் பெற்றுள்ள தலைவர்களில் ஒருவர். நாட்டு மக்கள் அனைவராலும் விரும்பப்பட்ட நற்றமிழர். அவர் ஒரு தேசாபிமானி; சைவாபிமானி, சிறந்த வழக்கறிஞர், சமூகத் தொண்டர், கல்விக் கூடங்கள் பலவற்றின் தாபகர். சைவ வித்தியா விருத்திச் சங்கம், சைவ பரிபாலன சபை, யாழ்ப்பாணச் சங்கம் ஆதியாம் நிறுவனங்களின் தலைவர். இலங்கை அரசாங்க சபையின் சபாநாயகராக 1936 முதல் 1947 வரை விளங்கிய ஒரே தமிழ் மகன். ஆறாம் ஜோர்ஜ் மன்னரின் முடிசூட்டு விழாவுக்கு மன்னரால் அழைக்கப்பெற்றுச் "சேர்" பட்டம் வழங்கிக் கௌரவிக்கப் பெற்றவர். 1936 முதல் 1947 வரை இலங்கையின் முதற் பிரசையாக விளங்கிய பெருமைக்குரியவர். இலங்கை அரசியல் அரங்கில் 1920 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டுவரை முதனிலை வகித்த பெருந்தகை. நாட்டின் விடுதலைக்கு அஞ்சாது குரல் கொடுத்த அரசியல்வாதி. சிறந்த ஆன்மீகவாதி. யோகர் சுவாமிகளின் பேரன்புக்குரியவர்.

இத்தகு சிறப்புக்கள் அனைத்தும் ஒருங்கமைந்த பெருமகன்தான் வேலணைத் தாயின் தவப்புதல்வன், சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி. அவரது வாழ்க்கை நெறியும் வரலாறும் ஈழத் தமிழர்கள் அனைவருக்கும் நல்லதோர் எடுத்துக்காட்டு. வையத்து வாழ்வாங்கு வாழ்ந்திட விரும்புவோர்க்கு நல்லதோர் வழிகாட்டுதலாகும்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக;
அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று."

என்ற வள்ளுவர் தம் வாக்குக்கமையப் புகழொடு தோன்றிப் புகழொடு வாழ்ந்து

புகழொடு மறைந்த பெருந்தலைவர் சேர். வை. துரைசுவாமி அவர்களாவார். இலங்கை வரலாற்றில் சேர் பொன் இராமநாதன் அவர்களின் பின் நாட்டு மக்கள் அனைவரா லும் இன, மத, சாதி பேதமின்றி மதிக்கப் பெற்ற மாண்புமிக்கவர் இவராவார். இதன் காரணமாகவே இன்றும் அவர் பெயரை இந்நாட்டு மக்கள் நன்றியுடன் நினைவு கூருகிறார்கள்.

## புகழொடு தோன்றினார்.

சேர். வை. துரைசுவாமி அவர்கள் 1874 ஆம் ஆண்டு ஜூன் மாதம் எட்டாம் திகதி (08. 06. 1874) வேலணையிற் பிறந்தார். இவரது தந்தையார் பெயர் வைத்தியலிங்கம். விஜய தேவேந்திர முதலி பரம்பரையில் வந்தவர். வைத்தியலிங்கம் சிறந்த பொறி யியலாளர். தாயார் இருமரபுந் தூய தனி நாயக முதலி வழிவந்த கதிராசிப் பிள்ளை என்பவராவார்.

வைத்தியலிங்கம் வட்டுக்கோட்டைச் செமினரியில் (தற்போது யாழ்ப்பாணக் கல்லூரி என்றழைக்கப்படுகிறது) ஆங்கிலக் கல்வி பயின்று பெரும் புகழ் பெற்றவர். வட்டுக்கோட்டைச் செமினரியில் கல்வி பயின்றோருக்கு அக்காலத்தில் அமெரிக்க மிஷனரிகள் நிதியுதவி வழங்குவோரின் பெயரைச் சூட்டுவது வழக்கம். இதற் கமைய "போட்" எனும் அமெரிக்கரின் நிதி உதவியினைப் பெற்றமையால் போட் வைத்திய லிங்கம் என இவர் அழைக்கப்பெற்றார். இதன் காரணமாகவே துரைசுவாமியைப் "போட்" துரைசுவாமி என்றும் அழைத்தனர்.

வைத்தியலிங்கம் மலேசியா, சிங்கப்பூர் ஆகியவிடங்களில் பொறியியலாளராகக் கடமையாற்றியவர். கந்தளாயில் காடழித்து கழனிகளாக்கியவர். இவர் கந்தளாயில் அமைத்த பண்ணையை போட்டர் காடு (Porter Kaadu) என்று மக்கள் அழைத் தனர். "போட்டர்" என்பது "போட்" என் னும் சொல்லினின்றும் மருவியதாகும்.

வைத்தியலிங்கம் கதிராசிப்பிள்ளை தம் பதிகளுக்கு மக்கள் அறுவர். மூத்தமகள் பொன்னம்மா அராலியில் வாழ்ந்தவர். விஜயரத்தினம், துரைசுவாமி, பொன்னுத் துரை, இரத்தினகோபால், இராசகோபால் ஆகியோர் ஆண்மக்களாவர். மூத்த மகனான விஜயரத்தினம் மலேயா சென்று பொறியியல் கல்வி பயின்று அங்கேயே பொறியியலாளராகப் பணியாற்றினார். பின்னர் தாயகம் திரும்பியதும் உள்ளூ ராட்சி அரசியலில் நாட்டம் கொண்டு வேலணையில் உருவான கிராம சபையின் முதல் தலைவராகவும் விளங்கியவர். இவரே வேலணையில் சரஸ்வதி வித்தியா சாலை அமைவதற்கு முன்னின்று ழைத்தவர்.

இரண்டாவது மகனான துரைசுவாமி சிறந்த வழக்கறிஞராவார். ஏனைய மூவ ரும் மலேசியாவிலும் இலங்கையிலும் புகழ்பெற வாழ்ந்தோராவர். துரைசுவாமி அவர்கள் வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியில் தமது ஆரம்ப, இடைநிலைக் கல்வியைப் பெற்றார். அங்கு கல்விபயின்ற காலத்தில் கல்வித்துறையில் மட்டுமின்றி விளையாட்டுத் துறையிலும் பல்வேறு சாதனைகளை நிலைநாட்டினார். இவர் யாழ்ப்பாணக் கல்லூரியின் வருடாந்த விளையாட்டுப் போட்டியின்போது 13 நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு அனைத் திலும் முதலிடத்தைப் பெற்றுக் கொண்ட தாகக் கூறுவர். யாழ்ப்பாணக் கல்லூரிப் படிப்பைத் தொடர்ந்து கல்கத்தா பிரசிடென்சி கல்லூரியிற் சேர்ந்து உயர்கல்வி பயின்றார். கல்கத்தா பல்கலைக்கழகத்தில் கணிதம், விஞ்ஞானம் ஆகிய இரு துறைகளிலும்

சிறப்புச் சித்திகளைப் (Double honours in Science & Mathametics) பெற்றார். புகழ்பெற்ற பேராசிரியர்களான சேர். ஜகதீஸ் சந்திர போஸ், பி. சி. ராய் ஆகியோரிடம் கல்வி பயின்ற சிறப்பும் இவருக்குண்டு.

### சட்டத்துறையில்!

விஞ்ஞான, கணிதப் பட்டதாரியான இவர் கல்கத்தாவிலிருந்து இலங்கை திரும்பியதும் சட்டத்துறையில் தமது கவனத்தைச் செலுத்தினார். இலங்கை சட்டக் கல்லூரியிற் சேர்ந்து சட்டக் கல்வி பயின்று தேர்ச்சியடைந்தபின் 1902 ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஆறாம் திகதி உயர் நீதிமன்ற வழக்குரைஞராகச் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். புகழ் பெற்ற வழக்குரைஞரான எச். ஜே. சி. பெரேரா கியூ. சி. அவர்களிடம் (பின்னாளில் இலங்கை தேசிய காங்கிரஸ் தலைவராக விளங்கியவர்) ஜூனியராகப் பயிற்சிபெற்றார். சட்டத்துறையில் நன்கு பயிற்சி பெற்ற துரைசுவாமி 1903 இல் தமது தந்தையாரின் தேகநலன் கருதி யாழ்ப்பாணம் சென்று அங்கு வழக்குரைஞர் தொழிலைத் தொடர்ந்தார்.

சட்டவியலாளர் மத்தியில் பெரும் செல்வாக்குடன் விளங்கிய துரைசுவாமி அவர்கள் 1925 இல் யாழ்ப்பாணத்தில் அரசாங்க வழக்குரைஞராக நியமனம் பெற்றார். இப்பதவியில் 1936 வரை தொடர்ந்தார். யாழ்- நியாயவாதிகள் சங்கத்தின் தலைவராகவும் புகழ்பெற்ற வழக்குரைஞராகவும் அக்காலத்தில் கருதப்பட்டார். 1905 இல் முதலியார் சி. சதாசிவத்தின் மகள் இராசம்மாவைத் திருமணம் செய்து கொண்டார். துரைசுவாமி-இராசம்மா தம்பதிகளுக்கு நான்கு புதல்விகளும் நான்கு புதல்வர்களுமாக எட்டு மக்கள் பிறந்தனர். மகேஸ்வரி, நடேஸ்வரி, மகேந்திரா, இராஜேந்திரா, புவனேஸ்வரி, பரமேஸ்வரி, யோகேந்திரா, தெய்வேந்திரா என அவர்களுக்குப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர். இவர்கள் அனைவரும் பின்னாளில் பெருமை பெற வாழ்ந்தனர்.

### அரசியலரங்கில்...!

நாட்டு விடுதலையிலும் தமிழ் மக்கள் தம் நலன் பேணும் முயற்சிகளிலும் நாட்டம் கொண்ட துரைசுவாமி இலங்கை தேசிய காங்கிரஸ், சிலாபம் சங்கம் என்பனவற்றைப் போன்று வடமாகாண மக்களின் நலன் கருதிச் செயற்படும் வகையில் 1906 இல் யாழ்ப்பாணச் சங்கத்தை (Jaffna Association) த் தாபித்தார். அதன் முதற் செயலாளராகவும் பணியாற்றினார். 1936 வரை இச் சங்கத்துடன் நெருங்கிய தொடர்புடையவராக விளங்கினார். யாழ் - மக்களின் நன்மதிப்பைப் பெற்றிருந்த துரைசுவாமி மக்கள் சேவைக்குத் தம்மை அர்ப்பணிக்கும் வாய்ப்புக் கிட்டியது.

துரைசுவாமி அவர்கள் அரசியலரங்கில் புகுந்த வேளை இலங்கை மக்கள் வெளிநாட்டு வெள்ளையரை வெளியேற்ற வகை தெரியாது வெதும்பிக் கொண்டிருந்தனர். அந்நிய ஆட்சிக்கெதிராகக் குரல் எழுப்புவோரை அடக்கி ஒடுக்குவதிலேயே ஆட்சி பீடத்தினர் முனைப்பாக இருந்தனர். இதன் உச்சக்கட்டமாக 1915 இல் இனக் கலவரம் வெடித்தது. ஆயுதம் தாங்கிய படைகள் அவசரகால விதிகளின் கீழ் அராஜகம் விளைவித்தன. சிங்கள மக்களின் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். அவ்வேளையில் தமிழ் மகன் சேர். பொன் இராமநாதன் முதலாம் உலக மகாயுத்தம் முடிவுறாத நிலையில் தம் உயிரையும் பொருட்படுத்தாது இங்கிலாந்து சென்று இலங்கையில் நடந்த அட்டு

ழியங்களை எடுத்து விளக்கியதன் பேறாக அன்றைய ஆளுநர் சேர் றொபாட் சாமர்ஸ் மாற்றப்பட்டுச் சமரசமனம் படைத்த சேர் ஜோன் அண்டர்சன் ஆளுநராக்கப்பட்டார். இதன் பேறாக இலங்கை அரசியலரங்கில் திருப்பங்கள் ஏற்படத் தொடங்கின. நாட்டின் நடப்பனவில் உள்ளூர்வாசிகளுக்கும் உரிய இடம் வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெறத் தொடங்கியது. சிங்களவர், தமிழர், முஸ்லீம்கள் என்ற வேறுபாடின்றி ஒருமித்து உரிமைக் குரல் எழுப்பத் தலைப்பட்டனர்.

இளைஞரான வைத்தியலிங்கம் துரைசுவாமிக்கு இந்த அறை கூவல் பெரிதும் பிடித்தது. அவரின் அந்த மனோநிலையின் பிரதிபலிப்பே அவர் தொடக்கிய யாழ்ப்பாணச் சங்கமாகும். இச்சங்கத்தின் குறிக்கோள்களில் ஒன்று சனநாயக முறையில் இலங்கைக்குச் சுதந்திரம் பெற்றுக் கொடுப்பது என்பதாயிருந்தது. அன்றைய அரசியல் நிலையைப் புரிந்து அந்நியரின் அழுங்குப் பிடியினைத் தளர்த்த உதவும் நடவடிக்கையில் ஈடுபடத் தொடங்கினார். மன்னிங் அரசியல் சீர்திருத்தப்படி சட்ட சபைக்கு மாகாண அடிப்படையில் உறுப்பினர் தெரிவு நிகழ்ந்தபோது மேல் மாகாணத்திற்கு மூவரும் ஏனைய எட்டு மாகாணங்களுக்கும் தலா ஒருவர் வீதமும் உறுப்பினர்கள் தெரிவுசெய்யப்பட்டனர். இதன் போது வடமாகாணம் முழுவதும் ஒரு தேர்தல் தொகுதியாக்கப்பட்டது. இத் தேர்தலில் போட்டியிட்ட திரு. ஏ. கனகரத்தினத்தை விட 1393 அதிகப்படி வாக்குகளால் இவர் தெரிவு செய்யப் பெற்றார். இது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வாகும்.

1922 இல் அரசாங்கம் வரிகளை உயர்த்த முற்பட்டபோது தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அதனை எதிர்க்கும் வகையில் தமது பதவிகளை இராஜினாமாச் செய்தனர். பின்னர் நிகழ்ந்த தேர்தலில் இவர்கள் அனைவரும் போட்டியின்றித் தெரிவுசெய்யப்பட்டனர். 1924 இல் மனிங்கின் இரண்டாவது யாப்புத் திருத்தப்படி பிரதேசப் பிரதிநிதித்துவம் அதிகரிக்கப்பட்டு வடமாகாணம் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, மத்தி என ஐந்து தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. வடமாகாணத்தின் மேற்குப் பிரிவுத் தேர்தல் தொகுதி சப்ததீவுகளையும் பண்டத்தரிப்பு உடையார் பிரிவு நீங்கலான வலிகாமம் மேற்குப் பிரிவையும் உள்ளடக்கியதாக இருந்தது. இத்தொகுதியில் 1924 இல் திரு. வை. துரைசுவாமி போட்டியின்றித் தெரிவு செய்யப்பட்டார். சுதந்திர வேட்கை கொண்ட துரைசுவாமி அவர்கள் 1928 இல் டொனமூர் ஆணைக்குழு முன் தோன்றித் தன்னாட்சித் தகைமை தரப்பட வேண்டுமென வாதாடினார். பிரித்தாளும் தந்திரத்திற்கு எதிராகக் குரல் கொடுத்தார். டொனமூர் ஆணைக்குழுவின் சிபார்சுகள் அனைவருக்கும் ஏமாற்றமளித்த வேளையில், மக்களின் அரசியல் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்யாத நிலையில் அரசாங்க சபையைப் பகிஷ்கரிக்கும் யாழ்ப்பாண மக்களின் கிளர்ச்சிக்குத் தலைமை தாங்கினார். இதன் பொருட்டு அரசாங்க சபைத் தேர்தலிலும் போட்டியிடாது பகிஷ்கரித்தார். இப் பகிஷ்கரிப்பின் காரணமாக பின்னர் நடத்தப்பட்ட இடைத் தேர்தலிலும் இவர் பங்கு கொள்ள மறுத்துவிட்டார்.

1936 இல் நடைபெற்ற தேர்தலில் ஊர்காவற்றுறைத் தொகுதிப் பிரதிநிதியாகப் போட்டியின்றித் தெரிவுசெய்யப் பெற்ற துரைசுவாமி அவர்கள் அரசாங்க சபையின் சபாநாயகராகவும் தெரிவு செய்

யப்பட்டார். 39 சிங்கள இன உறுப்பினர் களையும் 19 ஏனைய இன உறுப்பினர்களை யும் கொண்டிருந்த அரசாங்க சபையில் 30 உறுப்பினர்களது வாக்குகளைப் பெற்று சபாநாயகர் தேர்தலில் துரைசுவாமி வெற் றியீட்டியமை வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வாகும். இவருடன் போட்டி யிட்ட பிரான்சிஸ் டீ சொய்சா கியூ. சி. 28 வாக்குகளையே பெற்றார். பிரபல வழக்குரை ஞரும் இலங்கை தேசிய காங்கிரஸ் தலை வர்களில் ஒருவருமான பிரான்சிஸ் டீ. சொய் சாவைத் தோற்கடித்ததன் மூலம் துரை சுவாமியின் புகழ் அரசியலரங்கில் முக் கியத்துவம் பெற்றது. 1936 இல் சபாநாயகர் பதவியேற்ற துரைசுவாமி அவர்கள் 1947 வரை (11 வருடங்கள்) அரசாங்க சபையின் சபாநாயகராக அனைவராலும் நீதி தவறா நெறியாளர் எனப் போற்றும் வகையில் பணியாற்றினார். இலங்கையின் முதற் பிர சையாகவும் விளங்கினார்.

## மன்னரின் அழைப்பு

1937 இல் ஆறாம் ஜோர்ஜ் மன்னரின் முடிசூட்டு விழா லண்டனில் நடை பெற்றது. இவ்விழாவுக்கு மன்னராலும் அரசியாலும் இலங்கையின் பிரதிநிதியாகத் துரைசுவாமி அழைக்கப்பெற்றார். அங்கு துரைசுவாமி அவர்களுக்கு மன்னரால் "சேர்" பட்டம் நேரடியாக வழங்கப்பட்டது. லண்டனில் நடைபெற்ற பாராளுமன்ற சங் கத்தின் மாநாட்டிலும் இலங்கையின் பிரதி நிதியாக இவர் பங்கு கொண்டார். மன்ன ரால் நேரடியாகச் "சேர்" பட்டம் வழங்கிக் கௌரவிக்கப் பெற்ற பெருமை இவரையே சாரும். முன்னர் கலாயோகி ஆனந்தக் குமாரசுவாமியின் தந்தையாரான சேர். முத்துக்குமாரசுவாமி அரசியாரிடமிருந்து (விக்ரோறியா இராணியிடமிருந்து) இத்த கைய கௌரவத்தைப் பெற்றிருந்தார். அவரின் பின் சேர். துரைசுவாமி ஒருவரே இத்தகைய கௌரவத்தைப் பெற்றவராவார்.

சேர். வை. துரைசுவாமி அவர்கள் சிறந்த சிந்தனையாளர். அரசியல் சாணக் கியம் மிக்கவர். டாக்டர் என்.எம். பெரேரா, பிலிப் குணவர்த்தனா போன்ற இடதுசாரித் தலைவர்களாலும் சேர். பாரன் ஜயதிலக்கா, சி.ஈ. கொரியா போன்ற சிங்களத் தலை வர்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டவர்.

## "மகேந்திரா" இல்லம்

யாழ்ப்பாணம் மணிக் கூட்டுக் கோபு ரத்தின் பக்கத்தில் அமைந்தது "மகேந்திரா" இல்லம். இதுவே சேர். வை. துரைசுவாமி யின் இல்லமாகும். உலகப் புகழ்பெற்ற தலை வர்களதும் சிந்தனையாளர்களதும் ஆன்மீக வாதிகளதும் பாதம்பட்ட பெருமைக்குரியது இந்த இல்லம். 1927 இல் மகாத்மா காந்தியடி கள், சக்கரவர்த்தி இராஜகோபாலச்சாரி யார் (ராஜாஜி) சகிதம் மகேந்திரா இல்லத் திற்கு விஜயம் செய்து சேர். வை. துரை சுவாமியுடன் உரையாடினார். 1931 இல் பண்டிதர் ஜவகர்லால் நேரு தமது மனைவி கமலாவுடனும் மகள் இந்திரா (காந்தி) வுட னும் மகேந்திரா இலத்திற்கு வருகை புரிந் தமையும் குறிப்பிடத்தக்க நிகழ்வாகும்.

## மகேந்திரா ஒப்பந்தம்

அரசியல் நெருக்கடிகள் உருவாகும் போதெல்லாம் சிங்களத் தலைவர்கள் தமிழ்த் தலைவர்களை நாடிச் சென்று ஒப்பந்தங்களைச் செய்துகொள்வது அன்று முதல் இன்றுவரை வழக்கமாகியுள்ளது. 1925 இல் மகேந்திரா இல்லத்தில் நடை பெற்ற பேச்சுவார்த்தைகள் இலங்கையின் அரசியல் வரலாற்றில் குறிப்பிடத் தக்கவையாகும். திரு. சி. ஈ. கொரியா தலை மையில் வந்த இலங்கை தேசிய காங்கிரஸ்

பிரதிநிதிகளும் சேர். வை. துரைசுவாமி தலைமையிலான (Ceylon Maha Jana Sabha) இலங்கை மகாஜன சபாப் பிரதிநிதிகளும் இவ்வில்லத்தில் இலங்கை அரசியல் சீர் திருத்தம் குறித்து நடத்திய ஆலோசனை களும் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தமும் குறிப்பிடத்தக்கனவாகும். இதனையே மகேந் திரா ஒப்பந்தம் என்றும் அழைப்பர்.

## கல்வித் துறையில்....!

சேர். வை. துரைசுவாமி அவர்கள் கல்வித்துறையில் ஆற்றிய பணிகள் அளப் பரியன. அவை என்றும் நன்றியுடன் நினைவு கூரத் தக்கனவாகும். சைவச் சிறார்கள் சைவச் சூழலில் சைவநெறிப்படி கல்வி பெற வேண்டும் என்னும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரது அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சைவக்கல்வி வளர்ச்சிக்குத் தொண்டாற் றும் நோக்குடன் சைவ வித்தியா விருத்திச் சங்கம் (Hindu Board), சைவபரிபாலன சபை, என்னும் நிறுவனங்கள் உருவாயின. இந் நிறுவனங்களின் தாபக உறுப்பினராகவும் முதற் செயலாளராகவும் பின்னாளில் தலைவராகவும் விளங்கிய பெருமை சேர். வை. துரைசுவாமி அவர்களையே சாரும். சேர். பொன். இராமநாதனின் பின் சைவ வித்தியா விருத்திச் சங்கத்தின் தலைவர் பதவியினை (1923 இல்) ஏற்ற இவர் இந்து போட் இராசரத்தினத்தைச் செயலாள ராகக் கொண்டு வடமாகாணத்தின் பல பாகங்களில் சைவப் பாடசாலைகளையும் திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலை யையும் (1929) நிறுவியதோடு முந்தல், பதுளை போன்ற இடங்களிலும் சைவப் பாடசாலைகள் தோன்றுதற்கு வழி வகுத் தார். அரசாங்கம் பாடசாலைகளைக் கையேற்றபோது இலங்கை எங்கும் 155 பாடசாலைகளுக்கு மேல் இச் சங்கத்தின் முகாமையின் கீழ் இயங்கியமை குறிப் பிடத்தக்கது. இலங்கைப் பல்கலைக்கழக ஆணைக்குழுவில் (1930 இல்) உறுப்பினராக இருந்தபோது பேராதனைப் பல்கலைக் கழகம் அமைதல் அவசியமென வலியுறுத் தினார்.

அரசியல் விழிப்புணர்ச்சியை ஏற் படுத்தினால் மட்டும் போதாது, சமூகத்தின் கல்வி அறிவையும் விருத்தியடையச் செய்ய வேண்டும் என்னும் உன்னத குறிக்கோளு டனேயே இவர் செயற்பட்டார். அறிவு மட் டும் இருந்தால் அது ஆணவத்தையே பிரதி பலிக்கும் என்று கருதியோ என்னவோ ஆன்மீக அடித்தளத்தை அமைக்க உதவும் வகையில் சைவ வித்தியாவிருத்திச் சங்கம், சைவ பரிபாலன சபை, யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி, அதனோடிணைந்த கல்லூரி களின் நிர்வாகப் பொறுப்புக்களில் பங் கேற்று ஆன்மீக அடிப்படையிலான கல்வியி னைப் பெறுவதற்கு வழி வகுத்தார்.

அரசியல் பலம் ஆள்பவர்களிடமிருந்து ஆளப்பட்டவர்களுக்கு மாறுமானால் இன் றைய ஆளப்பட்ட வர்க்கத்தினர் நாளை அரசியல் அறிவு, ஆளுமைத் திறன், ஆன்மீக அடித்தளம் ஆகியவற்றைப் பெற்றிருக்க வேண்டுமெனக் கருதினார். இதன் பொருட்டே யாழ்ப்பாணச் சங்கம் முதலானவற்றில் பங்குகொண்டுழைத்தார்.

ஊர்காவற்றுறைத் தொகுதி உறுப்பின ராகப் பதவிவகித்த வேளையில் சப்ததீவு களிலும் பல்வேறு கல்விக் கூடங்களை நிறுவுவதற்கு முன்னின்றுழைத்தார். சி. டபிள்யு. டபிள்யு. கன்னங்கராவின் இலவசக் கல்வித் திட்டத்தை முழுமனதுடன் ஆதரித் தார். ஊர் தோறும் மகாவித்தியாலயங் களை அமைக்கும் அரசின் திட்டத்திற்கமைய

நெடுந்தீவு, நயினாதீவு, புங்குடுதீவு, மண்டைதீவு ஆகிய இடங்களில் மகா வித்தியாலயங்களையும் அனலைதீவு, தம்பாட்டி, மண்கும்பான், செட்டிபுலம், வேலணை கிழக்கு ஆதியாமிடங்களில் அரசினர் பாடசாலைகளையும் உருவாக்கினார்.

## வேலணை ம.ம.வித்தியாலயம்

தொகுதிக்கு ஒரு மத்திய மகா வித்தியாலயம் அமைக்கும் அரசின் திட்டத்திற்கமைய ஊர்காவற்றுறைத் தொகுதிக்குட்பட்ட சப்ததீவுகளுக்கும் பொதுவான ஓரிடத்தில் அதனை அமைத்திட வேண்டும் எனக் கருதிய சேர். வை. துரைசுவாமி அவர்கள் தாம் பிறந்த காணியில் வேலணை வங்களாவடியில் உள்ள அவரது தமையனார் திரு. விஜயரத்தினத்தால் அமைக்கப்பட்ட சரஸ்வதி வித்தியாலயத்தை மத்திய மகா வித்தியாலயமாக மாற்ற விரும்பினார். ஆனால் பல்வேறு அழுத்தங்கள் காரணமாக அதனைத் திசை திருப்பிடத் தீவிர முயற்சிகள் நடந்தன. எனினும் வேலணைத் தாயின் தவப்புதல்வரான அவர் இம் மகா வித்தியாயலயம் வேலணை என்ற பெயருடனேயே அமைந்திட வேண்டுமென்னும் உறுதிகொண்டவராகவே விளங்கினார். இதன் பேறாகவே இம்மத்திய மகாவித்தியாலயம் வங்களாவடியில் அமையாது சற்று மேற்கு நோக்கி நகர்த்தப்பட்டது என்பதே உண்மையாகும்.

வேலணை மத்திய மகா வித்தியாலயம் இன்று அவரது பெயரால் சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகா வித்தியாலயம் என்று அழைக்கப்படுவது அன்னாரின் கல்விப் பணிகளை நினைவூட்டும் வகையிலேயே அமைந்துள்ளது எனலாம். அவர் நிறுவிய பாடசாலைகளுள் புங்குடு தீவில் உள்ள சேர். வை. துரைசுவாமி வித்தியாலயமும் வேலணை சேர். வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகா வித்தியாலயமும் அன்னாரை என்றும் நினைவூட்டிய வண்ணமிருக்கும் என்றால் அது மிகையல்ல.

## பொதுப் பணிகள்:

தீவுப் பகுதி மக்களின் கல்வி, சமூக, பொருளாதார, போக்குவரத்து, அபிவிருத்திக்காக அன்னார் ஆற்றிய பணிகள் பலவாகும். வேலணையில் இருந்த தமது சொத்துக்களைப் பொது நிறுவனங்களுக்குத் தர்ம சாதனம் செய்ததன் மூலம் வைத்தியலிங்கம் குடும்பத்தினர் தமது பொதுப் பணி ஆர்வத்தினைப் பிரதிபலித்துள்ளனர். தங்கள் தாயாரான கதிராசிப் பிள்ளையின் நினைவாக வேலணை வங்களாவடியில் கதிராசிப்பிள்ளை ஞாபகார்த்த பிரசவ விடுதி ஒன்றினை அமைத்துக் கொடுத்தனர். இது இன்றும் இயங்கி வருகிறது. சப்ததீவுகளிலும் வைத்தியசாலைகளையும் தபால் நிலையங்களையும் நிறுவியதோடு நெடுந்தீவு ஊர்காவற்றுறைப் படகுப் போக்குவரத்துச் சேவையையும் ஏற்படுத்திக் கொடுத்தார். புங்குடுதீவு - வேலணைப் பாலம், பண்ணைப் பாலம் என்பன அமைவதற்கும் ஆதரவு வழங்கினார்.

## ஆன்மீகவாதி

சேர். வை. துரைசுவாமி சிறந்த ஆன்மீகவாதி. அவர் ஒரு நடைமுறை யோகி. அவரின் அரசியல் வாழ்க்கை ஆன்மீக கருத்துக்களின் அடிப்படையில் வழிநடத்தப்பட்டது. அவரது ஆழ்ந்த அறிவின் நிமித்தமும் பரந்த அனுபவத்தின் நிமித்தமும் சட்ட சபை அங்கத்தவர்கள் பெரிதும் பயன் எய்தினார்கள். சபாநாயகர் என்ற

முறையில் அவர் இணையற்ற வெற்றி கண்டவர். பின் ஆசன உறுப்பினர்களதும் செல்வாக்குக் குறைந்த அங்கத்தவர்களதும் உரித்துக்களை எந்நேரமும் உறுதிப்படுத்தியவர் எனச் செனட் (மூதவை) சபையின் தலைவர். ஏ. இரத்தினாயக்கா அவர்கள் சேர். துரைசுவாமியின் பெருமையினைக் குறிப்பிட்டுள்ளமை இங்கு நினைவு கூரத்தக்கது. சேர். வை. துரைசுவாமி அவர்கள் யாழ்ப்பாணத்து யோகர் சுவாமிகளின் பேரன்புக்குரியவர். அவரை எந்நேரமும் பணிந்து வணங்கும் பண்பு கொண்டவர். மகேந்திரா இல்லத்திற்குச் சுவாமிகள் அடிக்கடி எழுந்தருளி ஆலோசனைகள் வழங்குவது வழக்கம். சுவாமிகளின் அருள் வாக்குகள் துரைசுவாமி அவர்களின் வாழ்க்கை நெறியை வளப்படுத்தியமையை அனுபவபூர்வமாக அறிந்துகொள்ள முடிகிறது.

1947 ஆம் ஆண்டுப் பாராளுமன்றத் தேர்தலில் ஊர்காவற்றுறைத் தொகுதியில் போட்டியிட்டுத் தோல்விகண்ட பின் அவர் அரசியலிலிருந்து ஓய்வுபெற்றதோடு பொதுப் பணிகளில் தமது கவனத்தைப் பெரிதும் செலுத்தினார். சமய தத்துவத் துறைகளில் தீவிர ஆர்வம் காட்டினார்.

### அவர் ஒரு முழுமையான மனிதன்.

சேர். வை. துரைசுவாமி அவர்கள் ஒரு முழுமையான மனிதன். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவர். ஆயிரம் பிறைகண்டவர். உண்மையான சமயவாதி. ஐக்கிய இலங்கையை விரும்பியவர். அதேவேளையில் தமிழ் மக்களின் உரிமைகளுக்குச் சிறிதும் பங்கம் ஏற்பட அனுமதிக்க முடியாது என்ற உறுதியான கொள்கை கொண்டவர். நேர்மை, திறமை, கண்ணியம், கட்டுப்பாடு அனைத்தும் கொண்டவர். மூத்த அரசியலறிஞர். மிகப் பெரிய தேசாபிமானி, தேசியத் தலைவர். தேசிய வீரராக மதிக்கப் பெற்று இலங்கை அரசினால் முத்திரை வெளியிட்டுக் கௌரவிக்கப் பெற்றவர். 92 ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த (1966 இல்) பெரியார். அவரைப் போன்ற அருங்குணங்கள் கொண்ட அரசியல்வாதியை, சமூகத் தொண்டரை, சமயாபிமானியைக் காண்பது அரிது. மறைந்தும் மறையாத புகழ்படைத்த இவ் வேலணை மகனின் நாமம் என்றும் நிலைத்து நிற்குமென்பதில் ஐயமில்லை.



# அரசியற்றுறைப் பெரியோர்கள்

# அமரர் வீ. ஏ. கந்தையா

திரு. செ. குணபாலசிங்கம்
(முன்னாள் அதிபர், சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி
ம.ம.வி.- வேலணை.)

"வேலணை வங்களாவடியில் துள்ளி விளையாடுவதும், வயலிற் சென்று நெற் கதிர் பொறுக்குவதும், தேவ குளத்தில் குளிப்பதும், மண்கும்பான் சாட்டியில் நீந்து வதும், பண்ணை கடற்கரையில் காற்று வாங்குவதும் நினைவுக்கு வந்தால் தலை நகர் (கொழும்பு) வாழ்க்கை எம்மாத்திரம்?"

இவ்வாறு இளமைக்கால நிகழ்வுகளை இதயம் மகிழ்ந்து உரைத்தவர் வேறு எவரும் அல்ல. ஊர்காவற்றுறை தொகுதி மக்கள் தம் உள்ளமெல்லாம் கொள்ளை கொண்ட வேலணை மண்மறவா மைந்தன் அமரர் வீ. ஏ. கந்தையா அவர்களேயா வார். சப்த தீவுகளையும் உள்ளடக்கிய ஊர் காவற்றுறை தொகுதியின் முடிசூடா மன்னனாக 1956 ஆம் ஆண்டு முதல் 1963 ஆம் ஆண்டுவரை விளங்கிய பெருமைக் குரியவர் இவர். நெடுந்தீவில் இருந்து எழுவைதீவு வரை, புங்குடுதீவில் இருந்து காரைநகர் வரை (காரைதீவு) சிறுவர் முதல் பெரியோர் வரை அனைவராலும் அறியப்பட்ட, நேசிக்கப்பட்ட, மக்கள் பிரதிநிதி அவர். அவரைப்போன்ற ஒரு மக்கள் பிரதிநிதியை இன்று காண்பது அரிது.

செந்தமிழும் சிவநெறியும் மறவா சீல ராய் நற்றமிழ் வல்ல நயத்தகு நாயகனாக வலம் வந்தபெரியார் இவர். இவரது வர லாறு இன்றைய இளஞ் சந்ததியினர் இதயத் திற் பதித்திட வேண்டிய ஒன்றாகும். அமரர் வீ. ஏ. கந்தையா அவர்கள் சமய சமூக சட்ட அரசியற் துறைகளில் தமக்கெனத் தனியான முத்திரை பதித்துக் கொண்டவர்.

பழிவாங்கும் மனப்பாங்கு அற்றவர். எதிரியையும் நண்பனாக கருதி, இன்னருள் புரிந்தவர். சாதாரண ஒரு குடும்பத்தில்

பிறந்து தமது சுய முயற்சியால் சட்டவியலில் முன்னணி வகித்தவர். நாட்டு மக்களால் நன்கு மதிக்கப்பட்டவர். நகைச்சுவையாகப் பேசவல்லவர். அவரது பேச்சே மக்களைத் தம்மிடத்துக் கவரும் தன்மை வாய்ந்தது. வெறும் வாய் வீச்சாளர் அல்லர். சிறந்த செயல் வீரர். திட்டமிட்டு எக்கருமத்தையும் திறம்பட ஆற்றும் திறன் படைத்தவர். இதனாற்றான் 1956ஆம் ஆண்டு முதல் 1963 ஆம் ஆண்டு வரை மூன்று பொதுத் தேர்தல்களை எதிர்கொண்டு பல்லாயிரக் கணக்கான வாக்குகளால் வெற்றிவாகை சூடினார்.

### இளமைப் பருவத்தில்:

அமரர் வீ. ஏ. கந்தையா வேலணை வங்களாவடியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். அவரது தந்தையார் வேலுப்பிள்ளை அம்பலவாணரும், தாயார் இராசம்மாவும் சிறந்த சமய பக்தர்கள். இவர்களுக்கு இரு புதல்வர்களும் இரு புதல்விகளும் பிறந்தனர். மூத்தவர் தான் வீ. ஏ. கந்தையா. மூத்ததங்கை சொர்ணலட்சுமி, இளைய தங்கை இராசலட்சுமி, ஒரே ஒரு தம்பி சுந்தரம்பிள்ளை.

மூத்த தங்கை சொர்ணலட்சுமி யாழ்-தலையாழியைச் சேர்ந்தவரும் கல்கத்தா பல்கலைக்கழக ஆங்கில வரலாற்றுத் துறைப் பட்டதாரியும் "ஷேக்ஸ்பியர்" என அழைக்கப்பட்டவருமான திரு. வி. நாகலிங்கம் அவர்களை மணம் முடித்தவர். "ஷேக்ஸ்பியர்" நாகலிங்கம் முன்னாள் சட்ட நிரூபண சபை உறுப்பினரான கௌரவ சபாபதிப்பிள்ளையின் நெருங்கிய உறவினர்.

யாழ்-இந்துக் கல்லூரியின் புகழ் பெற்ற ஆசிரியராகவும் பின்நாளில் கொக்குவில் இந்துக் கல்லூரியின் நல்லதிபராகவும் விளங்கியவர்.

இளைய தங்கை இராசலட்சுமி மணம் முடிக்கும் முன்பே இறந்துவிட்டார். தம்பியாரான சுந்தரம்பிள்ளையும் நியாய துரந்தராகப் (Proctor's Caurse) படித்துக் கொண்டிருந்த வேளை இறந்துவிட்டார்.

திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் தமது ஆரம்பக் கல்வியை வேலணை வங்களாவடியில் உள்ள அமெரிக்கன் மிசன் பாடசாலையில் பெற்றார். பின்னர் யாழ்- இந்துக் கல்லூரியில் சேர்ந்து இரண்டாம் நிலைக் கல்வியைத் (Secondary Education) தொடர்ந்தார். அங்கு கல்வி பயிலும் காலத்தில் கணிதத்தில் மிகத் திறமைசாலியாக விளங்கினார். யாழ் - இந்துக் கல்லூரியில் (Junior Cambridge, Senior Cambridge, Matriculation) பரீட்சைகளில் மிகத் திறமையாக சித்தியெய்தினார். பின்னர் கொழும்பு பல்கலைக்கழக கல்லூரியில் (Colombo University College) உயர் படிப்பை மேற்கொண்டு கணிதத்தை சிறப்புப் பாடமாக எடுத்து முதற்தரத்தில் சித்தியெய்தினார். இது பெருஞ்சாதனையாகக் கருதப்பட்டது. பின்னர் கொழும்பு அக்குவினாஸ் (Acquinas College) கல்லூரியில் கணித ஆசிரியராகவும், சிறிது காலம் கணித பாடக் கல்விப் பரிசோதகராகவும் (Inspector of School in Maths) பணியாற்றினார். இயல்பாகவே மக்கள் தொடர்பை நாடி நிற்கும் பண்பு கொண்ட திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் சட்டத்துறையில் புகுந்து மக்களுக்குத் தொண்டாற்ற முடியும் எனக் கருதினார். இதன் காரணமாகச் சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டக் கல்வி பயின்றார்.

### சட்டத்துறையில்:

கூர்ந்த மதிநுட்பமும் எதனையும் நுணுக்கமாக ஆராயும் திறனும் கொண்ட

இவர் சட்ட நுணுக்கங்களை நன்கறிந்து சட்டத்துறையில் வெகுவிரைவில் புகழீட்டினார். கொழும்பு மா நகரில் சிறந்த சிவில் அப்புக்காத்தாக விளங்கினார். தமிழர்களுக்கு மட்டுமன்றி தென்னிலங்கை மக்களுக்கும் மிகவும் வசதிபடைத்த இந்திய வர்த்தக சமூகத்தினருக்கும் சட்ட ஆலோசகராகவும் விளங்கிப் பெரும் புகழ் பெற்றார். வருமானமும் அதிகரித்தது. நேர்மை, அடக்கம் நியாயத்திறன் அனைத்தும் கொண்ட நியாயவாதியாக விளங்கியமையால் இவரை நாடிவருவோர் தொகை நாளுக்கு நாள் அதிகரித்தது. இதன்பேறாக கொழும்பு உயர் நீதிமன்ற வளாகம் அமைந்துள்ள பகுதியில் (Hulfts Dorp) இரு வீடுகளுக்கு சொந்தக்காரனாக மாறினார். சட்டத்துறையில் இவர் புகழ் பெருகிய வேளையில் இவரது திறமையையும் சட்டவியல் ஆற்றலையும் நன்குணர்ந்த அரசினர் நீதிபதி பதவியையும் இராணி அப்புக்காத்து (Q.C.) பட்டத்தையும் வழங்க முன்வந்தனர். சுதந்திரமாக செயற்படும் உணர்வு கொண்ட இவர் அவற்றை ஏற்க மறுத்துவிட்டார். தொடர்ந்து சட்ட்வாதியாக விளங்கவே விரும்பினார்.

## இல்லற வாழ்வில்:

இலங்கை உயர்நீதிமன்ற நீதியரசர்களுள் பெரும் புகழ் பெற்றவர் நீதியரசர் திரு. என். நடராஜா (Q.C.) இவர் காரை நகர் களபூமியைச் சேர்ந்தவர். இவரது தங்கை நேசமணி. அன்பும் பண்புமிக்க இப் பெண்மணியை மணம் முடித்தார், திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள். சட்ட வல்லுனர்களான ஏ. வி. குலசிங்கம், நீதியரசர் சர்வானந்தா (பிரதம நீதியரசராகவும் மேல்மாகாண ஆளுநராகவும் கடமையாற்றியவர்) ஆகியோர் திருமதி. நேசமணி கந்தையாவின் நெருங்கிய உறவினர்கள். இதன் காரணமாகக் கந்தையா அவர்களுக்குப் பின் நாளில் காரைநகரிலும் அரசியற் பலம் அதிகரிக்க வழிபிறந்தது.

வீ. ஏ. கந்தையா நேசமணி தம்பதிகளுக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தனர். மூத்த மகள் யோகேஸ்வரி. இவர் ஒரு பௌதீகவியல் (Physics Honours) பட்டதாரி. இலங்கையிலுள்ள பிரபல இருதயநோய் நிபுணர்களில் ஒருவரான டாக்டர் என். ஜே. வாலுப்பிள்ளை அவர்களைத் திருமணம் புரிந்துள்ளார்.

இரண்டாவது மகளான ஞானேஸ்வரி மணம் முடிக்காது இறந்து விட்டார். மூன்றாவது மகளான மங்கையற்கரசி ஒரு பட்டதாரி. இவர் மணம்முடித்து வெளிநாடொன்றில் தற்போது வாழ்கின்றார். ஆசைப் புதல்வனான யோகேந்திரன் ஒரு பொறியியலாளர். இவர் மணம் முடித்து வெளிநாட்டில் வசித்து வருகின்றார்.

அமரர் வீ. ஏ. கந்தையா அவர்கள் இலட்சிய புருடர். எதையும் நன்கு சிந்தித்துச் செய்யும் செயற்றிறன் மிக்கவர். கொழும்பு நீதிமன்ற வளாகப் பகுதியில் வாழ்வது அவரது தொழில் வளர்ச்சிக்கு உதவுமே தவிரப் பிள்ளைகளின் கல்வி வளர்ச்சிக்கும் அமைதியான வாழ்விற்கும் பெரிதும் பயன் படாது என்பதை உணர்ந்தார். பிள்ளைகளின் கல்வி வளர்ச்சியைக் கருத்திற்கொண்டு கொள்ளுப்பிட்டி பீட்றிஸ் (Pedris Road) வீதியில் காணி வாங்கி வீடு கட்டி குடியேறினார். மகனை கொழும்பு றோயல் கல்லூரியிலும் புதல்விகளை கொழும்பு மகளிர் கல்லூரியிலும்(Ladies College) கல்வி பயில வைத்தார். அதேவீதியில் மற்றொரு வீட்டையும் நிர்மாணித்து மூத்தமகளுக்குக் கொடுத்தார். இன்றும் அவர்கள் அவ்வீட்டிலேயே வாழ்ந்து வருகின்றனர்.

பெரும் செல்வர்க்கும் வளமும்

நிறைந்தவராய் மேலைநாட்டுப் பாணியில் தலைநகரில் வாழ்க்கை நடாத்தினாலும் அவரது உள்ளம் கிராமிய வாழ்வையே பெரிதும் நாடியது. பிற்காலத்தில் தாம் பிறந்து வளர்ந்த வேலணை மண்ணில் வாழ்ந்திடவே அவர் பெரிதும் விரும்பினார். அதன் பொருட்டே (1960 - 1961) வீடொன்றையும் பெரியளவில் கட்டினார்.

## அரசியல் அரங்கு:

கொழும்பு மாநகரில் சட்டத் தொழிலில் பெரும் புகழ் பெற்றிருந்த கந்தையா அவர்கள் அரசியல், சமய, சமூக, பணிகளில் இயல்பாகவே நாட்டம் கொண்டவர். இந்துக் கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே அவர் சிறந்த சைவாபிமானியாக மாறிவிட்டார். தாயாரின் வளர்ப்பு முறையே அதற்கு முக்கிய காரணம் எனலாம். கொழும்பில் வாழ்ந்தபோது 1947 ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் சுயேட்சை வேட்பாளராகக் கொழும்பு மத்திய தொகுதியில் போட்டியிட்டார். வெற்றி வாய்ப்பைப் பெறத் தவறியபோதும் தேர்தல் நுட்பங்களை அனுபவ ரீதியாக அறிந்துகொள்ளும் வாய்ப்பினைப் பெற்றார். சாதாரண மக்களுடன் ஊடாடி, அவர்களின் இன்பதுன்பங்களில் பங்கு கொள்வதன் மூலமே மக்கள் ஆதரவைப் பெற முடியும் என்பதை உணர்ந்து கொண்டார். கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் தலைவராகத் தலைநகர் வாழ் தமிழர்களின் மதிப்பிற்கும் அன்பிற்கும் பாத்திரரானார். தமிழ் உணர்வை ஊட்டினார்.

## சிலப்பதிகார விழா:

ஊர்காவற்றுறை தொகுதியில் போட்டியிட்டு மக்கள் பிரதிநிதியாகப் பாராளுமன்றம் செல்ல வேண்டும் என்ற எண்ணம் அவர் மனதில் உதித்தது. இதற்கு முன்னோடியாகத் தீவுப் பகுதி மக்கள் மத்தியில் தம்மை அறிமுகப்படுத்திட வேண்டும் எனக் கருதினார்.

திட்டமிட்டுச் செயற்படும் செயல்வீரரான அவர் தம்மை மக்கள் முன் அறிமுகப்படுத்திடச் செயற்றிட்டங்கள் சிலவற்றை வகுத்தார். அதிலொன்றுதான் புங்குடுதீவில் சிலப்பதிகார விழா ஒன்றினை நடாத்துதல். கொழும்பில் உள்ள புங்குடுதீவை சேர்ந்த வர்த்தகர்கள், தமிழ் ஆர்வலர்கள் அனைவரையும் ஒன்றிணைத்தார். புங்குடுதீவு "மஹாஜன சபை" என்ற அமைப்பினது ஆதரவையும் பெற்றார். இலங்கையிலேயே முதன் முதலாக சிலப்பதிகார விழா ஒன்றினை எடுத்த பெருமையினைத் தமதாக்கிக் கொண்டார். 1954ஆம் ஆண்டு சித்திரை திங்களில் புங்குடுதீவின் தெற்குக் கடலோரத்தில் அமைந்துள்ள கண்ணகி அம்மன் (ஸ்ரீ இராஜராஜேஸ்வரி அம்மன்) ஆலய முன்றலில் சிலப்பதிகார விழாவை ஏற்படுத்தினார். மூன்று தினங்களுக்குத் தொடர்ந்து நடைபெற்ற இவ்விழாவில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். தமிழ்நாட்டில் இருந்து சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், பேராசிரியர் ஆ. முத்துசிவன், செல்வி ஆ. ரா. இந்திரா ஆகியோர் சிறப்புப் பேச்சாளர்களாக அழைக்கப்பட்டு இருந்தனர். தென்றல் காற்றின் தழுவலில் தேன்மதுரத் தமிழோசையினை மக்கள் நுகர்ந்தனர். பின்னணியில் அவரது அரசியல் போட்டியாளரும் பாராளுமன்ற உறுப்பினராகவும் விளங்கிய திரு ஏ. எல். தம்பிஐயா அவர்களும் கலந்து கொண்டமை குறிப்பிடத்தக்கது.

## திருமுறை மாநாடு:

புங்குடுதீவில் சிலப்பதிகார விழாவை வெற்றிகரமாக நடாத்தி முடித்த வீ. ஏ.

கந்தையா அவர்கள் வேலணையில் 1955 இல் திருமுறை மகாநாடு ஒன்றினை நடாத்துதற்கு ஏற்பாடு செய்தார். இலங்கையிலேயே மிகப் பரந்தஅளவில் மக்கள் பங்கு கொள்ளும் முறையில் இம்மாநாட்டை வேலணை மத்திய கல்லூரி (தற்போது சேர். வை. துரைசுவாமி ம.ம.வி) முன்றலில் மூன்று தினங்கள் நடாத்துதற்கான ஒழுங்குகளை ஏற்படுத்தினார். மாநாட்டு ஏற்பாட்டுக் குழுவை அமைத்து அதன் மூலம் மாநாட்டை திறம்பட நடாத்தினார். தமிழ் நாட்டில் இருந்து, தவத்திரு குன்றக்குடி அடிகளார், "கலைமகள்" ஆசிரியர் கி. வா. ஜெகநாதன், பேராசிரியர் வச்சிரவேலு முதலியார் ஆகியோர் உட்படப் பல அறிஞர்களைப் பங்குபெறச் செய்தார். தமிழகத்து, ஈழத்து அறிஞர்கள் பலரும் பங்கு கொண்ட இம்மாநாடு திரு. வீ. ஏ. கந்தையாவின் செயற்றிறனை மக்கள் மத்தியில் எடுத்துக் காட்டுவதாக அமைந்தது. மாநாட்டில் பங்கு கொண்ட தமிழகத்து அறிஞர்களை நயினா தீவு, அனலைதீவு, ஆதியாம் இடங்களுக்கும் அழைத்துச் சென்று சொற் பெருக் காற்ற வழி செய்தார். இவற்றின் மூலம் தீவுப் பகுதியில் தம்மை நன்கு அறிமுகப்படுத்திக் கொண்டார்.

### தேர்தல் காலத்தில்:

1956 ஆம் ஆண்டு இலங்கை அரசியல் வரலாற்றில் குறிப்பிடத்தக்கதோர் ஆண்டாகும். தென்னிலங்கையில் பண்டாரநாயக்க அலையும், வடகிழக்கில் தமிழரசு அலையும் வீசிய காலம். தந்தை செல்வாவின் தலைமையிலான தமிழரசு கட்சியின் ஸ்தாபக உறுப்பினரான திரு. வி. நவரத்தினம் திரு. ஏ. எல். தம்பிஐயாவின் கோட்டையாக விளங்கிய ஊர்காவற்றுறை தொகுதியில் போட்டியிடுவதற்கு தகுந்தவர் திரு. வீ. ஏ. கந்தையா அவர்களே என்பதை நன்குணர்ந்து தாம் போட்டியிடாது. திரு. கந்தையா அவர்களையே விதந்துரைத்தார். தமிழரசுக் கட்சியில் இணைந்து கொண்ட திரு. வீ. ஏ. கந்தையா விரைவில் தமிழரசு தந்தை செல்வாவினதும் தலைவர் கு. வன்னியசிங்கம் அவர்களினதும் நம்பிக்கைக்குரியவராக மாறினார். ஊர்காவற்றுறை தொகுதி நெடுந்தீவு முதல் காரைநகர் வரை சப்த தீவுகளையும் உள்ளடக்கியது. இத்தொகுதியில் தேர்தல் பிரசார வேலைகளை மேற்கொள்வது மிகமிகக் கஷ்டமானது. ஏனைய தொகுதிகளைப் போன்றதல்ல. இத்தொகுதியில் 1947, 1952 பொது தேர்தல்கள் இரண்டிலும் போட்டியிட்டு வெற்றியீட்டியவர், திரு. ஏ. எல். தம்பிஐயா. திரு. அல்பிரட் தம்பி ஐயாவின் கோட்டையாகவிருந்த இத் தொகுதியில் போட்டியிட திரு. வீ. ஏ. கந்தையா முன்வந்தபோது பலரும் ஆச்சரியமுற்றனர். பிரபல தனவந்தரான தம்பி ஐயாவுடன் மோதுவது மலையோடு மோதுவது போன்றதென்று வசைபாடினர் சிலர். ஆனால் "கடுகு சிறிதானாலும் காரம் பெரிது" என்பதுபோல் மன உறுதியும் செயற்றினும் உண்டெனில் மலையையும் அசைத்திட முடியுமென்பதை செயலில் நிரூபித்துக் காட்டினார் திரு. வீ. ஏ. கந்தையா.

### யோகரின் அன்பர்:

அமரர் வீ. ஏ. கந்தையா யாழ்ப்பாணத்து யோகர் சுவாமிகளின் பேரன்புக்குரியவர். யோகர் சுவாமிகளின் தவ வலிமை யிலும் ஆழ்ந்த அறிவிலும் அருளாசியிலும் அதிக ஈடுபாடு கொண்டவர்.

எச்செயலிலும் இறங்குமுன் சுவாமிகளைத் தரிசித்து ஆசி பெற்ற பின்னரே அதனை தொடங்குவது அவரது வழக்க

மாகும். ஊர்காவற்றுறை தொகுதியில் போட்டியிட தீர்மானித்ததும் யாழ்ப்பாணம் வந்த கந்தையா அவர்கள் சுவாமிகளை தரிசிப்பதற்காக அதிகாலை நேரம் அவரது ஆச்சிரமத்துக்குப் புறப்பட்டார். திரு. கந்தையா அவர்கள் சுவாமிகளது ஆச்சிர மத்துக்கு புகுதற்கு சில நிமிடங்களிற்கு முன் சுவாமிகள் ஆச்சிரமத்துக்கு வந் திருந்த பக்தர்கள் சிலரைப் பார்த்து, "தீவுப் பகுதி மன்னன் வரப்போகின்றான்" தீவுப் பகுதி மன்னன் வரப்போகின்றான்" என்று கூறி இருக்கின்றார். என்ன ஆச்சரியம்! சில நிமிடங்களில் திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் சுவாமிகள் முன் வந்து நின்றார். சுவாமிகளின் அருள் ஆசியுடனேயே அவர் தேர்தல் நியமனப் பத்திரத்தை தாக்கல் செய்தார். அமரர் கந்தையாவின் மைத்து னர் "ஷேக்ஸ்பியர்" நாகலிங்கம் அவர்களின் இல்லத்தில் வைத்தே வேட்பு மனுவை கைச் சாத்திடும்படி சுவாமிகள் கூறி இருந்தார். அவரது அருளாசிப்படியே மனுவும் கைச் சாத்திடப்பட்டது.

சுவாமிகள் மீது அமரர் கந்தையா கொண்டிருந்த அன்பையும் பற்றையும் பிர திபலித்துக் காட்டும் வகையில் தமது மூத்த மகளுக்கு யோகேஸ்வரி என்றும் தமது புதல்வனுக்கு யோகேந்திரன் என்றும் சகோதரியின் மகனுக்கு யோகநாதன் என்றும் பெயர் சூட்டி இருந்தார். அர சியல் களத்தில் திரு. கந்தையா அவர் கள் எதிர்நோக்கிய விடயங்கள் குறித்துப் பல தடவைகளிலும் சுவாமிகள் எச்சரித் துள்ளார். காலிமுகச் சத்தியாக் கிரக போராட் டம், கறுப்புக்கொடி காட்டும் போராட் டங்களில் ஈடுபடப் போகுமுன் "கந்தையா அடிபடப் போகின்றான், உதை படப் போகின்றான்" என்று சுவாமிகள் கூறி யுள்ளார். அவ்விதமே காலிமுக சத்தியாக் கிரகத்தின் போதும், அமைச்சர் ரி.பி. இலங்கரெத்தினா விற்குக் கறுப்புக் கொடி காட்டும் போராட்டத்திலும் அவர் தாக் கப்பட்டார். காயங்களுக்கு உள்ளானார். திரு. கந்தையா அவர்கள் யாழ்ப்பாணம் சிவதொண்டன் நிலையத்துடனும் நெருங் கிய தொடர்பு கொண்டிருந்தார். வாழ்நாள் முழுவதும் சுவாமிகளது அன்புக்கு பாத்திர ராக விளங்கினார்.

## இலட்சிய வீரர்:

வீ. ஏ. கந்தையா அவர்கள் இலட்சிய வீரர். கொண்ட கொள்கை மாறாதவர். ஊர்காவற்றுறை தொகுதியில் 1956 இல் நிகழ்ந்தபொதுத் தேர்தலில் தமிழரசுக் கட்சி சார்பில் போட்டியிட்ட திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் தமிழுணர்ச்சியை தட்டி எழுப்பினார். தமிழாசிரியர்களினதும் தாய் மார்களினதும் பேரன்புக்குரியவரானார். காரைநகரில் விவாகம் செய்திருந்த தொடர் பினால் காரைநகர் மக்களினது பேராதர வும் இவருக்குக் கிடைத்தது. இவரது பிர சார உத்திகள் தனித்துவமானவை. வீடு தோறும் நேரில் சென்று மக்களை சந்திப் பது இவரது தேர்தல் உத்தியாகும்.

வீடுதோறும் செல்லும்போது "தமிழ்த் தாய்க்கு வணக்கம்" என கூப்பிய கைக ளுடன் சமையலறை வரை துணிந்து செல் வார். அவரைக் கண்டதும் தாய்மார்கள் தங்கள் சொந்தபிள்ளை போல் அன்பு பாராட்டி வரவேற்று உபசரிப்பர். "எங்கள் வீட்டுப் பிள்ளை" என கூறி மகிழ்வர். இந்தபிரசார உத்தியே தீவுப் பகுதியில் திரு. அல்பிரட் தம்பிஐயாவின் பணபலத் தையும் ஆட்பலத்தையும் ஓரங்கட்டித் திரு. வீ. ஏ. கந்தையாவை தீவுப் பகுதியின் முடி சூடா மன்னனாக வெற்றிவாகை சூடச் செய்தது. (9780 மேலதிக வாக்குகளால்

இவர் வெற்றி பெற்றார்). இத்தேர்தலில் திரு. தம்பிஐயா பெற்ற வாக்குகள் 6599 மட்டுமே. இந்தவெற்றி 1960 மார்ச் மாதம் நிகழ்ந்த தேர்தலிலும் 1960 ஜூலையில் நடந்த தேர்தலிலும் தொடர்ந்து தீவுப் பகுதி தொகுதியை தமிழரசு கட்சியின் கோட்டை யாக மாற்றிய பெருமை திரு. வி. ஏ. கந்தையா அவர்களையே சாரும். அவரின் பின் போட்டியிட்ட தமிழரசுக் கட்சி வேட் பாளர்கள் வெற்றிவாகை சூடிட அடித்தள மாக அமைந்தது அவரது செயற்பாடு களே எனலாம்.

## சத்தியாக்கிரக போராட்டங்களில்:

தமிழரசுக் கட்சி நடாத்திய சகல போராட்டங்களிலும் கலந்து கொண்டவர் திரு. கந்தையா. சிங்களம் மட்டும் சட்டத் திற்கு எதிராகக் காலிமுகத்திடலில் நிகழ்ந்த சத்தியாக் கிரகப் போராட்டத்தில் காடை யர்களால் தாக்கப்பட்டார். யாழ்ப்பாணத் தில் நிகழ்ந்த சத்தியாக்கிரக போராட்டத் தின் போது நள்ளிரவில் கைது செய்யப் பட்டு, "பனாகொடை" இராணுவ முகா மிற்கு கொண்டு செல்லப்பட்டு தடுப்புக் காவலில் வைக்கப்பட்டார். யாழ்ப்பாணம் பெரியகடை "சத்திரச் சந்திக்கு" அருகாமை யில் அமைச்சர் ரி.பி. இலங்கரெத்தினா மக்கள் வங்கி கிளையை திறந்துவைக்க முற்பட்டபோது கறுப்பு கொடிகாட்டி ஆர்ப் பாட்டம் செய்த வேளை பொலிசாரின் தாக்குதல்களுக்கு இலக்கானார். இதுவே அவரது திடீர் மறைவுக்கும் மூலகாரண மாயிற்று. திருமலை யாத்திரையின் போதும் ஏனைய போராட்டங்களின் போதும் அவர் தவறாது கலந்து கொண்டார். 1961 இல் யாழ்ப் பாணம் கச்சேரிக்கு முன்பாக இடம் பெற்ற தொடர் சத்தியாக்கிரக போராட் டத்தில் தீவிரமாகப் பங்குகொண்டார். திரு. கந்தையா தீவுப் பகுதியின் பல்வேறு பாகங் களில் இருந்தும் மக்களை ஒன்றுதிரட்டி அணி யணியாக அங்கு வருகைதரச் செய்தார். கடலலையென திரண்டு வந்த இந்த மக்கள் கூட்டம் கண்டு சிங்கள அரசு மட்டுமன்றி ஏனைய தொகுதி மக்களும் அதிசயித்தனர். பண்ணைப் பாலம் வழியாக "அறப் போர் தொடுப்போம். அடிமை விலங்கறுப்போம்" என முழங்கிய வண்ணம் வந்த இந்த மக்கள் வெள்ளம் வீ. ஏ. கந்தையா அவர் களின் திட்டமிட்ட செயற்றிறனை எடுத்துக் காட்டுவதாக அமைந்திருந்தது.

## தேவைகளை நிறைவேற்றினார்:

தீவுப் பகுதி மக்களின் தேவைகளோ பலப்பல. அவற்றை நன்குணர்ந்தவர் கந்தையா. ஏனைய சில பாராளுமன்ற உறுப் பினர்களைப் போல் அவர் மேடைப் பேச் சோடு மட்டும் அமைதி பெறுபவர் அல்ல. இரவுபகலாக தொகுதி மக்களின் தேவை களைக் கருதி செயற்பட்டார். "ஆடுகின்ற மாட்டை ஆடிக் கறக்கணும். பாடுகின்ற மாட்டைப் பாடிக் கறக்கணும்." என்ற பழமொழிக்கேற்ப யார் யாரை வசப்படுத்த முடியுமோ அவர்களைத் தம் பேச்சு வன் மையால் அணுகுமுறையினால் வசப்படுத்தி மக்கள் தேவைகளை நிறைவேற்றியவர். இதனாலேயே தொகுதி மக்கள் இன்றும் நன்றியுடன் அவரை நினைவில் கொண் டுள்ளனர்.

தென்னிந்தியாவில் கல்விகற்றுப் பட்ட தாரியானோர் பலர் வேலையின்றி பல வருட காலம் காத்திருந்தனர். இந்நிலையை சுட்டிக் காட்டி ஒரே நாளில் நாற்பத்தி யொரு (41) பேருக்கு மேல் பட்டதாரி ஆசி ரியர் நியமனத்தைப் பெற்றுக் கொடுத்த பெருமை திரு. வீ.ஏ.கந்தையா அவர் களையே சாரும். தீவுப் பகுதியில் உள்ள சகல வைத்தியசாலைகளினதும் குறை

பாடுகளை நீக்கியதோடு ஊர்காவற்றுறை புங்குடுதீவு வைத்தியசாலைகளில் புதிய வாட்டுகளையும் அமைத்திட வழிசெய்தார். நெடுந்தீவு மக்களின் போக்குவரத்து கஷ்டங்கள் பற்றி எந்நாளும் அவர் நினைவூட்டத் தவறுவதில்லை. இதன் காரணமாக புங்குடுதீவு குறிகட்டுவான் துறைமுகத்தில் இறங்குதுறை ஒன்றை அமைத்து அங்கிருந்து நெடுந்தீவு மாவலித் துறைக்கு நேரடிப் படகுப் போக்குவரத்துச் சேவையினை ஏற்படுத்தினார். ஊர்காவற்றுறையில் இருந்து நடைபெற்று வந்த மோட்டார் படகுச் சேவை இதன் பேறாகக் குறிகட்டுவானுக்கும் - நெடுந்தீவிற்கும் இடையே நிகழ்வதாயிற்று. இதனால் பிரயாணத் தூரம் பதினைந்து (15) மைல்களில் இருந்து ஏழு (7) மைல்களாக குறைவடைந்தது. நயினாதீவு செல்லும் யாத்திரிகர்களுக்கும் இது பெரும் வசதியாயிற்று.

ஊர்காவற்றுறை தொகுதி பாடசாலைகளின் தேவைகளை நிறைவேற்றுவதிலும் அவர் கருத்துடன் செயற்பட்டார். ஆசிரியர்களின் அன்புக்குரியவராகவும் விளங்கினார். புங்குடுதீவு குறிகட்டுவானில் அப்பகுதிப் பிள்ளைகளின் கல்வி வளர்ச்சி கருதி அங்கு அரசினர் பாடசாலை ஒன்றினை அமைத்திட வழி செய்தார். ஊர்காவற்றுறை தொகுதி ஏனைய தொகுதிகள் போன்று முன்னேற்றம் அடைய வேண்டுமானால் போக்குவரத்து, கல்வி வசதிகள் பெருகவேண்டும் என்பது இவரது கருத்தாக இருந்தது. இதன் பொருட்டே அவர் பண்ணை தாம்போதியைப் பூர்த்தி செய்து நேரடி போக்குவரத்தை ஏற்படுத்த வேண்டும் என அயராது பாடுபட்டார். 1961 ஆம் ஆண்டு முற்பகுதியில் அவரது கனவு நனவாயிற்று. பண்ணைப் பால வேலைகள் பூர்த்தியடைந்தன. 1961 ஆம் ஆண்டு திரு. வீ. ஏ. கந்தையா அவர்களால் இப்பாலம் போக்குவரத்துக்குத் திறந்து வைக்கப்பட்டது. இதன்மூலம் யாழ்ப்பாணத்தில் இருந்து குறிகட்டுவான் வரை மோட்டார் வாகனங்கள் தடங்கல் எதுவுமின்றி செல்லக் கூடிய வாய்ப்பேற்பட்டது.

## பண்டா-செல்வா ஒப்பந்தம்

அமரர் வீ. ஏ. கந்தையா பாராளுமன்றத்தில் அங்கம் வகித்த காலம் (1956-1963) மிகவும் நெருக்கடி நிறைந்த ஒரு காலப்பகுதியாகும். தனிச்சிங்கள சட்டம் நிறைவேற்றப்பட்ட காலம். சிங்கள "சிறி" எதிர்ப்புப் போராட்டம் நிகழ்ந்த காலம். இனக்கலவரம் (1958) நிகழ்ந்த காலம். தீவுப்பகுதி மக்கள் பெரும் இழப்புக்களை சந்தித்த காலம். இத்தகைய நெருக்கடி நிறைந்த காலப்பகுதியில் எதிர்நோக்கிய இன்னல்களை எல்லாம் எதிர்கொண்டு சமாளித்து மக்கள் தம் உரிமைகளைக் காக்கவும் அவர்கள் தம் தேவைகளை நிறைவேற்றவும் இராஜதந்திர முறையில் செயற்பட்டார் திரு. கந்தையா. பாராளுமன்றத்தில் அவர் நகைச்சுவை ததும்ப உரையாற்றும் போதெல்லாம் தேவார, திருவாசகங்களில் இருந்தும், வரலாற்று நூல்களில் இருந்தும் தமிழிலக்கியங்களில் இருந்தும் எடுத்துக் காட்டுகளை அள்ளிவீசி அனைவரையும் திகைக்க வைப்பார். சிங்களம் மட்டும் சட்டத்தைபலமாக ஆதரித்து நின்ற கே. எம். பி. இராஜரெத்தினா போன்றோரைக் கூட தமிழ்ப் பரம்பரையில் வந்தவர் என ஆதாரத்தோடு எடுத்துக்கூறி அதிர்ச்சியுற வைத்தவர்.

பாராளுமன்றத்தில் என். எம். பெரேரா, பீற்றர் கெனமன் போன்ற இடதுசாரி தலைவர்களிடமும் சிங்கள பேரினவாதிகளிடமும் கூட சுவாரசியமாகப் பேசித் தன் கருத்தை நிலைநாட்டிட அவர் தவற

வில்லை. இதனால் அனைத்துப் பிரதிநிதி களினதும் நட்புக்குப் பாத்திரராக விளங் கினார். பண்டாரநாயக்கா-செல்வநாயகம் ஒப்பந்தம் உருவாகும் முன் அது தொடர் பான பேச்சுவார்த்தைகளில் தந்தை செல்வா, டாக்டர் ஈ.எம்.வீ. நாகநாதன், திரு. வி. நவரெத்தினம், தலைவர் கு. வன்னிய சிங்கம் போன்றோருடன் பங்குகொண்டு தமிழ்ப் பிரதேசங்களின் உரிமைகளை விட்டுக் கொடுக்காது காத்திடச் சட்ட நுணுக்கங் களை எடுத்துரைத்தவர். பேச்சு வார்த்தை களில் முக்கிய பங்கு கொண்டவர். பண்டா-செல்வா ஒப்பந்தம் கைச்சாத்திடும் நிகழ் விலும் தந்தை செல்வாவுடன் பங்கு கொண் டார். இந்த ஒப்பந்தத்திற்கு எதிராக தமிழ்ப் பகுதிகளில் சிலர் எழுப்பிய கூக்குரல்களுக்கு தக்க பதிலளிக்கவும் அவர் தயங்கவில்லை.

பாராளுமன்றத்தில் பதவி வகித்த காலத்தில் அவர் தந்தைசெல்வாவினதும் தலைவர் திரு. கு. வன்னியசிங்கம் போன் றோரின் அன்புக்குப் பாத்திரராக விளங் கியதோடு தொகுதி மக்களின் அன்புக்கும் பாராட்டுக்குமுரியவராக விளங்கினார்.

## இறுதிவேளையில்:

திரு. வீ. ஏ. கந்தையா அவர்கள் இறக்கப் போகின்றார் என்பதை தனது தீர்க்க தரிசனத்தினால் உணர்ந்த யோகர் சுவாமிகள் நடக்க முடியாதிருந்த நிலை யிலும் தன்னை வைத்தியசாலைக்கு தூக்கி செல்லுமாறு தனது அடியார்களை வேண்டி அவரது படுக்கையின் அருகே சென்று அமர்ந்தார். அச்சமயம் அங்கு சூழ்ந்து நின்ற அவரது மனைவி பிள்ளைகளையும் சகோதரி, சகோதரி பிள்ளைகளையும் பார்த்து "இவையாவும் ஒரு மாற்றம்! எப்பவோ முடிந்த காரியம்" என்று நல் லுரை வழங்கினார். அவரது மனைவியைப் பார்த்து, அவர் இறக்கப் போகின்றார் என் பதையும் மனைவியார் இனி குங்குமம் அணி யப் போவது இல்லை என்பதையும் சூச கமாகத் தெரிவிக்கும் நோக்குடன் "நெற்றியில் என்ன குங்குமமா?" என்று வினவினார்.

இந்நிலையில் திரு கந்தையா அவர்கள் 1963 ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் வாரத்தில் உயிர் நீத்தார். அவருடைய இறுதிச் சடங்குகளை கொழும்பில் நடாத்த வேண்டும் என அவருடைய குடும்பத்தினர் விரும்பினர். ஆனால் அவருடைய ஊரவர் கள், தொகுதிமக்கள், சுற்றத்தார், ஆதரவா ளர்கள் அனைவரும் இறுதிக் கிரியைகள் யாழ்ப்பாணத்திலேயே நடைபெற வேண் டும் என விரும்பினர். அதற்கிணங்க அவ ரின் பூதவுடல் அவரின் மூத்தமகளின் யாழ்ப்பாண இல்லத்திலும், பின்னர் தமிழர சுக் கட்சியின் யாழ்ப்பாணக் காரியாலயத் திலும் யாழ் மாநகர சபை மண்டபத்திலும் கட்சியின் கொடி போர்த்தப்பட்டு பொது மக்கள் அஞ்சலிக்காக வைக்கப்பட்டது. தமி ழரசுக் கட்சியின் தலைவர் எஸ். ஜே. வி. செல்வநாயகம் பா.உ. தலைமையில் தமிழர சுக் கட்சியின் சகல பாராளுமன்ற உறுப் பினர்களும் காரிய கொமிற்றி பொதுச் சபை உறுப்பினர்களும் யாழ் பொதுமக்களும் அஞ்சலி செலுத்தினார்கள். பின்னர் திரு. வி. நவரெத்தினம் (பொதுச் செயலாளர்) அவர்களின் வழிகாட்டலில் வேலணை கிராம சங்கத் தலைவர் திரு. க. சதாசிவம் அவர்களைத் தலைவராகவும் கிராம சபை உறுப்பினர் திரு.ச.மாணிக்கவாசகர் அவர் களை செயலாளராகவும் கொண்ட அமைப் பினால் அவருடைய பூதவுடல் வேலணைக்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. வேலணை கிராமசபை முன்றலில் அவரது பூதவுடல் இறுதி அஞ்சலிக்காக வைக்கப் பட்டது. அங்கும் பெருந்திரளான பொது

மக்கள் அஞ்சலி செலுத்தினார்கள். இந்த அஞ்சலியில் தீவுப் பகுதி மக்கள், யாழ் மாவட்ட மக்கள் ஆயிரக் கணக்கில் கலந்து கொண்டனர். பின்னர் அங்கிருந்து பூத வுடல் சாட்டியிலுள்ள "செம்படவன் காட்டு" மயானத்திற்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. மயானத்தில் வேலணைக் கிராமச் சங்கத் தலைவர் திரு. க. சதாசிவம் அவர்கள் தலைமையில் அஞ்சலியுரை நிகழ்த்தப்பட்டது. அதில் தலைவர் எஸ். ஜே. செல்வநாயகம் ஏனைய கட்சியின் பாராளுமன்ற உறுப்பினர்கள், திரு. எம். சிவசிதம்பரம் (எம்.பி) அவர்களும் அஞ்சலி உரை நிகழ்த்தினர். பட்டிருப்பு பாராளுமன்ற உறுப்பினர் திரு. எஸ். எம். இராசமாணிக்கம் பேசுகையில் கூறியதாவது:

"தமிழ் பேசும் மக்களின் எதிர்காலத்திற்காக உழைத்த ஒரு தலைவரின் புகழைச் சுருக்கமாக எடுத்து உரைத்திட முடியாது. திரு. கந்தையா தமிழரசு கட்சியின் இலட்சியத்துக்காக தமது உடல்நிலையைக் கூட கவனியாது உழைத்து வந்தார். இதனால் இடையில் நாம் அவரைப் பறி கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இதற்கு முன்னும் இரண்டு தலைவர்களை நாம் பறி கொடுத்தோம். அமரர் வன்னியசிங்கம், அமரர் ஏகாம்பரம் ஆகியோரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அவர்கள் பாடுபட்ட இலட்சியத்திற்காக போராடி இன்று திரு. கந்தையா அவர்கள் அமரராகி விட்டார். காலம் சென்ற திரு. கந்தையா எந்த விடயத்தையும் தீர்க்கமாக ஆராய்ந்து தனது சொற்பொழிவை தயார் செய்து நீண்ட நேரம் பேசுவதில் வல்லவர். "நீதிமன்ற மொழி மசோதா பாராளுமன்றம் வந்தபோது அவர் அதிகாலை இரண்டு மணி முதல் ஆறரை மணி வரை தொடர்ந்து பேசினார். தமிழ்ப் பிரதிநிதிகள் இடையேயும் தமிழ் மக்களிடையேயும் சிங்கள மக்களிடையேயும் அன்பைப் பெற்ற ஒரு பிரதிநிதி இருப்பரேல் அவர் திரு. வீ. ஏ. கந்தையா அவர்களே. ஒரு சிறந்த சமய பெருந்தகையை அரசியல் ஞானியை நாம் இழந்துள்ளோம். இது ஈடு செய்ய முடியாது." எனக் கூறினார். ஜா-எல எம். பி. திரு. பாரிஸ் பெரேரா பேசுகையில்: இங்கு வராத பாராளுமன்ற உறுப்பினர்கள் ஐக்கிய தேசியக் கட்சியின் சார்பில் நான் பேசுகின்றேன். 1956 ஆம் ஆண்டு முதல் பாராளுமன்றத்தில் தொடர்ந்து அங்கத்துவம் வகித்து வந்த திரு. வீ. ஏ. கந்தையா பாராளுமன்றத்தில் அனைவராலும் மதிக்கப்பட்டவர். பல உறுப்பினர்களுக்கு ஆசிரியனாகவும், சிலருக்கு நண்பனாகவும் திகழ்ந்தார். நாட்டு நலனுக்கு அவருடைய சேவை முக்கியமாகத் தேவைப்பட்ட நேரத்தில் அவரை நாம் இழந்து விட்டோம். யாழ்ப்பாணத்துக்கு மட்டுமல்ல. முழு இலங்கைக்குமே அவரது மறைவு பெரும் நஷ்டமாகும். ஏனெனில் இலங்கையின் முன்னேற்றத்துக்கு அவருடைய சேவை அத்தியாவசியமானது" என்றார்.

மட்டக்களப்பு பிரதிநிதி திரு. இராசதுரை பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார். "வன்னியசிங்கத்துக்குப் பின் சிறந்த முறையில் பாராளுமன்ற விவாதங்களில் கலந்துகொண்டவர்களில் முதல்வர் திரு. கந்தையா ஆவார். தீவுப் பகுதியில் முப்பது இலட்சம் ரூபா செலவில் ஒரு மீன்பிடி கைத்தொழில் ஆரம்பிக்கத் திட்டமிட்டார். திரு. கந்தையா அரசியலில் ஈடுபட முன்னரே தமிழுக்கும் சமயத்திற்கும் அரிய தொண்டு ஆற்றியுள்ளார். ஈழவள நாட்டின் தலைநகரான கொழும்பு தமிழ்ச்சங்கம் மூலம் தமிழ் மொழியை வளம்படுத்தினார். திருமுறை மாநாடு, சிலப்பதிகார மாநாடு, என்பவற்றை

முன்னின்று நடாத்தித் தமிழுக்கும் சமயத்திற்கும் அரிய தொண்டாற்றினார். கட்சிக் கூட்டங்களில் என்னைக் கடுமையாகக் கண்டிக்கும் அவர் எனது உயிர்த் தந்தையாக விளங்கினார். அமரர் வன்னிய சிங்கத்துக்குப் பின் மட்டக்களப்பு மக்களின் நெஞ்சில் அழியா இடம் பெற்றவர். அங்கு நடக்கும் எந்த இயக்கத்திலும் தீவிரமாக கலந்து கொள்பவர். அவர் இலட்சியம் நிறைவேற அவரைப் போன்ற தியாகி ஒருவரை தீவுப் பகுதி மீண்டும் எமக்களிக்க வேண்டும்.

தமிழரசுத் தந்தை எஸ்.ஜே.வி. செல்வநாயகம் பேசுகையில்: "கட்சி சார்பில் நீடித்து பேசவேண்டும் என்று கருதும் போது அல்லது சிக்கலான விடயங்களைப் பற்றி பேசும்போது திரு. கந்தையாவையே பேசும் படித் தான் கேட்பதாகவும் கட்சி உறுப்பினர் அனைவரும் ஒரே நோக்கில் செயற்பட அவர் உதவியாக இருந்தார்" எனவும் கூறினார்.

வேலணை கிராமச் சபைத் தலைவர் திரு. க. சதாசிவம் பேசுகையில் "மிகக் கஷ்டத்துடன் திரு. கந்தையா ஆங்கிலக் கல்வியைக் கற்றுத் தீவுப் பகுதியிலேயே முதல் விஞ்ஞானப் பட்டதாரியாக தேறினார். இலங்கை வாழ் தமிழ் மக்களின் மொழி உரிமைக்காக அவர் தனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்து கொண்டார். அவரின் புகழுடம்பு என்றும் நிலைத்து நிற்கும்" என்றார்.

ஈழ நாடு ஆசிரியர் திரு. கே. பி. கரன் பேசுகையில்: "உத்தமமான சைவரும், உத்தமமான தமிழரும் உத்தமமான மனிதருமான திரு. வே. அ. கந்தையா எம்மை விட்டு மறைந்துவிட்டார். சைவத்துக்கும் தமிழுக்கும் அவர் செய்த தொண்டுகள் அளப்பில. வேலணையில் திருமுறை மகா நாட்டை நடத்தி அதன் மூலம் சைவ சமய வளர்ச்சிக்குப் புத்துயிர் ஊட்டினார். அவருடைய மறைவுக்கு ஈழநாடு சார்பாக எனது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்" என்றார். நன்றியுரையைத் திரு. ச. மாணிக்கவாசகர் (ஆசிரியர்) ஆற்றினார். பின் அவரின் பூதவுடல் தகனம் செய்யப்பட்டு அக்கினியுடன் சங்கமமானது.

## மண்மறவா மைந்தர்:

திரு. வீ. ஏ. கந்தையா வேலணைத் தாயின் தவப்புதல்வர். மண்மறவா மைந்தர். இறக்கும்வரை இம்மண்ணை மறவாது நேசித்தவர். இம்மண் மறவா மைந்தரை வேலணை மண் என்றுமே மறக்கமாட்டாது என்பது திண்ணம்! தலைசிறந்த சட்டவாதியாக, சைவாபிமானியாக, தமிழ்த் தொண்டராகக் கறைபடியாத, கரங்கள் கொண்ட அரசியல்வாதியாக, மக்கள் நேசனாகத் தன்னுயிருள்ளவரை தொண்டாற்றிய இப்பெருமகனாரின் நாமம் என்றும் நிலைக்கும் என்பதில் ஐயமில்லை.

"அமரர் வீ. ஏ. கந்தையாவின் நினைவு நீடிக்கட்டும்"

வாழ்க அவர் நாமம்.



# அரசியற்றுறைப் பெரியோர்கள்

# பேராசிரியர், முனைவர், கா. பொ. இரத்தினம்

## (முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்)

திரு. க. சட்டநாதன் (முன்னாள் ஆசிரியர், வேலணை)

## வாழ்க்கையும் பணிகளும்

### இளமைக்காலம் - கல்விப் பணிகள்

கார்த்திகேசர் பொன்னம்பலம் இரத்தினம் வேலணையில் 1914 ஆம் ஆண்டு (ஆங்கில மாதம்) பங்குனி மாதம் 10ஆம் நாள் பிறந்தார். தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களில் முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்கள் முதன்மையானவர். ஈழத்தில் மட்டுமல்ல தமிழ்கூறு நல்லுலகெங்கணும் அவர் புகழ் பரவியது வியப்புக்குரிய விடயமல்ல. நேரிய வாழ்வும் கல்வி அறிவும் தமிழ்த்தொண்டும் பொதுவாழ்வில் காட்டிய அக்கறையும் குறள் வகுத்தவழி நடாத்திய அரசியலும் இப்புகழ் மிகு பேற்றினை அவருக்கு நல்கியது.

தலை தாழ்ந்து நடவாத இயல்பினரான- ஒரு வகையில், நிலச் சுவாந்தர் போல வாழ்ந்த- கார்த்திகேசர் பொன்னம்பலம் இவரது தகப்பனார். வேலணையூர் பேரம்பலப்புலவர் அவர்களது மூத்தமகளாகிய பத்தினிப்பிள்ளை இவரது தாயார்.

குடும்பத்தின் தலைமகனாகத் தோன்றிய இவர் - கற்றலில் இயல்பான நாட்டமுடையவராக இருந்தார். மிக இளம்பிராயத்தில் - அதாவது இவருக்கு மூன்று வயதாக இருக்கும் பொழுது - இவரது பாட்டனார் பேரம்பலப்புலவர் இவருக்கு ஏடு தொடக்கி வைத்தார். நான்கு வயதில் அமெரிக்க மிசன் பாடசாலையில் சேர்ந்து கல்வி கற்றார். மிசன் பாடசாலைத் தலைமை ஆசிரியர் இளையதம்பி அவர்களும் ஆசிரியமணி ச.மு. வைத்தியலிங்கமும் இவரது இளவயது ஆதர்சங்களாவர். ச. மு. வைத்தியலிங்கம் அவர்களிடம் இவர் ஏழாம் எட்டாம் வகுப்புகளில் கணிதம்,

தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், புவியியல், வரலாறு, உடல்நலவியல் ஆகிய பாடங்களைக் கற்றார். கற்பித்தலில் அப்பேராசான் காட்டிய தளர்விலா ஊக்கம் தமிழ் மொழியில் அதீத ஈர்ப்பினை இவருக்கு அந்த இளம் வயதிலேயே ஏற்படுத்தியது எனின் மிகையாகாது.

எட்டாம் வகுப்புவரை படித்து முடித்த இவர், தமது பன்னிரெண்டாம் வயதில் தனி மொழிப் பாடசாலை விடுகைச் சான்றிதழ்த் தேர்வுக்குத் தோற்றி சித்தி அடைந்தார்.

அக்காலத்து, தாய்மொழிமூலம் கற்றவர்கள் தமிழாசிரியர்களாகவே கடமையாற்ற முடியும். ஆசிரியர் தகைமை பெற இரண்டு வருடகால ஆசிரிய பயிற்சி பெறுதல் அவசியம் என உணர்ந்த இவர், நுழைவுத் தேர்வில் சிறப்புச் சித்தியடைந்து 1929ஆம் ஆண்டு கோப்பாய் அரசினர் ஆசிரிய கலாசாலையில் சேர்ந்தார். அங்கு இவரது கல்வி விருத்திக்கு ஊன்றுகோலாக, பல ஆசான்கள் இருந்தார்கள். அவர்களில் தலையாயவர்; புகழ்பூத்த உரையாசிரியர் மட்டுவில் வேற்பிள்ளை அவர்களின் மகனான பண்டிதர் மகாலிங்கசிவம் ஆவார். நுண்மாண் நுழைபுலம் மிக்கவரும் ஆசுகவித் திறனாளரும் சொல்லின் செல்வருமான இவரிடம் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை இரண்டாண்டுகள் கசடறக் கற்றார். அத்துடன் அவரது கணிப்புக்குரிய நல் மாணாக்கராகவும் இவர் இருந்தார்.

பயிற்றப்பட்ட தமிழ் ஆசிரியரானதும் - அவர் கல்விகற்ற அமெரிக்க மிசன் பாடசாலையிலேயே ஆசிரியராகப் பணி ஏற்றார். ஆசிரியராகப் பணியாற்றிய காலத்து, ஆரிய திராவிட பாசாபிவிருத்திச் சங்கம் நடாத்திய பண்டிதர் பரீட்சையில் தோற்றி, 1933 இல் தேர்ச்சி பெற்றார். பண்டிதர் பரீட்சைக்குப் படித்த காலத்தே இவர் கலாநிதி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களுடன் நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டு, கவி புனையும் ஆற்றலை அவரிடமே கற்றுத் தேர்ந்தார். அவர்பால், அவர் தமிழ்த்தொண்டின்பால் இற்றை வரை இவருக்கு அபரிமிதமான மதிப்பும் பற்றும் உண்டு.

1934 ஆம் ஆண்டு, மூளாய் சைவப் பிரகாச வித்தியாசாலையில் தலைமை ஆசிரியராகத் தனது பணியைத் தொடர்ந்தார். தலைமை ஆசிரியராகப் பணியாற்றுங்கால் அவரது கற்றல் தொடரவே செய்தது. தமிழ் மொழி, கணிதம் என்பவற்றில் அதிக புலமை வாய்ந்த இவர், ஆங்கில மேல் நிலைப் பள்ளி இறுதித் தேர்வில் ஆங்கில பாடத்திலும் சித்தியடைந்தார். இந்த ஆங்கில அறிவு, அவர் தொடர்ந்து மேலே படிப்பதற்குப் பெரிதும் உதவியதெனலாம்.

கா. பொ. இ. அவர்கள் - 1940 ஆம் ஆண்ட ளவில் அரசினர் புலமைப் பரிசில் பெற்று சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அப்பொழுது அங்கு, எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார். தமிழ் அறிஞர் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை விரிவுரையாளராகப் பணியாற்றினார். இவரது உடன் பயில் ஆராய்ச்சி மாணவராக கோப்பாயைச் சேர்ந்த அறிஞர் அ. வி. மயில்வாகனம் இருந்தார்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழாய்வில் ஈடுபட்டிருந்தகாலத்து, தமிழ் நாட்டுத் தமிழ்ப் பேரறிஞர்களுடன் நெருங்கிய தொடர்பினை இவர் ஏற்படுத்திக் கொண்டார். அவர்களுடனான உசாவுகை

இவரது புலமை விருத்திக்குப் பெருந் துணை செய்தது. இவர் தொடர்பு கொண்ட தமிழ்ப் பெரியார்களாக தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாண சுந்தரமுதலியார், தனித் தமிழ் வித்தகர் மறைமலை அடிகள், பேரா சிரியர் மு. வரதராசனார், பேராசிரியர் இராசமாணிக்கனார், பேராசிரியர் ஆலால சுந்தரம், மறை திருநாவுக்கரசு ஆகியோ ரைக் குறிப்பிடலாம்.

சென்னையில் பி. ஓ. எல். பட்டம் பெற்ற பின்னர் 1942ஆம் ஆண்டு தைத்திங்கள், கோப்பாய் ஆசிரியர் கலாசாலையில் விரி வுரையாளராகப் பணி ஏற்றார். 1943இல் பாடசாலை ஆய்வாளராகக் கண்டி, திரு கோணமலை ஆகிய கல்வி வட்டாரங்களில் ஓய்வு ஒழிச்சலின்றிக் கடமையாற்றினார். 1944ஆம் ஆண்டின் இறுதிப் பகுதியில் கொழும்பு அரசினர் ஆங்கில ஆசிரியர் கலாசாலையில் விரிவுரையாளராக நிய மனம் பெற்றார். 1945 இல் பதவி வழி குடியியற் பட்டியல் உத்தியோக அந்தஸ் தைப் பெற்றார். அதேஆண்டில், இலண் டன் பல்கலைக்கழகத்தில், தமிழில் சிறப்பு இளநிலைக் கலைப்பட்டதாரியாக முதலாம் வகுப்பிற் தேர்ச்சி பெற்றார். கொழும்பில் இயங்கி வந்த, அரசினர் ஆசிரியர் கலா சாலை மகரகமவுக்கு மாற்றப்பட்டது. 1955 ஆம் ஆண்டு வரை அங்கு பணியாற்றி னார். அதன் பின்னர் அரச சேவையி லிருந்து ஓய்வுபெறும்வரை, அரசகரும மொழித் திணைக்களத்தில் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராகப் பணியாற்றினார்.

அமைதியான, அதேசமயம் ஆற்றல் மிக்க - வாய்மைவழி செல்லும் ஆசானாக, கலாசாலை விரிவுரையாளராக நாம் கண்ட கா. பொ. இ. அவர்கள் அரசகரும மொழித் திணைக்களத் தலைவராகப் பணி யாற்றிய காலத்து, ஒரு "கலகக்காரரா கவே" இருந்தார். அந்தக் குணக்கூறு கூட, ஆன்மீகவசப்பட்ட ஒன்றுதான். சிங்களப் பேரினவாதிகளான விசயசேகரா, செனவி ர த்தினா போன்றோரை - "கீழோர்க்கு அஞ்சேல்" என்ற பாரதிவாக்குக்கமைய எதிர்த்து நின்றதுடன், "தமிழ் உண்டு, தமிழ் மக்களுண்டு, தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு" என்று அத்திணைக்களத் தில் ஐந்தாண்டுகள் பணியாற்றினார். அப் பணி பல தொல்லைகளின் நடுவில் தொடர்ந்த பொழுதும் அவருக்குப் பூரண திருப்தி தந்த ஒன்றாகவே இருந்தது. கா. பொ. இ. அவர்கள் அப்பணி பற்றிக் கூறு வதைப் பாருங்கள்:

"எனது வாழ்நாளில் அரசகரும மொழித் திணைக்களப் பதவி என்னைச் சுட்டுச் சுட்டுப் பொன்போல் ஒளிரவைத்தது. இத் திணைக்களத்திலே பணியாற்றிய பொழுது பதினையாயிரத்துக்கு மேற்பட்ட ஆட்சிச் சொற்களைச் சீர்ப்படுத்திச் செம்மைப்படுத் தினேன். நான்கு தொகுதிகளாக இலங்கை அரசால் இவை வெளியிடப்பட்டன. இச் சொற்களில் கிரந்த எழுத்துக்களில்லை. திணைக்களம், படிவம், பணிப்பாளர், பணிப் புரை முதலிய பல புதிய சொற்களை நான் புகுத்தி உள்ளேன். தமிழகத்தில் வெளியிடப் பட்ட, ஆட்சிச் சொற்களிலும் இலங்கையில் வெளியிடப்பட்டவை, செந்தமிழ் பாங்கில் மிகுந்தவை".

அவர் மேலும் கூறுவார்:

ஆட்சிச் சொல் அகரவரிசையை நான் ஆக்கியபொழுது, கலைச் சொல்லாக்கத் துக்குப் பல்வேறு குழுக்கள் நியமிக்கப்பட் டன. கணிதம், புவியியல், இயல்பியல், வேதி யியல், நல்வழி, வரலாறு முதலியவற்றின் குழுக்களில் யானும் பணியாற்றினேன்."

மிகுந்த ஆர்வத்துடன் இத்திணைக்களத்

தில் பணியாற்றிய அவரைப் பதவிநீக்கம் செய்யும் நோக்குடன், அவரது பதவியை ஒழிக்கப் போவதாகவும் அப்பதவிக்கு நிகரான, அதே சம்பளத்தை உடைய வேறோர் பதவியைத் தருவதாயும் அவருக்குத் திணைக்கள மேலாளர்களும் அரசும் அறிவித்தது. அதனைத் தமிழர்தம் மானப் பிரச்சனையாகக் கருதி, திணைக்களத் தலைமைப் பதவியில் இருந்து ஓய்வுபெற்றார்.

அடுத்த ஆண்டு அரசியலில் அதிக நாட்டம் கொண்டு, இலங்கைத் தமிழரசுக் கட்சியில் இணைந்து, உழைக்கத் தலைப்பட்டார். அப்பொழுது, மலேசியப் பல்கலைக்கழகத்தில், இந்தியத்துறைத் தலைமைப் பேராசிரியராகப் பணியாற்றிய தனிநாயக அடிகளார் இவரை மலேசியா வரும்படி அழைத்தார். அங்கு சென்ற இவர், பல்கலைக்கழகத்தில் அடிகளாரது இந்தியத் துறைப் பீடத்தில் விரிவுரையாளராகக் கடமை ஏற்றார். இப்பணியே, அவர் கல்வித்துறை சார்ந்து ஆற்றிய இறுதிப் பணி எனக் கூறலாம்.

## தமிழ்தொண்டு, சமூகத்தொண்டு.

முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்களுடைய தமிழ்த்தொண்டு மிக இளம் வயதிலேயே ஆரம்பித்துவிட்ட ஒன்றாகும். அவர் அமெரிக்க மிசன் பாடசாலை ஆசிரியராக இருந்தபொழுதே இப்பணி ஆரம்பித்து விட்டது. இன்றுவரை அது தொடர்கிறது. அத்தொண்டு பல்வேறு உலக நாடுகளின் தலைநகர்களில் நடந்த தமிழ் மாநாடுகளிலும் ஆராய்ச்சி மன்றுகளிலும் அவர் ஆற்றிய பேருரைகளாகவும் தமிழர் தம் பண்பாட்டை, கலாசார, அரசியல் வாழ்வை மையப் படுத்தி, பழைய பனுவல்களை அகத்துறிஞ்சி – அவர் எழுதிய இலக்கிய நூல்களாகவும் நெஞ்சத்தைக் கிளர்த்தும் கவிதை நூல்களாகவும் வெளிவந்துள்ளன.

அவரது உரைநடை பகட்டாரவாரமற்றது. மிகவும் எளிமையானது. பொருள் பதிந்தது. தெளிவுமிக்கது. அத்துடன், சொற்சிக்கனத்தைப் பேணுவதுடன் வாய்மை வழிப்பட்டதாகவும் விளங்குகிறது. அவரது கவிதைகள்- கவிதை அனுபவத்துக்கு மேலாக, உள்ளடக்கப் பொலிவுக்கும் செறிவுக்குமே முதன்மை கொடுப்பவையாக இருக்கின்றன. கவிதையில் அவர் தொட்டுப் பாடாத விடயமே இல்லை என்றே கூறலாம். உதாரணமாகச் சில கவிதைகள்:

**புலிவீரம் பேசும் கவிதை:**

"அழிக்கும் தொழில்கள் அனைத்தும்
செய்யும்...
சிங்களப் படையைச் சீறி எழுந்து
சிறு சுடர் முன்னர்ப் பேரிருள் இரிதல்
போல ஓட்டிப் பொங்கிக் கனன்று

இழந்தநாடாம் ஈழத்தாயகம்
தன்னை மீட்கத் தங்கள் உயிரைக்
கொடுத்துப் போரிடும் கொல்புலிபோன்ற
மறத்தமிழ் இளைஞர் மாபெரும் வீரர்!"

**தீண்டாமையை மாபெரும் கொடுமையாகக் காணும் கவிதை:**

"கொடுமையினை அறமென்று
கொள்ளுகின்ற பித்தர்போல்
நடுநிலைமை சிறிதுமின்றி
நாணமின்றி உள்ளத்தைச்
சுடுகிற இத் தீண்டாமை
சுருதிவழி வந்ததென்று
படு பெரும் பொய் உரைக்கின்ற
பாதகரே தீண்டாதார்."

பொதுமைக் கருத்துக்கள் பொதிந்த கவிதை:

"நெல்லோடு சேர்ந்துவளர்
நெடுங்களையை வேரோடு
நீக்கல் போலப்
புல்லோர்கள் தாம் கொழுக்கப்
போற்றிவரும் புன்னெறியைப்
போக்கி இங்கே
எல்லோரும் சமவாழ்வு எய்திடற்குத்
தகும்வழியை
ஏற்றம் மிக்க
நல்லோர்கள் நாட்டியின்றே
நலிவோர்க்குச் சமவாய்ப்பு
நல்கல் வேண்டும்."

இப்பணிகள் எல்லாவற்றிலும் அவரது தலையாய தமிழ்ப் பணி - தமிழ் மறையாகிய திருக்குறளை உலகப் பொதுமறையாக தமிழர்தம் வாழ்வின் வழிகாட்டியாக வாழ்வியல் நூலாகக் கொண்டு, ஒரு வாழ்க்கை முறையையே தமிழர்களுக்கு ஏற்படுத்தித் தந்திட வேண்டும் என்பதுதான். அந்த எண்ணத்தின் எழுச்சி உந்துதலே அவரை 1952 ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் 23ஆம் நாள், கொழும்பில் தமிழ் மறைக் கழகத்தை நிறுவுதற்குத் தூண்டியது எனலாம். இக்கழகத்தை அவர் தோற்றுவித்ததற்குக் காரணமாக அமைந்த பின்புலத்தையும் நோக்கத்தையும் அவரது வார்த்தைகளில் இங்கு பார்ப்போம்:

"சில ஆண்டுகளுக்கு முன்னர் இலங்கையில் இந்து அறநிலைச் சட்டம் இயற்றுதல் பற்றி எழுந்த பிணக்குகளிலே கருத்தூன்றிய மக்களுக்கு இந்த உண்மைகள் உள்ளத்தை உறுத்தியே இருக்கும். தமிழ் அறிஞர்களிற் சிலர் தமிழனின் பண்பாட்டையும் சமதர்மத்தையும் சிதைத்துச் சாதிவேற்றுமை பாராட்டிப் பேசினார்கள். எழுதினார்கள். தீண்டாமையை நீக்கி "யாவரும் கேளிர்" என்ற நிலைமையை உண்டாக்குவதற்கும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற உண்மையை நிலை நாட்டுவதற்கும் அவர்கள் முயலவில்லை; முயன்றவர்களையும் தூற்றினார்கள்... இச்செயல்களைக் கண்டு உள்ளம் துடித்தது. இந்த இலங்கையில் இருந்து தீண்டாமையை அகற்றிச் சாதிவேற்றுமையைத் தகர்த்து "எல்லோரும் ஒரு குலம் எல்லோரும் ஒரு நிறை, எல்லோரும் ஒரு விலை" என்ற நிலைமையை உண்டாக்க இயன்றதைச் "செய் செய்" என்று என் மனம் ஏவியது. சிந்தித்தேன்! சிந்தித்தேன்!

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்
சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்".
"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும்
தத்தங்
கருமமே கட்டளைக் கல்".

எனும் திருக்குறள்களே எனக்கு வழிகாட்டின. நம் அருமைத் தமிழ் மறையின் கருத்துக்களைத் தமிழ் மக்களின் உள்ளத்தில் வேரூன்றச் செய்தால், தமிழினம் தலையெடுக்கும் உயர்வடையும் என்று நான் முடிவு செய்தேன். தமிழ் மறைக் கழகத்தினை உருவாக்கினேன்."

இக்கூற்றுக்களில் தமிழ் மறைக்கழகம் உருவாவதற்கு அடிநாதமாக அமைந்த சமூக நன்நோக்கும் பார்வையும் தெளிவாகப் புலப்படுகின்றன. சமூக நிலையில் ஏற்றத் தாழ்வு காணும் இந்து மதப் பாரம்பரிய கருத்துக்களுக்கு மாறாக, தனித்தன்மை பேணி, சமத்துவம் பேசும் தமிழர்தம் பாரம்பரியத்தைக் காணவும், காட்டவும் துணைபுரியக் கூடிய முதன்மை நூலாகத் திருக்குறளைக் கண்டார். காட்டுவித்தார். இதன் பயனாக உருவானதே தமிழ் மறைக் கழகமாகும்.

இவ்வாறு உருவான கழகத்துக்கு பேரறிஞரும் இலக்கியக் கலாநிதியுமான சு. நடேச பிள்ளை அவர்கள் தலைமைக் காப்பாளராக இருந்தார். அத்துடன் தமிழ் பேசும் நாடுகளின் 64 தமிழ்ப் பேரறிஞர்கள் காப்பாளர்களாக இருந்து, ஆதரவு, நல்கினர். சிலம்புச் செல்வர் ம. பொ. சி.; பேராசிரியர்களான டாக்டர் மு. வரதராசனார், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், அ. ச. ஞானசம்பந்தன், டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், ஆ. முத்துசிவன், திருக்குறளார் வி. முனுசாமி, வித்துவான். கி. வா. ஜகந்நாதன், கல்கி ரா. கிருஷ்ண மூர்த்தி ஆகியோர் அவர்களில் குறிப்பிட்டுக் கூறக் கூடியவர்கள். இக்கழகத்துக்குப் பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்களே தலைவராக இருந்தார். அத்துடன், நூற்றுக்கு மேற்பட்ட தமிழறிஞர்களும் ஆர்வலர்களும் உறுப்பினர்களாக இருந்து கழகத்துக்கு வலுவூட்டினார்கள்.

இக்கழகத்தின் நோக்கங்கள் பின்வருமாறு அமைந்துள்ளன.

1. திருவள்ளுவர் திருநாளைத் தமிழினைப் பேசும் மக்கள் வாழும் இடங்கள் எங்கும் ஒவ்வொரு வீட்டிலும் கொண்டாடச் செய்தல்.
2. திருவள்ளுவர் திருநாளைத் தமிழ் மக்கள் பெருந்தொகையினராக வாழும் நாடுகளில் அரசினர் விடுமுறை நாளாக்குவித்தல்.
3. திருக்குறள் மொழிபெயர்க்கப்படா திருக்கும் மொழிகளில் அதனை மொழி பெயர்க்கச் செய்தல்.
4. தமிழ்மொழி வாயிலாகவும் பிறமொழிகள் வாயிலாகவும் திருக்குறளின் அருமை பெருமைகளை யாவரும் அறியச் செய்தல்.
5. திருக்குறளையும்அதன் உரைகளையும் அச்சிட்டு அடக்கவிலையில் விற்றல்.
6. திருக்குறளும் திருவள்ளுவரும் பற்றிய நூல்களைச் சேர்த்து ஊர்தோறும் வள்ளுவர் பண்ணைகளை அமைத்தல்.
7. திருக்குறள் மாநாடுகளைப் பல்வேறு இடங்களில் நடத்துதல்.
8. திருக்குறள் வகுப்புகள் நடத்துதல்.
9. திருக்குறளில் பற்றுண்டாக்குதற்குத் தேர்வுகள் நடாத்துதல், பரிசில்கள் வழங்குதல்.

திருவள்ளுவருடைய உண்மையான வரலாறு அறியப்படாதநிலையில் திருவள்ளுவர் நாள் எது என்பது குறித்து, தமிழக அறிஞர்கள் மத்தியில் பல மயக்கங்கள் இருந்தன. அம் மயக்கங்களை மாற்றி வைகாசி அனுட்டத்தில் திருவள்ளுவர் விழாவைக் கொண்டாடுமாறு தமிழ் மக்களைக் கழகம் கேட்டுக் கொண்டது. தமிழகத்திலும், ஈழத்திலும் தமிழர் வாழும் பிற நாடுகளிலும் உள்ள தமிழர்களும் தமிழறிஞர்களும் இதனை ஏற்றுக் கொண்ட னர். பத்திரிகைகள், வானொலி போன்ற பொதுசன ஊடகங்களும் உலகளாவிய ரீதியில் இதனை முதன்மை கொடுத்துப் பிரசாரப் படுத்தின.

கழகம் ஆண்டுதோறும் திருக்குறள் மாநாடுகளை நடத்துவதற்கு, சிறப்பான முறையில் திட்டமிட்டுச் செயற்பட்டது. 1953 முதல் 1983 வரை 24 மாநாடுகளை நடாத்திய இக்கழகம். தனது 25ஆவது மாநாட்டை, 1992 ஆம் ஆண்டு உலகத் தமிழ்மறை மாநாடாகத் தமிழக அறிஞர்களும் அனைத்துலக அறிஞர்களும் பங்குகொள்ள சென்னை

மாநகரில் நடத்தியது. அம்மாநாட்டில் அப் பொழுது கல்வி அமைச்சராக இருந்த சொல்வலார் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் நிறைவுரை நிகழ்த்தினார்.

1993 ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் 18ஆம் நாள் 26ஆவது திருக்குறள் மாநாடு நடைபெற்றது. இம் மாநாட்டைப் பாரதி தாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. ச. முத்துக்குமரன் தொடங்கி வைத் தார். உலகத் தமிழ்மறைக் கழகச் செயலர் இர. திருஞானசம்பந்தர் வரவேற்புரை நிகழ்த் தினார். பாட்டரங்கும் கருத்தரங்கும் நடை பெற்றன. மாண்புமிகு நிதியமைச்சர் நாவ லர் இரா-நெடுஞ்செழியன் அவர்கள் சிறப்பு விருந்தினராக வந்து-உரையாற்றினார்.

பெரியார் கா. பொ. இ. அவர்கள் திருக்குறளைப் படிக்கவும் பரப்பவும், மொழி பெயர்க்கவும் திருவள்ளுவர் திரு நாளை அனைவரும் கொண்டாடவும் எடுத்த முயற்சிகள் பலவாகும். திருக்குறள் மனனப் போட்டி, பேச்சுப் போட்டி, ஆய்வுக் கட்டு ரைப் போட்டி ஆகியவற்றைத் திட்டமிட்டுக் கழகம் நடத்துவதற்கு உறுதுணையாக இருந்தார். இப்போட்டிகளில் பங்குபற்றி முதன்மை பெற்றவர்களுக்குத் தமிழ் மாநாடுகளில் சான்றிதழ்களும் பரிசில்களும் வழங்கப்பட்டன.

பண்டிதர் அவர்களைக் கவர்ந்த இன்னொரு பெரியார் நாவலர் பெருமானா வார். நாவலர் பற்றிய அவரது மதிப்பீடு இப்படி அமைந்துள்ளது:

"அவருடைய (நாவலருடைய) ஈடிணை யற்ற புலமையும் நாவன்மையும் துறவும் அஞ்சாமையும் துணிவும் பொதுநலத் தொண் டுகளும் தமிழுக்கும் சைவத்துக்கும் அவர் தம் உடல், பொருள் உயிரனைத்தையும் கொடுத்த பாங்கும் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுள."

ஈழத்தில் பெருமதிப்புடன் வாழ்ந்த நாவலர் அவர்களது சிறப்பை, தொண் டினை தமிழகத்து மக்களும் உணரவேண் டும் எனும் நோக்குடன் அவரது நினைவு நாளை ஆண்டு தோறும் கார்த்திகைத் திங்கள் மக நட்சத்திர நாளில் விழாவாக நடத்துதற்குச் சென்னை சைவசித்தாந்தப் பெரு மன்றத்தில் ஓர் அறக்கட்டளையை இவர் நிறுவியுள்ளார்.

இப்பணிகளுடன் அவர் மிகுந்த விருப் பத்துடன் செய்தவேறு பணிகளும் உண்டு. தவத்திரு தனிநாயக அடிகளார் அவர்களு டன் இணைந்து, உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தினை கோலாலம்பூரில் 1963 ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் நிறுவினார். இவரது கருத்திசைவுடன் தில்லியிலும் அடி களார் 1964 தைத்திங்கள் இம்மன்றத்துக்கு அமைப்பு வடிவம் கொடுத்தார்.

1966 ஆம் ஆண்டுக்கும் 1987ஆம் ஆண் டுக்கும் இடைப்பட்ட காலத்து ஆறு ஆராய்ச்சி மாநாடுகள் நடாத்தப்பட்டன.

யாழ்ப்பாணத்தில் 1974 இல் நடைபெற்ற நான்காவது தமிழ் ஆராய்ச்சி மாநாடு ஈழத்தமிழர்தம் வரலாற்றில் துயர்தோய்ந்த ஒன்றாகும். அரசின் ஆதரவில்லாமல் நடந்த இம் மாநாட்டில் அரச காவலர்க ளான கூலிப்படையினரால் மிருகத்தனமா கக் கட்டவிழ்த்து விடப்பட்ட வன் செயலில், மாநாட்டுக்கு வந்திருந்த ஒன்பதின்மர் உயிரிழந்த சோக சம்பவம் நடைபெற்றது. அவர்தம் நினைவாகத் தமிழ் மக்கள் நிறு விய நடுகற்களை இன்றும் யாழ்ப்பாணத் தில் காணக் கூடியதாக உள்ளது. இதுபற்றி, நெஞ்சைத் தொடும் குறிப்புக்களை கா.பொ.இ. அவர்கள், தனது சுயசரிதை நூலான நினை வுத் திரையில் பதிவு செய்துள்ளார்.

1986 ஆம் ஆண்டு அப்போதைய தமிழக முதலமைச்சர் திரு. எம். ஜி. ராமச் சந்திரன் அவர்கள். கா. பொ. இ. அவர் களது விருப்பத்துக்கு அமைய உலகத் தமிழ்ச் சங்கத்தை அமைத்து, விழா எடுத் தார். மதுரையில் சிறப்பாக நடந்த அவ் விழாவில் பண்டிதர் அவர்கள் முதல்வரின் அரிய செயலைப் பாராட்டிப் பேசினார்:

"தமிழ் நாட்டினை முதலமைச்சர்கள் பலர் ஆண்டனர். இனியும் பலர் ஆட்சி செய்வார்கள். இவர்கள் எவரும் செய்யாத, இனிச் செய்ய முடியாத செயற்கருஞ் செய லைச் செய்த பெருமைக்கும் நிலைத்த புகழுக்கும் - மாண்புமிகு முதலமைச்சர் பொன்மனச் செம்மல், புரட்சித் தலைவர் இந்தஉலகத் தமிழ்ச் சங்கத்தை நிறுவிய தால் - உரிமை உடையவராக இன்று மிளிர் கின்றார்.

முதலமைச்சர் எம். ஜி. ஆர். அவர்கள் முழு மூச்சுடன் ஆரம்பித்தசங்கம் தீவிர செயற் பாடற்று இன்று இருப்பது இவருக்கு மிகுந்த கவலையைத் தந்துள்ளது. இன்றைய முதல் வரையும் தமிழ்நாடு சட்டமன்ற அவைத் தலைவர் முனைவர் காளிமுத்து அவர்களையும் சங்கம் வலிவும் பொலிவும் பெற ஆவன செய்யுமாறு இவர் தொடர்ந்து வலியுறுத்தி வரவே செய்கிறார்.

கா.பொ.இ.அவர்களது வாழ்நாள் கன வாக இருந்த தமிழ் மறைக்கோட்டம் (நூலகம்) தன வந்தரும் தமிழபிமானியு மான வி.சி. சந்தோசம் அவர்களது முயற் சியால் நனவாகியது. 1993 இல் வி. சி. பி. உலகத் தமிழ்ச்சங்க முதலாவது மாநாட் டின்போது, தங்கக் கடற்கரையில், தமிழ் மறைக்கோட்டம் வள்ளுவர் பெருமானது சிலைக்கு அருகில் அழகிய கட்டடமாக உருவாகியது. கோட்டக் கட்டடத்தை பேரா சிரியர் க. அன்பழகன் அவர்கள் திறந்து வைத்தார். அந்தத் திறப்பு விழாவில் பண்டிதர் அவர்களும் கலந்து தனது மன மகிழ்ச்சியைத் தெரிவித்ததோடு, வி. சி. சந்தோசம் அவர்களையும் உளம் நெகிழப் பாராட்டிப் பேசினார்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" எனும் கணியன் பூங்குன்றனாரின் புறப் பாடலுக்கு இலக்கியமாய் வாழ்ந்தவர் நமது முனைவர் அவர்கள். கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பதற்கு அமைய அவர் சென்ற அனைத்து நாடுகளிலும்-இங் கிலாந்து, பிசித்தீவுகள், மலேசியா, சிங்கப்பூர், உருசியா, பாமாசு, பர்மா, தாய்லாந்து, பிரான்சு, அவுஸ்திரேலியா, ஜெர்மனி, இந்தோ னேசியா, இந்தியா, தமிழ்நாடு - அவர் பேரன் புடன் வரவேற்கப்பட்டதுடன், பல மகா நாடுகளிலும் இலக்கிய அவைகளிலும் உரை யாற்றித் தமிழ் நெஞ்சங்களை மகிழ்வித் தார். அவருக்குக் கிடைத்த இலக்கிய நண்பர் களும் அவரைப் போலவே கற்றலில் துறை போனவர்கள், வாய்மை வழிச் செல்லும் சான் றோர்கள், இவரது உழுவல் அன்பர்கள்.

இவர் இலக்கிய நண்பர்களிடத்து மட்டு மல்ல, தனது மனைவி, சகோதரி, சகோதரர் கள், பெறாமக்கள், மருமக்கள், பேரப் பிள் ளைகள் உற்றார் உறவினர் அயலவர் என அனைவரிடத்தும் அன்பு பாராட்டுபவர். வள்ளுவர் வழி விருந்தோம்பும் இயல் பினர். இவரில்லத்தில் வயிறார உண்ட அனுபவம் எனக்குண்டு.

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்"

என்பது பொய்யாமொழி. சொல்வ தோடமையாது செயல் வீரராகவும் வாழ்பவர் நமது முனைவர் அவர்கள். "ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்

பது போல அவரது சமூகப் பொறுப்புணர்வுக்கும் சமநிலை நோக்குக்கும் ஏற்றத்தாழ்வு கருதாத பண்புக்கும் உதாரணமாக ஒரு நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடுதல் பொருத்தம் எனக் கருதுகிறேன்.

வேலணை வைதீகப் பெறுமானமுள்ள ஊர். சைவத்தையும் தமிழையும் போற்றுவதாகக் கூறி, சாதி மேலாண்மையை வலியுறுத்தும் மண். அப்படிப்பட்ட மண்ணில், தாழ்த்தப்பட்ட மக்களை – வேலணை பெருங்குளத்து முத்துமாரி அம்மன் கோவிலுக்குள் அழைத்துச் சென்று பூசை வழிபாடுகளில் கலந்து கொண்ட பெருமை இவருக்கு உண்டு. இவரது இல்லத்தில் கூட இத்தீண்டாமை எனும் மிகக் கொடிய, பழைய பழக்கத்தை அறவே ஒதுக்கியவர் என்பதனை நான் கண்ணாரக் கண்டவன். சக மனிதனை மதிக்கும் இப்பண்பாளரிடம் சாதியம் ஒதுக்கம் கொண்டதில் நமக்கு வியப்பேதுமில்லை.

சாதிப் பெயர் சொல்லி, தீண்டாமை பாராட்டும் கொடுமையை இவர் பிறிதொரு சந்தர்ப்பத்தில் இவ்வாறு சாடுகிறார்:

"தமிழ் என்றால் இனிமை என்பது பொருள். தமிழர் என்றால் இனியவர் எனலாம். சாதி வேற்றுமையைப் பாராட்டித் தீண்டாமையைப் போற்றுபவர்கள் எவரையேனும் இனியவர் என்று கூறலாமா? எனவே தீண்டாமைப் பேய் பிடித்தலைபவர்கள் இனியவரல்லர்; தமிழரல்லர்."

## அரசியல் வாழ்வு.

தமிழ்மீதும், தமிழர் மீதும் கொண்ட காதலே கா. பொ. இ. அவர்களுக்கு அரசியலில் ஈடுபாடு கொள்ளக் காரணமாய் அமைந்தது.

மலேசியப் பல்கலைக்கழகப் பணிகள் முடிந்த பின்னர் 1964 இல் இவர் இலங்கை வந்தார். வந்த கையுடன் இலங்கைத் தமிழரசுக் கட்சியின் பணிகளில் முழுமூச்சுடன் ஈடுபட்டார். கட்சிக்காக விடுதலைப் பரணி எனும் திங்கள் இருமுறை இதழின் ஆசிரியராகக் கடமை ஏற்றார். அந்த ஏடு தனது உறுதி மொழியாக:

"தாயின்மேல் ஆணை எம் தந்தைமேல் ஆணை தமிழரின் ஆட்சி எம் நாட்டில்..." என வரித்துக்கொண்டது.

பரணியின் ஆக்கங்கள் பல கோணங்களில், தமிழர்தம் விடுதலை வாழ்வை அழுத்திக் கோருவதாயும் விடுதலை நோக்கிய தமிழர் தம் பயணத்தை உண்மையான குரலில் ஒலிப்பதாயும் இருந்தன.

1965 ஆம் ஆண்டு கிளிநொச்சித் தொகுதியில் பாராளுமன்ற வேட்பாளராகத் தமிழரசுக் கட்சி இவரை நிறுத்தியது. இவருக்கு எதிராக, ஐக்கிய தேசியக் கட்சியின் முன்னை நாள் அமைச்சர் திரு. வே. குமாரசாமியும் இலங்கைச் சமசமாசக் கட்சி உறுப்பினர் திரு. வீ. ஆனந்தசங்கரியும் போட்டி இட்டார்கள்.

கிளிநொச்சித் தொகுதி நிலப்பரப்பில் மிகவும் பெரியது. போக்குவரத்து வசதி, வாய்ப்புகள் அற்றது. மணற் பாங்கான பகுதிகளும் தொகுதியில் இருந்தன. ஏறக்குறைய மூன்று மாதகாலம் அவரது அயராத உழைப்பும் தமிழரசுக் கட்சித் தொண்டர்களின் ஊக்கமும் தொகுதி மக்களின் ஆதரவும் இவரை வெற்றிவாகை சூட வைத்தன.

1965இல் நடந்த தேர்தலில் எந்த ஒரு அரசியல் கட்சிக்கும் அதிகப் பெரும்பான்மை கிடைக்கவில்லை. ஆட்சி அமைக்கும் ஆர்வத்துடன் இரு பகுதியினரும்

இலங்கைத் தமிழரசுக் கட்சியை நாடினர். அதிகாரப் பகிர்வுக்கு வழிவகுக்கும் மாவட்ட சபையை உருவாக்குவதற்கு இரு கட்சிகளுமே உடன்பட்டன. மூத்தவழக்கறிஞரான திரு. மு. திருச்செல்வம் அவர்களது விருப்பத்துக்கு அமையக் கட்சிப் பாராளுமன்றக் குழு ஐக்கிய தேசியக் கட்சியை ஆதரிப்பதென முடிவெடுத்தது. எவரும் ஐக்கிய தேசியக் கட்சி அரசில் பதவி பெறக்கூடாது எனவும் உள்ளூராட்சி அமைச்சுப் பொறுப்பை மட்டும் மு. திருச்செல்வம் ஏற்பது என்றும் முடிவாகியது. அதற்கமைய திருச்செல்வம் உள்ளூராட்சி அமைச்சரானார். மாவட்ட சபைச் சட்ட முன் வரைவை விரைவில் பாராளுமன்றத்துக்குக் கொணர வேண்டுமென்பதே தமிழரசுக் கட்சி அவருக்கு இட்ட பணியாகும். அத்துடன், தமிழ் மொழிச் சட்டத்தை நன்கு நடைமுறைப்படுத்துவதற்கு இன்றியமையாத பிரமாணங்களையும் பாராளுமன்றத்தில் நிறைவேற்றுவதற்கான பொறுப்பும் அவரிடம் தரப்பட்டது.

இரண்டு வருடங்களுக்கு மேலாகியும், மாவட்ட சபை முன் வரைவை ஆக்குவதற்கு அமைச்சர் எதுவித முன்முயற்சியும் எடுக்கவில்லை. தந்தை செல்வா அவர்களது இல்லத்தில் கூடிய கட்சிப் பாராளுமன்றக் குழுக்கூட்டத்தில் இதுபற்றி கா. பொ. இ. வினா எழுப்பினார். அமைச்சருடைய பதில் அவருக்கு மிகுந்த ஏமாற்றத்தையே அளித்தது. "இவ்வாறு காலம் கடத்துவது, தமிழினத்துக்குச் செய்யும் மாபெரும் துரோகம்" எனக் கூறிய பண்டிதர் அக்குழுக் கூட்டத்திலிருந்து வெளிநடப்புச் செய்தார். சட்ட முன் வரைவு அமைச்சரால் பின்னர் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட பொழுதும் அது நிறைவேற்றப்படவில்லை.

தமிழ் மொழிச் சட்டத்தை நடைமுறைப் படுத்த, பிரமாணங்களை ஆக்குவதில் காலங்கடத்தப்பட்டது. இந்தப் பிரமாணங்கள் தமிழ் மக்களுக்குப் பயன்படும் வகையில், தக்கமுறையில் ஆக்கப்பட வேண்டுமென்பது கா. பொ. இ. அவர்களது கருத்தாக இருந்தது. தமிழ் மொழிப் பிரமாணங்களைப் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்க வேண்டியவர் நிதியமைச்சர். இது தொடர்பாக ஒரு அரைகுறை வரைவை நிதியமைச்சர் தமிழரசுக் கட்சியின் உடன்பாட்டைப் பெறுவதற்குச் சமர்ப்பித்திருந்தார். விரைவில் செய்யக் கூடிய திருத்தங்களை பண்டிதர் அவர்களுடன் சேர்ந்து செய்யுமாறு தந்தை செல்வா அமைச்சரைக் கேட்டுக் கொண்டார்.

தந்தை செல்வாவின் விருப்பத்துக்கு அமைய, அமைச்சர் திருச்செல்வத்தின் இல்லத்தில் அவருடன் இருந்து இந்த வரைவு பற்றி கா. பொ. இ. அவர்கள் பேசினார். பல திருத்தங்களை முன்வைத்தார். அவரது திருத்தங்களை அமைச்சர் ஏற்றுக் கொள்ளவில்லை. அத்துடன், பாராளுமன்றக் குழுக் கூட்டத்தில் வரைவு விவாதத்துக்கு வந்த பொழுதும் அவர் பிடிகொடுத்துப் பேசவில்லை. தனக்குத் தெரியாமலே அமைச்சர் இந்தவரைவை உறுதிப்படுத்தி, அரசிடம் கொடுக்கக்கூடும் எனும் ஐயம் பண்டிதர் அவர்களுக்கு இருந்தது.

அவரது ஐயத்தை மெய்ப்பிப்பது போல அமைச்சர் இரண்டாம் பேருக்கும் தெரியாமல் திரு. அமிர்தலிங்கம், திரு. கதிரவேற்பிள்ளை ஆகியோருடன் சேர்ந்து, வரைவைப் பார்வையிட்டு, ஒரு இரகசியப் பேணுகையுடன் அதனை அரசிடம் கையளித்தார். மனம் நொந்து போன கா.பொ.இ. அவர்கள் தனது நாட்குறிப்பில் இச்சம்பவம் குறித்து இவ்வாறு எழுதியுள்ளார்: "தமிழரே தமிழினத்துக்கும் தமிழ் மொழிக்கும் கேடு விளைக்கின்றனர்". நினைவுத் திரைகள் எனும்

அவரது சுயசரிதைநூலில் இது இடம்பெற் றுள்ளது.

இதேபோல, மொழிச் சிக்கலைத் தீர்ப்ப தற்கு அன்றைய பிரதமர் டட்லி சேன நாயக்கா அவர்கள் உருவாக்கிய மும் மொழித் திட்டத்தையும் முனைவர் அவர் கள் காரசாரமாக எதிர்த்தார். இத்திட்டம் தமிழரசுக் கட்சியின் ஒப்புதலுடன் தமிழ ரைச் சிங்களம் படிக்கச் செய்வதற்காக வகுக்கப்பட்ட பெரும் சூழ்ச்சி என்பது இவரது எண்ணமாகும். இத்திட்டம் -ஆட்சி யில் பங்கு கொண்டுள்ள தமிழரசுக் கட்சியின் ஆதரவு கிடைக்காமையால் அரசால் கை விடப்பட்டது. இதற்கு மூலகாரணம் கா. பொ. இ. அவர்கள்தான்.

பின்னர் 1970 இலும் 1977களிலும் நடை பெற்ற தேர்தல்களிலும் ஊர்காவற்றுறை தொகுதியில், முறையே தமிழரசுக் கட்சியின் சார்பிலும் தமிழர் விடுதலைக் கூட்டணியின் சார்பிலும் போட்டியிட்டு வெற்றிவாகை சூடினார்.

நல்ல பாராளுமன்ற உறுப்பினராகப் பதினெட்டு ஆண்டுகள் பணியாற்றிய இவர் பாராளுமன்றத்து உள்ளும் - வெளியேயும் தனது தொகுதியிலும் ஆற்றிய பணிகள் மகத் தானவை. பாராளுமன்றக் கேள்வி நேரத் தில், இவர் கேட்கும் கேள்விகள், இலங்கை அமைச்சர்களுக்குச் சிம்ம சொப்பனமாகவே இருந்தன. ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்ரீமாவோ அவர்களது அரசில் நிதியமைச்சராயிருந்த என். எம். பெரேரா அவர்களது-“ஊர்கா வற்றுறை பாராளுமன்ற உறுப்பினரை (கா.பொ.இ) சில தினங்களுக்கு வெளிநாடு அனுப்ப வேண்டும்” என்ற நண்பர்களிடத் திலான பேச்சு, கா. பொ. இ. அவர்களது கேள்வி நேரத் தொல்லை தாளாத வெளிப் பாடுதான். இவரது கேள்விகள் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் பலவற்றைச் செய்து முடிக்கப் பெரிதும் உதவின.

1976 ஆம் ஆண்டு வட்டுக்கோட்டையில் நடைபெற்ற தமிழர் விடுதலைக் கூட்டணி யின் மாநாட்டில் தனித்தமிழ் ஈழத்தை உருவாக்குவதற்கான தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. தமிழர்விடுதலைக் கூட்டணி யினரின் முடிவை அறிந்த அரசு அன்றிரவே தனித்தமிழ் நாடு பற்றிய கட்சியின் தீர் மானத்தை அச்சிட்டுப் பரப்புவதையும் ஏடுகளில் வெளியிடுவதையும் தடைசெய் தது. ஆனால் கா. பொ. இ. அவர்களும் திருவாளர்கள் எம். சிவசிதம்பரம், அமிர்த லிங்கம், துரைரத்தினம், வ. ந. நவரத்தினம் ஆகியோரும் அரச ஆணைக்கு எதிர்ப்புக் காட்டும் வகையில், தீர்மான நகலை அச் சிட்டு, யாழ்நகரில் விநியோகம் செய் தார்கள். பதட்டப்பட்ட இலங்கை அரசு, இவர்களைக் கைது செய்து, தடுப்புக்காவ லில் வைத்தது. அத்துடன் தனி நீதிமன்றத் தில் விசாரணையையும் முடுக்கியது. திரு. ஜி.ஜி. பொன்னம்பலம், திரு செல்வநாயகம் போன்ற தேர்ந்த வழக்குரைஞர்கள் அந்நீதி மன்றத்துக்கு வழக்கை நடத்துதற்கு உரிமை யில்லை என வாதிட்டு, அவர்களுக்கு விடு தலை கிடைக்க வகை செய்தார்கள்.

1983 ஆம் ஆண்டு ஆடித் திங்கள் 25 இல் பாராளுமன்றத்தில் இவர் தனது கடைசி உரையை நிகழ்த்தினார். அவ்வுரை தமிழ் ஈழம் உருவாவது திண்ணம் எனவும் அதற்குப் புலிவீரம் துணைபோகும் எனவும் புலிவீரர்கள் மத்தியில் தற்கொலையாளிகள் உருவாகுவர் எனவும் சூழுரைத்தார். அந்த உரை அக்காலத்தில் பலராலும் பாராட் டப்பட்டது.

பாராளுமன்ற உறுப்பினராக இவர் இருந்த காலத்து பகமாசில் நடந்த பொது நல நாடுகளின் பாராளுமன்ற இருபத்தெட் டாவது மாநாட்டில் பேராளர்களில் ஒருவ

ராகக் கலந்து கொண்டார். (1981) இவரது இந்தோனேசிய, பல்கேரியப் பயணங்களும் அரசு சார்பானவையே.

தமிழர்தம் உயர்ச்சிக்கு, தமிழ்ஈழம் உருவாதலே சாலச் சிறந்தது எனும் கருத்துடைய இவர் - இளைஞர் தம் ஆயுதப் போராட்டத்தை மனமொப்பி வரவேற்றதுடன், அவர்களது போராட்டத்துக்கு ஏனைய தமிழர் விடுதலைக் கூட்டணி உறுப்பினர்கள் போலல்லாது "இளைஞர்களது போராட்ட வழிக்கு உதவி செய்ய முடியாதவர்கள் உபத்திரமாகுதல் செய்யாதிருத்தல் வேண்டும்." எனக் கூறி தமது அரசியல் வாழ்விலிருந்து முற்றாக ஒதுங்கிக் கொண்டார்.

தமிழர் விடுதலைக் கூட்டணியினர் 25-2-87 இல் சிங்கள் அரசின் தமிழ் இனப் படுகொலையை எதிர்த்துச் சென்னை மெரினாக் கடற்கரையில் உண்ணாவிரதத்தை மேற்கொண்டனர். பண்டிதர் அவர்கள் பங்கு கொண்ட கடைசி அரசியல் நிகழ்ச்சி இதுவேயாகும்.

விட்டகுறை தொட்டகுறை என்பதற்கு ஒப்ப, அவரது இலக்கிய வாழ்வு சென்னையில் மீளவும் ஆரம்பமானது. அவ்வாழ்க்கை அவருக்குப் பல புதிய நூல்களை எழுதி வெளியிடவும் நுண்மாண் நுளைபுலம் மிக்க தமிழறிஞர்களுடன் கலந்து உறவாடவும் வாய்ப்பளித்தது. அத்துடன், அவர் செய்த அரும்பணிகளுக்குப் பாராட்டுக்களையும் பல கௌரவப் பட்டங்களையும் பெற்றுத் தந்தது. அவர் சென்னையில் புலம் பெயர்ந்து வாழ்ந்தமையால் தான் இந்தவாய்ப்பு பெரிதினும் பெரிதாக அவருக்குக் கிடைத்தது.

வேலணை தந்த இம் மூதறிஞர் எம்மிடையே உதித்தது தமிழர் செய்த தவப் பயன் என்றே சொல்ல வேண்டும். தமிழனையும் தமிழர்களும் தாம் விரும்பும் வகையில் நலம்பெற்று உயர்ந்திட, இவரைத் தெரிதல் செய்தனர் போலும். இதற்கமைவாக அவர் போற்றி வாழும் தமிழ்மறையின் அரிய குறள் வெண்பாவுடன் அவருடைய வரலாற்றுக் குறிப்பை நிறைவுசெய்தல் சாலப் பொருந்தும்.

"இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்
ததனை அவன்கண் விடல்"

## பின் இணைப்பு

பேராசிரியர், முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்கள் எழுதிய தமிழ்நூல்கள்:

1. அடிமைச் சாசனம்
2. இருபத்து நான்கு மணி நேரத்தில் தமிழ் ஈழம்
3. இலக்கியம் கற்பித்தல்
4. இலங்கையில் இன்பத்தமிழ்
5. உலகத்துக்கு ஒன்று
6. உரை வண்ணம்
7. கல்வியும் தமிழகமும்
8. காவிய மணம்
9. கற்பக மலர்
10. தடுப்புக்காவலில் பத்து நாள்கள்.
11. தமிழ் ஈழப் போராட்டம்
12. தமிழ் உணர்ச்சி
13. தமிழ் மறைவிருந்து
14. தனி ஆட்சி
15. தாவாரம் இல்லை
16. தொல் இலங்கையில் தமிழர்
17. நூற்றாண்டுகளில் தமிழ்
18. பச்சை மண்ணும் சுட்டமண்ணும்
19. மனப்பால்
20. யாஅம் இரப்பவை
21. வள்ளுவரைக் கேளுங்கள்
22. நினைவுத் திரைகள்

**கவிதை நூல்கள்**

1. அன்புச் சோலை
2. இமயத்து உச்சியில்
3. தமிழ் ஈழம் ஐம்பது

**தொகுத்தும் எழுதிச் சேர்த்தும் பதிப்பித்த நூல்கள்:**

1. எழுத்தாளர் கல்கி
2. தமிழ் மறைக் கட்டுரைகள்
3. திருவள்ளுவர் திருநாள் மலர்
4. நாவலர் நினைவுமலர்
5. பேரம்பலப் புலவர் நினைவுமலர்
6. முருகு.

**திருக்குறள் பணிக்காக இவர்பெற்ற விருதுகளும் பாராட்டுகளும்:**

1. திருக்குறள் செல்வர் -
   திருக்குறள் மாநாடு, யாழ்ப்பாணம் 1960
2. தமிழ் மறைக் காவலர் -
   டாக்டர் வ. சு. ப. மாணிக்கனார்
   வழங்கியது. 1980
3. குறள் ஆய்வு செம்மல் -
   உலகத்திருக்குறள் உயராய்வு மையம் 1992.
4. குறள் நெறிச் செம்மல் -
   தமிழ் கா. சு. நினைவு இலக்கியக் குழு,
   குளித்தலை 1992.
5. திருக்குறள் செம்மல் -
   மாண்புமிகு நிதி அமைச்சர் டாக்டர்
   நாவலர் இரா. நெடுஞ்செழியன்,
   சென்னை 1992
6. திருக்குறள் காவலர் -
   குன்றக்குடி அடிகளார் 1992
7. திருவள்ளுவர் சீர்பரவுவர் -
   "வள்ளுவர் வழி" வாசகர் வட்டம் 1993

**தமிழ்ப் பணிக்காக இவர் பெற்ற விருதுகள்:**

1. செந்தமிழ்க் கலைமணி -
   மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் 1980
2. தமிழீழச்சான்றோர் -
   தமிழகப் புலவர் குழு 1983
3. உலகத் தமிழர் செம்மல் -
   உலகத் தமிழர் மாமன்றம் 1994
4. தமிழக அரசின் திரு. வி. க. விருது

19.1.96 இல் சென்னைக் கலைவாணர் அரங்கில் நடைபெற்ற தமிழ் நாட்டரசின் திருவள்ளுவர் திருநாள் விழாவில் மாண்புமிகு கல்வியமைச்சர் பேராசிரியர் பொன்னுச்சாமி அவர்கள் இவருக்கு "திரு.வி.க. விருது" வழங்கிப் பொன்னாடை போர்த்திப் பொற்கிழி வழங்கித் தகவுரைப் பட்டயமும் கொடுத்தார்.

இத்தகவுரையிற் சில பகுதிகளைக் கீழே காண்க:

"பேராசிரியர் டாக்டர் கா. பொ. இரத்தினம் யாழ்ப்பாணத்திலுள்ள வேலணையிற் பிறந்தவர். புலமை சான்ற தமிழ் பேராசிரியர். நாளும் தமிழ்த் தொண்டு நாடும் தகைமையர். சீரிய தமிழ்ப் பணியால் சிங்களத்திலிருந்து உலக நாடுகளுக்குத் தமிழுறவுப் பாலம் அமைத்தவர்"

"நல்லார் உளமகிழ நாளும் நலமுரைக்கும் சொல்லார்க்கினி சொல்லார்ந்தினிய தேன் தமிழின் மேம்பாட்டுக்கு நூலாசிரியராக, ஆய்வாளராக சொற்பொழிவாளராகப் பல்லாற்றானும் அருந்தொண்டாற்றி வரும் முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்களுடைய திறமிகு பணிகளைப் போற்றிச் சிறப்பிக்கும் வகையில் தமிழ் நாடு அரசு 1995 ஆம் ஆண்டுக்குரிய திரு. வி. க. விருதினைப் பேராசிரியர், முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்களுக்கு வழங்கி மகிழ்கிறது.உலகத் தமிழர் பேரமைப்பு "உலகப் பெருந்தமிழர்" என்னும் விருதினை 5.7.2003 இல் இவருக்கு வழங்கியது.



# பண்டிதர் கா. பொ. இரத்தினம் பற்றி சென்னைக் கம்பன் கழகம் வழங்கிய பாராட்டுரை.

**பண்டிதர். கா. பொ. இரத்தினம்**

"இவர் செய்வார் அவர் செய்வார்
எமக்கென்ன என்றிருந்தால்
எவர் செய்வார் தமிழ்ப்பணிகள்"

- என்று நம்மைத் தட்டி எழுப்பி

"....பைந்தமிழை அரியணையில்
ஏற்றி முதல் இடம் அளிக்க எல்லோரும்
இயன்ற பணி
ஆற்றிடுதற்கு உறுதி கொண்டால்
அவனியிலே தலைநிமிர்ந்து
மானமுள்ள இனத்தினராய் மங்காத
புகழுடனே
ஊனமின்றி வாழ்ந்திடலாம் உய்ந்து"

என்று நாம் ஒவ்வொருவரும் நம்மாலியன்ற அளவு தமிழ்ப்பணியைச் செயலிற் காட்டி அருந்தமிழன்னையை அரியாசனம் ஏறச் செய்ய வேண்டுமென்ற பெரு விருப்பினர்.

எனவே தான்,

"தேசிழந்து சோர்வடைந்து தேய்ந்த உள்ளம்
திட்பமுடன் உயர்வதற்குத் திறமை மிக்க
மாசிணையாப் பெருமருந்து மனத்துக்கென்றே
மாண்புடைய வள்ளுவனார் மதித்துத் தந்த
ஆசிணையாத் தமிழ் மறையே அவனி காணா
அருமருந்தாம்"

என்று தமிழ் மறைக் கழகத்தை 1952 லேயே நிறுவி உலகெங்கும் குறள் நெறி பரவும் வகை செய்தசெயல் வீரர்.

தமிழ் வழங்கும் நாடனைத்திலும் திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடச் செய்து, திருவள்ளுவர் தொடர் ஆண்டை முதன் முதலில் வழங்கச் செய்து செந்தமிழ்த் தொண்டை செயற்படுத்தி செகமெங்கும்

தமிழ்கொடி பறக்கச் செய்த செயல் மறவர்.

யாழ்ப்பாண மாவட்டத்தில் வேலணையிற் பிறந்து 18 ஆண்டுகள் தொடர்ந்து இலங்கைப் பாராளுமன்ற உறுப்பினராய் தமிழ் உரிமைக்குக் குரல் கொடுத்து உறவுக்குக் கை கொடுத்த பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள் தான் வான்புகழ் வள்ளுவன் தோன்றிய வண்டமிழ் நாட்டில் மயிலாப்பூரில் திருவள்ளுவர் திருக்கோயிலில் ஆண்டு தோறும் திருக்குறள் முற்றோதுதலுக்கு அறக்கட்டளை நிறுவிய தீரர்.

பன்னிரெண்டு ஆண்டு கல்லூரி ஆசிரியப் பணிக்குப்பின் இலங்கை அரச கருமமொழித் திணைக்களத்தில் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராய்ப் பணியாற்றி பதினையாயிரத்திற்கும் மேற்பட்ட ஆட்சிச் சொற்களை வெளியிடுவதற்குப் பொறுப்பாயிருந்து செயலிற்காட்டிய செந்தமிழ்ச் சூரர்.

இருபத்திரண்டு உரைநடை நூல்களும் மூன்று கவிதை நூல்களும் எழுதிய இவருடைய கட்டுரைகளும் கவிதைகளும் இடம் பெறாத உலக ஏடுகளே இல்லை எனலாம். இவர் ஆற்றிய ஆய்வுரைகளும், தமிழ் முழக்கஞ் செய்து திரும்பிய நாடுகளும், செய்து முடித்த அரும் பெரும் பணிகளும் பெற்ற விருதுகளும் கணக்கிட்டுக் காட்ட முடியாதன; ஆம். எண்ண முடியாத ஏற்றமிகு தொண்டாற்றி எண்பது அகவையைத் தாண்டிய இளைஞர் இவர். அத்தகு அயராத செயற்திறனாலன்றோ இவர் இன்றும் செம்மேனி எம்மானராய்த் திகழ்கின்றார்.

உலகெங்கிலுமுள்ள தமிழருடன் தொடர்பு கொண்டு 1963 இலேயே கோலாலம்பூரில் உலகத் தமிழ் மன்றத்தை நிறுவிய இவர்தம் தண்டமிழ்ப் பணிக்கு நாம் என்ன சொல்லிப் பாராட்டி விட முடியும்?

மற்றொரு தமிழ்ப்புலவரை இவர் வாழ்த்தினாரே, அந்த இவர்தம் சொற்களாலேயே, அவனருளாலே அவன்தாள் வணங்குமாப் போலே வாழ்த்தி மகிழ்ந்திடுவோம்.

உள்ளிவந்து குறள் விருந்தை
உய்ய அளித்தஉங்களுக்கு
அள்ளி வழங்கச் செம்பொன்னும்
ஆடை அணியும் இல்லெனினும்
துள்ளிக் குதிக்கும் உள்ளத்தால்
தூய நன்றி கூறுகின்றோம்!
நள்ளி பேகன் இன்றிருந்தால்
நாடும் உமக்கு வழங்கிடுவார்!

# அரசியற்றுறைப் பெரியோர்கள்

## வேலணைக் கிராமச் சங்கத்தின் முதலாவது தலைவர்

# திரு. வைத்தியலிங்கம் விஜயரட்ணம்

## "பெரியவர்"

திருமதி. வாமதேவா

**வே**லணையிலே, கிராம சேவையிலும் தேச சேவையிலும் பயின்று, தமிழிலும் சைவத்திலும் ஊறிப் பண்பட்ட ஒரு வேளாண் பழங்குடியிற் பிறந்தவர் திரு. விஜயரட்ணம் அவர்கள். இவரின் தந்தை திரு வ. வைத்தியலிங்கம் அவர்கள். தாயார் கதிராசிப்பிள்ளை. உடன் பிறந்தோர்: திருமதி பொன்னம்மா, பொன்னம்பலம், சேர் துரைசுவாமி, பொன்னுத்துரை, இரத்தின கோபால், இராஜகோபால் முதலானோர். இவரின் பட்டப் பெயர் "பெரியவர்", செல்லப் பெயர் "இராசா"

வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியில் ஆங்கிலக் கல்வி பெற்று லண்டன் மற்றிக்குலேஷன் பரீட்சையில் விசேஷ சித்தியும் பெற்றார். ஆனால் இளம் வயதிலேயே தனது தந்தையாரை இழந்த காரணத்தினால் சிரேஷ்ட புத்திரனாகிய இவருக்குப் பெரும் பொறுப்பேற்பட்டது. உயர் கல்விக்குச் செல்லும் வாய்ப்பையும் இழந்தார். எனவே தொழில் வாய்ப்பு அதிக மிருந்த கோலாலம்பூர் சென்று பொறியியல் துறையில் ஓர் தொழில்நுட்ப உதவியாள னாகக் கடமை புரிந்தார். இவரது புத்திக் கூர்மையினாலும் தொழிற்திறமையினாலும் சிறிய காலப்பகுதிக்குள் உயர் பதவி பெற்றார். மிக விரைவில் "CLERK OF WORKS" - F.M.S. RAILWAYS பதவியைப் பெற்றார். தனது இளைய சகோதரர் நால்வருக்கும் உயர்கல்வி கற்கும் வசதியளித்தார். சேர் துரைசுவாமிக்கு கல்கத்தா சர்வகலாசாலையில் பட்டப்படிப்பிற்கு பின் சட்டவறிஞர் படிப்பிற்கும் வாய்ப்பளித்தார். இவரது தாயார் இவரைப் பற்றிப் பெருமைப்படாத

நாளே இல்லை. "இளம் வயது தொடக்கம் கிணறு இறைப்பது போல அள்ளி இறைத் தான், எனது மகன் ராசா" என்று பெரு மையோடு கூறுவது வழக்கம் எனப் பெரி யோர் கூறக்கேட்டேன். தான் பெற்ற சிரேஷ்ட புத்திரன் "ஓர் விசேஷ சிருட்டி" எனக் கருதினார் போலும். மேலும் பிறர்க் குதவி செய்வதே இவரது முக்கிய குறிக் கோள் போலும்.

"யாழ்ப்பாணத்தில் விசேடமாகத் தீவுப் பகுதியிலிருந்து 700 பேருக்குமேல் மலாயா விலும் சிங்கப்பூரிலும் தொழில்வாய்ப்பு அளித்திருப்பார் உன்னுடைய தாத்தா" என்று எனது பெரிய தாயார் எனக்குக் கூறியது இக்கட்டத்தில் நினைவு வருகிறது. ஓர் அந்நிய நாட்டில் இவ்வாறு சாதிக்கக் கூடியவராக இருந்தார். அந்நாட்டவர் இவ ருக்கு வழங்கிய மரியாதையும் கௌரவமும் எவ்வளவு? மலாயாவில், விவேகானந்த சபையைத் தாபித்து அதற்கு தலைமை தாங்கி சேவை புரிந்தார் என்றும் சொல லக் கேள்வி.

மிகக் கடுமையாக உழைத்த காரணத் தினால் இளம் வயதிலேயே ஓய்வு பெற் றார் போலும். பின் யாழ்ப்பாணம் மணிக் கூண்டு வீதியில் வீடுகட்டி அங்கு நாற்பது ஆண்டுகள் வரை ஊருணியாய் நிறை வாழ்க்கை வாழ்ந்தவர் பெரியவர். இக் காலப் பகுதியில் தான் பிறந்த நாட்டிற்கு அளப்பரிய சேவை செய்தார். தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டாற்றினார்.

தனது சொந்தக் காணியில் நிலம் கொடுத்து சரஸ்வதி வித்தியாசாலையை நிறுவுவித்தார். இதற்கு 1925ல் டபிள்யு A. ரூப் (W.A.TROUPE) அடிக்கல் நாட்டினார். அவருக்கு ஆங்கிலத்தில் வரவேற்புரை வழங்கிய இளைஞர் எனது தகப்பனார் திரு. கு. வை. இராசையா அவர்களே. மிகத் திறமையாக வரவேற்புரை வழங்கியவர் யார் என்று அறிய W.A.TROUPE. மிகவும் ஆவலுடன் இருந்தார் என்றும் அறிந்தோம். மிகவும் விரைவில் கட்டிட வேலை பூர்த்தி யாகி 1927இல் தைப்பூச நன்நாளில் பாட சாலை ஆரம்பிக்கப்பட்டது. இதற்கு மலாயா விலிருந்து நிதி உதவி அதிகம் பெற்றார் என்றும் அறிந்தோம்.

இக்கல்லூரியில் பாலர் வகுப்பு தொடக் கம் நுழைமுக வகுப்புவரை நடைபெற்றன. இவரது கல்விப் பணியால் தோன்றி வளர்ச்சி யடைந்தவற்றில் சரஸ்வதி வித்தியாசாலை, சைவ வித்தியா விருத்திச் சங்கம், பழைய ஐக்கிய போதனா ஆசிரிய கலாசாலை என்ப வற்றைக் கூறலாம்.

1931ஆம் ஆண்டு டொனமூர் யாப்பின் படி பண்டாரநாயக்காவினால் உள்ளூ ராட்சி சட்டம் கொண்டுவரப்பட்டது. அதன் படி வேலணை - சரவணை, நாரந்தனை, கரம்பொன் உட்படுத்திய வேலணைக் கிரா மச் சங்கம் அமைக்கப்பட்டது. அக்கிராமச் சங்கத்தின் முதல் தலைவராக 1931ஆம் ஆண்டு வைத்தியலிங்கம் விஜயரட்ணம் அவர்கள் தெரிவு செய்யப்பட்டார். அவர் தொடர்ந்து இரு தடவைக்கு மேல் தலைவ ராகவிருந்து வேலணைக்கு சிறந்த சேவை யாற்றினார்.

1920 - 1947 வரை சிலகாலம் 1931- 34 தவிர இவரது தம்பியார் சேர் துரைசுவாமி தீவுப் பகுதிப் பிரதிநிதியாக அரசாங்க சபையில் இருந்த காலப் பகுதியில் கல்வி, சுகாதாரம் போன்ற சமூகத்துறைகளில் பல முன்னேற்றங்கள் நடைபெற்றன என் பார்கள். பெரியவர் தனது சொந்தக் காணி

யில் இன்னும் ஒரு பகுதியை வேலணை மருத்துவமனைக்குக் கொடுத்து உதவினார் என்றும் அறிந்தோம். இன்று அது மாவட்ட வைத்தியசாலையாக இயங்குகிறது.

வங்களாவடியிலிருந்து பள்ளிவாசல் வரை ஓர் கற்பாதை அமைப்பதற்கும் திரு. விஜயரட்ணம் அவர்கள் காரண கருத்தா வாக இருந்தார். 1970 வரை வரம்புகளைத் தவிர வேறு கற்பாதையொன்றும் இருக்க வில்லை. இதுதான் முதலாவது கற்பாதை. 1945ஆம் ஆண்டுகளில் இதற்கு விஜயரட் ணம் வீதியெனப் பெயரிடப்பட்டது.

"பெரியவர்" தான் பிறந்த கிராமத்திற்கு ஆற்றிய தொண்டுகள் பலவற்றை அவரது மருமகனாகிய வழக்கறிஞர் இராசையா தொடர்ந்து சாதித்தார் என்றால் மிகையா காது. சேர் துரைசுவாமி தீவுப் பகுதிப் பிரதி நிதியாக இருந்த காலகட்டத்திலேயே நெடுந் தீவு தொடக்கம் பண்ணைப்பாலம் வரை எவ்வளவோ பணிகள் நிறைவேறியது. இவற் றிற்கெல்லாம் இராசையா, சேர் அவர்களின் அந்தரங்கக் காரியதரிசியாகக் கடமையாற் றினார் என்றாலும் மிகையாகாது.

"பெரியவர்" யாழ்ப்பாண நகரத்தில் யாழ்ப்பாண ஐக்கிய வியாபாரச் சங்கத் தினை ஆரம்பிப்பதற்கும் கடுமையாக உழைத் தார். வன்னியில் நெற்பயிர்ச்செய்கைக்கு முக்கியத்துவம் வழங்கி நாட்டின் உணவுப் பிரச்சினையைத் தீர்க்க சிறந்த வழியெனப் பணி புரிந்தார். இது சம்பந்தமாக கரைச்சி பயிர்ச்செய்கையாளர் விருத்தித் திட்டத்தில் முக்கிய பங்கெடுத்தார்.

தனது இறுதிக் காலத்தின் ஒரு சில வருடங்களை தனது பத்தினியின் கிராம மாகிய வதிரியில் கழித்தார். அங்கு வதிரி யின் முதலாவது கூட்டுறவுச் சங்கத்தை ஸ்தாபித்து கிராம மக்களுக்காகப் பெரும் சேவை புரிந்தார்.

திரு விஜயரட்ணம் அவர்கள் அயராது பொதுப்பணியிலும் சைவத்தின் முன்னேற் றத்திலும் ஈடுபட்டார் என்றால் அதற்குப் பூரண ஒத்துழைப்பு வழங்கி உறுதுணை யாக இருந்தவர். அவரது தெய்வ பத்தினி நீலாயதாட்சி என்றே கூறலாம். நிற்க, "பெரியவரின்" புதல்வர் மூவரும் புதல்வி கள் இருவரும் இறைவனடி சேர்ந்துள்ளனர். எனினும் பெரியவரை ஓர் சிறந்த எடுத்துக் காட்டாகக் கருதி, அவரது பேரப்பிள்ளை களும் பூட்டப்பிள்ளைகளும் உலகின் பல பகுதிகளிலும் சிறந்த சேவையாற்றுகின்றனர்.

சுபம்

** குறிப்பு. இலைமறை காய் போல் இருந்து அளப்பரிய பொதுத் தொண்டு செய்தும் "நான் தான் இதைச் சாதித்தேன். தொடக்கினேன்." என்று ஒருநாள் ஒரு பொழுதாயினும் எனது தாத்தா கூறியது, எனக்குத் தெரியாது. "நான்" என்னுடையது என்ற சொற்கள் இப் பெரியவரின் அகராதியில் இருக்க இல்லைபோலும்.*

*மேற்கூறிய விஷயமெல்லாம் கேள்வி அறிவைக்கொண்டு எழுதியதேதவிர பழைய ஏடுகளையும் பதிவுகளையும் கொண்டு எழுதவில்லை. பிழைகள் உண்டானால் தயவு செய்து மன்னிக்கவும்.*



# அரசியற்றுறைப் பெரியோர்கள்

## கிராமச்சங்கத்தலைவர்

# திரு. அம்பலவாணர் செல்லையா (1956-1960)

### திரு. நா. குழந்தைவேல்

"தோன்றிற் புகழுடன் தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

எனும் பொய்யா மொழிக்கிணங்க வாழ்பவனே சமூக நட்சத்திரம் எனப்படுவார். மனித இனத்துள் பிறந்து வளர்ந்து தொடர்ந்து துணையாகவும் துன்பத்துக்கு அணையாகவும் இருந்து இவ்வுலகில் ஏற்றமிகு விடிவெள்ளியாக திகழ்பவர் எனக் கொள்ளலாம்.

இத்தகைய பண்புகளைக் கொண்டு திகழும் ஒருவரின் அறிவு, திறன், மனப்பாங்கு என்பன ஏனையவர்களால் விரும்பப்படுவனவாக அமையும். இத்தகையோர் மற்றவர்களின் புகழ்ச்சிக் கணிப்பிலும் பார்க்க விமர்சனம் மூலம் அங்கீகரிக்கப்படுதல் சிறப்பானதாகும். இவர்கள் சமூக நட்சத்திரங்களாகத் திகழ ஆரம்பக் கட்டம் அவர்களின் குடும்பமே என்றால் மிகையாகாது. ஏனெனில் "நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்" என்ற வாக்கிற்கமைய ஒருவரின் முழுமைத்துவத்திற்கும் சமூக நட்சத்திரமாவதற்கு வேண்டிய பண்புகளை விருத்தி செய்யும் காரணிகளில் குடும்பப் பாங்கு முக்கிய இடத்தைப் பெறுகின்றது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இத்தகைய குடும்பத்தில் சிறந்தவராக ஒருவர் இனங்காணப்படும் போது அனைவரினதும் அபிமானத்தைப் பெற்றவர் என்ற அடிப்படைத் தகைமை கொண்டிருத்தல் சிறப்பானதாகும்.

மேலும் சமூக நட்சத்திரம் எனப்படுபவர் உலக ரீதியாக தத்துவங்களை வெளிப்படுத்

துவதன் மூலம் தன்னைப் பிரபல்யப் படுத்தலாம். இவ்விடத்தினை நிலைநாட்ட உயர்ந்தவிலை செலுத்த வேண்டிவரும். அல்லது அருஞ்சாதனைகள், உயர் திறன் கள், நுண்மதி, கடின உழைப்பு, தியாக சிந்தை அரும்பெரும் போராட்டத்தின் மூலம் வெளிக்கொண்டு வரலாம். இவ் வகையினர் அகிலம் புகழ் பெற்ற சமூக நட்சத்திரமாவர்.

“ஒரு மனிதன் இவ்வுலகில் எவ்வளவு காலம் வாழ்ந்தான் என்பது முக்கியமல்ல தான் வாழ்ந்த சமூகத்திற்கு எவ்வாறு தொண்டாற்றினான் என்பதே முக்கியம்” என்று மேல்நாட்டு தத்துவஞானி ஒருவர் கூறிச் சென்றுள்ளார். இதை நோக்கும் போது அண்மையில் அமரத்துவம் அடைந்த திரு. அம்பலவாணர் செல்லையா அவர்கள் பாராட்டப்பட வேண்டிய ஓர் பெரு மகனாவார்.

திரு. செல்லையா அவர்கள் 1908ஆம் ஆண்டு பங்குனி மாதம் 3ஆம் திகதி காலஞ் சென்ற அம்பலவாணர்- பார்வதிப்பிள்ளை தம்பதியினருக்கு மகனாகப் பிறந்தார். இவ ருடன் பிறந்தவர்கள் 6 சகோதரர்களும் ஒரு சகோதரியுமாவர். இவருக்கு 6 ஆண் பிள்ளைகளும் 4 பெண்பிள்ளைகளுமுள்ள னர். இவர்கள் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கி கனடா, இங்கிலாந்து, ஜேர்மனி போன்ற வெளிநாடுகளிலும் இலங்கை யிலும் மனைவி பிள்ளைகளுடன் சிறப்பாக வாழ்ந்து வருகின்றனர்.

இவர் இந்திய சுதந்திரப் போராட்டத்தில் மிகவும் கவரப்பட்டார். காந்தி, நேரு, ராஜாஜி, விஜயலட்சுமி பண்டிற் போன்றோரின் முழு உருவப் படங்களை மாட்டி அழகு பார்த் தார். இவர் இளமைக் காலத்தில் கல்கி, ஆனந்தவிகடன், வீரகேசரி போன்ற பத்திரி கைகளை வாசிப்பதில் மிகவும் விருப்பம் கொண்டவராகவும் இருந்தார். மேலும் இலங்கைத் தமிழரசுக் கட்சியில் தீவிர பற் றுள்ளவராகவும் இருந்தார். முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்களான திரு. வ. நவரெத்தினம். திரு. வே. அ. கந்தையா போன்றோருடன் மிக நெருக்கமாகவும் அரசியலில் தீவிரமாகவும் இருந்தார்.

இவர் சைவ மகாசபை என்ற ஸ்தா பனத்தை அமைத்து அதன் தலைவராக இருந்து பெரும் பணியாற்றினார். 1955 ஆம் ஆண்டு சேர் வைத்திலிங்கம் துரை சுவாமி மகாவித்தியாலய முன்றலில் திரு முறை விழா 3 நாட்கள் சிறப்புற நடைபெற் றது. அதில் இந்திய பேச்சாளர்கள் பங்குபற் றினர். இவ்விழாவின் வெற்றிக்கு இவர் பெரும் பங்காற்றினார். இவர் பொதுச் சேவையிலும் தனது முத்திரையைப் பதித் துச் சிறப்புப் பெறுகின்றார். 1956 – 1960 காலப்பகுதிக்கு வேலணைக் கிராம சபை யின் இரண்டாம் வட்டாரத்திற்கான அங் கத்தவராகப் போட்டியின்றி ஏகமனதாகத் தெரிவு செய்யப்பட்டார். ஆட்கடத்தலும் தில்லுமுல்லுகளும் இடம்பெறும் இத்தகைய தேர்தலில் ஏகமனதாக தெரிவு செய்யப் பட்டமை அவரது அப்பழுக்கற்ற சேவைக் குக் கிடைத்த வெகுமதியாகவே கொள்ள வேண்டும். அவரது பணிவும், பண்பும் தன் னலமற்ற சேவையும் வேலணைக் கிராமச் சங்கத்தின் தலைவராக ஏகமனதாகத் தெரிவு செய்யப்பட வழிவகுத்தது. இவரது தலைமைத்துவத்தின் கீழ் வேலணை பல வழிகளிலும் அபிவிருத்தியடைந்தது. இக் காலப்பகுதியில் ஒழுங்கைகள் பல அகன்ற வீதிகளாக்கப்பட்டன. புதிய வீதிகள் அமைக் கப்பட்டன. கிராமத்தின் குடிநீர்ப் பிரச்சினை யைத் தீர்ப்பதற்கு நன்னீர்க் கிணறுகள் தோண்டப்பட்டன. குளங்கள் துப்புரவாக்

கப்பட்டு அணைகள் கட்டப்பட்டு கூடிய நன்னீர்த் தேக்கத்திற்கு வழிசமைக்கப் பட்டது. வாய்க்கால்கள் ஒழுங்கமைக்கப் பட்டு கிராமத்தின் விவசாய வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கப்பட்டது. நெசவு நிலையங்கள் அமைக்கப்பட்டு கிராமப்பெண்கள் மத்தியில் நெசவுக் கைத்தொழிலில் ஈடுபட வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டது. சனசமூக நிலையங்கள் அமைக்கப்பட்டு கல்வியறிவும் வாசிப்புப் பழக்கமும் மேம் படுத்தப்பட்டது. இவ்வாறு இவர் சேவைக் காலத்தில் கிராமம் பல வழிகளிலும் முன் னேற்றம் கண்டது.

1962ஆம் ஆண்டு வேலணை கிழக்கு மகாவித்தியாலயத்தில் நடைபெற்ற திருக் குறள் மகாநாடு தமிழ் மறைக் கழகத்தின் தலைவர் பண்டிதர் கா. பொ. இரத்தினம் தலைமையில் 3 நாள் விழாவாக கொண் டாடப்பட்ட போது பாராளுமன்ற உறுப் பினர்களான திரு. இராஜதுரை, வே.அ. கந்தையா பங்கு பற்றிய விழாவில் இவர் தலைமை தாங்கியமை குறிப்பிடத்தக்கது.

நீதிநெறி தவறாது இன்சொல்லனாக வாழ்ந்த பெரியவாத்தியார் 1971- 1977 காலப்பகுதியில் அரசாங்கத்தினால் இணக்க சபைத் தலைவராக நியமனம் பெற்றார். அக்காலத்தில் இப்பகுதி மக்களிடையே ஏற் பட்ட சச்சரவுகள், குடும்பப் பிரச்சனைகள், காணித் தகராறுகள் போன்றவற்றினை நீதியாகவும் நேர்மையாகவும் அணுகி சமரச மான முறையில் இவற்றிற்குத் தீர்வு கண் டார். இதனால் ஊர் மக்களின் நன்மதிப்பை மேலும் பெருக்கிக் கொண்டார். கிராமத்தில் வாழ்ந்த காலத்தில் அங்கு இடம்பெற்ற வாழ்வு, தாழ்வு, சுகதுக்க நிகழ்வுகள் அனைத் திலும் பங்குகொண்டு மக்களுடன் மக்களாக ஒன்றிணைந்து வாழ்ந்து வந்தார்.

வேலணைக் கிராமத்திற்கும், தீவக மக்களுக்கும் பல வழிகளிலும் தன்னல மற்ற சேவையாற்றிய பெரிய வாத்தியாரின் பணிகளை ஆவணப்படுத்துவது அவசிய மானதாகும். சிதறுண்டு போன எமது பிர தேசம் மீளவும் ஒருகால் கட்டியெழுப்பப் படும் போது முன்னோர் எமக்கு செய்த அரும் பணிகளை எதிர்காலத் தீவக மக்கள் உணர்ந்து கொள்ளவும் அறிந்து கொள்ள வும் இத்த கைய சேவையில் தம்மை அர்ப்பணிக்கவும் இந்த ஆவணப்படுத்தல் உதவும் என்று நம்புவோம்.

இவர் தமது தொண்ணூற்று ஆறாவது அகவையைப் பூர்த்திசெய்யும் வேளையில் அமரத்துவமெய்தினார்.





# அரசியற்றுறைப் பெரியோர்கள்

### கிராமச்சங்கத்தலைவர்

## திரு. கணபதிப்பிள்ளை - சதாசிவம் அவர்கள்

**திரு. கா. பாலகிஸ்ணன்**
**(கிராம அபிவிருத்தி உத்தியோகத்தர்)**

வேலணைக் கிராமத்தின் அபிவிருத்திக்கும், அம்மக்களின் வளர்ச்சிக்கும் உழைத்த பெரியார்களில் கணபதிப்பிள்ளை சதாசிவம் அவர்கள் முதன்மையானவராவார். இவர் வேலணை மக்களின் நலனுக்காக பல்வேறுபட்ட அபிவிருத்தித் திட்டங்களையும், சமூக கலாசார தொண்டுகளையும் பெருமளவு செய்து மக்களின் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரியவராக வாழ்ந்தவராவார். இவர் வாழ்ந்தகாலத்தில் இவர் பங்கு பற்றாத எந்த நிகழ்ச்சிகளும் நிகழ்வுகளும் இல்லை என்றே கூறலாம்.

இவர் வேலணைக் கிராமச் சங்கத்தில் 1961 ஜனவரியில் இருந்து 1964 ஜுலை வரையுள்ள நான்கு ஆண்டுகள் கிராமச் சங்கத் தலைவராகச் சேவை புரிந்து உள்ளார். பின்னர் 1969 இலிருந்து வேலணை கிராமச் சபை கலைக்கப்படும் வரையுள்ள காலமும் சேர்த்து எல்லாமாக 10 ஆண்டுகள் வரை கிராமச் சங்கத் தலைவராக சேவை புரிந்துள்ளார்.

அவருடைய நெருங்கிய நண்பனும், வேலணையின் அரசியல் சமூக கலாசார தொண்டருமாகிய ஓய்வு பெற்ற அதிபரும், சமாதான நீதிவானுமாகிய திரு. சி. இராஜரெத்தினம் அவர்கள் இவருடைய ஆளுமையினையும், கடமை உணர்வையும் பற்றி பின்வருமாறு கூறுகிறார்.

என்ஜினியர் சதாசிவத்தை எண்ணும்போது
எத்துறையும் கைதேர்ந்தகடமை வீரன்
வஞ்சமிலா தனைவருக்கு முதவி செய்து
வாழ்க்கையிலே வரலாறு படைத்தசெம்மல்
அஞ்சாது முகங்கொடுத்துக் கருமமாற்றும்
ஆற்றலினால் அனைத்திலுமே சித்தி கண்டு
சஞ்சலமே காணாதமனிதனென்ற
சரித்திரத்தை நிறுவிவைத்த சான்றோன் தானே.

இவர் 1955ஆம் ஆண்டு வேலணை மத்திய மகாவித்தியாலயத்தில் அப்போதைய பாராளுமன்ற அங்கத்தவர் அமரர் வீ.ஏ. கந்தையாவுடன் இணைந்து தென்னிந்தியாவிலும், இலங்கையிலும் இருந்து தமிழ் அறிஞர்களை அழைத்து (திருமுறை விழாவை) சிறப்புடன் செய்தார். மேலும் 1961ஆம் ஆண்டு இலங்கைத் தமிழ் அரசுக் கட்சியினால் தமிழர் உரிமைக்காகச் சாத்வீக போராட்டம் நடாத்தப்பட்டபோது தீவுப் பகுதி மக்களுக்கும், சிறப்பாக வேலணை மக்களுக்கும் தலைமை தாங்கி அச்சத்தியாக்கிரகப் போட்டத்தைத் திறம்படச் செய்தவர்களில் இவரும் ஒருவர்.

1963ஆம் ஆண்டு முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் அமரர் வீ. ஏ. கந்தையா அவர்களது மரணச் சடங்கை மிகவும் சிறப்பாக மந்திரிமார், பாராளுமன்ற அங்கத்தவர்கள், உயர் பதவி உத்தியோகத்தர்கள், பல்லாயிரம் மக்கள் கலந்து சிறப்பித்து வேலணை வரலாறு காணாத அளவில் தலைமை தாங்கி நடாத்தி தனது தலைமைத்துவத்தைத் தெளிவாக வெளிப்படுத்தினார்.

தீவகமும் யாழ் நகரமும் பண்ணைக் கடலால் பிரிக்கப்பட்டிருந்தபோது மக்கள் போக்குவரத்தை இலகுபடுத்த ஒரு சங்கம் அமைக்கப்பட்டிருந்தது. அச்சங்கத்தின் தலைவராக இருந்து சங்கம் சிறப்புடன் செயற்பட உதவியவர். இச் சங்கம் கூட்டுறவு வைத்தியசாலை ஒன்றை அமைப்பதற்காக வேலணைச் சாட்டியில் 135 பரப்புக் காணியைக் கொள்வனவு செய்தது. ஆனால் அப்போதைய சூழ்நிலையில் வைத்திய நிலையம் அமைப்பதற்கு முடியாமற் போக, அக்காணியை வேலணைக் கிராமச் சங்கத்திற்கு உரித்தாக்கிய பெருமையும் இவரையே சாரும். இன்று இந்த நிலப்பரப்பிலிருந்து தான் வேலணைக்கும், புங்குடுதீவுக்கும் நீர் விநியோகம் செய்யப்பட்டு வருகின்றது. இந்த நீர் விநியோகத் திட்டத்தை வேலணை, புங்குடுதீவு மக்களுக்காக ஏற்படுத்தி இன்று பரந்தளவில் பெரும்பான்மையான மக்கள் நீர் விநியோகத்தைப் பெறுவதற்கு வழி சமைத்துக்கொடுத்தவர்.

தீவகத்தையும் யாழ்ப்பாணத்தையும் பிரிக்கும் கடலை பாலத்தால் இணைப்பதற்கு அமரர் வீ. ஏ. கந்தையா (பா.உ) அவர்களுடன் இணைந்து, இணைப்புப் பாலத்தினை அமைத்தார். தீவக மக்களின் போக்குவரத்து பெருந்துயர் இதனால் துடைக்கப்பட்டது. இப்பாலத்தைத் திறந்து வைத்து முதல் முதலில் கடந்தவர்கள் அமரர் வீ.ஏ. கந்தையாவும் இவருமே.

வேலணையில் அமைத்திருந்த அமெரிக்க மிசன் பாடசாலையை அம்பிகை மகளிர் பாடசாலை என உருவாக்கியதுடன் வேலணை சரஸ்வதி வித்தியாலயத்தை ஆண்கள் பாடசாலையாக ஆக்குவதற்கும் முன்னின்று உழைத்தவர்.

முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திரு. கா. பொ. இரத்தினம் அவர்களின் காலத்தில் நிறுவப்பட்ட கமநல சேவை நிலையம், மிருகவைத்திய நிலையம் என்பன அமைவதற்கு காணிகளை ஒதுக்கிக் கொடுத்தும் மேற்படிக் கட்டிடங்களைக் கட்டுவதற்குக் கட்டிடப் பொறியியலாளராக இருந்தும் சேவையாற்றினார். அத்துடன் வேலணை மத்திய மகாவித்தியாலயத்தில் வானுயர்ந்து நிற்கும் கட்டிடங்களை இவரே கட்டிடப் பொறியியலாளராக இருந்து கட்டி முடித்தார். இவற்றினை இப்பாடசாலையின் அப்போதைய அதிபர் திரு. செ. குணபால சிங்கம் அவர்கள் ஓரிடத்தில் பின்வருமாறு

நினைவு கூருகின்றார். "வேலணை மத்திய மகா வித்தியாலயத்திற்கு இவர் செய்த சேவை போற்றுதற்குரியது. பாடசாலைக் கட்டடங்களை கட்டுவதற்கு இவர் பெருந் தொண்டாற்றியுள்ளார். அங்கு வானுயர்ந்து நிற்கும் கட்டிடங்கள் இதற்குச் சான்று பகரும். அவருடன் நான் இப்பாடசாலைக்கு உதவிகளையோ ஆலோசனைகளையோ வேண்டி நின்ற போது எந்த நேரத்திலும் தனது உடல் நிலையையும் சௌகரியத்தையும் பொருட்படுத்தாது மனமுவந்து உதவியவர்" இப்பாடசாலை தற்போது சேர் வைத்தியலிங்கம் துரைசுவாமி மத்திய மகாவித்தியாலயம் என பெயர் பெற்று இயங்கி வருகின்றது.

இன்று வேலணையில் உயர்ந்து நிற்கும் வேலணைப் ப.நோ. கூட்டுறவுச் சங்கக் கட்டிடம் அமைந்துள்ள காணியை அச் சங்கத்திற்கு ஒழுங்குபடுத்திக்கொடுத்து அக்கட்டிடம் கட்டுவதற்கான வரைபடம் ஒன்றினையும் வழங்கி அக் கட்டிடத்தின் பொறியியலாளராகவும் செயற்பட்டு அக் கட்டிடம் சிறப்பாக அமைய உதவினார்.

தற்போது எரிபொருள் நிரப்பு நிலையமாகவும் சந்தைக் கட்டிடமாகவும் இருக்கும் காணியையும் பிரதேச சபை இயங்கி வருகின்ற காணியையும் அரசாங்கத்திடம் இருந்து கிராமச் சங்கத்திற்கு உரிமை ஆக்கியதும் இவர் காலத்தில் தான்.

திரு. வி. நவரத்தினம் (முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்) அவர்களின் உதவியால் முதன் முதல் அரச உதவியுடன் மின்சாரத்தை வேலணைக்குக் கொண்டு வந்த பெருமையும் இவரையே சாரும்.

வேலணை பாடசாலைகளில் உயர் கல்வி பெற வாய்ப்பில்லாத திறமையான மாணவர்கட்கு யாழ்ப்பாணத்தில் பிரபல்யமான பாடசாலைகளில் அனுமதி பெற்றுக் கொடுத்து அம் மாணவர்கள் உயர் கல்வியைப் பெற வழிவகுத்தார். திரு. வி. நவரத்தினம் (முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்,) அமரர் வீ. ஏ. கந்தையா ஆகியோர் காலத்தில் வேலணையில் படித்துப் பட்டம் பெற்ற வேலையற்ற பட்டதாரிகள் பலருக்கு அரச நியமனம் வழங்குவதற்கு உதவினார்.

இன்று வேலணை வங்களாவடியை அழகுபடுத்தி அருள்கொடுத்துக் கொண்டிருக்கும் முருகன் ஆலயத்தை உருவாக்கியதில் பெரும்பங்கு இவருக்குள்ளது. ஆலயம் அமைந்துள்ள காணியை ஒதுக்கிக் கொடுத்ததுடன் ஆலயம் அமைப்பதற்கு பொறியியலாளராக இருந்தும் செயற்பட்டார். 1978ஆம் ஆண்டு அம்முருகன் ஆலயத்தின் கும்பாபிஷேகத்திற்கு தலைமை தாங்கினார். அதன் நிர்வாக சபையின் தலைவராகவும் செயற்பட்டார். இவர் இறக்கும் வரை இக்கோயிலுடன் ஈடுபாடுடையவராக இருந்தார்.

இவர் யாழ் வைத்தியசாலை நிர்வாக சபையில் பல ஆண்டுகளாக அங்கத்தவராக இருந்து யாவரும் போற்றும் வகையில் பல அரிய ஆலோசனைகளை வழங்கியுள்ளார். அத்துடன் வேலணை மக்களுக்கு, இப்பதவியைப் பயன்படுத்தி பல வைத்திய உதவிகளையும் செய்வித்துள்ளார்.

இவர் தான் பிறந்த கிராமத்திற்கு வெளியே பல்வேறுபட்ட சமூகப் பணிகளையும், சமயப் பணிகளையும் செய்துள்ளார். கிளிநொச்சி உருத்திரபுரத்தில் பண்டைக் காலத்தில் இருந்து அழிந்த சிவன் கோவிலை மீளவும் அதே இடத்தில் அமைத்தார். அத்துடன் இவர் சைவ சமயத்தின் மேல் கொண்ட பற்றினால்

## வாழ்வு பற்றி............

வேலணை கணபதிப்பிள்ளை அன்னம்மா தம்பதிகளின் மூன்றாவது புதல்வராக 07.10.1905ம் ஆண்டு வேலணையில் பிறந்தார். ஆரம்பக்கல்வியை வேலணையிலும் யாழ் வைத்தீஸ்வராக் கல்லூரியிலும் கற்றார். அக்காலத்தில் கல்விகற்ற யாழ் மக்களுக்கு வேலை வழங்கும் மையமாக விளங்கிய மலேசியாவுக்கு தனது 18வது வயதில் சென்றார். மலேசியாவின் கோலாலம்பூர் பட்டினத்தின் முதன்மை வாய்ந்த மெதடிஸ் ஆண்கள் பாடசாலையில் இடைநிலைக்கல்வியைப் பயின்றார். இவர் மலேசியாவின் பொது வேலைப்பகுதியில் (PWD) தொழில்நுட்ப உத்தியோகத்தராக இணைந்தார். இவரின் புத்திக்கூர்மை விடாமுயற்சி கடின உழைப்பு என்பவற்றினால் விரைவான பதவி உயர்வு பெற்று மலேசியாவின் பொது வேலைப்பகுதி (PWD) கட்டடப் பிரிவின் பொறியியலாளராக உயர்ந்தார். இவர் மலேசியாவில் கல்விகற்கும் காலத்தில் மெய்வல்லுனர் விளையாட்டு வீரராகவும் ரெனிஸ் வீரராகவும் திகழ்ந்தார். பொது வேலைப்பகுதியின் மெய்வல்லுனர் விளையாட்டு வீரராக (Champion) நீண்டகாலம் இருந்தார்.

இவர் தனது ஓய்வு வயதுக்கு முன்பே ஓய்வுபெற்று தனது 47ஆவது வயதில் (1952ல்) சொந்த நாடு சுதந்திரம் பெற்றவுடன் சுதந்திரக்காற்றை சுவாசிக்க சொந்தமண்ணுக்குத் திரும்பினார். இங்கு 34 ஆண்டுகள் சொந்தமண்ணில் நீண்டகாலம் சமூக சேவை செய்து 08.04.1986ல் சொந்த மண்ணுக்கே வித்தானார்.

கூட்டுப் பிரார்த்தனைகளை வீடுகளிலும் கோவில்களிலும் செய்து வந்தார். யாழ்ப்பாணத்தில் சைவ சன்மார்க்க சபையை நிறுவி சமயத் தொண்டு செய்ததுடன், அதன் செயலாளராக நீண்ட காலம் இருந்தார்.

யாழ் வேம்படி மகளிர் கல்லூரியின் மேபல் தம்பையா மண்டபத்தைக் கட்டுவதற்குப் பொறியியலாளராகச் செயற்பட்டார். அப்போதைய அதிபர் மேபல் தம்பையா அவர்கள் இவரின் செயல்திறன் பற்றிக் கூறும்போது "அமரர் சதாசிவம் ஒரு சிறந்த சமூகசேவையாளர். மழைவெயில் என்று பாராது தான் எடுத்துக்கொண்ட நற்காரியங்களை சரிவரச் செய்து முடிப்பதில் சமர்த்தர். இவர் சினந்தறியாதவர். பரந்த அவர்தன் வதனத்தில் என்றும் தவழ்ந்திருக்கும் புன்முறுவல் எவரையும் தம்பால் ஈர்க்கும் தன்மையது. இவர் நற்குடிமகனாக நல்லதோர் தலைவனாக அவருடன் பழகியவர்களின் நினைவில் என்றும் நிலைத்திருப்பார். வேம்படி மேபல் மண்டபத்தைக் கட்டி முடிப்பதற்கு இரவு பகலாகப் பாடுபட்டார். பிரதி உபகாரம் எதுவும் இன்றி கல்லூரியின் நன்மை கருதியே செய்துள்ளார். இது இவரது அயராத உழைப்பிற்கும், வள்ளன்மைக்கும் ஒரு சின்னம் எனலாம்" எனக் குறிப்பிட்டார்.

யாழ் வண்ணை வைத்தீஸ்வரா வித்

தியாலயத்தின் பல்வேறு கட்டிடங்கள் அமைப்பதற்கு பொறியியலாளராக செயற் பட்ட இவர் பற்றி சுவாமி பிரேமானந்த மகாராஜ் (இராமகிருஷ்ண மிசன் கொழும்பு கிளை) கூறும்போது, கட்டிடப் பொறியியலா ளரான இவர் வண்ணை வைத்தீஸ்வரா டித்திய கட்டிடங்களை இரவு பகல் எனப் பாராது அதிபர் அம்பிகைபாகனுடன் இணைந்து சிறப்பாக கட்டி முடித்தார் என அவரது சேவையைப் பாராட்டி யுள்ளார். யாழ் மத்திய கல்லூரியின் பல கட்டிட அமைப்புப் பணிகளுக்கும் பொறி யியலாளராக செயற்பட்டார். அத்துடன் தெல்லிப்பளை மகாஜனா கல்லூரியின் கட்டிடங்கள் அமைப்பதற்கும் பொறியிய லாளராகவும் இருந்து தன்னலமற்ற சிறப் பான சேவையினை ஆற்றி உள்ளார். இவரது சேவை பற்றி டாக்டர் ஜே. பி. ஷி. பிலிப் அவர்கள் இப்படிக் கூறுகின்றார். "பொதுவாக யாழ் நகரிலும் சிறப்பாக வேலணையிலும் அமரர் சதாசிவம் ஆற்றிய பங்களிப்புக்கள் பல, பெற்றோர் ஆசிரியர் சங்கங்களினால் மேற்கொள்ளப்பட்ட பாட சாலைக் கட்டிடங்களுக்கு இலவசமாக ஆலோசனை வழங்கியும் மேற்பார்வை செய்தும் தம் கட்டிடப் பொறியியல் நுண் ணறிவினையும் ஆழ்ந்த அனுபவத்தையும் பயன்படுத்தியுள்ளார்." எந்தப் பாடசாலை யிலும் இவர் தமது சேவையினை வழங்கிய போதெல்லாம் எதுவித ஊதியமும் பெறா மலே சேவையாற்றியுள்ளார் என்பது குறிப் பிடத்தக்க விடமாகும். இது, இவர் யாழ் மாவட்ட மாணவர்களின் கல்வி மேம்பாட் டில் கொண்ட பற்றையும் ஈடுபாட்டையும் காட்டுகின்றது.

மேலும் இவர் வேலணை கிராமச் சங்கத் தலைவராக இருந்த காலத்தில் யாழ் மாவட்டத்தின் கிராமச் சங்க சமாசத் தின் தலைவராகவும் செயற்பட்டுத் தமது சேவையினை யாழ் மாவட்டம் முழுவ தற்குமே பரவலாக்கினார்.

வேலணையின் புகழ்பூத்த கவிஞன் தில்லைச் சிவன் இவரது நற்பண்பினையும் புத்திக் கூர்மையையும் இவ்வாறு நினைவு கூருகின்றார்.

சற்குணவன் சதாசிவ ஆம்
தண்ணளியான் வேலணையூர்
பெற்றவையுள் அறிவுடைய
பிள்ளை இவன், ஈங்கின்னைச்
சித்திரத்துள் வைத்தும்
சிலை செய்தும் போற்றிடினும்
உத்தமற்கு நாம் கைம்மாறு
உதவிடுதல் ஆகிடுமோ?

இவர் தமது சமூக சேவைப் பணிகளில் கல்வித்துறை, கலாசாரத்துறை, கட்டிட நிர் மாண பணித்துறை, ஆன்மீகத்துறை, சமூக வியல்துறை போன்ற பல்வேறு துறைகளில் ஈடுபாடு காட்டி வேலணைக் கிராம மக் களினதும், யாழ் மாவட்ட மக்களினதும் உயர்விற்காக உழைத்ததன் மூலம் அம் மக்களின் மனங்களிலும், நினைவுகளிலும் நீங்காது இடம்பிடித்துக்கொண்டுள்ளார். இவரது பிறப்பினாலும் சேவையினாலும் வேலணைக் கிராமம் பெருமைபெற்றுள் ளது என்றே கூறலாம். இவர் மக்களுக்காக, மக்களின் சேவைக்காக வகித்தபதவிகளால் இவர் பெருமையினை பெறவில்லை. மாறாக இவர் அப் பதவிகளை வகித்த தினால் அப்பதவிகள் பெருமை பெற் றுள்ளது என்றே கூற முடியும். இவரது இச்சேவைகளை இச்சிறிய கட்டுரை மூலம் சுலபமாக அளந்துவிட முடியாது.



# அரசியற்றுறைப் பெரியோர்கள்

### கிராமச்சங்கத்தலைவர்

## அமரர். புற்றிடம்கொண்டார் சுப்பிரமணியம்

### *(01. 07. 1964 - 30. 06. 1968)*

### திரு. க. சட்டநாதன் - ஆசிரியர்

**வே**லணை பெருமை கொள்ளக்கூடிய வகையில் உதித்த பெரியார்களுள், புற்றிடம் கொண்டார் சுப்பிரமணியம் அவர்களும் ஒருவர்.

இவர் 1914 ஆம் ஆண்டு ஆனிமாதம் 7ஆம் நாள் நற்தோன்றல் புற்றிடம் கொண்டார் அவர்களுக்கும் நாகம்மா என்னும் பெருமகளுக்கும் நான்காவது பிள்ளையாக அவதரித்தார். இவருக்கு முன் பின்னாக இரு சகோதரர்களும் இரு சகோ தரிகளும் தோன்றினார்கள்.

இளமையிலேயே மிகவும் மதிநுட்பமும் கல்வியின்பால் அதிக நாட்டமும் கொண்ட இவர், வேலணை மிசன் பாடசாலையில் தலைமை ஆசான் இளையதம்பி அவர் களது வழிகாட்டலின் கீழ் தகைசால் ஆசிரிய மணிகள் பலரிடம் தனது ஆரம்பக் கல்வி யையும், உயர்கல்வியை யாழ் சன்மார்க்க போதனா வித்தியாலயத்திலும் பெற்றார். ஊர்மக்கள் மதிக்கக்கூடிய வகையில் நல்ல மனிதனாக உருவாகிய இவர், தாம் பிறந்த மண் மகிமை கொள்ளும் வகையில் செயற் பட்டார். யாழ்ப்பாணம் ஐக்கிய வியாபார சங்கத்தில் இலிகிதராகத் தனது கடமையை ஆரம்பித்த இவர் - சென்ற நூற்றாண்டின் நாற்பதுகளில், வேலணை கிழக்குப் பெரும் பர்க கிராமத் தலைமைக்காரராக கடமை ஏற்றார். இவரது இப்பணி 1963 வரை நீடித்தது. மக்கள் மத்தியில் செல்வாக்குடன் வாழ்வதற்கு இப்பதவி அவருக்கு பெரிதும் துணை செய்தது.

வேலணை - யாழ்ப்பாணத்தில் உள்ள ஏனைய கிராமங்களைப் போலவே பொதுப் பண்புகள் பலவற்றைக் கொண்டு இயங் கியது. சிலர் நில உடமையாளர்களாகவும்

பலர் அந்நிலவுடைமையாளர்களது தயவில் வாழ்பவர்களாகவும் இருந்தார்கள். நில உடைமையாளர்களைச் சார்ந்து வாழ்ந்த மக்கள் பல்வேறு சமூகப் பிரிவினராக இருந்ததுடன் உடைமையாளர்களது உரிமை பேணும் குடிமைகளாகவும் வாழ்ந்தார்கள்.

சாதிப் பகுப்பு முறையில் ஏற்படக்கூடிய பல பிரச்சினைகள் வேலணையிலும் தோன்றவே செய்தன. அப்பிரச்சனைகளுக்கு முகம் கொடுத்து மக்களிடையே ஒரு ஒழுங்கமைதியையும் உயிரோட்டமான வாழ்நிலையையும் உருவாக்குபவர்களாக முத்துமணியகாரரும் அவர் மகன் சோமசுந்தர மணியகாரரும் செயற்பட்டார்கள். அப்பணியின் தொடர்ச்சியை, கிராமத் தலைமைக்காரராகப் பணி ஏற்ற இவரும் பேணினார் என்பது மிகைக் கூற்றல்ல.

மணியகாரர்கள் நிர்வாகம் செய்த காலத்து, தீவக அபிவிருத்தி, நிர்வாகம் அரச சொத்துக்களின் பேணுகை, விற்பனை, வரி அறவிடுதல் ஆகியன அவர்களாலேயே மேற்கொள்ளப்பட்டது. மணியக்காரர் முறை ஒழிக்கப்பட்டு காரியாதிகாரிகள் பிரிவுகள் தோன்றிய காலத்து கிராமத் தலைமைக்காரர்களே மட்டுப்படுத்தப்பட்ட அளவில், தத்தம் பகுதியில் மணியகாரர் தம் பணிக்கு ஒப்பான பணியை செய்தார்கள். அந்த வகையில் வடமாகாண அரச அதிபரால் வேலணை கிழக்குப் பெரும்பாகப் பகுதியை நிர்வகிக்க நியமனம் பெற்றவரே நமது திரு.டி. சுப்பிரமணியம் அவர்கள்.

ஊர்மக்களின் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவரான இப்பெரியவர், அப்பதவியை ஏற்று மிகச் சிறப்பான முறையில் பணியாற்றினார். கிராமத் தலைமைக் காரரான இவர்தம் கடமைகளும் அதிகார எல்லைகளும் பல்வகைப்பட்டதாக அக்காலத்தில் இருந்தது. அவை இங்கு பட்டியலிடப்படுகின்றது.

(1)

(அ) பொதுக் குற்றவாளிகள் என அறியப்பட்டவர்களை முறைப்பாடுகளுடன் பொலிசுக்குப் பாரப்படுத்தல்.

(ஆ) கள்ள நாணயம் அச்சிடுவோரைக் கண்டறிந்து பொலிசுக்குப் பாரப் படுத்தல்.

(இ) சீர் திருத்தச் சிறைச்சாலையில் உள்ள இளம் குற்றவாளிகள் விடயமாக அக்கறை எடுத்தல்.

(2)

(அ) சட்டவிரோதமாக மிருகங்களைப் பிடித்தல், உடைமையாக்குதல் அல்லது இறைச்சிக்காக விற்றல்.

(ஆ) சட்டவிரோதமாக வெடிமருந்து வைத்திருத்தல், உரிமம் பெறாத துப்பாக்கிகள், ரவைக் கூடுகள் வைத்திருத்தல் ஆகியவற்றைத் தடுப்பதற்கான முயற்சியில் ஈடுபடுதல்.

(3)

அ. உணவுப் பங்கீட்டுக்கான பதிவுகள் கூப்பன் வழங்குதல்.

ஆ. அரசு பஞ்சப்படி வழங்கும் வகை உரியவர்களை சிபார்சு செய்தல்.

இ. பொதுசன உதவிகள் வெள்ளப் பெருக்கு, சூறாவளி, கடும்வரட்சி ஆகிய வற்றுக்கு நிவாரணங்களை அரசிடமிருந்து மக்களுக்குப் பெற்றுக் கொடுத்தல்.

(4)

அ. கிராம இறை வருமானங்களான தலை வரி, நெல்வரி, ஆயவரி ஆகியவற்றை வசூலிப்பது

ஆ. அரச வருமானங்களைப் பேணுதல்

இ. அரச நிலங்களைப் பராமரித்தல்.

(5)

அ. பாராளுமன்ற மற்றும் உள்ளூராட்சி வாக்காளர் இடாப்புக்களைத் தயாரித்தல்.

ஆ. காட்டிலாகாச் சட்டங்களை மதித்து நடக்கும் வகை மக்களுக்கு அறிவுறுத்தல், மீறும் பட்சத்தில் சட்ட ஒழுங்குக்கு உட்படுத்தல்.

இ. பதிவாளராகச் செயற்படுதல்-பிறப்பு இறப்பு

ஈ. நீதிசேவைக்கு உதவும் வகையில் யூரிமார்களைத் தேர்வு செய்து, சிபார்சு செய்தல்

உ. ஊர் பிணக்குகளை, காணி எல்லைத் தகராறு போன்ற பிணக்குகளைச் சம நிலை நின்றுதானே தீர்த்து வைத்தல்.

இங்கு பட்டியலிடப்பட்ட கடமைகளை நேர்மையுடனும் நெறிதவறாத பண்புடனும் செயல்முறைப்படுத்தியவர் நமது மணியம் அவர்கள்.

இவர் சைவசமயியாக இருந்தபோதும் மதசார்பின்மைக் கொள்கையில் மிகுந்த பற்றாளர். அவருக்கு எம்மதமும் சம்மதம். அவரது நிர்வாகத்துக்கு உட்பட்ட வேலணையில் சைவ ஆலயங்கள் பலவும் கிறிஸ்தவ ஆலயம் ஒன்றும், றோமன் கத்தோலிக்க தேவாலயம் ஒன்றும் பள்ளிவாசல் ஒன்றுமென நான்கு மதப் பிரிவினருக்கும் உரிய கோயில்கள் இருந்தன. இக்கோயில்களில் நான்கு மதத்தினரும் ஒன்றுகூடி ஆண்டு தோறும் விழா எடுப்பது அரிய காட்சி. திருவிழாக் காலங்களிலோ அதற்கு முன் பின்னாகவோ இவர்களிடையே மதப் பிணக்குகள் காரணமாக எதுவித அசம்பாவிதமும் நடைபெறுவதில்லை. இது விதானையார் என ஊர் மக்களால் அன்பாக அழைக்கப்படும் இவரது உயர்ந்தபட்ச சாதனை எனின் மிகையாகாது.

சமூக மட்டத்தில், முதன்மை மனிதர் என்ற அளவில் இவர் ஏனைய பிரஜைகளுக்கு முன்மாதிரியாக வாழ்ந்தார். தூய வெண்மையான தமிழர் தம் தேசிய உடையில் கம்பீரமாக தோற்றம் தரும் இவர் சமூக நிலையில் பெரிதும் மதிக்கப்பட்டவர். இவ்வகையில் மக்கள் அவர் மீது வைத்த மதிப்பும் மரியாதையும் பல சமூக நிறுவனங்களின் தலைவராகவும் உறுப்பினராகவும் பணியாற்ற அவருக்கு உதவின.

மக்கள் மத்தியில் இவருக்கு இருந்த செல்வாக்குக் காரணமாக வேலணை 5ஆம் வட்டார- கிராம சபை உறுப்பினராக ஆனதுடன், கிராமசபைத் தலைவராகவும் இருந்தார். இவர் கிராம சபைத் தலைவராக இருந்தகாலத்து நமது கிராமச் சபைக்கு ஒரு நிரந்தரமான கடைத்தொகுதியை அமைத்ததோடு வேலணை மக்களுக்கு பயன்படும் வகையில் ஒரு நூல் நிலையத்தையும் கிராமச் சபையின் கீழ் ஓர் ஆயுர் வேத வைத்திய நிலையத்தையும் ஸ்தாபிதம் செய்தார்.

கிராமத் தலைமைக்காரர் பதவியில் இருந்து இவர் ஓய்வு பெற்ற பின்னரும்

இவரது சமூகத்தொண்டு தொடரவே செய்தது.

1977 முதல் நல்லிணக்க சபைத் தலைவராக இயங்கிய இவர் 1973 முதல் வேலணை பெருங்குளத்து முத்துமாரி அம்மன் ஆலய நிர்வாக சபைத் தலைவராகவும் இருந்தார். வேலணை இலந்தை வனம் பிள்ளையார் கோவில் தேர்த்திரு விழா உபயகாரர்களில் ஒருவராக வாழ்வின் இறுதி நாள்வரை இருந்து சிறப்பித்ததும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய ஒன்றாகும்.

ஊர்மக்கள் நலனே தன் நலன் என வாழ்ந்த இப்பெரியவர், தமது 88 ஆவது வயதில் இவ்வுலகை நீத்து சிவபதம் அடைந்தார். ஊர்மக்களை மட்டுமல்ல, தான் பெற்ற பிள்ளைச் செல்வங்களையும் வளர்த்து ஆளாக்கி வழிகாட்டியாகவும் இப்பெருமகன் வாழ்ந்தார். இவர் நாமம் நமது கிராமத்து மணக்கும் மண் உள்ள வரை நீடு வாழும்.



# பண்டாரநாயக்கா செல்வா ஒப்பந்தம்



பண்டா - செல்வா பேச்சுவார்த்தையின் போது பிரதமர் பண்டாரநாயக்காவுடன்
தந்தை செல்வா. அருகில் திருகோணமலை (பா.உ) ஆர் இராஜவரோதயம்,
திரு வி. ஏ. கந்தையா (பா. உ) மற்றும் தமிழரசுக் கட்சித் தலைவர்கள்



பண்டா - செல்வா ஒப்பந்தம் தொடர்பாகப்
பிரதமர் எஸ். டபிள்யு. ஆர். டி. பண்டாரநாயக்கவுடன் தந்தை செல்வா,
வி. ஏ. கந்தையா, டாக்டர் நாகநாதன் ஆகியோர்.

# சமூக சேவையாளர்கள்

## திரு. நாகநாதி கந்தையா அவர்கள்

திரு. ந. ஜெகநாதன் (ஆசிரிய ஆலோசகர்)

நிலவளமும் கடல்வளமும் நிரம்பவே பெற்றது வேலணை மண். பல நூற்றாண்டுகளாக அன்னை முத்துமாரி வீற்றிருந்து அருளாட்சி புரிவதும் அந்தமண்ணிலே தான். "தனியொருவனுக்கு உணவிலை யெனில் இந்த ஜெகத்தினை அழித்திடு வோம்" என்று போர்முரசு கொட்டினான் பாரதி. ஆனால் அடுத்தவன் பசித்திருக்க பார்த்திராமல் பகிர்ந்துண்டு வாழ்ந்த பெரு மக்களை நிரம்பப் பெற்றதும் அதுதான். எவருக்கும் இணை யிலா வாழ்வு தந்த பெருமைக்குரிய இப்பதியிலே திருவாளர் கார்த்திகேசு நாகநாதி என்ற பெருமகனுக்கும் பெண் சின்னத்தங்கத்திற்கும் வாய்த்த இரு ஆண், இரு பெண் மக்களுள் தலை மகனாகப் பிறந்தவர்தான் திரு. கந்தையா அவர்கள். தந்தையார் திரு. நாகநாதி அவர்கள் ஊர் மதிக்க வாழ்ந்த பண்பாளன். அன்னை முத்து மாரிமீது அளவிலாப் பற்றுக் கொண்டவர். அயலவர் நோய்தீர்க்கும் மருத்துவனாகவும், விபூதி தந்து வினை தீர்க்கும் வேதியனாகவும் 'அவள்' அருள்தாங்கி வாழ்ந்தவர்.

பிள்ளையாரப்பா என்று எல்லோராலும் அன்பாக அழைக்கப்படும் திரு. கந்தையா அவர்கள் மணவயதுவரை தனது பெற்றோரின் அரவணைப்பிலே பாரம் சுமக்காமல் வாழ்ந்தவர். இவரது பதினெட்டாவது வயதிலே அயலவரும் உறவினருமாகிய சடையர்-சின்னப்பிள்ளை

தம்பதியரின் அழகியமகள் தெய்வானைப்பிள்ளையை மணம் செய்து தந்து சொந்தக்காலில் நின்று உலகியலறிவைப் பெற்றுக்கொள் என்ற தந்தையாரின் பணிப்பை ஏற்று தனது வாழ்வுப் பாதையைச் சுதந்திரமாக அமைக்கத் துணிந்தவர். "முயற்சி திரு வினை ஆக்கும்" என்ற முதுமொழிக்கிணங்க வாழ்வை போராட்ட களமாக எடுத்து போராடி வெற்றி கண்டவர். உழைப்பின் பெறுமதியைத் தானுணர்ந்தது போலவே அயலவர்க்கும் புரியவைத்து வழிகாட்டியாக இருந்தவர் என்பது மிகையல்ல. உழைப்போடு குடும்ப வாழ்வையும் சுவையாகவே அமைத்துக் கொண்டு வாழ்ந்ததின் பயனாக ஆறு பெண்மக்களையும் ஆளுமையுள்ள இரு ஆண் மக்களையும் பிள்ளைச் செல்வங்களாகப் பெற்றார். ஐந்தாறு பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவார் என்ற "வழக்கை" பொய்யாக்கி வாழ்ந்த பெருமகன் திரு. கந்தையா அவர்கள். உழைப்பில் விருப்பும் அன்னை பெருங்குளத்தாளில் அளவிலா பக்தியும் கொண்டவரை காலம் ஒருபோதும் கைவிடவில்லை.

மணப்பருவம் கண்ட மூத்தமகள் செல்லம்மாவுக்கு பொருத்தமான மணமகனாக திரு. முத்துதம்பி என்ற நல்மகனைத் தேர்ந்தெடுத்தார். திரு. முத்துதம்பி கொழும்பு மாநகரிலே முன்னணி வர்த்தகராகத் திகழ்ந்தவர். அழகு, அமைதி, அடக்கம், எளிமை நிரம்பிய குணவான். பிள்ளையார் வீட்டு தலை மருமகனாக திரு. முத்துதம்பி அவர்கள் வாய்க்கப்பெற்றது அந்த அம்பாளின் அருட் கருணை என்றே கொள்ளவேண்டும். குடும்பத்தின் வழிகாட்டியாக வாழ்வுக்கு உரமூட்டுபவராகவே அவர் திகழ்ந்தார். இவரின் இணைவு பிள்ளையார் குடும்பத்தின் வாழ்வுப் பாதையை அடுத்த படிநிலைக்கு உயர்த்தியது என்பதில் மாற்றுக்கருத்திருக்க முடியாது. அதிஷ்ட தேவதையின் கண்பார்வையாலும் அன்னை பெருங்குளத்தாளின் அருட்கருணையாலும் மக்கள் அனைவருக்கும் பொருத்தமான இல்லறங்கள் வாய்க்கப் பெற்றன.

"அடையாநெடுங்கதவும் அஞ்சேல் என்ற சொல்லும் உடையான்" என்று சடையப்ப வள்ளலைக் கம்பர் சொல்லியது போல, இல்லையென்று வந்தவருக்கு இல்லையென்ற சொல் பிள்ளையார் வீட்டில் இருந்ததில்லை. தடித்த, சிவந்த, உயர்ந்த உருவம். தலையிலே எந்நேரமும் இறுகச் சுற்றிய தலைப்பாகை வெள்ளை வேட்டியை மடித்துக் கட்டியிருப்பார். பார்ப்பவர்கள் மருளக்கூடிய தோற்றம். ஆனால் இந்த உருவத்தின் உள்ளமோ மென்மையானது. மிக மென்மையானது. அயலவரின் துன்பத்தை நன்றாக உணர்ந்தவர் தன்னிடமிருந்ததை தான்மட்டும் அனுபவித்து வாழ்ந்தவரல்ல. சுயநலமற்று தேவையான நேரத்தில் தேவையானவையை தந்து கைதூக்கிவிட்டவர். வேலணை கிழக்கில் பொருளாதாரரீதியாக ஒரு மிளிர்ப்பு ஏற்பட இவரின் குடும்பம் காரணமாகவிருந்தது என்பது தவறல்ல.

வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவில் நிருவாகத்தில் இணைந்து அன்னை பணிக்காக உழைத்தவர். 1953/54 ஆம் வருடங்களிலே சபையின் பொருளாளராக இருந்து அவர் ஆற்றிய தொண்டு குறிப்பிடப்படவேண்டியது. தவிரவும் 1957-1960 ஆம் வருடங்களிலே வேலணை கிராம சபையின் உறுப்பினராக இருந்து தனது வட்டாரத்தின் தேவைகளை உணர்ந்து செயற்பட்டதின் மூலம் ஒழுங்கைகள் வீதிகளாக்கபட்டன. நன்நீர்த் தேவைக்காக குறிச்சிகள் தோறும் கிணறுகள் தோண்டப்பட்டன. போக்குவரவுகளை இலகுவாக்குவதற்காக புதிய ஒழுங்கைகள், திறக்கப்பட்டமை யாவும் இவரின் ஆளுமையின் எடுத்துக்காட்டுகள் மாத்திரமல்ல கிராமத்திலே ஏற்படுகின்ற வழமையான பிணக்குகளையும், எவருக்கும் பாதிப்பில்லாமல் தீர்த்துவைப்பதில் கைதேர்ந்தவராகவிருந்தார்.

எதற்கும் சோடைபோகாத எங்கள் வேலணைக் கிராமத்தின் புகழ்பூத்த பெரியவர்களில் ஒருவராகத்திகழ்ந்த திரு. கந்தையா அவர்கள், "தக்கார் தகவிலர் என்பது அவர் தம் எச்சத்தால் கொள்ளப்படும்." என்ற முதுமொழிக்கு ஒப்ப இன்று கொழும்பு நகரின் முன்னணித் தொழிலதிபர்களாக தனது மக்கள், பேரப்பிள்ளைகளைத் தந்து போயுள்ளதைக் குறிப்பிடலாம். தங்கள் உழைப்பாலும், வள்ளல் தன்மையாலும் மண்ணுக்குப் பெருமை தேடித்தரும் அவர்களுக்கு அருள்மாரி பொழியும் அன்னை பராசக்தி தொடர்ந்தும் வழிகாட்டி நாட்டில் வளமூட்டுவாள் என்று நம்புவோமாக.



# சமூக சேவையாளர்கள்

# திரு. நாகலிங்கம் வீரசிங்கம் (துரைச்சாமி)

திரு. ச. மாணிக்கவாசகர் ஆசிரியர் - வேலணை

சைவமும் தமிழும் இரு கண்கள் எனப் போற்றி வளர்த்து வரும் பெருமைக்குரியது எமது வேலணைக் கிராமம். இங்கு வேலணை மேற்கூரில் உள்ளவர்கள் அனைவரும் சைவப் பழங்கள் எனக் கூறினால் அது புகழாரமல்ல. இக்கிராமத்தில் ஸ்ரீமான் கந்தப்பு உபாத்தியாயர், ஸ்ரீமான் இராசா உபாத்தியாயர், ஸ்ரீமான் தம்பு உபாத்தியாயர் ஆகியோர் தலைசிறந்த தமிழ் இலக்கிய அறிவாளராக விளங்கி நின்ற சைவப் பெரியார்கள். இவர்களில் முதலிருவரும் சைவப் பிரகாச வித்தியாசாலை, நடராசா வித்தியாசாலை, எனும் இரு கல்விக்கூடங்களை ஸ்தாபித்து வளர்த்து நின்ற பெரியார்கள். இவர்களை நாங்கள் வேலணை வரலாற்று நூல் வெளியிடும் வேளையில் நினைவூட்டி விடுவதால் எமது சந்ததிகள் நினைவில் வைத்துக்கொள்வர்.

வேலணை மேற்கூரில் திரு. நாகலிங்கம் சின்னம்மா தம்பதிகளின் ஏக புத்திரனாக 1928 ஆம் ஆண்டு வைகாசி மாதம் பதினைந்தாம் திகதி திரு. நாகலிங்கம் வீரசிங்கம் (துரைச்சாமி) பிறந்தார். இவர் 1933 ஆம் ஆண்டு தம் ஆரம்பக் கல்வியை யாழ் வேலணை நடராசா வித்தியாசாலையில் பயின்றார். இக்காலப் பகுதிகளில் இவர் தமது கற்றல் நெறியை செவ் வனே புரிந்து பாடசாலை ஆசிரியரின் புகழைப் பெற்றார். துரைச்சாமி என இயற் பெயரைக் கொண்ட இவர் கல்வியில் காட்டிய திறமை காரணமாக இவருக்கு ஆசிரியர் அப்பாத்துரை வாத்தியார் "வீரசிங்கம்" என ஒரு பட்டப்பெயரை சூட்டி னார். காலப் போக்கில் துரைசாமி எனும் பெயர் சற்று விலகி வீரசிங்கம் என்ற பெயரே நிலைத்தது. பின் 1936ஆம் ஆண்டு யாழ்

வேலணை சைவப் பிரகாச வித்தியாசாலையில் தன் கற்றலைத் தொடர்ந்தார். இதன் பின்பு இவரது தந்தை நோய்வாய்ப்பட்டதைத் தொடர்ந்து குடும்ப வறுமை காரணமாக உயர் கல்வியைத் தொடர முடியாத நிலை இவருக்கு ஏற்பட்டது. எனவே இவர் தமது கற்றலை ஆசிரியரின் எவ்வளவோ வற்புறுத்தல்களுக்கும் மத்தியில் 1941ஆம் ஆண்டு தனது எட்டாம் வகுப்பில் இடைநிறுத்திக் கொண்டு தனது சிறிய தந்தையுடன் இணைந்து தொழிலைப் பழகுவதற்கு ஹற்றன் (ஹெட்டியாக் கொல்ல) சென்று, அங்கு இரண்டு வருடங்கள் தொழிலைப் பழகி ஊரின் முகம் திரும்பி எங்கள் ஊரில் கமத்தொழிலில் ஈடுபட்டார்.

இவர் ஒரு சிறந்த விவசாயப் பெருமகன் "கடவுள் எனும் முதலாளி கண்டெடுத்த தொழிலாளி விவசாயி" என்று நித்தமும் சொல்லும் இவர் புகையிலையைத் தம் தோட்டத்தில் நட்டு, உயர்வடைந்தார். விவசாயத்துறையில் மிகவும் ஈடுபாடு கொண்டு எமது கிராமத்தில் இவர் முன்நிற்பதால், எம் ஊரில் இவர் ஒரு சிறந்த விவசாயப் பெருமகனாக எல்லோராலும் கௌரவிக்கப்பட்டார்.

## இவரது குடும்பப் பின்னணி

இவர் தனது இரு பெண் சகோதரிகளையும் கடும் உழைப்பின் மூலம் திருமணம் செய்து வைத்தார். இவர்களது இல்லற வாழ்வை மேம்படச் செய்தார். இவர் திரு. திருமதி மயில்வாகனம் தங்கமுத்து தம்பதியினரின் புதல்வியான பெரியநாயகியை (அன்னம்) 1954 ஆம் ஆண்டு திருமணம் செய்துகொண்டார்.

ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பத்தெட்டாம் ஆண்டு கிராம மக்களால் வேலணை மேற்கு கிராம முன்னேற்றச் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இக்காலப் பகுதியில் அவர் கைத்தனை வீதியை அகலமாக்கியமை, புதிய பல வீதிகளைத் திறந்தும் வங்களாவடியில் பேருந்து தரிப்பிடம் அமைப்பதற்கு இடம் வகுத்துக் கொடுத்தமை, கிராம மக்களின் கல்வி முன்னேற்றத்திற்காகப் பாடசாலைகளில் வகுப்புக்களை நடாத்துவதற்கு ஏற்ற ஆசிரியர்களைக் குறைந்த கட்டணங்களில் நியமித்தமை, வேலணை மத்திய கல்லூரியில் ஐந்தாம் வகுப்புப் பிள்ளைகளைச் சேர்ப்பதற்கு பெற்றோரிடம் காசு சேர்த்து வருடாவருடம் கொட்டில் போட்டுக் கொடுத்தமை, தளபாடங்கள் செய்வித்துக்கொடுத்தும் மேலும் பிள்ளைகளைச் சேர்ப்பதற்குத் தொண்டாற்றியமை போன்ற செயல்களைச் செய்து முடித்தார்.

இக்காலத்தில் சிங்களம் மட்டும் என்ற சட்டத்திற்கு எதிராக தந்தை செல்வா வழியில் நின்று அச்சட்டத்தை எதிர்த்தார். கிராம மக்களுக்கு தமிழ்மொழிப் பற்றை ஊட்டினார். தமிழ் பற்று மிக்கவராகத் திகழ்ந்தார். விவசாயத்துறையைக் கட்டி எழுப்பவும் பாடுபட்டார். இவ்வாறு தனது பணிகளை ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதாம் ஆண்டுவரை தொடர்ந்து மேற்கொண்டார். பின்பு ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதாம் ஆண்டு கிராமச்சபைத் தேர்தலில் போட்டியிட்டு எட்டாம் வட்டார அங்கத்தவராகத் (பிரதிநிதியாக) தெரிவு செய்யப்பட்டு, கிராமச்சங்கம் சென்று அதில் பதில் தலைவராகக் கிராமச்சபை அங்கத்தவர்களால் தெரிவு செய்யப்

பட்டார். கிராமத்தில் உள்ள குறைபாடுகளை இனங்கண்டு அவற்றை அகற்றி கிராமத்தின் முன்னேற்றத்திற்காக பல வீதிகளை திருத் தியும் போக்குவரத்திற்கு இடைஞ்சலாக இருக்கும் பதாகைகளை அகற்றியும் கிரா மத் தேவைகளுக்கு தேவையான நிதியை கிராமச் சபையில் கோரி கிராமத்தின் முன் னேற்றத்திற்கும் மக்களின் வாழ்வுக்குத் தேவையானவற்றையும் செய்து புகழ்மிக்க வரானார். பின்பு இரண்டாவது தேர்தலில் போட்டியிடாமல் விலகினார்.

பயிர்ச் செய்கை குழுவின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் கிராமத்தின் நீர்ப்பாசனத் தேவையை நிவர்த்தி செய் வதற்கு கவனிப்பாரற்று, அழிவுகளை ஏற் படுத்தும் குளங்களை புனரமைத்தமை, வேனாக் குளத்திலிருந்து கடலுக்கு நீர் போகும் பாதை தடைப்பட்டதினால் ஏற் பட்ட அனர்த்தங்கள் நிவர்த்தி செய்வதற் காய் பயிர்ச்செய்கை குழுவின் தனாதிகாரி யாக நியமனம் பெற்று, வேனாக் குளத்தி லிருந்து கடலுக்கு தண்ணீர் போகும் 1.7 கிலோமீற்றர் நீளமுடைய வாய்க்காலை சீமெந்தால் கட்டியமை, அம்பலவி காடு சுடலையை புனரமைப்புச் செய்வதற்காக அதற்கு ஒரு எல்லையை நிர்ணயித்து மதில் அமைத்து குடியேற்றத்திட்டங்கள் மேற் கொள்ளாமல் தடுத்து, அதற்கு போவதற்கு பாதையை அமைத்துக் கொடுத்தமை மற் றும் கடலை அண்டியுள்ள மக்கள் நன் நீரைப் பெறுவதற்கு கிணறு அமைக்கும் திட்டம் என்பன இவரால் மேற்கொள் ளப்பட்டன. ஆனால் அப்பொழுது ஏற் பட்ட நிதி நெருக்கடி காரணமாக அப்பணி இவரால் மேற் கொள்ளப்படவில்லை. பயிர்ச் செய்கைக் குழுவின் தனாதிகாரியாக இருந்த வேளை காலத்தின் சிறந்த சேவையான பொது நல சேவைகளும் இவரால் மேற் கொள்ளப்பட்ட பல திட்டங்களும் இன்னும் நிலைத்து இருக்கின்றன. 1971 – 1975 களில் வேலையற்ற இளைஞர் யுவதிகள் மேம்பாடு வதற்காக வேலணைக் கிராமம் தோறும் நான்கு நெசவுத் தொழிற்சாலையை நிறுவு வதற்குக் காரணமாக திகழ்ந்தார். தன்னு டைய சொந்த முயற்சியில் தன் வீட்டிற் கருகில் தொழிற்சாலையை நிறுவினார். சுமார் 25 யுவதிகளுக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தார். இதன் பின்பு வெளிநாட்டு இறக்குமதி இலங்கை அர சால் தடைப்படுத்தப்பட்டது. இதனால் இத் தொழிற்சாலையின் மூலப்பொருளான நூலின் இறக்குமதியும் தடைப்பட்டதனால், காலப்போக்கில் மூடப்பட்டது.

இளமைக் காலமுதல் வேலணை மேற் கூரின் பெரியபுலம் முடிப்பிள்ளையார் மீது அளவிலாப் பக்தி கொண்ட இவர், ஆலயத் தொண்டுகளைச் செய்வதில் முன்னிற்பார். வழிபாட்டிற்குரிய வழிவகைகளைக் கவனிப் பதும் கிரமமாக நித்திய பூசை நடைபெறு வதற்கு வழிகாட்டியாகவும் வருடாந்த உற் சவங்கள் நடைபெறுவதற்கு ஏற்ற ஒழுங்கை செய்வதில் வழிகாட்டியாகவும் செயற் பட்டார். இவ் ஆலய நிர்வாகம் சரிவர இயங் காத காரணத்தினால் ஆலய நிர்வா கத்தை இவர் தலைமையில் கொண்டுவரு வதற்கு இந்து இளைஞர் மன்றத்தாலும் பொது மக்களாலும் அழுத்தம் கொடுக்கப்பட்டது. இதன் விளைவாக 1977ஆம் ஆண்டு இவரை வற்புறுத்தி நிர்வாகத்தைப் பொறுப் பேற்கும்படி வேண்டுகோள் விடப்பட்டது. இதன் பிரகாரம் சட்டத்தரணிகளோடு ஆலோசனை நடத்தி அவர்களின் ஆலோச னையின் படி தலைமைப் பீடத்தைக் கைப் பற்றி, ஐயரிடம் பொறுப்புக்களை வேண்டி,

நிர்வாகத்தை நடத்தினார். நடத்திய நேரத்தில் நீதிமன்றம் சென்று நிர்வாக பொறுப்பை சட்டரீதியாக தம்மிடம் ஒப்படைக்கும்படி கோரி வழக்குத் தொடர்ந்தார். இதற்கு நீதிமன்றம் தலையிட்டும் பிரச்சினையை தீர்க்க முடியாத காரணத்தால் தேர்தல் ஒன்றை நடாத்தி அதில் யார் தெரிவு செய்யப்படுகிறார்களோ அவரிடம் பொறுப்பை ஒப்படைக்கும்படி நீதிமன்றத்தால் தீர்ப்புக் கூறப்பட்டது. நீதிமன்றத் தீர்ப்பின் பிரகாரம் 6ம், 7ம், 8ம் வட்டார பொதுமக்கள் மூலம் ஏகோபித்த ஆதரவில் தெரிவு செய்யப்பட்டு நிர்வாகம் இவர் கையில் ஒப்படைக்கப்பட்டது. தனது பொறுப்பை ஏற்ற கையுடன் இவர் ஆலயத்தை புனரமைப்புச் செய்து, வர்ணங்கள் அடித்தும் ஆலயத்தின் மணிக்கூட்டுக் கோபுரத்தைக் கட்டி 1985ஆம் ஆண்டு யூலை வரை தனது நிர்வாகத்தை நடத்தி வந்தார்.

## அராலித்துறைப் பாதை அமைத்தமை

தீவுப் பகுதியினையும் யாழ் நகரையும் தரையால் இணைக்கும் வீதிதான் பண்ணைவீதி. 1986ஆம் ஆண்டுப் பகுதியில், இவ் வீதியில் உள்ள ஓர் இடத்தில் இராணுவம் குடி கொண்டதனால் அப்பாதையினூடான பொதுமக்களின் பாவனைக்கு இராணுவம் அனுமதி வழங்காத காரணத்தால் மாற்று வழியாக அராலியால் போக்குவரத்து செய்ய தீர்மானிக்கப்பட்டது. பாதையை அமைக்கும் பொறுப்பு பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இவரிடம் அதிகாரிகளால் ஒப்படைக்கப்பட்டது. பொது மக்களிடமிருந்து நிதி வசூலித்து அவர்களின் உதவியுடன் வீதி அமைத்ததுடன் கல், ஊரி போட்டு பாதை இவர் தலைமையில் திறக்கப்பட்டு போக்குவரத்துக்கு விடப்பட்டது.

## கிராம, எல்லைப் பிணக்குகளைத் தீர்த்தல்

1983க்கு பின்னர் ஸ்ரீ லங்காவின் சிவில் கட்டமைப்பு (நிர்வாகம்) இனப்பிரச்சனையால் இல்லாமலாக்கப்பட்ட போது கிராம பிணக்குகளை, எல்லைப் பிணக்குளை தீர்ப்பதற்காக கிராமங்கள் தோறும் புத்திஜீவிகளால் இணக்கசபை ஆரம்பிக்கப்பட்டது. இதில் இவர் கிராமத்தில் பதில் தலைவராகவும், சகல வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரம் உடையவராகவும் நியமிக்கப்பட்டார். இரத்தக்காயமற்ற எல்லை பிணக்குகள், குடும்ப பிணக்குகள், சொத்து பிணக்குகள் என்பனவற்றை தீர்த்தல் இச் சபையால் மேற்கொள்ளப்பட்டது.

இவர் எமது வேலணைக் கிராமத்தில் பொது நல சேவைகளிலும் கிராமசபை சேவைகளிலும் அரசியல் சார்பான சேவைகளிலும் முன்னின்று அரசனுக்கு ஏற்ற அமைச்சர் போல் விளங்கினார். இவ்வாறான சிறந்தபண்புகளைக் கொண்ட திரு. நாகலிங்கம் வீரசிங்கம் (துரைச்சாமி) பல்லாண்டு காலம் வாழ வாழ்த்துகிறோம்.



# சமூக சேவையாளர்கள்

## தீரர் பொன்னையனார்

### (திரு. வேலாயுதர் கார்த்திகேசு பொன்னையா)

திருமதி. சரோசினி தேவி சிவனடியான் - ஆசிரியை

யாழ் குடாநாட்டின் கிழக்குக் கரையில் அமைந்துள்ள சப்ததீவுகளாகிய மண்டைதீவு, புங்குடுதீவு, நெடுந்தீவு, நயினாதீவு, அனலைதீவு, எழுவைதீவு, காரைதீவு, ஆகியவற்றிற்கு கேந்திர மையமாக விளங்குவது லைடன்தீவு. இது ஊர்காவற்றுறையிலிருந்து அல்லைப்பிட்டி வரை உள்ளடக்கிய பிரதேசமாகும். சைவமும் தமிழும் இரண்டறக் கலந்து சகல வளங்களுடன் தழைத்தோங்கி விளங்கும் வேலணைக் கிராமம் இதன் மையத்தில் அமைந்துள்ளது.

★ வேலன் என்பவர் சிறப்புற நிர்வாகம் செய்தமையாலும்

★ அழகன் முருகனின் வேல் இக்கிராமத்து எல்லைக் கடற்கரையில் அடைந்தமையாலும்

★ இப் பகுதியில் பரவலாக வேல் வடிவிலான ஒருவகை மூலிகைச் செடி (கருவேலன்) வளர்ந்திருந்தமையாலும்

இக் கிராமத்துக்கு வேலணை என்னும் பெயர் வந்தது என நம் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள்.

தீவுப் பகுதி மக்கள் 18ம், 19ம் நூற்றாண்டுகளில், வாகன வசதியற்ற காலத்தில் தரைவழிப் பாதை - வேலணை - ராஜவீதி ஊடாகவே யாழ் நகருக்குப் பயணம் செய்தார்கள். இவர்கள் தாகசாந்தி செய்து - இளைப்பாறிச் செல்ல அமைந்த இடம் வேலணையாகும். இங்கேயுள்ளவர்கள் பல துறைகளிலும் கல்விமான்களாகவும், வர்த்தகர்களாகவும், வேளாண்மை செய்பவர்களாகவும் இருக்கின்றார்கள்.

இந்த வேலணையம்பதியில் 1907ம் ஆண்டில் சைவ வேளாள குலத்தில் சிறந்த தொரு குலமகனாகவும் நடுமகனாகவும் வேலாயுதர் கார்த்திகேசுவிற்கும், பொன்னம்பலம் கதிராசிப்பிள்ளைக்கும் திருவாளர் பொன்னையா பிறந்தார். இவருக்கு அருணகிரிநாதர் திருப்புகழை உரிய ராகத்துடன் திரும்பப் பாடும் வல்லமை உடைய ஒருவர் இல்லையே என்ற கவலைக்கிடமளிக்காது, ஆராமையோடு கற்று மனனஞ் செய்து ஓதிய வன்மையாளனான ஆறுமுகம் என்னும் அண்ணரும், கிருபானந்த வாரியாரின் நூல்களைக் கற்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டவராகி, அவரின் அடியவராக வாழ்ந்து விண்ணுலகம் எய்திய முருக பக்தன் செல்லத்துரை என்னும் தம்பியும் இருந்தனர். இவர்கள் மூவரும் இயற்கையாகவே கணக்கில் பாண்டித்தியம் உள்ளவர்கள். இத்தகையவர்களை உடன் பிறப்பாகக் கொண்ட திருவாளர் பொன்னையனார் அவர்கள் நாட்டுப் பற்றாளராகவும் மக்களுக்கு நடுவராகவும் விளங்கினார்.

அழகிய பொன்னிற மேனி, சிவந்த முகம், கம்பீரமான தோற்றம், வெண்ணிற ஆடை, நெற்றியில் விபூதியுடன் சந்தனப் பொட்டு பார்ப்பவர் மனதைக் கொள்ளை கொள்ளும் புறத்தோற்றம், முகவசீகரம், அதே போன்று கள்ளம் கபடமற்ற வெள்ளை உள்ளம் படைத்தவர். யாருக்கும் விசேடமாக வறியவருக்கு உதவி செய்யும் மனப்பான்மையுடையவர்.

இவர் இரண்டு உலக மகாயுத்தங்களையும் கண்டவர். அக் காலத்தில் மக்கள் மாக்களாக (மிருகங்களாக) வாழக் கூடாது, அறிவு படைத்தவர்களாக வாழ வேண்டும். அடிமைகளாக வாழக் கூடாது, சுய தொழில் செய்து முன்னேற வேண்டும் என விரும்பியவர். இவரின் முயற்சியால், வேலணை கிழக்குப் பகுதியில் இருக்கும் ஆறு ஏக்கர் தென்னம் தோட்டம், "கார்த்திகேயர் தென்னம் தோட்டம்" என்ற பெயருடன் விளங்குகின்றது. இந்தத் தென்னந்தோட்டத்தின் மரங்களின் நாற்றுக்களிலிருந்து வந்தவையே அயல் கிராமங்களில் வளர்ந்திருக்கும் தென்னைகள்.

1929ம் ஆண்டில் கிளிநொச்சி 3ம் வாய்க்காலில் கிடைத்த பல ஏக்கர் நிலத்தை விளை நிலமாக்கும் முயற்சியில் ஈடுபட்டு மலேரியாவினால் துரதிஷ்டவசமாக கைவிட நேர்ந்தது. 1941ல் தனது சொந்த முயற்சியினால் அரசாங்கத்தில் காணி பெற்று தென்னம் தோட்டம் கல்வீட்டுடன் உருவாக்கினார். இந்த முன்னேற்றத்தைப் பார்த்து, அரசாங்கம் 1950ம் ஆண்டில் மற்றவர்களுக்குக் காணி கொடுத்து வீடு கட்ட உதவி செய்தது.

இவர் வேலணை ஐக்கிய பண்டகசாலை முகாமையாளராகவும், பலநோக்குச் சங்க முகாமையாளராகவும் கடமைபுரிந்தார். இவர் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தில் இருந்த காலத்தில், இவரின் மேற்பார்வையின் கீழ் சரஸ்வதி வித்தியாசாலை புதுப் பொலிவுடன் புதுப்பிக்கப்பட்டு மேலதிகக் கட்டிடங்களும் கட்டப்பட்டன. வேலணை கிழக்கு பெருங்குளத்தின் துருசுகள் இவரின் மேற்பார்வையின் கீழ் திருத்தி அமைக்கப்பட்டன. 1935க்கு மேற்பட்ட காலத்தில் இவர் தமிழ்நாடு பாலசகாய நிதிய சங்கத்தில் நிரந்தர உறுப்பினராகவும், தீவுப்பகுதி ஐக்கிய நாணய சங்கத்தின் பிரதிநிதியாகவும், கிராம முன்னேற்றச் சங்க பிரதிநிதியாகவும் இருந்து மக்களுக்கு வேண்டிய

சகல உதவிகளையும் செய்துள்ளார். அந்தக் காலத்தில் தீவுப்பகுதியில் குடிசன மதிப்பீடு செய்வதற்காகத் தெரிவாகி, சேவை திறம் படச் செய்து சான்றிதழையும் பெற்றுக் கொண்டார்.

தமிழர் தமிழ் நாட்டிலே (இலங்கையிலே) தலைநிமிர்ந்து வாழ வேண்டும். தமிழைத் தழைத்திடச் செய்ய வேண்டும். தன்னு டைய வாழ்க்கை முடிவதற்குள் தமிழருக்கு ஒரு விடிவுகாலம் கிட்ட வேண்டும் என்று ஏங்கித் தவித்தார். அதற்காக பாடுபட்டார். முக்கியமாக அரசியல் கூட்டங்கள் எல்லா வற்றிலும் பங்குபற்றினார். உதவி செய்தார். சத்தியாக்கிரகம் நடக்கும் இடங்களுக்கு தனது தென்னந் தோட்டத்து இளநீரைக் குலைகுலையாகக் கொண்டு போய்க் கொடுத்து தாகசாந்தி செய்வார். 1961 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணக் கச்சேரிக்கு முன் னால் நடந்த சத்தியாக்கிரகத்துக்கும் பெரிய உழவு யந்திரப் பெட்டியில் இளநீர் கொண்டு போய்க் கொடுத்தார். கொண்டு போகும் பொழுது விபத்தில் சிக்கி சிகிச்சை பெற்று பின்பு குணமடைந்தார்.

வேலணையம்பதியில் நடக்கும் சகல, சமய, சமூக அரசியல் விடயங்களில் மிகுந்த ஈடு பாடு காட்டி முன்னின்று உழைத்தவர். இதற்கு வேலணை கிழக்கு மகாவித்தியா லயம் (முன்னைய அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலை) ஓர் எடுத்துக் காட்டா கும். இவரது அன்னையின் மூத்த சகோதரி கள் இருவரினதும் ஆண்பிள்ளைகள் திரு வாளர் சதாசிவம் என்ற கிராமச் சங்க உபதலைவர், திருவாளர் காங்கேசு அதிபர் ஆகிய தம்பிகளின் உதவியுடன் வேண்டிய கருமங்களை நிறைவேற்றினார்.

வேலணை கிழக்கில் அரசினர் பாடசாலை உருவாக வேண்டும் எமது பிள்ளைகள் எமது பகுதியிலேயே கல்வி கற்க வேண்டும் என வேணவாக் கொண்டிருந்தார். அப் பொழுது தம்பியார் திருவாளர் காங்கேசு ஆசிரியராக வேறிடங்களில் பணிபுரிந்தார். அவரையும் அதிபராக்க முயற்சித்தார். அதற்கு அவருடைய பெறுமதிமிக்க காணியை பாடசாலை அமைப்பதற்கு நன்கொடை யாகக் கொடுக்க வைத்தார். அரசாங்கத் தின் அங்கீகாரம் பெற்று பாடசாலையைக் கட்டியெழுப்ப, அக்காலத்தில் இருந்த பாராளுமன்ற உறுப்பினர்தனது குருவா கிய ஆசிரியமணி மருதையனார் உபாத் தியாயர், சபாநாயகர் சேர் வைத்திலிங்கம் துரைச்சாமி ஆகியோரின் உதவி மூலம் வெற்றிகரமாக நிறைவேற்றினார். இதன் படியே பெருங்குளம் முத்துமாரியம்மன் கோவிலின் தென்புலத்தில் உள்ள இந்தக் காணியில் இரு பெரிய, நீண்ட கொட்டகை கள் அமைத்து "அரசினர் தமிழ்க்கலவன் பாடசாலை" என்ற பெயரில் இயங்க வைத் தார். அத்துடன் நின்றுவிடாமல், திருவாளர் வீ. பீ. கந்தையாவுடன் சேர்ந்து வீடு வீடாகச் சென்று பாட சாலைக்குப் பிள்ளை களைத் திரட்டிச் சேர்த்தார். அன்று தொடக்கம் இப் பாடசாலையைச் சூழ்ந் துள்ள மக்களின் கல்வி உயர்ச்சி பெற்றுக் கொண்டு வருவது குறிப்பிடத்தக்கது இப்பொழுது புதிய கட்டிடங்களுடன் வேலணை கிழக்கு மகாவித்தியாலயமாக உயர்ந்துள்ளது.

வேலணை கிழக்கு பெருங்குளம் முத்து மாரியம்மன் கோவில் திருப்பணிகள் சிறப் பாக அமைய வேண்டும் என்று அரும் பாடுபட்டவர்களில் இவரும் ஒருவராவார். படித்தவர்கள் முன்னிலையில் பெருமக னாக மதிக்கப்பட்டார். அன்று அம்பாளின்

மூலஸ்த்தானக் கோபுரத் திருப்பணிக்கு இந்தியாவில் (தஞ்சாவூரில்) இருந்து சிற்ப வல்லுனர்களைக் கொண்டு வந்தார்கள். அவ்வேளையில் தனது வீட்டின் வளவின் வடமேற்குக் கரையில் கொட்டகை அமைத்து அவர்களை வசதியாகத் தங்க வைத்து, கோயில் வேலை செய்து முடிக்க உதவியாக இருந்தார். அவரின் வீட்டின் முற்றத்தில் அமைந்திருந்த தலைவாசல் கட்டிடம் ஆறுதல் எடுப்பதற்கும் வருபவர் களைச் சந்தித்து ஆலோசனை நடத்துவதற் குமே ஏற்ற இடமாகும். தங்கியிருந்த தஞ்சா வூர் சிற்பிகள் தங்களின் நினைவாக தலை வாசலின் இரண்டு சுவர்களின் உட்புறங் களிலும், சிதம்பரம், தஞ்சாவூர் கோயில்கள், யானைப் பாகன் அமர்ந்து சவாரி செய்து கொண்டிருக்கும் யானையும், குதிரை யோட்டி அமர்ந்து சவாரி செய்து கொண் டிருக்கும் குதிரையும் சிவப்பு, நீல வர்ண நிறங்களில் வரைந்து இருந்தார்கள். அவர் களின் பெயர்கள் "திருவாளர்கள் முரு கேசம்பிள்ளை, சந்திரசேகரம், கணேச மூர்த்தி

"தஞ்சாவூர் ஜில்லா" என்று அழியாத மையினால் பொறித்திருந்தார்கள். இவற் றைப் பின்னவர்கள், பிள்ளைகள் ஆச்சிரியப் பட்டதுண்டு.

இதைவிட பல தொண்டுகள் செய்துள்ளார். மின்சார வசதியில்லாதகாலத்தில் முத்து மாரியம்மன் ஆலயத்தினுள் இருக்கும் முரு கன் கோயில் இருளில் மூழ்கிக் கிடந்தது. நாள்தோறும் தேங்காய் எண்ணெய் விளக்கு ஏற்றி வைத்து இருளை அகற்றினார். அவர் இறைவனடியெய்திய பின்பும் அவரின் பிள்ளைகள் கோயில் தொண்டுகளைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கி றார்கள்.

1941 ஆம் அண்டு இவருக்கும் சோமசுந்தர ம்- செல்லமுத்து தம்பதிகளின் மகள் நாகரெத்தினத்திற்கும் திருமணம் நிறை வேறியது. இவர்களுக்கு ஐந்து பெண் பிள்ளைகளும் மூன்று ஆண்பிள்ளைகளும் பிறந்தார்கள். கடைசி இரண்டு ஆண்பிள்ளை களும் சொற்ப காலத்திலேயே இறைவனடி யெய்தினார்கள். பிள்ளைகள் யாவரும் ஆரம்பக் கல்வியை அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலையிலும் வேலணை மத்திய கல்லூரியிலும் உயர் கல்வியை அவர்களுக்கேற்ற பிரபல கல்லூரிகளிலும் படித்தனர்.

பிள்ளைகள் ஆசிரியையாக, மருந்தாளராக, பிரதம ஆயுர்வேதவைத்திய அதிகாரியாக, பட்டய நில அளவையாளராக, ஆங்கில சுருக்கெழுத்தாளராக, வரவேற்பாளராக வேலை செய்தார்கள்/செய்கிறார்கள். இவர் தன் பிள்ளைகள் போல் இவரின் பெறாமக் களிடமும் அன்பு செலுத்தி வந்தார். இவருக்குக் கிடைத்த மனைவி அன்பான, கள்ளம் கபடமற்ற வெள்ளை உள்ளம் படைத்த தரும பத்தினி. இவரின் பரோப காரத் தன்மைக்கு உதவியாக அமைந்தும் பணிந்து நடந்தும் சமூக சேவைக்கும் தன்னலமற்ற போக்குக்கும் அரும்பெரும் துணையாக இருந்தார். தனக்கில்லாவிடி னும் மற்றவர்களை உபசரிக்க வேண்டும் என்ற பெருநோக்குடையவர்.

இவரின் மகள் வைத்திய சேவைக்கே தன்னை அர்ப்பணித்தவர். கஷ்டப்பட்ட பிர தேசங்களில் தான் தனது சேவையை திறம் படச் செய்துள்ளார். இவர் வேலணையில்

*1986 – 2000ம் ஆண்டுகளில் வேலைசெய்யும் பொழுது வைத்திய சேவையுடன் சமூக சேவையும் செய்ய வேண்டியிருந்தது. 1992ம் ஆண்டு தீவுப் பகுதி தொடர்புகள் யாழ்ப் பாணத்துடன் துண்டிக்கப்பட்டிருந்தன. அக் காலத்தில் வைத்திய சேவை செய் வதற்கு வைத்தியர்களும் இல்லை. மருந்து களும் இல்லை. இவர் தானே உள்ளூரில் கிடைத்த மூலிகைகளில் இருந்து மருந்துகள் தயாரித்து வைத்திய சிகிச்சையளித்தார். வேலணையைத் தவிர்ந்த மற்றைய தீவுக ளில் வைத்தியர் இல்லாத குறையைத் தானே பிரயாண கஷ்டங்களுக்கு மத்தியில் வாரத்துக்கொரு தடவை விஜயம் செய்து சிகிச்சை செய்து தீர்த்து வைத்தார். இவர் செய்த அரிய சேவைக்கு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தால் சான்றிதழும் வழங் கப்பட்டுள்ளது.*

*திருவாளர் கா. பொன்னையா சிறப்புடன் வாழ்ந்ததற்கு அவரது மிகுந்த புத்திக் கூர் மையும் மக்களுடன் உயர்வு தாழ்வின்றி அன்பாகவும் பண்பாகவும் பழகும் தன்மை யும் புத்திசாதுரியமான பேச்சுவன்மையும் அஞ்சா நெஞ்சமும் எடுத்த காரியத்தை நிறைவேற்றும் தன்மையும் கொண்டவர். இவரது உதவியை நாடாதவர் இல்லை யென்றே கூறலாம்.*

*ஒரு கருமத்தைச் செய்வதென்றால் பொன்னையாண்ணரைச் சந்தித்த பின் னரே முடிவெடுக்க வேண்டும் என்பர். இதனை*

*"புறத்தே புலி படுத்திருக்க பயமின்றி தூங்குமே புலிக் குட்டிகள்"*

*போல் அயலில் உள்ளவர்கள, அவரைக் சேர்ந்தவர்கள் அச்சமின்றி வாழ்ந்து வந்த னர். எதிர்ப்போரை எதிர்த்து நின்று நீதிக் காக வாதாடுவார் என அவரது பெரு மையை அவரது உறவினர் எழுத்தில் வடித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.*

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்.

*1981. 01. 08 இல் அமாவாசையில் தந்தை யார் நினைவுடன் இயற்கை எய்தினார்.*





# நாடுவிட்டு நாடு கடந்தாலும் தாய் மண்ணுக்கு மகிடமிடும் ஒரு இலக்கியவாதி

கவிதாவாரிதி...... வேலணையூர் பொன்னண்ணா என்ற

# பொன்-தியாகராஜா

-தொகுப்பு: ப.சிவ்ராசா-

கால் நூற்றாண்டு காலமாக தான் பிறந்த மண்ணாம் வேலணையை விட்டு நீண்ட பல ஆயிரம் மைல்களைக் கடந்து, கண்டம் விட்டு, கண்டம் மாறி. தன் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்தாலும். தன் நெஞ்சத்தில் தன் தாய்மண்ணை, மக்களை படித்த பள்ளியை, கும்பிட்ட கோவிலை மறந்து விடாமல் தன்பெயரோடு தாய்மண்ணின் பெயரையும் சுமந்தபடி ஐரோப்பா கண்டம், அமெரிக்கா கண்டம். பூராக பறந்து தன் எழுத்துத்திறனால் தாய்மண்ணுக்கு மகுடமிடும் ஒரு இலக்கியவாதி யாவார்.

1939 ஆம் ஆண்டு வைகாசி மாதம் இருபத்து ஆறாம் நாள் வேலணை கிழக்கு மூன்றாம் வட்டாரத்தில் தவிடுதின்னி பகுதியில் சிலுகன் என்றகாணியில்ஆறுமுகம் பொன்னையாவுக்கும் பொன்னம்மாவுக்கும் கனிஷ்ட புத்திரனாக அவதரித்த இவர், அவரின் நெருங்கிய உறவுமுறை மாமனாரான பண்டிதர் மாரிமுத்து மாணிக்கம் அவர்களால் அவரின் ஐந்தாம் வயதில் தவிடுதின்னி பிள்ளையார் ஆலயத்தில் ஏடுதொடக்கப்பட்டவர்.

1944ஆம் ஆண்டில் ஐந்து வயதில் ஏடுதொடக்கிய இவரை பெற்றவர்கள் பிள்ளையின்எதிர்காலநலனைக் கருத்திலெடுத்து அங்கிருந்து ஒரு மைல் தூரத்தில் உள்ள சரஸ்வதி பாடசாலையில். ஆரம்பக் கல்விக்காக சேர்கின்றார்கள். தங்களைப்போல் பிள்ளை கல்வியில் தவறிவிடக் கூடாது என்ற பெற்றவரின் கடமை உணர்வோடு சேர்க் கப்பட்ட பிள்ளையை மாமன் மாரும் தந்தையும் தோளில் சுமந்தே பாடசாலை சேர்த்தார்கள். அன்றைய உறவுகளின் கூட்டுறவு வாழ்க்கை பக்கபலமாக இருந்தது.

வங்களாவடி சரஸ்வதி பாடசாலையில் இரண்டு ஆண்டுகள் படித்த இவரை அந்தக்காலகட்டத்தில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் பாராளுமன்றத்தில் சபாநாயகராக இருந்தவரும் வேலணைமண்ணின் சொந்தக்காரனுமான மதிப்புக்குரிய திருவாளர் ஸ்பீக்கர் துரைச்சாமி அவர்களின் பெரும் கருணையாலும். அந்த ஊர்காரர் ஆசிரியர் கந்தர் காங்கேசு என்ற கொடைவள்ளலின் காணி நன்கொடையாலும். அம்மன் கோவிலின் தெற்கு வீதியில் இராஜவீதியின் தென்கரையில் 1947ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட வேலணை கிழக்கு கலவன் பாடசாலைக்கு ( தற்போது வேலணை கிழக்கு மகாவித்தியாலையம்) மாற்றப்பட்டார். மேற்படி பாடசாலையில் ஐந்தாம் வகுப்புவரை படித்து 1951ஆம் ஆண்டு அன்றைய இலவசக்கல்வியின் தந்தை சி.டபிள்யூ. டபிள்யூ.கன்னங்கரா அவர்களால் தொகுதிக் கொரு மத்திய மகா வித்தியாலயம் என்ற அரசின் திட்டப்படி வேலணை மேற்கில் உருவான மத்திய கல்லூரிக்கு படிக்கச்சென்றார்.

ஆனால் அவரின் விடாமுயற்சி இலட்சிய வெறி வாழ்க்கையில் வாழ்ந்து காட்டணும் என்ற மனோதிடம் அவரைப்பின்னால் கிராமத்தின் சமூகசேவகனாக, அரசியல்வாதியாக, மேடைப்பேச்சாளனாக, நாடக நடிகனாக, பத்திரிகை எழுத்தாளனாக,சமூகம் இவரை பலகோணங்களில் இனம்கண்டு வரவேற்று நின்றது. அவரும் தனது மண்ணை விட்டு பிரியும்வரை தன்பணிகளில் மக்களுக்காக மக்களின் பலத்தோடு பெரும்பணி யாற்றினார் என்றால் மிகையாகாது.:அவரின் சமுதாயப்பணிக்கு வேலணை வாலிபர் முன்னேற்றச்சங்கம் கொழும்பு யாழ்கலையரங்கம்,வேலணை கமத்தொழில்சேவை

நிலையம். வேலணை பயிர்ச்செய்கைக்குழு போன்ற சமூகஅமைப்புக்கள் பக்க பலமாக படிக்கட்டாக துணைநின்றன எனலாம்.

இவர்1963ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் ஐந்தாம் திகதி இவரின் மாமிமகளான திருத்தொண்டர் தில்லையம்பலம் செல்லமுத்து தம்பதியரின் மகளாரான தவமணிதேவியை திருமணம் செய்தார்.அவர்களின் அன்பின் இணைந்த இல்லறவாழ்க்கையின் பெறுபேறாக மூன்று பெண்குழந்தைகளும், இரண்டு ஆண் குழந்தைகளையும் வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்பாள் அன்பளிப்பாகவே கொடுத்தாள். எனலாம். இவர் அடிக்கடி மக்கள் முன் சொல்லும்போது என்னிடம் எதுவுமே இல்லை எந்த சக்தியும் இல்லை. எல்லாமே அந்த பெருங்குளத்து மாரியின் ஆணையை நான் செய்கின்றேன் என்றும், இதுவும் அவளின் சக்திதான் என்றும் அடிக்கடி சொல்லும் இவரின் வார்த்தையை சீர்தூக்கி பார்த்தால் அதுவும் உண்மையாகவே தெரியும்

1981ஆம் ஆண்டு ஆடி மாதம் ஒன்பதாம்திகதி ஐந்து குழந்தைகளையும், மனைவியையும் தாய்மண்ணில் விட்டுவிட்டு, அகவை நாற்பத்தி ஒன்றில் கலங்கிய இதயத்துடன் வெளிநாடு புறப்பட்ட இவர் தனது புலம்பெயர் வாழ்கையிலும் பெரும் மக்கள்பணி செய்துள்ளார். அதே நேரம் தாய் மண்ணையம் மக்களையும் மறக்காது நேசித்துக் கொண்டே இன்றும் வாழ்கின்றார். இவரின் அனைத்துக் குடும்பமும் வெளியில் வாழ்ந்தாலும் இவர் தன்தாய் மண்ணை தினமும் நேசிக்கின்றார். உதாரணமாக;

அவரின் கவிதைத்தொகுப்பில் இருந்து ஒரு கவிதை

**ஆயிரம் பழங்களை பிழிந்து ,சாறாக்கி குடித்து விட்டேன்-**

**ஆனாலும்என்தாய்மண் ,சாட்டித்தண்ணிபோல் தாகமதைத் தீர்க்கவில்லையே..!**

என்ற தாய்மண் நினைப்பை கவிதையாக்கி உள்ளார். இப்படி பல கவிதைகளை அவரின் கவிதைத்தொகுப்புக்களில் காணலாம். இவர் தனது புலம்பெயர்வாழ்க்கையில் தன்சக்திக்கேற்ப பல தமிழ் பணி. தமிழர்பணி. இலக்கியப்பணி என் செயல்வடிவம் கொடுத்து உலகத்தமிழர் அறிந்த தெரிந்த மனிதராகவும், ஐரோப்பாவில் இயங்கும் அனைத்து தமிழ் ஊடகங்களும் அறிந்த இலக்கியவாதியாக வாழ்வதோடு வேலணை கிராமத்தின் புகழுக்கும் பெரும்பங்காற்றி வருகின்றார் எனலாம். இவர் புலம்பெயர் வாழ்க்கையிலும்

**டெனீஸ் தமிழ் தோழமை ஒன்றியம் டென்மார்க், பராஞ் தமிழர் அமைப்பு பாரிஸ்**

**உலகத் தமிழர் பேரமைப்பு தமிழகம்,உலகத் தமிழ் எழுத்தாளர் மன்றம் தமிழகம்**

**டென்மார்க் தமிழ் எழுத்தாளர் பேரவை,சர்வதேச புலம்பெயர் தமிழ் எழுத்தாளர் ஒன்றியம் ஜெர்மனி**

**உலகத்தமிழர் பண்பாட்டுக்கழகம் மலேசியா,**

போன்ற அமைப்புக்களின் உறுப்பினராகவும் நிர்வாகியாகவும் இருந்து தமிழ்ப்பணியை செய்து வருகின்றார். இவர் தனது சொந்த வெளியீடாக பல கவிதை நூல்களையும் பக்தி நூல்களையும் ஒரு தாய்மண் ஆவணத்திரட்டாக அருளமுதம் நூலையும் வெளியீடு செய்துள்ளார்நூலோடு கலாச்சார

அரசியல் கட்டுரைகள் பலவும் எழுதி உள்ளார். பட்டிமன்றம் கவியரங்கம் தலைமையேற்று நடத்தி உள்ளார்.

நூல்களின் விபரம்

**1993 இல் நிலமாகி கவிதை,1995ல்** வெந்தவனம் **கவிதை**

**1997இல் அபிராமி அம்மன் பஜனைப்பாடல், 1999இல்பிள்ளையார் பக்திப்பஜனைப்பாமாலை.**

**2000 இல்பச்சை இறகு கவிதை தொகுதி,2003 இல் உளிகள் கவிதை தொகுதி**

**2005 இல் ஆவணத்தொகுப்பு அருளமுதம்,2006 இல் நெஞ்சத்து நெருப்பு கவிதை**

இப்படி எட்டு நூல்களை எழுதி விழா நடத்தி வெளியிட்டு உள்ளார். இவரின் இந்த செயல்பாடுகளுக்கெல்லாம் சக்தி வழங்கியவர் அந்தமுத்துமாரி அம்பாளும் அவரின் மனைவியுமே காரணம் என்று பலமுறை கூறியுள்ளார். இவர் இன்னமும் ஒரு நூலை வெளியிடும் வேலையை தொடங்கி உள்ளார்.

## வேலணை - வங்களாவடி நகரம், 2006இல்







# தீவுகள் தெற்குப் பிரிவின் அபிவிருத்தியும் பிரச்சினைகளும்

பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை
(முன்னாள் துணைவேந்தர். யாழ் - பல்கலைக்கழகம்)

1991 ஆம் ஆண்டு தீவுப்பகுதிக்கு மிகவும் துக்ககரமான ஆண்டாக அமைந்தது. அவ்வாண்டில் நடந்த யுத்தத்தினால் இப்பிரதேச மக்கள் கட்டாய பாரிய இடப்பெயர்வுக்குட்பட்டனர். வேலணைத்தீவு, காரைநகர், புங்குடுதீவு, மண்டைதீவு மக்களற்ற பிரதேசங்களாக மாறின. தீவுகள் தெற்குப் பிரதேசசபைப் பகுதியில் நயினாதீவு தவிர்ந்த ஏனைய பகுதிகள் எல்லாவற்றிலும் ஆயிரத்துக்குக் குறைவான மக்களே இடப் பெயர்வுக்குட்படாமல் 1996 வரை இங்கு இருந்தனர். இப்பகுதியில் இடப்பெயர்வுக்குட்படாதவர்கள் கூட தத்தம் வீடுகளில் இராமல், ஒரு சில இடங்களில் கூட்டாக வாழவிடப் பட்டனர். (வேலணை அம்மன் கோவிலடி, துறையூர், பெருங்காடு) நயினாதீவு மக்கள் பாரிய இடப்பெயர்வுக்குட்படாத பொழுதும் சிறுதொகையினர் இடம்பெயர்ந்திருந்தனர். தீவுகள் தெற்குப்பிரிவு மக்கள் போக்குவரத்திலும் நாளாந்த வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களையும் சேவைகளையும் பெறுவதிலும் மிகக் கடினமான பிரச்சனைகளை எதிர்நோக்கினர். உயர்மட்ட மருத்துவ சேவைகளைப் பெறுவதற்கும் மற்றும் கொழும்பு செல்வதற்கும் திருகோணமலை செல்லவேண்டியிருந்தது. வேலணை, புங்குடுதீவு மக்கள் பொருட்களையும் சேவைகளையும் பெறுவதற்கு நயினாதீவு சென்றுவர வேண்டியிருந்தனர்.

1991 ஆம் ஆண்டு பாரிய இடப்பெயர்வினால் இப்பிரிவைச் சேர்ந்த கிராமங்கள் பாரிய சமூக, பொருளாதாரப் பின்னடைவுகளை அடைந்தன. 1991 இல் இப்பகுதியிலிருந்து ஒட்டுமொத்தமாக வெளியேறிய மக்கள் யாழ்ப்பாண நகரிலும் அதன் அயல் கிராமங்களிலும் பல்வேறு இன்னல்

கள் மத்தியில் குடியேறி வாழ்ந்தனர். இவ்விடப் பெயர்வினால் அவர்களிடமிருந்த சமூக இணைப்புகள் அறுந்து இடம் பெயர்ந்து அகதி வாழ்வுக்கு முகம் கொடுக்க வேண்டிய வர்களானார்கள். இடப்பெயர்வு சடுதி யாகவும் ஒழுங்கற்றதாகவும் இடம்பெற்ற தால் அவர்கள் தங்களுடைய பொருட்க ளைக் கொண்டுவர முடியவில்லை. இடம் பெயர்ந்த மக்களில் மிகப் பெரும்பான்மை யானவர்கள் வீட்டுப்பிரச்சினை தொழில் பிரச்சினைக்கு முகம் கொடுக்க முடியாத பல கஷ்டங்கள் மத்தியில் அரசாங்க நிவார ணத்தில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ வேண்டியதாயிற்று. ஏலவே யாழ்ப்பாண நகரிலும் அதன் அயற் கிராமங்களிலும் மிகவும் கஷ்டத்தின் மத்தியில் வாழ்ந்த மக்கள் 1995 ஆம் ஆண்டில் மீண்டும் பாரிய இடப்பெயர்வுக்குட்பட வேண்டிய துர்ப்பாக்கிய நிலைக்குட்பட்டனர். இவ்விடப் பெயர்வினால் குடும்பங்கள் மேலும் சிதறுண்டன. வாழ்க்கையில் நம்பிக்கை இழந்து பல திக்குகளுக்குச் செல்லத் தொடங்கினர். தென்மராட்சி, கிளிநொச்சி, வன்னி, வவுனியா மற்றும் பிற மாவட்டங் களுக்கும் சென்றனர். கிளிநொச்சி, வன்னிப் பகுதி குடியேற்றத்திட்டங்களில் தீவுப் பகுதி மக்கள் முன்னரே குடியேறியிருந்ததால் அவர்களின் தொடர்பு காரணமாக குறிப் பிடத்தக்க எண்ணிக்கையினர் கிளிநொச் சிக்குச் சென்றனர்.

இப்பிரதேச மக்கள் 1980 களிலிருந்து தென்னிலங்கை இனக்கலவரங்களால் பெரி தும் பாதிக்கப்பட்டு வந்ததால் வெளிநாடுக ளுக்கு இடம்பெயரும் போக்கு மக்களி டையே அதிகரிக்கத் தொடங்கின. 1980 களில் ஏற்பட்ட இனக்கலவரங்களும் வடக்குப் பகுதியில் ஏற்பட்ட உள்நாட்டு யுத்தமும் அரசின் திறந்த பொருளாதாரக் கொள்கை யும் வெளிநாடுகளுக்கு ஆட்களை அனுப் பும் முகவர்களின் வளர்ச்சியும் இப்பிரதேச மக்கள் வெளிநாட்டு இடப்பெயர்வை ஊக்கு வித்தன. 1980 களிலிருந்து குறிப்பிடத்தக்க தொகையினர் சர்வதேச இடப்பெயர்வுக்கு உட்பட்டனர். இப்போக்கு 1991க்குப் பின்னர் வேகமாக அதிகரித்தது. இன்று தீவுகள் தெற்கைச் சேர்ந்த மக்கள், அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பிடத்தக்க எண் ணிக்கையில் சுவிஸ், கனடா, பிரான்ஸ், இங்கிலாந்து மற்றும் பல ஐரோப்பிய நாடுக ளில் வாழ்கின்றனர். துன்பமான இடப்பெயர் வுக்குட்பட்டபோதும் புதிய வாழ்வைத்தேடி கடின முயற்சிகள் மேற்கொண்டதினால் முன்னைய சமூக – பொருளாதார நிலையி லும் பார்க்க இடப்பெயர்வுக்குட்பட்ட பிரிவு மக்களில் ஒரு பகுதியினர் நல்வாழ்வைத் தேடியிருக்கின்றார்கள் என்றும் சொல்ல லாம். இன்னுமொரு பகுதியினர் துன்ப மான இடப்பெயர்வுக்கு உட்பட்டு உயிர் இழப்பு, பொருள் இழப்புடன் மீள முடி யாத பிரச்சினைகளுடன் வாழ்கின்றார்கள்.

1991–1995 க்கு இடைப்பட்ட காலத் திலும் அதற்குப் பின்னரும் வேலணை, சரவணை, அல்லைப்பிட்டி, மண்கும்பான், மண்டைதீவு, புங்குடுதீவு ஆகிய கிராமங் களின் பொருளாதார வளம் பெரும் சேதத் துக்குட்பட்டது. யுத்தத்தினால் பெருமளவு வீடுகள், அசையும் சொத்துக்கள், பனை, தென்னை ஆகியன அழிவுக்குள்ளாகின. மக்கள் இடப்பெயர்வினாலும் நீண்ட கால மாக மக்கள்வீடுகளில் வாழாத காரணத் தினாலும் பராமரிக்கப்படாததாலும் இயற் கையினால் பெரும் அழிவுக்குட்பட்டன. குடியிருப்புப் பகுதிகளில் வீடுகள் மாத்திர மல்ல விவசாயத்துடன் தொடர்புடைய

டுகையிலைப் போறணைகள், மால்கள் மற்றும் பல தற்காலிக கொட்டில்கள் யாவும் அழிந்துபோயின. குடியிருப்புப் பகுதிகள் பற்றைக் காடுகளாக மாறின.

யாழ்ப்பாணத் தீவுகளின் பொருளாதாரத்தில் நீண்டகாலமாக விவசாயம், மீன்பிடி, சிறுகைத்தொழில்கள் முக்கிய இடம் பெற்றிருந்தன. பின்னர் படிப்படியாக இப்பிரதேசத்தின் பொருளாதாரத்தில் வெளியிடங்களிலிருந்து கிடைக்கும் உழைப்பு முக்கியம் பெறத் தொடங்கியது. புங்குடுதீவு, நயினாதீவு, ஆகியவற்றின் பொருளாதாரச் செயற்பாட்டில் வெளியிலிருந்து கிடைத்த வருமானம் மிக முக்கிய விடத்தைப் பெற்றிருந்தது. வேலணை, சரவணை, மண்டைதீவு, அல்லைப்பிட்டி, மண்கும்பான் ஆகிய கிராமங்களில் பொருளாதாரத்தில் விவசாயம், மீன்பிடி, சிறுகைத்தொழில்களே தொடர்ந்தும் குறிப்பிடத்தக்க பங்கை வகித்து வந்தன.

1954இல் புங்குடுதீவுக்கும் வேலணைக்கும் இடையே பாதை அமைக்கப்பட்டது. 1961இல் அமைக்கப்பட்ட பண்ணைப் பாதையால் யாழ்ப்பாண நகருக்கும் வேலணைத் தீவுக்கும் தரைவழிப் போக்குவரத்து கிட்டியது. இதனைத் தொடர்ந்து 1960 களின் முற்பகுதியில் குறிகாட்டுவான் இறங்குதுறை அமைக்கப்பட்டது. நெடுந்தீவு, நயினாதீவு மக்கள் ஊர்காவற்றுறை வழியாக யாழ்ப்பாணம் செல்லாமல் குறிகாட்டுவானிலிருந்து நேரடியாக யாழ்ப்பாண நகருக்கு மிகக் குறுகிய நேரத்தில் செல்லக் கூடிய வாய்ப்பேற்பட்டது. இப்போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட இப்பாரிய முன்னேற்றத்தால் தீவுப் பகுதியில், குறிப்பாக வேலணையிலும். புங்குடுதீவிலும் பாரிய சமூக/பொருளாதார மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. இவ்விருதீவுகளும் யாழ்ப்பாண நகருடன் நெருக்கமாகப் பிணைக்கப்பட்டன. இப்பகுதியில் வாழும் மக்கள் தொழிலுக்காகவும், பொருட்கள் சேவைகள் பெறுவதற்காகவும் யாழ்ப்பாண நகரத்துக்குச் செல்லும் வழக்கம் அதிகரிக்கத் தொடங்கியது. வெளிப் பொருளாதாரச் செல்வாக்கால் தீவுகளின் சமூக-பொருளாதாரம் 1960களில் துரிதமாக அபிவிருத்தி காணத் தொடங்கியது. மேலும் 1970களில் இப்பிரதேசத்தில் மேற்கொள்ளப்பட்ட மிளகாய்ச் செய்கை மூலம் விவசாயிகள் குறுகிய காலத்தில் குறிப்பிடத்தக்க செல்வத்தை ஈட்டினார்கள். மிளகாய்ச் செய்கையால் கிடைத்த வருமானத்தால் விவசாயிகள் கல்வீடுகள் கட்டினார்கள். 1970களில் இருப்பிட வசதிகளை மேம்படுத்துவதில் இப்பகுதிகள் குறிப் பிடத்தக்க முன்னேற்றம் கண்டன. 1970 களில் தீவுகள் உதவி அரசாங்க அதிபர் பிரிவு வேலணையில் அமைக்கப்பட்டதும் அதனைத் தொடர்ந்து கமநல நிலையம், கல்விக் கந்தோர், மின்சாரசபை உபகாரியாலயம், நீர்வழங்கல் காரியாலயம், வங்கி ஆகிய பல நிறுவனங்கள் வங்களாவடியில் நிறுவப்பட்டன. இதன் காரணமாக வேலணை வங்களாவடி ஒரு முக்கிய சேவை நிலையமாக வளர்ச்சிபெற்றது. தீவுகள் தெற்குப் பிரிவில் ஒட்டுமொத்தமாக சேவை வசதிகள் வளர்ச்சிபெற்றதால் மக்கள் நேரடியாகவும் மறைமுகமாகவும் பல நன்மைகளைப் பெற்றனர்.

1960களில் பண்ணைப் பாதை அமைக்கப்பட்டதால் மண்கும்பான், அல்லைப்பிட்டி ஆகிய கிராமங்களில் இருந்த மணலுக்கு யாழ்ப்பாண நகரத்திலும் நகர அயல் பகுதிகளிலும் பெரும் கிராக்கி ஏற்பட்டது. இப்பகுதியில் கிடைத்த இயற்கை

வளத்தை அல்லைப்பிட்டி, மண்கும்பான் மக்கள் விற்று தங்களது பொருளாதார நிலையை மேம்படுத்தினர். இவர்கள் குறிப் பாக யாழ்ப்பாண நகரப்பகுதியில் நகைக் கடை வியாபாரத்தில் ஈடுபட்டு இத்தொழி லில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டனர். மேலும், யாழ்ப்பாண நகரப்பகுதி மெய்யா தனத்தில் குறிப்பிடத்தக்க முதலீடு செய்துள் ளனர். விவசாயத்திலிருந்து மிகவும் குறைந்த வருமானத்தைப் பெற்றுவந்த மண்கும்பான், அல்லைப்பிட்டி மக்களின் பொருளாதார முன்னேற்றத்துக்கு மணல் விற்பனை பெரும் பங்களித்தது எனலாம்.

1996 மீள் குடியேற்றத்திற்குப் பின்னர், விவசாயம், மீன்பிடி, பனைசார் தொழில் கள் ஓரளவு மீளவும் விருத்தி பெற்று வந் தாலும் வர்த்தக சமூகத்தின் பங்களிப்பு மிகவும் குறைந்து காணப்பட்டது. இப்பிர தேசத்தைச் சார்ந்த தென்னிலங்கை வர்த்தக சமூகம் இப்பொழுது மிகவும் குறுகிவிட்டது. மேற்படி சமூகத்தினர் யாழ்ப்பாணம், கொழும்பு நகர மக்களுடன் தங்களை முழு மையாக இணைத்துக்கொண்டனர். மாற் றாக வெளிநாடுகளிலிருந்து சிறிதளவு பணம் கிடைத்து வருகின்றமை குறிப்பிடத் தக்கது. இப்பிரதேசத்தின் பொருளாதார வளர்ச்சி இன்னும் சில காலத்துக்கு விவ சாயம், மீன்பிடி, பனைசார் தொழில்களின் முன்னேற்றத்திலேயே தங்கியிருக்கும் எனக் கொள்ளலாம்.

மேற்குறிப்பிடதொரு சமூக பொருளா தாரப் பின்னணியிலேயே தீவுப் பகுதியின் அபிவிருத்தியை முன்னெடுக்க வேண்டியுள் ளது. 1996ஆம் ஆண்டிலிருந்து மீளக்குடி யமர்வு, மீள அபிவிருத்தி நடவடிக்கைகளை முன்னெடுப்பதில் யாழ்ப்பாண மாவட்டத் தில் ஏனைய பிரிவுகள் எதிர்நோக்கிய பிரச்சினைகளிலும் பார்க்க தீவுகள் தெற் குப் பிரிவு கூடுதலான பிரச்சனைகளை எதிர் நோக்கியது. அவை வருமாறு.

1) இப்பிரிவு யாழ்ப்பாணத்திற்கு மேற்கே மூன்று தீவுகளைக் கொண்டதாகவும் நயினாதீவு கடலால் பிரிக்கப்பட்டும் மண்டைதீவு நீண்டகாலமாக இரா ணுவ கட்டுப்பாட்டுப் பகுதியாகவும் இருந்து வருகின்றன.

2) தீவுப் பகுதிப் போக்குவரத்து இராணு வத்தால் மிகவும் கட்டுப்படுத்தப்பட்டு இருந்தது. பிரயாண நேரக்கட்டுப்பாடு, தங்கி நிற்பதில் கட்டுப்பாடு மற்றும் சோதனை நிலையங்களின் செயற்பாடு போன்றன ஆரம்பகாலங்களில் (1996-1998) மிகவும் கடுமையாக இருந்ததால் புனர்வாழ்வு நடவடிக்கைகள் தாமத மாகின. இப்பொழுது மேற்குறிப்பிட்ட விடயங்களில் முன்னேற்றங்கள் ஏற் பட்டாலும் முழுமையான மாமூல் நிலை ஏற்படவில்லை.

3) மண்டைதீவின் ஒரு பகுதி, அராலி தரவைப் பகுதி. வேலணை மத்திய கல்லூரிச் சுற்றாடல் ஆகியன இராணு வக் கட்டுப்பாட்டுப் பகுதியாக இருப் பதால் இப்பிரதேங்களைப் பயன் படுத் துவதிலும் வேலணை சேர் வைத் திய லிங்கம் துரைசாமி மத்திய மகா வித்தி யாலயத்தை அதனது சொந்த இடத் தில் இயங்க வைக்க நீண்ட காலமாக முயற்சி எடுக்க வேண்டியிருந்தது.

4) இப்பிரிவிலிருந்து இடம்பெயர்ந்த மக்க ளில் கணிசமான தொகையினர் சர்வ தேச, தேசிய, பிராந்திய இடப்பெயர் வுக்கு உட்பட்டு, புதிதாக வாழ்வையமைத் துக்கொண்ட பகுதிகளில் தொடர்ந்

தும் வாழவிருப்பம் கொண்டவர்க ளாக இருந்து வருகின்றனர். இதனால் பழைய குடிசனத் தொகையைப் பெற முடியாதிருக்கின்றது. நலிந்த பிரி வினரே மீள்குடியமர்விற்கு உடன் முன் வந்தனர். வன்னிக்குச் சென்றவர்கள் அங்குள்ள குடியேற்றத் திட்டங்களி லிருந்த தீவுப் பகுதி மக்களின் உதவி யுடன் அங்கு வாழ்ந்து நிலைமை சீரா னதும் இங்கு வரலாம் என்ற எண் ணத்துடன் இருந்ததால் படிப்படியா கவே அவர்கள் தீவுப் பகுதிகளுக்கு மீள்குடியேறி வந்துள்ளனர்.

5) யாழ்ப்பாண நகருக்கு இடம்பெயர்ந்த தீவு மக்கள் தங்கள் கிராமங்களில் பற் றுக் கொண்டவர்களாக இருந்தபோதும் பிள்ளைகளின் கல்வி, தொழில் வாய்ப்பு, வாழ்க்கை வசதிகள், சமூக அந்தஸ்து ஆகியனவற்றைக் கருத்திற்கொண்டு குடும்பத்தை நகரில் வைத்துக் கொண்டு, தங்களது நிலபுலங்களைக் கவனித்து வருகின்ற போக்கு மீள் குடியேற்றம், புனர்வாழ்வு நடவடிக்கைகளை வேகப் படுத்தவில்லை.

6) நெற்காணி, தோட்டக்காணி, பனம் காணி, மற்றும் வீடுவளவுக் காணிக ளின் சொந்தக்காரர்கள் நகரத்தில் வாழ்ந்து கொண்டு தம் நிலங்களைப் பயிர் செய்வதிலும் அபிவிருத்தி செய் வதிலும் பல சிக்கல்களை எதிர்நோக்க வேண்டியுள்ளனர்.

7) இப்பிரதேசம் பின்தங்கியதாக இருப்ப தால் இப்பிரதேசத்தில் கடமையாற்ற போதிய அரச, அரசசார்பற்ற ஊழி யர்களை உள்ளூரில் பெறுவது கடின மாக இருக்கின்றது. இங்கு கடமையாற் றும் ஊழியர்களில் மிகக் கூடிய விகி தத்தினர் இங்கு நிரந்தரமாக வாழாது யாழ்ப்பாண நகரிலிருந்து தினசரி கடமைக்கு வந்துபோவதால் அவர்கள் தம் பணியைச் சிறப்புறச் செய்வதில் பல சிரமங்களை எதிர்நோக்குகின்ற னர். மேலும் அவர்களின் வருமானம் மற்றும் சமூகத்தில் கொண்டுள்ள செல் வாக்கும் இப்பிரதேச மக்களுக்குச் சென்றடைவதில்லை.

8) இப்பிரதேசத்தின் பொருளாதாரத்தில் மீன்பிடி முக்கியமாக இருந்தாலும் மீன் பிடித்துறையின் வளர்ச்சியை முன் னெடுப்பதில் பல பிரச்சினைகளை எதிர் நோக்கவேண்டியுள்ளது. கடற் படைக் கட்டுப்பாடுகள், இந்திய மீன வர்களின் ஊடுருவல் போன்றன பெரும் பிரச்சனைகளை உருவாக்கியுள்ளன.

மேற்குறிப்பிட்ட பிரச்சினைகளின் பின்ன ணியில் தீவுகள் தெற்குப் பிரதேசத்தை எவ்வாறு அபிவிருத்தி செய்யலாம் என நோக்குவோம்.

இப்பிரிவு 96 சதுர கிலோ மீற்றர் பரப் பளவையும் இன்று ஏறத்தாழ 20,000 மக்க ளையும் கொண்டு விளங்குகின்றது. 1981 இல் இப்பிரிவு 38,500 மக்களைக் கொண் டிருந்தது. ஆகவே 1981இல் இருந்த மக்கள் தொகையை மீளப்பெற பலவாண்டுகள் செல்லலாம். இடம்பெயர்ந்து பின் மீளக் குடியமரக்கூடிய மக்களில் பெரும்பாலா னோர் மீளக் குடியேறிவிட்டனர். இப்பிர தேசம் மேலும் வளர்ச்சியுறும் பொழுது சிறு தொகையினர் மீளக்குடியமர வரலாம். மக்கள் தொகை இடப்பெயர்வால் குறை வடைந்தது, இயற்கை வளத்தில் தாக்கத் தைக் குறைத்தாலும் அது இப்பிரதேசத்தின்

எதிர்கால வளர்ச்சியைப் பாதித்துள்ளது எனலாம்.

இப்பிரதேசத்தின் எதிர்காலப் பொருளாதார வளர்ச்சி விவசாயம், மீன்பிடி, விலங்கு வேளாண்மை, பனைசார் தொழில்களில் தங்கியுள்ளது. இதனால் இப்பிரதேசத்தின் நிலம், நீர், கடல், பனை/தென்னை வளங்களை நன்கு காத்து வளம் பெருக்க வேண்டும். இப்பிதேசத்தில் ஏழு வகையான நிலங்கள்/நிலப் பயன்பாடுகள் காணப்படுகின்றன. அவையாவன:

1. நெற்காணிகள்
2. தோட்டக்காணிகள்
3. வீடும் / வீட்டுத்தோட்டமும்
4. பனை வளவுகள்
5. தரவை நிலம்
6. மணல் நிலம்
7. சதுப்பு நிலம்.

## நெற்காணிகள்

நெற்காணிகள் தாழ் நிலங்களாக இருப்பதுடன் வருடத்தில் ஒரு முறை பெரும் போகத்தில் பயிர் செய்யப்படுகின்றன. நெல் அறுவடை முடிந்ததும் வேறு பயிர் செய்வது மிகமிகக் குறைவு. கோடை காலத்தில் கிணற்று நீர் மிகக் குறைவாகவே இருப்பதால் கோடைப் பயிர்கள் யாதும் செய்ய முடியாதுள்ளது. மேலும் கட்டாக்காலி மாடுகளின் தொல்லையால் எள்ளு போன்ற பயிர்களும் செய்யப்படுவதில்லை. மண்டைதீவு, அல்லைப்பிட்டி, புங்குடுதீவு, நயினாதீவு, ஆகிய பகுதிகளில் நெற்பிரதேசம் நிலப் பயன்பாட்டு மாற்றுக்குள்ளாகவில்லை. ஆனால் வேலணை, சரவணைப் பகுதிகளில் 1970, 1980 களில் குறிப்பிடத்தக்க நெற்செய்கைப் பரப்புகள் கொட்டுமண் போட்டு தரையை உயர்த்தித் தோட்ட நிலங்களாக மாற்றப்பட்டுள்ளன. இதனால் வயல் நிலங்களின் முக்கியத்துவம் வேலணை, சரவணைப் பகுதிகளில் குறைவடைந்துள்ளது. இப்பிரதேசம் முழுவதும் நெற் செய்கை ஒரு லாபகரமற்ற பயிர்ச் செய்கையாக இருந்து வருகின்றது. உற்பத்திச் செலவுக்கு ஈடுகொடுக்க முடியாததால் நெற்செய்கைப் பரப்புகளின் எல்லை நிலப்பரப்பு அதிகரித்து வருகின்றது. எதிர்காலத்தில் நெற்செய்கைப் பரப்பு முழுவதும் பயிர்ச்செய்கைக்கு உட்படுத்தப்படுவதுடன் கோடை காலத்தில் சிறு தானியங்கள் அல்லது எண்ணெய் வித்துக்கள் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படக் கூடிய மாதிரி விருத்தி செய்யப்பட வேண்டும். நெற் செய்கை லாபம் தரும் விவசாய நடவடிக்கையாக மாற்றப்பட வேண்டும்.

## தோட்டக்காணிகள்

தோட்டக்காணிகளின் மிகக் கூடிய விகிதம் ஒரு போக புகையிலை பயிர் செய்யப் பயன்படுத்தப்படுகின்றது. வளம் குறைந்த தோட்டக்காணிகள் வெங்காயச் செய்கைக்கு பயன்படுத்தப்படுகின்றன. நீர் சிக்கன முறையில் புகையிலைச் செய்கை இடம்பெறல் வேண்டும். இதற்குப் பொருத்தமான பயிர் அறிமுகம் செய்யப்பட வேண்டும்.

## தரவை நிலங்கள்

இப்பிரிவில் தரவைக் காணிகள் மிக முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. மாரி காலத்தில் இத்தரவை நிலங்களில் நீர் தேங்கி நிற்கும். நீர் வற்றியதும் இவை புற்தரையாக இருக்கும். இப்பிரதேசங்களில் காணப்படும் ஆடு, மாடுகள் தரவை

நிலத்தை மேய்ச்சலுக்குப் பயன்படுத்து கின்றன எனினும் அண்மைக் காலத்தில் ஒழுங்கற்ற முறையில் மண் அகழ்வு செய யப்பட்டதால் தரைத் தோற்றத்தில் குன்று களும் பள்ளங்களும் ஏற்பட்டுள்ளன. இதனால் தரவைப் பகுதிகள் ஒழுங்கான சமதரையாக மாற்றப்படின் இதன்மூலம் நல்ல பலன் பெறமுடியும். மேலும் இத்தரவை நிலங்களின் பௌதிக சூழலில் வளரக் கூடிய நல்ல புல் இனம் அறிமுகப்படுத் தப்பட்டால் இப்பிரதேசத்தில் விலங்கு வேளாண்மையைச் சிறப்பாக விருத்தி செய் யலாம். மேலும் சோளகக்காற்றுக் காலத் தில் பறக்கும் புழுதியைக் கட்டுப்படுத்தக் கூடியதாக இருக்கும். இத்தரவை நிலங்க ளில் குறிப்பாக எல்லைப் பகுதிகளில் சமு தாயக் காடுகள் உருவாக்கப்படின், கிரா மத்துக்குத் தேவையான விறகு மற்றும் தேவைகளைப் பெறக்கூடியதாக இருப்ப துடன் இப்பிரதேசத்தைப் பசுமையாகவும் வைத்திருக்க முடியும். ஊர்காவற்றுறை - யாழ்ப்பாணம் பிரதான வீதியில் அல்லைப் பிட்டியிலிருந்து சரவணை 8ஆம் கட்டை வரைக்கும் றோட்டின் இருபக்கமும் மேலும் வடக்கே கடற்கரை வரையும் தரவை நிலம் காணப்படுகின்றது. இதுபோல புங்குடுதீவு, மண்டைதீவு, நயினாதீவிலும் தரவை நிலம் முக்கிய நிலப்பரப்பாக இருக்கின்றது.

## வீடுகளும் வீட்டுத் தோட்டங்களும்

பெரிய இடப்பெயர்வுக்குப் பின்னர், ஆறு வருடங்கள் வரை மக்கள் இங்கு வாழாது விட்டதால் இப்பிரதேசத்து வீடு களும் வீட்டுத்தோட்டங்களும் பெரும் அழிவுக்குட்பட்டன. இப்பகுதியில் காணப் படும் வீடுகள்/வீட்டுத்தோட்டப் பகுதிகள் உயர்வான நிலப்பகுதிகளில் காணப்படு கின்றன. மேலும் நீர், வயல் நிலங்களிலும் தோட்ட நிலங்களிலும் காணப்படும் நீரிலும் பார்க்க சவர்த்தன்மையைக் கூடுதலாகக் கொண்டுள்ளது. இதனால் குடிநீரைக் குழாய் மூலமோ வயல் வெளிகளில் உள்ள கிணறுகளில் இருந்தோ பெறவேண்டியுள் ளது. வீட்டுத் தோட்டங்களில் குறிப்பாகப் பனை, தென்னை, வேம்பு, முருங்கை காணப்படுகின்றன. வீட்டுத்தோட்டங்கள் பெரும் அழிவுக்குட்பட்டதால் வீட்டுத் தோட்ட வான் பயிர்கள் நடுகைக்கு முக் கியத்துவம் கொடுக்கப்படவேண்டும்.

## பனை வளவுகள்

பனை வளவுகள் ஒப்பீட்டு ரீதியில் உயர மான பகுதிகளில் அமைந்திருப்பதுடன் இப்பரப்புகள் மிகவும் வளம் குறைந்த பகுதி களாகக் காணப்படுகின்றன. மணல் பிர தேசங்களிலும் கூடுதலாக பனை/வடலிகள் நெருக்கமாகக் காணப்படுகின்றன. கடந்த காலங்களில் ஏற்பட்ட யுத்தத்தினால் பெரு மளவு பனை மரங்கள் வெட்டியழிக்கப்பட் டன. இதனால் இப்பிரதேசத்தின் இயற்கை தாவரப் போர்வையை அதிகரிப்பதற்கும், பொருளாதாரக் காரணங்களுக்குமாக பனை நடுகை பெரும் எடுப்பில் மேற்கொள் ளப்பட வேண்டும். இப்பிதேசத்தின் நில நீர் வளத்துக்கும்' காலநிலைக்கும் மிகப் பொருத்தமான மரமாக பனை மற்றும் தென்னை காணப்படுகின்றன.

## மணல் பிரதேசம்

மண்கும்பான், அல்லைப்பிட்டிக் கிரா மங்களில் கடந்தகாலங்களில் பெருமளவு மணல் கும்பிகள் இருந்தன. கட்டிடத் தேவைகளுக்குப் பெருமளவு மணல் எடுத்த தால் பல இடங்களில் தரைமட்டம் கடல் மட்டத்திலும் பார்க்கக் குறைவாக இருப்

பதைக் காணலாம். கட்டுப்பாடற்ற முறையில் மணல் எடுக்கப்பட்டதால் நிலம் பள்ள நிலமாக மாறியுள்ளது. முன்னர் இருந்த தாவரப் போர்வையை இழந்துள்ளது. சூழல் பேணும் வகையில் இம் மணல் பிரதேசத்து மணல் வளம் பயன்படுத்தப்பட வேண்டும்.

## சதுப்பு நிலம்

இப்பிரிவிலுள்ள தீவுகளில் குறிப்பாக மண்டைதீவு, வேலணைத்தீவு, புங்குடுதீவு ஆகியவற்றின் வடகரையோரப் பகுதிகள் சதுப்புக் கரையோரமாகவும், சதுப்புத் தீவுகளையும் கொண்டு காணப்படுகின்றன. மண்டைதீவு, அல்லைப்பிட்டி, பண்ணைக்கு இடைப்பட்ட முக்கோணப்பகுதி ஒரு சதுப்பு நிலப் பகுதியாகவும் கடல்நீர் தாவரத்தைக் கொண்ட பரப்பாகவும் இருக்கின்றது. இப் பிரதேசத்தை பறவை சரணாலயமாக விருத்தி செய்ய வேண்டுமென்று பலமுறை சிபார்சு செய்யப்பட்டும் அது இன்னும் கை கூடவில்லை. யுத்தத்தின் காரணமாக இச் சதுப்பு நில கண்ணாக்காடுகள் பெருமளவு அழிக்கப்பட்டுள்ளன. கடற்கரையோரப் பகுதிகளில் மீன் விருத்திக்கு இச்சதுப்புக் காடுகளும் சதுப்புநிலப் பிரதேசங்களின் இயற்கைச் சூழலும் பாதுகாக்கப்பட வேண்டும்.

## நீர்வளம்

இப்பிரதேசம் சிறிய நிலப்பரப்புக்களைக் கொண்ட பல தீவுகள் அல்லது நிலத் திணிவுகளைக் கொண்டு இருப்பதால் நீர் வளம் மட்டுப்படுத்தப்பட்டு ஒரு சில இடங்களில்தான் நன்னீர்வளம் காணப்படுகின்றது. மற்றும் வருடம் முழுவதும் நீர்வளம் பெறுவது கடினமாகவுள்ளது. குறிப்பாக யூலை, ஓகஸ்ட், செப்டெம்பர் மாதங்களில் நீர்நிலைகளில் நீர் முற்றாக வற்றிவிடுவதுண்டு. கிணறுகளில் நீர்மட்டம் கீழ் சென்றுவிடும். குடிநீருக்கு மக்கள் பொது விநியோகத்தை நம்பியிருக்க வேண்டியதாக இருக்கின்றது. இப்பிரதேசத்தில் சாட்டி பிரதேசத்தைத் தவிர்ந்த ஏனைய பகுதிகளில் நீர்ப்பிரச்சினை வருடம் முழுவதுமோ அல்லது ஒரு காலப்பகுதியிலோ மக்கள் எதிர்நோக்குகின்றனர். இதனால் சாட்டியை அடிப்படையாகக் கொண்ட வேலணை குடிநீர்த் திட்டமும் அல்லைப்பிட்டியை அடிப்படையாகக் கொண்ட ஊர்காவற்றுறை குடிநீர்த் திட்டமும் நல்ல முறையில் பேணப்பட வேண்டும். மிகையான நீர்ப்பாவனை காரணமாக இப்பிரதேசங்களில் காணப்படும் நீர் வளத்தை மக்கள் இழக்க வேண்டிவரும்.

நீர் வளத்தைப் பேண இப்பிரதேசங்களிலுள்ள குளங்களும் வாய்க்கால்களும் தூர் எடுத்து நல்ல முறையில் பேணப்பட வேண்டும். வேலணைப் பகுதியில் கல்லாண்ட முனைப் பகுதியிலிருந்து சரவணை நாய்க்குட்டி வாய்க்கால் வரையில் மாரிகாலத்தில் ஓடும் சிறு அருவியையும், அதன் வழியில் காணப்படும் குளங்களான பெருங்குளம், நவக்கை, மூந்தாய் வெட்டுக்குளம், உப்புக்குளி, புதுக்குளம் போன்றன சிறந்தமுறையில் தூர்வாரி கூடியளவு நீரை வைத்திருக்கக் கூடியதாக மாற்றப்படவேண்டும். இதே போல் வேலணை மேற்கு, புங்குடுதீவு, நயினாதீவு, பகுதிகளில் காணப்படும் நன்னீர் நிலைகள் சிறந்த முறையில் விருத்தி செய்யப்பட வேண்டும். கடல் நீர் உள்வராது கட்டப்பட்ட தடுப்பணைகள் தற்பொழுது மீள அமைக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருவதைக் காணலாம்.

அராலி, சரவணை, அல்லைப்பிட்டி, மண்கும்பான் பகுதிகளில் வடகரையோரப் பகுதியில் தடுப்பணைகள் சீர்செய்து புதுப் பிக்கப்பட வேண்டும். நாய்க்குட்டி வாய்க் காலில் அமைந்துள்ள பராஜ் திருத்தப் பட்டால் சரவணையில் கடல்நீர் உட் புகு வதைத் தடுக்க முடியும். இதன் வழியாக உவர்நீராவதைக் குறைக்கவும், தரவை நிலங்களில் உவர்த்தன்மையைக் குறைக் கவும் வழிவகுக்கலாம்.

இப்பிரதேசத்து நன்னீர் பழுதுபடாமல் இருப்பதற்கு ஒழுங்குபடுத்தப்பட்ட நீர்ப் பாவனை முக்கியமாகும். தோட்டச் செய் கையை ஒக்டோபரில் தொடங்கி சித்திரை வருடப்பிறப்புக்கு முன்னர் முடிவுக்குக் கொண்டு வரவேண்டும். 1970களில் மிள காய்ச் செய்கை மிகவும் அதிகளவாகவும், உற்சாகமாகவும் நடைபெற்றபொழுது இப் பயிர்ச்செய்கை ஆனி, ஆடி மாதங்கள் வரை நீடித்ததால் நீர் உவர்த்தன்மை அடைந்ததை மக்கள் அறிவர்.

தீவுப்பகுதியின் மிகக்குறைந்த வளமான நன்னீர் வளம் மிகவும் சிக்கனமுறையில் நிலைத்துநிற்கும் பண்புடன் பயன்படுத்த வேண்டியதன் உண்மையை மக்கள் யாவ ரும் அறிந்திருக்கவும் நடைமுறையில் கடைப் பிடிக்கவும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இப்பிரதேசத்தின் இயற்கைத் தாவரம் வறள் நிலவளரிப் பிரிவைச் சார்ந்தது. மனித நடவடிக்கை மூலம் பெருமளவு தாவரப் போர்வையை ஏற்படுத்துவது மிக வும் கடினமானதும், நீண்டகாலம் எடுக்கும் செயற்பாடாகவும் இருந்துவருகின்றது. அண்மையில் நடைபெற்ற யுத்தத்தினால் இப்பிரதேசத்தில் பெருமளவு பனை, தென்னை அழிவுக்குட்பட்டன. மேலும் மனித முயற்சியால் நடப்பட்ட வான் பயிர் களும் அழிவுக்குட்பட்டன. இதனால் இப் பிரதேசத்தின் தாவரப்போர்வையை மேம் படுத்த மரநடுகை இயக்கம் சிறப்பாக மேற் கொள்ளப்பட வேண்டும்.

### மீன்பிடித்தொழில்

இப்பிரதேசத்தில் மீன்பிடித்தொழில் மிக முக்கியத்துவம் பெறுகின்ற பொழுதும், இத்தொழிலும், தொழில் சார்ந்தசமூகமும் பல பிரச்சினைகளை எதிர்நோக்கியுள்ளன. மிகையான மீன்பிடியால் கடலில் மீன்வளம் குறைந்துபோக வாய்ப்புண்டு. இந்திய மீன வர்கள் நெடுந்தீவு, கச்சதீவு கடற்பகுதிக ளைக் காலத்துக்குக் காலம் ஆக்கிரமிப்ப தால் இப்பகுதி மீனவர்கள் பெரும் கஷ்டத் துக்குள்ளாகின்றனர். மேலும் இப்பிரிவில் மீன் பிடிமையங்களில் இறங்குதுறைகளோ, மீன்பிடித்துறைமுகங்களோ இல்லாதிருப் பது பெரிய குறைபாடாகும். இதனால் வேலணை செட்டிபுலத்தில் மீன்பிடித்துறை முகம் ஒன்று அமைக்கப்பட வேண்டும். இக் கோரிக்கை நீண்டகாலமாக இருந்து வருவதுடன் 1959இல் தயாரிக்கப்பட்ட 10 ஆண்டுத் திட்டத்திலும் இம் மீன்பிடித் துறைமுகத்திட்டம் இனங்காணப்பட்டுள் ளது. மேலும் மீன்பிடித்தொழில் வளர்ச் சிக்கு கெட்டில், துறையூர், அல்லைப்பிட்டி, புங்குடுதீவு, நயினாதீவுகளில் இறங்குதுறை கள் அமைக்கப்பட வேண்டும். வெளிச்ச வீடுகள் இல்லாதிருப்பதும் மீனவர்களுக்குப் பெரும் இடர்பாடாகவுள்ளது. ஆகவே மீன் பிடித் தொழிலையும் இதில் ஈடுபட்டுள்ள சமூகத்தையும் முன்னெடுக்க இரு முனைப்பு அபிவிருத்தி நடவடிக்கைகள் முன்னெடுக் கப்பட வேண்டும்.

பனைசார் தொழில்களில் பாய், பெட்டி, கடகம் இழைத்தல் போன்ற தொழில்கள்

மீண்டும் விருத்தி செய்ய சாதகமான நிலை ஏற்படலாம். சுற்றுச் சூழல் பேணும் பிரிவினர் பிளாஸ்டிக் பை பாவனையால் ஏற்படும் பிரச்சினைகளை முன்னெடுப்பதால் சூழல் சிநேகிதமான பனம் பொருட் பாவனைக்குக் கிராக்கி ஏற்பட வாய்ப்புண்டாகும். இச்சூழ்நிலையைச் சரியானமுறையில் அணுகி பனைசார் தொழில்களை மேம்படுத்தவேண்டும். கள்ளு, கள்ளை அடிப்படையாகக் கொண்ட மதுபான வகைகள் உற்பத்தியைப் பெருக்க வாய்ப்புண்டு.

தொகுத்து நோக்குகையில் இப்பிரதேசத்து நிலம், நீர், கடல் மற்றும் பனை, தென்னை, வளங்களை நிலைத்து நிற்கக் கூடிய முறையில் அபிவிருத்தி செய்தால் இப்பிரதேசத்தின் பொருளாதாரத்தை முன்னெடுக்கலாம். இந்நிலையை அடைந்த பின்னர் இப்பிரதேசத்து இயற்கை வனப்புக்களை நல்ல முறையில் பயன்படுத்தி, சுற்றுலாத் துறையை வளர்க்க முடியும். அல்லைப்பிட்டி, மண்கும்பான், வெள்ளைக் கடற்கரை, புங்குடுதீவு கண்ணகியம்மன் கடற்கரை மற்றும் பல சிறுதீவுகள், கடல்நீர் ஏரிகள் ஆகியன சுற்றுலாத்துறை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாக அமையும். நயினாதீவில் அமைந்துள்ள புகழ் பெற்ற நயினை நாகபூஷணியம்மன் கோயில், புத்த விகாரை, தலயாத்திரை இடங்களாக விருத்தி செய்ய நிறைய வாய்ப்புண்டு. இவ் அபிவிருத்தி முயற்சிகளால் பெருமளவு வேலை வாய்ப்புகள் உருவாக வழியுண்டு. ஆகவே தீவுகளின் அபிவிருத்திக்குப் பல உள்ளார்ந்த இயற்கை வளங்கள் இருப்பினும் இவைகளைப் பயன்படுத்த சிறந்த போக்குவரத்து வசதியையும் உயர்வான மனித வளத்தையும் விருத்தி செய்தல் வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது.





# சரவணைக் கடல் நீரேரியும் வேலணைச் சிற்றருவியும்


## பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை

**(புவியியற் பேராசிரியர், முன்னாள் துணைவேந்தர். யாழ். பல்கலைக்கழகம்)**


இன்று சர்வதேச ரீதியாக நுண்திட்டங்களைப் பற்றிய ஆய்வுகளிலும் அவற்றை விருத்தி செய்வதிலும் ஐக்கிய நாடுகள் அபிவிருத்தித் திட்டப்பகுதி (UNDP) அரசுகள், சர்வதேச அரசசார்பற்ற நிறுவனங்கள், நிதி நிறுவனங்கள் பல கூடிய கவனம் செலுத்துகின்றன. நுண்திட்டங்கள் மூலம் குறித்த பிரதேசத்து பௌதீக வளங்களையும். மக்களையும். தொடர்புபடுத்தி அபிவிருத்தி காணும் முயற்சிகள் மூலம் இன்று அபிவிருத்தியில் முன்னிலைப் படுத்தப்படுகின்ற கிராமிய அபிவிருத்தி. வறுமை ஒழிப்பு. பெண்கள் வலுவூட்டல். மனிதவள மேம்பாடு, சூழற்பாதுகாப்பு அடைந்து, நிலைத்து நிற்கக்கூடிய பொருளாதார அபிவிருத்தியைக் காணலாம். இதனைக் குறைந்த நிதியுடனும் மக்களை இலகுவாக அணிதிரட்டி, அவர்களின் கூடுதலான பங்களிப்புக்களுடனும் நுண்திட்டங்களை மேற்கொள்ள முடியும். இத்திட்டங்களின் பயன்களையும் இதன் பயனாளிகளின் முன்னேற்றங்களையும் இலகுவாக இனங் காணவும், கண்காணிக்கவும் முடியும். இக் கருப்பொருளின் அடிப்படையிலேயே இக் கட்டுரை அமைகின்றது.

யாழ்ப்பாணக் குடாநாடு 25க்கு மேற்பட்ட பெரிய, சிறிய, நுண்ணிய நிலத் திணிவுகளை உள்ளடக்கியது. இந்நிலத் திணிவுகள் கடல் நீரேரிகளால் பிரிக்கப் பட்டுள்ளன. குடாநாட்டில் ஆயிரத்துக்கு மேற்பட்ட குளங்களும் சிறுநீர்க் குட்டைகளும் காணப்படுகின்றன. குடாநாட்டில் சிறிய பல பருவகால அருவிகள் உள. இவற்றுள் மிக முக்கியமானதும், நன்கு அறியப் பட்டதும் வழுக்கையாறாகும். பல பருவ கால அருவிகள் இருந்தபொழுதும் அவை

கள் பற்றிய ஆய்வு இடம் பெற்றதும், எழுதப்பட்டதும் மிகக் குறைவாகும். இத் தகைய பருவகால சிறு அருவியில் சரவ ணைக் கடல் நீரேரியும் வேலணைச் சிற்றருவியும் ஒன்றாகும். குடாநாட்டிற்கு மேற்கே பல தீவுகள் வெவ்வேறு பரப் புக்களில் அமைந்துள்ளன. அட்டவணை ஒன்றில் இத்தீவுகளும் இத்தீவுகளின் பரப்பளவுகளும் தரப்பட்டுள்ளன.

### அட்டவணை 1

### குறித்த தீவுகளும் அவற்றின் பரப்பளவுகளும்

| பெயர் | (பரப்பு) ஹெக்டயரில்) | பெயர் | (பரப்பு)ஹெக்டயரில்) |
|---|---|---|---|
| துருத்துப்பிட்டி | 14 | மண்டைதீவு | 756 |
| காரைதீவு | 2295 | கண்ணாத்தீவு | 122 |
| எழுவை தீவு | 140 | ஊரதீவு | 1 |
| பருத்தித்தீவு | 38 | புங்குடுதீவு | 2256 |
| அனலைதீவு | 482 | கானாத்தீவு | 97 |
| புளியந்தீவு | 44 | பாலைதீவு | 16 |
| வேலணைத்தீவு | 6401 | கண்ணாபிட்டி | 1 |
| குறிஞ்சாத்தீவு | 5 | செருஞ்சாத்தீவு | 4 |
| சிறுத்தீவு | 28 | நடுவுத்துருத்தி | 88 |
| நெரியன்பிட்டித் தீவு | 2 | குறிகட்டுவான் | 38 |
| கண்ணாடித்தீவு | 19 | நயினாதீவு | 422 |
| கச்சதீவு | 68 | நெடுந்தீவு | 4717 |

இத்தீவுகளுள் மிகப்பெரியது வேலணைத் தீவாகும். இது 6401 ஹெக்டயர் நிலப் பரப்பை உடையது. சரவணைக் கடல் நீரேரியும் சுருவில் குடாக்கடல் நீரேரியும் இத்தீவின் பெரும்பகுதியின் தரைக்கீழ் நீரின் உவர்தன்மையை தீர்மானிப்பதில் பெரும் செல்வாக்குச் செலுத்துகின்றன.

அல்லைப்பிட்டி, மண்கும்பான், சாட்டி பகுதிகளிலேயே சிறந்த தரமான நீர் இருப் பது குறிப்பிடத்தக்கது.

குறிப்பிட்ட நீரேரியும் அருவியும் வேலணைத் தீவின் நடுப்பகுதியில் உள்ளது. 7 கிலோமீற்றர் நீளமான இவ்வருவி கார்த் திகை, மார்கழி, தை மாதங்களில் உயர் மழைவீழ்ச்சி பெறும் காலங்களில் கல் லாண்டு முணங்கில் உற்பத்தியாகி வேல ணை கிழக்குக் கிராமங்களினூடாக ஓடிக் கண்ணாவோடையில் சரவணைக் கடல் நீருடன் இணைந்து (நாவாய் வெட்டிய வாய்க்கால்) நாய்க்குட்டி வாய்க்கால் பகுதி யில் கடலுடன் சங்கமிக்கின்றது. இவ்வருவி வேலணை கிழக்கு பெருங்குளம் முத்துமாரி அம்மன் கோவிலடி, வங்களாவடி, கூழா

தோட்டம், தாழிபுலம், ஆலம்புலம், அக்க வாலி, நாவலடிப்புலம், கண்ணாவோடை, சோழாவத்தை, பள்ளம்புலம், மயிலப்புலம், சரவணை ஆகிய கிராமங்களையும் அராலி - தரவைப் பிரதேசம் முழுவதை யும் உள்ளடக்கியதாக அமைகின்றது. இதன் வடிகால் அமைப்பின் மொத்த நிலப் பரப்பு 1500 ஹெக்டயராகும்.

இவ்வடிகால் பிரதேசத்தின் வடிகால் பண்பை ஆராய்வதற்கு இப்பிரதேசத்தின் புவிச்சரிதவியல், நுண் பௌதீக நிலவுரு வம், மழைவீழ்ச்சி, ஆகியவற்றை நோக்கு வது பொருத்தமாகும். புவிச்சரிதவியல் ரீதியில் இப்பிரதேசத்தை இரு பிரிவுகளாக நோக்கலாம்.

## 1. ஊர்காவற்றுறை

யாழ்ப்பாணம் வீதிக்குத் தெற்கேயுள்ள பிரிவு;

## 2. இவ்வீதிக்கு வடக்கேயுள்ள பிரிவு.

தென்பிரிவில் சுண்ண அடையற் பாறைகள் காணப்படினும் அவை வடக்குப் பாறைகளைவிட வயதிற் கூடியவையாகவும் இறுக்கமான கற்பகுதிகளாகவும் உள்ளன. வடபகுதி அண்மைக்காலப் படிவுகளைக் கொண்டுள்ளன. இவை சிற்பி, சங்கு, ஊரி ஆகியன நிறைந்து விளங்கும் இளகிய உவர் மண் திடலாகக் காணப்படுகின்றன.

இச்சிற்றருவியின் வடிகாலப் பகுதியின் நுண் தரைத் தோற்றத்தை 3 பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. சிற்றருவி ஆரம்பமாகும் நீரேந்தும் மேற்பகுதி, 2. நீரேந்தும் நடுப்பகுதி, 3. நீரேந்தும் கீழ்ப்பகுதி.

மேற்பகுதியின் சராசரி உயரம் 10 அடிக்கு மேற்பட்டது. கல்லாண்டு முணங் குப் பகுதி கடல்மட்டத்திலிருந்து 13 அடி உயரத்தில் அமைந்துள்ளது. இதுவே இத் தீவின் அதி உயரமான இடமாகும். இப் பகுதிக்குள் கள்ளக்கடவை, தென்காட்டுப் பகுதிகள் உள்ளடங்குகின்றன.

அருவியின் நடுப்பகுதி 5 அடிக்கும் 10 அடிக்கும் இடைப்பட்ட உயரத்தை உடையது. பெருங்குளத்தின் தென்பகுதியி லிருந்து வடக்கே ஊர்காவற்றுறை - யாழ்ப் பாணம் வீதிக்குக் கிட்டிய தூரம் வரை யில் இடைப்பட்ட பிரதேசம் அருவியின் நடுப்பகுதிக்குள் அடங்குகின்றது. இப்பகுதிக் குள் இயற்கையாக அமைந்த சிறு உயர வேறுபாடுகளைத் தவிர கடந்த 30 வருடங் களாக நெற்செய்கைப் பிரதேசங்களாக இருந்த தாழ்நிலங்கள் கொட்டுமண்மூலம் உயர்த்தப்பட்டுத் தோட்ட நிலங்களாகவும் வாழ்விடங்களாகவும் மாறியுள்ளன. இம் மாற்றத்திற்கு உட்பட்ட நிலங்கள் சராசரி யாக 2-3 அடியால் உயர்ந்துள்ளன. ஆகவே இப்பிரதேசத்தின் நுண் உயர மாற்றத்தில் மனிதசெயற்பாடு பெரும் பங்களிப்புச் செய்துள்ளது. இம்மாற்றத்தால் அருவியின் இயல்பான வடிகால் ஒழுங்கு பாதிப்புக்குள்ளாகி உள்ளது.

அருவியின் நீரேந்தும் கீழ்ப்பகுதி தர வை நிலங்களையும் சதுப்பு நிலங்களையும், சரவணைக் கடல் நீரேரிப் பகுதியையும் வெள்ளம் தேங்கும் பகுதியான அராலி வீதி 3ம் கட்டைப் பிரதேசங்களையும் உள் ளடக்கியது. இப்பிரதேசம் முழுவதும் கார்த் திகை, மார்கழி மாதங்களில் ஒருசில மண் மேடுகளைத் தவிர ஏனைய பகுதிகள் யாவும் நீர் மேவி நிற்பதைக் காணலாம். மழைக் காலம் முடிய நீர் வற்றிச்சென்று ஆவணி, புரட்டாதி மாதங்களில் முழுப்பிரதேசமும் புழுதி நிறைந்த வரண்ட நிலங்களாகக்

காணப்படும். இப்பகுதியில் கோடை கால நண்பகலில் கானல்நீர் ஓடுவதைப் பார்க் கலாம்.

வடிகால் பிரதேசத்தின் மழைவீழ்ச்சி யாழ்ப்பாணக் குடாநாட்டின் மழை வீழ்ச் சியின் பருவ ஒழுங்கை ஒத்திருந்த போதும் மழைவீழ்ச்சி அளவில் சற்றுக் குறைவாக உள்ளது. பல சந்தர்ப்பங்களில் யாழ்ப்பா ணப் பகுதியில் மழை பெய்யும் போது மண்கும்பான் பிள்ளையார் கோவிலுக்கு அப்பால் மழை பெய்யாதிருந்தமை கட் டுரை ஆசிரியரால் அவதானிக்கப்பட்டது. யாழ்ப்பாணக் குடாநாடு இலங்கை விவ சாய சூழலியல் பாகுபாட்டில் DL3 பிரிவுக் குள் அடங்க, இவ்வடிகாற் பிரதேசம் DL 4 பிரிவுக்குள் அடங்குகின்றது. DL4 பிரிவு DL3 பிரிவிலும் பார்க்க விவசாயச் சூழலிய லில் வரட்சி உவர்த்தன்மை கூடியதாகும்.

வேலணை அருவி பாயும் வழியை நோக்கின் இது குளங்களையும், சிறிய ஒடுங் கிய வாய்க்கால்களையும் இணைத்ததாக உள்ளது. சில பகுதிகளில் அருவி பரவிப் பாய்கின்றது. இது கல்லாண்டு முனைப் பகுதியிலிருந்து ஆரம்பமாகி ஏறத்தாழ 1.5 கிலோமீற்றர் தூரம் வடக்காக ஓடி பெருங் குளத்தில் இணைகின்றது. மேலும் ஒரு கிளை பெரும்படை ஐயனார் கோயில் பகுதி யிலிருந்து உருவாகி பெருங்குளத்தை அடைகின்றது. இக்குளம் அண்மைக் காலத் தில் விருத்தியாக்கப்பட்டு குளக்கட்டு உயர்த்தப்பட்டும் குளம் ஆழமாக்கப்பட் டிருப்பதால் குளத்தின் நீரின் கொள்ளளவு அதிகரித்துள்ளது. குளத்தில் நீர் நிறைந்து இருக்கும்போது செட்டிபுலக் கடற்கரையில் புல்லோடையில் சிறிய நன்னீர் ஊற்று ஒன்று தொடர்ச்சியாக ஓடிக் கடலை அடை வதைக் காணலாம். இது சுண்ணாம்புக் கற்பிரதேசங்களில் காணப்படும் பண்பு களில் ஒன்றாகும். கீரிமலை ஊற்றைப் போன்ற மிகச்சிறிய ஊற்று இது. பெருங் குளக் கரையில் பிரசித்தி பெற்ற வேலணை முத்துமாரி அம்மன் ஆலயம் அமைந் துள்ளது.

வேலணை அருவி பெருங்குளத்தி லிருந்து சிறு வாய்க்கால் வழியாக கூழா தோட்டம் தாழிபுலம் ஊடாக வளைந்து வளைந்து ஓடி நவக்கைக் குளத்தை அடை கின்றது. இக்குளம் நீர் நிரம்பி நீர் கோடாலி வயல் வாய்க்கால் வழியாக ஆலம்புலம் நீரையும் சேர்த்துக்கொண்டு முந்தாய்க் குளத்தை அடைகின்றது. இக்குளம் அண் மையில் விருத்தியாக்கப்பட்டு இதன் நீரின் கொள்ளளவு அதிகரிக்கப்பட்டுள்ளது. இதனால் வரட்சிக் காலங்களில் முன்னர் போல் நீர் முற்றாக வற்றுவதில்லை. இக்குளத்தின் தென்பகுதியில் கோடையில் நீர் வற்றி அதன் தளம் காய்ந்து பொருக்காக மாறும் போது விவசாயத் தேவைக்காகக் குளப் பொருக்கு பசளைத் தேவைக்கு அள்ளப்படு கின்றது. இக்குளத்தின் கிழக்குப் பகுதியில் கட்டுவயற் பகுதியும் வடமேற்குப் பகுதியில் அக்கவாலிக் கிராமமும் அமைந்துள்ளன. கடும் மழைக்காலங்களில் குளத்தில் நீர் நிரம்பி, கட்டுவயற் பகுதிக்குள்ளும் அக் கவாலிக் கிராமத்திற்குள்ளும் பரவுவது உண்டு. இச் சந்தர்ப்பங்களில் நீர் வடிந் தோடும்வரை பொறுமை காக்காது வெள்ளத் தாற் பாதிக்கப்படுவோர் கிழக்கு அணையை வெட்டி நீரைத் துரிதமாக வெளியேற்றி விடுவர். இதனால் வெள்ளத்துடன் தேக்கி வைத்திருக்கக்கூடிய நீரின் ஒரு பகுதியும் வெளியேறிப் பயனற்றுப் போகின்றது. அணையும் அடிக்கடி சீர்செய்ய வேண்டி யுள்ளது. இக்குளத்தின் கரையில் மிகப்

பெரிய ஆலமரத்துடன் கூடிய கோபுரத் தடி வைரவர் ஆலயம் உள்ளது.

மூந்தாய்க்குளம் நீர்நிரம்பி அதன் வடக்கு, கிழக்குக் கால்வாய்கள் வழியாக வெளியேறும் வடக்கு வாய்க்காலின் முற்பகுதி தற்பொழுது தூர்ந்துள்ளதால் நீர் வெளியேற்றம் கிழக்கு வாய்க்கால் மூலமே நடை பெறுகின்றது. இங்கிருந்து வெளியே றும் நீர் மெலிஞ்சினா வெளித் தரவைப் பகுதியில் பரவி ஓடி, சோனகன் காட்டு தெற்கு கால்வாய் வழியாகவும் மூந்தாய் வடக்குக் கால்வாய் பிற்பகுதி வழியாகவும், பாய்ந்து கண்ணாவோடைக் குளத்தை அடைகின்றது. இக்குளத்திலிருந்து யாழ்ப் பாணம், புங்குடுதீவு வீதியில் அமைந்துள்ள கண்ணாவோடை மதகு வழியாக அருவி வீதியைக் கடந்து கண்ணாவோடை வாய்க் கால் வழியாக அதிசய வைரவர் கோவில் வரை சென்று சரவணைக் கடல் நீரே ரிப் பகுதியில் சங்கமமாகி கடல் நீரேரியு டன் சேர்ந்து ஊர்காவற்றுறை யாழ்ப் பாணம் வீதி 6ஆவது கட்டை மதகுவழியாக வடக்கு நோக்கிப் பாய்ந்து நாய்க்குட்டி வாய்க்கால் நீர்த்தடுப்பைக் கடந்து கடலை அடைகின்றது. சரவணைக் கடல் நீரே ரிப் பகுதிக்குள் வரும் இந்நீர் பரந்த பிர தேசத்தில் பரவிக் காணப்படுவதுடன் சர வணைச் சுடலைப் பகுதியில் இரண்டாகப் பிரிந்து பின் வடக்கில் ஒன்றாக இணைந்து காணப்படுகிறது.

வேலணைச் சிற்றருவிக்கும் பின்னர் சரவணை நீரேரிக்கும் மழைக்காலத்தில் பல வாய்க்கால்கள் வழியாக நீர்வரவு காணப்படுகின்றது. பின்வரும் வாய்க்கால் கள் குறிப்பிடத்தக்கவை.

01. பெருங்குளத்திலிருந்து கிழக்கே உள்ள செல்வநாயகம் வீதி, இராசவீதிப் பகுதி நீர். இது வாய்க்கால் வழியாக மேற்கு நோக்கிச் சென்று பெருங்குளத்தை அடைகின்றது.

02. செட்டிபுலத்திலிருந்து மேலதிகமாக ஓடும் நீர் வெட்டுக் குளத்தை அடைந்து ஒடுக்கமான வாய்க்கால் வழியாக வடக்கு நோக்கிச் சென்று உப்புக்குழிக் குளத்தை அடைகின்றது. இக்குளத்திற்கு சாட்டிக்கு மேற்காகவுள்ள பகுதி நீரும் வந்து சேருகின்றது. இக்குளத்திலிருந்த மேலதிக நீர் கிழக்குக் கட்டுவயல் தர வைப்பகுதி ஊடாகப் பரவிப் பாய்ந்து சண்டைக்காடு, புட்டிவளவு பகுதி நீரையும் சேர்த்து சோனகன் காட்டு வடக்கு வாய்க்காலை மெலிஞ்சினா வெளியூடாகப் பரவிப்பாய்ந்து சந்திக் கின்றது.

03. வேலணை மேற்கிலிருந்து நாலாவரை யிலிருந்து கிழக்கு நோக்கி வாய்க்கால் வழியாக ஒடிவரும் நீர் பழைய பஸ் கம்பனிக்கு அண்மையில் பெருங் குளத்தை அடைகின்றது.

04. கொட்டப்பெட்டி மூலைக்குக் கிழக்காக ஆரம்பமாகும் ஒரு சிறு வாய்க்கால் நவக்கை சங்கக்கடைக்கு அண்மையாக அரசடி மதகு வழியாக நவக்கைக் குளத்தை அடைகின்றது.

05. இலந்தைக் காட்டுப் பகுதியிலிருந்து ஆரம்பமாகும் ஒரு சிறு வாய்க்கால் அப்பகுதி மேலதிக நீரை கிழக்கு நோக்கி எடுத்துச் சென்று கோடாரி வயல் ஊடாக மூந்தாய்க் குளத்தை அடைகின்றது.

06. ஆரவயற்பிட்டியில் ஆரம்பமாகும் வாய்க்கால் இணுக்க வயல் ஐவந்திடல்

வயற்பகுதியின் வழியாகச் சென்று புதுக்குளத்தை அடைகின்றது. இக்குளத்திற்கும் பள்ளம்புலம் பகுதியிலிருந்தும் பிறிதொரு வாய்க்கால் மூலம் நீர் சேருகிறது. குளம் நிரம்பும் காலத்தில் அதனது வடக்கு வாய்க்கால் வழியாக நீர் கண்ணாவோடை மதகடியில் பிரதான அருவியைச் சந்திக்கின்றது. இக்குளம் அருகே பிரசித்தி பெற்ற நாச்சிமார் கோவில் அமைந்துள்ளது.

07. சோழாவத்தை பள்ளம்புலம் பகுதிகளிலிருந்து ஆரம்பமாகும் வாய்க்கால்கள் சரவணைக் கடல் நீரேரியை அது ஆரம்பமாகும் இடத்தில் சந்திக்கின்றன.

08. சரவணைக் கிழக்கிலிருந்து சூளைவுண்டான் குளத்தை மையமாகக் கொண்ட வாய்க்கால் கிழக்கு வடக்காகச் சென்று யாழ் ஊர்காவற்றுறை வடக்கு வீதியில் 7ம் கட்டையில் சரவணைக் கடல் நீரேரியுடன் இணைகின்றது.

09. சரவணை மேற்கிலிருந்து ஆரம்பமாகும் வாய்க்கால் தெங்கங்குளம் (நாச்சிமார் கோவிலடிக்குளம்) தெற்கில் வேலணை புளியங்கூடல் சந்தி வீதிக்கு தெற்காக உள்ள குளத்து நீரைப் பெற்று நிரம்பி வாய்க்கால் வழியாக கிழக்காக சென்று கட்டுவன் குளத்தை நிரப்பி சரவணை கிழக்கு கட்டுவன் ஐயனார் கோவிலுக்கு அண்மையாகச் சென்று வடக்கு வீதியைக் கடந்து சரவணைக் கடல் நீரேரியை சென்றடைகின்றது.

10. சரவணை கிழக்கு கெழுவுக்கேணி மேலதிக நீர் வாய்க்கால் சரவணை சுடலைக்கு அண்மையாக கடல் நீரேரியை சென்றடைகின்றது.

மேற்குறிப்பிட்ட வாய்க்கால்களைத் தவிரவுள்ள பகுதியின் பிரதான வீதிக்கு வடக்கேயுள்ள தரைப்பகுதி இடிவிழுந்த குண்டுக்கு மேற்காக நீர் முழுவதும் மேற்கு நோக்கி வடிந்து சரவணைக் கடல் நீர் ஏரியை அடைகின்றது.

சரவணைக் கடல் நீர் ஏரியினதும் வேலணைச் சிற்றருவியினதும் வடிகாற் பிரதேசத்தின் அபிவிருத்தியை நோக்கி இப்பிரதேசத்தில் உவர்நீர் குடியிருப்புப் பகுதிகளுக்குள் உட்புகாது தடுப்பதற்கு நீர் வெளியேற்றத்தை ஒழுங்குபடுத்துவதற்கும் 1950 களிலேயே இரு தடுப்பணைகளும், மேலதிக நீர் வெளியேற்றும் கதவுகளும் அமைக்கப்பட்டன. நீண்டகாலமாக சரவணை அணையும், நீர் வெளியேற்றும் கதவுகளும் சரியான முறையில் பராமரிக்கப்படாததால் இத்திட்டத்தால் எதிர்பார்க்கப்பட்ட பலனைப் பெறமுடியாது போய் விட்டது. தற்பொழுது தடுப்பணையும் கதவுகளும் திருத்தப்பட்ட நிலையிலும் மண்கும்பான் அணை திட்டமிட்டபடி திருத்தப்படுமிடத்து எதிர்பாக்கப்படும் பலன்களை அடைய முடியும். இதற்கு இப்பகுதி மக்களினது பங்களிப்பு பெருமளவிற்குத் தேவைப்படுகின்றது. சரவணைக்கு வடக்கே சுருவிலில் அமைக்கப்பட்டுள்ள குடாக்கடல் உவர் நீர்த்தடுப்பு அணையால் சுருவில், சின்னமடு, புளியங்கூடல், சரவணையின் வடமேற்குப் பகுதிகள் ஆகிய இடங்களின் நீர் வளம் குறிப்பாக உவர்த்தன்மை குறைந்துள்ளதென விவசாயிகள் தெரிவிக்கின்றனர். ஆகவே இதனைப் போன்ற மாற்றம் சரவணைக் கடல் நீரேரித்திட்டம் சரியான முறையில் முகாமைப்படுத்தப்பட்டு செயற்

படுத்தப்படும்போது சரவணை கிழக்கு, மயிலப்புலம், சோழாவத்தை, பள்ளம்புலம், நாவலடிப்புலம் ஆகிய பகுதிகள் நீர் வளத்தில் நன்மை அடைய முடியும்.

வேலணைச் சிற்றருவியின் வடிகாற் பிரதேசத்துக்குள் அமைந்துள்ள குளங்களின் மண் அள்ளப்பட்டு வயல்களை மேட்டு நிலங்களாக மாற்றப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனால் இயற்கையான வடிகால் ஒழுங்கு முறை பாதிக்கப்பட்டுள்ளது. பெரு வீதிக்கு வடக்காக உள்ள தரவை நிலங்களினது மண் அகழ்தலால் நிலம் குன்றும், குழியுமாகக் காணப்படுகின்றது. இதனால் வாய்க்கால்கள் பல இடங்களில் தடைப்பட்டும் தூர்ந்தும் உள்ளன. நீர் வடிதல் பாதிக்கப்படுவதால் நீர் தடைப்படும் இடங்களில் நீர் தேங்கி சதுப்புத் தன்மை ஏற்படுகின்றது. ஆகவே இப்பிரதேசத்தின் வடிகால் வலைப் பின்னலைச் சீர்செய்ய வேண்டியுள்ளது.

இப்பிரதேசத்தின் நீர் வளத்தையும் தரத்தையும் உயர்த்தும்போது, பிரதேசத்தின் பொருளாதாரம் மேம்பட பின்வரும் செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட வேண்டும்.

01. வடிநிலப் பிரதேசத்திலுள்ள குளங்கள் தூர்வாரப்பட்டு, குளங்களின் நீர்கொள்ளளவு உயர்த்தப்பட்டு நீரின் தூய்மையும் பேணப்பட வேண்டும். இக் குளங்களை இணைக்கும் வாய்க்கால்கள் சீர் செய்யப்பட வேண்டும். இதனால் குளங்களை அண்டிய பிரதேசம் ஈரலிப்பானதாகவும் தரைக்கீழ் நீர் மீளவும் நிரம்பவும் வழி பிறக்கும். குள நீரை அடிப்படையாகக் கொண்டு ஏற்று நீர்ப்பாசனம் மூலம் விவசாயத்தை அதிகரிக்கலாம். ஏற்கனவே இக்குளங்களிலிருந்து ஏற்று நீர்ப்பாசன மூலம் பயிர்ச்செய்கைக்கு நீர் சிறியளவு பயன் படுத்தப்படுகிறது. மேலும் கிராமத்தவர் தம் தேவைக்கு இக் குளத்தைப் பயன்படுத்தலாம்.

02. நாய்க்குட்டி வாய்க்கால் சரவணை அணையிலிருந்து கண்ணாவோடை வரை பரந்திருக்கும் சரவணைக் கடல் நீரேரியின் உவர்த்தன்மையைக் குறைப்பதற்கும், குறைந்தது இந்நீர் இப்பிரதேசத்தில் காணப்படும் பெருமளவு எண்ணிக்கையான கால்நடைகளின் பாவனைக்கு ஏற்ற வகையில் உவர் நீரின் தரம் மேம்படுத்த வேண்டும். நீரின் தரம் மேம்படுத்த வடக்குத் தரவை நிலம் தரமான புற்களைக் கொண்ட இயற்கையான மேய்ச்சல் நிலமாக மாற வழி பிறக்கும்.

03. இப்பிரதேச்தின் நிலப்பயன்பாடு, விவசாயம் ஆகியவற்றை இதனது இட அமைவு, மழைவீழ்ச்சி ஒழுங்கு ஆகியவற்றைச் சிறப்பாகக் கருத்திற்கொண்டு விஞ்ஞான ரீதியான முகாமைத்துவம் முன்னெடுக்கப்பட வேண்டும். இப்பிரதேசத்து நீர்வளம் உவர்நீராகக் கூடிய வாய்ப்பு உயர்வாக இருப்பதால் தரைக்கீழ் நீர்ப்பாவனை மட்டுப்படுத்தப்பட்டதாக அமைய வேண்டும். ஆகவே இப்பிரதேசத்தில் பங்குனி, சித்திரைக்குப் பின்னர் பெருமளவு நீரைப் பயன் படுத்தும் பயிர்ச்செய்கைகள் தவிர்க்கப்பட்டு வரட்சியைத் தாங்கக்கூடிய, நீர்பாசனம் அற்ற சிறு பயிர்ச்செய்கை மேற்கொள்ளப்பட வேண்டும்.

வடிநிலப் பிரதேசத்தில் தாவரப் போர்வை மிகக் குறைவாக இருப்பது

கடந்த இரு தசாப்தங்களாக பெருமளவு பனை, தென்னை, அழிக்கப்பட்டிருப்பதால் இப்பிரதேசத்தின் தாவரப் போர்வையை அதிகரிக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட வேண்டும். பெருவீதிக்கு வடக்கே உள்ள பிரதேசத்தில் வரட்சியைத் தாங்கக் கூடிய மரநடுகை பெருமளவில் மேற்கொள்ளப்பட வேண்டும்.

மரநடுகை மூலம் தாவரப் போர்வை அதிகரிக்க, இப்பிரதேசத்தின் சூழலியல் புகள் பெரியளவில் மாற்றத்திற்குள்ளாகும். கடும் சோளகத்தால் வரட்சியாக்கப்படுவதும் மண்புழுதி ஏற்படுவதும் தடுக்கப்பட்டு, காற்றின் வேகம் குறைக்கப்பட்டு, ஓரளவு பசுமையான தோற்றம் பிறக்க வழி வகுக்கலாம். 1991ஆம் ஆண்டு துன்பகரமான முழு இடப்பெயர்வுக்கு முன் 10,000க்கு மேற்பட்ட மக்கள் இப்பகுதியில் வாழ்ந்தனர். இடப்பெயர்வு காரணமாக இப்பிரதேசத்தின் மக்கள் தொகை குறைந்தும் உட்கட்டுமானங்கள் அழிக்கப்பட்டும் வாழ்வியல் வாய்ப்புக்கள் குறைக்கப்பட்டும் உள்ளன. இந்நிலையில் இப்பிரதேசத்தில் மீள்குடியேற்றம், புனர்வாழ்வு புனருத்தாரண நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டியுள்ளன. ஆகவே இந்நடவடிக்கைகளில் சரவணைக் கடல் நீரேரியினதும் வேலணைச் சிற்றருவி வடிநிலத்தினதும் அபிவிருத்தி முக்கிய இடம் பெறவேண்டும். ஆகவே இவ் வடிநிலத்தில் கிடைக்கும் நீரைச் சரியான முறையில் தரைமேல் நீராகவும் தரைக்கீழ் நீராகவும் தேக்கி சிக்கனமாகப் பயன்படுத்தி இவ்வடிநிலத்தை உச்ச வினைத்திறன் மிக்க நிலப்பயன்பாட்டிற்கு கொண்டு வருவதுடன் பல தேவைகளுக்கு ஏற்ற நீரையும் பெறமுடியும். இதனால் குடிநீருக்காக சாட்டி நீரில் தங்கியிருக்கும் நிலையைக் குறைக்க முடிவதுடன் சாட்டி நீர்வளம் குறைந்து போவதையும் காக்க முடியும்.

*(இக்கட்டுரை இப்பிரதேசம் பற்றி நீண்ட கால அனுபவ அடிப்படையில் எழுதப்பட்டது)*



